KYC0037 ஆனந்த.

# ஆனந்தபோதினி

## ஒரு சிறந்த மாதாந்தத் தமிழ்ச் சஞ்சிகை.

'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு'—திருவள்ளுவர்.

(தொகுதி 9.)

உருத்ரோத்காரிஹு ஆடிமீ முதல் இரக்தாட்சி
ஆனிமீ வரையில்

1923ஹு ஜுலை முதல் 1924ஹு ஜுன் வரையில்.

நா. முனிசாமி முதலியார்,

"ஆனந்தபோதினி" ஆபீஸ்,

நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு,

சௌகார்பேட்டை, மதராஸ்.



கலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0. } 1924 { தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS.

---

From Rao Saheb. Late T. Ramakrishna Pillai Avl. B.A., F.M.U., F.R.H.S. Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "Ananda Bndhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915,*
THOTTAKADU HOUSE } (Sd) T. RAMAKRISHNA PILLAY.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, *now* Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini**" It is conducted, on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini,**" containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15*

---

Dear Sir,

Your Tamil monthly entitled "**ANANDA BODHINI**" .................... is written is *easy*, *clear* and *readable* style, *well-suited*, *particularly*, to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes, ... ... ... ... ... It is very much to be envied that there should be over 10000* subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

Trivandrum
28-1-17 } A. V. SUBRAMANIA AIYAR,
F.N. S.A. (Lon.) F.C.I. (Birm.)

---

* Now more than 20 Thousands.

# ஆனந்த போதினி

## 9-வது வருட அட்டவணை.

உ
ஓம்
பரப்பிரஹ்மமணே நமஃ



# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 9 } உருத்ரோத்காரிஹு ஆடிமீ கஉ 1923ஹு ஜூலைமீ 16உ { பகுதி 1

## கடவுள் வணக்கம்.

பாகத்தி ஞற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லை வேத
பாராய ணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பகரவோ விசையு மில்லை
யோகத்தி லேசிறிது முயலவென் ருற்றேக
மொவ்வாதிவ் வுண்வெறுத் தால்
உடல்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி ஞற்செய் யவோ
மோகத்தி லேசிறிது மொழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்க வென்ருல்
முற்ருது பரிபாக சத்திக ளனேகவின்
மூதறிவி லேயெ மூந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்ர வாகமே
தன்னந் தனிப்பெ ருமையே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (1)

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி யேனிணைந்தாய் சந்ததமு நீயிறந்த
வெப்பிலே யானந்த மே. (2)

இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி—தனிமுதல்வ
னித்தன் பரம னிமலநிறை வாய்நிறைந்த
சுத்தனமக் கென்றுந் துணை. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. பாகத்தினுற் கவிதைபாடிப் படிக்கவோ பத்திநெறியில்லை=(ஆண்டவனுகிய உன்மேல், முறைப்படி பாக்களைப் பாடித் துதிக்கலாமெனின் என்னிடம் பக்தியில்லை.

(ஈசுவரன்மேல், பக்தி நிறைந்து அன்பினுல் மனமுருகிப் பாடுவதே இனிமையாய்ப் பகவானுல் ஏற்றுக்கொள்ளப்படுமென்றி இலக்கண இலக்கியப் பயிற்சிமட்டு மடைந்து பாடும் பாட்டுகள் பயனிலவாம். ஈசனருள் பெற்ற அத்தகைய பக்திமான்களுடைய வாக்கே அருள் வாக்கெனப்படும். அவர்கள் பாடிய பாக்களை வாசித்தால் நமக்குப் பக்தி ஜனித்து மனங்கரைந்து அன்புருவமடையலாம். தேவாரம், திருவாசகம், தாயுமானவர் பாடல், திருப்புகழ் முதலியவைகள் அத்தகையனவே. அவைகளே பாராயணம் செய்தற்குரியன. "திருவாசகமென் ஞெருகாலோதிற் கருங்கல் மனமும் கசிந்து கண்ணீர் ஆருய்ப் பெருகும்" என்றனர் குமரகுருபர சுவாமிகள். இக்காலத்திலுள்ள கவிகள் தாங்களே திருப்புகழ், தேவாரங்கள் பாடத் தொடங்குகிருர்கள்.)

வேதபாராயணப்பனுவல்=தமிழ் வேதமாகியதும், பாராயணம் செய்தற்குரியதுமாகிய திருவாசகம்.

மூவர்செய் பனுவல்=அப்பர், சுந்தரர், சம்பந்தர் மூவரும் செய்த தேவாரம் (அடங்கல் முறை)

'இசை' என்பது தேவாரங்களை யோதுதற்கு வேண்டிய பண்முறை.

யோகாப்பியாசம் செய்வோர் உணவு நித்திரையாதிகளில் அதிகமுமின்றிக் குறைவுமின்றி யோகநூலில் கூறியுள்ள விதிகளின்படி அநுசரிக்க வேண்டும். ஒருபொழுதே அளவின்படி உண்ணவேண்டும். இப்படிச் செய்ய இயலாதார் யோகம்செய்ய முடியாதாதலின் "யோகத்திலே...... வெறுத்திடலொக்கும்" என்ருர்.

மோகத்திலே=உலகபோகங்களிலுள்ள இச்சையில்.

மெய்ஞ்ஞானமோனத்தில் = ("மோனமென்பது ஞான வரம்பு" என்று ஔவைப்பிராட்டியார் அருளியபடி) பூரண மௌனமாகிய ஞான நிலையில்.

முற்ருத பரிபாகசத்திகளனேகம்=ஞானத்திற்கு வேண்டிய பரிபக்குவமின்மையால் அனேகம் மாயாசத்திகள் மௌனநிலையில் நிற்கவொட்டாதபடி தடுக்கின்றன என்பதாம்.

நின்மூதறிவிலே யெழுந்ததாகத்தில்=நினது பேரறிவினிடத்துண்டாகிய மோக்ஷ அவாவில்.

பேரறிவே சொரூபமாகிய ஈசுவரனையடையும் மோக்ஷத்தில் ஆவல் அதிகரிப்பதால் ஆனந்தநிலை யெய்துமாதலின் "நின் மூதறிவிலே......அதி அமிர்தப்ரவாகமே" என்ருர்.

தன்னந்தனிப்பெருமை=தனக்கு இரண்டாவதின்றித் தானே ஏக சொரூபியாய் எங்கும் நிறைந்து நிற்கும் மகிமை.

2. அல்லும் பகலும்=சதாகாலமும்.

தான் பேரன்புடனே யிருந்தால்=ஈசுவரனிடத்தில் வைத்த அன்புருவமாக விருந்தால்.

பக்தியில் மனங்கரைந்துருகி அன்புருவமடையுமாதலின் கல்போன்ற மனதை நோக்கி அவ்வாறு கூறினர்.

நீயிறந்த வெப்பிலே ஆனந்தம்=மனமே! நீ யொடுங்கிய விடத்தில் ஆன்ம தரிசனம் தோன்றி ஆனந்தம் ஜனிக்கும்.

'தற்போத வொழிவில் ஆனந்தம் தோன்றும்' என்பதாம்.

3. இனிய கருணைமுகில் எம்பிரான்=இனிமையான கருணை மழை பொழியும் எமது பெருமான்.

தனிமுதல்வன்=ஒப்பற்ற ஆதிகாரணன் அல்லது தலைவன்.

"கருணையே புருவானவனும், அமிர்தசாகரம் போன்றவனும், நின்மலனும், எங்கும் நிறைந்த பரிபூரணனுமாகிய முக்கட்பெருமான் என்றும் நீங்காத்துணையாக விருக்கிறான்" என்ற நம்பிக்கை நம்மிடம் உறுதியாக விருக்கவேண்டும் என்று நமக்கு இவ்வெண்பா அறிவுறுத்துகிறது.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரி௵ ஆடி௴ க௳

## ஆனந்தன் 9-வது ஆண்டு.

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபியும் கருணாமூர்த்தியுமாகிய ஈசுவரனது கிருபையால் நமது "ஆனந்தனது" எட்டாவது ஆண்டு முடிந்து, 9-வது ஆண்டு தொடங்குகிறது. யாவற்றிற்கும் மூலகாரணனாக உள்ளது ஈசுவரனே யெனினும் ஈசுவரன் எங்கும் அந்தரியாமியா யிருந்து தன் பஞ்சகிருத்தியங்களை நடத்துகிறானே யன்றி நேரில் எதையேனும் செய்ததாகத் தெரியவில்லை. இன்னும் அவர் கிரியை யற்றவரென்றும், காந்தமலை யசைவற்றிருப்பினும் அதன் முன் இரும்புகள் சேட்டிப்பதுபோல், ஈசுவரன் சந்நிதானத்தில் சகலமும் நடைபெறுகின்றன வென்றும்

கூறப்பட்டிருக்கிறது. ஈசுவரன் மனிதரூபத்தில் அந்தரியாமியாக விருந்தே சகல காரியங்களையும் நிகழ்த்துகிறார். அதனாற்றான் நமக்கு ஒருவர் உதவி செய்தால் நாம் அதை மறக்கலாகாதென்றும், அதற்காக அவர்களிடம் நன்றி பாராட்ட வேண்டுமென்றும் ஆன்றோர் கூறியருளினர்.

பத்திரிகைகள் நடைபெறுவது சந்தாதாரர்களின் ஆதரவைக் கொண்டே. அதிலும் நமது ஆனந்தனுக்கு அவர்களையன்றி போஷகர் முதலிய வேறு எவ்வித உதவியும் கொஞ்சமேனு மில்லையென்பது உண்மை. நமது சந்தாநேயர்கள் "ஆனந்தனது" அபிவிர்த்திக்காக சிரத்தையெடுத்துக் கொள்வதுபோல் வேறு எந்தப் பத்திரிகையின் சந்தாதாரரும் செய்வதில்லையென்று தெரிகிறது. இதற்காக நாம் நமது சந்தா நேயர்களுக்குப் பூரணமான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதோடு ஆண்டவன் அவர்களுக்குச் சகல நன்மைகளையு மளித்து அருள்புரியுமாறு மனதாரப் பிரார்த்திக்கிறோம்.

இந்த எட்டு வருடங்களாக நம்மால் கூடியவரையில் சஞ்சிகையைக் காலதாமத மில்லாமலும் அதை வாசிப்போர்க்கு திருப்தியும் நல்ல பலனும் உண்டாகு மாறுமே நடத்திவந்தோம். ஆயினும் சஞ்சிகையின் வருடமுடிவிலும் மறுவருட ஆரம்பத்திலுமுள்ள ஆனி, ஆடி மாதங்களில் மட்டும் நம்மால் தடுக்கமுடியாதபடி கொஞ்சம் ஆலசியம் நேர்கிறதற்காக விசனிக்கிறோம். எவ்வாறெனின், ஆனிமீ அடுத்த ஆண்டு சந்தாவைச் செலுத்தியவர்களைக் குறித்துக்கொண்டு மீதிப்பேர்க்கு, வி. பி. யனுப்பவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு வருடமும் முன்னடி இரண்டுமாத சஞ்சிகைகளில் நாம் அறிக்கைமூலமாக எவ்வளவோ வேண்டிக்கொண்டும் (இவ்வருடம்கூட) அனேகர் சந்தா நம்பரை யறிவிக்காமலே மணியார்டர் அனுப்பி விடுகிறார்கள். இவர்களுக்குச் சஞ்சிகை வி.பி.யில்போய்த் திரும்பிவருவதால் நமக்கு நஷ்டம்நேர்வதோடு "ஓ! நான் முன்னமே பணம் அனுப்பியிருக்க வி-பி. யனுப்பியது உங்கள் அஜாக்கிரதையாகும்....." என்று நம்மேல் குற்றங் கூறி வரைகிறார்கள். இவற்றாலும் தபால் ஆபீஸில் வி-பி. களைத் தினம் கொஞ்சம் கொஞ்சமே எடுத்துக் கொள்வதாலும், பிறகு வி-பி-கள் சந்தாதாரர்களுக்குச் சேர்ந்து அந்த இரசீதுகள் நமக்கு வந்தபின்பே நாம் அடுத்தமாத சஞ்சிகையை யனுப்ப வேண்டும். அந்த இரசீதுகளில் அனேகம் மிக்க ஆலசியமாக நம்

மிடம் வருகின்றன. இடையில் சந்தாதாரர்கள் தாங்கள் வி-பி யைப் பெற்றுக் கொண்டதாகத் தெரிவித்தால் தான் நமக்குச் சங் கதி தெரிகிறது. இக்காரணங்களால் ஆனி ஆடிமாத சஞ்சிகைகள் ஆலசியமாக வருவதைச் சந்தாநேயர்கள் பொறுத்துக் கொள்ளக் கோருகிறோம்.

நேயர்களே ! பல தேசங்கள் பத்திரிகைகளின் அபிவிர்த்தி யால் முன்னேற்ற மடைந்திருப்பதை யறிந்தும் நம் நாட்டாரில் அனேகருக்குப் பத்திரிகாபிமான மாவது தம் பாஷாபிமானமா வது சற்றேனுமில்லை. நம் தாய்ப்பாஷையாகிய அமிழ்தினுமினிய தமிழ்மொழி பல்லாயிர வருடங்கட்கு முன்னமே உன்னத நிலையி லிருந்த தென்பதும், பூரணமான தென்றும், இலக்கியவிலக்கணங் களில் இணையற்ற தென்றும் நன்கு விளங்கினும் நம்மவரில் ஆங் கிலங்கற்றவர்களில் பலர் தம் தாய்ப்பாஷையை யலட்சியம் செய் வதோடு தமிழ்ப் பத்திரிகைகளை வாசிப்பவர்களைக் கண்டால், "தான் கெட்டவானரம் நந்தவனத்தையும் கெடுத்தது" என்பது போல் "வீணாக இந்தத்தமிழ்ப் பத்திரிகைகளை யேன் படிக்கிறீர் கள்........" என்று கூறி நம்மவர்க்குக் கொஞ்ச நஞ்சமுள்ள பாஷாபிமானத்தையும் கெடுக்கமுயல்கிறார்கள். தாய்ப்பாஷையை யலட்சியம் செய்யும் மாதுர்துரோகிகள் தெய்வசிந்தனையும் தேச பக்தியும் உடையவர்களாக விருப்பது அரிது. அவர்கள் ஆன் மார்த்தத்தை யிழந்தவர்களேயாவர். ஏனெனில் மோக்ஷவீட்டைப் பெறக்கூடிய மார்க்கத்தைக் கூறும்நூல்கள் நம் தாய்ப்பாஷையில் தான் இருக்கின்றன. ஆகையால் சஞ்சிகையின் அபிவிர்த்திக்காக நாம் எவ்வளவு சிரமமெடுத்துக் கொண்டாலும் அதிகமாகாது. இவ்விஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொள்வோர் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டவர்களே யாவார்கள்.

இதுகாறும் எவ்விதப் பிரதிபலனையும் எதிர்பாராமலே நமது ஆனந்தனது அபிவிர்த்தியில் சிரத்தை யெடுத்துக்கொண்ட நமது சந்தாநேயர்கள் இந்த 9-வது ஆண்டு கொஞ்சம் அதிக ஊக்கம் பாராட்டுமாறு வேண்டிக் கொள்கிறோம்.

---

## நம் நாட்டுத் தருமம்.

தருமம் அல்லது அறம் முப்பத்திரண்டு வகைப்படும் என்று நமது நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. அது எத்தனை வகையாக விருந்தாலும் தருமம் என்பதற்கு ஜீவகாருண்யமே மூலகாரணமா

யிருக்கிறது. பிறர் துயரம் நீங்கி அவர்கள் இன்புறுமாறு உதவி புரிவதெல்லாம் தருமமே. அதாவது பசியென்றவனுக்கன்னமளித்தல், ஆடையில்லாதவனுக்கு ஆடையளித்தல் முதலியன. ஏககாலத்தில் பல சீவர்களின் அசௌகரியத்தையோ குறையையோ நீக்கக்கூடிய ஒரு காரியத்தைச் செய்தல் இன்னும் விசேஷத் தருமமாகும். அவை ஆவுரிஞ்சுதறிநடல், சுமைதாங்கி கட்டல், சத்திரம், தடாகம், சோலை, தண்ணீர்ப்பந்தல் முதலியவை ஏற்படுத்தலாதியனவாம்.

பாரத பூமியாகிய நம் புண்ணிய பூமி தருமத்தில் ஒப்புயர்வற்றதென்பது என்றும் பிரத்தியட்சம். பூர்வகாலத்தில் இருப்புப்பாதை யில்லாதபோது ஜனங்கள் நெடுநாட்கள் பிரயாணம் செய்து இராக்காலங்களில் வழியில் தங்கித்தங்கி காசி, இராமேச்சுரம் முதலிய தூர ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்லவேண்டும். அக்காலங்களிலிருந்த அரசர்கள், செல்வச் சீமான்கள் முதலியவர்கள் தெற்கில் இராமேச்சுரம் முதல் வடக்கே காசி, பத்திரிநாதம் வரையில் வழிகளில் யாத்திரிகர் தங்குவதற்காக ஆங்காங்கு சத்திரங்கள் கட்டியும் குளம் கிணறுகள் வெட்டியும் பெருந்தருமங்களைச் செய்திருக்கிறார்கள். அக்காலத்திற்கு அத்தகைய தரும கைங்கரியங்கள் அவசியமாகவிருந்தன. அக்காலத்தில் நம் முன்னோர் செய்த தரும காரியங்கள் பிரமிக்கத்தக்கவை. பலவிதமான எந்திரங்களைக் கொண்டு ஆச்சரியமான வேலைகளைச் செய்யும் இக்காலத்து மேல்நாட்டார் கூட நம் நாட்டுப் புராதன வேலைகளைக்கண்டு "இவற்றை யெப்படித்தான் செய்தார்களோ?" என்று பிரமித்து நோக்குகிறார்கள். நம் நாட்டைப்போல் வேறெந்த நாடுகளிலேனும் இத்தகைய தருமம் நடந்ததாகவாவது நடப்பதாகவாவது தெரியவில்லை.

இப்போதும் நமது நாட்டில் அத்தருமம், அவ்வளவு அதிகமாக இல்லாவிட்டாலும், நடந்துகொண்டுதானிருக்கிறது. முற்காலத்தில் நம் முன்னோர்கள் நிர்மாணித்த பிரம்மாண்டமான ஆலயங்களைப்போல் இக்காலத்தில் நிர்மாணிப்பதெனின் சுலபமான காரியமல்ல. அத்தகைய ஆலயங்கள் அனேகம் நம் நாட்டிலிருக்கின்றன. இப்போது அவற்றில் ஆகவேண்டிய பணிகளைச் சரிவரச் செய்துகொண்டு வந்தால் அதுவே விசேஷம். அத்தகைய புராதன ஆலயங்களில் அனேகம் இப்போது காடு மூடிக்

கொண்டு மறைந்து கிடக்கின்றன. திருட்டாந்தமாக வட ஆர்க்காடு ஜில்லாவில் ஜாகீர் ஆரணிக்கு மேற்கில் சுமார் பத்து மைல் தூரத்தில் கமண்டல நதிதீரத்தில் படவேடு என்ற ஸ்தலமொன்றிருக்கிறது. அது இரேணுகாம்பாள் (பரசுராமர் தாயார்-ஜமதக்னி முனிவர் பத்தினி) க்ஷேத்திரம்-வருடமொருமுறை ஆடிமீ வெள்ளிக்கிழமைதோறும் அங்கு திருவிழா நடக்கிறது. அச்சிறு கிராமமே ஒரு அடவியிலிருக்கிறது. இரேணுகாம்பாள் ஆலயத்திற்கு மேற்கில் சுமார் அரைக்கால் மைல் தூரத்தில் இராமசுவாமி கோயில் ஒன்றிருக்கிறது. அக்கோயில் சுற்றிலுமுள்ள மண்ணைத் தோண்டி வெளிக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. நந்தன் என்ற ஒரு அரசன் முற்காலத்தில் அங்கு அரசாண்டு வந்ததாகவும், ஒரு சாபத்தால் அந்த இடத்தில் மண்மாரி பெய்ததால் அது அழிந்து போனதாகவும் கூறப்படுகிறது. அக்காட்டில் இன்னும் அனேகம் கோயில்களும், மண்டபங்களும் இருக்கின்றன. ஜில்லா கலெக்டர் உத்தரவுபெற்று யாரேனும் வேண்டிய ஒரு மண்டபத்தைப் பிரித்துவந்து வேறிடத்தில் கட்டிக்கொள்ளலாம். அங்குள்ள மண்டபங்களில் உள்ள ஒரு தூணைப்போல் இக்காலத்தில் செய்ய வேண்டுமாயின் கூலிமட்டும் நூற்றுக்கணக்காகும்.

இக்காலத்தில் விசேஷ தருமங்களைச் செய்வோர் நாட்டுக்கோட்டை வைசிய குலத்தவர்களே. இவர்களில் ஒவ்வொருவரும் தருமசிந்தனை யுடையவர்கள். தங்கள் வர்த்தகத்தால் கிடைக்கும் இலாபத்தில் ஒரு பாகத்தைத் தருமத்திற்கென்று சேமம் செய்கிறார்கள். இதனால் இவர்கள் ஏககாலத்தில் இலக்ஷக்கணக்காக தருமத்தில் செலவழிக்கிறார்கள். இவர்கள் தருமத்தில் பெரும்பாகம் சிவாலயங்களைப் புதுப்பித்தல், சிவகைங்கரியங்களை விமரிசையாகவும் விசேஷமாகவும் செய்தல், அழகிய பிரம்மாண்டமான சத்திரங்களைக் கட்டி சிவ ஸ்தலங்களில் உத்ஸவாதிகள் நடக்கும் காலங்களில் ஏராளமான அன்னதானம் செய்தல் முதலியவைகளுக்கே செய்கிறார்கள்.

ஆனால் நம் நாட்டில் இப்போது தக்காலத்திற்கு எத்தகைய தருமத்தைச் செய்யவேண்டும் என்பதை அனேகர் கருதவதில்லையென்பதே நம் நாட்டாரது தருமகைங்கரியத்திலுள்ள ஒரு குறையாகவிருக்கிறது. சிலர் பிரார்த்தனைகள் செய்துகொள்கையில் தங்கள் கோரிக்கை நிறைவேறினால் சுவாமிக்கு உண்டியில் நூறு

ரூபா போடுவதாகவோ, அபிஷேக ஆராதனை செய்துவைப்பதாகவோ, குளத்தில் வெல்லக்கட்டி கரைப்பதாகவோ கூறிக்கொள்கிறார்கள். இவர்கள் பணம் முதலியவை ஈசுவரனுக்கு என்னத்திற்கு வேண்டும் என்பதை யிவர்கள் சிந்திப்பதில்லை. மேலும் இவர்கள் செய்கை நம் பெற்றோர் தம் குழந்தைக்கு ஒரு தின்பண்டம் வாங்கிவந் தளித்தால், அக்குழந்தை அதிற் கொஞ்சம் எடுத்துப் பெற்றோர்க்களிப்பதுபோ லிருக்கிறது. இவர்கள் ஏதோ ஒரு நலத்தைக் கோரித் தமது பிரார்த்தனைகளைச் செய்துகொள்கிறார்கள்.

அதிகப் பணம் செலவழித்து நிலையான ஒரு பெரிய தரும கைங்கரியத்தைச் செய்வோர் காலத்திற்குத் தக்க தருமத்தைச் செய்தால் நலமாக விருக்குமன்றோ? நம்முன்னோர் கட்டியுள்ள ஆலயங்களில் சரியாய்ப் பூசையாதிகள் நடந்துவருகின்றனவா, அதன் வருமானம் சரியான வழியில் செலவழிக்கப்படுகிறதா என்பதைக் கவனித்தால் போதுமானதாக விருக்கப் புதிதாகக் கோயில்களைக் கட்டுவது வீண் வேலையன்றோ. அனேக மடங்களில் வரும் வருமானங்கள்கூட காலத்திற்கு அவசியமான வழியில் செலவழிக்கப்படாமல், குளத்தின்மேல் குளம் வெட்டுவது, மடக்கட்டிடத்தைப் பெருக்கிக்கட்டுவது முதலிய வழிகளில் செலவழிக்கப்படுகின்றன. மேலே கூறப்பட்ட தருமங்களனைத்தும் செய்யத்தகாதன வென்று நாம் குற்றமாகக் கூறுவதாய்க் கருதலாகாது. ஆனால் தக்காலத்தில் நமது தேசம் மதம் இவற்றின் க்ஷேமத்திற்காக அவசியமாகச் செய்யவேண்டிய கைங்கரியத்தை யடியோடு கவனியாமல் விட்டுவிட்டு அவசியமல்லாதனவும், அப்போதே வீண் விரையமாய் மறைந்துவிடக்கூடியனவுமாகிய வழிகளில் பணத்தை விரையம் செய்வதில் யாது பயன்? அன்னதானம் மிகச் சிறந்ததானமே. ஆனால் கொழுத்த சோம்பேறிகளுக்கு அத்தானத்தைச் செய்வது தகுதியோ? அது போன்றே தருமமும் காலத்திற்குத் தக்கதைச் செய்வதே யுசிதம்.

நமது தருமங்களெல்லாம் மதத்தைப் பொருந்தியவைகளே. கோயில்கள், பூசைகள், உற்சவாதிகள் யாவும் மதத்தின் க்ஷேமத்திற்கே. நாம் கடவுளை மறவாது அடிக்கடி துதிப்பதற்கும் அவரிடம் பக்தி செலுத்தி அவர் அருள் பெறுவதற்குமே இவை யாவும் ஏற்படுத்தப்பட்டன. அப்படி யிருக்க நமது மதம் பர

வச்செய்ய நாம் முயலாவிடினும், நமது மதத்தவரில் பலர் அன்னிய மதத்தவர்களால் மயக்கப்பட்டுத் தங்கள் முன்னோரது உத்தம மதத்தைக் கைவிட்டுப் புறச்சமயங்களில் விழுந்தழிகிறதைத் தடுக்கவேனும் நாம் முயலவேண்டாமோ? இது விஷயத்தில் பணம் விரையம் செய்வது சிறந்த தருமமும், இச்சமயத்திற்கு அத்தியாவசியமான தருமமும் ஆகும் என்பதை நம்மவர் கருத வேண்டுமன்றோ? இந்த விஷயம் பெரிய தருமங்களைச் செய்யும் செல்வச் சீமான்களின் மனதில் உறுத்தாதிருப்பது மிக்க விசனிக்கத்தக்கதேயாகும்.

மேல்நாட்டார் அங்கிருந்து திரண்ட செல்வத்தைச் சேகரம் செய்துகொண்டு பல்லாயிரம் மைல்கள் கடலைக் கடந்துவந்து நம் நாட்டில் தங்கள் மதத்தைப் பரவச்செய்கிறார்கள். அத்தேசங்களில் மதப்பிரசாரம் செய்வதற்கென்று சங்கங்கள் இருக்கின்றன. அங்கு மரிக்கும் செல்வவந்தர்கள் தங்கள் ஆஸ்தியின் ஒர் பாகத்தையும், சந்ததி யில்லாதோரில் பலர் தங்கள் திரண்ட செல்வம் முழுவதையும் அத்தகைய மதப்பிரசாரம் செய்யும் சங்கங்களுக்களித்துவிடுகிறார்கள். நம் நாட்டிலோ அத்தகைய சங்கங்களேயில்லை. ஆகவே இங்கு மரிப்போர் விசேஷமாய்க் கோயில்களுக்கே பணத்தை வைத்துவிட்டுச் சுவாமிக்கு என் பெயரால் ஒரு காலபூசை நடக்கட்டும் என்கிறார்கள். பிறகு அதைக் கவனிப்பவர்களும் கிடையாது. அப்படிப் பூசை நடக்கிறதாயினும் என்ன நடக்கிறது? இரண்டொரு பலகாரமோ, பொங்கல் முதலியவைகளோ செய்து சுவாமி முன் காட்டப்பட்டுப் பங்கு போட்டுக் கொள்ளப்படுகிறது.

பெருந்தொகைகளை மேல்கண்ட தருமங்களில் செலவிடும் புண்ணியவான்கள், நமது மதத்தைப் பிரசாரம் செய்யவும், நம்மவர்க்கு நம் மதத்தின் அருமை பெருமை புராதனம் முதலியவற்றைப் போதித்து அவர்கள் புறச்சமயம் புகாது செய்யவும் ஒரு சங்கத்தை யேற்படுத்தி நடத்தி,நம் அனாதி மதத்தை யாதரித்துப் பரவச்செய்வதாகிய பெரும் புண்ணியத்தைச் செய்யத் தொடங்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம். இதை வாசிக்கும் நாட்டுக் கோட்டைச் செட்டிமார்கள்—இடைவிடாது சிவபெருமானது கைங்கரியங்களில் ஈடுபட்டுள்ளவர்கள்—

"ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
னால வாயி லுறையு மெம்மாதியே" என்று

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளியபடி, இப்பெரும் புண்ணிய கைங்கரியத்தைச் செய்யத்தொடங்குவார்களென்று நம் புகிறேம். இவர்களில் ஒருவர் முன் நின்று சிரத்தை யெடுத்துக் கொண்டால் இதற்கென்றெரு சங்கத்தைத் தாபிப்பது மிக எளி தான காரியம். பரமசிவம் அருள்புரிவாராக.

ஓம் தத் ஸத்.

---

## நோய்க்கிடங்கொடேல்.

(மலபந்தம்)

மனுஷ்ய தேகத்திலுண்டாகும் சகல ரோகங்கட்கும் மலபந்தமே முதற்காரண பூதமாயிருக்கிறது. மலபந்தம் உண்டாவதற்குப் பல கார ணமிருக்கினும் முக்கியமாக தற்காலத்திய நவீன நாகரீகமான வீண் படா டோப ஆகார பழக்கங்களேயாகும். இக் கிரமமற்ற ஆகார தோஷங் களினுல் ஏற்படும் மலபந்தத்தினுலே ஏற்படும் அசாத்திய வியாதி சம்ப வங்களனந்தம். அவைகளில் சிலவற்றைமட்டில் இங்கு குறிப்பிடுத லவ சியம். அஜீரணம், அக்கினிமந்தம், குடல் புளிப்பு, பித்தவாயு, குன்மம், பழய மலத்தில் ஜனிக்கும் கிருமிகள் சிறு குடல் முதலியதுகளை அரி த்து பொத்தலிடுவதாலுண்டாகும் ஜீரணகால வயற்றுவலி, குதத்தில் ஷை கிருமிகள் அரித்து இரணம் உண்டுபடுத்தலால் சீழ், மூலம், இரத்தமூலம், பவுத்திரம், மூத்திரப்பை அழற்சி, அதிமூத்திரரோகம், இடுப்புவலி, முதுகுவலி, மார்வலி, தலைவலி, சந்துவாயு, சூலை, இந்திரிய நட்டரோகங் கள், கிராணி அதிசாரம், நரம்பு பிடிப்பு, பாரிசவாயு, பழைய மலத்தில் ஜனிக்கும் கிருமி தேக உதிரத்தை உண்டு விடுவதால் பாண்டு, சோகை, காமாலை, நேத்திரமந்தம், இருமல் ரோகங்கள், கணைரோகம் முதலியவும் எண்ணிறந்த அசாத்திய ஜுரரோகங்களும் உண்டாகின்றன. மலப் புளிப் பினுலுண்டாகும் வாயுவினுல் அண்டவாயும் குடல் வாதமும் உண்டா கின்றன. ஆகையால் மலபந்தம் ஏற்படாமல் பாதுகாத்துக்கொண்டால் திருடர் வராமல் உயர்ந்த மதில் எடுத்துக்கொண்டதுபோலாகும். ஆகை யால் அப்படிப்பட்ட மலபந்தத்தைத் தடுக்க முயலுகிறவர்கள், நவீன ஆகார பழக்கவழக்கங்களை மாற்றி நமது பூர்வப் பழக்கத்திற்கு கொண்டு போகவேண்டும். காப்பி தேனீர் பிராந்தி, சாராயம், அபின், முதலிய பழக் கங்களை விட்டுப்போட்டு காலையில் குளிர்ந்த ஆகாரங்களை உட்கொள்ள வேண்டும். தவிரவும் மலபந்தமுடையவர்கள் நாகரீகமாய் தற்போதுப யோகிக்கும் (கைட்டு பில்ஸு) என்னும் ரசம், அல்லது சிவதைவேர் சூரணம், அல்லது நேர்வாள முதலியவை சேர்ந்த மாத்திரைகளை உபயோகிக்கக்கூடாது; குடல் கெட்டுப்போகும். நிலாவரைச் சூரணம், பிஞ்சுக்கடுக்காய்ச் சூரணம், அல்லது கடுக்காய்ச்சூரணம், அல்லது கடுக் காய் ஊருகாய், அல்லது கடுக்காய் லேகியம், அல்லது துவையல் இவை

களையே உபயோகிக்கவேண்டும். சாதாரணமாகக் கடுக்காய் அல்லது பிஞ்சுக்கடுக்காய் சேர் ஒன்று கழுநீரில் ஊறவைத்து இரண்டுமணிநேரம் சென்று கழுகி எடுத்து உலர்த்தி ரோஜா புஷ்பத்தைப் பிழிந்த ரஸத்தில் ஒரு நாள் ஊரவைத்துலர்த்தி எலுமிச்சம்பழச்சாற்றில் போட்டு அத்தோடு இந்துப்பு பலம் ஒன்று, இஞ்சிச்சார் பலம் ஒன்று, நிலாவரை அல்லது நிலவாகை இலைச்சூரணமாவது சேர்த்து உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு தினசரி மாலை சாப்பாட்டுக்குமேல் அரைக்கால் ரூபா இடை வீதம் சாப்பிட்டு மேலே பால் அல்லது வெந்நீர் சாப்பிட்டு வரலாம். காலையில் நன்றாய் மலம் கழியும். சிலருக்கு கால் ரூபா இடையும் சாப்பிடவேண்டியவரும் ஷை சூரணத்துடன் சரி இடை சர்க்கரை சேர்த்து ஆமணக்கெண்ணெயுடன் துளி நெய்விட்டு லேகியம்போலவும் செய்து வைத்துக்கொள்ளலாம் மற்றும் கடுக்காயுடன் நிலாவரை சேர்த்து சூரணமாயும் மற்றும் எவ்விதமாயும் செய்து உபயோகித்து வரலாம். எவ்விதத்திலும் மலபந்தத்திற்கு இடங்கொடுக்கக் கூடாது. முக்கியமாய் மலபந்தத்தினாலேயே எத்தகைய ரோகமும் உண்டாவதற்கு இடமுண்டாவதால் ஜாக்கிரதைசெய்து வரவேண்டும் என்பதை நமது தேச சகோதரிகள் சகோதரர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் எத்தகைய வியாதியும் விசேஷமாய் அணுகாது.

G. கண்ணுசாமி பிள்ளை,
ஆயுர்வேத வைத்தியன், திருவாரூர்.

---

## திருவள்ளுவர் மத வாராய்ச்சி.

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு"

நலமறிமாண்பீர்!

சிலநாட்களுக்கு முன் இந்நகரின்கண் நடந்த ஓர் பொதுஜனக் கூட்டத்திற்கு நான் சென்றிருந்தேன். அப்பொழுது தமிழ்ப்புலவர் ஒருவர் "திருவள்ளுவர்" என்னும் விஷயத்தைப்பற்றி ஓர் சொற்பொழிவு செய்து கொண் டிருந்தனர். அவர், "திருவள்ளுவர் இம்மதத்தைச் சேர்ந்தவர் என்று கூற வியலாது போகின்றது. ஆனால் திருவள்ளுவருக்குச் சிலா விக்கிரகம் ஏற்படுத்தி யிருக்குமிடமெல்லாம் அவ்விக்கிரகத்திற்கு உருத்திராக்கமும் விபூதியுமிட்டிருக்கின்றது ஆதலால் சைவசமயத்தினர் என்று கூறலாம்" என்றனர். இது என்ன பேதமை. இதுவுங் காரணமாகுமா? அச் சொற்பொழிவு கேட்ட பொழுதிருந்தே "திருவள்ளுவர் மத வாராய்ச்சி" என்னுமோர் சிறு வியாசம் நம்மானந்தனின் ஓர் அங்கமாகத் தோன்றவேண்டுமென்னும் ஆசை பிடர்பிடித்துந்தவும் அத்தகைய பெரிய ஆராய்ச்சியை "நிகழ்தர நிகழ்த்தவல்லை நீ கொல்! என்றெனது நெஞ்சே யெழுந்ததேனும் இச்சையும் தினம் போராடியதால் முடிவில் நாணந்தோற்றது; ஆசையே வென்றது."

நேயர்காள்!

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் இன்ன சமயத்தினர் என்று துணிந்துரைப்பது இயலாதுபோயினும் இவர் பொதுப்பட இந்து மதத்தினர் என்பதே என் துணிபு. ஆனால் நம்மிந்தியாவில் இந்து மதமென்ற ஒரு மதமில்லாமை கண்டு, சைவசமயி என்பதே சாலச் சிறைப்புடைத்தாம். அதற்குச் சான்றுகள் கூடலூர் ஸ்ரீமான் கனகசபைப்பிள்ளையவர்களியற்றிய வருணசிந்தாமணியின் கண் பரந்து கிடக்கின்றன.—அவற்றில் சிலவற்றை யீண்டு சிறிது உரைக்கின்றேன். பிள்ளை அவர்கள் கடவுள்வாழ்த்தே பரசிவ வணக்கமாம் எனக் கூறுகின்றார்கள். முதற் குறளை யெடுத்தாராயுங்கால், ஆதிபகவனெனக் கடவுளைக் குறிப்பிக்கப்பட்டிருக்கின்றது. சமணநூலாகிய சூடாமணி நிகண்டில் "பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்" எனக் கூறி யிருத்தலால் பகவன் என்பதற்குப் பொருள் சிவன், விஷ்ணு, பிரமன், அருகன், புத்தன் என்று கூறப்பட்டிருக்கின்றது. இவற்றுள் முன்னர் சிவனையும், பின்னர் விஷ்ணுவையும், பின்னர் பிரமாவையும் முறையே வகுக்கப்பட் டிருக்கின்றது. இனி இச் சூடாமணி நிகண்டில் தெய்வப் பெயர் தொகுதியிலும் முன்னர்ச் சிவநாமமும் பின்னர் விஷ்ணுநாமமும் அதன்பின்னர் பிரமநாமங்களும் வகுக்கப்பட்டிருக்கின்றன. இதுமாத்திரமேயன்றி பிங்கல நிகண்டிலும் வானவர் வகையுளும் சிவனையே ஆதியாகக்கொண்டு பெயர் கூறப்படுகின்றது. உலகமென்பது ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட சேதனசேதனப் பிரபஞ்சம். இப்பிரபஞ்சம் பசுபாசமெனவும், இப்பிரபஞ்சத்திற்குப் பதிப்பொருள் சிவபெருமானன ஆதிபகவானே யெனவுமமையும்.

கடவுள் வாழ்த்தின் இரண்டாவது செய்யுளில் வாலறிவன் அதாவது மெய்யறிவன் எனக் கூறப்பட்டிருக்கின்றது. பரிசுத்தமுடையதாய் நிர்மலமாய், நிஷ்களமாய், நிரஞ்சனமாய், அறிவுக்கறிவாய் ஆணவாதிமலங்களிற் கட்டுப்படாத பதியறிவே மெய்யறிவாம். அதனால் சிவபெருமானுக்கு திரிகாலத்தும் ஜனனமரணமில்லாமையின் மெய்யறிவன் என்று சிந்தாந்தப்படுகின்றது.

மூன்றாவது செய்யுளில் கடவுளை மலர்மிசையேகினன் என்றார். ஆகம விதியிற் கூறியபடி சிவபெருமானைப் பத்மாசனத்தில் எழுந்தருளச்செய்து சிவபூசை செய்பவர் மோக்ஷ உலகத்தில் நீடூழிகாலம் வாழ்வர் என்பது கருத்தாம். இங்ஙனமாதலின் மலர்மிசையேகினன் என்பது சிவாகம விதியால் செய்யப்படும் பூசையினிடத்துக் கமலாசனத்தில் எழுந்தருளப் படும் சிவபெருமானே யெனப் புலப்படுகின்றது.

நான்காவது பாட்டில் கடவுளை வேண்டுதல் வேண்டாமையிலான் என்று கூறப்பட்டுளது. "நலமிலன், நண்ணார்க்கு நண்ணினோர்க்கு நல்லன் சலமிலன் பேர் சங்கரன்" என்பது திருவருட்பயன். குளிராலும், மழையாலும் குளிரடைந்தவர் சூரியனது கிரணம் படும்படி வந்தமாத்திரத்திலேயே குளிரொழிந்து சுகமடைகிறார்கள். அவ்விதம்

வந்து அடையாதார் குளிரால் வருந்துவர். ஆதலால் தன்னை வந்தடைந்தவரிடம் விருப்பும் அடையாதாரிடம் வெறுப்பும் சூரியனுக்கு இல்லாமைபோல சிவபெருமானுக்கும் தன்னை நண்ணினாரிடத்து விருப்பும் நண்ணாரிடத்து வெறுப்புமில்லையாம். ஆதலால் அவனுக்கு விருப்புமில்லை வெறுப்புமில்லை. அவன் தன்னைக் கல்லாலடித்த சாக்கியநாயனாரையும், செருப்பாலுதைத்த கண்ணப்பனையும் வெறுத்தும் மலரெய்திய காமனை விரும்பவும் செய்தாரல்லர். இன்னும் திருப்பாற்கடல் கடைந்த காலத்தில் அமுதம் வந்தபொழுது விரும்பவுமில்லை, விஷம் வந்தகாலத்து வெறுக்கவுமில்லை. ஆதலால் சிவபெருமானே வேண்டுதல் வேண்டாமையிலான்.

இனி ஐந்தாவது பாட்டிலும் பத்தாவது பாட்டிலும் காட்டிய இறைவன் என்னும் சொல் சிவபெருமானுக்கே யுரியது. இதற்குச் சான்றாக புறச்சமயிகளாகிய மண்டலபுருடனால் செய்யப்பட்ட பதினோராவதுநிகண்டில், "இறை, சிவன், கடன், வேந்தன், கையிறை, உறுப்பிறை, சிறந்தோன்" எனக் கூறப்பட்டுள்ளது. இன்னும் உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர் இறைவன் என்னும் பதத்திற்கு இறு=தங்கு எனத் தாதுப்பொருள் கூறி, சடசித்துப் பிரபஞ்சமனைத்தும் தங்கும் சிவபெருமானுக்கே யுரியது இப்பெயர் எனக் கூறிநிற்கின்றனர்.

மற்றும் ஒன்பதாவது பாட்டில் கூறப்படு மெண்குணத்தான் என்பது சிவபெருமானுக்கே யுரியதென்பது யாவரும் மறுக்கமுடியாததோர் உண்மை. இன்னும் நம் நாயனாரே சிவபெருமானது ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசையேகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், இருவினையுஞ் சேராவிறைவன், பொறிவாயிலைந் தவித்தான், தனக்கு வமையில்லாதான், அறவாழியந்தணன் என்பனவாதிய எண்குணங்களையும் எட்டுப்பாட்டிலடக்கி, ஒன்பதாவது பாட்டில் அத்தகைய எண்குணத்தானையே வணங்க வேண்டுமென்றும் பத்தாவதுபாட்டில் அவ்விதம் வணங்காதவர் பிறவிக்கடலைக் கடக்கமுடியாதெனவும் கூறி பரசிவ வணக்கத்தை முடித்தருளினார். இன்னும் இவ்வணக்கம் பரசிவ வணக்கமேயெனக் காட்டுதற்குத் தகுந்த தாட்டாந்தங்கள் காட்டக்கூடுமெனினும், அது மிகைபடக் கூறல் என்னும் குற்றத்தின்பால் படுமென வஞ்சி இத்துடன் நிறுத்துகின்றேன். இதைப்பற்றி விவரமாக அறியவேண்டுமெனில் கூடலூர் கனகசபைப் பிள்ளையவர்களியற்றிய வருணசிந்தாமணி, வருணவிளக்கத்தைப் படித்துணரவும்.

இஃதன்றி பிறசமயத்தினரும் திருவள்ளுவரைத் தத்தமது மதத்தை சார்ந்தவர் என்று கூறும் கூற்றினையும் சிறிது கூறுவாம். பரிமேலழகர் தான் வைஷ்ணவரானமைபற்றி திருவள்ளுவரையும் வைஷ்ணவரென்றே கூறுகின்றார். அதற்குச் சான்றுகளாக "மடியிலா மன்னவன் எய்து மடியளந்தான் தாஅயதெல்லாம் மொருங்கு" என நிலங்கடந்த நெடுமுடியண்ணலைக் குறித்தனரென்றும், "தாம் வீழ்வார் மென்றோட் டுயிலினிது

சொல், தாமரைக்கண்ணனுலகு," எனப் பரமபதத்தைக் குறித்தனர் என்னும் "அகாரார்த்தேவிஷ்ணு" என்ற கருத்தை "அகரமுதலவெழுத்தெல்லாம்" எனத் தழுவியுள்ளார் என்றும் கூறி வள்ளுவர் வைணவர் என்பதை வலியுறுத்துகின்றார்.

மற்றும் ஜைனர்கள், பூமேனடந்தான் என்னும் பெயரை யுட்கொண்டு மலர்மிசை யேகினன் என்று கடவுள் வாழ்த்தில் கூறியதாகவும் அதனல் வள்ளுவரைச் ஜைனரெனவும் கூருநிற்பர். இன்னும் பௌத்தர்கள் "மலர்மிசையேகினன்" "வேண்டுதல் வேண்டாமையிலான்" பொறிவாயிலைந்தவித்தான் எனப் புத்ததேவனது பெயர்களை யெடுத்தோதிக் கடவுள் வாழ்த்தில் கூறினர் எனவும் கூறி வள்ளுவரைப் பௌத்தர் என்கின்றனர். இஃதெல்லாம் ஒருபால் நிற்கத் தமிழில் வல்லுனரான ஜி. யு. போப்பையர் அவர்கள் "எங்கள் யேசுநாதர் மலைமேற் செய்த ஹித உபதேசத்தின் பிரதிசப்தமாகுமித் திருக்குறள்" என்று கூறி அவரைக் கிறித்தவர் என்பார். எக்கூற்றினு மிக்கூற்று மிக்க வியக்கத்தக்கதே.

நலமிகு நல்லீர்!

மேற்கூறிய சான்றுகளெல்லாம் ஒருபால் நிற்க. நாம் காய்தல் உவத்தலின்றி யாராய்வோமாயின், எல்லா நூல்களிலும் நல்லனவெடுத்து எல்லோருக்கும் பொதுப்படக் கூறுதலிவர்க்கு இயல்பாதலாலும், எவரெவர் எத்திறத்தர் அத்திறத்தராய் நின்று அவரவர்க்கு ஆவன கூறுதலாலும் இவரைச் சர்வசமய சமரசவாதியெனச் சொல்லுதலே சாலச்சிறைப்புடைத்தாம். இந்நூலிலிருந்து எம்மதத்தினரும் திரு (செல்வம் அதாவது கல்விச் செல்வம்) அள்ளுதலாலேயே இவற்குத் திருவள்ளுவர் எனப் பெயரமைந்ததுபோலும்.

"எம்மதமும் சம்மதமே எனப்பேரிகை ஆர்மின்" சுபம்.

தே. மு. பாஸ்கரன்,
"சித்திர ஆலயம்" திருநெல்லை.

குறிப்பு:—நமது நண்பர் கூறியவாறு பொய்யாமொழியார் சைவசமயியேயென்று கருதுதற்குப்போதிய ஆதாரங்களுளவென்பது மறுக்கொணாததே மேலும்,

"பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனும் தாமிருக்க—நாவினு
விழைநக்கி நூனெருடு மேழை யறிவேனே
குழைநக்கும் பிஞ்சகன்றன் கூத்து"

என்று நாயனருளிய வெண்பாவால், அவர் உள்ளம் சதா பரமசிவத்தின் ஆனந்தத்தாண்டவத்தில் பதிந்திருந்தது என்று தெரிகிறது. ஆயினும் நாயனரது தமிழ் மறை எச்சமயத்தவர்க்கும் உண்மையைப் போதிக்கத் தக்கதாதலினலும்,

"விரிவிலா வறிவினர்கள் வேறொரு சமயஞ்செய்தே
எரிவினுற் சொன்னு ரேனு மெம்பிராற் கேற்றதாமே"

என்றும், அறுவகை சமயத்தோர்க்கும் அவரவர் பொருளாய் நிற்பதும் பரமசிவமாகிய சச்சிதானந்த பரப்பிர்ம்ம சொரூபமே யாதலானும், அது மதாதீத மானதாதலாலும், நாயனுர்க்கு "எம்மதமும் சம்மதமே" என்று கொள்வது தகுதியே யெனலாம்.

பத்திரிகாசிரியர்.

---

## ஸ்திரீ தர்மம்.

(காரைக்குடியி லிருந்து மறைசைக்கிழார் எழுதியது.)

இந்தியாவில் ஸ்திரீ தர்மம் இன்னதெனப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஆன்றோர்களால் நன்கு வரையறுக்கப் பெற்றிருக்கின்றது. ஸ்திரீகளுக்கு இயற்கையாய் அமையப்பெற்ற குணங்கள் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, ஆகிய நான்கெனவும் வலியுறுத்தப் பெற்றிருக்கின்றது. இக்குணங்கள் பொருந்தாதவள் காணப்படின் அவள் பார்வைக்கு ஸ்திரீ யாக விருந்தபோதிலும் புருடத்தன்மை பொருந்தியவளே யாவள். இவள் இல்வாழ்க்கைக்குத் தக்கவளல்லள் என்பது இந்துக்களின் அடிப்படை யான கொள்கையாம்.

பெண்களுக்குரிய முதன்மையான கடமை இல்லத்திலிருந்து ஆட வர் கொண்டுவரும் பொருளை வருங்காலமறிந்து சிக்கனமாய்ச் செலவு செய்வதும், புருடர் மனத்துக்கிணங்கி அவருடன் ஒற்றுமையாயிருந்து மக்களைப்பெற்றுச் சீராட்டிப் பாராட்டி வளர்த்துவரவேண்டியதுமாகு மென்பதை எக்காலத்தும் எத்தேயத்தும் எச்சாதியாரும் அங்கீகரித்திருக் கின்றனர். மனையாள் கணவனுடன் ஒத்துவாழ்வதே இல்லறமென்பதைக் "காதலிருவர் கருத்தொருமித் தாதரவு பட்டதே யின்பம்" என நமது மூதாட்டியார் கூறியிருக்கின்றனர். கணவன் மனதுக் கிணங்கிப் பெண் கள் நடவாவிடின் இல்வாழ்க்கை செவ்விதாய் நடைபெறு தென்பதையே நமது முன்னோர்கள் பலவாற்றாலும் வற்புறுத்தியிருக்கின்றனர்.

"காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதிலொரு கருமஞ் செய்பவே — ஓதுகலை
எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டு மொன்றையே காண்."

"மருவிய காதன் மனையாளும் தானும்
இருவரும் பூண்டீர்ப்பி னல்லால் — ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்றாங் கின்று."

" தருமமெனும் பண்டமிடும் சகடமா மனைவாழ்க்கைக்
கருமநுகம் பிணித்துமனைக் காதலியுந் தானுமென
விருவராய்ப் பூண்டிழுப்பி னெத்துணைத்தூ ரமுஞ்செல்லும்
ஒருவராய்ப் பூண்டிழுப்பி னோரிறையுஞ் செல்லாதால் "

எனக் கணவனையும் மனைவியையும் இரு கண்களுக்கும் ஒரு சகடத்தில் கட்டிய இரு காளைகளுக்கும் அழகு பெறவும் பொருத்தமாகவும் ஒப்பிட்டிருக்கின்றனர். அன்றியும் மனையாள் கணவனுடன் ஒத்த அன்பினளாயிராவிடின், அதனைவிடக் கொடியது வேறொன்றுமில்லை யென்பதையே நமது ஔவையாரவர்கள்,

கொடியது கேட்கின் நெடிய வெவ்வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனிலுங் கொடிது இளமையில் வறுமை
அதனிலுங் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்
அதனிலுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனிலுங் கொடிது
இன்புற வவர்கையி லுண்பது தானே.

எனவும், புருடன் மனைவி ஒத்துவாழாவிடின் புருடன் துறவு பூண்பதே சிலாக்கிய மென்பதை

" பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாம்—சற்றேனும்
ஏறுமா றாக விருப்பாளே யாமாகிற்
கூறாமற் சந்நியாசங் கொள். "

என்னும் வெண்பாவினாலும் பெண்ணினத்தைச் சார்ந்த ஔவையாரவர்களே விளக்கி யிருக்கிறார்கள்.

பெண்களுக்குச் சுயநிர்ணயம் கிடையாதென்பது நமது சாஸ்திரங்களின் கூற்றாம். மங்கையர்க்குரிய நிலைமை இல்வாழ்க்கையில் புருடருடன் கூடி வாழ்வதன்றிப் பிறிதொன்று மில்லை யென்பதும், இவர்கள் எப்போதும் புருடரின் பாதுகாப்பில் இருக்கவேண்டியவர்களே யன்றித் தனியாக யாதொன்றும் செய்யக்கூடியவர்களல்லர் என்பதும் தொன்று தொட்டு அநுபவத்தினால் கண்டறிந்த நமது கொள்கைகளாம். இதற்கு ஆதாரங்களாக நவீன சாஸ்திரோக்தமான நான்கு காரியங்களை எடுத்து விளக்குவாம்: (1) விவாகமாயினபின் ஸ்திரீகளே புருடர் இல்லத்துக்குப் போகிறதன்றிப் புருடர் ஸ்திரீகளின் இடத்துக்குச் சென்று வாழ்தலைச் சாதாரணமாய் எவ்விடத்தும் நாம் காண்பதில்லை. மாமனாரகம் சென்று வாழும் சில மாப்பிள்ளைமார்களின் பெருமையைப்பற்றி நாம் சொல்ல வேண்டியதில்லை. (2) பெண்களுக்கு இயற்கையாகவே, புருடருக்கில்லாத, மென்மையான சரீர அமைப்பேயன்றி, ஸ்தனபாரம் பிரவிடைத் தோற்றங்கள், மகப்பேறுண்டாதல் ஆகிய இவை விசேடமாய் ஏற்பட்டிருக்கின்றமையால், பெண்களின் தேகம் எப்போதும் ஒருவித அசௌக்

யத்துக்கிடமாகியதென தேக தத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். பின் ளைப்பேறு பெண்களுக்குப் புனர்ஜென்மமாகவே கருதப்படுகின்றது. இவ்வித அசௌகரியங்களினின்றும் பெண்கள் தங்களைக் காத்துக்கொள் வது கஷ்டமாகிறது. (3) குறிப்பிட்டபுருடன் பாதுகாப்பில் இருக்கும் பெண்களைவிடத் தனியே யிருக்கும் ஸ்திரீகளே பரபுருடரின் ஆக்கிரமிப் புக்கும் தொந்தரவுக்கும் தப்புவது மிக அரிதாகிறது. (4) பராசரஸ்மிரு தியில் விதவாவிவாகத்தைக் கண்டிக்குமிடத்து, புருடரை வித்துக்கும் பெண்டிரை க்ஷேத்திரத்துக்கும் உவமைகூறி, ஒரே வித்தை எவ்விதப் பூமியில் நட்டாலும் அந்த வித்துக்குரிய பயிரே உண்டாகிறதென்றும், ஒரே க்ஷேத்திரத்தில் பற்பல வகையான வித்துக்களைப் போடுங்கால் அவ்வவ்வகையான பயிர்களுண்டாகின்றனவென்றும், இவ்விதம் க்ஷேத் திரமன்றி வித்தே வித்தியாசமான பிறவித்தோற்றங்களுக்குக் காரண மாயிருப்பது போலவே, பெண்டிரல்லாது புருடரே பின் சந்ததியின் தோற்றங்களுக்குக் காரணமாயிருக்கின்றன ரென்பதை விளக்கிக் காட்டி யுள்ளார். இதனால் பெண்டிர் தத்தமக்குரிய ஒரே புருடன் விசுவாசம் மாறாதிருத்தல் பின்சந்ததியின் பரிசுத்தத்துக்கு அவசியமென்பது பெறப் படுகின்றது.

இவ்வாறு நமது ஆன்றோர் அநுபவத்தில் அறிந்து அவர்களின் வழித் தோன்றல்களாகிய நமக்கு உதவி யிருக்கும் நல்லொழுக்கங்களைச் சென்ற ஐம்பது வருடங்களாக மேல்நாட்டு நவநாகரீகத்தைக் கண்டு, மதிமருண்ட விட்டிற் பூச்சிபோல், நம்மவருட் சிலர் அதனை நம் நாட்டிற் புகுதவிடுத்து நமது சிறந்த ஒழுக்கங்களை நிலைகுலையச்செய்து வருகின்ற னர். சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன்வரையில் மேனாட்டிலும், நம்நாட் டில் போலவே, புருடன் மனதிற் கிசைந்து ஒற்றுமையாய் இல்வாழவேண் டியதும் மக்கட்பெறுதலும் ஸ்திரீகளின் முக்கியமான கடமைகளென யாவராலும் அங்கீகரிக்கப்பட்டிருந்தது. இந்தக்கொள்கைகளை ஆதார மாகக்கொண்டே அக்காலத்தில் ஷேக்ஸ்பியர் முதலிய கவிசிரேஷ்டர்க ளால் காவியங்கள் எழுதப்பெற்று இன்றும் அவைகள் யாவராலும் பொன் னேபோல் போற்றப்பெற்று நின்று நிலவுகின்றன. அக்காலத்தில் மேனாட் டில் ஸ்திரீகளை நம்நாட்டில் போலவே அபலைகளென்றும் மெல்லியர்க ளென்றும் கருதி அவர்களுக்கு ஆபத்துக்காலத்தில் உதவிபுரியும் ஆடவ ரின் வீரத்தன்மையை (Chivalry) எனச் சிலர் சிறப்பித்துக் கூறி வந் திருக்கிறார்கள். (Knights) சுத்தவீரரெனக் கூறப்பெற்றோர் யாவரும் இவ்வரிய குணத்தைக் கொண்டோராகவே யிருந்தனர். (இக்காலத்தில் இந்தப் பட்டம் சாமான்யர்களுக்கும் பொருள் நனிகொடுப்போருக்கும் தாராளமாய் வழங்கப்படுகின்றது.)

சென்ற நூறு வருடங்களாக மேனாட்டில் இராஜரீகம் (Monarchy) போய் (Democracy) குடியரசு தலையெடுத்து வலுவடைந்துவரவே, ஸ்திரீ களுக்கு ஏற்பட்டிருந்த கட்டுப்பாடும் கடமையும் நாளடைவில் தளர்ச்சி

யடைந்து, இப்போது வெள்ளை நாரீமணிகள் விவாகக் கட்டுப்பாட்டை வெறுத்து ஏதேச்சைப் பிரியராய்த் தங்களுக்கே யுரியவிடமாகிய குடும்பத்தை விடுத்து ஆடவருக்கே யுரித்தா யிருந்த எல்லாத் தொழிற்றுறைகளையும் கைப்பற்ற வந்துவிட்டனர். இதனால் இப்போது மேனாட்டில் இல்லம் குலைந்து ஸ்திரீ புருடஐக்கியம் நசித்து வருகிறது. ஸ்திரீ புருடருக்குள் மிருகசுபாவமான ஸ்பரிசமாம்ச இச்சை யுதிக்குங்கால், அதனை விலங்கு பறவைகளைப்போல் பூர்த்திசெய்துகொண்டு அப்பால் கூடி வாழ இசையாது பிரிந்து அவரவர் போக்குப்படியே போகின்றனர். அநேக ஸ்திரீகள் மக்களைப்பெற்று வளர்க்கும் கஷ்டத்தை நிவர்த்திப்பதற்காகச் சில குயுக்தியான முறைகளை யனுஷ்டித்துப் புருடருடன் கூடிச்சுகித்து வருகின்றனர். இக்காலத்தில் விவாகம் செய்துகொண்டு ஸ்திரீகளை வைத்து நடத்திவருவது அசாத்தியமான காரியமென்று பயந்து மேனாட்டு ஆடவர் விவாகச் சடங்கை வெறுக்கின்றனர். மேனாட்டுப் பெண்களோவெனில், புருடருடன் கூடி அவர்கள் மனதுக்கிசைந்து வாழ்வதும் மகப்பெறுவதும், சுயேச்சையாய் நடப்பதற்கு இடையூறு யிருப்பதால், முடியாதென்று விவாகத்தை மறுக்கின்றனர். இவ்விதம் முக்கியமாய் பிரான்சில் விவாகம் செய்துகொள்ளக்கூடிய ஆடவரும் பெண்டிரும் பிரமசாரிகளாகவும் கன்னிகைகளாகவுமே மிகுந்திருப்பதால், மரணத்தினால் குறையும் ஜனத்தொகையை ஈடு செய்தற்கு வேண்டியவளவு ஜனனமில்லாது போய்விடுகிறதென்று கண்டு அதிகாரிகள் பலவித நூதனச் சட்டங்களை ஏற்படுத்தியிருக்கின்றனர். அவற்றில் அதிக மகப்பேறுடையாளுக்கு அரசாங்கத்தார் பரிசளித்தல்; யாருக்குப் பிறந்த பிள்ளையானாலும், பெற்றவட்குச் சிறிதுகாலம் வரையில் பொருளுதவிபுரிதல்; குழந்தைகளின் மரணத்தைத் தடுத்துக் காப்பாற்றுவதற்கு வேண்டிய உதவிபுரிதல், இவை போல்வன சிலவாம். ஜெர்மனியிலும் மகா யுத்தத்தின் பலனாக ஆடவர் தொகைகுன்றிப் பெண்டிர்தொகை மிதமிஞ்சியிருப்பதால், புருடர் பல பெண்களுடனும் விவாகம் செய்யாமலே கூடிப் பெறும் மக்களை யரசாங்கத்தார் அங்கீகரித்துக் காத்துவருகின்றனர்.

இவ்வாறாகக் கீழ்நோக்கிச் செல்லும் மேனாட்டு நாகரீகம் நம் நாட்டில் நுழைந்ததன்பயனாய் நமது பெண்களுக்குள் முன்னில்லாத சுயேச்சைப் பிரியம், நாணமின்மை, அகம்பாவம், கூச்சமின்மை, அடக்கமின்மை இன்னவை பிறவும் தலையெடுத்து ஓங்கி வளர்ந்து வருகின்றன. இதனால் இந்த நாட்டில் இந்நாளில் சந்தோஷகரமான இல்வாழ்க்கையைக் காண்பதே அரிதாகி வருகிறது. இப்போது நமது பெண்களின் ஒழுக்கம் எவ்வாறாயினதென்று கூறுவாம்:—(1) புருடனுக்கு அடங்காது எதிர்த்துப் பேசுதல், (2) அவனுக்குத் தெரியாது லேவாதேவி, சீட்டுப்போடுதல் முதலியன செய்தல், (3) அவனுக்குத் தெரியாது பணம் சேர்த்துவைத்தல், (4) அவனுக்குத் தெரியாது ஈன்றோர் உடன் பிறந்தாருக்குப் பண உதவியும் மற்ற உதவிகளும் புரிதல், (5) அவன் விருப்பத்துக்கு மாறாக அவர்

களைத் தன் இல்லத்தில் வைத்துக்கொள்ளுதல், (6) அவன் அநுமதியின்றி அடிக்கடி தாய்வீடேகுதல், (7) அவன் சம்மதமின்றியும் துணையின்றியும் பிறரகம் செல்லுதலும், விழாக்காணப் போதலும், (8) அவனில்லாத காலத்தில் தன்னை யலங்கரித்துக்கொள்ளுதல், சங்கீதம் பாடுதல், அயலாருடன் கூடி மகிழ்ச்சிகொண்டாடுதல், (9) அவன் பொருளீட்டிக்கொண்டு வரும் வரையில் அவனுடன் கூடிச் சுகித்திருந்து அஃதில்லாத காலத்தில் அவனைக் கடிந்து ஒதுக்குதல், இன்னவை பிறவுமாம்.

நமது நாட்டிலும் அகல்யாபாய், மீராபாய், மங்கம்மாள், மீனாட்சி முதலிய பெண்ணரசிகள் புருடரைப்போல வீரம் முதலிய குணங்களுடன் விளங்கவில்லையா என்ற கேள்வி பிறக்கலாம். இதற்கு விடை பகருவாம். எக்காலத்திலும் எந்நாட்டிலும் பொது விதியொன்றிருந்தால் அதற்கு விலக்கான புறநடையும் இருந்தேவரும். எல்லோரும் மகான்களும், சுத்தவீரரும், கவிசிரேஷ்டரும் ஆகிவிடமாட்டார்கள். குறிப்பிட்ட மாதரசிகள் உருவத்தில் பெண்களாயிருந்தாலும், ஆடவரிலும் பெண்டன்மையுடைய நபும்சகர் ஒரு சிலர் காணப்படுமாறேபோல், உள்ளத்தில் புருடரேயாவர். என்றாலும் அவர்களும் குறிப்பிட்ட ஒவ்வோர் ஆடவருக்குள் ஐக்கியமாகவே வாழ்ந்துவந்திருக்கின்றனர். சமீபத்தில் பூவுலகெங்கும் தனது திண்ணிய பலத்தால் பிரமிக்கச்செய்துவந்த தாராபாயும் தனது மனத்தையும் உடலையும் ஒரு புருடருக்குச் சமர்ப்பித்தமை யாவரும் அறிவர்.

மேற்கூறியவாற்றால் ஸ்திரீகள் புருடரின் கீழ் அடிமைகளாக நடத்தப்படவேண்டியவர்களென்பது நமது கோட்பாடெனக் கொள்ள நியாயமில்லை. ஆனால் ஈண்டு வலியுறுத்திக் கூறிப் போந்தது, ஆடவர் பெண்டிர் இருவரும் மனமொத்து இல்வாழ்க்கையை நடத்திவரவேண்டியது இவ்வுலக இன்பத்தை யநுபவித்தற்கு அவசியமென்பதேயாம். இந்நாளிலும் மேனாட்டில் இல்வாழ்க்கையிலிருக்கும் உத்தம ஸ்திரீகள் ஒரே வழிக் காணப்படுகின்றனர். அவர்கள் ஆடவர் மனத்தைக் காந்தமெனக் கவரும் சுலபமான வழிகள் சிலவற்றைப் பத்திரிகை வாயிலாய் வெளியிட்டிருக்கின்றனர். அவையாவன: (1) கணவனுக்குத் தெரியாமல் பணம் சேர்க்காதே, (2) அவனுக்குத் தெரியாமல் எந்தக் காரியமும் செய்யாதே, உன்னைப் பற்றிய காரியங்களில் எதையும் அவனுக்கு மறைத்து இரகசியமாய் வையாதே, (3) உன் தாய்வழி உறவினரை அடிக்கடி உன் இல்லத்திற் கழையாதே, (4) உன் வனப்பையும் அரிய கல்வியறிவையும் அவன் மகிழ்வெய்தும்படியான வழிகளிலன்றி வேறு மார்க்கங்களில் பிரயோகிக்காதே. நமது இதிகாசங்களில்கூட துரோபதைக்கும் சத்தியபாமைக்கும் கணவனை வசப்படுத்தும் வழிகளைக் குறித்துச் சம்வாதம் நிகழ்ந்தகாலத்துக் கணவன் மனதுக்கிசைய நடப்பதைத் தவிர்த்து வேறு இடுமருந்து கிடையாதெனத் துரோபதை சத்தியபாமைக்குப் போதித்ததாக ஒரு கதையுண்டு. இவ்விதமாகப் புருடரை அன்பு என்னும் பாசத்தால் வசப்

படுத்தி வாழக்கூடிய பெண்களின் வாழ்க்கை எந்நாளும் சந்தோஷகரமான இன்பவாழ்க்கையாயிருப்பதையும், புருடருடன் ஒத்துவாழ முடியாமல் எதேச்சையாயிருக்கும் மங்கையரின் வாழ்க்கை சதா துன்பத்துக்கிடமாயிருப்பதையும் நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

நமது பெண்களின் ஒழுக்கம் இக்காலத்தில் மாறுபட்டு வருவதற்கு முக்கிய காரணம், தற்கால மேனாட்டு முறையைப் பின்பற்றிய கல்விப் பயிற்சியேயாம். பிற்காலத்தில் நம் நாட்டுப் பெண்களில் கல்விபயில்விக்க மிகுதியாய் முன் வந்தோர் கிறிஸ்தவ வகுப்பினரே யாவர். இவர்கள் பெரும்பாலும் கிறிஸ்தவப் பாதிரிமார்களால் ஏற்படுத்தப்பட்ட பாடசாலைகளில் கல்விபயின்று வந்தமையால், இந்துமதப் பெண்களானாலும் நம்நாட்டுப் பெண்களுக்குரிய நடையுடை பாவனைகளும் ஆசாரங்களும் மாறுபட்டு மேனாட்டு ஒழுக்கங்களையே மிகுதியும் அநுஷ்டித்துவந்தனர். அதன் மேல் பாதிரிமார்களின் பாடசாலைகளில் நமது பெண்கள் கல்வி பயிலுவதால் நேரிடும் விபரீதங்களைக் கண்ணுற்ற நம் ஸநாதந தர்மக்கொள்கையை ஆதரிக்கும் புண்ணிய சீலர்கள் ஆங்காங்கே இந்து தர்மத்தைப் போதிக்கும் தேசீயக் கல்விச்சாலைகளை ஏற்படுத்தி நமது பெண்மணிகளின் ஒழுக்க ஆசாரங்கள் கெட்டுப்போகாதபடி காப்பாற்ற முன்வந்தனர். பெண்களுக்குப் பெண்களே உபாத்தியாயர்களா யிருப்பது சிலாக்கியமாதல்பற்றிப் பெண் உபாத்தியாயர்களை நியமிக்கப் பார்ப்பதில் விபரீதமாய் முடிந்திருக்கிறது. எவ்வாறெனில், உபாத்தியாயர்களாய் வரும் பெண்கள் இந்து மதஸ்தர்களா யிருந்தபோதிலும் துரைத்தனத்தார் அல்லது பாதிரிமார்களின் பாடசாலைகளில் கல்விபயின்றவர்களாயிருத்தலால், அவர்களின் ஆசார ஒழுக்கங்கள் நமது ஸநாதந தர்மத்துக்கு முற்றிலும் மாறாகவே யிருக்கின்றன. இத்தகைய ஸ்திரீகளிடம் கல்விபயிலும் நம் சிறு பெண்கள் நம்முடைய ஆசாரங்களை எவ்வாறு சிலாக்கியமாகக் கொள்வர்? ஆகமொன்றிய ஆர்வலரை அவமதித்து அகலவிடுத்துச் சுயேச்சையாய்த் திரியும் நாரியரோ நம் அருமைச்சிறுமிகளுக்கு நமது ஸநாதந தர்ம முறைப்படி கற்பியல் பயிலும் இல்லற வொழுக்கத்தைச் செவ்வனே கற்பிக்கவல்ல நல்லாசிரியைகளாவர்?

ஆங்கில துரைத்தனத்தார் அல்லது பாதிரிமார் கல்விச்சாலைகளில் உபாத்தியாயர்களின் உள் நடவடிக்கைகளைப்பற்றிக் கவனியாதிருப்பது சகஜமே. ஆனால் மேற்கூறிய பாடசாலைகளின் தீமையை உணர்ந்து அதை விலக்கி நமது பூர்வ ஸநாதந தர்மக்கொள்கையைக் காப்பாற்றுவதற்காகவே கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் தேசீய பாடசாலைகளில் உபாத்தியாயர்களின் பாடசாலை வேலைத்திறமையை மாத்திரம் கவனித்து அவர்களின் சொந்த ஒழுக்கத்தைப்பற்றிக் கவனியாதிருப்பது தகுமா, நியாயமா, முறையாமா? தேசீய பாடசாலைகளை வைத்து நடத்துவோர் உபாத்தியாயர் இந்துவா யிருக்கவேண்டுமென வற்புறுத்துவதன் பயனென்னவாகிறது? இவர்களிற் சிலர் இந்து ஸ்திரீகளான போதனு

முறை பயின்ற உபாத்தினிகள் இப்போது கிடைப்பது அரிதாயிருப்பதால், கிடைக்கும் ஒரு சில உபாத்தியாயர்களின் உள் நடத்தையைப் பற்றிக் கவனிக்கப் புகுந்தால், சிறுவர் அட்டமணற் சோற்றில் கல்லாராய் வதுபோலாகுமாதலால், அதைப்பற்றிக் காதில்போட்டுக்கொள்ளாதிருத்தலே தக்க மார்க்கமெனக் கடைப்பிடித்திருக்கின்றனர். அரசாங்கத்தார் பாதிரிமார் பாடசாலைகளிலும் புருடரையும் மனைவியரையும் பிரித்து வைத்தல் கூடாதென்னும் கொள்கையை யநுசரித்து ஸ்திரீபுருடர் இருவரையும் ஒரே பாடசாலையில் உபாத்தியாயர்களாய் நியமிப்பது வழக்கமாயிருக்க, தேசிய பாடசாலைகளை வைத்து நடத்துவோர் புருடனை விட்டுப் பிரிந்து சுயேச்சைப் பிரியராய் வரும் ஸ்திரீகளை உபாத்தியாயர்களாய் நியமித்துக்கொள்வதேயன்றி ஏற்கனவே ஐக்கியமாகவிருந்த ஸ்திரீபுருடரைப் பிரித்துவிடும்படியான முறைகளையும் அநுஷ்டித்து வருகின்றது எவ்வளவு பரிதாபகரமானது? இவர்களின் கொள்கை நன்று! நன்று!! குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்டவாறுபோலும், வேலியே பயிரை யழிப்பதுபோலும் இருக்கின்றது. இந்து ஸ்திரீ உபாத்தியாயர்கள் போதனுமுறை பயின்றவர்களாய்க் கிடைப்பது அரிதென்பது உண்மையே. ஆனல் அதற்காகக் கொள்கையை நழுவவிட்டுவிடலாமோ? இதனல் நன்னோக்கத்துடன் பாடசாலைகளை நடத்திவருவோர் உபாத்தியாயர்களின் ஒழுக்கக்குறைவை ஒருவாறு ஆதரிப்போராகின்றனரன்றோ? எந்த உபாத்தியாயரிடமேனும் தவருன நடத்தை காணப்பட்டால் உடனே ஆரம்பத்திலேயே அதனைக் கண்டித்துச் சீர்திருத்தவேண்டியது தேசியப் பாடசாலைகளை வைத்து நடத்துவோரின் முதன்மையான கடமையன்றோ? நயத்திலும் பயத்திலும் சொல்லியும் கேளாது தவருன ஒழுக்கத்தைக் கைக்கொண்டிருக்கிற உபாத்தியாயர்களை வைத்துக்கொண்டிருப்பதில் அடையும் பயன் யாது? அதைவிட அவர்களுக்குப் பிரதியாக ஆடவரை (வேண்டுமாளுல் வயது முதிர்ந்தோரை) நியமித்தல் சிலாக்கியமன்றோ?

இவ்வாறு நமது ஸ்திரீகளின் தர்மம் சீர்கெட்டு வருகின்றது. இதனைக் காக்கும்பொருட்டு ஏற்பட்ட தேசியக் கல்விச்சாலைகளினுலும், இப்போது நடைபெறும் முறையில், பிரயோஜனம் யாதும் இல்லையெனத் தெரிகிறது. ஆதலால், ஸநாதந தர்மத்தை யாதரிக்கும் கனவான்களே, நமது பெண்மணிகளின் கல்விமுறையில் வேண்டிய சீர்திருத்தத்தைச் செய்ய விழிமின், எழுமின்.

குறிப்பு:—நமது ஹிந்து மாதர்களும் பெற்ளேரும் மேற்கண்ட விஷயத்தைப் பன்முறை வாசித்துணரும்படி மிகவும் வேண்டிக்கொள்கிறோம். நம் நாட்டில் அநேகர் மேல்நாட்டு ஆசாரங்களின் மயக்கில் சிக்கித் தமது பெண்மணிகளுக்கு எத்தகைய கல்வி அவசியமென்பதைக் கருதாமல், தங்கள் பெண்களுக் கவசியமான அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்றவற்றிற்கு இடையூறு செய்யத்தக்கவைகளும், பெண்சுபாவம் நீங்கி புருட சுபாவத்தை யளிக்கத்தக்கவைகளுமாகிய அனுவசியமான கல்வி

களைப் போதிக்கிறார்கள். ஆங்கிலபாஷைக் கல்வி நம் ஆடவர்களுக்கே அவர்கள் ஆசார ஒழுக்கங்களைக் கெடுத்துத் தீங்கிழைக்கின்றதென்றால், நம் பெண்மக்களுக்கு அதைக் கற்பிப்பதினும் நாம் அவர்களுக்குச் செய்யத்தக்க தீமை வேறொன்றுமில்லை.

நமது மாதர்களின் க்ஷேமத்தைக்கோரி மிக்க அன்போடு நமது நண்பர் வரைந்துள்ள மேற்கண்ட வியாசத்திலடங்கியிருக்கும் உண்மை நிறைந்த அரிய விஷயங்களை நம்மவர் ஒவ்வொருவரும் கவனமாக வாசித்துணரும்படி மறுபடி பிரார்த்திக்கிறோம். பத்திரிகாசிரியர்.

---

## சர்வவியாபியின் சேட்டை.

சேலத்தில் மிஷன் அச்சுக்கூடத்தில் 6-6-'23-ல் வெளியான "சர்வவியாபி" என்ற பத்திரிகையை நமது சந்தா நேயர் ஒருவர் நமக்கனுப்பினார். அப்பத்திரிகையின் 179-ம் பக்கத்தில் "வேத விசாரணை"—இந்து மதப் புராணங்களைக்கொண்டே விஷயங்கள் ரூபிக்கப்பட்டிருக்கிறது. "ஒற்றுமையும் ஐக்கியமும் அடங்கியது பிறர் சினேகத்தில்" என்று தலையங்கமிட்டு, அதன்கீழ் "விஷ்ணுவின் நடபடி, சிவன் நடபடி" என்று வரிசையாக விஷ்ணு ஆயர்பாடியிலும், வேறு பல இடங்களிலும் பல பெண்களைக் கற்பழித்ததாகவும், தன் அத்தையை இச்சித்து மாமனாகிய கஞ்சனைக் கொன்றதாகவும், (இன்னும் பல ஆபாசங்களைக் கூறிக் கடைசியில்) பிறசினேகமற்றவரை வணங்குகிற இந்துக்களுக்கு என்ன பிறசினேக மிருக்குமென்றும்,

பிறகு சிவன் வலைச்சியை யிச்சித்துக் கல்லாகச் சபிக்கப்பட்டதாகவும், வேடன் எச்சில் உண்டதாகவும், பல மாதரோடு விபசாரம் செய்ததாகவும், இப்படியே தேவேந்திரனைப்பற்றி தூஷணையாகவும், கடைசியில்,

"சிவன் பெண்சாதி பார்வதி பிரம்மாவிடத்தில் சோரம் போனாள்; விஷ்ணு பெண்சாதி இலட்சுமி சூரியனிடம் சோரம் போனாள்; இராமன் மனைவி சீதையை இராவணன் தூக்கிச் சென்றான்" என்றும் முடிவில் "இன்னும் வரும்" என்றும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது—இதற்கு "T. C. M." என்று கையொப்பமிட்டிருக்கிறது.

ஹிந்து சகோதர சகோதரிகளே!

இதைப்பற்றி நாம் சுருக்கமாகக் கூறுவதைக் கவனியுங்கள்:—

ஒரு மதத்தைப் பிரசாரம்செய்வதற்கு இரண்டு மார்க்கங்கள் உண்டு. ஒன்று சுபட்சம்—அதாவது தமது மதத்தின் உண்மையையும் உயர்வையும் பற்றி எடுத்துக் கூறுதல். மற்றது பறபட்சம்—அதாவது பிறமதத்தவர் தமது மதத்தைப்பற்றி கூறும் ஆக்ஷேபனைகளைக் கண்டித்துக் கூறல்.—

இரண்டுமின்றி மேற்கண்டபடி புராணங்களின் உட்கருத்தை யறியாமலோ வேணுமென்றோ பிறர் மனம் புண்படும்படி கூறுவது அதமத்

தொழிலேயன்றி வேறன்று. இவர்கள் தம்மதத்தின் உண்மையை யெடுத்துக் கூறுவதற்கு வழியில்லை. ஏனெனில் இவர்கள் வேதமாகக் கருதும் நூலில் ஆன்ம இலக்ஷணமாவது, கடவுள் இலக்ஷணமாவது இரண்டும் ஐக்கியப்படும் மார்க்கமாவது கூறப்பட்டிருக்கவில்லை.

இவர்களுக்கு யோக ஞானங்களைப்பற்றி யொன்றுமே தெரியாது. அவை இவர்கள் மார்க்கத்திலில்லை. நமது புராணங்களில் மேல் போக்காய்ப் புலப்படுவதைக் கூறி நம்மில் மத ஆராய்ச்சி யில்லாப் பாமரர்களுடைய புத்தியை மயக்கிப் பிறகு உலகபோக விஷயங்களில் அவர்களுக்கு ஆசைகாட்டித் தம் மதத்திற்கு இழுத்துக்கொள்வதே இவர்கள் வேலை. அதைவிட்டு நமது மதத்தில் மோக்ஷமார்க்கமில்லையென்றும் தங்கள் மதத்திலிருக்கிறதென்றும் நிரூபிக்க இவர்களால் ஒருபோதும் முடியாது. அமெரிக்காவில் கூடிய சர்வமத சங்கத்தில் உலகிலுள்ள முதன்மையான பாதிரிமார்களாலேயே அக்காரியம் முடியாமற்போய் மகான் விவேகானந்த சுவாமிகள் உலகிலுள்ள எல்லா மதங்களும் நமது மதத்தில் அடங்கியுள்ளனவென்று நிலைநாட்டியது பிரத்தியட்ச அனுபவம்.

இப்போது நாம் கூறுவதென்னவெனில்:—இத்தகைய தூஷணைகளை நாம் கண்ணால் பார்க்கவுமாகாது, செவியேற்கவுமாகாது. இவர்கள் மதத்தில் நாம் குற்றம் கூறக் கருதின் அளவு கடந்தவை கூறக் கூடுமெனினும் அத்தொழில் நமக்கடாது. "யாவர் தெய்வமும் ஒரே தெய்வமாதலின் எத்தெய்வத்தையும் தூஷிக்கலாகாது" என்ற மேலான போதனை நம் நூற்களிலிருப்பதை நாம் அறிவோம். ஆகையால் ஹிந்துக்களாகிய நாம் இத்தகைய ஆபாச தூஷணைகள் வெளிவரும் பத்திரிகைகளை ஏறெடுத்துப் பார்க்கலாகாது என்பதை நன்றாக மனதில் வையுங்கள்.

நாம் மேல்கண்ட விஷயங்களை வரைவதனாலேயே நாம் தங்கள் மதத்தைத் தூஷிக்கக்கருதியதாய் நமது சந்தாநேயர்களில் கிருஸ்தவசமயிகளாகவிருப்போர் கருதலாகாதெனக் கேட்டுக்கொள்ளுகிறோம். அவர்கள் மேலேகுறித்த 6-6-'23-ல் வெளியான சர்வவியாபியை வாசித்துப் பார்த்தால் யார் மத தூஷணை செய்வோர் என்பது எளிதில் விளங்கும்.

இப்போது நமது புராதனமான சநாதந மதத்தில் ஒருவரு மறுக்க முடியாத உண்மைகள் கூறப்பட்டிருக்கின்றனவென்பதையும், மேல் நாடுகளிலுள்ளவர்களில் பொது நோக்கத்தோடு ஆராய்ச்சிசெய்யும் பண்டிதர்களும், மேதாவிகளுமாகிய அறிவாளிகளெல்லாம் நமது மதக்கொள்கைகளைப் புகழ்ந்து ஏற்றுக்கொள்கிறார்களென்பதையும் நேயர்களுக்கு அறிவிப்பதன்பொருட்டு 8-10-1921-ல் கோலாலம்பூரில் வெளியான "தமிழகம்" என்ற பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருந்த "ஸநாதனதர்மம்" என்ற வியாசத்தின் ஓர் பகுதியை ஈண்டு வெளியிடுகிறோம்.

பத்திரிகாசிரியர்.

# ஸ்ரீமத் அபேதானந்த சுவாமிகளின் உபந்நியாசம்.

## ஸநாதந தர்மம் புராதன மதம்.

### தற்கால சாஸ்திர ஆராய்ச்சிகள் புதுமதம் தேடுகின்றன.

தற்காலத்திலோ ஐரோப்பா அமெரிக்காவில் ஆராய்ச்சி தீரர்களும், சாஸ்திரிகளும், வேதாந்திகளும் ஒரு விதமான உணர்ச்சியை அடைந்திருக்கிறார்கள். பசி உண்டாயிருக்கிறது, தாகம் அதிகரித்திருக்கிறது. அப்பசி தாகம் தணிய கிருஸ்துமதம் போதியதாய் அவர்களுக்குக் காணவில்லை. ஜீவனின் சூக்ஷமம் என்ன என்பதைக் கண்டுபிடிக்க வழி என்ன என்பதற்கு கிருஸ்துமதம் காட்டிய வழியும் இருத்த விடையும் அவர்களைத் திருப்தி செய்ய முடியவில்லை. ஆதலால் அவர்கள் அம்மதத்தை விலக்குகிறார்கள். அது அமெரிக்காவில் மிகவும் குறைந்து அநாதரிக்கப்பட்டு வருகிறது. இப்பொழுதுள்ள கிருஸ்துவ சாஸ்திர ஆராய்ச்சிகள் கிருஸ்துவ கொள்கைகளின்மேல் செய்வதன்று; ஆனால் ஸநாதன தர்மத்தின் உண்மைகளின்பேரில் செய்யப்படுவன. தற்போது கிருஸ்து என்பது ஒரு நிர்குணமான பொருளாய் அறியப்படுவதேயன்றி ஒரு ஸகுணரூபியாய் அறியப்படுவதன்று. பகவத்கீதை முதலான சாஸ்திரங்களை அமெரிக்கா ஐரோப்பா முதலான தேசங்களிலுள்ளவர்கள் கற்றறிந்து அவைகளுடைய உண்மைகளை ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள். ஆதலால் நித்யமான தத்துவங்களை அறிவதற்கு இன்று ஜனங்கள் பேராவல்கொண்டு பெரும் பசியுடன் இருக்கின்றார்கள்.

### உற்பத்தி, ஸ்திதி, லயம்.

உயிரற்ற ஜடம் என்பது கிடையாது என்று வைத்தியர் போஸ் நிரூபணம் செய்திருக்கிறார். தாவர, ஜங்கம, சமஸ்தலோக பதார்த்தங்களிலும் ஜீவ தத்வம் விளங்குவதாகவும் எல்லா வஸ்துக்களும் சுகதுக்காதி ஸ்மரணைகளை அனுபவிப்பதாகவும் அத்தத்துவசாஸ்திரி ரூபிக்கின்றார். ஆதலால் ஸநாதந தர்மம் பண்டைக் காலமுதல் கூறுவதை அவர் ஈண்டு ரூபிப்பதன்றோ? பிராணன் அந்தர் யாமியாய் ஸமஸ்த வஸ்துவிலும் உறைகின்றது. அதுதான் மூலாதாரப் பொருளென்று வேதம் அறைகின்றது. தோன்றியதெல்லாம் ஒன்றுமில்லாத சூன்யத்தினின்றும் வந்ததல்ல, இல்லது வாராது, உள்ளது போகாது என்பது ஸத்யம். இந்த உற்பத்தி ஸ்திதி லய சக்கிரத்தின் ஆரோகண அவரோகண கதியானது ரிக்வேதத்தில் பன்னெடு நாளைக்கு முன்பே பரக்கக் கூறியிருப்பதே. சூர்யனைப் படைக்கு முன்பு பூமியிருந்தது என்று சொன்னால் ஈண்டு நம்புவாரின்று. இந்த உலகம் 6000 வருஷத்திற்குள் படைக்கப்பட்டதென்றால் இன்று ஏளனம் செய்து சிறிப்பார் பலர். கலிபோர்னியாவில் 6000 வருஷத்திற்கு அதிக வயதுடைய மரங்கள் இன்னும் காணப்படுகின்றன. 860 அடி உயரமும் 60 அடி சுற்றளவுமுள்ள மரங்கள் இருக்கின்றன. பூமண்டலத்தில் மனிதனின் தோற்றமும் யுகாந்த விஷயம் என்பதும்

கிருஸ்து பிறந்ததற்கு முன்பு 10,000 வருஷத்திற்குக் குறைவில்லை என்பதும் ஒப்புக்கொண்ட விஷயம். ரிக்வேத மந்திரங்களில் விளங்கும் ஸநாதனதர்ம மூலதத்வங்கள் ஈஸ்வர வாக்கு என்பதானது ஸர்வேஸ்வரனின் ஸககாரிகளாகிய மஹரிஷிகள் வாக்குமூலத்தால் வெளிப்படுத்தப்பட்டது. ரிக்வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்கள் சிருஷ்டி ஸ்திதி லய சக்கிரத்தையே குறிக்கின்றன. படைப்புக்கு முன்னால் அந்தகாரம் மூடி ஒரே நிச்சப்தமாய் இருந்தது. இருந்தது ஒன்றுமில்லை இல்லாதிருந்தது ஒன்றுமில்லை, அழிவுமில்லை, அழிவற்றதுமில்லை என்ற பல விருத்த வாக்யங்கள். பிறகு அது அந்த சுத்த சைதன்ய வஸ்துவிலிருந்து காற்று, திரவம், கடின பதார்த்தங்களாய் நாளாவிருத்தியில் மாறி ஈண்டு காணப்பெறும் தன்மையை அடைந்தது. உயிர் இலங்கும் வஸ்துக்களும் ஓரறிவு முதல் பேரறிவு மனிதன் வரையில் படிப்படியாய் விருத்தியாயிற்று. ஆகச்சே டார்வின் வெளியிட்ட கொள்கை நமக்குப் புதிதல்ல. மற்றும் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸு, ஜர்மனி முதலான தேசங்களிலுள்ள தத்துவ சாஸ்திரிகளும் இன்று எல்லாவற்றிற்கும் மேலானதாய் ஒப்புக்கொள்ளப்பட்டது வேதாந்தமே.

அப்படியிருக்க :—

## கிருஸ்தவப் பாதிரிகள், ஏளனம் செய்வது யாரை?

இந்துக்களில் ஒழுக்கமும் நீதியும் கிடையாதென்றும், அநாகரீகரென்றும், விக்கிரஹ ஆராதனைக்காரரென்றும், மிகவும் தாழ்ந்தவரென்றும் கூறுவது யாரை? அவர்களோ ஒரு கிருஸ்துவைக் கண்டிருந்தால், நாங்களோ எங்கள் நாடு நிறையக் கிருஸ்துக்களைக் கண்டிருக்கிறோம். எங்களுடைய மஹரிஷிகள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கிறிஸ்து. பிறகு ஸ்ரீ கிருஷ்ணன், புத்ததேவர், சங்கரர், ராமாநுஜர், மத்வர்கள், கபீர், நாநக், சைதன்யர், ஸ்ரீ ராமகிருஷ்ண என்ற பல பல கிருஸ்துக்கள் எங்களிடம் கண்டோம்.

## ஸநாதந தர்மம் எப்படிப் பரவிற்று.

பழையகாலத்தில் புத்த மதஸ்தர்கள் இந்தியாவிலிருந்து பலஸ்தீனம் முதலிய பல நாடுகளுக்குச் சென்று தங்கள் மதத்தையும், நாகரீகத்தையும் பரப்பினார்கள். ஸைபீரியாவிலிருந்து சிலோன் வரையிலும் சீனாவிலிருந்து எகிப்து வரையிலும் ஒரு நாடு பாக்கிவிடவில்லை. ஸநாதந தர்மத்தின் போதனைகள் மற்ற மதங்களின் அடிப்படையாய்க் கிடக்கின்றன வென்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் உண்டு. கிருஸ்துவின் கற்பனை இதோபதேசங்கள் இந்தியர்களுக்குப் புதிதல்ல. அவருடைய கெட்ட பிள்ளையின் கதையானது ஏற்கனவே புத்த தேவர் சொன்னது தான். புத்தப் பாதிரிகள் ஒரு தேசத்தையும் பாக்கிவிடவில்லை. சீனா, ஜப்பான், ஸயாம், அனாம், கிரீஸ், எகிப்து முதலிய பல நாடுகளையும் நாகரீகமாக்கிக் கீழ்நாட்டு உண்மைகளையும் காட்டினார்கள். ஆனால் சிலர் பௌத்தர்களை வேறு பிரிக்கக்கூடும். அது தேவையில்லையே. புத்த

தேவர் இந்து மதத்தைச் சார்ந்தவராகவும் அவர் மஹாவிஷ்ணுவின் அவதாரமாகவு மன்றோ நாங்கள் எண்ணுவது. கிருஸ்து பால்ய வயதில் இந்தியாவுக்கு ஒட்டகத்தின்மேல் சரக்கேற்றிச் செல்லும் வர்த்தகர்களுடன் வந்து 6 வருஷகாலம் இருந்து சென்றதாகத் தெரிகிறது. அப்பொழுது அறிந்ததைப் பிறகு அவர் மேல் நாட்டில் சொல்ல புதிதாயிருந்தது. அவர் ஏற்கனவே புத்த தேவர் கூறிய நேசத்தையும், அன்புடைமையையும் அதை அறியாது வேறு வழியில் பழகி இருந்த யூதர்களுக்குப் போதிக்க "உங்கள் அயலார்களை நேசியுங்கள். அன்பால் அன்பைப் பெருக்குங்கள். விரோதத்தை அன்புகொண்டு வென்றுவிடுங்கள். விரோதத்தைப் போக்குவது விரோதத்தால் அன்று, ஆனால் அன்பினால் உங்கள் விரோதிகளையும் நேசியுங்கள். ஒரு கன்னத்தில் அடித்தால் மற்றொரு கன்னத்தைத் திருப்பிக் காட்டுங்கள்" என்ற பல உபதேசங்களையும் அவர்கள் ஜீரணிக்கமாட்டாமல் அவரை சிலுவையில் அறைந்துவிட்டார்கள். அவர்கள் ஒருவிதமான மனப்போக்குடையவர்கள். கிருஸ்து தேவர் உபதேசித்த பழைய ஹிந்துமத உபதேசங்களை அவர்கள் போற்ற முடியவில்லை. மற்றும் அதுபோலும் எந்தக் கிருஸ்துதேவர் இந்த இந்தியாவிலிருந்து கற்றதை உபதேசித்ததற்காக சிலுவை மர சிக்ஷை பெற்றாரோ அதுபோல இந்தியர்களும் இன்று தாழ்மைக்கும் ஏளனத்திற்கும் கிருஸ்தவப் பாதிரிகளிடத்தில் ஆளாகியிருக்கின்றார்கள்.

இன்று காலின்கீழ் வாழ்க்கையில் மிதிக்கப்பட்டுக் கிடந்தாலும், வேதாந்த விசாரணையிலும் புத்தி தீக்ஷண்யத்திலும் மஹோன்னத பதவியிலே யிருக்கின்றார்கள். மற்றவர்களிலும் ஹிந்துக்கள் மேலோர் என்பதற்கு ஒரு ஐயமுமின்று. நடந்த மகா யுத்தமானது கிருஸ்தவ தேசங்களில் பொறாமையும், ஈரிஷையும், பொல்லாங்கும், கள்ளமும், கபடமும், நிறைந்த ஒருவரோடொருவர் சண்டையிட்டு மாண்டுபோகவே பித்தேறியதை ரூபித்துவிட்டது. கிருஸ்துவின் மதம் விழுந்த தென்பதற்கு வேறென்ன வேண்டும். கிருஸ்தவ தேசங்கள் செட்டுக்கும் காசுக்கு மன்றோ மாண்டு மடிவது. விரோதத்தை அன்பால் வென்றுவிடும் அரிய பாடம் எங்கே? ஒரு அமெரிக்காப் பாதிரி நண்பர் கிருஸ்தவர்களுடைய பக்தியைப்பற்றி அதிக வியப்பாகப் பேசுவார். நான் அவரை இந்தியா ஒரு முறை சென்று பிறகு வந்து சொல்லும் என்றேன். அவர் ஒரு முறை இந்தியா வந்து பார்த்து திரும்பி வந்ததும் இந்தியர்களுடைய பக்தியையும் உன்னதமான மனோ நிலையையும் பார்த்து மாலை மாலையாய்க் கண்ணீர் சொரிந்தார். பூமியில் ஹிந்துக்களுடைய பக்திக்கு இணையேயில்லை என்றார்.

### மீனா நாகம்.

ஆதலால், ஹே ஹிந்துக்களே நீங்கள் இன்று மிதிக்கப்பட்டுக் கிடந்தாலும் மஹோன்னதமான தேசத்தையும், மதத்தையும், நாகரீகத்தையும் உடையவர்களென்றும், மஹா புருஷர்கள் மரபில் வரும் ஈஸ்வரனுடைய

குழந்தைகள் என்றும் நம்பி கர்வத்துடன் இருங்கள். அதைரியப்படாதீர்கள். ஒருவரும் மீளா நரகத்திற்கு அனுப்பப்படமாட்டார்கள். கிருஸ்தவர்கள் பறை சாற்றித் திரியும் மீளா நரகம் அவர்களிடத்திலேயே இருக்கட்டும். ஸநாதந தர்மம் நீங்களெல்லாம் அழிவற்ற ஆனந்த சாகரத்தில் முளைத்த அரும்புதல்வர்கள் என்கின்றது. நீங்கள் கோரமான நரகத்தையும், பாவத்தையும், கொடு நெருப்பையும் எண்ணி பயப்பட வேண்டாம். கிருஸ்தவப் பாதிரிகள் பாவிகளையும் பாவத்தையுமே பெருமுழக்கம் செய்யட்டும். நீங்கள் ஆநந்தாத்மஜம் (ஆநந்தக் குழந்தை) என்று எண்ணுங்கள். நீங்கள் ஆநந்த ரூபியாய் ஆசீர்வதிக்கப் பெறுவீர்கள். நிற்க, (தொடரும்) தமிழகம்.

---

## சந்நியாசம்—துறவு.

(469-ம் பக்கத் தொடர்ச்சி.)

உலகப் பொருள்களில் சற்றும் பற்றின்றி யொழித்துவிட்டு அடையப்படுதலால் இது சந்நியாசம் என்று வடமொழியிலும், துறவு என்று தமிழிலும் புகழ்ந்து கூறப்படும். வேறொரு இச்சையுமின்றி மோட்சம் ஒன்றையே கருதி யடையப்படுமார்க்கமாதலால் மோட்ச மார்க்கமென்றும், பிரமமார்க்கமென்றும் நூல்கள் புகழ்ந்து கூறும். இந்திரிய ஜயம் பெறுதவன் துறவையடையக்கூடாது. ஆதலால் பிரமசரியாதி ஆச்சிரமானுஷ்டானங்களை முறை தவறாமல் செய்து முடித்து யோகாப்பியாசத்தால் இந்திரியங்களை ஜயித்து அடக்கி நிஷ்களங்கமான சிந்தையோடு சந்நியாசத்தை அடையவேண்டும். இம்முறைதப்பிச் சந்நியாசம் பெறுபவன் அதோகதியை அடைவானென்று நூல்கள் கூறுகின்றன. தேவரிஷி பிதிர்க்கடன்களைத் தீர்க்காதவன் சந்நியாசத்தை யடையக்கூடாது. தவத்தில் சித்திபெறும்பட்சத்தில் இந்திரியங்க ளடங்காவாதலால் மூன்றாச்சிரமங்களையு முறைப்படி யனுஷ்டித்தே சந்நியாசம் பெறவேண்டும்.

பிரமசரியத்திலிருந்தே சந்நியாசம் பெறலாமென்பது சிலர் கருத்து. சராசரப்பொருள்களில் பற்றில்லாதவனும், நல்ல ஞானத்தையுடையவனும், வைராக்கியமுள்ளவனும் சந்நியாசத்தை விரும்பினால் அவன் பிரமசரியத்திலிருந்தே சந்நியாசத்தைப் பெறலாமென்று யமமுனிவர் கூறினார் :—ஏனெனில் இயற்கையாலேயே அவனுக்கு இந்திரியங்கள் வசப்பட்டிருப்பதினாலேதான். இவைகளால் இந்திரிய விவகாரமற்றிருப்பதே சந்நியாசத்திற்கு மூலமென்று நன்கு புலப்படும்.

குருவினிடத்தில் நன்றாய்ப் படித்துத் தட்சிணை கொடுத்து நல்லறிவு பெற்றிருப்பவன் கிரகஸ்தாச்சிரமத்தை விரும்பினால் அடையலாம். பிரியமில்லாவிடில் தன்னாயுள் முழுமையும் பிரமசரியத்திலிருந்தே கழிக்கலாம் என்று விஷ்ணு ஸ்மிருதி கூறுகின்றது. பிரமசாரி கிரகஸ்தன் வானப்பிரஸ்தன் இவர்களில் எவனாவது சந்நியாசத்தை விரும்பினால்

அடையலாமென்று மஹாபாரதங் கூறுகின்றது. பிரமசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் இவர்களிலெவனாவது சந்நியாசத்தை விரும்பினால் அக்கினியை ஆத்மாரோபணம் செய்து சந்நியாசம் பெறலாம் என்று உபநிஷத்துக் கூறுகின்றது. பிரமசரியத்திலிருந்தே சந்நியாசம் பெறுவது கூடுமென்று ஜாபாலோபநிஷத்து கூறுகின்றது. நாக்கு, உபஸ்தம், வயிறு, கை இவற்றை யடக்கிக்கொண்டிருப்பவன் பிரமசரியத்திலிருந்தே சந்நியாசம் பெறலாமென்று வியாச ஸ்மிருதி கூறுகின்றது. வைராக்கியம் பெறாதவனுக்கு நான்கு ஆச்சிரம முறை விதிக்கப்பட்டன. வைராக்கியம் பெற்றவன் அப்போதே பிரமசரியத்திலிருந்து சந்நியாசம் பெறலாமென்றும், இது ஜாபால சுருதியின் சம்மதமென்றும் வேறு ஸ்மிருதிகள் கூறுகின்றன. எச்சமையம் உலகப்பொருள்களில் வெறுப்புண்டாகின்றதோ அதுவே சந்நியாசத்துக்குக் காலமென்று அங்கிரஸ் ஸ்மிருதி கூறுகின்றது. எப்போதும் சந்தோஷம், அபகாரம் செய்தவனுக்குப் பிரதி யபகாரம் செய்யாமல் பொறுமையுடனிருத்தல், மனதைக் கவரத்தக்க பொருள்கள் எதிரிலிருந்தாலும் அவைகளில் விருப்பமில்லாமலிருத்தல், பிறர் பொருளை அபகரியாமை, சரீரசுத்தி, பெண்களிடத்திலாசையற்றிருத்தல், சாஸ்திர உணர்ச்சி, ஆத்மஞானம், சத்தியம், பிறர்தான்கோபம்கொள்ளும்படியான துர்க்கிருத்தியத்தைத் தனக்குச் செய்தாலும் அவர்களிடம் கோபங்கொள்ளாமல் இருத்தல். இந்தப் பத்துத் தருமங்களும் எவனிடமிருக்கின்றனவோ அவனே சந்நியாசத்துக் கருகனாவான் என்று மனு கூறினர். உலகப்பற்றுள்ளவன் விஷயசுகங்களில் ஆழ்ந்து முழுகி யிருப்பனாதலால் அவன் சந்நியாசம் செய்துகொள்ளக்கூடாது. அவன் சந்நியாசம் செய்துகொண்டால் மீளா நரகத்தையடைவான். சந்நியாசிகளைக் கெடுத்துப் பாபமார்க்கத்தில் நடக்கச் செய்கிறவனும், பாபிகளுக்குச் சந்நியாசம் செய்விப்பவனும், சந்நியாசம் செய்துகொள்கிறவனுக்கு இடையூறிழைப்பவனும் பாபிகளாய் நரகத்தை யடைவார்கள். மஹா பாதகங்களைச் செய்தவன், விராத்தியன் (ஜாதி தருமத்தை விட்டவன் அல்லது இருகுலதாய் தந்தையர்க்குப்பிறந்தவன்), விலக்கப்பட்டவன், விரதம் யக்ஞாதி சுதர்மங்களை விட்டவன், சத்தியம் சுத்தியில்லாதவன் இவர்களுக்கும் சந்நியாசம் செய்விப்பது கூடாது. இனி சந்நியாசத்தினாலாகும் பலன் பின்வருமாறு.

சந்தானத்தினாலும் கருமங்களினாலுமுண்டான தோஷங்களைப் புடத்திலிட்ட பொன்னின் அழுக்கை நெருப்பு எரித்துவிடுவதுபோலச் சந்நியாசாக்கினி தகித்துவிடும். எவனால் பிராணிகள் பயத்தை அடைகிறதில்லையோ, அவன் மரணத்திற்குப் பிறகு பயமின்றிச் சுகித்து வருவான். கெட்ட செய்கைகளைச்செய்தவன் தானத்தினாலும், நதி ஓட்டத்தினாலும், மலினப்பட்ட பாத்திரம் கழுவுவதாலும், மனிதர் சந்நியாசத்தினாலும் சுத்தி அடைவர். "யோகசித்திபெற்ற சந்நியாசியும், படைமுகத்தில் முகந்திரும்பாமல் யுத்தம் செய்து மடிந்த வீரனும், சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு மேலுலகத்தை யடைவார்கள்" என்று பராசரஸ்மிருதி கூறு

கின்றது. உலகப் பொருள்களிற் சிறிதும் பற்றற்றுச் சந்நியாசம் பெற்ற துவிஜனைக் கண்ட சூரியன் பயந்து இவன் என் மண்டலத்தைப் பிளந்து கொண்டுபோய்க் குறைவற்ற ஸ்தானத்தை அடைவான் என்று சிந்தித்துத் தன் இடம்விட்டு நகர்ந்து அவனுக்கு வழிவிடுவான் என்றுங் கூறுகின்றது. தேவனுக்கு இருவகைச் சொரூபங்களுண்டு. அவை அசரம் சரமென்பன. மந்திர பூர்வமாக ஆவாகனாதிகளினால் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிலாசொரூபம் அசரம். மற்றது மெய்ஞ்ஞானம்பெற்ற சந்நியாசியின் வடிவம். ஆதலால் சந்நியாசி தேவனுக்குச் சமமாகிறான். விதிமுறை தவறாத சந்நியாசிக்குத் தனக்கு முந்தின அறுபது குலங்களையும் பின்வரும் அறுபது குலங்களையும் நரகத்தினின்றும் கரையேற்றும் சக்தியுண்டு. சந்நியாசம் பெற்று ஒழுக்கம் தவறாமலிருக்கிறவன் சூரியமண்டலத்தைப் பிளந்து கொண்டு சென்று மிகுந்த ஒளியையுடையவனாய் மேலான கதியிலிருப்பான் என்று வியாசர் சொன்னார். அக்கினிஹோத்திரத்தாலும், சந்தானத்தாலும், ஏராளமான ஐசுவரியத்தாலும் மோட்சம் கிடைப்பதில்லை. உலகப்பற்றுதலை முற்றும் ஒழிப்பதே மோட்சத்துக்கு மார்க்கமாமென்று தைத்தரீய சுருதிகூறியது. வேதவேதாங்கங்களை முழுவதுங் கற்று அவற்றிற்கூறிய கர்மங்களை முறைதவறாமல் நடத்திச் சித்தசுத்தியைப் பெற்றுப் பஞ்சேந்திரியங்களையும் ஜயித்தவன் எல்லாவற்றையும் விட்டொழித்து, வேதாந்தவாக்கியசிரவணத்தினால் பிரமத்திற்குந் தனக்குமுள்ள ஐக்கியஞானத்தை யடைந்து மோட்சானந்தத்தைப் பெறுபவர் சிலர். சிலர் பிறக்கும்போதே பிரபஞ்ச வாசனையற்றுச் சன்மார்க்கநெறி யொழுகி மனத்துறவடைந்து மோட்சத்தையடைவர். கடைசியாக ஆராயுமிடத்துச் சந்நியாசத்துக்கு இந்திரிய நிக்கிரகமும் மனத்துறவுமே பிரதானமென்பது புலப்படுகின்றது. ஆன்றோர் கொள்கையும் அதுவே. இந்திரியங்களை ஜயித்தாலன்றி மனத்துறவு கிட்டாது. ஆதலால் அவ்விரண்டினுள்ளும் இந்திரியநிக்கிரகமே முக்கியமானது. இந்திரியஜயம்பெற்று அதனால் மனத்துறவடைந்தவன் எந்தக் குலத்தில், எந்த வருணத்தில் எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் அவன் சந்நியாசியே. காஷாய தண்டங்களைத் தரிப்பதனால்மட்டும் ஒருவன் சந்நியாசி யாகமாட்டான். கிரகஸ்தாதி ஆச்சிரமங்களை விட்டுச் சந்நியாசத்தை யடைந்து மனத்துறவு பெறாமல் விஷயசுகங்களை விரும்பித் திரிபவன் எந்நாளும் மீளாநரகத்தில் வீழ்வான். ஆதலால் சந்நியாசம் பெற்றவன் உலகப் பொருள்களி னிடத்தில் சிறிதும் பற்றில்லாதவனா யிருக்கவேண்டும். இந்நெறியில் நிற்கும் சந்நியாசிக்கும் பரபிரமத்திற்கும் வேற்றுமை காண்பதரிது. அதனாலேயே பலபேர் சந்நியாசிகளை யாசிரயித்து ஆராதித்துச் சகல ஐசுவரியங்களையும் பெற்றுப் பெருவாழ்வடைந்து வாழ்ந்தார்களென்று இதிகாசபுராணங்கள் கூறுகின்றன. வேதத்தில் துவிஜராகிய அந்தணர்க்கே நான்காச்சிரமங்களும் விதிக்கப்பட்டன. பிராமணர்களுக்கு நான்காச்சிரமங்களும் உரியனவென்றும், க்ஷத்திரியர்களுக்குச் சந்நியாசம் ஒழிந்த ஏனைய மூன்று ஆச்சிரமங்களு

முரியனவென்றும், வைசியர்களுக்குப் பிரமசரியம் கிருகஸ்தம் ஆகிய இரண்டு முரியனவென்றும், நாலாம் வருணத்தவர்க்குக் கிரகஸ்தாச்சிரமம் ஒன்றே சிறந்ததென்றும் வியாசஸ்மிருதி கூறுகின்றது. இவ்வாறே வைதிக நூல்களெல்லாம் கூறுகின்றன. ஆனால் ஆகமங்களில் நான்கு வருணத்தவர்க்கும் சந்நியாசம் கூறப்படுகின்றது. ஆதலால் இச்சந்நியாசம் குருவின் அனுக்கிரகத்தினாலும், பரம்பரா சம்பிரதாயத்தாலும் அடையத்தக்கதென்று காணப்படுகின்றது. எந்த வருணத்தவன் சந்நியாசத்தைப் பெற்றானாயினும் அவன் இந்திரிய நிக்கிரகம் பெற்றிருத்தல் வேண்டும். தான்கொண்ட ஆச்சிரமத்திற்குரியனவாகக் குருவினாலுபதேசிக்கப்பட்ட நெறிகளில் தவறாமல் ஒழுகவேண்டும். எப்போதும் பரப்பிரமதியானத்திலேயே யிருக்கவேண்டும். பிறருடன் கூடாமல் தனித்தேயிருக்க வேண்டும். நகர கிராமங்களில் தங்கியிருக்கக்கூடாது. உலகத்தாருண்ணும் உணவுப்பொருள்களை விரும்பி யுண்ணக்கூடாது. வேடிக்கை விநோதங்களில் மனதைச் செலுத்தக்கூடாது. பிரமஞானத்தைத்தரும் நூல்களை யோதவேண்டும். இந்நெறிதவறாமல் ஒழுகுபவன் அக்ஷயமான பிரம்பதத்தை யடைந்து என்றும் அழியாததும், நிறைவும் குறைவுமற்றதும், போக்குவரவில்லாததும், நினைப்பு மறப்புமற்றதுமான பிரமபதத்தை யடைந்து நித்தியானந்தத்தை யனுபவிப்பான். இனி சந்நியாசிகளின் பேதமும் ஜீவனோபாயமும் சிறிது வரும். (தொடரும்)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## மாணவர்கட்கோர் நல்லுரை.

மாணவ சகோதரர்களே!

இச்சமயம் உங்களில் அனேகர் பரீக்ஷையில் தேறிச் சந்தோஷத்தோடு மேல் வகுப்பிற்குச் செல்ல எதிர் பார்த்துக்கொண் டிருப்பீர்கள், அல்லது சென்றேயிருப்பீர்கள். அனேகர் பரிட்சையில் தவறிப்போய் மிக்க விசனத்திலிருக்கிறார்கள். அவர்களுக்காக நாம் மனப்பூர்வமாய் துக்கிக்கிறோம். கஷ்டப்பட்டு வாசித்தவர்களும் புத்திசாலிகளுமானவர்களில் சிலர் தவறிவிட்டிருக்கிறார்கள். நாம் தேறமாட்டோம் என்று கருதியவர்களும் சரியாக வாசிக்காத மந்தமதியினருமாகியவர்களில் சிலர் தேறியிருக்கிறார்கள் என்றும், பரிட்சையில் கொடுத்த விடைகளுக்குப் புள்ளியளிப்போர் ஒரு ஒழுங்காக அளிப்பதில்லை யென்றும், இதோடு அதிகமானவர்கள் தேறிவிடுவதாயின் எல்லாருக்கும் 100-க்கு 20 அல்லது 25 குறைத்து பரிட்சையதிகாரிகள் கருதும் தொகைமட்டும் தேறும்படி செய்கிறார்கள் என்றும் இரண்டொரு மாணவர்கள்நமக்கு எழுதியிருந்தார்கள்.

அவர்கள் கூறுவது பொய்யல்லதான். ஆனால் நாம் கல்விகற்பதென்றால் பரிட்சையில் தேறுவதுதான் என்றும், பரிட்சை கொடுத்துவிட்டு ஒரு உத்தியோகத்தில் அமர்வதுதான் நாம் உலகில் ஜீவிப்பதற்கு சிறந்த வழி யென்றும் கருதி, அபரிமிதமான பேர் பரிட்சைக்குப் போவதால்

அவர்கள் இம்மாதிரி செய்ய நேர்கிறது. "தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி யென் செய்வான்?"

சகோதரர்களே!

பரிட்சையில் தேறுதற்காக நீங்கள் வீணாய் மனமுடையத் தக்கிக் கலாகாது! தவறுதல் மனிதன் இயற்கை. எப்படிப்பட்ட கெட்டிக்காரனும் தவறிப்போக்கூடும். அது அகௌரவமுமாகாது. நாம் நமது முயற்சியைச் சரிவரச் செய்தோமாவென்பதைக் கவனிக்கவேண்டும். அதைச் செய்யாதிருந்தால்தான் விசனப்படவேண்டும். தவறு நமக்கு உரோஷத்தையும், மறுமுறை எப்படியாவது தேறவேண்டும் என்ற வைராக்கியத்தையு மளிக்கும். கட்டாயம் தேறுவோம் என்ற நம்பிக்கையோடும் ஊக்கத்தோடும் முயலல்வேண்டும். ஒரு சுத்தவீரன் போர் முனையில் முன் வைத்தகாலை பின்னுக்கிழுக்காமல் தீரத்தோடு எதிரியிடம் போர்புரிந்து தோல்வியடைந்தால் அதனால் அவனுக்கு அகௌரவமில்லை. சுலபத்தில் அடையும் ஜெயம் ஒருவனுடைய ஊக்கத்தையும் உற்சாகத்தையும் மங்கச் செய்கிறது. பரிட்சையில் ஒருமுறை யிருமுறை தவறினும் மறுபடிமறுபடி அதிக ஊக்கத்தோடு முயலவேண்டுமேயன்றி தீரங்குன்றி மனமுடைந்துபோகிறது கோழைத்தனமாகும்.

இப்போது நீங்கள் கல்விகற்கும் முறைமையைப்பற்றி இரண்டொரு விஷயங்களைக் கூறுகிறோம்.

1. பாடம் படிக்கும்போது கண்ணால்மட்டும் பார்த்துக்கொண்டு போவதாவது, சத்தமிட்டுப் படிப்பதாவது தகுதியன்று. நாம் வாசிப்பது நமது செவிக்குமட்டும் கேட்கவேண்டும். அப்போது கண்ணால் பார்த்ததை மறுபடி காதாற்கேட்டதாகவுமாகிறது.
2. அன்னியர் பேசுவது முதலிய சத்தங் கேட்குமிடத்திலாவது, கண்ணைக் கவரும் காட்சிகளிருக்குமிடத்திலாவது வாசிக்கலாகாது. அத்தகைய விடங்களில் வாசித்தால் பாடத்தில் மனம் நிலைத்து நிற்காது சிதறும்.
3. ஏகாந்தமான இடமே வாசிப்புக்குத் தகுதியான இடம். வாசிக்கும்போது மனம் வேறு விஷயங்களில் செல்லும்படி விடலாகாது.
4. எந்த பாடத்தையும் எவ்விதமாக வாசித்தால் அது சுலபமாய் மனதில் பதிந்து பிறகு சுலபத்தில் மறக்கப்படாதோ அந்த வழியறிந்து வாசிக்கவேண்டும். இதற்கொரு திருட்டாந்தம் கூறுகிறோம்.

பூகோளசாத்திரம் வாசிக்கையில் இந்தியாவின் வடக்கு இமயமலையும் திபெத்தும், கிழக்கில் வங்காளகுடாக்கடலும், தெற்கில் இந்துமகா சமுத்திரமும், மேற்கில் அரபிக்கடலும் ... ... இருக்கின்றன வென்று கால் மணிநேரம் மனப்பாடம் செய்வதைவிட, பூகோளபடத்தைப் பார்த்து சற்

றுநேரம் வாசித்தால் பிறகு என்றும் மறவாது. இவ்வாறே மற்ற பாடங்களையும் தக்க வழியாய் வாசித்து மனதிற் றறிக்கச்செய்யவேண்டும்.

5. பெரும்பாலான மாணவர்கள் தங்கள் எதிர்கால வாழ்க்கையைப் பற்றி சிந்திப்பதேயில்லை. ஆதலின் "அய்யோ! பள்ளியில் வாசிக்கும்போது மட்டும் பிறகு இம்மாதிரி நடக்கும் என்று கொஞ்சம் தெரிந்திருந்தால் எவ்வளவோ ஜாக்கிரதையோடு நடந்துகொண்டிருப்பேன்" என்று அனேகர் பிற்காலத்தில் வருத்தப்படுகிறார்கள்:

மேல் வகுப்புக்களில் வாசிக்கும் மாணவர்களாவது தங்கள் எதிர்கால வாழ்க்கையை அதாவது கல்வி முடிந்தபின் தான் என்ன தொழில் செய்யவேண்டும், எவ்வழியில் ஜீவிப்பது கௌரவம் என்பதைப்பற்றிச் சிந்திக்கவேண்டும். இல்லறம் நடத்தும் வயது வந்தவர்களுடைய அனுபவங்களைக் கவனிக்கவேண்டும்.

6. தேசாபிமானமில்லாதவன் மனிதனுய்க் கருதப்படமாட்டான். ஒரு தேசம் அல்லது ஒரு ஜாதியின் க்ஷேமம் ஒவ்வொரு தனி மனிதனுடைய அல்லது குடும்பத்தின் க்ஷேமத்தைப் பொருத்ததாகும். எல்லார் க்ஷேமத்தின் மொத்தமே தேசக்ஷேமமாகும். அமெரிகா செல்வம்பொருந்திய நாடு என்கிறோம். ஏன்? அங்குள்ள மனிதரிற் பெரும்பாலார் செல்வவந்தர்களாக விருப்பதால்தான்.

நம் நாட்டார் ஒவ்வொருவரும் நம் தாய்நாட்டின் க்ஷேமத்திற்கென்று உழைத்தால்தான் நம் தேசம் முன்னேற்றமடையும். மாணவர்களாகிய நீங்கள் கல்வி முடிந்து உலகில் பிரவேசிக்கும்போது, இப்போது தாய்நாட்டின் க்ஷேமத்திற்காக உழைக்கும் சான்றோராகிய ஆன்றோரெல்லாம் ஓய்வுபெறும் நிலைமையிலிருப்பார்கள். அவர்கள் செய்துவந்த தேசத்தொண்டை நீங்களே யேற்றுக்கொள்ளவேண்டியவர்கள். ஆதலின் இப்போதே தேசபக்தியாகிய வேர் உங்கள் இருதயத்தில் ஊன்றி கிளைத்துச் செழித்து வளரவேண்டும்.

ஜீவனம் செய்வது, அதாவது ஆகாரம் சம்பாதித்து உண்டு உறங்கி மடிவது, மிருகம் பக்ஷியாதிய சகல சீவராசிகளும் செய்யும் வேலையே. நாமும் அதைமட்டுமே செய்யின் நமக்கும் மிருகங்களுக்கும் வித்தியாசமென்ன?

7. மாணவ நண்பர்களே!

கல்வி கற்பது அறிவை விசாலிக்கச் செய்ய என்று நீங்கள் கருதவேண்டுமன்றி சேவகாவிர்த்திக்காக என்ற எண்ணமே நீங்கள் கொள்ளலாகாது. நம் நாட்டில் சில மூடத்தனமான பழமொழிகள் எப்படியோ பிற்காலத்தில் முளைத்துவிட்டன. அவற்றில் ஒன்று "கோழி மேய்த்தாலும் கும்பினிக்கோழி மேய்க்கவேண்டும்" என்பதே. இது "அதமம்

சேவகாவிர்த்தி" என்ற ஆன்றோர் வாக்குக்கு நேர் விரோதமாக விருக்கிறது. நாம் க்ஷேமமடைய வேண்டுமாயின் நாம் அநுசரிக்கவேண்டிய பழமொழி "கோழி மேய்ந்தாலும் அது நம் கோழியாக இருக்கவேண்டும்" என்பதாம்.

ஜீவனம் செய்வதில் தாய்நாட்டின் க்ஷேமத்திற்கு அனுகூலமான வழியில் செய்வதே தகுதி. அப்போதுதான் நம் தாய்நாடு க்ஷேமமடையும். கல்விகற்கும் ஒவ்வொருவரும் அடிமைத்தொழில் செய்யவே ஆசைப்பட்டால் தேசம் எப்படி க்ஷேமமடையும்? வயிற்றுப்பிழைப்பு ஒன்றையே கருதி ஆங்கிலத்தையே முக்கிய கல்வியாகக் கருதுவோர், தாய்ப்பாஷையை யலட்சியம் செய்து, அதன் மூலமாய் அடையத்தக்க ஆன்மார்த்தமாதி பெரும்பயன்களை யிழந்துவிடுகிறார்கள்.

நண்பர்களே! கௌரவத்தோடு செல்வம் பெற்று முன்னேற்றமடைந்துள்ள (அமெரிகா, ஜபான் போன்ற) நாட்டார் எத்தகைய தொழிலைச் செய்கிறார்கள் என்பதைக் கவனியுங்கள். எத்தகைய தொழில் செய்தால் நம் தேசக்ஷேமத்திற்கு அநுகூலமாக விருக்குமோ, எத்தகைய தொழில் நம் தாய்நாட்டின் முன்னேற்றத்தை யளிக்குமோ, அத்தகைய தொழிலைச் செய்ய உத்தேசித்துக்கொண்டு அதற்கு வேண்டிய கல்வியைக் கற்றுக் கொள்ளுங்கள்.

8. ஒருவன் அன்னியபாஷையைக் கற்பது எதற்காக? அந்தச் சாதியாரோடு பேசவும் அப்பாஷையிலுள்ள சத்தான நூல்களை யறிந்து அதைத்தம்மவர் உணர்ந்து பயனடையுமாறு செய்வதற்குமே. ஆங்கிலர், ஜர்மானியர் முதலிய பலர் நம்நாட்டிற்குவந்து இங்குள்ள பாஷைகளைக்கற்றுப் பிறகு குறள், திருவாசகம், பாரதம், இராமாயணம், வேதம் முதலிய பல அரிய நூல்களைத் தங்கள் பாஷைகளில் மொழிபெயர்த்துக்கொண் டிருக்கிறார்கள்.

நம்மவர் ஆங்கிலம் கற்று வயிற்றுப் பிழைப்போடு அதை விட்டு விடுகிறார்கள். இவர்கள் கற்கும் இரசாயன சாத்திரம், பௌதிக சாத்திரம் முதலிய யாவும் பரிட்சையில் புள்ளிவாங்குவதற்கே. அவற்றைப்பற்றிய கல்வியைப் பரிட்சை மண்டபத்திலேயே விட்டுவிட்டு வந்துவிடுகிறார்கள். ஆங்கிலத்திலுள்ள பயனளிக்கத்தக்க சாத்திரங்களை நம் பாஷைகளில் மொழிபெயர்த்து நம்மவர் கற்கும்படிச் செய்தாலன்றோ நம் நாடு க்ஷேமமடையும். மாணவர்களாகிய உங்களுக்கு இவ்விஷயங்களில் சிரத்தையுண்டானாலன்றி நமது நாடு க்ஷேமமடையாது. நாம் எண்ணம்வைத்து ஊக்கத்தோடு முயன்றால் கருணாநிதியாகிய ஆண்டவன் அருள்புரிவார்.



சீடன்.

## பகவத்கீதை வசனம்.

(474-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பார்த்தன் கேட்ட வினாவிற்கு விடையாகப் பகவான் மனோநிக்கிரகம் செய்ய உபாயங் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! நீ கூறியவாறு மனதை யடக்குவது அரிதேயாயினும் அப்பியாசத்தாலும், வைராக்கியத்தாலும் நிக்கிரகம் செய்யலாகும். இதில் ஐயமில்லை. கரணங்களை வசம் பண்ணினவர் யோகசித்தி பெற்றவராவர்.

ஓர் மதயானையை அங்குசமின்றி யடக்கமுடியாது. அதுபோலவே மனதை யுத்திகளால் வசப்படுத்தவேண்டும். ஞானேந்திர கருமேந்திரி

யங்களை அடமாய் நிக்கிரகம் பண்ணுவதுபோல் மனதைச் செய்ய முடியாது. மனதை யடக்குவதற்குள்ள உபாயங்களில்,

1-வது உபாயம்—அத்தியான்ம வித்தையாம் :—அதாவது நித்தியாநித்திய வஸ்து விவேகத்தால் தேகாதிப் பிரபஞ்சமாகிய காணப்படும் வஸ்துக்கள் யாவும் அநித்தியம் சடம் துக்கம் என்ற நிச்சயம் உதித்தால் அவற்றிலுள்ள ஆசை யொழியும். மனம் இச்சா சொரூபமானதால் இச்சையொழிந்தால் விறகின்றிய தீப்போல் மனம் மாயும். இதுவே உத்தம மார்க்கமாம்.

2-வது சாதுசங்கம்—தத்துவ விசாரத்தை உணரக்கூடாதவர்களுக்கும் அதை மறக்கும் சுபாவமுடையோர்க்கும் சாது சங்கமே மனநிக்கிரகம் செய்ய உபாயமாம். சாதுசங்கத்தால் அடிக்கடி தத்துவ உணர்ச்சியும், சிந்தனையும் உண்டாகும். இவையே வைராக்கியம் எனப் பகவான் கூறியது.

3-வது பிராணனை யடக்கல்—குருமூலமாய் பிராணாயாம அப்பியாசத்தில் திடமுண்டாவதாலும், யுத்தியாலும் பிராணசலனம் அடங்குகிறது. அது அடங்க மனமடங்கும். இதுவே அப்பியாசத்தால் மனவொடுக்கம் பெறுவதாம்.

[முக்கியமாய் இச்சை யொழிவே மனம் ஒடுங்குதற்குபாயமாகும். அப்போது மனம் தானே யொடுங்கும். மனம் எழற்கு மூலமாயுள்ளது இச்சையே. இச்சை யொழிந்தால் உலக வாசனையே யொழியும். அதோடு நாமரூபநாட்டம் ஒழியும். அது ஒழியின் ஞானோதயமுண்டாகும். உலகசம்பந்தமான யாவற்றையும் வெறுத்தாலன்றி மோக்ஷம் கிட்டாது.

“மனநாசமே ஞானத்திற்கு முக்கிய சாதனம். மனமே மாயை. இச்சையே மனதின் சொரூபம். இச்சை யொழியின் மனம் மாளும். ஆதலின் இச்சையே மாயையின் சொரூபம்; இச்சாநாசமே மோக்ஷம்” என்று வசிஷ்ட முனிவர் ஸ்ரீ இராமருக்குக் கூறினர்.

“அறிபவற் றுசை யறிலது தானே
யவித்தையு மனமுமாண் டதுவாம்
பொறிபயி லாசை துன்பமா நிராசை
புகலரு முத்தியா மின்பம்
பிறிவறு தனது முயற்சியா லுண்டாம்
பேதைய ருண்டெனு மவித்தை
செறிதரு பொய்யாய் நாமமாத்திரமாய்ச்
சித்தெனத் தேர்ந்திடிலிலதாம்.

பிறப்பெனு மாயைக் கரையதா யெங்கும்
பிறிவரு பெரும்பொரு டோன்றி
லிறப்புறு மாயைக் கிச்சையே வடிவா
மிதனுடை நாசமே வீடு
சிறப்பில்சங் கற்பம் சிதைந்திடி லிதுதான்
றேய்ந்திடுஞ் சித்தெனுங் கதிரோன்
புறப்படி லிதய விசும்பில்வா தனையாம்
பொங்கிருள் போமெனப் புகல.”

(ஞானவாசிட்டம்-உற்பத்திப்பிரகரணம்)

அவரவர்கள் தரத்திற்குத் தக்கபடி மேலே கூறப்பட்ட உபாயங்களில் ஒன்றால் மனதை யடக்கவேண்டுமேயன்றி முரட்டுத்தனமான அடத்தால் மனதை யடக்கமுடியாது. “மனதை மனதாலேயே வெல்லவேண்

டும், மாயையை மாயையாலேயே வெல்லவேண்டும்" என்றே ஆன்றோர் கூறியுளர். அதாவது, மன நிக்கிரகம் என்றது ஈண்டு மனதின் ரசோதமோ குணங்களின் ஒழிவேயாகும். இதுதான் முதலில் வரவேண்டும். சத்துவ குணமாகிய மனதால் இரஜோ தமோகுணங்களை வெல்லவேண்டும். பிறகு சமாதி யனுபவத்தில் அச்சத்துவகுணமாயையும் விலீனமாகிவிடும்.

"கருதி மலத்தான் மலமறுக்குங் காருவென்ன மாயைதனைப்
பெருமா யையினுற் செறல்வேண்டும்......" (வாசிட்டம்)

"இம்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யும்
அம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே."

(கைவல்யம்)]

(யோக முயற்சியில் யோகசித்தியடையாது இடையில் மறித்தவன் என்ன பலனை யடைவான் என்று அர்ச்சுனன் வினவுகிருன்.)

"ஏ பரந்தாம! ஒருவன் சிரத்தையோடு யோகாப்பியாசம் செய்துகொண்டிருந்து மரணகாலத்தில் அதை மறந்து இறப்பானுயின் அவன் எக்கதியடைவன்? ஞானசித்தியின்பொருட்டு கர்மோபாசனைகளைக் கைவிட்டவன் மோகமுடையவனுதலின் யோகசித்தியடையான். அத்தகையவன் மரணமாயின் எக்கதியடைவான்?

அடியேன் மனத்திலுதித்த இந்த ஐயத்தை நீக்கவல்லோர் தங்களையன்றி வேறெருவருமில்லை" என்ற பார்த்தனை நோக்கி பரமேசுரராகிய பகவான் பின்வருமாறு அருளிச் செய்கின்ருர்:—

ஏ கிரீடி! பொய்யான சம்சாரபந்தங்களில் சம்பந்தப்படாத அறிவையுடைய யோகப்பிரஷ்டர் இகலோகத்தும் பரலோகத்தும் விநாசமடைவதில்லை. ஏனெனில் அவர்கள் எப்போதும் மெய்யான பிரமவிசாரத்தை விட்டவர்களல்ல.

யோகம் முடிவுபெறுது இடையே மடிந்தவன், அசுவமேதாதி பல யாகங்களைச் செய்தவன் அடையத்தக்க பிரம்ம உலகத்தை யடைந்து அதில் துன்பமின்றி பிரம்மன் ஆயுள்பரியந்தம் நல்ல போகங்களை யனுபவித்துப் பிறகு செல்வமும், சுத்தமும், குணமுமுடைய மகா சக்கிரவர்த்தி (ஜனகனுதியர்போன்றவர்கள்) வீட்டில் ஜன்மத்தையடைவன். அவன் பூர்வம் அனுபவித்த போகவாசனையிருத்தலின் அவ்வாறு ஜன்மமடைவன். இகபர போகங்களின் இச்சையற்ற வைராக்கியமுடையவனுன யோகப்பிரஷ்டன், விஷயபோகவாசனை யில்லாததால், புண்ணியவான்களடையத்தக்க உலகத்தையடைந்து, பிரம்ம வித்தையும் யோகாப்பியாசமுமுடைய தரித்திரராகிய பிராம்மணர் குலத்தில் பிறந்து, அதில் அடையத்தக்கன யாவுமடைந்து, பின்னும் முன் ஜன்மத்தில் அநுஷ்டித்து மரணகாலத்தில் மறந்த யோகத்தை வருத்தமில்லாமலே அடைவான்.

இவர்களிருவரில் முதல் கூறப்பட்ட யோகப்பிரஷ்டனைவிட இரண்டாவது யோகபிரஷ்டன் விசேஷமாம். ஏனெனில் முதல் யோகப்பிரஷ்டன் செல்வவந்தன் குடியிற் பிறப்பதால் மனதைக் கலக்கத்தக்க பலவித நிமித்தங்கள் அவனுக்குப் பிராப்தமாகின்றன. தரித்திரன் குடும்பத்திற் சனித்த இரண்டாவது யோகப்பிரஷ்டனுக்கு இயல்பாகவே அத்தகைய நிமித்தங்களில்லை. ஆயினும் இருவருக்கும் முயற்சியில்லாமலே முன்சன்மத்தின் முடிவில் மறந்த யோகாப்பியாசம் தானே வந்தெய்தும்—பூர்வ

அப்பியாசமே மறுபடி அவர்களை யதில் முயல்விக்கும். பூர்வஜன்ம ஞான வாசனை அற்பகாலாப்பியாசமா யுள்ளதேனும், இவர்களைப் போகங்களில் விருப்பங்கொள்ளாவண்ணம் தடுத்துத் தன் வசம் செய்துகொள்ளும்.

ஏ பார்த்த! விஷயங்களிற் செல்லும் மனமானது நிலைத்துநிற்கப் பெருதவனுயினும், ஓடுமனதை யோடாதுதடுக்க அதிகப் பிரயத்தனஞ் செய்யும்யோகியானவன், பல ஜன்மங்கள் சிரவணுதிகளைச் செய்தாயினும் (அச்சன்மங்களில் செய்யும் புண்ய கருமத்தின் பலத்தால் முடிவான ஜன் மத்தில்) பிரம்மான்ம ஐக்கியமாகிய முத்தியை யடைவான்.

(அர்ச்சுனனுக்கு முன்சொன்ன யோகத்தில் சிரத்தை யுண்டாகும் படி பகவான் பின்வருமாறு அருள்கின்றார்.)

ஏ பார்த்த! சாந்திராயண முதலிய எல்லாத் தவங்களையும் செய்தவனைக்காட்டிலும், சகல சாத்திரங்களையும் கற்றுணர்ந்தோனைக் காட்டிலும், அநுபவியாது ஒழியாத யாகாதிகர்மங்கள் அனைத்தும் செய்தவனைக் காட்டிலும், மனோநிக்கிரகம்செய்து, தத்துவஞானம்பெற்று, விஷயவாசனை யற்ற யோகியே மேலானவன். நீ இப்படிப்பட்ட யோகத்தையே அடையக் கடவாய்.

(இப்போது பகவான் எல்லா யோகத்தினும் ஞானயோகமே சிறந்த தெனக் கூறியருள்கின்றார்). ஏ பார்த்த! இருவினைகளை யளிக்கும் கர்மங் களனைத்தையும் விலக்கும் அடயோகி முதலிய எல்லா யோகிகளினும், மனதையும் அன்பையும் சதா என்னிடத்தே பதியவைக்கும் ஞானயோகி யொருவனே எனக்குப் பிரியமானவன்.

["அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்றபடி, ஈசுவரன் அருள் பெற்றாலன்றி மோக்ஷம் சித்திக்காது. அவனிடத்து அத்தியந்த பக்தி வைத்தலே அவனருள் பெறற்கு மார்க்கமாம். ஆதலின் பக்தியின்றி எத்தகைய சாதனங்களைச் செய்யினும் பயனில்லை. அன்பே சிவமாதலின் நாம் அன்புருவமடைந்தாலன்றி அவனையடைதலும் அவனில் கலத்தலும் இலையாம். பனிக்கட்டி கடலில் மிதக்கினும் அது கடலுக்கு வேறாகவே பிரிபடக்கூடியதாக விருக்கிறது. ஆனால் அது கறைந்து கடல்போல் ஜல உருவமடைந்தால் உடனே பிரிக்கக்கூடாதபடி கடலோடு கலந்து விடுகி றது. அதுபோல் நாம் அன்புருவமடைந்தாலன்றி அன்புருவமான சிவத் தோடு கலக்கமாட்டோம்.

" அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தாரு மறிகிலா
ரன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. (திருமந்திரம்.)

இவற்றால் மோக்ஷப்பிரயத்தனம் செய்வோர்க்கு பக்தி இன்றியமை யாததென்று நன்குணரலாம்.

(இந்த ஆறத்தியாயங்களும் பிரதமஷட்கரூப கருமகாண்டமெனவும் கூறப்படும். இவற்றில் துவம்பதார்த்தம் நிரூபணம் செய்யப்பட்டது. இனி "மனதையும் அன்பையும் என்னிடம் வைத்தவன்" என்ற வாக்கி யங்களால் குறிப்பிக்கப்பட்ட பக்தியோகத்தையும் அதற்கு விஷயமான தத்பதார்த்தத்தையும் நிரூபணம் செய்ய, இன்னும் ஆறு அத்தியாயங் களால் உபாசனு காண்டம் அருளப்படும்.) (தொடரும்)

ஆருவது அத்தியாயம் முற்றிற்று.



சீடன்

# அம்பாலிகை அல்லது அதிசயமரணம்.

## 1-வது அத்தியாயம்.

ஆனந்தஸிங் ஒருநாள் இரவு சுமார் பதினோருமணிக்குமேல் அதிக ஜனசஞ்சாரமில்லாத ஒரு பாதையில் சென்றுகொண்டிருந்தான். அச்சமயம்திடீலென்று யாரோ ஒருவன், அவன் தோள்மேல் கைவைத்து, "சற்று நில். நீ ஒரு துப்பறிபவனென்று நினைக்கிறேன்" என்றான்.

துஷ்டர்கள் பல தந்திரவழிகளால் மனிதரை யேமாற்றிக் களவாடுவதும் அல்லது துன்பிழைப்பதும் சாதாரணமாய் அங்கு நடப்பதுண்டு. ஆகையால் ஆனந்தஸிங் மிக்க ஜாக்கிரதையோடு தன் ஜேபியில் கையிட்டு உள்ளே யிருக்கும் துப்பாக்கியின் கைப்பிடியைப் பிடித்துக்கொண்டே அம்மனிதனை உற்று நோக்கினான்:

அம்மனிதன் உடனே தன் தலை யணியைச் சரியாய் மேலே தூக்கிக்கொண்டு முகத்தைப் பூரணமாய்க் காட்டினான்.

ஆனந்தஸிங்:—"உனக்கு என்னிடம் ஏதாவது அலுவலிருக்கிறதோ" வென்றான்.

அம்மனிதன்:—ஆம் நீ தகுந்த மனிதனா யிருந்தால்.

ஆன:—நீ என்னிடம் பேசுவதற்கு முன்பே நான் தகுந்த மனிதனா அல்லவா வென்பதைக் கண்டறிந்துகொண் டிருக்கவேண்டும்.

அம்:—பேஷ். சரியான வார்த்தை; இதுதான் எனக்குப் பிரியம். நீயே சரியான மனிதன்.

ஆன:—சரி, உன் காரியமென்ன அதைக் கூறு.

அம்:—உன் பெயர் ஆனந்தஸிங்தானே ?

ஆன:—ஆம்.

அம்:—நீ உண்மையுள்ளவனென்றும், எப்படிப்பட்ட இரகசியமான குற்றத்தையும் வெளிக்குக் கொண்டு வருபவனென்றும், நம்பினவர்களுக்குத் துரோகம் செய்யாதவனென்றும் நான் கேள்விப்பட்டேன்.

ஆன:—இருக்கலாம். இப்போது இந்நேரத்தில் உன் வேலை யென்ன? அதைக் கூறு.

அம்:—முதலாவது, நான் சொல்லப்போவதை இரகசியத்தில் வைத்துக்கொள்வதாய் வாக்களிக்கவேண்டும்.

ஆன:—அம்மாதிரி கண்மூடித்தனமாய் வாக்களிக்கமாட்டேன். ஏனெனில், ஒரு சமயம் அதனால் நான் குற்றத்தை மறைத்துவிடத் துணைசெய்வதாக முடியும். என் வேலை குற்றத்தை வெளிப்படுத்துவது.

அம்:—நான் உனக்குக் கூறப்போவது குற்றத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றேதான்.

ஆன:—அப்படியானால் நான் உன் மனிதனே.

அம்:—நான் சொல்வதென்னவெனில் குற்றவாளியை நீ கண்டு பிடிக்கும் வரையில் சங்கதியை யுன் மனதில் மட்டும் வைத்துக்கொண் டிருக்கவேண்டும்.

ஆன—ஆ ! அப்படியோ! சில சமயங்களில் துப்பறிபவர்களை யமர்த்திக்

கொள்வோர்கள் வீண் குழப்பமும் அவமானமும் நேரிடாதிருப்பதற்காக முடிவு வரையில் சங்கதியை வெளியிட வேண்டாமென்று கேட்டுக் கொள்வதுண்டு. இரகசிய சங்கதி யென்னிடம் பத்திரமாகவே யிருக்கும்.

அம்:—சரி என் வீட்டிற்கு வருகிறாயா ?

ஆன:—ஆகா ஆனால் அப்படி வருமுன் ஏற்பாடு கொஞ்சம் தெரியவேண்டும்.

அம்:—சரி முதலில் முன் பணமாய் ஐந்நூறு ரூபாய் தருகிறேன். பிறகு நீ இதில் ஜெயமடைந்தால் இன்னும் ஆயிரத்தைந்நூறு தருகிறேன்.

ஆன:—"நான் அப்படி முன்பணம் வாங்கிக்கொள்வதில்லை. ஏனெனில் சில கள்ளர்களாகிய குற்றவாளிகள் ஏதோ பெரிய குற்றம் நடந்திருப்பதாக இப்படிப் பேசி எனக்கு முன்பணம் கொடுத்துத் தங்களுக்குப் பந்தப்பட்டவனாக்கிக்கொண்டு, மறுநாள் தாங்கள் யோசித்திருந்த குற்றத்தைச் செய்துவிட்டு நம்மை ஒருவினாடி கூட வேறு வேலைக்குச் செல்லவொட்டாது நமக்கு ஆட்டங் காட்டிக்கொண்டேயிருந்து, அதற்குள் தாங்கள் செய்தகுற்றத்திற்குள்ள அத்தாட்சிகளையெல்லாம் மறைந்து போம்படி செய்வதுண்டு. ஆகையால் நான் யாரிடத்திலும் அப்படிக்கட்டுப்படும்வண்ணம் வைத்துக்கொள்வதில்லை" என்றான்.

இதைக்கேட்டதே அம்மனிதன் முகம் சற்று சுளித்ததுபோல் ஆனந்தஸிங்குக்குத் தோன்றியது. அவனதை மனதில் குறித்துக்கொண்டான்.

அம்:—"சரி நான் சொன்னபடி சரியாய் நடந்துகொள்வேனென்று உனக்கெப்படித் தெரியும்?" என்றான்.

ஆன:—விஷயத்தில் பூரணமாய்த் தலையிடுமுன் அதைத் தெரிந்து கொள்வேன்.

அம்:—சரி, வீட்டிற்குச் செல்லலாமே.

ஆன:—ஆகா.

அம்:—நீ மாறுவேடம் தரித்துக்கொள்ள எவ்வளவு காலம் செல்லும் ?

ஆனந்தஸிங் அதற்கு நேரே விடை யளிக்காமல் அம்மனிதனை நோக்கி "அதோ அத்தோட்டத்தின் வழியாய் நம்மை நோக்கி வருவதுயார் ?" என்றான்.

அம்மனிதன் உடனே அத்திக்கே திரும்பி இரண்டு நிமிடங்கள் வரை புற்றுப் பார்த்துவிட்டுப் பிறகு ஆனந்தஸிங்கின் பக்கமாய்த் திரும்பினான். உடனே திடுக்கிட்டலறி இரண்டடி பின்னிடைந்தான். ஏனெனில் ஆனந்தஸிங் அடியோடு மறைந்துபோய், அடியோடு வேறு உடை யணிந்திருப்பவனும் தாடி மீசை யுடையவனுமாகிய வேறொரு மனிதன் அங்கு நிற்பதைக் கண்டதும் திப்பிரமை யடைந்துவிட்டான்.

ஆன:—ஏன் போகலாமே ? என்றான்.

அம்:—இதென்ன மாயம் ? உன் குரலும் மாறியிருந்தால் நீ ஆனந்த ஸிங் கல்லவென்றே நான் சத்தியம் செய்திருப்பேன்.

ஆன:—எங்கள் தொழிலில் இப்படித் துரிதமாய் மாறுவேட மணிந்து கொள்ளவேண்டிய சந்தர்ப்பம் நேர்கிறது.

அம்:—'துரிதமா? ஏன் இது இந்திரஜாலமல்லவோ? இனி நடப்போம்" என்றான்.

இருவரும் வீடுபோய்ச் சேருமட்டும் ஒன்றும் பேசவில்லை. ஆனந்த லிங் அம்மனிதனோடு சம்பாஷித்துக்கொண்டேயிருந்தபோதிலும் அவன் மனதிற்குள் எவ்வளவோ சிந்தனைகள் நடந்துகொண்டேயிருக்கின்றன. அவனுடைய சுபாவப்படி சாதாரண மனிதர் கண்டுகொள்ளக்கூடாத மர்மங்கள் அவன் மனதில் காரணமின்றியே புலப்படுவதுண்டு. எதுபோலெனில், நாம் ஒரு அறையிலிருக்கும்போது எங்கோ கண்ணுக்குப் புலப்படாத ஒரு சிறு துவாரத்தின் வழியாய் புஸ் என்று காற்று நம்மேல் தாக்குவதை உணர்ச்சியாலறிகிறோம். ஆனால் அக்காற்று எங்கிருந்து வருகிறதென்று அப்போது நமக்குப் புலப்படுவதில்லை. அதைப்போலவே நமக்குக் காரணம் தெரியாமலே ஒருவர்மேல் சந்தேகமோ? ஒரு ஆபத்து வருவதுபோலவோ தோன்றுவதுண்டு.

அவ்வாறே யானந்தலிங்குக்கு ஆரம்பத்திலேயே இம்மனிதன் கொலைக் கஞ்சாத பரமதுஷ்டன் என்று மனதிற்பட்டது. அச்சந்தேகத்தாலேயே யவனிடம் முன்பணம் வாங்க அவன் ஒப்பவில்லையேயன்றி, அவன் எப்போதுமே வாங்கிக் கொள்ளாதவனல்ல.

இருவரும் வீட்டெதிரில் நின்றார்கள். அவ்வீடு மிக்க அழகான உயர்தரவீடு. அதைச்சுற்றி ஒரு தோட்டமிருக்கிறது. இதைக் கண்டதே ஆனந்தலிங் "ஓகோ இது சாதாரண விவகாரமாயிராது" என்று சிந்தித்துக்கொண்டான். அம்மனிதன் ஆனந்தலிங்கை நோக்கி "ஏன் உள்ளே வரத் தைரியந்தானே?" என்றான்.

ஆனந்தலிங் ஆகா தைரியந்தான் என்றான். அதற்குமேல் அம்மனிதன் தன்னிடமிருந்த ஒரு சாவியை யெடுத்து வெளிச்சுவரிலிருந்த கதவைத் திறந்து தோட்ட வழியாய் நடந்து அங்கிருந்து பெரிய படிகளைக் கடந்து வீட்டின் வாயிற்படி யருகில் நின்றதே ஆனந்தலிங்கை நோக்கி,

"இரகசியம் கவனமிருக்கிறதா?" என்றான். (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரம்.

### கொழும்பில் ஓர் கொம்புள்ள மனிதன்.

#### சிருஷ்டியின் விபரீதம்.

**இராஜாங்க பலபொருள் காக்ஷிக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறன்.**

கொழும்பு பட்டணத்தில் அநேக ஆச்சரியமான சிருஷ்டி விபரீதங்கள் அடிக்கடி காக்ஷிக்குக் கொண்டுவரப்படுவதுண்டு. தற்காலம் தென் ஆப்ரிகாவிலிருந்து ஒரு கொம்புள்ள மனிதன் கொண்டுவரப்பட்டிருக்கிறான். அவனுக்கு ஜர்மையாடியேல் என்று பெயர். அவன் இப்போது ஆட்டோரெயிஸ்னர் என்பவரோடு பிரிடிஷ் இந்தியா ஹோட்டலில் தாமதித்திருக்கிறான். கூடிய சீக்கிரம் ராஜ்ய பல பொருள்காக்ஷிக்குக் கொண்டுபோகப்படுவான். ஜர்மையாடியேல் என்பவன் தென் ஆப்ரிகாவில் மெகஸ்டோகிரால் என்று சொல்லப்பட்ட காடாரம்பத்தில் தோன்றியவன். பாசுடோ என்ற ஜாதியைச் சேர்ந்தவன்.

அவனுக்கு ஒன்பதாவது வயதில் நெற்றிக்குமேல் ஒன்றன்மேலொன்றாய் கொம்புகள் கிளைக்க ஆரம்பித்தனவாம். பதினைந்து அங்குல நீளமிடமாய் வளர்ந்தனவாம். வருடத்திற்கு ஐந்து அங்குல வீதம் வளர்ந்து வருவதாம். நான்கு வருடத்திற் கொருமுறை கொம்புகள் விழுந்து புதிதாய்க் கிளைக்கின்றனவாம். இது என்ன ஆச்சரியம்!

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

உருத்ரோத்காரிஞு ஆவணிமீ—கலி 5025—சாலிவாகனம் 1846
பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342
இங்கிலீஷ் 1923ஞு ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ

| ஆவணிமீ | ஆகஸ்டுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வெ | சஷ்52-45 | சித்25-0 | சித்60 | சஷ்டி, விஷ்ணுபதி புண் |
| 2 | 18 | சனி | சப்46-53 | சுவா20-53 | அ20-53சி | கரிநாள் [ணியகாலம் |
| 3 | 19 | ஞா | அ41-25 | விசா17-10 | மர60 | பிரயாணம் விலக்கல் |
| 4 | 20 | திங் | நவ37-10 | அனு13-55 | சித்60 | பிரயாணம் விலக்கல் |
| 5 | 21 | செவ் | தச32-8 | கேட்11-20 | ம11-20அ | ததி விரதாரம்பம் |
| 6 | 22 | புத | ஏ28-43 | மூல9-25 | ம9-25அ | மத்வ சர்வ ஏகாதசி |
| 7 | 23 | வியா | து26-10 | பூரா8-23 | சித்60 | தாமோதர துவாதசி |
| 8 | 24 | வெ | திர23-55 | உத்8-18 | சி8-18ம | வரலட்சுமி விரதம் |
| 9 | 25 | சனி | ச○24-10 | திரு9-20 | சித்60 | ருக்வேத உபாகர்மம் |
| 10 | 26 | ஞா | பவு24-55 | அவி11-30 | ம11-30சி | ஆவணியாவிட்டம் |
| 11 | 27 | திங் | பிர27-3 | சதை15-0 | சி15-0ம | காயத்திரிஜெபம் |
| 12 | 28 | செவ் | துதி30-20 | பூரட்19-38 | ம19-38அ | அசூன்யசயன விரதம் |
| 13 | 29 | புத | திரி34-53 | உத்ரட்25-13 | சி25-13ம | கஜ்ஜாலிதிரிதிகை, சீமந் |
| 14 | 30 | வியா | சது40-20 | ரேவ32-3 | சி32-3அ | சங்கடசதுர்த்தி [தம் |
| 15 | 31 | வெ | பஞ்46-18 | அசு59-23 | அ39-23சி | வித்யாரம்ப,வாகனமேற |
| 16 | 1 | சனி | சஷ்52-20 | பர46-55 | சி46-55அ | மாடுவாங்க,மூலிகை உப யோகிக்க,அடுப்புவைக்க |
| 17 | 2 | ஞா | சப்58-3 | ※கிரு54-3 | சித்60 | கிருத்திகைசீதளாவிரதம் |
| 18 | 3 | திங் | அஷ்60 | ரோ60 | அமி60 | ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி |
| 19 | 4 | செவ் | அஷ்2-50 | ரோ0-20 | அ0-20சி | யாத்திரை விலக்கல் |
| 20 | 5 | புத | நவ6-13 | மிரு5-15 | சித்60 | |
| 21 | 6 | வியா | தச7-58 | திரு8-40 | ம8-40அ | |
| 22 | 7 | வெ | ஏகா7-50 | புன10-13 | சி10-13ம | |
| 23 | 8 | சனி | து5-53 | பூச9-58 | சி9-58ம | |
| 24 | 9 | ஞா | திர2-13 சது57-3 | ஆயி8-0 | சித்8-0மர | |
| 25 | 10 | திங் | ●50-55 | மக4-33 பூர60 | மர4-33சி | |
| 26 | 11 | செவ் | பிர43-38 | உத்54-38 | அ54-38சி | |
| 27 | 12 | புத | துதி38-58 | அஸ்48-48 | ம48-48சி | சந்திர தரிசனம் |
| 28 | 13 | வியா | திரி28-3 | சித்42-53 | சி42-53அ | கரிநாள் மழை 9-க்குள் |
| 29 | 14 | வெ | சது20-18 | சுவா37-15 | சித்60 | விநாயகசதுர்த்தி |
| 30 | 15 | சனி | பஞ்13-8 | விசா32-10 | சித்60 | சஷ்டி, சம்பா சஷ்டி |
| 31 | 16 | ஞாய | சஷ்6-43 | அனு28-0 | மர60 | சூரிய சஷ்டி, அமுக்தாப ரணசப்தமி,ஜெயசப்தமி |

(ஆகஸ்டுமீ column, rows 22–30: 1923ஞு செப்டம்பர்மீ)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | 4உ சிம்-செ<br>6 ,, சிம்-சுக்<br>6 ,, கன்-பு<br>30 ,, கன்-சு | | செ சுக்<br>சூ-பு ராகு |
| | | குரு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 9 | உருத்ரோத்காரிஸு ஆவணிமீ கூ | 1923ஸு ஆகஸ்ட்டுமீ 17உ | பகுதி 2

## கடவுள் வணக்கம்.

ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
 தடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்றுமலை யருகி னின்றுசரு
 காதி தின்றுபனி வெயிலினால்
மெய்வ ருந்துதவ மில்லை நற்சரியை
 கிரியை யோகமெனு மூன்றதாய்
மேவு கின்றசவு பான நன்னெறி
 விரும்ப வில்லையுல கத்திலே
பொய்ம்மு டங்குதொழில் யாத தற்குநல
 சாரதித் தொழின டத்திடும்
புத்தி யூகமறி வற்ற மூகமிவை
 பொருளெ னக்கருது மருளன்யான்
தெய்வ நல்லருள் படைத்த வன்பரொடு
 சேர வுங்கருணை கூர்வையோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
 சிற்சு கோதய விலாசமே. (1)

எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—யங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம். (2)

மெய்யைப்பொய் யென்றிடவு மெய்யணையாப் பொய்ந்நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ—வையமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லானந்த
மென்மயமு நின்மயமு மே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. ஐவரென்றவேடர்=ஐம்புலன்களாகிய வேடர்.
கொட்டம்=அகங்கார நடக்கை ; பொல்லாத நடக்கை.
மர்க்கடவன்=குரங்கு,
முட்டி=கைப்பிடி.

'குரங்குப்பிடி' என்றால் பிடித்ததை விடாது பற்றியிருத்தல்.

மெய்வருந்து தவம் இல்லை=தேகத்தை வருத்தும் தவம் செய்யவில்லை.

சவுபாந நன்னெறி=படிகளாகிய நல்ல மார்க்கங்கள். அவை சரியையாதி மார்க்கங்களாம்.

பொய் முடங்குதொழில்=அசத்தியமான விஷயங்களைப்பற்றியதொழில்.
அமல்=மலமற்ற, அதாவது பரிசுத்தமான.
சிற்சுக உதய விலாசம்=ஞான சுகாரம்பமான லீலை.

2. எங்கும் சிவமே இரண்டற்று நிற்கின்=முன்னிலைச் சுட்டின்றி (அதாவது தனக்கன்னியமாக ஒன்றிருக்கும் உணர்ச்சியின்றி) யாவும் ஒரே அகண்டமாகிய சிவசொரூபமாய் உணர்வதாகிய ததாகார நிலையில் நிற்கின்.

(" பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணனந்தமே " என்று இம்மகானே அருளியுள்ள நிலையே அந்நிலையாகும்.)

" அங்கிங்கென்றெண்ணுதே "—காலதேசபரிச்சேதங்களற்ற நிலையில் நில் என்பதாம்.

அத்தகைய ஞாதரு ஞேயங்களற்ற சுத்தஞான நிலையை யெய்தாவிடின் பிறப்பிறப்பொழியாவாதலின் " பாழிலிறந்து பிறந்துழலப் பண்ணுதே" என்று மனதை நோக்கி அறிவுறுத்தினர்.

3. மெய்யைப் பொய் என்றிடவும்=சச்சிதானந்த சொரூபமே என்று மழியாத பொருளாய் நீக்கமற எங்கும் நிறைந்து நிற்க, அந்த உண்மையையறியாது அதைப் பொய்யென மதிக்கவும்.

பொய்யைத்தான் மெய்யெனவும்=மாயா தோற்றமாகிய அநித்தியப் பிரபஞ்சத்தை மெய்யென்று மதிக்கவும்.

போகுமோ=தகுதியாகுமோ ? (ஆகாது என்றபடி)

தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையேல்=உனது ஆன்ம சொரூபமே மெய்யென்றுணர்ந்து, உன் நிஜவடிவைக் கண்டு அந்நிலையி லமர்வாயாயின்.

தற்போத வொழிவில் உதிக்கும் ஆநந்தநிலையில் சத்துவமனமும் விலீனமாய் விட்டு எல்லாம் ஒரே ஆநந்தமாய் விளங்குவதால் " என் மயமும் உன் மயமும் ஆநந்தமே " என்றார்.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஸு ஆவணிமீ கஉ

## பாதிரிகளின் படுமோசம்.

### 18-வயதுள்ள பெண் பறி கொடுக்கப்பட்டாள்.

நாம் நமது மக்களை அதிலும் முக்கியமாய்ப் பெண் மக்களைப் பாதிரிகளின் பாடசாலைக்கனுப்புவதால் நேரிடும் பெருந்தீங்குகளைப்பற்றித் திருட்டாந்தங்களோடு பன்முறை வெளியிட்டிருந்தும் நம்மவர் கவனியாது நவீன நாகரீக மயக்கேறிக் கடைசியில் தம் கண்மணிகள் போன்ற மக்களையுயிரோடு பறிகொடுத்து ஆவி சோர்ந்து அவதிப்படுகிறார்கள்.

இப்போது இச்சென்னையில் நடந்திருக்கும் சம்பவம் இதை வாசிக்கும் ஒவ்வொரு ஹிந்துவின் மனதையும்—அக்கிரமத்தை வெறுக்கும் குணமும் ஜீவகாருண்யமும், பாபத்திற்கஞ்சும் தன்மையுமுடைய எவர் மனதையும்—கொதிக்கச் செய்யும் என்பதில் ஐயமில்லை. அச்சம்பவம் பின் வருமாறு.—

சென்னையிலுள்ள பிரசித்திபெற்ற சிற்பியாகிய ம-ள-ள-ஸ்ரீ, நாகப்பா என்பவருடைய மைத்துனியாகிய, 18-வயதுள்ள பங்கஜம்மாள் என்ற கன்னிகை மைலாப்பூரிலுள்ள C. E. Z. மிஷன் பாடசாலையில் 2-வது பாரம் வரையில் வாசித்துக்கொண்டிருந்தாள். புத்தி யறிந்தபின் நின்றுவிட்டாள். அந்தோ அவள் நின்றுவிடினும் அவளைக் கொண்டுபோகக் கண் வைத்திருக்கும் பாதிரிமார் சும்மா விடவில்லை. பைபில் உமன் என்ற ஒரு உபாத்தினி வீட்டிற்கு வந்து கல்வி, ஸங்கீதம், தையல் முதலியவற்றைக் கற்பித்துக்கொண் டிருந்தாள். கடைசியில் 14-7-1923 சனிவாரம் இரவு சுமார் பனிரண்டு மணிக்கு பங்கஜம் மாயமாய்ப் போய்விட்டாள். அவள் உபாத்தினியும் மறைந்துவிட்டாள். பங்கஜத்தின் வயது முதிர்ந்த தாயார் தன் செல்வப்புத்திரியின் பிரிவாற்றுமல்

ஆவிசோர்ந்து பைத்தியங்கொண்டு மிக்க பரிதாபமும் ஆபத்து மான நிலைமையிலிருக்கிறாள்.

இந்த விஷயத்தைத் தொடர்வதற்கிடையில் இரண்டொரு வார்த்தைகள் கூற விரும்புகிறோம். ம-ா-ா-ஸ்ரீ, நாகப்பா சிநேக ரிடத்தில், அன்பும், ஜீவகாருண்யமும், பரோபகாரமும், பெருந் தன்மையும், மரியாதையும் வாய்ந்தவர். அத்தகைய ஒருவருக்கு அக்கிரமமான இவ்விபத்து நேர்ந்ததற்காக நமது மனப்பூர்வ மான அநுதாபத்தை வெளியிடுகிறோம்.

இரண்டு நாட்கள் வரையில் பங்கஜத்தின் பெற்றோரும் சுற் றத்தாரும் கண்ணீர் சொரிந்துகொண்டே அவளைத் தேடி யலைந் தார்கள். அதன்பின் பங்கஜம் புரசப்பாக்கத்திலுள்ள ஸெனை மிஷன் சங்கத்திலிருப்பதாகத் தெரியவந்தது. நாகப்பாவும் அவர் மனைவியுமாக அங்குசென்று விசாரித்தபோது பங்கஜம் அன்றே 400-மைல் தூரத்திலுள்ள பாளையங்கோட்டைக்கு அனுப் பப்பட்டதாகத் தெரிந்தது.

அவர்கள் கூறுவதாவது, "பங்கஜத்திற்கு வயது வந்துவிட் டது. அவள் கிருஸ்து மார்க்கத்தைத் தழுவிக்கொண்டாள்" என்பதே. இதுவும் நல்ல வேடிக்கையே. உண்மையில் நமது பெண்களை அவர்கள் பாடசாலைக்கு அனுப்பும்போதே எமனிடம் ஒப்பித்து விடுகிறோம் என்று பெற்றோர் கருதவேண்டும். ஏனெ னில் நமது பெண்கள் அங்கு வாசிக்கும்போதே அவர்களுக்கு நயவஞ்சகமாய் நமது மதாசாரங்களில் வெறுப்பை யுண்டாக்கி, மாயபோதனைகளாகிய கொடிய விஷத்தைப் பூரணமா யூட்டி விடுகிறார்கள். பிறகு அவர்கள் வயது வந்து வீட்டில் தங்கும் போது பைபில் உமன்கள் என்ற உபாத்தினிகள் தந்திரமாய்ப் பசப்பு வார்த்தைகள் கூறி "எங்களுக்குச் சம்பளம்வேண்டாம். இலவசமாக நமது குழந்தைக்குக் கல்வி போதிக்கிறோம்." என்று பெற்றோர்களை மயங்கச்செய்து, பெண்ணுக்கு இரகசியமாய்ப் போ தித்துக் கொஞ்ச நாட்களுக்குள் நடு இரவில் பெண்ணை இரகசிய மாய் வெளிவரச் செய்து அழைத்துப்போய், தங்கள் பாடசாலை கள் முதலிய ஒரு இடத்தில் மறைத்துவைத்துச் சீக்கிரத்தில் தூரத் திலுள்ள தங்கள் ஸ்தலங்களில் ஒன்றுக்கு அனுப்பி விடுகிறார்கள்.

கிருஸ்து மதத்தைத் தழுவியது என்பது பெரும்பொய்யான சாக்கேயன்றி வேறில்லை. தன் மதம் இன்னதென்று தெரியாத

17—18 வயதுள்ள பெண், தன் மதத்தில் சரியான மோட்சமார்க்கமில்லையென்றும், கிருஸ்து மதத்தில் இருக்கிறதென்றும் உணர்ந்துகொள்வது சாத்தியமென்று மூடனும் கருதமாட்டான்.

அந்தப்பெண் தன் மனமாரக் கிருஸ்துமார்க்கத்தில் சேர விரும்பின் பகிரங்கமாய் யாவர்க்கும், முக்கியமாய்ப் பெற்றோர்க்குக் கூறி யப்படிச் செய்யலாமே. பாதிரிகளேனும் பெற்றோர்க்கறிவித்து அப்பெண்ணைத் தங்கள் மதத்தில் சேர்த்துக் கொள்ளலாமே. ஒருவருமறியாதபடி இப்படிக்கொண்டு போவானேன்? பிறகும் அவள் சுற்றத்தார்கூட அவளைக் காணாதபடி கடுஞ்சிறையில் அவளை யடைத்து மறைத்து வைப்பதேன்? அப்படி வைப்பதே யவர்கள் வழக்கம். உடனே தூரதேசம் கொண்டு போவதேன்? 18-வயதுள்ள ஒரு ஹிந்துப்பெண் நடு இரவில் தனியே வெளியில் செல்லுமோ. உபாத்தினியோ அவர்களைச் சேர்ந்தவர்களோ வீட்டருகில் வந்திருந்து, முன் செய்த ஏற்பாட்டின்படி பெண்ணை கள்ளத்தனமாய் அந்த வேளையில் வெளிவந்து விடச் செய்து அழைத்துக்கொண்டு போயிருக்கவேண்டும். இந்நடக்கைகளால் விஷயத்தின் உண்மை பட்டப்பகல்போல் விளங்குகிறதன்றோ. இதில் எள்ளளவு சந்தேகந்தானேது?

இனி இவர்கள் செய்கை இவர்கள் மதத்திற்கு அங்கீகாரமானதா, ஏசுக்கிருஸ்துவுக்குத் திருப்தியானதா என்று சற்று ஆராய்வோம். ஏசுகிருஸ்து மிக்க பரிசுத்த உள்ளமும் ஜீவகாருண்யமுமுடைய மகான் என்பது தெரிந்த விஷயம். அவருடைய மலைப்பிரசங்கம் ஒன்றே அந்த உண்மையை விளக்கும். அவருக்கேனும், அவரிடம் மெய்யான பக்தியுடைய உண்மைக் கிருஸ்தவர்களுக்கேனும் ஜீவகாருண்யமற்ற இச்செய்கை சம்மதமாகுமோ. பலர் மனம் புண்பட்டு அவர்கள் மரண பரியந்தம் தீராவியாகூலத்தில் ஆழ்ந்து விடும்படிச் செய்வதைவிட பாதகச் செயல் வேறென்னவிருக்கிறது? அத்தகைய காரியத்தைச்செய்து, பிறமதத்தவரைத் தமது மதத்திற்கு இழுக்கும்படி ஏசுகிருஸ்து கூறியிருக்கிறாரா? அவர் மேலும் அவர் தாபித்தமதத்தின் மேலும் பிறமதத்தினர்க்கு வெறுப்பும் இழிவும் உண்டாக்கத் தக்க காரியத்தைச் செய்வோர்கள் அவருடைய பக்தர்களாய் அவர் கருணைக்குரியவர்களாவார்களா அல்லது அவருக்கு விரோதிகளாக்க் கருதப்படுவார்களா?

இத்தகைய காரியங்களைச் செய்வோர்களில் பலருக்கே அம் மதத்தில் நம்பிக்கையும் விசுவாசமுமில்லை யென்பதை அவர்களி டம் பழகுவதால் நன்கறியலாகும். அப்படியிருந்தும் அவர்கள் இவ்வாறு அன்னிய மதத்திலுள்ளவர்களை வஞ்சகமாய்த் தங்கள் மதத்திற் கிழுப்பானேனெனில், பணமே அதற்குக் காரணம். இவர்களனைவரும் சம்பளமாகிய கூலிக்கு இவ்வேலை செய்கிறவர் களேயன்றி வேறில்லை.

ஒரு சாதாரணமனிதன் அப்பெண்ணை அந்த விதமாய்க் கொண்டுபோயிருந்தால், "அவளுக்கு வயது வந்துவிட்டது; தன் இஷ்டப்படி வந்தாள்" என்று கூறினும், அவன் ஒருவர் பாது காப்பிலிருந்தவளைக் கள்ளத்தனமாய்க் கொண்டுபோனதற்காகச் சட்டப்படி தண்டிக்கப்படுவானன்றோ. உபாத்தினிகளின் மாய ஜாலங்களில் மயங்கி மோசம்போன பங்கஜம், தன் வீட்டிற்கெழு திய கடிதத்தில் தான் பாளயங்கோட்டையில் ஒரு பயங்கரமான இடத்திலிருப்பதாகவும், அக்காள் அம்மாள் முதலியவர்கள் வந்தால் தன்னைப் பார்க்கலாம் என்றும், அத்தான் முதலியவர்கள் பார்க்க முடியாதென்றும் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. அதோடு அக் கடிதத்தை யவள் பயத்தோடு கள்ளத்தனமாய் எழுதியதாகத் தெரிகிறது. ஏனெனில் அக்கடிதத்திலேயே அக்கன்னிகை அங் குள்ள கிருஸ்தவர்களின் உத்தரவன்னியில் தான் கடிதம் எழுதமுடி யாது என்று வரைந்திருக்கிறாள்.

இதனால் அப்பெண் மனப்பூர்வமாய்ச் சென்றதென்பது எவ் வளவு வரை யுண்மையென்பதும், அவளது சிறைவாசத்தை விட துரைத்தன சிறைச்சாலையின் வாசம் மேலானதென்பதும் நன்கு விளங்கும்.

பெண்கள் வந்தால்மட்டும் பார்க்கலாம். ஏனெனில் அவர் களைச் சுலபத்தில் ஏமாற்றிவிடலாம். ஆடவராகிய சுற்றத்தாரைக் கண்டால் அப்பெண் "அய்யோ என்னை அழைத்துக்கொண்டு போய்விடுங்கள். நான் புத்தி தெரியாமல் மோசம் போய்விட் டேன்" என்று கூறுவாள் என்ற பயத்தாலோ அல்லது இன்னும் வேறென்ன இரகசியங்களைக் கூறிவிடுவாளென்ற பயத்தாலோ தான் அம்மாதிரி சுற்றத்தாரைக் காணவிடாது தடுக்கிறார்கள்.

அந்தோ இதற்கு நீதியில்லையோ? நம் நாட்டில் துரைத்தன மில்லையோ? இருக்கிறது. அதிலும் பாரபட்சமற்ற காருண்ய மான துரைத்தனமே யிருக்கிறது.

இரண்டொரு மாதங்களுக்குமுன் சென்னை வேப்பேரியி லுள்ள ஆங்கிலோ இந்திய வகுப்பினரில் மரியாதையான குடும்ப த்தைச் சேர்ந்தவர்கள் இங்கிலாந்திலுள்ள தாய்தந்தையற்ற டோரிஸ் ஹாக்கர் என்ற ஒரு பெண்ணை வளர்த்துக்கொள்வதற் காக எவ்வளவோ சிரமப்பட்டு அங்கிருந்து வரவழைத்தார்கள். அவர்கள் அசல் ஐரோப்பியர்களல்லாததால் அச்சிறுமி அவர்க ளுக்குப் பெண்ணுவது அகௌரவமென்றெண்ணி அவர்களுக்கு நேர்ந்த செலவை யளித்துவிட்டு அப்பெண்ணுக்குக் கப்பல்செலவு முதலியவையும் கொடுத்து அனுப்பிய நம் காருண்ய துரைத்தனத் தார் நாம் நமது மக்களை யிப்படிப் பறிகொடுத்துத் தீராத் துயரை யடையும்படி விட்டுவிடுவார்களோ ?

ஆனல் அழுதபிள்ளையன்றோ பால் பெறும். நாம் இத்தகைய ஆபத்துகளுக்குள்ளாவது முக்கியமாய் நமது அறியாமையா லேயே. நாம் நம் பெண்களுக்குப் பெருந்தீங்கிழைக்கிறோம். ஹிந்துக்களாகிய நமக்கு மதமே பிராணனிலும் சிறந்தது. மத மொழிந்தால் பிறகு நாம் ஒரு ஜாதியாரென்பதே யொழிந்து போம் என்ற உணர்ச்சி நம்மவர்க்கு இன்னும் உதிக்காமலிருப்பது மிக்க வியப்பே. நம் ஆண்மக்கள் ஆங்கிலம் படிப்பதால் அவர் கள் மதாசாரங் குன்றிப்போவது தெரிந்த விஷயம். ஆயினும் பெண்மக்களால் அவர்கள் வரம்பு கடவாமல் காக்கப்படுகிறார் கள். அப்படியிருக்க நம்மவர் தம் பெண்மக்கள் ஆடவரைப் போல் ஆங்கிலங் கற்கவேண்டுமென்று விரும்புவது பெருந் தீங்கை விளைவிக்கும் விபரீத புத்தியேயாகும். இந்த மூட மயக் கங்கொண்டு பெண்களை அன்னியமதப்பாடசாலைகளுக்கு அனுப் புவது சுத்த அறியாமையேயாகும். அதோடு போகாமல் அம்மத உபாத்தினிகளை வீட்டிற்கு வரவிட்டுத் தம் செல்வச் சிறுமிகளைப் பறிகொடுத்துப் பரதவிப்பது நமது மூடத்தனமேயன்றோ! எமன் உடலையேனும் கொஞ்சநேரம் நாம்வைத்திருக்கவும்,வளர்த்தகரத் தால் அழித்துவிடவும் விட்டு ஆவியைமட்டும் கொள்ளை கொண்டு போகிறான். அந்தோ ! பெண் எமன்கள் போன்ற இவ்வுபாத்தி னிகள் உடலையுமன்றோ கொண்டுபோய்விடுகின்றனர்.

நம் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் நம் தலைவர்களும், மந்திரிகளும் இத்தகைய ஆபத்துகளைத் தடுக்க முயலாவிட்டால் பிறகு இவர்களது மற்ற உழைப்பெல்லாம்

என்ன பயன் பெறுமோ நமக்குப் புலப்படவில்லை. இந்து சமுகத்தார் இனியேனும் தக்க முயற்சி யெடுத்துக்கொள்ளாவிடின் இத்தகைய ஆபத்துகள் வளர்ந்துகொண்டேபோய்க் கடைசியில் பெரிய ஆபத்தில் முடியுமன்றோ. இவ்விஷயத்தைப்பற்றி நம் பத்திரிகைகளனைத்தும் முறையிடுவதை நமது மந்திரிகள் கவனிப்பார்களோ?

சில தினங்களுக்கு முன் துரைத்தனத்தார் உதவிபெறும் பாதிரிமார்கள் பாடசாலையில் வாசிக்கும் கிருஸ்தவரல்லாத மாணவர்களுக்கு கிருஸ்து மத வேதம் கட்டாய பாடமாகக் கற்பிக்கப்படலாகாது என்று சென்னைச் சட்டசபையில் ஒரு பிரேரபணை கொண்டுவரப்பட்டது. அப்போது ஜஸ்டிஸ் கட்சியார் அதற்கு விரோதமாக நின்று அதைத் தோற்கடித்து விட்டார்கள். கடவுளே! நம்மவர் இப்படிக் கக்ஷிப்பிரிவினை செய்துகொண்டு நமக்கு நாமே தீங்கிழைத்துக்கொண்டால் நாம் முன்னேற்றமடைவது முயற்கொம்பாகவன்றோ முடியும். ஆண்டவன் நம்மவர்க்கு நல்லறிவளிப்பாராக.

ஓம் தத் ஸத்.

---

## சந்நியாசமும் பொறுமையும்.

கடந்த மாதச் சஞ்சிகையில் பிரம்மஸ்ரீ சிவானந்தசாகர யோகீஸ்வரரவர்கள் வரைந்த சந்நியாசம்—துறவு என்ற விஷயத்தில் சந்நியாசத்தைப்பற்றி விரிவாய் வரைந்துள்ளார்கள். அதையே சுருக்கமாய் இக்கால அநுபவத்தோடு ஒத்திட்டு வரையக் கருதினோம்.

சாதாரணமாக பிரம்மசரியம், இல்லறம் இந்த இரண்டு ஆசிரமங்களிலும் விதிப்படி யொழுகிய பின்னரே ஒருவன் சந்நியாச ஆசிரமத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்பது விதி. ஏனெனில் பிரமசரிய ஆசிரமத்திலிருக்கும்போது குரு முன்னிலையில் சாத்திர விசாரணைசெய்து பரோக்ஷமாக வேனும் நித்தியா நித்திய வஸ்து விவேகம் பெற்றிருக்கிறான். ஆயினும் பூர்வவாசனையால் உலகபோக விச்சை யொழியாது. ஒருசமயம் பாலிய பருவத்தில் விராகம் தோன்றினும் அது மந்தவிராகமாக விருக்குமேயன்றி நிலைத்திராது. யௌவன பருவம் வந்த காலத்து உலகபோக வாசை யெழும்.

ஆதலின் அக்காலத்தில் தனக்குத் தகுதியான ஒரு குலக்

கன்னிகையை வரித்துக்கொண்டு இல்லறம் விதிப்படி நடத்துவதால் நிஷ்காம புண்ணிய கர்மத்துவாரா சித்தசுத்தி யுண்டாகிறது. அதோடு உலகபோகங்களை யனுபவிப்பதால் “சே! இன்னும் எவ்வளவு காலம் அனுபவித்தாலும் இவ்வளவுதானே. இப்படி எண்ணிறந்த ஜன்மங்களில் அனுபவித்தே யிருக்கிறோம். ஒன்றேனும் நிலைத்தில்லது. முடிவில் இவையாவும் அநித்தியமே. இந்த அநித்தியமான அற்ப போகத்திற் கிச்சை வைப்பதால் பலவித துன்பங்களை யனுபவிக்க நேர்கிறது. பிறவிப்பிணியோ ஒழிந்திலது. சீ சீ இனி யிதைவிட்டு அழியாத பேரின்பத்தை யடைய முயலவேண்டும்” என்ற இவ்விதச் சிந்தனைகளால் விராகம் ஜனிக்கிறது. இச்சை யொழிகிறது. இச்சை யொழியவே மனோலயம் எளிதில் சித்திக்கிறது. அப்போதுதான் ஏகாந்தத்திலிருந்து நிட்டை சாதித்து ஆன்ம சாட்சாத்காரத்தை யடையத் தகுதியான பக்குவம் வாய்க்கிறது. ஆகையால் அதுதான் சந்நியாசம் பெறற்குரிய காலம் என்று விதிக்கப்பட்டது.

அத்தகைய சந்நியாசிக்கு மறுபடி உலகபோக இச்சை யெழாது. அவன் அப்போகங்களை வாந்தியசனம்போல் கருதுவான். மற்றபடி சாதாரணமாக உலகபோகங்களை யொருவன் எவ்வளவு காலம் அனுபவித்தாலும் அதில் விரக்தி யுண்டாவதில்லை; வயோதிகம் வந்தவனுக்கும் போகங்களை யனுபவிக்கும் சக்தியில்லை யெனினும் ஆசைமட்டும் ஒழிவதில்லை.

சந்நியாசத்திற்கு விராகம் அதாவது இகலோக பரலோக போகங்களில் வெறுப்பு ஒன்றுதான் காரணம். அதன்றி காஷாயம், உருத்திராக்கம், தண்டு, கமண்டலம் முதலிய சின்னங்கள் காரணமல்ல. அதாவது உலகபோக ஆசை மனதைவிட் டகலாதிருக்க சந்நியாசிவேட மட்டு மணிந்துகொள்வது பெரும் பாதகமாகும். சாதாரண மனிதர் போகங்களை யனுபவிப்பதால் கர்மத்தை யீட்டுகிறார்கள். ஆனால் போக இச்சையுடைய சந்நியாசிக்கோ கொடிய நரகம் பிராப்தமாகும்.

இக்காரணங்களாற்றான் நம் நாட்டில் ஒருவன் சந்நியாசியாவதெனின் தக்க குருவினிடமே அதைப் பெறவேண்டும் என்ற விதியுண்டு. அவர் அவன் இந்திரியங்களைச் செயித்தவனா? மனவொடுக்கம் வந்தவனா? இகபரவிராகம் பெற்றவனா என்று சோதித்து தகுதியுடையவன் என்று அறிந்தபின்பே அவனுக்குச் சந்நியாசமளிப்

பார். ஒரு சந்நியாசியை நோக்கி "உனக்கு யார் சந்நியாசமளித்தது?" என்று கேட்டால் அவன் அக்குரு இன்னாரென்று கூறுவான். அதன்மேல் அவன் சரியான சந்நியாசியாகத்தான் இருப்பான் என்று உணர்வார்கள்.

இக்காலத்திலோ எல்லாம் தலை தடுமாற்றமாகவே யிருக்கிறது. இக்காலத்தில் வித்வான், வெண்பாப்புலி, அஷ்டாவதானம், சதாவதானம் என்று அவரவர்களே பட்டம் சூட்டிக்கொள்வதுபோல் சந்நியாசிகளும் நமது நாட்டில் மலிந்துவிட்டார்கள். சரியாக இருபது வயதுகூட ஆகாதவர்களும் உயர்ந்த மல்லை ஜாப்ரா விரையில் சாயம் தோய்த்துக் கட்டிக்கொண்டவுடன் சந்நியாசிக ளாகிவிடுகிறார்கள். சிரசை முண்டனம் செய்துகொள்வதும் காஷாயமும் கழுத்தில் ஒரு உருத்திராக்கமும் அணிந்துகொள்வதுமே சந்நியாசம் பெறுவதற்கு வேண்டிய யோக்கியதையென்று கருதுகிறார்கள்.

ஒருவனுக்குப் பூர்வ ஜன்மத்தின் விட்ட குறையால் ஆரம்பத்திலேயே விரக்தி ஜனிக்கலாகும்; ஏன், ஞானமே உதிக்கலாகும். அத்தகையோர் சந்நியாசம் பெறற்குக் காலவரையேயில்லை. அவன் எச்சாதியாயினும், என்ன வயதுடையவனாயினும் அவசியமில்லை. ஆனால் அப்படி நேரிடுவது மிக அரிது. இந்த பாலிய சந்நியாசிகளுக்கு இச்சை யொழிந்ததென் றெங்கேனும் கருதத்தகுமோ. இவர்களில் பெரும்பாலார்க்குக் கல்வியேயில்லை. சிலர்க்குக் கஷ்டத்தோடு வரிசையாய் எழுத்துகளைப் படிக்கமட்டும் தெரியுமாதலால் சிறு நூல்களைப் பொருளறியாமலே மனப்பாடம் செய்கின்றனர். இவர்கள் பிரத்தியட்சமாய்க் காணும் பலன் என்னவெனில் கஷ்டப்படாமலே அன்னியர் கர்மத்தைப் புசித்தலே. இதனால் சோம்பலுக்குத் தோழராகிறார்கள். உண்மை விரக்தியடைந்து சந்நியாசம் பெற்றிருப்பவனைப்பற்றி நாம் கூறவில்லை. இவர்களுக்கு எள்ளளவேனும் இச்சை யொழியவில்லை. இந்திரியங்களை நிக்கிரகிக்கும் சக்தியாவது மனதை யடக்கும் சக்தியாவது சற்றேனுமில்லை. அறுசுவை யுணர்ச்சி யொழியவில்லை. பெரும்பாலும் இவர்களுக்கு இந்திரியங்களையும் மனதையும் வேறு பிரித்தறியவே முடியாதெனில் இவர்கள் அவற்றை யடக்குவதெப்படி? இவர்கள் சந்நியாசகோல மணிவதிலும் ஒழுங்கு தேடுகிறார்கள். உயர்ந்த மல், வெண்பட்டு, சரிகை வேட்டி இத்தகைய

வற்றிற்கு ரோஜா நிறச் சாயமேற்றி யணிதல், பொன்மலர் கட்டி இரத்தினங்களிழைத்த உருத்திராக்கமணியைப் பொன் கயிற்றில் கோத்தணிதல், இன்னும் பலவுள.

சந்நியாச மடைவது உலகவிவகாரங்களை யடியோடொழித்துக் கிரியையற்று, சதா ஆன்ம சாக்ஷாத்கார நிலையிலிருக்கச் சாதனை செய்வதற்கே யன்றி வேறில்லை. ஆனால் இப்போதுள்ள சந்நியாசிகளில் பலர் இல்லறத்தானுக்கிருக்கும் தொல்லைகளைக் காட்டிலும் அதிக தொல்லைகளை வைத்துக்கொண்டு அல்லற்படுகிறார்கள். இத்தகையார் சந்நியாசத்தால் யாதுபயன்? இவ்வகைச் சந்நியாசிகள் மலிந்து காணப்படுவதால் அந்த ஆசிரமத்துக்குரிய மதிப்பு இல்லாமற்போகிறது. சந்நியாசிகள் பூசிக்கத்தக்கவர்களாகக் கருதப்படவேண்டியிருக்க, அதற்கு மாறாக உயர்தர யாசகராகவும், வெளி வேடக்காரராகவும் கருதப்படுகிறார்கள். போலிச் சந்நியாசிகளால் மெய்யான சந்நியாசிக்கும் மதிப்பில்லாமற் போகிறது.

நாவின் ருசியையும் ஸ்திரீ யிச்சையையும் ஜெயித்துவிட்டால் எல்லாக் கஷ்டமும் ஒழிந்ததாகும் என்று ஒரு ஞானி கூறியுள்ளார். ஸ்ரீ சைதன்னியசுவாமிகள் கேசவ பாரதியாரிடம் சென்று தமக்குச் சந்நியாசம் அளிக்கும்படி வேண்டியபோது அவர் சைதன்னியரை நோக்கி “நீ நல்ல வாலிபமும் மிக்க அழகுமுடையவனாக இருக்கிறாயே. உனக்குச் சந்நியாசமளிக்க யாருக்குத் தீரமுண்டாகும்?” என்றனர்.

சைதன்னியர் “சுவாமி! ஒருவனுக்குச் சந்நியாசமளிக்குமுன் அவனைச் சோதியுங்கள். நான் சந்நியாசம் பெறத் தகுதியுடையவனாயின் தாங்களே எனக்குச் சந்நியாசமளிக்கப் பிரியப்படுவீர்கள். ஆகையால் அடியேனைச் சோதித்துப் பாருங்கள்” என்றார். அதன்மேல் கேசவபாரதி சைதன்னியரை நோக்கி “உனது நாவை நீட்டென்றார். அவர் நீட்டியதும் பாரதி கொஞ்சம் சர்க்கரையை நாவின்மேல் வைத்தார். சற்றுநேரம் அப்படியே யிருந்தபோது சர்க்கரை கரையாமலே யிருந்தது. பிறகு ஊதியபோது உடனே சர்க்கரை தூளாய்ப் பறந்துபோயிற்று. ஏன்? நா அதன் ருசியை யுணர்ந்திருப்பின் நாவில் நீர் சுரந்து சர்க்கரை கரைந்துபோயிருக்கும். உணர்ச்சியில்லாததால் கரையவில்லை.

அதற்குமேல் அவரைச் சோதிக்கவேண்டியதில்லை. ஏனெனில் எப்போது இரச உணர்ச்சி வெல்லப்பட்டதோ அப்போது மற்ற எல்லாம் வெல்லப்பட்டதாகும்.

"அறுசுவையின் குணங்குற்ற மசுத்தம் சுத்தமென வூணாய்ந்திடாம
லண்டினதைக் காட்டுத்தீபோ லருந்துபவன் மாபோகியாகும்"
(கைவல்யம்)

இத்தகையோ ரன்றோ சந்நியாசத்திற் கருகராவோர்.

சந்நியாசிகளுக்குச் சாதுக்கள் என்றும் பெயர். அதாவது அகங்காரத்தை யொழித்துவிட்டுக் கோபமின்றிச் சதா சாத்மீகத் தோடு பொருந்தியிருப்பவர்கள். பொறுமை யாவர்க்குமே இருக்கவேண்டிய மகா மேலானகுணம். "பொறுமை கடலினும் பெரிது" என்றனர் ஆன்றோர். இத்தகைய பொறுமை சந்நியாசியிடம் சதா இருக்கவேண்டும். இல்லற வாசிகள் எப்போதும் பொறுமையாயிருப்பது மிகக் கஷ்டமான காரியமே. இல்லறத்தில் அடியோடு கோபமே காட்டாதிருந்தால் மிக்க அனுனுகூலம் நேரிடும். கோபம் ஓர் பேய் போன்றது. நான் எனது என்பதிருக்கிறவரையில் கோபம் ஒழிந்தபாடில்லை. தனக்காவது தன்னைச் சேர்ந்த உயிர்ப்பற்று பொருட்பற்றுகியவைகளுக்காவது ஒருவர் இடையூறு செய்தால் உடனே கோபம் கொதித்தெழும்புகிறது. பேய்வயப்பட்டவனுக்குத் தான் செய்வது நல்லது கெட்டது என்ற அறிவு விளங்குவதில்லை. அதுபோன்றே கோபப்பேயின் வயப்பட்டவனும் ஆத்திரத்தால் தன்னை மறந்து கொடும்பாதகச் செயல்களைச் செய்துவிடுகிறான்.

இதனாற்றான் கோபம் சண்டாளம் என்றும் பெரும்பாதகத்தை யுண்டாக்கத்தக்கதென்றும் கூறப்பட்டிருக்கிறது. குற்றம் செய்தபோது பெற்றோரும், உபாத்தியாயரும் பிள்ளைகளைத் தண்டிப்பதுபோல் பிறர் நலத்தின் பொருட்டுக் கோபங் காட்டுவது இல்லறத்தில் அவசியமே. அதனாற் குற்றமில்லை. சாதாரணமானவர்கள் கோபம் கெட்டதென்ற காரணத்தால் அது உண்டாகும்போது மறவாமல் அதைக் தடுத்தடக்கப் பழகவேண்டும்.

தற்செயலற்று, எல்லாம் ஈசன் செயலென உணர்ந்து, யாவும் அவன் சொரூபமாகவே காணும் அனுபவம்வரின், அப்போதுதான் கோபமும் அதன் மூலமாகிய அகங்காரமும் இயற்கையிலேயே இல்லாதொழியும். சந்நியாசி அத்தகைய நிலையி

லிருக்கவேண்டியவன். எப்போது இச்சையொழிந்து விராகம் ஜனித்ததோ அப்போதே அகங்காரமமகாரங்களொழிந்தன. சந்நியாசி யாவற்றையும் தன் ஆன்மசொரூபமாகவே காணவேண்டியவன் ஆகையால் அவன் சாத்மீகமூர்த்தி அல்லது சாது என்று கூறப்படுகிறான்.

உண்மைச் சந்நியாசிகளையும் போலிச் சந்நியாசிகளையும் பிரித்தறிவது அதிக கஷ்டமானகாரியமல்ல. வேடத்தைவிட்டுக் குணத்தாலும், நடக்கையாலுமே உண்மையை யறியலாகும். உண்மையான சந்நியாசிகளைக் கண்டால் அவர்கள் ஜாதி குலம் முதலிய ஒன்றையும் கவனியாமல் அவர்களைப் பரமேசுரனாகவே பாவித்து நடந்துகொள்ளவேண்டும்.

சீடன்.

## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(456-ம் பக்கத் தொடர்ச்சி.)

(25) கறங்கெனத் திரியும் வேகக் கவிக்குலம் கதுவ வாங்கிப்
பிறங்கிருங் கடலிற் பெய்த போழ்தத்தும் பெரிய பாந்தள்
மறங்கிளர் மான யானை வயிற்றின வாக வாய்சோர்ந்
துறங்கின கேடுற் றலு முணர்வரோ வுணர்வி லாதார். (சேது-20)

(இ-ள்.) காற்றாடிபோல மிக்க வேகமாகத் திரிந்துகொண்டிருக்கின்ற வானரங்கள், பெரிய பருவதங்களைப் பிடுங்கிச் சேதுபந்தனஞ் செய்யக் கடலிலெறிந்த காலத்தும், அம்மலைகளில் வசிக்கும் மலைப்பாம்புகள் வலிய யானைகளை விழுங்கிவிட்டுத் தூங்கிக்கொண்டிருந்தன. அறிவில்லாதவர்கள் துன்பத்தை யடைந்தாலும் உணர்வுடையராவரோ? (ஆகார். என்றபடி) (எ-று.)

அறிவிலார் தாம்புரியும் கள்ளல், கள்ளுண்ணல், பிறர்மனை நயத்தலாதிய தீச்செயல்களாற் றுன்புற்ற காலத்தும் வருந்தித் திருந்தார். வருந்தினும் அத்துன்பத்திற்காக வருந்துவரேயன்றிக் குற்றத்தினிமித்தம் வருந்துவதில்லை. அங்ஙனம் பச்சாத்தாபப்படுவரேல் மீட்டும் புரியத் துணிவரோ? தீயவை தீயபயக்குமென்றறிந்தும், களவாடிக்கசையடியுண்டோனையும், சூதாடிச் சொத்துக்களை யிழந்து பஞ்சையாகப் பரிதபிப்போனையும், கண்டோர் கைகொட்டி நகைக்கத் தரையில் விழுந்து புரளும் குடியனையும் கண்கூடாக் கண்டும் அவற்றை யஞ்சா தியற்றுநரைக் காண்கின்றோமன்றோ? இன்று காலை சிறை விடுபட்டவன் இரவுபட்டதும் கன்னக்கோல் கைக்கொண்டு களவாடப்போகிறான். கட்குடியாற் பலவித துன்பங்களை நேற்றிரா வடைந்தோன் காலையிலெழுந்து சென்று கடையைத் தட்டுகிறான். இத்தகையோரை என்னென்றியம்புவது?

"மிக வெறிக்கக்குடித்துத் தலைகால் தெரியாமல் தெருவூடே தட்டித் தடுமாறி போய்க்கொண்டிருந்தவனொருவன், அந்தோ! தலைகீழாகக் குப்புறவிழுந்துவிட்டான். முழங்காற் சில்லுபெயர்ந்துவிட்டது. நெற்றியில் நல்ல காயம். பற்களுடைந்து இரத்தம் ஆறாகப் பெருக்கெடுத்தோடுகிறது. மூச்சுப் பேச்சின்றி மூர்ச்சித்துக்கிடக்கிறான் ஏழை மனிதன். இவனைப்போல மூடனும் உலகிலிருப்பனோ வென்றியாவரும் பரிகசித்துக்கொண்டே போகிறார்கள். ஒருவன் மாத்திரம் அவனருகில் நெடுநேரமாய் உட்கார்ந்திருக்கிறான். அதைக்கண்ட வேறொருவன் அவனை நோக்கி, 'ஏனய்யா! உனக்கென்ன பைத்தியமா! அவன்தான் குடித்துவிட்டுக் கண்டார் நகைக்க விழுந்து கிடக்கிறானே. நீ யேன் அவன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கிறாய்' என்றான். அதற்கு அம்மனிதன், 'சும்மா இரண்ணே! இவன் சாப்பிட்ட சரக்கு நல்ல சரக்கண்ணே. எந்தக் கடைச் சரக்கோ தெரியவில்லை. அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமாகையால் இவனுக்குப் போதை நீங்குமட்டும் இங்கே யிருப்பேன்' என்றான்" என ஓர் கதையுமுண்டு.

ஆதலின், மேன்மக்கள் கேடு நேரிடுவதானால் முன்னதாகவறிந்து அதைத் தடுக்க முயல்வர். கீழ்மக்களோ கேடு நேரிட்டபோதும் அதை நீக்க ஒரு முயற்சியுமின்றி யிருப்பரென்பது இப்பாடலின் நீதியாகும். இக்கருத்தையே குமரகுருபர சுவாமிகளும்

கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணம் கண்துயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

என்னுஞ் செய்யுளால் விளக்கியுள்ளார்.

(26) நெடும்பல் மால்வரை தூர்த்து நெருக்கவும்
தடும்பல் வேலை தளங்கிய தில்லையால்
இடும்பை யெத்தனை யும்படுத் தெய்தினும்
குடும்பந் தாங்குங் குடிப்பிறந் தாரினே. (ஷை-53)

(இ-ள்.) "வானர வீரர்கள் அலைகடலிலணைகட்டப் பல பெரிய மலைகளையிட்டுத் தூர்த்து நெருக்கியகாலத்தும், அக் கடலானது, மிக்க வறுமையுற்றுழியும் குடும்ப பாரத்தைத் தாங்கும் நற்குடியிற் பிறந்தாரைப்போலச் சிறிதும் கலக்கமடையாமலிருந்தது" என்பதாம்.

இதனால், உயர்குடியிற் பிறந்து உத்தம குணங்களை யுடைய பெரியோர் வறுமையுற்றுத் துன்ப சாகரத்து வீழினும் அதனைப் பொருட்படுத்தாது தங்கள் அறிவைப் புணையாகவும் பொறையைத் துடுப்பாகவுங் கொண்டு கடப்பர். "துன்பமாவது ஒரு கோட்பாடே" யென்றும், "அது மாறுபாடாகக் கொண்டால் நீங்கும்" என்றும், "வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா—னுள்ளத்தினுள்ளக் கெடும்" என்னுங் குறளினுரையிற்

கூறுகின்றார் ஆசிரியர் பரிமேலழகர். துன்பத்தைத் துன்பமாக் கருது வோர்க்கே துன்பம் துன்பம் பயக்கும்; அறிவென்னும் வாள்கொண் டெதிர்ப்போரை யஞ்சியகலும். உப்பிலாக் கூழெனினும், குப்பைக்கு உதவாக்கந்தை யெனினும் மனங்கோணாது உண்டுடுத்துத் திருப்தி யோடிருப்பவனை வறுமை என் செயவல்லது? புலன்களின் வழி செல்ல விடாமல் மனதை யடக்குவோன் இன்மையாலின்னலடைவதில்லை. மிக்க ஆசை மிக்கதரித்திரம். ஆசையற்றோனைக் காணின் ஐங்காதமோடும் மிடி. இது நோக்கியே,

"இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்" (திருக்குறள்)
"நிறைநெஞ் சுடையானை நல்குர வஞ்சும்" (திரிகடுகம்)

எனக் கூறின ரான்றோர்.

இங்ஙனமின்றிச் சிலரிம் மிடியின் காரணமாகப் பல தீய காரியங்க ளியற்றிப் பொருள்தேட முயல்வதும், இரந்துண் டுழல்வதும், துறவிகளா வதுமுண்டு. இவைகளியாவும் வெறுக்கத்தக்க செயல்களே. ஆராயு மிடத்து, "செல்வ வாழ்க்கையினும் வறிய வாழ்க்கையே அடக்கம், பக்தி, இரக்கம் முதலிய நற்குணங்களைத் தருதலால் * சிறந்தது" என்ப தான்றோர் கொள்கை. "இன்னல் தரும்பொருள்," "சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்" என்று ஆன்றோரருளியுள்ளார். ஆகையால், எவ்வளவு வறுமையுறினும் பொறுமைமேற்கொண்டு சகித்து நன்னெறியின் வழாது உள்ளதைக்கொண்டு உவப்புடன் இல்லறத்தை நடத்துதல் வேண்டும் என்பது விளங்குகின்றது.

(27) பெருமையும் வண்மை தானும் பேரெழி லாண்மை தானும்
ஒருமையி னுணர நோக்கிற் பொறையின தூற்ற மன்றே
அருமையு மடர்ந்து நின்ற பழியையு மயர்ந்தாய் போல
இருமையுங் கெடுத்தா யன்றே யென்னினைந் தென்செய் தாய்நீ
(மகுடபங்கம்-31.)

அணையின் மூலமாய் முந்நீர் கடந்து முச்சிகரத்தை யடைந்த மூவா முதல்வனாகிய தாசரதியைத் தசக்ரீவன் உத்தர கோபுரத்தினின்று நோக் குங்கா லவனைக்கண்ட சுக்ரீவன் கடுஞ்சினமூள அண்டையினின்ற அரவ ணைப் பள்ளியினறிதுயிலமரும் அமலனுமறியாவாறு அநிலனு மச்சுறப் பாய்ந்தேகி அவ்வரக்கனுடன் மற்போருஞற்றி யவன் முடிமணிகளைப் பறித்துவந்து சுவாமியின் திருமுன்வைத்துப் பணிதலும்,அன்னா னகன்ற மைக் காற்றாது. "ஐயகோ! சுக்கிரீவனுக்கு யாது தீமை நேரிடுமோ?" வெனத் துயர்கொண்டிருந்த ஜானகி காந்தன் அவன் வந்ததைக் கண்ட வளவில் களிப்புக்கொண்டு அவனைப் பார்த்துக் கூறும் சந்தர்ப்பத்துள்ள விச்செய்யுளின் பொருள்; "சுக்ரீவா! நன்றாக ஆலோசித்துப் பார்க்கு

* இவ்விஷயமாகப் பின்னர் விரிவாக வரைவாம்.

மிடத்து ஒருவனுக்குண்டாம் பெருமை வண்மை மிக்க வழகு ஆண்மை யென்னுமிவைகள் பொறுமையையன்றோ பற்றுக்கோடாகக் கொண்டுள் ளன. அஃதின்றேல் பெருமை வண்மை அழகு ஆண்மை முதலானவை உண்டாங்கொல்லோ? அங்ஙனமாக நீ செய்யத்தகாததையும் அதைச் செய்வதனு லெனக்குண்டாம் பழியையும் மறந்து இகபரமிரண்டையுங் கெடுக்கும்படியாய் என்ன நினைந் தென்ன செய்தாயப்பா!'' என்று கூறி னர் என்பதாம்.

இப்பாவால், "பொறுமை கடலினும் பெரிது" "பொறுமை யுடை யார் பெருமையடைவார்; சிறுமையடையார்" "சாந்தம் பலஹீனமன்று." எத்துணை அவசரகாரியமேனும் வெற்றிபெற வெண்ணின் பொறுமை யைக் கைவிடலாகாது. "அவசரகாரியம் ஆபத்துக்கிடம்." பொறுமை யின்மை கூரிய அறிவையுங் குறைக்கும்: "ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு." பொறுமையாற் கார்யசித்தி பெறுதா ரியாண்டுமிலர். "பொறுத் தவர் பூமியாள்வர் பொங்கினவர் காடாள்வர்" என்ப தனுபவமுதுமொழி. பொறுமையே பெருமை ஆண்மையாதியவற்றை யளிக்குங் கற்பதரு. ஆக லின் ஒவ்வொருவரும் பொறுமையையே சிறந்த பூஷணமாக் கோடல் வேண்டுமென்பது பெறப்படுகின்றது:

(28) மாற்ற ருந்தட மணிமுடி யிழந்தவா ளரக்கன்
ஏற்ற மெவ்வுல கத்தினு முயர்ந்துளா னெனினும்
ஆற்ற னன்னெடுங் கவிஞரோ ரங்கத முரைப்பப்
போற்ற நம்புக ழிழந்தபே ரொருவனும் போன்றன்
(முதற்போர்-249.)

இராகவருக்கு மிராவணனுக்கும் நடந்த முதனாட்போரில் கண்டகனு கிய தசகண்டன் சகல படைகளையு மிழந்து ஞாயிறு போன்றொளிரும் மணிகளிழைத்த மகுடங்களையு மிழந்தவனுய்த் தனித்துத் தரையை நோக் கியவண்ணமாக நின்ற காட்சியைக் கூறுமிடத்துள்ள; கவிக்கூற்றாகிய விச் செய்யுள், "நீக்கமுடியாத பருத்த மணிகளிழைத்த கிரீடங்களை யிழந்து வெறுந்தலையனுய் நின்ற விலங்கேசன், இவ்வுலகத்தாரினுஞ் செல்வத்தி னும் பராக்ரமத்தினும் மிகுந்துள்ளவனுயினும், கலைவன்மையுடைய கவி ஞருக் கபசாரஞ் செய்தோன் அப்புலவர் மனநொந்து கூறும் தூஷணங்க ளாற் றன் கீர்த்தி செல்வம் முதலியவற்றை யிழப்பதுபோல, எல்லா மிழந்தவனுய் நின்றான்'' என்னும் பொருட்டாம்.

"கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமி ழோர்க் கொவ் வான்."

"மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்."

என்னும், இன்னோரன்ன செய்யுட்களாற் கவிஞர் பிரமனிலும் அரசரினும் சிறந்தவரென்பது இனிது விளங்குகின்றது. ஆகலின் அப்புலவர் மாட்டி யாவரும் அன்புடன் வழிபாடுடையராதல் வேண்டும். "கற்றலிற் கற்

ரோரை வழிபடுதல் சிறந்தன்று." அவர்க்குத் தீமை புரிவோர் அழிந் தொழிவர். "வில்லேருழவர் பகைகொளினுங் கொள்ளற்க, சொல்லே ருழவர் பகை" என்றார் வள்ளுவரும். காளமேகப் புலவரை யவமதித்த திருமலைராயன் நகரம் நாசமுற்றது. * நந்திகலம்பகத்தால் மாண்டகதை நாடறியும். கச்சிப்பதியில் வசித்துவந்த பக்திஸாரர் அந்நகரை யாண்டு வந்த பல்லவராயனாற் சினமூட்டப்பெற்றுப் புறம்போகையில் திருமாலை நோக்கி, "எம்பெருமானே! செந்நாப்புலவனாகிய யான் இந்நகர் விட்டேக நீர்மாத்திரம் மீண்டு வதிவீரோ? என்னுடன் புறப்படும்" என்னுங் கருத் தோடு

கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனியான் செல்கின்றேன் நீயுமுன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்

என்னும் பாடலைப் பாடலும், பக்தபராதீனன் அங்ஙனமே சென்றனர். குலோத்துங்கசோழன் கம்பரை யவமதித்தால் சிறுமை யுற்றனன். † பொய்யாமொழிப் புலவரை யுபசரியா தொழிந்ததினிமித்தம், ஓர் தாசி கண்ணிழக்கப்பெற்றாள். இன்னு மெண்ணிலாக் கதைகளுளவேனும் விரி வஞ்சிவிடப்பட்டன.

இக்கவியால் புலவர் மேன்மையும், அவரை வழிபடுவோர் நன்மையும் இகழ்வோர் தீமையு மடைவாராகலின், அன்னோர்மாட்டு அபசாரப்படா மல் உபசரித்துப் போற்றவேண்டு மென்பதும் விளங்குகின்றது.

(தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## யாஸீன்.

### ஜீவன் செல்லும்வகை மூன்றின் விளக்கம்.

சர்வமத சன்மார்க்க நேயர்களே!

1-வது. ஜீவன் சத்துவகுணத்தோடுகூடி சுத்த அறிவையே முன் னிட்டு என்றென்றும் நித்தியமான சச்சிதானந்த ஸ்வரூபப் பிரமத்தின் பாலடைவதேயாம். இவ்வழியாலொருவன் சென்றிடி லவனுக்கு வேண்டு மான சிற்சில உபகரணங்களை சமைப்பித்தல் வேண்டும். அவையாவன:—

1. நானெனு மகங்காரத்தைக் கெடுத்தல்.
2. எமக்குடைய தென்ற மமதையைக் கொல்லல்.
3. உயிர் வதை மறுத்தல்.

---

* இக்கதை மற்றொருபக்கத்தில் கூறப்பட்டிருக்கிறது.
† இக்கதை பின்னால் எழுதப்படும்.

4. மதபேத வகுப்பை விடல்.
5. மதவொழுக்க நெறிகளை யிகழாதிருத்தல்.
6. சர்வ ஜீவராசிகளிடத்து மிரக்க முறல்.
7. சமரசக் கொள்கையை வளர்ப்பித்தல்.
8. எஞ்ஞான்றும் பொய்யை நீத்தல்.
9. காமவிகாரத்தைக் களைதல்.
10. தன் புத்தியை மயக்கும் லாகிரி வஸ்துவை நீக்கல்.
11. உள்ளது போதுமென திருப்தியடைதல்.
12. விஷய நாட்டமனதை யடக்குதல்.
13. ஒன்றைக்கொண்டே நிலை பெறல்.
14. நற் சாதுசங்கங்கப் பழக்கமுறல்.
15. பிரபலசுருதி ஞானசாஸ்திர சிரவண சாதனை செய்தல்.

இவ்வித விதிகளை விடாது முயர்ச்சித்தவர்கள், மூன்று தடைகணீங்கி சத்துவகுணப் பிரதிபிம்ப சுத்தத் தெளிவான ஞான விருத்தியெனும் பானம் புகட்டப்பெற்று, அவ்விருத்தியாற் றிருசியத்தைமறந்து இருவினையுமற்றுத் தன்னையன்றி இரண்டாவது வஸ்து இல்லாமையான விமலபோத சொரூபமாயிருப்பர். வேதமொழி (பீமக் அதிசித்கின் இந்த மலீக்கின் மூஃததிறு) யெனுமொழியை யுணருக. ஒரு சமயாசமயம் அந்த ஸ்வரூபப் பிரமானந்த வெள்ளந் தடையறப்பாயும்போது நானே பிரமமெனச் சொல்வர். அது சமயம் அம்மொழி பிரமத்தையன்றி வேறிலை. வேதமொழி (இன்னனீ அனல்லாஹு லாயிலாஹ இல்லா அனு) வெனும் வாக்கியத்தை யுணரவேண்டும். இந்த இடத்திலுண்டாகும் பிரமானந்த சுகத்தைப் பெற்றப் பிரமஞானிகளறிவார்களே யன்றி யேனையோ ரறியார்கள். இதைப் பற்றி யோர்மஹான் கூறுகின்றதாவது. (ஈனற்ற போதத்தை நானுன முத்தியை நானெங்ஙனஞ் சொல்வன் உந்தீபர — நான்மறைக்கு மெட்டா தென் றுந்தீபர) திருமந்திரம்.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா
ளகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த
மகட்குத் தாய்தன் மணாள னோடாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

இம்மொழியை யுணருக. இன்னும், இவர்கள் எங்கெங்கே நோக்கினு மாங்காங்கே பிரமஸ்வரூப மாகவே காணுவர். வேதமொழி (பஐனமா்த — துவல்லூபதம்மவஜ்ஹுல்லாஹி) இம்மொழியை யுணருக. இன்னொரு மஹானுங் குணங்குடி சுவாமிகளுங் கூறுகின்றதாவது (பார்க்குமிடமெல்லாம் பூரணங்காணம்மானே — பாராமலல்லோ பாழ்பட்டேன்காணம்மானே — என்றும் பார்க்குமிடந்தோறும் பரிபூரணங் கண்டேனே — நோக்குமிடந்தோறும் நல்லனூரினிற் சென்றேனே) என்ற இம் மொழிகளையு முணருக.— இதை ஜீவன் முத்தியென்றும், நிர்க்குணப் பிரமவுபாசனை யென்றுஞ் சொல்வர்.

2-வது. ஜீவன் ரசோகுணத்தோடு கூடி அறிவறியாமையை முன்னிட்டு ஆண்டானடிமை யெனப் பேதம் வகுத்துப் பரோக்ஷபாவனையாலக்கடவுளுக்குச் சீவன் — அறிவு — நாட்டம்—தத்துவம் — பார்வை — கேள்வி—வார்த்தை—இக்குணங்களுளதாகக் கற்பித்து அவராலருளப்பட்ட கன்மகாண்டம் பக்திகாண்டவிதிகளை யனுசரித்து—வழிப்படல்—விரதம் வைத்தல் — தருமஞ் செய்தல் — மகாஸ்தலயாத்திரை முதலான புண்ணியங்களைச் செய்து காமிய கன்மத்தால் சுவர்க்காதி போகங்களை யடைந்து சிற்சிலகாலஞ் சுகமாய் வசிப்பானெனப் புலப்படுகின்றது. வேதமொழி (ஒமா அத்ளுக்கமாயில்லியூன்) இம்மொழியை யுணர்க. இதைச் சகுண உபாசனை யென்றுஞ் சொல்வர்.

3-வது. ஜீவன் தாமதகுணத்தோடுகூடி அறியாமையெனு மூடத்தை முன்னிட்டுக் கண்டது காட்சி கொண்டது கோலம், பெண்பிள்ளைகளே சுகமெனக்கருதி — புண்ணியம் — பாபம் — ஞாயம் — அபத்தம் — நீதி — அநீதி — நியாயம் — அனியாயம் — இவைகளெதையுங் கவனியாமல் எவரையாகிலுங் குடியைக் கெடுத்துப் பொருட் சம்பாத்தியஞ் செய்து சேர்த்துவைக்கு நோக்கமே யதிகரித்துப் பஞ்சேந்திரிய வழியாய் மனதை விடையத்தி லழுந்தச்செய்து, அந்த மயக்கத்தாற் றன்னையுந் தனக்காதாரமான தலைவனையுமறிந்து கடவுளுக்கு வழிப்படாமலும், தோத்திரஞ் செய்யாமலும், அவரின் நற்குணங்களை நினைத்ததின்பாலடையாமலும் தற்போத மகங்கார மேலிட்டு இத்தூல தேகத்தை நானென்றும் மற்ற இதர வஸ்துக்களை யெனதென்றும் பாவித்து, சர்வஜீவராசிகளையுந் தன்னைப்போ லெண்ணாமல் வேறெனக் கருதித் — துவேஷப்பார்வையாற் றீமைசெய்து நிடேத கன்மத்தான் நரகாதி போகங்களை யடைந்து சிற்சிலகாலந் துக்கத்தில் வசிப்பானெனப் புலப்படுகின்றது. வேதமொழி (ஒமா அத்தளுக்க ம லிஜ்ஜீன்) இம்மொழியை யுணர்க. இதை மூட உபாசனை யென்று சொல்வர். இவர்களுக்கும் மிருகங்களுக்கும் யாதொரு பேதங்கிடையாது. இவர்களுந் தின்பர் — குடிப்பர் — போகிப்பர்—சயனிப்பர் — அவைகளுமவ்விதமே இருக்கின்றன—ஆனாற் கோலத்தான்மட்டும் வேறுபடுகின்றன; குணத்தாலுஞ் செய்கையாலும் ஒன்றுபடுகின்றன. வேதமொழி (இன்ஹூம் இல்லாகல் அன்ஹாம்பல் ஹூம் அழல்லுசபீலா) இம்மொழியை யுணருக. இன்னுமிவர்களின் காது வெடிக்கும்படியா யுரத்த சத்தத்துடன் நற்போதனைகளை யெடுத்துக் கொட்டிய போதிலும்கொஞ்சமேனுஞ் செவிக்கேறாது; மனதிற்படியாது. அவைகள் ஈயத்தை யுருக்கிச் செவியினில் வார்த்தா லெப்படியோ வப்படியே கண்டு வெறுப்படைவார்கள். வேதமொழி (கதமல்லாஹூ அலா குலூபிஹிம் ஒ அலாஸம்யிஹிம்) இம்மொழியை யுணருக.

ஆனால் மேலெழுதிய மூன்றினின்றுஞ் சத்வகுண ஞானவழியன்றி மற்ற இரண்டு தானத்தாற்றோனும் இன்பமானது, பூவை நுகரும் வண்டி னின்பம்போலும் மலத்தை நுகரும் வண்டினின்பம்போலுந் தோன்று

கின்றன. அவையாவன—இயாவரு முகக்கும்படியாயுள்ள மலரின் வாசத்தை நுகரும்வண்டினின்பம்போற் சுவனத்தினின்பமும், இயாவருங்களையும்படியாயுள்ள ஆபாச மலத்தை யுண்ணும் வண்டினின்பம்போன் னரகினின்பமுமாகும். இவ்விரண்டு மொருவனிடத்தினிலேப்பதில்லை. அவரவர்களின் நன்மைதீமைக்குரிய காலங்கணிக்கப்பெற்று அக்காலவரை சுகதுக்க மனுபவித்துத் தானம்விட்டுத் தானம்பேர்ந்து சகடக்காற்போலெண்ணிறந்த சென்மங்களிற் சுற்றிக்கொண்டே இருப்பர். வேதமொழி (வகத் கலக்கும் அத்வாளு) இம்மொழியையுமுணருக. இவ்விரண்டின்றூனத்தினின்பங்களை அனுபவிக்கத் தனுகரணம் வேண்டும். இந்தத் தனுகரணங்களுக்குக் காரணம் நன்மை தீமையென்றும், இந்த நன்மை தீமைக்குக் காரணம் இருவினையென்றும், இந்த இருவினையாலேற்படும் திரேக சம்பந்தத்தினுற் சுகதுக்கமென்றுமுணர்ந்து, அவ்விரண்டுஞ் ஜனனத்தைக் கொண்டிருப்பதாலவற்றை நீக்கி யென்றென்றும் பிறப்பற்றிருப்பதே பேரானந்த சுகமெனக்கருதி குணங்குடி மௌனதேசிக சுவாமிகள் கூறுகின்றனர். (கனக்கு மிருவினையாங் காவடியைத் தூக்குதற்-கெனக்கு முடியாதினிமேலெந்தாய் நிராமயமே) யென்றும். தாயுமான சுவாமிகள் (என்னைக்கெடுக்க விசைந்த விருவினை நோய் — தன்னைக்கெடுக்கத் தகாதோபராபரமே) யென்றும் கோடை அபூசாலிஹ் நாயகம் (சுமை போதும்போது மினிச் சுழிமாயைப் பூதலத்தி—லமைப் பாக்கிடா திறையே யாழ்வதினி யெக்காலம்:) இம்மொழிகளெல்லாம் முணருக. இந்த இருவினைக்குங் காரணம் இச்சையென்றும், இந்த விச்சைக்குக் காரணம் பூர்வவாசனையென்றும், இந்த வாசனை சகித இச்சாசக்தியே பிறப்புக்கு வித்தாயிருக்கிறதென்றுந்தெரிகிறது.-திருக்குறள் "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந்-தவாவப் பிறப்பீனும் வித்து". இந்த வாசனை சகித விச்சாசக்தி என்பது, ஒவ்வொருவர் இருதயத்திலுலக விஷயமாயுண்டாகுமிச்சையென்ற அவாவைத் தவிர வேறில்லை. இதை மட்டிட்டு எவராலுஞ் சொல்லவியலாது. தாயுமான சுவாமிகள் (ஆசைக்கோரளவில்லை அகிலமெல்லாங்கட்டி யாளினுங் கடன் மீதிலாணை செலவே நினைவர்...) இம்மொழியாலறிக. இன்னும் ஜீவன் முத்தியடையாவண்ணம் தடைகொள்ளுங் காரணம் இச்சையாயிருப்பதாலும் தூலமிழந்த பின் வேறு தூலம் அமையப்பெறும் விதை அவாவா இருப்பதாலும், இந்த அவாவைக் கண்டனஞ் செய்த லொவ்வொருவர்க்கும் முக்கிய கடமையாம். வேதமொழி (வக்திஹு அன்புஸகும்) இவ்வாக்கியத்தை யுணருக. இன்னும் திருமந்திரம்:

ஆசை யறுமின்க ளாசை யறுமின்க
ளீசனோ டாயினு மாசை யறுமின்க
ளாசைப் படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வானந்த மாமே

யெனவருவதைக் காண்க. அவாவை நீக்கும் பொருட்டே வேதமும்

சாஸ்திரமும், முன் மேதாவிகளி நூற்களும் முறையிடுகின்றன—ஜென் மத்துக்குக் காரணம் அவாவாயிருப்பதால் அவாவெனும் விருட்சத்தை வேரறப்பிடிங்கிக் களைதல் அவசியமேயாம். திருமந்திரம்.

இக்காய நீங்கி யினியொரு காயத்திற்
புக்கிப் பிறவாமற் போம்வழி தேடுமி
னெக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன வருட்பெற லாமே.

இந்த விச்சையானது விஷயத்தைக் கருதி பஞ்சேந்திரிய வழியாயெங் கெங்கு செல்லுமோ அங்கங்கெல்லா மதையே முன்னிட்டு யாம் பின் றுடருகின்றமையா லவ்வாசையை நீங்கள் நாயகனுக்கிக் கொள்கின்றீர்க ளென்று ஆண்டவனின் வேதமொழி கூறுகிறது. (அற ஐத்தமனித் தகத இலாஹஹு ஹவாஹு). இந்த இச்சைக்குக் காரணம் மனோ விருத்திசகித வந்தக்கரணமு மாயையுமன்றி வேறில்லை. இந்த மாயை யோ, ஆகாயத்தினிடத்து நீலவருணங் கற்பித்தாப்போல் வெறுந் தோற் றமாய்த் தோன்றுகின்றது. இதைப்பற்றி திருமந்திரம்,

மனமாயை மாயை யிம்மாயை மயக்க
மனமாயை தான்மாயு மற்றொன்று மில்லை
மினமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாம்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே

இந்த மாயையானது யாரிடத்தில்லாமற்போனதோ அவர்கள்தான் சீவன் முத்தியடைந்த பூரண ஞானிகளாம் ஆண்பிள்ளை சிங்கங்களாகும். இவர் களுக்குப் பிறப்பில்லை, இறப்பில்லை, மானாபிமானமில்லை, மாசில்லை, மறு வில்லை, குலமில்லை, கோத்திரமில்லை, குணங்களில்லை, நலமில்லை, நாட்டமில்லை, தேட்டமில்லை, இவர்களையன்றி மற்றயேனையோர்கள் வீண்பிள்ளை, வெறும்பிள்ளை, டம்பார்த்தபிள்ளை, தொந்திபிறத்தின் னும் பிள்ளை, ஸ்திரீசுக பூரணப்பிள்ளை, மூப்புப்பிணியொடு சஞ்சலப் பிள்ளை, சம்சார பந்தங்கட்கும் பிள்ளை, இகபரமாய்ச் சுழலும்பிள்ளை, ஜனன மரணப்பிள்ளை, சுடுகா டுகொ டுறையும்பிள்ளை, லோகாந்திரஞ் செல்லும்பிள்ளை, அந்தகாரமூடி ஞானக்கண்ணற்ற பிள்ளை, பாசவலை சிக்கி மோகத்தாலழியும் பிள்ளை, ஒப்பற்ற வொருமொழி ஞானக்கண் ணறிந்து வணங்காப்பிள்ளை, யோனியளற் பெருங்கேணி வீழ்ந்தழுந்தும் பிள்ளை, ஒரு நான்குபேர் சுமக்கப் பீற்றற்றுருத்தியைப் பக்குவமாய் வளர் த்தபிள்ளை. இவ்விதவீனங்கட் பொருந்திய போலிப்பிள்ளைகளாகாமல் சுத்த சைதன்யக் கடவுளின் ஸ்பரூபப் பிள்ளைகளாகுவதற்கே சர்வ ஜீவா த்துமாக்களும் முயற்சிக்கவேண்டும். இதையின்றி வீண்காலம் போக்காது சகல மத வகுப்பை யனுசரித்தயெனதன்பார்ந்த சகோதரர்காள்! உங்கட் டிருவடி யெனது சிரமேற் கொண்டு வந்தனஞ் செய்கின்றேன். இதனை வாசித்துணரும்போது மதபேதகக் குப்பைக்கிடங்கில் வீழ்ந்து மயக்க வாதஞ் செய்ய வுன்னு மஞ்ஞானக்கண்ணை வேரறக்களைந்து சுத்த

விவேகஞான விருத்திக் கண்ணுற் சமரசமாய்ப் பார்த்து இதிலுள்ள உண்மையமட்டுங் கிருகித்து அவ்வுண்மையான அத்துவைத சன்மார்க்கப் பூவாரத்தை இயர்வருமணிந்து 'பசுவாகிய ஜீவனிடத்துறும் மலங்களை வைராக்கியமெனும் ஞானவிருத்தி யக்கினியாலெரித்து அப்பால் எஞ்சி நிற்கும் ஐஸ்வரிய சச்சிதானந்த அதீதமயமாயிருக்க சர்வவல்லமையுள்ள கடவுள் தனை வணங்குகின்றேன்.

K. K. செய்சு அப்துல் காதிர்,
மேலப்பாளையம்.

---

## சந்நியாசம்—சந்நியாசிபேதம்.

(30-ம் பக்கத் தொடர்ச்சி.)

சந்நியாசிகள் குடீசகன், பகூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என்று நான்குவிதமாகக் கூறப்படுவார்கள். இந்தப் பேதம் அவர்களுடைய சத்தினி பாத விசேஷத்தாலும் கர்மானுஷ்டான ஒழுக்கங்களாலும் பகுக்கப்பட்டது. இந்நால்வர்களுள் இறுதியிற் கூறப்பட்ட பரமஹம்ஸன் உத்தமன். ஏனைய மூவரும் முறையே ஒருவருக்கொருவர் தாழ்ந்தவராவார். குடீசகன் பரிபாக முதிர்ச்சியால் பகூதக, ஹம்ஸ, பரமஹம்ஸ ஆச்சிரமங்களைப் பெறலாம். இவர்களுள் குடீசகன் சந்நியாசிகளின் முறையை நடத்தச் சக்தியற்றவனுகையால் தன் பந்துக்கள் கிருகத்தில் பிக்ஷை யெடுத்து ஜேஷ்டன் புத்திரன் வைத்துண்ணலாம். ஆயினும் குடும்ப வியாபாரத்தை முற்றிலும் ஒழித்துவிடவேண்டும். பிறருடைய கிருகங்களிலும் பிக்ஷையெடுக்கலாம். சிகை யக்ஞோபவீதம், திரிதண்டம், கமண்டலம் இவைகளைத் தரிக்கவேண்டும். சாவித்திரி மஹாமந்திரத்தை நூறு அல்லது ஆயிரம் அல்லது கணக்கில்லாமல் ஜபித்துவரவேண்டும். பசுவின் கரியரோமத்தால் காலங்குலம் கட்டப்பட்டதும் சமனான கணுக்களையுடையதுமான மூன்று வேணு தண்டங்களையும் தரிக்கவேண்டும். பாத்திரம் வைப்பதற்கோர் உறி, கமண்டலம் ஆசனம் இவைகளை மரத்தினுற் செய்துவைத்திருக்கவேண்டும். ஸ்நானம் தவறுமல் செய்யவேண்டும். தேவாராதனை, தேவதர்ப்பணம், சூரியநமஸ்காரம் செய்துவரவேண்டும். கிழ்த்திசையை நோக்கி உட்கார்ந்து பிராணுயாமஞ் செய்துவரவேண்டும். தன் சக்திக்குத் தக்கபடி காயத்திரி ஜபம் செய்துவரவேண்டும். மோக்ஷ சிந்தனை யுடையவனு யிருக்க வேண்டும். தன் சரீரதாரணத்துக்கேற்ற பிக்ஷையை எடுத்துவரவேண்டும். ஜபம், இதிகாச புராண ஆராய்ச்சிகளால் பகல் பொழுதைக் கழிக்கவேண்டும். சந்தியோபாசனையைக் கிரமமாய்ச் செய்யவேண்டும். தேவாலய முதலிய பரிசுத்த ஸ்தலங்களில் இராப்பொழுதைக் கழிக்கவேண்டும். சாந்தி, பொறுமை, தனித்திருப்பது, பவித்திரதாரணம், இவைகளை விடாதவனுயிருக்கவேண்டும். ஒருவன் வீட்டில் எப்பொழுதும் புசிப்பது

கூடாது. காமக்குரோதங்களை விட்டொழித்து ஸ்ரீ பரமேசுவரனைச் சதா தியானிக்கவேண்டும். திரிதண்டம் கிடையாவிடில் ஒரு வேணுதண்டத்தைத் தரிக்கவேண்டும். வேணுதண்டம் தவறிப்போனல் புரசு, அல்லது வில்வதண்டம் இவற்றில் ஒன்றைத் திரிதண்டம் கிடைக்கும் வரையில் தரிக்கவேண்டும். சிலர் சிகையுடையவர்களாயும் சிலர் முண்டகர்களாயும் இருந்து வருவார்கள்.

இனி திரிதண்டமென்பது வாக்தண்டம், மனோதண்டம், கர்மதண்டம் என்பனவா மென்று மனு கூறினர். இம்மூன்று தண்டங்களையும் விடாமல் தரித்து வருபவன் திரிதண்டியாவான் என்பது மநுவின் கருத்து. வாக்தண்டமென்பது மௌனமாம். கர்மதண்டமென்பது ஒன்றிலும் பற்றுதலில்லாம லிருப்பதாம். மனோ தண்டமென்பது பிராணாயாமமாம் என்று தக்ஷர் அவற்றின் பொருளை விரித்துக் கூறினர். வேறு தண்டம் முதலியவைகள் ஆச்சிரமத்துக்கு அடையாளமாக இருப்பனவேயன்றி மோட்சத்தை யளிக்கமாட்டா. மனோதண்டம், கர்மதண்டம், வாக்தண்டம் முதலியவைகளே மோட்சகாரணமா யிருப்பனவாம். ஆதலால் சன்னியாசியானவன் இந்த மூன்று தண்டங்களை அவசியமாய்த் தரிக்கவேண்டும். பஞ்சேந்திரியங்களையும் மடக்கிக் கோபம் முதலிய துர்க்குணங்களை யொழித்துத் தத்துவ ஞானத்தை யுணர்ந்த பெரியோர்கள் வாக்தண்டமாதி திரிதண்டத்தையே தரித்து வருவார்கள். குடீசகன் பகூதகன் இருவரும் பரிபாக முதிர்ந்தால் ஹம்ஸ பரம ஹம்ஸ முறைமையைக் கைக்கொள்ளலாம். அப்போது கமண்டலம் சிகை ஜலபாத்திரம் தண்டம் யக்ஞோபவீதம் இவைகளை யெல்லாம் "பூஸ்வாஹா" என்ற மந்திரத்தை யோதி நீரில் எறிந்துவிட்டு ஆன்மதியானத்தி லிருப்பார்கள். ஸர்வஸங்கப் பரித்தியாகம் செய்து பிரமதியானத்தி லிருக்கவேண்டும்.

### பகூதகன்.

சகல சங்கங்களையு மொழித்துப் பந்துக்கள் வீட்டில் பிக்ஷையெடாமலும் ஒருவனுடைய சோற்றைப் புஜியாமலு மிருக்கவேண்டும். தன் பூமியில் படுக்கக்கூடாது. சற்றும் மனதிற் களங்கமின்றி யிருக்கவேண்டும். கண்ட விடங்களுக்கெல்லாம்போய் அலைந்து திரிவதாகாது. மோட்சமார்க்கத்தை விட்டு விலகக்கூடாது. ஆடை உணவு படுக்கை ஆசனம் முதலியவைகளில் ஆசை வைக்கக்கூடாது. ஏழு கிரகங்களில் பிக்ஷையெடுக்கவேண்டும். பசுவின்வால் மயிரினல் திரித்த கயிறு, திரிதண்டம், உறி, ஜலபாத்திரம், பவித்திரம், மண்வெட்டி, கத்தி, சிகை, யக்ஞோபவீதம் இவைகளையுடையவனு யிருக்கவேண்டும். தேவதாராதனம் செய்து வரவேண்டும். இதுவே பகூதக சன்னியாசியின் இலட்சணமாம்.

### ஹம்ஸன்.

இவன் மோட்ச தருமத்தில் மிகச் சிரத்தையுள்ளவனு யிருக்கவேண்டும். ஆதலால் திரிகாலமும் ஸ்நானம் செய்யவேண்டும். ஈரமான வஸ்

திரந்தரித்தல், சாந்திராயணாதி விரதங்கள் இவைகளை அனுஷ்டித்து வர வேண்டும். மரத்தினடி, குகை, நதிக்கரை இவைகளிலெதிலாவது வசித்து வரவேண்டும். ஒருவருடைய கிருகத்தில் வாசம் செய்யலாகாது. கமண்டலம், உறி, பிக்ஷாபாத்திரம், கந்தை, கௌபீனம், அரைக்குடுத்தும் வஸ்திரம் இவைகளைத் தரித்திருக்கவேண்டும். ஒருமூங்கில் தண்டத்தைத் தினந்தோறுந் தவறாமல் தரித்திருக்கவேண்டும். கிராமம் தீர்த்தம் இவ்விடங்களில் ஒருநாள் வசிக்கலாம். பெரிய நகரங்களில் ஐந்துநாள் வசிக்கலாம். மாஸோபவாசம் பட்சோபவாசம் முதலிய உபவாசங்களால் சரீரத்தை ஒடுக்கிவர வேண்டும். ஆஸனம், பாதரக்ஷை, கொடை, ஜலபாத்திரம், ஔஷதம், தண்டம், கமண்டலம் இவைகளையும் தரிக்கலாம்.

## பரம ஹம்சன்.

பரமஹம்ஸனுக்கு இரண்டு கௌபீனம், கந்தை, ஒரு தண்டம் இவைகளே விதிக்கப்பட்டன. இதற்குமீறி நடப்பானாலவன் மஹா கொடிய நரகத்தை யடைந்து அநந்தரம் திரியக்யோனியில் ஜனிப்பான். கிழிந்ததும் அழுக்கில்லாததுமான கௌபீனந்தரித்து, ஒரு கந்தையை வஸ்திரமாயுடுக்கவேண்டும். அந்தத் துணிகளைக் காவியில் தோய்க்க வேண்டும். ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை யடக்கிச் சத்துவ குணத்தை யுடையவனாய்ப் பிரணவத்தை அப்பியசித்துவரவேண்டும், சாஸ்திர சிரவணத்தில் விருப்பம் வைக்கவேண்டும். மிகச் சுத்தனாய் உலகமெல்லாம் பிரமமென்கிற பாவனை செய்துவரவேண்டும். ஆத்மதிருப்தியுடையவனா யிருக்கவேண்டும். கல்லையும் பொன்னையும் சமனாய்ப் பாவிக்கவேண்டும். தத்பதார்த்தத்துவம்பதார்த்த ஐக்கியத்தை அறிந்திருக்கவேண்டும். விசேஷமாய் ஜனங்களிடத்தில் வசித்துவரவேண்டும். சிரோமுண்டனம் செய்துகொள்ளவேண்டும். எப்பொழுது அழியாத பிரமஞான முதிக்கின்றதோ அந்த க்ஷணமே பரமஹம்ஸாச்சிரமத்தை யடைவதற்குரிய காலமாம். இவர்களுக்கு யக்ஞோபவீதம் அவசியமன்று. சிகையும் அவசியமன்று. ஞானமே சிகையும் யக்ஞோபவீதமுமாம். எல்லாவற்றையும் காண்பதே நிஷ்டையாம். ஏனென்றால் எக்காலத்தும் கெடுதியற்ற பிரமமே உத்தமமான சூத்திரமென்றும் எல்லாம் ஸச்சின்மயமென்றும் வேதமுணர்ந்த வித்தர் கூறி வருவதாலும், நூலில் மணிகளைப்போல இப்பிரமத்தினிடத்தில் எல்லாம் கோக்கப்பட்டிருப்பதாலும், இந்தப் பிரமத்தையே யோகஞான முணர்ந்தவனான பரமஹம்ஸன் சூத்திரமாகக் கொள்வான் என்று நூல்கள் கூறின. உத்தமமான யோகத்தை யுணர்ந்தவர்களுக்கு மார்பில் தரிக்கும் பூணூலால் பயனில்லை. கிரியைகளுக்கெல்லாம் சாதனமான பிரமத்தையே சூத்திரமாகத் தரிப்பதுதான் அவர்களுக்குச் சிறந்தது என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. எவன் ஞானத்தையே சிகையாகவும், பூணூலாகவும் கொண்டிருக்கிறானோ அவனிடத்தில் பிராமணியம் நிறைந்திருக்குமென்று பிரமவித்துக்கள் கூறுகின்றார்கள்.

ஆருணி என்பவர் பிரமலோகத்துக்குப்போய்ப் பிரமாவை நோக்கி, எந்த ஆச்சிரமத்தால் நான் கன்மங்களை யெல்லாம் விட்டொழித்து இருக்கக்கூடுமென்றுகேட்டார். பிரமதேவர் ஆருணி! நீ சன்னியாசாச்சிரமத்தில் புகுந்து புத்திரன், சகோதரன், பந்துக்கள் இவர்களைவிட்டு நீங்கிச் சிகை, யக்ஞோபவீதம், யாகம், பூணூல், வேதமோதல், மேலேழு கீழேழு உலகங்களையும், பிரமதண்டத்தையும் விட்டுத் தண்டம் கௌபீனங்களைத் தரித்துக்கொள். மற்ற எல்லாவற்றையும் விட்டொழித்துவிடு என்றார். தன்னைச் சேர்ந்தவர்கள், புத்திரர், மித்திரர், சகோதரர் யக்ஞோபவீதம், சிகை, மற்றுமுள்ள கர்மங்களிவைகளை யொழித்து, உலகத்தார் வெட்கப்படாமலிருப்பதற்காகக் கௌபீனந்தரித்துச் சன்யாஸம் பெறவேண்டுமென்று பரமஹம்ஸோபநிஷத் கூறியது. ஞானத்தையே தண்டமாகக் கொண்டிருப்பவன் ஏகதண்டி யென்னப்படுவான். ஞானத்தைப் பெறுமல் இஷ்டமானதைப் புசித்துத் தண்டம் தரித்து வருகிறவன் மஹா கோரமான ரௌரவ நரகத்தில் விழுவான் என்று சாஸ்திரங் கூறுவதால், வீணில் கருமத்தை யொழித்துவிட்டுத் தண்டந்தரித்துக்கொண்டு ஞானத்தைப் பெறுமல், கிருகஸ்தர்களைத் தொந்திரவு செய்துகொண்டு காலங்கழிப்பவர்கள் நரகத்தில் தள்ளப்படுவார்கள். எந்த ஆச்சிரமத்திலாவது இருந்துகொண்டு அவ்வாச்சிரமத்திற்குரிய தர்மங்களை நடத்தாவிட்டாலும், எல்லாப் பூதங்களிடத்திலும் பரப்பிரம பாவனை செய்து வருவது நல்லதே யொழிய,த் தண்டம் கமண்டலம் முதலியவற்றைத் தரித்துக்கொண்டு திரிவது தருமமாகாது. தேற்றான்விதை கலங்கின தண்ணீரைத் தெளியச் செய்யும் சக்தியுடையதாயினும், அதை யுரைத்துத் தண்ணீரில் போட்டால்தான் அத்தண்ணீர் தெளியும். அன்றித் தேற்றான் விதையென்று அதன் பேரைச் சொன்ன மாத்திரத்தில் கலங்கின தண்ணீர் தெளிவதில்லை. அதுபோல ஆச்சிரமத்துக்குரிய தர்மத்தை விட்டொழித்து அடையாளங்களை மாத்திரம் தரித்துக்கொள்வதனாலேயே அவ்வாச்சிரமம் நிறைவேறுவதில்லை. தேற்றான்வித்தின் பேரைச் சொன்ன மாத்திரத்தில் கலங்கினநீர் தெளியாததுபோல ஆத்துமஞானப்பியாசமில்லாதவர்கள் பிரம ஞானத்தை யடையமாட்டார்கள். (தொடரும்)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு.

சந்தா நேயர்களனைவர்க்கும் மாதமாதம் தவிறாது சஞ்சிகை யனுப்பி வருகிறோம். ஆயினும் சிலருக்குச் சேராமல் போகிறதெனத் தெரிவதால் அப்படிச் சேராதவர்கள் அதேமாதக் கடைசிக்குள் நமக்குத் தெரிவித்தால் வேறொரு சஞ்சிகை யனுப்பப்படுமென்று விளம்பரம் செய்து அவ்வாறேயனுப்பிவருகிறோம்.

சிலர் வருட முடிவில் வி-பி. வந்தபின் வி-பி-யை யெடுக்காமல் திருப்

பிவிட்டு நமக்கு 3 அணா நஷ்டமுண்டாக்கியபின், "எனக்கு ஐப்பசி சஞ்சிகையும், கார்த்திகை சஞ்சிகையும் சேரவில்லை. அவற்றையும், இவ்வருட பஞ்சாங்கத்தையும், ஆனிமாத சஞ்சிகையையும் புக்போஸ்டில் அனுப்பினால் சந்தாதொகையை யுடனே மணியார்டர் செய்கிறேன். நான் சந்தாதாரனாக இருக்கவேண்டுமென்று பிரியமிருந்தால் அப்படி யனுப்புங்கள். இன்றேல் தங்கள் ரிஜிஸ்டரிலிருந்து என் பெயரை யெடுத்துவிடுங்கள்" என்று வரைகிறார்கள்.

இத்தகையோர்கள் சந்தாவினின்று நீங்கிவிடுவார்களென்றஞ்சி இவர்கள் கேட்கும் சஞ்சிகையை யனுப்புவதாயின் இன்னும் அளவற்ற பேர்க்கு அவ்வாறே செய்யநேரிடும். அப்படியும் "சந்தா தொகையையும் நஷ்டம் 3 அணாவையும் அனுப்பினால், உமக்குச் சேராத சஞ்சிகைகளை மறுபடி யனுப்புகிறோம்" என்று தெரிவித்தோம். அதற்குமேல் நாம் என்ன செய்வது?

சஞ்சிகையை யாதரிக்கும் சந்தாதாரர்களே நமக்கு வேண்டியதே. நமக்கு நஷ்டத்தை யுண்டாக்கும் சந்தாதாரர்கள் இருக்கவேண்டுமென்று நாம் எப்படி விரும்புவது? சஞ்சிகையை விரும்புவோர் இலௌகிக ஆன்மார்த்த ஞானங்களைப் பெறவும், தாய்ப்பாஷையின் அபிவிர்த்திக்கும் தாய்நாட்டின் க்ஷேமத்திற்கும் உதவிசெய்யவுமே சஞ்சிகையை வாங்கியாதரிக்கவேண்டும். அத்தகையோரே உண்மையாய்ச் சஞ்சிகையை யாதரிப்போரும் அதனால் பயனடைவோருமாவார்கள்.

சில சந்தாதாரர்கள் மணியார்டர் அனுப்பும்போது சந்தா நம்பரை யறிவிக்காமல் வி-பி. வந்தபின் வாபீசு செய்துவிட்டு, பிறகு நம்பரை யறிவித்துத் தாங்கள் முன்னமே பணம் அனுப்பியிருக்க வி-பி. யேன் அனுப்பினீர்கள்? என்று நம்மேல் நிஷ்டூரமாய் வரைகிறார்கள். சிலர் ஜூன்மீ 14உக்குள் பணம் அனுப்பாமலும், அத்தேதி கழிந்தபின் பேசாமலிருந்து வி-பி. வந்தபின் பெற்றுக்கொள்ளாமலும், நாம் இங்கிருந்து வி-பி-யனுப்பும் சமயம் மணியார்டர் அனுப்பிவிட்டு வி-பி-யை வாபீஸ் செய்து நஷ்டமுண்டாக்கிவிட்டு, "நான் மணியார்டர் செய்திருக்க ஏன் வி-பி. யனுப்பினீர்கள்?" என்று நம்மேலேயே குறை கூறுகிறார்கள்.

சந்தாதாரர்கள் இவ்வாறு நடந்துகொண்டால் நம் நாட்டில் போதுமான பத்திரிகைகள் எவ்வாறு நடைபெறுவது? அந்தோ நம்மவர்கள் பத்திரிகைகள் நம் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியமானவைகள் என்ற உண்மையை யின்னும் உணராதிருப்பது மிக்க விசனிக்கத்தக்கவிஷயம். நண்பர்கள் இனியேனும் இவ்விஷயத்தில் கவனம்வைத்து நடந்துகொள்ளவேண்டுகிறோம்.

வருடக் கடைசியில் வி-பி-யனுப்பும் மாதத்திலும், அப்பணம் நம்மிடம் வந்தபின் சஞ்சிகையனுப்பும் அடுத்த மாதத்திலும், இந்த இரண்டு மாதங்களில்மட்டும் சஞ்சிகை சற்று தாலசியமாகவே வந்து சேரும்.

அதற்காகச் சந்தாதாரர்கள் மனம்பொறுக்க வேண்டுகிறோம். மற்ற மாதங்களில் 1, 2 தேதிகளிலேயே யாவர்க்கும் சஞ்சிகை யனுப்பப்படும். பஞ்சாங்கம்-இந்த வருடச் சந்தாவை முன்னுடி குறித்த தவணைக்குள் அனுப்புவோர்களுக்கெல்லாம் இவ்வருட மாசி அல்லது பங்குனியுட அடுத்த வருட பஞ்சாங்கமே யனுப்பப்படும்.



பத்திராதிபர்.

## பகவத்கீதை வசனம்.

(36-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 7-வது *மாயாரூப அத்தியாயம்.

[சர்வ கர்மங்களின் சந்நியாச ரூபமான சாதனம் பிரதானமாகவுள்ள முதல் ஷட்கத்தால் (6 அத்தியாயங்களால்) ஸ்ரீ பகவான் யோகத்தோடு கூட துவம்பத இலட்சிய ரூபமான ஞேயவஸ்துவைத் திருவாய் மலர்ந் தருளினர். இப்போது பிரம்மத்தின் பிரதிபாதனமே முக்கியமாகவுடைய இம்மத்திய ஷட்கத்தால் தத்பதரூபமான பரமான்மாவைக் கூறியருள் கின்ருர். பகவத் சேவையைப்பற்றி கூறுவதற்காக இந்த ஏழாம் அத்தி யாயம் ஆரம்பிக்கப்படுகிறது. இங்கு பகவானை எத்தன்மைய சொரூப மாக சேவிக்கவேண்டும், பகவானது சொரூபத்தில் மனமானது எவ்வாறு நிலைபெறும் என்ற கேள்விகளை அர்ச்சுனன் கேட்கவேண்டும். அவன் கேட்காதிருந்தும் பரம கிருபா மூர்த்தியாகிய பகவானே அக்கேள்வி களுக்கு விடையருள்கின்ருர்.]

இலக்ஷ்மீகாந்தனுகிய ஸ்ரீ பரந்தாமன் அர்ச்சுனனை நோக்கிக் கூறு கிருர் :—"ஏ பார்த்த! மோக்ஷமடையும்பொருட்டு அன்போடு என்னையே சரண்புகுவதாகிய யோகத்தைப் பயிலும் யோகியானவன் ஐயமின்றி என் சொரூபத்தை யெவ்வாறு அறிவானே அதைக் கூறுதும் கேட்பாயாக.

(அந்த பரமேஸ்வரனது சொரூபஞானத்தில் அதிகாரிகளை யபிமுக மாக்கும்பொருட்டு அந்த ஞானத்தின் அருமை பெருமைகளைப் பகவான் புகழ்ந்து கூறுகிருர்.)

ஏ அர்ச்சுன! அழியத்தக்க மாயையினுல் மறைக்கப்படாத மனத்தி னிடை என் சொரூபத்தை உள்ளபடி உண்மையாக அறிந்திருப்பவர்கள் அறியாத பதார்த்தம் ஒன்றுமேயில்லை. ('என் நிஜ சொரூபத்தை யறிந்த வன் யாவற்றையு மறிந்தவன்' என்றபடி.)

இத்தகைய பெருமைவாய்ந்த எனது சொரூபஞானமானது எனதரு ளின்றிக் கிட்டுவதருமை. பல்லாயிரம் மனிதர்களில் ஒருவனே எனது சொரூபஞானத்தை யடைய மனம்வைத்து முயல்வான். அப்படி முயலும் பல்லாயிரம் பேரில் ஒருவனே என் சொரூபத்தை யுள்ளவாறுணர்வான்.

[விசாரித்துப் பார்க்கும்போது இல்லாமற் போவதாலும், ஞானோத யத்தில் ஒழிந்துபோவதாலும் மாயை அழியத்தக்கதென்ருர். சித்தசத்தி

---

* வடநூலில் ஞானயோகம் என்று பெயர்.

வாய்ந்து ஆசையொழிந்தவிடத்து மாயையின் மறைப்பு நீங்குவதால் அத் தகையோர் மனம் மாயையால் மறைக்கப்படாதது என்றார். தேவர்கள் முதலியபேர் சங்கு சக்ர கதாகட்க கோதண்டபாணியும் இலக்ஷ்மீ சமேத னுமாகிய பகாவனே யறிந்திருக்கிறார்களெனினும் அது பகவானது உண் மை வடிவமன்றாம். அவரைப் பிரத்தியகான்மாவிற்கு அபின்னமான பிரம் மசொரூபமாய் யுணர்ந்தவர்களே அவரது நிஜ சொரூபத்தை யுணர்ந்தவ ராவர்.]

ஏ பார்த்த! மண், நீர், தீ, வாயு, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம், இவ்வெட்டுவிதமான அபரப் பிரகிருதியினும் வேறாய் உலகின்கண்ணுள்ள அனைத்தையும் தாங்கிக்கொண்டு தேகத்தின்கண்ணும் சீவரூபமாய் நிற் பது எனது மாயையேயாகும். இச்சீவ்வடிவ பரப்பிரகிருதியே உலகனைத் தையும் தரித்திருப்பது. இவ்வுலகிலுள்ள சேதனு சேதனங்களனைத்தும் மேற்கண்ட இரண்டு பிரகிருதிகளாலும் உண்டாகின்றவைகளே.

ஏ அர்ச்சுனு! பூதங்களனைத்தும் இவ்விரண்டு பிரகிருதிகளின் காரியங் களே யென்பதை யுனதறிவினுல் நிச்சயித்துணர்வாயாக. நானே சீவ வடிவத்தால் பிரவேசித்து இந்நாமரூபத்தோற்றமாகிய யாவற்றையும் தாங்கி நிற்கிறேன். என்னின்வேறாக எந்தப் பொருளும் ஒரு பொரு ளைத் தாரணம் செய்யும் சமர்த்துடையதல்ல. ஆகையால் பிரபஞ்சத்தின் உற்பத்திக்கும் நாசத்திற்கும் நானே காரணன்.

(இப்போது பகவான் பரமேசுவரனுன நானே எனது மாயாசக்தி யால் சிருட்டித்து இரக்ஷித்துச் சங்கரிக்கிறேனுதலில், உண்மையில் எனக் கயலாக ஒரு பொருளுமில்லை யென்று அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! யாவற்றிற்கும் காரண பூதமாகவுள்ள என்னையன்றி இப் பிரபஞ்சத்தைத் தாங்கத்தக்க பொருள் வேறெதுவுமில்லை. பல வர்ண மான அனேகம் மணிகளினிடையே யொரு நூலானது சென்று கோர் வையான அம்மணிகளைத் தாங்கி நிற்பது போல, பல பேதங்களாகக் காணப்படும் எல்லா வஸ்துக்களிலும் நானே அந்தரியாமியாய் நின்று அவையனைத்தையும் தாங்கும் தன்மையைக் கூறுதும் கேட்பாயாக.

சகல ஜலங்களிலுமுள்ள இரசதன்மாத்திரை வடிவ மதுரம் நானு கின்றேன். சூரிய சந்திரர்களிடத்துள்ள ஒளி நானுகின்றேன். வேதங் களிலுள்ள பிரணவம் நானுகின்றேன். ஆகாயத்திலுள்ள ஒலி நானுகின் றேன். பிருதிவியிலுள்ள கந்தம் நானுகின்றேன். அக்னியிலுள்ள உஷ் ணம் நானுகின்றேன். சர்வ புருடர்களிடத்திலுமுள்ள ஆண்மை நானு கின்றேன். சகலப் பிராணிகளிடத்துமுள்ள சீவனமும் நானுகின்றேன்.

அறிவாளிகளிடத்துள்ள அறிவாகிய யுக்தி நான். தவசிகளிடத் துள்ள தவம் நான். புகழ்ச்சிபொருந்தினவர்களிடத்து புகழ் நான். வீரர் களிடத்துள்ள வலிமை நான். சத்துவம் இராசதம், தாமதம் என்ற மூன்று குண பேதமாய் விளங்காநின்ற சகல பொருள்களும் பரமேசுரனுகிய என்

னிடத்தே தோன்றுகின்றன. அவை பற்றி நிற்பதும் என்னையே. ஆனால், ஏ அர்ச்சுனா ! அக்கற்பிதமான பதார்த்தங்களில் நான் தோன்றுவதில்லை. நான் அவற்றில் சாட்சிமாத்திரமாக நிற்பனேயன்றி அவற்றை யாதாரமாகக்கொண்டிரேன். இப்போது நான் கூறிய மயக்கத்தக்க முக்குணங்களின் வயப்பட்டு விவேகமிழந்திருக்கின்ற உயிர்களனைத்தும் எக்குணங்களையும் கடந்து நிற்கும் பரமேசுரனாகிய என்னை யறியமாட்டா.

(அநாதியாகிய மாயையின் முக்குண வயப்பட்ட உயிர்களனைத்தும் சுதந்தரமின்மையின் முக்குண வடிவமாகிய மாயையை நிவர்த்திசெய்யச் சக்தியுடையவனல்லவே என்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான், அந்நிய உபாயங்களால் மாயாநிவர்த்தி யுண்டாகாதெனினும், ஈசுரபக்தியால் உண்டாகும் தத்துவஞானத்தால் மாயாநிவர்த்தி கூடும் என்று அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! இம் முக்குண சுபாவத்தையுடைய என் மாயையை வெல்வது யாவர்க்கும் அரிதே. என்னையே எப்போதும் மெய்யன்போடு வழிபடும் மனமுடையோர்மட்டுமே தத்துவ ஞானத்தால் இம்மாயையை நிவர்த்திக்கக்கூடும். (தொடரும்.)

சீடன்.



## நந்திக்கலம்பக வரலாறு.

இப்பொழுதைக்குச் சுமார் ஆயிரத்திருநூறுண்டுகட்கு முன் இரணியவர்மனென்பானோரிறைவன், ஔவைப்பிராட்டியார் "சான்றோருடைத்து" எனப் புகழ்ந்து கூறிய தொண்டைமானாட்டைப் பரிபாலித்து வந்தான். அவனுக்கிருபுத்திரருண்டு. அவர்களுள் மூத்தவனாகிய நந்தி அபிமான ஸ்திரீயின்கட் டுதித்தோன். பட்டமஹிஷியின் புதல்வ னிளையவன். அவன் பெயர் காடன். இரண்யவர்மன் விருத்தாப்பிய தசையடைதலும் குலமகனுக் கரசளிக்காமல், அபிமானத்தால் பொதுஜன சம்மதத்தையும் பாராட்டாது, முதியோனென்னுங் காரணத்தைக்காட்டி நந்திக்கே மகுடஞ் சூட்டி, தந்திரத்தில்வல்ல சும்மாளனொருவனை அவனுக்கு மந்திரியாக்கிச் சிறிது காலத்திற்குள் தேகவியோகமடைந்தான்.

நந்திவர்மன் தனது வெண்கொற்றக்குடை யாவர்க்கு மினிமைசெய்ய செங்கோலோச்சி வருவானாயினன். கல்வியின்னினிமையைக் கண்டவனாகலின் கவிவாணர் களிப்பக் கருந்தனமீயுங் கற்பக வள்ளலா யிருந்தான் நந்திவர்மன்.

தன் தந்தையின் தீயொழுக்கத்தால் தனக்குரிய நாட்டை யிழந்த இளையோன், மூத்தோனிடம் பகைமை கொண்டு அரசைக்கவரும் சமயம் நோக்கியிருந்தான். பிரஜைகளிற் பலர் அவனுக்குடந்தையாயினர். இதையறிந்த நந்தியின் மந்திரி இயந்திரக் கட்டிலொன்று சமைத்தான். அது தன்மேல் எவராவது படுத்து நித்திரை செய்யின் சத்தமிட்டுக்கொண்டும்

விழித்திருப்பின் நிசப்தமாயுமிருக்குந் தன்மைத்து. அதையவனரசற்குக் காட்டி, "ஏந்தால்! மாற்றாரும்மை மாய்க்கக் கருதியுள்ளார். நீவிர் மிக்க எச்சரிக்கையோடிருத்தல் வேண்டும். இரவிற் பகைவராலின்னலுண்டா காவண்ணம் இக்கட்டிலின்மீதே கண்டுயில்வீராக," வென்றான். "மந்திரிக் கழகு வரும்பொருளுரைத்தலன்றோ"? அரசனுமங்ஙனமே யொழுகி வந்தான்.

ஒருநாள் நடு நிசி. பேய்களுமுறங்குங்காலம். "கருமமே கண்ணாயினார் கண்துஞ்சார்" என்றபடி, காடவனும் அவன் சகாக்களும் அரண்மனைக்குப் புறத்திலொருசிறை பதிவிருந்தனர். ஒவ்வொருவர் கரத்தினும் கதிரவனொளிபோல் மின்னுங்கட்கம் பிரகாசிக்கின்றது. பார்த்திபன்றன் பள்ளியறைக்கு நேராக வெளியினின்ற விவர்கள் சிறிது நேரத்திற்குள் இடைச்சுவரில் கன்னக்கோல்கொண்டு ஆள் நுழையக்கூடுமான வழியமைத்துவிட்டனர். அமைத்ததும் உண்ணுழையத் தொடங்கினவர்கள், உள்ளே அரவமுண்டாதலைக் கேட்டு, 'ஆளோசைபோலும்' என் றையுற்று அற்றம் நோக்கிநின்றனர். அச்சமைய மரசனும் கன்னவோசையாலெழுப்பப்பட்டு விஷயமுணர்ந்து உடைவாளை யுருவிக்கொண்டு துவாரத்தி னருகில் நின்றிருந்தான்.

காவலன் கண்விழித்ததால் கட்டிலினொலியு மோய்ந்தது. சற்று நேரத்திற்குள் ஒருவன் உள்ளே நுழைந்து வருவதைக் கண்டதும் வேந்தன், அவனை ஒரே வீச்சில் வெட்டி வீழ்த்தினான். பின்னும், ஒருவர்பின்னொருவராய் நுழைந்த அனைவரும் துணிபட்டொழிந்தனர். எஞ்சிநின்ற இளங்குமரன், 'என்னே வியப்பு! உட்புக்கார் யாதாயினர்? ஒருவரேனுந் திரும்பினாரில்லையே. சதிபோலும். நாம் அவசரப்படலாகாதெ'ன்றெண்ணி யாண்டிருந்ததோர் கரிப்பானையையெடுத்து, ஓர் கழியிற்செருகி யுட்புகவிட்டான். அதன்மேலும் வெட்டுப்பட்டது. கண்டான்காளை. 'ஓ ஓ மோசம்! நந்துணைவர் நந்தியால் வெட்டுண்டனரே' என மிக்க விசனத்துடன் போய்விட்டான்.

இக்காடனே இலக்கண விலக்கியக் கடலின் கரைகண்ட பண்டிதன். கவி பாடுவதில் மிகச் சமர்த்தன். ஆகலின், அவன் வில்வாளியினும் சொல்வாளியே சிறப்புடைத்தென்றுன்னித் தன் தமயனாகிய நந்தியைப் பாட்டுடைத்தலைவனாக்கி, அறம்வைத்துக் கலம்பகமென்னுமோர் பிரபந்தமியற்றி யரசனதவைக்களமனுக, அமைச்ச னச்சுவடியைப் பார்த்து இஃதீண்டரங்கேறுந் தன்மையுடைய தன்றெனக் கூறியனுப்பிவிட்டான். எங்ஙனமேனும் அவ்வசைக்கவிக ளரசனாற் கேட்கப்படவேண்டுமெனக் கருதிய காடவன், அதனைப் பல பிரதிகள் செய்து பிரசுரப்படுத்துவானாயினான். அச்சூழ்ச்சியை யறிந்த வமைச்சன், 'அந்நூலை யொருவரும் ஓதலாகாது. எவரேனும் மீறி ஓர் பாடலோதினும் தண்டிக்கப்படுவார்' எனப் பறை சாற்றுவித்தான். இஃதிங்ஙனமாக,

ஓர்நா ளிரவு பத்துமணி சுமாருக்கு ஒரு வீட்டுவாயிலில் அழகிய மாதொருத்தி நின்றுகொண் டிருந்தாள். அவள் ஓர் பரத்தை. அவள் வீதியில் போகின்றவர்களை யுற்று நோக்கிக்கொண் டிருப்பதைப் பார்த்தால் யாரோ வொருவரது வருகைக்காகக் காத்திருக்கிருள் போலக் காணப்படுகிறது. வெகுநேரம் நின்றிருந்த அம்மாது திண்ணையின்மேல் படுத்து நித்திரை போய்விட்டாள். தெருக்கதவை மூடாமலே உறங்கிக் கொண்டிருந்தவள் யாதோ காரணத்தால் திடுக்கிட்டு விழித்துப்பார்த்து தன்மீது சந்தனக்குழம்பு ஊற்றப்பட்டிருப்பதைப் பார்த்து வியப்புற்று, 'இக்காரியஞ் செய்தோர் யாவர். நம் காதலனுகிய காடவன்தானே? இவ்வாறு செய்தது. அவருக்காக வெகுநேரம் காத்திருந்தும் காணவில்லையே. இப்போது வந்தாரோ?' வெனத் திகைத்து நின்ருள். அவ்வமயம் அவள் காணுதபடி மறைந்திருந்த காடவன், அச்சந்தர்ப்பத்திற் கேற்ற வோர் செய்யுளடியை நந்திக்கலம்பகத்தினின்று பாடினுன். நகரி சோதனையின்பொருட்டு வந்து ஆண்டு நிகழ்வதியாதோவென வறியப் புறத்தே பதுங்கிநின்ற சேவகனொருவன் அப்பாடலைக் கேட்டதும், உள்ளே நுழைந்து அவனைப் பிடித்துக்கொடுபோய் அரசன் முன் நிறுத்தி நிகழ்ந்தவற்றை நிகழ்த்தினுன். எதிரில் நிற்போன் தன் இளவலெனக் கண்ட மன்னன், அப்பாடலைப் பாடச்சொல்ல, அவன்

செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சிதச்
சந்தனமென் ருரோ தடவினூர்—பைந்தமிழை
ஆய்கின்ற கோனந்தி யாக்கந் தழுவாமல்
வேகின்ற நெஞ்சே விரைந்து எனப் பாடினுன்.

அதைக்கேட்ட நிருபன், 'ஆஹா! நமது வெற்றி முதலிய சிறப்புக்களைப் பற்றிக் கூறும் சொற்சுவை பொருட்சுவை நிரம்பிய பாடல்களையுடைய விந்நூலை, யாது நேர்வதாயினும் கேட்பதே துணிபு' எனத் தீர்மானித்துத் தம்பியைப் பார்த்து அதைக் கூறும்படி சொல்ல, அவன் 'கொற்றவா! நீரிந்நூலைக் கேட்பதாயின் மயானத்திற் சிதையடுக்கி யதின் மேலிருந்து கேட்கவேண்டும்' என்ருன். பல்லோர் தடுத்தும் கேளாமல் நந்திவர்மன் காடவன் கூறியவாறே யிருந்து, நூலைக் கேட்டுவரு மளவில் தாதுக்க ளொடுங்கிக்கொண்டுவந்தன.

வானுறுமதியை யடைந்ததுன்வதனம்
வையக மடைந்த துன்கீர்த்தி
கானுறு புலியை யடைந்ததுன் வீரம்
கற்பக மடைந்த வுன்கரங்கள்
தேனுறு மலரான் அரியிடஞ் சேர்ந்தாள்
செந்தழல் புகுந்ததுன் மேனி
யானுமென் கவியு மெவ்விடம் புகுவோம்
எந்தையே நந்திநா யகனே.

என்னும் இறுதிச் செய்யுளைப் பாடி முடிந்ததும், நந்தி பேசவுமாட்டாதவனாய் தன் கையைக் காட்டிக் கணையாழியைக் கழற்றிக்கொள்ளும்படி தம்பிக்குக்காட்டிச் சமிக்கைசெய்து இறந்தனன்.

காடவனும் கணையாழி பெற்றுத் தமயனுக் கீமக்கடன் முடித்து, முடிசூடி யரசனாயினன்.

நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும்
சுந்தரஞ்சேர் தென்குளத்தூர் சோமேசா—சந்ததமும்
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. (சோமேசர் முதுமொழி வெண்பா.)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## ஸ்ரீமத் அபேதானந்த சுவாமிகளின் உபந்நியாசம்

(27-ம் பக்கத் தொடர்ச்சி)

### ஸநாதந தர்மம் தத்துவ விசாரம் செய்வது.

தத்வ விசாரம் செய்து உண்மையை அறிவதைத் தவிற பிறவிப் பெருங் கடலை நீந்துவதற்கு வேறு வழியில்லை. அதனால் யாவரும் தத்வ விசாரம் செய்து உண்மையைக் கண்டுபிடிக்கவேண்டும். பந்தத்தினின்றும் விடுபட்டு பூரணனும் தீர்த்தனுமாவதற்குத் தத்வ விசாரம் அவசியம். அதற்குப் பூர்வாங்கங்கள் திரிகரணசுத்தி, மனோ வாக்குக் காயங்களினால் தூய்மையாய் இருப்பதே. தீய ஒழுக்கத்தை விட்டு தூய ஒழுக்கம் புகுவான் வேண்டும். நல்லோன் தீ எறிவையும் பாழ் நரகையும் பலபல பாவங்களைக் காட்டிக் காட்டி பயமுறுத்த வேண்டியதில்லை. எண்ணி எண்ணித் தேய வேண்டியதில்லை. அதன் கோரத்தையும் பயங்கரத்தையும் எண்ணி நடுங்க வேண்டியதில்லை. அந்தக் கொடுமையைக் கண்டு அமெரிக்கர்கள் பெரு நாண முறுகின்றனர். நமது கரும சித்தாந்தம் மிகவும் விசேஷமானது. அது காரண காரியத் தொடர்ச்சியாய் ஒழுங்குள்ளது.

கிருஸ்தவக் கொள்கையோ "முன்னே ஒருவன் முடித்தான் தன் துப்பெல்லாம்" என்பதுபோல முன் தீர்மானமும் ஒழுங்கீனமும் உள்ளது. அதில் ஞாயமும் இரக்கமும் இல்லை. அம்மாதிரியான சிருஷ்டி கர்த்தா இருக்க முடியாது. நமது சாங்கிய மார்க்கம் அங்ஙனம் கூறுவதின்று. புருஷப் பிரகிருதி ஸம்யோகத்தினால் தோற்றப்படும் உலகம் காரண காரியமாய் விளங்கும்.

சிருஷ்டி சக்கிர யோஜனைக்கும் அது ஒத்தது. மதகர்த்தா ஒருவரல்ல. ஸநாதந தர்மம் ஒரு ரூபத்தின்பேரில் நிலைத்திருப்பதன்று. மற்ற மதங்களோ என்றால் ஒவ்வொரு ஆதி புருஷன் பேரில் நிலைத்திருப்பது. புத்

தரை எடுத்துவிட்டால் பௌத்தமதம் இல்லை. கிருஸ்துவை எடுத்துவிட்டால் கிருஸ்துமதம் கிடையாது. ஸௌராஷ்டிரரை எடுத்துவிட்டால் அவர் மதம் கிடையாது. ஆனால் ஸநாதந தர்மத்திலோ அதற்கு ஆதிகர்த்தா என்பவரும் மூலபுருஷன் என்பவரும் ஒருவரன்று. அதன் புராதன புருஷர்கள் பலர். யாரை வேண்டுமானாலும் உள்படுத்தலாம். இயேசு, மோஸஸ், புத்தர், மகம்மது, கான்பூஷியஸ், ஸோராஸ்டர் முதலிய யாரும் விலக்கில்லை. ஸமஸ்த மதங்களும் ஒரே முடிவில் கொண்டுபோய் விடுகின்றன என்பது ஸநாதந தர்மத்தின் உண்மை. ஒரே மத்தியை பல முகங்களாலும் பல படியும் பார்ப்பது என்பது. நான் சிறு வயதில் பாடிக்கொண்டு திரிந்த ஒரு கீதம் எனக்கு ஞாபகத்துக்கு வருகிறது. அதன் அர்த்தம் பல ஆறுகளும்போய் ஒரே சமுத்திரத்தில் விழுவதுபோலப் பல மதங்களும் இறுதியில் பகவானிடத்திலேயே கொண்டுபோய் விடுகின்றன. இதைக்காட்டிலும் சிறந்த ஒரு சித்தாந்தம் உண்டா? ஸ்ரீ கிருஷ்ணபகவான் மற்றொன்றும் கூறியிருக்கிறார். "யுகந்தோறும், யுகந்தோறும் புண்ணியம் தேய்ந்து பாவம் வளரும்பொழுதெல்லாம், பாவிகளை அழிக்கவும் சிஷ்டர்களைக் காக்கவும் நான் அவதாரம் செய்கிறேன்." உலகத்தில் மதவாராய்ச்சி சரித்திரத்தில் இதுவே முதல் முதல் இம்மாதிரி வார்த்தைகளில் சொன்னதாகும். பிறகு அந்தப் பாடத்தை வெகுபேர் ஓதினார்கள்.

தமிழகம்.



## தெலுங்கு என்பது எது?

'தெலுங்கு' அல்லது 'தெனுகு' என்பது நமது பாரத நாட்டில் வழங்கிவரும் பலவிதமான தாய்ப்பாஷைகளில் ஒன்றாகும். இந்த பாஷையை வடமொழியில் 'ஆந்திரம்' என்பார்கள். தெலுகு, தெனுகு, தெலுங்கு என்னும் பதங்கள் எல்லாம் 'தெலிங்க' (ட்ரிலிங்க-Trilinga) என்னும் மொழியின் சிதைவுகளேயாம். ட்ரிலிங்கமாவது (திரிலிங்கம்) மூன்று லிங்கங்களடங்கிய நாடாகும். [வடமொழியில், 'திரி' (த்ரயம்) என்றால் 'மூன்று'; 'லிங்கம்' என்பது சிவனுக்கடையாளம்.] ஒரு காலத்தில் பரமசிவன் காலேசுவரம், ஸ்ரீசைலம், பீமேசுவரம் என்ற மூன்று பர்வதங்களினுச்சியில் லிங்காகாரமூர்த்தியாய் இறங்கி விளங்கினாரென்கிற ஐதீகமும் ஒன்றுண்டு: ஆகவே அம்மூன்று லிங்கங்களும் ஆந்திர தேசத்தின் எல்லைகளைக் குறித்தனவென்றும், திரிலிங்க-தெலிங்க-தெலுங்கு (தெலுகு-Telugu) தேசமென்று பெயராயிற்றென்றுங் கூறுவர்.

நிற்க, 'தாய்பாஷை' என்பதியாது? அது ஒன்றா, பலவா? நம் பாரத மக்களில் பெரும்பாலோர் இச் சொற்றொடரை தெளிவாய் அறிந்தார்களில்லை. சிலர் 'தாய்பாஷை' என்றால் தமது வீட்டு பாஷை (மதர் டங்-Mother tongue) என்கிறார்கள். சிலர் 'தாய்பாஷை' திராவிடமென வழங்கும் தமிழ் பாஷைதான் என்கிறார்கள். வீட்டு பாஷை எது? நாட்டு பாஷை எது? 'தமிழ் நாடு' முற்றிலும் தமிழ் பாஷை ஒன்றே வழங்கி

வருகின்றதா? சென்ற 1921ஷூத்தில் விண்மீன்போல் தோன்றிமறைந்த கவிரத்னமாகிய ஸ்ரீமான் ஸி. சுப்ரமணிய பாரதியார் அவர்கள் 'எங்கள் தாய்' என்னும் தலையங்கத்தின் 8-வது பாட்டில்

"முப்பது கோடி முகமுடை யாளுயிர்
மொய்ம்புற வொன்றுடை யாள்—இவள்
செப்பு மொழிபதி னெட்டுடை யாளெனிற்
சிந்தனை யொன்றுடை யாள்"

என்றபடி பாரதத் தாயின் பாஷை ஒன்றல்ல. பதினெட்டு என்று கூறியுள்ளார். அவை திராவிடம், ஆந்திரம், கன்னடம், மராடம், கூர்ச்சரம், வங்காளி, ஹிந்தி, மலையாளம், துளுவம், காண்ட் முதலியனவே. இவை ஒவ்வொன்றும் 'தாய்பாஷை' என்பதற்கு ஐயமின்று. தமிழ்மக்கள் ஆந்திரதேசத்தவர்களை 'வடுகர்' என்று கூறுவதுமுண்டு. அதாவது வடக்கு தேசத்தவர், வடக்கத்தியார். தாய்பாஷை என்பது 'இராஜபாஷை'யைப்போல் ஒன்றல்ல. நமது இந்தியா முழுவதும் பரவி ஒருவர்க்கொருவர் பொதுவாய் அறிந்துகொள்வதற்குப் பெரும்பாலும் எளிதா யேற்பட்டுள்ள பாஷை 'ஆங்கிலம்' (English) என்கிற இராஜபாஷையேயாகும். ஆனால் ஆங்கிலத்திலும் தமிழ் நீங்கலாகவுள்ள எனையபாஷைகளிலும் தமிழ் மொழிகள் கலந்திருப்பதுண்மையே. தமிழின் தொன்மையையும் பெருமையையும் விசேஷமான ஆதாரங்களோடு நமது சகோதரர் ஸ்ரீமான் து. தீனதயாளு அவர்கள் 'ஆனந்தன்' 7-ம் ஆண்டு மதிகளில் நிரூபணஞ் செய்துளார்.

தெலுங்குபாஷையின் எல்லை :—தெலுங்கு தேசத்தில் பிறந்து தமிழ்நாட்டில் குடியேறி நிலைத்துவிட்டவர்களில் சிலர் தமிழும் சிலர் தெலுங்கும் ஏறக்குறைவாகப் பேசப் பழகிவிட்டனர். அதாவது சிலர் தமிழ்நாட்டில் நிலைத்துவிட்டதனாலே தெலுங்கை மறந்துவிட்டு தமிழே பேசுகின்றனர். பிற்கூறிய சிலர் தமிழ்நாட்டில் பிரவேசித்து தமிழ் பேசுவோருடன் கலந்து வசித்தபோதிலும் தெலுங்கு பாஷையிலே பேசுகின்கின்றார்கள். அதை யவர்கள் மறந்துவிடுகிறதில்லை. தமிழ் பேசவும் கற்றுக்கொள்ளுகின்றனர். இவ்விருதிறத்தாருடைய 'தாய்பாஷை' எது? தெலுங்கேயாகும். தமிழாகாது. இவ்விதமே தமிழ்நாட்டிலிருந்து தெலுங்கு (ஆந்திர) தேசத்தில் குடியேறி நிலைத்துவிடுகிறவர்களின் 'தாய்பாஷை' தமிழேயாகும், தெலுங்கன்று. ஆங்கிலேயரின் 'தாய்பாஷை' ஆங்கிலேயம்—இங்கிலீஷ்தான். சுறுங்கச் சொல்லின் 'தாய்பாஷை' என்பது ஒவ்வொரு குடும்பத்தினர் தத்தம் வீட்டில் பேசும் பாஷை யெனலாம். கலியுக விநோதங்களில் ஒன்றியாதெனில் பாரதமக்கள் பலபாஷை கலவாது மொழியார்! இதுதான் ஸம்பாஷணக்ரமம் (ஸம்பாஷணை+(அ)க்ரமம்) போலும். நாம் எடுத்துக்கொண்ட தலையங்கத்தினின்றும் வெகுதூரம் விலகிவிட்டது பொறுப்பீராக.

தெலுங்குபாஷையானது இருபதுகோடி இந்துக்களால் பேசப்படுகின்றன. அவர்கள் இந்தியாவின் கிழக்குபாகத்தில், சென்னையிலிருந்து கடற்கரையைச் சார்ந்த வங்காளம் (Bengal) வரையிலும் உள்ளே தக்ஷிண (Deccan) ப்ரதேசங்களிலும் வசிக்கின்றனர். இந்த எல்லைகளுக்குள் அடங்கியவை பின் வருவன:—பிரிட்டிஷ் அரசாங்கமுள்ள கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி, கிருஷ்ணு, நெல்லூர் முதலிய ஜில்லாக்கள்; நிஜாம் பிரதேசங்களின் பெரும்பாகம்; ஒப்புக்கொடுத்த ஜில்லாக்கள் (Ceded Districts)—கர்நூல், கடப்பை, பெல்லாரி (வடக்கு, கிழக்கு பாகங்கள்மட்டும்); மைசூர் பிராந்தியத்தின் கிழக்குபாகமும் வட ஆற்காடுமே.

தெலுங்கு தேசத்தின் சரிதம்:—தெலுங்கரின் பூர்வ சரித்திரம் வேண்டுவோர் 'Elphinstone's History of India' 'எல்பின்ஸ்டோன்' என்பவர் இயற்றிய 'இந்திய சரித்திரம்' என்னும் புத்தகத்திற் காணலாகும். பதினேரும் நூற்றூண்டின் இறுதியில் 'விஷ்ணுவர்த்தனன் என்னும் அரசனும், பதினுறும் நூற்றூண்டின் முதலில் 'கிருஷ்ண ராயலு' என்னும் மன்னனும் விஜயநகரத்தை யாண்டுவந்தனர். இவ்விரண்டு பூபதிகளே தெலுங்கு கலைஞானத்தைச் சாலவும் அபிமானித்து மிகுந்த பிரக்யாதி பெற்றூர்கள். 'விஷ்ணுவர்மன்' அரசாட்சியில்தான் 'மஹாபாரதத்தின் முதற்பாகம் வடமொழியிலிருந்து தெலுங்கில் மொழிபெயர்க்கப்பட்டதெனக் கூறுகின்றனர். தெலுங்கான (Telingana) தேசத்தில் பழைய தலைநகராயிருந்த 'வாரங்கல்' (Warangal) சென்ற 1332-ம் வருஷத்தில் மகம்மதியர்களின் கைவசமாயிற்று. அவர்களே 1556-ம்ஸூ விஜயநகரத்தையும் கைப்பற்றினூர்கள். மகம்மதிய அரசாட்சியில் தெலுங்கு பாஷை ஆதரிப்பாரற்றிருந்தது. தவிரவும், அப்பாஷைக்குள் இந்துஸ்தானி முதலிய அந்நிய பதங்கள் நுழைந்துகொண்டன.

தெலுங்கில் வடமொழிப் பதங்கள் பிரயோகப் படுத்தப்பட்டாலும், தெலுங்குபாஷை வடமொழியினின்று வந்ததன்று. தென்னிந்தியாவில் வழங்கிவரும் இதர பாஷைகளாகிய தமிழ், கன்னடம் முதலிய பாஷைகளின் தாதுக்களை (Roots) ஒட்டியே சுத்தமான தெலுங்கு பாஷை ஏற்பட்டது. தாய்ப்பாஷைகளில் தெலுங்கு நீங்கலாகவுள்ள ஏனைய பாஷைகளுக்கு 'திராவிடம்' என்றும் கூறுகின்றனர்.

ஆனுல் தெலுங்கிலுள்ள பதங்களும் முக்கியமாய் உச்சரிப்பு விஷயத்தில் வடமொழியை நாடியிருக்கின்றன. வடமொழியிலுள்ள ஒரு சுலோகத்தை (கிரந்த அக்ஷரங்களிலோ அல்லது தேவநகரி எழுத்துக்களிலோ) தமிழில் எழுதுவதைக்காட்டிலும், தெலுங்கில் பதவுச்சரிப்பை நன்றாய் அறிந்துகொண்டு திருத்தமாய் எழுத வியலும். இதற்குக் காரணம் யாது? தெலுங்கு தேசத்தார் அந்தணர்களுடைய மதத்தைத் தழுவினூர்கள். பிற்கூறியவர்கள்தான் மத அதிகாரிகளாயும், சாஸ்திர விற்பன்னர்களா

யும் இருந்தனர். அவர்களுடைய பாஷை வடமொழியாதலாலும் அவர்கள் அநேகம்பேர் தெலுங்கரோடு கலந்து வசித்ததாலும், தெலுங்கு பாஷையில், அடிக்கடி கையாளப்படும் பதங்கள் முக்கியமாய் தத்வம், வேதாந்தம், சாஸ்திரம் இவைசம்பந்தமான வாக்கியங்கள் வடமொழியிலிருக்கின்றன. ஆதி தெலுங்கு இலக்கண கர்த்தாக்களனைவருங்கூட பிராமணர்களாததால், அவர்கள் தமது நூற்களில், ஒழுங்கு, உவமை முதலிய இலக்கணங்களை வடமொழியிலிருந்தே ஆக்கினர். அன்றியும் இலக்கணத்தையே வடமொழியில் பெரும்பாலுமியற்றினர்.

C. S. துரைஸ்வாமி அய்யங்கார்,
'ஸ்ரீரங்கவிலாஸ்', சைதாப்பேட்டை.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(39-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்:—ஆம்.

அம்:—நீயொரு பெரிய இரகசியத்தைக் கண்டு பிடிக்கவேண்டுமென்று கூறினேன். உள்ளே சென்றதே அங்கிருக்கும் ஆச்சரியத்தையும் திடுக்கிடும் சம்பவத்தைக்கண்டு அஞ்சமாட்டாயே?

ஆனந்:—"நான் ஒரே வார்த்தையாய்க் கூறுகிறேன். நான் வேலைக்கு ஆயத்தமாயிருக்கிறேன்" என்றான்.

அதன் பிறகு அம்மனிதன் வீட்டின் கதவைத்திறந்து ஆனந்தலிங்கையுள்ளே யழைத்துச்சென்று வருகிறவர்களை வரவேற்கும் முன் கூடத்தில் அவனை உட்காரவைத்துவிட்டு, "இரு வருகிறேன்" என்றான்.

ஆனந்:—சற்று இரு, உன் பெயரென்ன?

அம் :—என் பெயர் கறுப்பண்ணன் என்றான்.

ஆனந்:—இது உன் மாளிகை தானே.

அம்:—ஆம்.

ஆனந்:—"சரி போதும். விவகாரம் நடக்கட்டும்" என்றான்.

அம்மனிதன் ஆனந்தலிங்கை யங்கு விட்டுவிட்டு அக்கூடத்திலிருந்த ஒரு கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றான்.

ஆனந்தலிங் அக்கூடத்திலிருந்த விளக்கைச் சற்று தூண்டிவிட்டு அங்கிருப்பவைகளைப் பார்த்துக்கொண் டிருந்தான். வேறே தீபமில்லாததால் கூடத்திற் கப்பால் தாழ்வாரத்தில் வெளிச்சமில்லை. இவன் பார்த்துக்கொண்டேயிருக்கையில் தாழ்வார நிழலில் யாரோ ஒரு ஸ்திரீ வந்து நிற்பதுபோல் தோன்றியது. உற்றுப்பார்த்தான். அம்மாது முகம் வாடி வதங்கி ஒரு பேய்போல் தோன்றினாள். அதிலும் அம்மாது தன்னைச் சாடைகாட்டி யழைப்பதுபோல் ஆனந்தலிங்குக்குத் தோன்றியது. அவன் யோசிப்பதற்குள் ஆள் வரும் சத்தம்கேட்டது.

அம்மாதும் அதை யறிந்து சட்டென்று திரும்பினாள். ஆனந்தலிங் மிக்க துரிதமான சமயயோசனை யுடையவனாதலின், உடனே தன் ஜேபியி

லிருந்த தன் பெயர் தொழில் முதலியவை யச்சடித்த ஒரு சீட்டை யந்த மாதிடம் விசிறியெறிந்தான். அச்சீட்டு அவள் தலைக்குமேல் பறந்து எதிரில் விழுந்தது. அவள் அதைச் சட்டென்றெடுத்துக் கொண்டுபோய் விட்டாள்.

மறுநிமிடம் கறுப்பண்ணன் கூடத்திற்கு வந்து ஆனந்தலிங்கை நோக்கி "எழுந்து வா?" என்றான்.

ஆனந்தலிங் அவன் கூடவே செல்லும்போது இடையில் அவன் கண்களுக்குப் புலப்பட்டவைகளில் அற்பமானவைகளைக்கூட விடாமல் கவனித்தான். கடைசியில் சில அறைகளின் வழியாய்ச் செல்லும்போது அங்கெல்லாம் தீபமில்லை. ஆதலால் தன் கைகளுக்குத் தென்பட்டவைகளாலும் முன்னே செல்லும் கறுப்பண்ணனுடைய காலடிச் சத்தத்தாலும் அந்த அறைகளில் விலையுயர்ந்த சாமான்கள் இருக்கின்றனவென்றும், கீழே உயர்ந்த ஜமக்காளம் விரிக்கப்பட் டிருக்கிறதென்றும் அறிந்து கொண்டான்.

கறுப்பண்ணன் கடைசியில் ஒரு அறையின் வாயிற்படியில் நின்று ஆனந்தலிங்கை நோக்கி, "இப்போது காணப்போகும் காட்சியைக்கண்டு திடுக்கிடமாட்டாயே?" என்றான்.

ஆனந்:—"நான் அத்தகையவை யெத்தனையோ கண்டிருக்கிறேன். விவகாரம் நடக்கட்டும்" என்றான்.

கறுப்பண்ணன் உடனே கதவைத் திறந்து மெதுவாய் உள்ளே சென்றான். ஆனந்தலிங் சற்றுநேரம் வாயிற்படி யருகில் நின்று பார்த்தான். அந்த அறையில் மெழுகுவத்தி தீபங்கள் எரிந்துகொண் டிருந்தன. மலர்களின் சுகந்தம் இரம்மியமாய் வீசிற்று.

அந்த அறை நன்றாய்ச் சுத்தம் செய்யப்பட்டிருந்தது. அறையின் மத்தியில் ஒரு மேஜைமேல் சவப்பெட்டியின் பீடம் ஒன்று வைக்கப்பட்டு இருந்தது. அதில் ஒரு கன்னிகையின் சவம் வைக்கப்பட்டிருந்தது. பக்கத்தில் ஒரு மேஜையின்மேல் தொட்டிகளில் பலவித புஷ்பச்சட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் நறுமணந்தான் கதவைத் திறந்ததே வீசியது.

கறுப்பண்ணன் சவத்தின் தலைப்பக்கம் போய் நின்று ஆனந்தலிங்கை வாவென்றழைத்தான். ஆனந்தலிங் அவ்வாறே சென்று சவத்தின் அருகில் நின்றான். அவன் அதைக்கண்டதே மிக்க வியப்பும் துயரமுமடைந்தான்.

அப்பெண்ணின் உருவம் மிக்க அழகுடையதாயிருந்தது: சவமாயாவது உயிரோடாவது அத்தகைய உருவத்தை யவன் கண்டதேயில்லை. அவன் அதை யுற்று நோக்கிக் கொண்டேயிருக்கையில் பின்னால் ஒரு சத்தம் கேட்டது. அச்சத்தம் கறுப்பண்ணன் தன் துயரத்தை யடக்கமுடியாமல் "அய்யோ! அவள் அழகு யாருக்கிருக்கிறது" என்றதாலுண்டானது.

அந்தச்சத்தம் ஆனந்தஸிங்கின் மனதிற்கு மிக்க சந்தேகமான அபிப்பிராயத்தை யளித்தது. அதாவது கறுப்பண்ணன் தன் துயரத்தை வெளியிட்ட சத்தத்தால் அவன் துயரம் நிஜமானதல்லவென்றும் தன்னை யேமாற்றச் செய்த தந்திரமே யென்றும் அவன் மனதிற்பட்டது.

ஆனந்த்ஸிங் சற்று குனிந்து உற்றுப்பார்த்தான். அவன் மனதில் திடுக்கிடக் கூடிய ஒரு சந்தேக முண்டாகிவிட்டது. அதாவது அச்சவத்தின் கன்னங்களில் இரத்தம் இருப்பதுபோன்ற பிரகாசம் தோன்றியது. மிக்க ஆச்சரியமும் கலவரமும், இவற்றோடு பின்னும் சற்றுநேரம் பார்த்தபோது இன்னொரு சிந்தனையும் உதித்தன.

அதாவது இக்கன்னிகையை யெங்கோ தான் பார்த்திருப்பதுபோல் சந்தேகமுண்டாயிற்று. அவன் மனச்சுபாவம் புகைப்படம் பிடிக்கும் கருவி போன்றது. அதாவது அவன் எதைப் பார்த்தாலும் அவனை யறியாமலே அவன் பார்த்த விஷயங்களனைத்தும் புகைப்படம் பிடித்தது போல் அவன் மனதில் பதிந்துவிட்டிருக்கும். ஆகையால் இப்போது அவன் மனதில் இப்பெண்ணை யெங்கோ பார்த்திருப்பதாய்க் கவனம் வரவே பின்னும் சிந்தித்தான். ஆ! யாவும் விவரமாய்க் கவனத்திற்கு வந்தது. ஒரு பெரிய மாளிகையில் மிக்க ஆடம்பரமான கூட்டத்தில் யாவரும் நடனம் செய்யும் சங்கத்தில் இவளைக் கண்டதாய் மனதிற்கு விளங்கிவிட்டது. உடனே நன்றாய்க்குனிந்து அவள் முகத்தைப் பார்த்தான்.

அச்சமயம் கறுப்பண்ணன் அவன் கன்னத்தில் கைத்துப்பாக்கியை நீட்டிப் பத்திரம் என்றான். ஆனந்தஸிங் உடனே தலை நிமிர்ந்து சட்டென்று திரும்பி கோபத்தோடு "இம்மாதிரி என் கன்னத்தில் காட்டப்பட்ட துப்பாக்கிகள் எத்தனையோ வுண்டு. ஆயினும் நீ யிம்மாதிரி யென்னைப் பயப்படுத்தவேண்டிய காரணமென்ன?" என்று கேட்டான்.

**கறுப்:**—"நான் இப்பெண்ணை யென் உயிரினும் அதிகமாய் நேசிக்கிறேன். ஆகையால் அவளைக் கரத்தால் தொட்டால் சுட்டுவிடுவேன்" என்றான்.

## 2-வது அத்தியாயம்.

அச்சமயம் ஆனந்தஸிங் அவனை யொரே அறையில் பூமியில் விழும்படி செய்ய நினைத்தான். மறுபடி கோபத்தை யடக்கிக்கொண்டு, "அப்படி நினைக்க நீ சுத்த மூடனாயிருக்கவேண்டும். நான் தொடவேண்டிய காரணமொன்றுமேயில்லை. கிடக்கட்டும், இப்போது இறந்த ஆசாமியைக் காட்டினாய். இது சாதாரணமாய் தினம் உலகில் நடக்கிற சம்பவமே. என்னையேன் அழைத்து வந்தாய்? அதைக்கூறு" என்றான்.

**கறுப்பண்ணன்:**—முன்னமே கூறினேனே. இம்மர்மதத்தைக் கண்டுபிடிக்கவென்று.

ஆனந்த·—"சரி. சங்கதியைக் கூறினுயல்லவா? என்ன மர்மம் நடந்திருக்கிறது? இப்பெண் முரட்டுத்தனமாய் கொல்லப்பட்டதாகத் தோன்றவில்லையே." என்றான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரம்

### பஞ்சாங்க அச்சுச்சுதந்தரம்.

துந்துபிஸு ஆவணிமீ ஆனந்தபோதினியின் 73-வது பக்கத்தில் "அச்சுச்சுதந்தரம்" என்ற தலையங்கமிட்டு ஒரு விஷயத்தைப்பற்றி வெளியிட்டிருந்தோம். அதில் நாம் பிரசுரித்த பஞ்சாங்கத்திலிருந்த விஷயங்களை நமது அனுமதியின்றி எடுத்துத் தமது பஞ்சாங்கத்தில் சேர்த்துக் கொண்டதற்காக சூளை சுந்தரவிலாச அச்சுக்கூட முதலாளியான ம-ா-ா-ஸ்ரீ P. T. மாசிலாமணி முதலியார் என்பவருக்கு பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட், ரூபா 20 அபராதம் செலுத்த வேண்டுமென்றும் தவறினால் 3 நாட்கள் வெறுங்காவல் தண்டனை அனுபவிக்க வேண்டுமென்றும் அளித்த தீர்ப்பைப் பிரசுரித்திருந்தோம்.

குற்றவாளி அத்தீர்ப்பின் மேல் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொண்டார். 1923ஸு ஆகஸ்ட்மீ 7வ, ஸ்ரீமான்கள் கிருஷ்ணன், வாலெஸ் என்ற இரண்டு நியாயாதிபதிகளும், கீழ்க்கோர்ட்டில் விதித்த தண்டனை சரியானதே என்று கூறி அப்பீலைத் தள்ளிவிட்டார்கள்.

இன்னொருவர் புத்தியையும் உழைப்பையும் செலவிட்டு எழுதிய விஷயங்களைத் தாங்கள் எழுதியதுபோல பிரசுரித்து அக்கிரம வழியில் பொருள் சம்பாதிக்கும் ஆசாமிகள் இதனால் எச்சரிக்கை யடைந்து நியாயமான வழியில் நடக்க முயல்வார்களென்று நம்புகிறோம்.

பத்திராதிபர்.

### ராஜ குடும்பத்தின் வரும்படி.

பிரிடிஷ் ராஜகுடும்பத்தின் செலவுக்கென்று பார்லிமென்டில் வருஷந்தோறும் ஒரு பெருந்தொகை கொடுக்கப்பட்டு வருகிறது. சக்ரவர்த்திக்கு 4-லக்ஷத்து 10-ஆயிரம் பவுன் கொடுக்கிறார்கள். இதில் ஒன்றரை லக்ஷம் பவுன் சக்ரவர்த்தியின் வீட்டு அதிகாரிகளின் சம்பளத்துக்கும் சுமார் 2-லக்ஷம் வீட்டுச் செலவுக்கும் போகிறது. சக்ரவர்த்தியின் தாயார் அலெக்ஸாண்ட்ரா ராணிக்கு 70,000 பவுன் கொடுக்கப்படுகிறது. கனுட்கோமனுக்கு 25,000 பவுன். வேல்ஸ் இளவரசருக்கு ராஜாங்க வரும்படியிலிருந்து ஒரு தொகையும் கொடுப்பதில்லை. அவருக்குச் சொந்தத்தில் பெரிய பூஸ்திதிகள் உண்டு; அவைகளிலிருந்து வருஷந்தோறும் கிட்டத்தட்ட 2-லக்ஷம் பவுன் கிடைத்து வருகிறது. சக்ரவர்த்தியின் மற்ற குமாரர்களுக்கு வருஷந்தோறும் 10,000 பவுன் கொடுத்து வருகிறார்கள். அவர்களுக்குக் கல்யாணமானால் வருஷந்தோறும் 20,000 பவுன் கொடுத்து வருவார்கள். மேரி ராஜகுமாரிக்கு 21-வயது வரை 6,000 பவுன் கொடுத்து வந்தார்கள்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

உருத்ரோத்காரிஹு புரட்டாசிமீ-கலி 5025-சாலிவாகனம் 1846
பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342
இங்கிலீஷ் 1923ஹு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங் | சப்1-20 | கேட்24-55 | சித்60 | ஷடசீதி புண்ணியகாலம் |
| | | | அ57-5 | | | தூர்வாஷ்டமி |
| 2 | 18 | செவ் | நவ54-3 | மூல23-0 | அ23-0சித் | நந்தநவமி |
| 3 | 19 | புத | தச52-20 | பூரா22-25 | அமி60 | கேஜலக்ஷிமீ விரதம் |
| 4 | 20 | வியா | ஏ51-58 | உத்23-3 | சித்60 | மத்வ, சர்வ ஏகாதசி |
| 5 | 21 | வெ | து52-45 | திரு24-55 | ம24-55சி | கல்கி துவாதசி |
| 6 | 22 | சனி | திர54-48 | அவி28-3 | சித்28-3அ | சனிப்பிரதோஷம் |
| 7 | 23 | ஞா | சது57-53 | சதை32-10 | சித்60 | அனந்த விரதம் |
| 8 | 24 | திங் | ○பௌ60 | பூரட்37-20 | ம37-20சி | உமாமஹேஸ்வர விரதம், பௌர்ணமி |
| 9 | 25 | செவ் | பௌ1-53 | உத்ரட்43-23 | அ43-23சி | மாளயபக்ஷ ஆரம்பம் |
| 10 | 26 | புத | பிர6-53 | ரேவ50-5 | மர60 | அசூன்யசயனவிரதம் |
| 11 | 27 | வியா | துதி11-8 | அசு57-18 | அ57-18சி | விதைவிதைக்க,தான்யம் |
| 12 | 28 | வெ | திரி18-30 | பர60 | சித்60 | [செலவிட |
| 13 | 29 | சனி | சது24-43 | ப✕4-48 | சித்4-48அ | கிருத்திகை |
| 14 | 30 | ஞா | பஞ்30-45 | கிரு12-13 | சித்60 | |
| 15 | 1 | திங் | சஷ்36-18 | ரோ19-15 | அமி60 | |
| 16 | 2 | செவ் | சப்40-38 | மிரு25-15 | சி25-15ம | |
| 17 | 3 | புத | அ43-30 | திரு30-0 | சித்60 | |
| 18 | 4 | வியா | நவ44-38 | புன33-3 | அமி60 | |
| 19 | 5 | வெ | தச44-38 | பூச34-13 | மர60 | |
| 20 | 6 | சனி | ஏகா41-3 | ஆயி33-28 | ம33-28அ | |
| 21 | 7 | ஞா | து36-23 | மக30-50 | ம30-50சி | |
| 22 | 8 | திங் | திர30-8 | பூர26-55 | சித்60 | |
| 23 | 9 | செவ் | ச●22-25 | உத்20-45 | அ20-45சி | சாவ-பிதுரு-மாளய அமாவாசை |
| 24 | 10 | புத | அ13-53 | அஸ்14-10 | ம14-10சி | மழை 6-க்குள் |
| 25 | 11 | வியா | பிர4-45 | சித்6-58 | சித்6-58அ | நவராத்திரி ஆரம்பம் |
| | | | துதி55-38 | சுவா59-43 | | [றுக்க |
| 26 | 12 | வெ | திரி46-45 | விசா52-50 | சித்60 | விதை விதைக்க, கதிர |
| 27 | 13 | சனி | சது38-38 | அனு46-48 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 28 | 14 | ஞா | பஞ்31-30 | கேட்41-53 | ம41-53அ | சஷ்டி, உபாங்க லலிதா கௌரீ விரதம் |
| 29 | 15 | திங் | சஷ்26-0 | மூல38-33 | சி38-33ம | சரஸ்வதி ஆவாகனம் |
| 30 | 16 | செவ் | சப்22-10 | பூரா36-53 | சி36-53அ | யாத்திரை விலக்கல் |

1923ஹு அக்டோபர்மீ

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | 20உ-க-செ<br>23 ,, து-சுக்<br>27 ,, து-சனி | | |
| | | | செ<br>ராகு |
| | | குரு | சூ-பு<br>சு-ச |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 9 } ருத்ரோத்காரிஹூ புரட்டாசிமீ கஉ 1923ஹூ செப்டம்பர்மீ 17உ { பகுதி 3

## கடவுள் வணக்கம்.

குறிக ளோடுகுண மேது மின்றியன
லொழுக நின்றிடு மிரும்பனல்
கூட லின்றியது வாயி ருந்தபடி
கொடிய வாணவ வறைக்குளே
யறிவ தேதுமற வறிவி லாமைமய
மாயி ருக்குமெனை யருளினல்
அளவி லாததனு கரண மாதியை
யளித்த போதனை யறிந்துநான்
பிறிவி லாதவண நின்றி டாதபடி
பலநி றங்கவரு முபலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
ப்ரசாத நல்லருண் மறந்திடும்
சிறிய னேனுமுனை வந்த ணைந்துசுக
மாயி ருப்பதினி யென்றுகாண்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (1)

தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி
யானவையெல் லாந்தாமே யாகுமே—மோனகுரு
சொன்னவொரு சொல்லாற் சுகமா யிருமனமே
யின்ன மயக்கமுனக் கேன். (2)

எனக்கு முனக்குமுற வில்லையெனத் தேர்ந்து
நினைக்கவரி தானவின்ப நிட்டை—தனைக்கொடுத்தே
யாசான் மவுனி யளித்தானெஞ் சேயுனையோர்
காசா மதியேனுன் காண். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. அனல் ஒழுக நின்றிடும் இரும்பு அனல் கூடலின்றி அதுவாய் இருந்தபடி=நெருப்போடு சேர்ந்து பழுக்கக்காய்ந்த இரும்பு அந்த நெருப்பேயாகாமலும், நெருப்பிற்கன்னியமாகாமலும், தன்குணத்தை மட்டும் இழந்து இரும்பாகவே யிருத்தல்போல்.

ஆணவ அறைக்குளே=ஆணவமாகிய வீட்டிற்குள்ளே.

அறிவதேதுமற=அறியுந்தன்மை சற்றுமின்றி.

அறிவிலாமை மயமாய்=அஞ்ஞானமயமாய்.

[மேலே கூறப்பட்ட இரும்பு திருட்டாந்தம்போல் ஆன்மா ஆணவ மலத்தோடு சம்பந்தப்பட்டு, அந்த ஆணவமேயாகாமலும், ஆணவத்திற் கன்னியமாகாமலும், தன் குணமிழந்து அஞ்ஞானவிருளில் மூழ்கிக்கிடக்கும். அவ்வாறு இருக்கும் ஆன்மாவிற்குப் பகவான் கருணையோடு தநுகரணாதிகளை யளித்தார்.]

அளித்தபோது=(மேற்கண்டபடி) தநுகரணாதிகளைக் கொடுத்தபோது.

உனையறிந்து...நின்றிடாதபடி=உன்னையறிந்து உன்னிற் கலந்து பிரிவற்றுநிற்காமல்.

பல நிறம் கவரும் உபலமாய்=தன் சுபாவ நிலைமையை மறைத்து, தன்னோடு சம்பந்தப்பட்ட பல நிறங்களைக் கவர்ந்து அவைபோலக் காட்டும் பளிங்குக்கல்லை யொத்து.

இப்பளிங்கைப்போல் ஆன்மா கரணாதிகளோடு சம்பந்தப்பட்டபோது தன்னை மறந்து அவற்றின் மயமாய் விடுகின்றதாதலின் "பெரிய மாயையிலழுந்தி" யென்றார்.

"ப்ரசாத நல்லருளை மறந்திடும்"="பகவான் நமது நன்மைக்காக கருணையோடு இத்தநுகரணாதிகளை யளித்தார் என்றதை மறந்து" என்றபடி.

"பகவான் நாம் ஞானமடைவதற்குச் சாதனங்களாகத் தநுகரணாதிகளை யளித்திருப்பதால் நாம் அவற்றால் மயங்கி அவற்றின் வய்மாகாமல் அவற்றை யன்னியமாக அறிந்து, அவற்றை உதவியாய்க்கொண்டு பரமான்மாவையறிந்து அவரில் இரண்டறக் கலந்து அந்த நிலையில் நிற்கவேண்டும்" என்பது இதன் கருத்தாம்.

2. தாமேயாகும்=தாமாகவே சித்திக்கும்.

ஒரு சொல்=குரு உபதேசிக்கும் மகாவாக்கிய உபதேசமாகிய ஒரு மொழி.

குரு உபதேசித்த ஒரு மொழியில் மயக்கங்கொள்ளாது அதையே மனவடக்கத்தோடு அனுசந்தானம் செய்துவந்தால் இம்மை மறுமைப் பயன் யாவும் சித்திக்கும் என்பது கருத்து.

அந்த ஒரு மொழியைப்பற்றி யிம்மகானே "ஒரு மொழியே பல மொழிக்குமிடங்கொடுக்கும்......குருமொழியே மலையிலக்கு மற்ற மொழி

யெல்லாம் கோடின்றிவற்றுடல் கொள்வதொக்குங் கண்டாய்..." என்ற பாசுரத்தில் அருளியுள்ளது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

3. "நிட்டை சாதித்தல் மனம் தனக்கு 'அன்னியமான ஜடமென்று கண்டு அதை யிலயிக்கச்செய்து தன்னை யறிந்து தலைவனிற் கலப்ப தற்கேயாம்" என்பது இதன் கருத்து.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஸூ புரட்டாசிமீ கஉ

## கல்வியால் தீங்கு.

இத்தலையங்கத்தைக் கண்டதே நமது நண்பர்கள் முதலில் மிக்க வியப்படைவார்கள். சிலர் இதென்ன நேர்மாறான விஷய மாயிருக்கிறதென்று கருதுவார்கள். ஏனெனில் சாதாரணமாய்க் 'கல்விச்செல்வமே செல்வத்துளெல்லாந் தலை' யென்று எல்லா நூல்களும் கூறுகின்றன. ஆன்றோர்கள் கல்வியே கண் என்று அதை யெவ்வளவோ சிறப்பித்துக் கூறியிருக்கின்றனர். கல்வி அத்தகைய பெருமையுடைத்தாதலின் "கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு" என்றும் "மன்னனிற் கற்றோன் சிறப் புடையன்" என்றும் கூறப்பட்டிருக்கிறது.

அனுபவத்தில் கல்வி இருவகைத்தா யிருக்கிறது. ஒன்று இலக்கிய இலக்கணக் கல்வியாகிய பாஷைக்கல்வி—மற்றொன்று ஆன்மார்த்தக்கல்வி-இவற்றில் முன்னர்க் கூறப்பட்ட சாதாரணக் கல்வி ஒருவனது இயற்கைக் குணத்தை யதிகப்படுத்தமட்டும் வல் லது. அது கத்தியைக் கூர்மைப்படுத்துவதுபோன்றது. அக்கத்தி யால் நல்ல காரியமும் செய்யலாம், கெட்ட காரியமும் செய்ய லாம். பொருட் செல்வமும் இப்படியே.

இது ஒருபக்கமிருக்க, ஒருவன் எக்காலத்தில் எத்தகைய கல்வி கற்கின்றானோ அதற்குத் தக்க பலனையே யடைவான். கமத் தொழில் செய்யவேண்டிய சிறுவன் உலக சரித்திரத்தை வாசித் தால் என்னபயன்? அனாவசியமானதும், பின்னால் கற்போனுக்கு

அவசியமான பலனை யளிக்கக்கூடாததுமான கல்வியால் ஒருவன் பயனடைவதற்குப் பதிலாகத் தீமையே யடைவான்.

ஒரு தனி மனிதனுக்கு எப்படியோ அப்படியே ஒரு ஜாதியாருக்கும் ஒரு தேசத்திற்குமாகும். இப்போது நம் நாடு அடைந்திருக்கும் பரிதாபமான ஏழ்மை நிலைமைக்குக் காரணம் இப்போது நாம் அனுசரிக்கும் கல்விமுறைமையேயாகும். கல்வியாலேயே ஒரு தேசம் மேலான நிலைமையை யடைகிறது என்ற உண்மை ஒருவராலும் மறுக்கொணாதது. அப்படியிருக்க அக் கல்வி தகுதியற்ற கல்வியாயின் அதைக் கையாடும் தேசம் க்ஷீணித்துப்போகத் தடையேயில்லை. மேலுக்குப் பளபளவென்று தோன்றிக்கொண்டு உள்ளே யழுகிக்கொண்டே போகும் ஒரு கனியைப்போல் ஆய்விடும்.

ஒருவனுக்கு அல்லது ஒரு ஜாதியாருக்கு உணவு உடை செல்வம் இவற்றிற்குக் குறைவின்றி, தெய்வபக்தியும் ஆன்மார்த்த விசாரணையும் இருந்தால், அதற்குமேல் ஒரு வண்டி ஜடசாத்திரங்களும், வெளிப்பகட்டாகத் தோன்றும் வீண் நாகரீகப் படாடோபங்களும் என்னத்திற்கு வேண்டும்? அவற்றால் மனம் வெளித் தளுக்குகளில் நாட்டங்கொண்டு, மயங்கச்செய்து முன் இருந்த 'போதும்' என்ற திருப்தியை யழித்து, வீணான பல ஆவல்களையும், கிடைக்காததில் ஏக்கத்தையும், பொறாமையையும், போட்டியையும் உண்டாக்கிக் கடைசியில் மிக்க துன்பத்தையே விளைக்கும்.

### முற்கால நிலைமை.

முற்காலத்தில் நம் நாட்டில் கல்வியென்றால் ஈசுரபக்தியோடு பொருந்திய கல்வியாகவே யிருந்தது. கல்வியைக் கடவுளின் அருளாகிய ஒரு சத்தியாக மதித்துப் போற்றுவதும் உபாசிப்பதும் நமது கொள்கை. நமது கல்வி மத சம்பந்தமானதாகவே யிருந்தது. அதனால் நம் நாட்டில் இருந்த வித்வான்கள் ஈசுவர அருள் பெற்றவர்களாய் இருந்தார்கள். அவர்கள் வாழ்த்துவதும் வைவதும் பலிக்கக்கூடியவைகளா யிருந்தன. அதனாலேயே நாயனார்,

“ வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை ”—என்றனர்.

வேதத்தின் முதலெழுத்தாகிய பிரணவமே முதலில் கற்பிக்கப்

படுவது நம் நாட்டு முறைமை. "ஓம் நமசிவாயசித்தன்னம:" என்பதே முதலில் போதிக்கப்படுவது. கற்பிக்கப்படும் நூல்களும் நீதி, நல்லொழுக்கம், ஈசுர பக்தி யிவைகளைப் போதிக்கும் நூல்களே. அவற்றைக் கற்கும் மாணவர்களுக்கு அச்சமயம் அவற்றின் பூரணப்பொருளும் அருமையும் விளங்காவிடினும் அவற்றைப் பெரும்பாலும் மனப்பாடம் செய்திருப்பதால், பிற்காலத்தில் அவை பயனளிக்கின்றன. அக்காலத்தில் மாணவர்களுக்குக் குருபக்தியிருந்தது. குருபக்தி கடவுள்பக்தி போன்றது. குருபக்தி மனத்திலுள்ள மாசை நீக்கி நற்புத்தி நன்னடக்கை முதலியவற்றை யளிக்கவல்லது.

நம் நாடோ நீர்வளம் நிலவளங்களில் குறைவில்லாதது. எந்தப் பொருளுக்கும் இன்னொரு நாட்டை யெதிர்பாராவண்ணம் நமது வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் அளிக்கக்கூடியது. நம் நாட்டிற்கு வேண்டிய அளவிற்கு அதிகமாகவே யாவும் உற்பத்தியானதால் எல்லா வஸ்துக்களும் மலிவாயிருந்தன. அன்னிய நாடுகளுக்கும் அனுப்பப்பட்டு வந்தன. பிற்காலத்தில் மகம்மதியர் வந்து அரசாண்ட காலத்தும் அந்த நிலை மாறவில்லை. அக்காலத்தில் பணம் அதிகமாக வேண்டி யிருக்கவில்லை.

கைத்தொழிலோ—எல்லாவகைக் கைத்தொழில்களும் உயர்ந்த நிலைமையிலிருந்து வந்தன. நெசவு சிற்பம் முதலிய வேலைகள் உலகைப் பிரமிக்கச் செய்யத்தக்க நிலைமையிலிருந்தன. மேல்நாட்டார் மிக்க அற்புதமான காரியங்களைச் செய்யும் இக்காலத்திலும், அவர்களையே பிரமிக்கச்செய்யும் பூர்வ சிற்ப வேலைகள் நம் நாட்டில் ஏராளமாக விருக்கின்றன. நம்முன்னோர்கள் தொழில்முறைமையில் ஜாதிப்பிரிவினை யேற்படுத்தி யிருந்தார்கள். அவர்கள் மிக்க நன்மையை யெதிர்பார்த்தே அந்தப் பிரிவினையை யேற்படுத்தினர்கள். அதனுல் பலவிதமான கைத்தொழில்களும் எப்போதும் நடந்துவந்ததோடு பரஸ்பர உதவியால் ஒற்றுமையான கூட்டுறவும் நிலைத்திருந்தது. வரவரப் பிற்காலத்தில் நமது அறியாமையால் நாம் சரியான கல்விப்பயிற்சியை விட்டு, அன்னிய நாகரீக ஆசாரங்களைக் கைப்பற்றத் தொடங்கியதால் முன்னோர் நன்மை பயக்கும்வண்ணம் செய்த ஏற்பாடு தீமை பயக்கத்தக்க நிலைமைக்கு வருமாறு செய்துகொண்டோம்.

முதல் முதல் நம் நாட்டார்க்கு ஆங்கிலபாஷை கற்பிக்கப்பட்டபோது துரைத்தனப் பாடசாலைகளே தாபிக்கப்பட்டன. பெரும்பாலும் இலவசமாகவே கல்வி கற்பிக்கப்பட்டது. பிறகும் நெடுநாள்வரை கொஞ்சம் ஏழையாயுள்ளவர்கள் மக்களுக்கெல்லாம் இலவசமாகவும் அரைச்சம்பளத்திற்கும் கல்வி கற்பிக்கப்பட்டு வந்தது. நம் நாட்டார்க்கு ஆங்கிலம் கற்பிக்கப்பட்டதற்குக் காரணம் துரைத்தன காரியங்கள் நடைபெறுவதற்காகவே.

அன்னியபாஷை கற்கத் தொடங்கியதுமுதல் அந்த ஆசாரங்களின் வாசனையும் நம்மவர்மேல் தாக்கத் தொடங்கியது. மேல்நாட்டு நாகரீக மயக்கம் மெல்ல மெல்ல இவர்களைப்பற்றத் தொடங்கியது. கிழக்கிந்திய கம்பெனியார் காலம் முதல் நெசவு முதலிய நம் நாட்டுக் கைத்தொழில்கள் அன்னியரால் அடக்கப்பட்டும் நம்மவரது அசாக்கிரதையால் கைவிடப்பட்டும் அழியத் தொடங்கின. இங்கு உற்பத்தியாகும் மூலப்பொருள்களனைத்தும் ஏராளமாய் மேல்நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. அதனால் அங்குள்ளவர்களுக்கு நல்ல தொழில் கிடைக்கத்தொடங்கியது.

இதனோடு அங்கு எந்திரங்களால் தொழில் செய்வது அதிகரித்தது. இங்கிருந்து செல்லும் மூலப்பொருள்கள் அவர்களுடைய கைத்தொழில்களையும், வர்த்தகத்தையும், அவற்றின் செல்வத்தையும் பெருகச்செய்தன. இதனால் எந்திரங்களின் உற்பத்தியால் அந்த நாட்டாருக்கு நன்மையே பெருகியது. எந்திரத்தால் வேலையிழந்தவர்கள், தொழிற்சாலைகளில் நல்ல ஊதியம் பெற்றும் வர்த்தகம் செய்தும் முன் நிலைமையிலும் மேலோங்கத் தொடங்கினார்கள். சிலர் விவசாயத் தொழிலில் மனத்தைச் செலுத்தி அதில் நல்ல இலாபம் பெறத் தொடங்கினார்கள்.

நம் நாட்டிலோ, மேல்நாட்டு எந்திரங்களில் செய்யப்பட்ட துணி முதலியவைகள் இங்குக் கொண்டுவரப்பட்டுக் குறைந்த விலைக்கு விற்கப்படத் தொடங்கியதால், இங்கு வீடுகளில் செய்துவந்த நூல் நூற்றல், நெசவு, சாயம்போடுதல் முதலிய பலவிதக் கைத்தொழில்களும் அழியத் தொடங்கின. மேல்நாட்டுக் கல்வி யேறயேற நம்மவர்கள் ஒழுங்காய் மேல் பகட்டான உடைகளை யணிந்து துரைத்தனத்தாரிடம் சேவகம் செய்வதே மிக்க கௌரவமான தொழில் என்ற பாடத்தைக் கற்றுக்கொண்டார்கள். மற்ற விவசாயம், வர்த்தகம், கைத்தொழில் முதலிய கௌரவத்தொழில்

களனைத்தும் இழிவான தொழில்கள் என்று மதிக்கத் தொடங்கி விட்டார்கள்.

பரம்பரையாய் விவசாயம், கைத்தொழில் செய்துகொண்டிருந்தவர்களுடைய புத்திரர்கள் ஆங்கிலப் பாடசாலைகளுக்கு அனுப்பப்படத் தொடங்கினார்கள். கடவுள் சிந்தனை இல்லாக் கல்வி அவர்கள் கற்க நேரிட்டது. அதனோடு அவர்கள் பிற்காலத்தில் செய்யவேண்டிய தொழில் அவர்களுக்குக் கற்பிக்கப்படுவதில்லை. அத்தொழில்கள்தான் கௌரவத் தொழில்கள் என்ற உணர்ச்சியும் அவர்களுக்கு ஊட்டப்படுவதில்லை. சரியான தாய்ப் பாஷைக் கல்வியாவது மதக் கல்வியாவது போதிக்கப்படுவதில்லை. அவர்கள் வாசிக்கும் புத்தகங்களில் அவர்கள் மேல்நாட்டு ஆசாரம் ஒழுக்கம் நடையுடை பாவனைகளைப்பற்றியே வாசிக்கிறார்கள். நம் முன்னோர் நூல்களில் சிலசில பொருக்கிப் போதிக்கப்படினும் கடவுள் சம்பந்தம் மதசம்பந்தமான பாகங்கள் நீக்கப்படுகின்றன.

இத்தகைய கல்விபயின்றவர்கள் பாடசாலையை விட்டவுடன் தங்கள் பாட்டன் பூட்டன் செய்த தொழில் அவர்களுக்கு இழிவானதாய்த் தெரிகிறது. அத்தொழிலைச் செய்யும் தங்கள் பெற்றோரையும், சுற்றத்தாரையும் இழிதொழில் செய்பவர்களென்று அலட்சியமாய் நடத்தத் தொடங்குகிறார்கள். தாங்கள் கல்வி கற்று நாகரீகமடைந்து மேல் அந்தஸ்தில் ஏறிவிட்டதாக எண்ணி விடுகிறார்கள். விவசாயியின் மகன் ஏரைத் தீண்டவும், கழனியில் கால்வைக்கவுமே அசங்கியப்படுகிறான். பெற்றோர் கஷ்டப்பட்டு உழுது பயிர் செய்துகொண்டிருந்தால் இவன் துரைத்தனத்தாரிடம் 15 ரூபாய் சம்பளம் கிடைத்தால் போதுமென்று நகரத்தில் சென்று வேலையிலமர்ந்துவிடுகிறான்.

போதுமான கல்வியில்லாதார் நகரங்களில் மேல்நாட்டார் தாபித்திருக்கும் எந்திரத் தொழிற்சாலைகளில் கூலிவேலை செய்யச் செல்கிறார்கள். இக்காரணங்களால் கிராமங்களில் கல்வியிலும் சாத்திர ஆராய்ச்சியிலும் பயிற்சியடைந்தோர் கிடையாமற் போனதோடு, சரியாய்ப் பயிரிடவும் ஆட்களின்றி ஏராளமான பூமி தரிசாய்க்கிடக்க நேர்வதோடு விளைவும் வரவரக் குறைந்து கொண்டே போகிறது. நகரங்களிலோ ஜனநெருக்கம் அதிக

மாகிச் சுகாதாரங் கெட்டுக் கனவிலுங் கண்டிராத வியாதிகள் உற்பத்தியாகத் தொடங்கிவிட்டன.

உயர்தரக் கல்வி கற்றோரோ தாங்கள் செய்யும் தொழிலையே கௌரவமானதெனக் கருதி தொழில் செய்து பணம் சம்பாதிப்பதும் உலகபோகங்களை யனுபவிப்பதும் மட்டுமே தாங்கள் உலகில் செய்யவேண்டிய காரியம் என்று கருதுகிறார்களேயன்றித் தாய் நாட்டைப்பற்றியாவது தாய்ப்பாஷையைப்பற்றியாவது எள்ளளவும் சிந்திப்பதேயில்லை. பெற்றோர்களே தங்கள் பிள்ளைகள் "நாலு கோணை யெழுத்து கற்றுக்கொண்டால்தான் இக்காலத்தில் ஜீவனம் செய்யலாம்" என்று கருதுகிறார்கள். வயிற்றுக்குச் சரியாய் உணவு கிடைப்பது கஷ்டமாயினும், தீபப் பிரகாசத்தைக்கண்டு மயங்கி அதில் வீழ்ந்து மடியும் விட்டில்போல், மேல் தளுக்கையே கௌரவமென மதித்து அதில் மகிழ்ச்சி யடைகிறார்கள். நம் நாட்டில் செய்யப்பட்ட பொருள்களை யிழிவாகக்கருதி, மேல்தளுக்கில் மயங்கி மேல்நாட்டுச் சாமான்களையே யதிக விலை கொடுத்து வாங்கத் தொடங்கிவிட்டார்கள். இதனால் நம் நாட்டில் பொருள் வருவாய் குறைவதோடு, போதுமான வருமானமில்லாதிருந்தாலும் வீண்செலவு அதிகமாகிவிட்டது. இவற்றால் பல விதத் துன்பங்களே நமக்குப் பலனுகக் கிடைப்பதன்றி நன்மை கிஞ்சித்துமில்லை. நம்மவர்களுக்கு இவற்றையெல்லாம் சிந்தித்துப் பார்த்து நல்வழித் திருப்ப அவகாசமில்லையோ, அல்லது நம் நாட்டுக்கு இன்னம் நற்காலம் வரவில்லையோ அதனைக் கடவுளே யறிய வேண்டும்.

நம் க்ஷேமத்திற்கு வேண்டிய கல்வியைக் கற்காதது நமது குற்றமேயாகும். மேல்நாட்டார் எம்மாதிரி நடந்து முன்னேற்றமடைந்தார்கள் என்ற வழியை யறிந்து அவ் வழியில் செல்ல நம்மவர்கள் இன்னம் முயலவில்லை. பகவான் அறிவைக் கொடுத்திருக்கிறார். அதைச் சரியான வழியில் உபயோகிக்காதது நமது குற்றமன்றோ. இனியேனும் பெற்றோர் தம் மக்களுக்கு இக்காலத்திற்குத் தகுதியும் அவசியமுமான கல்வியைக் கற்பிப்பதில் சிரத்தை யெடுத்துக்கொண்டாலன்றி நாம் க்ஷேமப்படுவது அரிதேயாகும். விரிவஞ்சி இதனோடு நிறுத்துகின்றோம். ஆண்டவன் அருள்புரிவாராக.

ஓம் தத்ஸத்.

## தாம்பூலத்தின் குணம்.

[இது ஸ்ரீமான் ராவ்ஸாஹேப் R. கிருஷ்ணராவ் போன்ஸ்லே அவர்கள் (Asstt. Secretary to the Commissioner for Govt. Examinations, Madras.) எழுதியது.]

சென்னையில் கவர்னராகவிருந்த (H. E. the Right Honourable M. E.) கிராண்ட் டப், F. R. S. அவர்கள் ஒரு சமயத்தில் பின்வருமாறு கூறியுள்ளார் :—

இந்தியா கிழக்கும் மேற்குமாகிய இரண்டு பெரிய நாகரீகங்கள் சந்திக்கும் தேசம். புத்திசாலியாகிய எவனும் பூர்வீக நாகரீகத்தில் உள்ள நல்லவற்றைப் பாதுகாக்கவேண்டும், புதிய நாகரீகத்திலுள்ள நல்லவற்றையும் பின்பற்றவேண்டும். பிப்ரவரிமீ வெளியான தேகசுகம் (Health) என்ற சஞ்சிகையில் தாம்பூலத்தைப் பற்றியும், மார்ச்சுமீ சஞ்சிகையில் எண்ணெய் ஸ்நானத்தைப்பற்றியும் பத்திரிகாசிரியர் வரைந்துள்ள குறிப்புகளைக் கண்டபின், தேசத்தின் சீதோஷ்ண நிலைமையைக் கவனிக்காமலே தாம்பூலம், எண்ணெய் ஸ்நானம் முதலிய கீழ்நாட்டு வழக்கங்களை அடியோடு தள்ளவேண்டும் என்று கருதுகிறவர்களுக்கு, இச்சஞ்சிகைக் கீழ்நாட்டு ஆசாரங்களின் நன்மையை விளக்கிக்காட்டும் ஓர் மத்தியஸ்தன் போல் வேலை செய்யத் தொடங்கியிருக்கிறதென்று கூறத் துணிவேன். தாம்பூலம் ஓர் புராதனமான ஏற்பாடு. தாம்பூலமின்றி இந்துக்களுக்குள் கலியாணம் நடவாது. எல்லா சுபகாரியங்களுக்கும் தாம்பூலம் ஓர் அவசியமான உபகரணம். மேல்நாட்டாருக்குள் ஒருவர் சுகத்திற்காகச் சாராயம் அருந்தும் வழக்கம் இருப்பதற்குப் பதிலாகக் கீழ்நாட்டில் தாம்பூலம் இருக்கிறது. சுமார் இருபது வருடங்களுக்கு முன் லெப்டினெண்ட் கர்னல் W. B. ப்ரென்னிங் I. M. S. C. I. E. (சைனியத்திலுள்ள டாக்டர்) தினம் மும்முறை-ஒவ்வொரு போஜனத்தின் பின்னும்-தாம்பூலம் அணியும்படி எனக்குக் கூறினர். அன்று முதல் நான் யாரேனும் தாம்பூல மணிந்திருப்பதைக் கண்டால் குரும்புத்தனமாகச் சிறிப்பதை நிறுத்திக்கொண்டேன் என்பதை நானே ஒப்புக்கொள்ளுகிறேன். அவர் கூறிய புத்தியை ஒரு மத சம்பந்தமான கடமையாய்க் கருதி யதன்படி நடந்துவந்தேன். "அது ஜீரணசக்தியையளிக்கும் நல்ல வஸ்து" என்று அவர் கூறிய மொழிகளை நான் நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறேன். எப்படியாயினும் என்விஷயத்தில் அது ஜீரணசக்தியை யுண்டாக்கும் வஸ்துவாகவே யிருந்தது, இருக்கிறது, இனியுமிருக்கும். தெலுங்கு பாஷையில் சிறந்த கவிவாணரும் ஞானியுமாகிய வேமன்ன என்பவர் தமது ஒரு கவியில் தாம்பூலம் (பாக்கு, வெற்றிலை, சுண்ணும்பு) பற்கள் கெடாதபடி காக்கும் ஓர் ஔடதம் என்றும், அதையணியாதிருப்பது மிக்க அசுத்தம் என்றும் கூறியிருக்கிறார். (C. P. ப்ரௌன், I. C. S. என்பவரின் வேமன்ன சதகமொழிபெயர்ப்பு) நான் அனுபவிகளின் மேற்கோள்களைக் காட்டுவதில் விருப்பமுடையவன்.

மும்முறை தாம்பூலம் அருந்தவேண்டுமென்பதைப்பற்றி அனுபவமாயறிந்தவர்களில் நான் ஒருவன்—'ஆல்பருனி' என்பவர் இந்தியாவைப்பற்றி வரைந்துள்ள நூலில் "ஹிந்துக்களுடைய நாடு உஷ்ணமானது. தேகத்தின் உள்ளவயவங்கள் குளிர்ச்சியாயிருக்கின்றன. இயற்கையாக உண்டாகும் உஷ்ணம் அவர்களில் பலஹீனமடைந்திருக்கிறபடியால் ஜீரணசக்தி பலஹீனப்பட்டிருக்கிறது. அதற்குப் பலனுண்டாக்க அவர்கள் போசனத்திற்குப்பின் வெற்றிலை பாக்கை மென்று தின்னவேண்டும். காரமான வெற்றிலை தேகத்தின் சூட்டை யதிகமாக்குகிறது. வெற்றிலையின்மேல் தடவியிருக்கும் சுண்ணாம்பு, ஈரமாயுள்ளவற்றை யெல்லாம் உலர்த்திவிடுகிறது. பாக்கு பற்களுக்கும், பல்லீருக்கும், தீனிப்பைக்கும் துவர்ப்பை யுண்டாக்குகிறது.

ஸ்ரீமான் ஸர் பகவத்ஸிங்ஜீ (H. H. Sir Bhagavat Singjee, N. D. F. R. C. P. E., Thakore Saheb of Gondol) கொண்டால் தாகூர் ஸாஹேப் அவர்கள் எழுதியுள்ள ஆரிய வைத்தியசாஸ்திர சரித்திரத்தில் பின்வருமாறு கூறுகிறார் :—

"போஜனத்திற்குப் பின் (Aloe-smoking அல்லது) ஜாதிக்காய், ஏலம், இலவங்கம் முதலிய வாசனைத் திரவியங்களோடு தாம்பூலம் தரிப்பது நலம். ஏனெனில், போஜனத்திற்குப்பின் அதிகமாகும் கபத்தை அது அகற்றும் சக்தியுடையது. தாம்பூலம் துவர்ப்பையளிக்கும், உற்சாகத்தைத் தரும், பரிமளத்தை யளிக்கும், வாயுவைக் கண்டிக்கும், சம்போக சக்தியை யளிக்கும். தாம்பூலம் தேகத்தில் வாயுவையும் ஆயாசத்தையும் குறைத்து இரத்தத்தையும் சுக்கிலத்தையும் விர்த்திசெய்கிறது. அது கபத்தைக் கண்டிக்கும் ஓர் நல்ல மருந்தாகும். அளவின்படி வெற்றிலையோடு சேர்க்கப்படும் வஸ்துக்கள் காசுக்கட்டி, சுண்ணாம்பு, பாக்கு, இலவங்கம், இலவங்கப்பட்டை, ஜாதிக்காய், ஏலக்காய் முதலிய வாசனைத் திரவியங்களாம்—மற்ற வேளைகளைக் காட்டிலும் காலையில் அணியும் தாம்பூலத்தில் மற்ற எல்லாவற்றைக்காட்டிலும் பாக்கு கொஞ்சம் அதிகமாக இருக்கலாம். நடுப்பகலில் காசுக்கட்டி கொஞ்சம் அதிகமாகவும், இரவில் சுண்ணாம்பு சொல்ப அதிகமாகவும் சேர்த்துக்கொள்ளவேண்டும். இதனால் சுவாசத்திலுள்ள துர்க்கந்தம் நீங்கிப் பரிமளமுண்டாவதோடு கண்டத்தொனி விர்த்தியடையும். பல் வியாதி, கண்வியாதி புடையோர்க்கும், ஔஷதம் புசிப்போர்க்கும், போதையிலிருப்போர்க்கும் தாம்பூலம் நல்லதல்ல. பதார்த்தகுண சிந்தாமணி என்ற நூலில் தாம்பூலத்தினால் உண்டாகும் நன்மைகளும், அதனால் தீரும் வியாதிகளும் கூறப்பட்டிருக்கின்றன. இதற்குமட்டும் 16 கவிகளிருக்கின்றன. அவற்றிற் கூறப்பட்டிருக்கிறதாவது :—

"இலங்கைப் பாக்குகள் நல்ல குணமுடையவை. முதலில் கொஞ்சம் வெற்றிலையை வாயில் போட்டு மெல்லவேண்டுமேயன்றி, சாதாரண

மாய் யாவரும் போட்டுக்கொள்வதுபோல் பாக்கை முதலில் போட்டுக் கொள்ளலாகாது. வெற்றிலையிலுள்ள காம்பு நரம்புகள் நடுத்தண்டு முதலியவற்றை நீக்கிவிடவேண்டும். தாம்பூலத்தை மென்றபின் முதல்வரும் உமிழ்நீரும் இரண்டாம்முறை வரும் உமிழ்நீரும் விஷமாதலின் அவற்றை யுமிழ்ந்துவிடவேண்டும். காலைத்தாம்பூலத்தில் பாக்கைக் கொஞ்சம் அதிகமாகச் சேர்த்துக்கொண்டால் தாராளமாய் மலசுத்தியாகும். மத்தியானத்தில் சுண்ணாம்பு சொல்பம் அதிகமாகச் சேர்த்துக்கொண்டால் தீபன சக்தியையுண்டாக்கும்; இரவில் வெற்றிலையைக் கொஞ்சம் அதிகமாகச் சேர்த்துக்கொண்டால் சுவாசத்திற்கு நறுமணத்தை யளிக்கும்."

விரிவஞ்சி இந்த வியாசத்தில் எண்ணெய் ஸ்நானத்தைப்பற்றி வரைய நான் விரும்பவில்லை. ஆனால் ஹெல்த் (Health) என்ற சஞ்சிகையில் வெளியாகி யிருப்பதை இங்கு கூறுகிறேன். "இந்தியாவைப்போன்ற உஷ்ணதேசத்தில் வாரத்திற் கொருமுறையேனும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு ஸ்நானம் செய்யவேண்டுவது அத்தியாவசியமாகும். மகாமேதாவியாகிய ஔவை பிராட்டியார் "சனிநீ ராடு" என்று கூறினார். தென்னிந்தியாவில் வாரம் இருமுறை, ஆடவர் புதன், சனியும், ஸ்திரீகள் செவ்வாய், வெள்ளியிலும், எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்வது வழக்கம்."

---

குறிப்பு:—இதை வாசிப்போர் வாசித்ததும் மறந்துவிடாமல் இதில் கூறியுள்ள விஷயங்களைக் கவனத்தில் வைத்து அவற்றின்படி நடப்பார்களாயின் நற்பயனடைவார்கள். மூடத்தனமாய் நம்முன்னோர் ஆசார வழக்கங்களை யெல்லாம் பழிக்கும் புத்திசாலிகள் இதைக் கவனிப்பார்களாக.

பத்திரிகாசிரியர்.



## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(57-ம் பக்கத் தொடர்ச்சி.)

(29) துறத்த லாற்றுறு ஞானமாக் கடுங்கணைதொடர
அறத்த லாதுசெல் லாதுறல் லறிவுவக் தணுகப்
பிறத்த லாற்றுறு பேதமை பிணிப்புறத் தம்மை
மறத்த லாற்றுறு மாயையின் மாய்ந்ததம் மாயம்.

(இரா-வதை-124.)

இராமராவண யுத்தத்தில் இராவணன் மாயாஸ்திரமொன்றை யேவ, அது, சக்ரவர்த்தி திருக்குமாரனெய்த ஞானாஸ்திரத்தாலழிந்தது, என்பதைக் கூறுமிச் செய்யுளின் பொருளாவது: "நன்னெறியினின்று, பகவத் பக்திமேலீட்டாற் பரிசுத்தமடைந்த விடத்துத், தன்னையறிதலாகிய நல்லறிவு (சொரூபஞானம்) தோன்றியவளவில், பிறவிக்குக் காரணமாகிய அஞ்ஞானத்தாற் பிணிக்கப்பட்டுச் சொரூபஞானத்தை யறியாவண்ணம் மறைத்துக்கொண்டிருக்கும் மாயையானது எங்ஙனமொழியுமோ அங்ஙனமொழிந்தது இராவணனாலேவப்பட்ட மாயவாளி." (எ-று.)

துன்பமே வடிவாகவுடைய பிறவிக்கேது அறியாமை. அது மெய்யை மெய்யென்றும் பொய்யைப் பொய்யென்று மறியாது, மெய்யைப் பொய் யென்றும் பொய்யை மெய்யென்றும் மூரணுக்கருதலாகிய விபரீத ஞான மாம். "பொருளல்ல வற்றைப் பொருளென்றுணரும், மருளாணும் மாணுப் பிறப்பு." என்றூர் பொய்யாமொழியாரும்.

பாரதி பூதம் நீ யல்லை-உன்னிப்
பாரிந்தி ரியங் கரணம்நீ யல்லை
ஆரா யுணர்வு நீயென்றான்—ஐயன்
அன்பா யுரைத்தசொல் லானந்தந் தோழீ.

(சங்கர சங்கர சம்போ.)

என, ஞானச் செல்வராகிய தாயுமான சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளி யாங்கு, "மாயாகாரியமாகிய இந்திரியங்கள் கரணங்கள் வாயுக்கள் என் னும் தத்துவங்களனைத்தையும் தானல்லவென்று நியதிகழித்து, இவற்றை யாராய்ந்தறியு மதே தனதெதார்த்த சொரூபமென்று அபரோக்ஷமாயறி தலே மெய்ஞ்ஞானமாகும்." "தன்னையறிவதே அறிவாம், அஃதன்றிப் பின்னையறிவது பேயறிவாமே" என்றூர் ஆன்றோர்.

திருக்குறள் மெய்யுணர்த லென்னு மதிகாரத்தில், "எப்பொரு ளெத் தன்மைத்தாயினு மப்பொருள்—மெய்ப்பொருள் காண் பதறிவு," என்று நாயனுரும், அதனுரையில், "சராசரமாகிய பொருள்களிலெல்லாம் உலகத் தார் கற்பித்துக்கொண்டு வழங்குகிற கற்பனைகளைக் கழித்து, நின்ற வுண் மையைக் காண்பதே மெய்யுணர்வு; அதாவது, அரசன் சேரமான் என்ற விடத்து, அரசனென்பதோர் சாதியும் சேரமான் என்பதோர் குடியும் கற் பனையாதலால் அக்கற்பனையைவிட்டு, அவனை நிலம் முதல் உயிரீருகிய தத் துவங்களின் கூட்டமென்றறிந்து, அத்தத்துவங்களை நிலம் முதலாக அத னதன் காரணங்களி லொடுக்கிக்கொண்டுபோய் முடிவிலே காரணகாரிய மிரண்டுமில்லாமல் நிற்பதனையறிதலாம்." என்று ஆசிரியர் பரிமேலழக ரும் கூறியுள்ள மெய்யறிவின் லக்ஷணம் ஈண்டறியத்தக்கதாம்.

இம்மெய்ஞ்ஞானம் எதுவரை தோன்றுமலிருக்குமோ அதுவரை சம் ஸார க்லேசமும் மாயையும் நீங்குவதில்லை. அது நீங்காவிடத்தே பிறவி நீங்குவதின்று. இதனை

வாரா யென்மகனே தன்னை மறந்தவன் பிறந்திறந்து
தீராத சுழற்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச்சுற்றிப்
பேராத காலநேமிப் பிரமையிற் றிரிவன் போதம்
ஆராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந்தானே

என்னும் கைவல்ய பாசுரத்தானுமறியலாம்.

ஆதலின் ஸ்வ ஸ்வரூபத்தை யறிந்து அஞ்ஞானமாயையை யொழித்து பிறவிப் பெருங்கடற் பிழைத்துப் பேரின்ப வீடடையப் பிரயாசப்படுத லத்தியாவசியமென்னும் நீதி இச்செய்யுளாற் பெறப்படுகின்றது.

(30) துனையும் வேகத்தா லுருமேறுந் துண்ணென்ன
வனையுங் காலிற் செல்வன தன்னை மறவாதே
நினையும் ஞானக் கண்ணுடை யார்மேல் நினையாதார்
வினையம் போலச் சிந்தின வீரன் சரம்வெய்ய. (ஷை-129)

மாயாஸ்திரம் மாய்ந்ததைக்கண்ட தசகண்டன் சூலமொன்றினை விட, அதையொழிக்க இனகுலதிலகன் ஏவியவாளிகளியாவும் ஊறுசெய்யமாட்டாமல் அழிந்தன வென்பதைக் கூறுமிச்செய்யுளின் பொருள், "இடியுந் திடுக்கிடக் காற்றினுங் கடுகிச்சென்ற காகுத்தன் சரங்கள், இராவணன் சூலத்தை யொன்றுஞ் செய்யமாட்டாமல், பரந்தாமனது பாதபத்மங்களைப் பகலுமிரவும்பரவாநிற்கும் ஞானக்கண்களையுடைய பக்தோர்த்தமர்களைக் குறித்துச் சிலர் சிறிது மாலோசனையின்றிச் செய்யும் துஷ்கிருத்தியங்கள் அவரை யாதுஞ் செய்யவியலாது நிஷ்பிரயோஜன மாந்தன்மைபோல இற்றுவிழுந்தன" என்பதாம்.

இதனால், "பக்தபராதீனனாகிய பகவானிடத் தன்பூண்டொழுகுமடியார் திறத்துச் சிறிதும் அபசாரமியற்றலாகாது. இயற்றினுமதனாலவர்க்கு யாதும் துன்பமுண்டாவதின்றெனினும், 'சுவரிலெறிந்த பந்தானது மீட்டுமடித்தோனையே யடையுமாப்போல்,' அத்தீமை தம்மைப்புரிந்தோர்மாட் டேகாதொழியாது. சமணரது துர்ப்போதனையாற் பல்லவராயன் புரிந்த தீக்காரியங்கள் வாகீசரைச் சிறிதும் வருத்தவில்லை யென்பது உலகறிந்ததேயன்றோ? கடவுள்மாட் டபசாரப்படினும் படலாம். அடியாரைப் பிழைப்போ ருய்யார் உய்யார்! இறைவர் தொண்டருள்ளத் தொடுக்கமாகலின் தொண்டர்தம் பெருமையைச் சொல்லவும் பெரிதே.

* * * *

" அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோய ராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே."

" பாதியா யழுகியகால் கைய ரேனும்
பழிதொழிலு மிழிகுலமும் படைத்தாரேனும்
ஆதியா யரவணையாய் என்பா ராகி
லவர்கண்டீர் யாம் வணங்கு மடிக ளாரே."

என்னுமின்னோரன்ன ஆப்த மொழிகளை யுணர்ந்து அடியாரிடத்து மிக்க அன்புபூண்டொழுகல்வேண்டும்" என்பது வெள்ளிடை மலைபோல் விளங்கக் கிடக்கின்றது.

(31) பாதமறைவெவ் வரவினுக்குப் பாலுநெய்யும் புகட்டிடினும்
வாதைசெய்யும் வல்விடமே வளருமாபோல் மனுநூலும்
வேதமவையோ ராயிரமும் விளங்குங் கலையுந் தசக்கிரிவன்
ஓதவோதப் போதங்கெட்ட போதமான தோங்கியதே.
(உத்தர-இரா-பிற-17.)

(இ-ள்.) இராவண கும்பகர்ணர் வித்யாப்யாசஞ் செய்யத்தொடங்கி அநேக வேதங்கள் கலைகள் மனுதர்ம சாஸ்திரம் முதலிய நூல்களைக் கற்றுவந்தனர். அவ்வாறு கற்கக் கற்க, உள்ளவறிவுங்கெட்டு தீக்குணமானது மேலும் மேலும் விருத்தியாயிற்று ; பாம்பிற்குப் பாலும் நெய்யும் ஊட்டினாலும் அதனிடத்து கொலைக்குரிய கொடிய விடமே பெருகுவது போல். (எ-று.)

கல்வி ஒருவரிடத்துள்ள இயற்கைக்குணத்தை வளர்க்குந்தன்மையுடையது. கூறிய வாளை யொப்பது. தக்க வழியிலுபயோகிக்கவறியான் கைவாள் இன்னலையேயன்றோ வென்றுமீயும் ? கள்ளமனமுள்ளோன் கல்விகற்பின், கண்டோர் வியப்புறுமாறு திருடவும் கண்டுபிடிக்கப்படின் பலவித சாகசங்களால் யாவரையும் ஏமுறச்செய்து தப்பித்துக்கொள்ளவுமே யுபயோகிப்பா னக்கல்வியை. ஆனால் நற்குணமாகிய விளக்குச் சிறிதேனுமிருப்பின் அது கல்வியாகிய நெய்திரிகளால் பெருகிச் சுடர்விட்டுப் பிரகாசித்து, பேரிருளாகிய தீக்குணங்களைப் பற்றும். “நட்புந்தயையுங் கொடையும் பிறவிக்குணம்” “சங்கையறப் படித்தாலும் கேட்டாலும் பிறர்க்குறுதிதனைச் சொன்னாலும், அங்கனுலகிற் சிறியோர் தாமடங்கிநடந்து கதியடையமாட்டார்” என்றார் பெரியாரும்.

ஆகையால், கல்விகற்குங்காலத்தேதானே, ‘நன்னூற்களையாராய்ந்து நன்னெறியிலொழுகவே கற்பது’ என்னுங் கருத்தோடு கற்று, படித்தபடி நடக்க முயலவேண்டும். ‘படித்தால்தானே பிழைக்கலாம்,’ என்று வயிற்றுப்படிப்புப் படிக்கலாகாது. அக்கல்வி நம்மை நல்வழியினுய்க்காது என்னும் நீதியை யிப்பாட்டு ஊட்டுகின்றது. (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## கம்பராமாயண விஞா.

ஐயன்மீர் !

ஸ்ரீயப்பதியாகிய கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, மதுசூதந, த்ரிவிக்ர, வாமந, ஸ்ரீதர, ஹ்ருஷீகேச, பத்மநாப, தமோதரவெனத் துவாதச நாமத்தோடியைந்த சகஸ்த்ரநாம மௌலிப் பெருமாளின் ராமாவதாரத்தை வான்மீகி ச்லோஹ சம்பூர்ணஞ் செய்த இக் கலியுகத்திற் சற்றேறக்குறைய 1000 வருஷங்களுக்கு முன்னர் வள்ளலாம் வெண்ணெயூர்ச் சடையன் புண்யவசத்தாற் கம்பராங் கவிச்சக்கிரவர்த்தியாரால் ராமாயண காவியம்பாடி ஸ்ரீரங்கம் பெரியகோவிலில் பிரமசமூக அரசவர்க்கக் கவிப்புலமைக்குழா முதலிய அரும்பெரிய சபாமத்தியிலரங்கேற்றுந் தருணமெத்துணைப் புலமைவாய்ந்த கவிவல்லுநர்களாற் சாற்றுகவி பெற்று அப்பாற்றன்மக னம்பிகாபதியிடம் சாற்றுகவிகேட்க, அம்பிகாபதி, அத்தனே ! இக்காவியத்திலுங்களிஷ்டத்திற் குறியவர்கட்கு

வேண்டுவென பாடியிருக்கிறீர்கள். எனக்கிதிலென்ன ஆஸ்பதஞ் செய்திருக்கிறீர்களென வினவ, கவிச்சக்கிரவர்த்தி :—

பாலகாண்டம், திருவவதாரப்படலத்தில்

“ வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருதி வான்மிசை
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனொடு நதிகடங் குறைக டரவே ”

எனவும், உண்டாட்டுப் படலத்தில்

“ வளேப்யின் முன்கையோர் மயில னுடனக்
கிளேயவள் பெயரினைக் கொழுந னீதலும்
முளேயெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தது கயற்க ணுவியே ”

எனவும், யுத்தகாண்டத்தில்

“ அண்ட மூலத்துக் கப்பா லாழியுங் கொதித்த தேழு
தெண்டிரைக் கடலின் செய்கை செப்பியென் றேவன் சென்னிப்
பண்டை நாளிருந்த கங்கை நங்கையும் பதைத்தாள் பார்ப்பான்
குண்டிகை யிருந்த நீருங் கோளகோள கொதித்த தன்றே ”

எனவும், மாயாசனகப்படலத்தில்

“ அண்டத் தளவு மினைய பகர்ந்த ழைத்துப்
பண்டைத் தன்னுமத்தின் காரணத்தைப் பாரித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர் பொடிப்பக்
கெண்டைத் தடங்கண் ணுளுள்ளே கிளுகிளுத்தாள் ”

எனவும், இந் நான்கு சந்தர்ப்பங்களில், சளசள, களகள, கோளகோள, கிளுகிளு என்று பாடியிருப்பதை யறியவில்லையாவென்க, அம்பிகாபதி, பரமானந்த மகிழ்வெய்தித் தாமுமோர் சாற்றுகவிகொடுக்க ஆங்குளவித்வகுலாதிபர் முதலிய யாவரும் பேருவப்புடன் கம்பரைக் கொண்டாடினரென இராமாயண வைபவ சங்கிரகங் கூறுகின்றது. நிற்க,

காப்பு முதற்கடையேடராகப் பதவுரை, பொழிப்புரை, விரித்துரை, கருத்துரை, மேற்கோள் உபமானவுபமேயங்களோடு அன்று பாராயணித்துக் கதைக்குத் தக்கவாறெவ்வோரமயங்கட்கேற்பக் கூறிவருங்காற்றன் மகன் அம்பிகாபதியைப்பற்றி ஞாபகங்கூட இல்லாது பிரசங்கமுடித்துப் பின் அரங்கியற்றுங்கால் மகன்கேட்ப இதை மேற்கண்டவாறு சுட்டிச் சொல்லியதின் கருத்தென்னவோ, அக்கருத்தையே அம்பிகாபதியும் உட்கொண்டு உவந்தான் என்றால், மேற்கண்ட நான்கு பதங்களாகிய, சளசள, களகள, கோளகோள, கிளுகிளு என்பதில் அம்பிகாபதியென்பதற்கென்ன ஆஸ்பதம் ஏற்பட்டுவிட்டதோ தெரிகிலேன்.

சுமார் 30 வருஷங்களாய் இதைப்பற்றி யான் அட்டாவதானிகள், தசாவதானிகள், கவிவலோர் முதலிய மாவித்வான்களனேகர்களிடம்

கேட்டதிற் கண்டமட்டும் மனம்போனபடி சொல்லி யொன்றை யொன்று பொருந்தாது முரண்பட்ட விபரங்களேயே கூறினர். அவற்றை மீண்டி யானறைகுவனே லெழுதுகோரோற்கு மென்றாவது லிகிதந் தோற்கு மென்றாவது கூறுவதரிது.

அரியபெரிய தமிழ்ப்புலமைத் தலைவர்களானாலும், மற்றியா வர்களா னாலும் உலகம் நம்பும்படியான விடை யிதற்குக் காரணங்காட்டி யெழுது வீர்களாயின் அவர்களுபய சரணாரவிந்தங்களை யென் சிரமீது சூடிக்கொள் வேனென்றும் அப்படி யெழுதுவது சஞ்சிகை, பத்திரங்களில் தங்கள் முழு விலாசங்காட்டி யெழுதவேணுமென்றும் எழுதலானேன்.

K. கருப்பசாமி கவிராஜ், கர்ணம்,
குமாரகிரி, தட்டப்பாரை போஸ்ட்டு.

---

## சந்நியாசம்—சந்நியாசிபேதம்.

(65-ம் பக்கத் தொடர்ச்சி.)

அடியும் நுனியும் சமனுயிருப்பதும், சமமான கணுக்களுள்ளதும், குற் றமற்ற பட்டைகளையுடையதும், சித்திரவர்ணம் (பலவர்ணம்) உள்ளதா யிருந்தாலும் காயங்களில்லாமலிருப்பதும், வண்டு முதலியவற்றால் துளை செய்யப்படாததும், கணுக்கள் கெட்டியாயிருப்பதும், தானாக முளைத்துப் பயிரானதும், தளர்ச்சியில்லாததும், கோணலில்லாததும், நல்லதுமான ஒரு மூங்கில் தடியைத் தண்டமாகக் கொள்ளவேண்டும். மூக்களவுள்ள தும், அல்லது தலை மூகடு இவற்றுக்கு மத்தியான புருவத்தளவு வுயரமுள் ளதாயிருக்கவேண்டும். இது யதிகளுக்குரிய தண்டமென்று புராணங் கூறுகின்றது. சிரத்தையுடையவர்களாற் கொடுக்கப்படுகிற தண்டத்தை யதிகள் பெறவேண்டுமென்பது ஸ்மிருதி. யதிகளுக்கு வீதிகள்தோறும் வஸ்திரம். (என்றால் கிருகஸ்தர்களால் எறியப்பட்ட கந்தை) பூமி முழுதும் படுக்குமிடமாயிருக்கின்றது. (என்றால் படுக்க வீடு கூடாதென்பது) ஆத லால் யதிகளுக்குத் துக்கம் நேரிடக் காரணமே யில்லையென்று தேவர் கூறினர்.

கித்தான், சணல் அல்லது தர்ப்பையினால் செய்த வஸ்திர முடுக்க வேண்டும். இவற்றை நற்குண நற்செய்கையுடைய நல்லவர்களிடத்தி லிருந்து பெறவேண்டும். பெறும்போது கொடுப்பவர்க்குச் சிறிதுகூடத் தொந்தரவு கொடுக்கக்கூடாது. ஆயினும் உடுத்துக்கொள்ளுவதும் வஸ்திர மில்லாமலிருப்பதும் அவரவருடைய இஷ்டத்தைப் பொறுத்தது. சுகதுக் கங்களால் சரீரத்துக்குத் துன்பஞ் செய்துகொள்ளாமலிருக்கவேண்டும் என்றால் சுகதுக்கங்களைப் பாராட்டக்கூடாது. பிறர் செய்யும் ஸ்தோத் திரங்களால் மகிழ்ந்து அவர்களை வாழ்த்துவதும், நிந்தைகளால் வருந்தி அவர்களைச் சபிப்பதும் கூடாது. வேதாந்த புஸ்தகங்களை வேதவேதாந்

தங்களை புணர்பவர்களிடத்திலிருந்து பெற்றுக்கொள்ளலாம். காசுவாங்கி புஸ்தகமெழுதுவதுகூடாது; அதனுல் பெருந்தோஷம் நேரிடும்.

ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொருநாளும், பெரிய நகரங்களில் ஐந்துநாளும் தங்கலாம். இவ்வாறு தங்கியிருப்பதை ஆஸநமென்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. சந்நியாசிகளுக்கு உரியனவென்று கூறப்பட்ட பாத்திர முதலியவற்றில் ஒன்றையாவது விலக்கியிருப்பது கூடாது. இல்லாதிருந்தால் அது பாத்திரலோபம் என்னும் தோஷத்தைத் தரும். தண்டம் முதலியவைகள் கையிலிருக்கும்போது வருங்காலத்தை உத்தேசித்துச் சேகரித்துக்கொள்வது ஸஞ்சயம் என்னப்படும். ஜனங்களிடத்தில் கருணையில்லாமல் தனக்கு ஊழியம் செய்வதையும், போஜனுதிகள் கொடுத்து உபசரிப்பதை உத்தேசித்தும் சிஷ்யர்களைச் சேர்த்துக்கொள்ளுதல் சங்கிரகமென்னப்படும். சகல விஷயங்களையும் விளக்கிக்காட்டுவதால் வித்தையைப் பகலென்றும், எல்லாவற்றையும் மறைப்பதால் அவித்தையை இரவு என்றும் அறிஞர் கூறுகின்றார்கள். வித்தியாப்பியாசத்துக்கு இடையூறு நேரிட்டால் அது "திவாஸ்வாப" எனப்படும். ஸர்வாந்திரியாமியான பரபிரமத்தின் சொரூபத்தை விளக்கும் வியவகாரங்களையே பேசவேண்டும். அதைவிட்டு நல்லபோஜனமளித்தான், நல்லபிக்ஷை செய்வித்தான் என்று ஒருவனைப் புகழ்வதும், அந்தப்போஜனத்தை விரும்பி அவனுக்கு அனுக்கிரகம் செய்வதுங்கூடாது. அது "விருதாஜல்பம்" என்னப்படும். யதிகள் அடிக்கடி படிப்பதும், சிரவணம் செய்வதும் அவசியமன்று. அவனுக்கு விதிக்கப்பட்ட தர்மங்களை விடாமல் அனுஷ்டிப்பதினுலேமாத்திரம் யதியாவான். மேலும் மேலும் படிப்பதினுல் யதியாவதில்லை. ஆனுல் உபநிஷத்துக்களைமாத்திரம் படித்தும் ஆவர்த்திசெய்தும் வரவேண்டும். தீர்த்தசேவை, உபவாசம், அத்தியயனம் செய்தல், வியாக்கியானங்களைப் படித்தல் இவற்றில் பற்றுதல்வைப்பது கூடாது. உண்மை கூறுதல், நியர்யமில்லாததை விலக்கிவிடுவது, பிரமசர்யானுஷ்டானம், நல்லெண்ணம், சிவபக்தி, விஷ்ணுபக்தி, மனச்சந்தோஷம், சௌசம், ஆஸ்திகம் பிரமவிசாரம், எல்லாவற்றையும் சமனுய்ப் பார்ப்பது, படபடப்பில்லாமலிருத்தல், மனச்சமாதானம், மனத்தைரியம், பற்றற்றிருத்தல், குருபணிவிடை, சாந்தி, பிறவிந்திரியஅடக்கம், மனவடக்கம், எல்லாவற்றிலும் உபேக்ஷை, நிர்ணயம், அழகானவசனம், பொறுமை, தயை, லஜ்ஜை, அறிவு, சாஸ்திரஞானம், யோகப்பயிற்சி, பிக்ஷாடனம், ஜபம், சந்தியாகால அனுஷ்டானம், கருமபலனைவிட்டொழிப்பது ஆகிய இவை நியமத்துடன் கூடின யதிதர்மமாம். பரமஹம்ஸனுயிருப்பவர் தொந்தங்களை யொழித்து, ஸத்துவத்திலிருந்து எல்லாவற்றையும் சமமாய்ப் பாவிப்பதே தர்மமாகக் கொள்வர். இவர் ஸ்ரீமந்நாராயணருக்குச் சமானமாவார். பிரபஞ்சங்களை வெறுத்து ஞானக்கினியால் எல்லாவற்றையும் தகித்து அக்கினியைத் தனக்குள் ஒடுக்கிக்கொள்கிறவனே அக்கினிஹோத்திரி என்னப்படுவான். மற்றவன் அக்கினிஹோத்திரியாவதில்லை. முந்தின மூன்று ஆச்

சிரமங்களை விட்டுச் சந்நியாசத்தை யடைந்தவன் ஒருவருஷம் குருபணி விடை செய்துகொண் டிருக்கவேண்டும். பின்பு அவருடைய உத்தரவு கிடைத்தால் தனியாகப் பிரிந்துவரலாம். மழைகாலமாகிய நான்கு மாதங்கள் ஒரு இடத்தில் தங்கியிருப்பது சந்நியாசிக்குக் குற்றமாகாது.

உஷக்காலத்திலெழுந்து முறைப்படி சௌசம் செய்து பல்விளக்கி விதிப்படி ஸ்நானம் செய்து, சந்தியோபாசனை முடித்துப் பிரணவஜபம் செய்யவேண்டும். மரத்தடி அல்லது நதிக்கரை இவ்விடங்களில் வசிக்கவேண்டும். பிக்ஷாகாலத்தில் ஏதேனுமோர் கிராமஞ்சென்று பிக்ஷை யெடுக்கவேண்டும். ஒரு பொருளையும் சம்பாதித்து வைத்துக்கொள்ளக் கூடாது. எல்லாவற்றிலும் உபேட்சையா யிருக்கவேண்டும். பொய் பேசாமை, ஜீவஹிம்சை செய்யாமை, திருடாமை, ஸ்திரீசங்கமமற்றிருப்பது, வைராக்கியம் ஆகிய இவ்வைந்தும் அவர்களுக்கு உப விரதங்களாம். கோபமின்மை, குருபணிவிடை, ஜாக்கிரதையாயிருப்பது, சௌசம், ஆகார சுத்தி இவ்வைந்துங்கூட உப விரதங்களெனக் கூறப்பட்டுள்ளன. காமக் குரோதங்கள் கிரகஸ்ததர்மமாம். லோபமோகங்களை யொழித்திருப்பது சந்நியாசதருமமாம். இஷ்டமானதைப் புஜித்துவிடுவதால், நெய்யினால் நெருப்பு விருத்தியாவதுபோல ஆசை விருத்தியாகுமேயன்றிக் குறைவதில்லை. விஷயங்களைப் புஜிப்பவன், அவைகளை விட்டொழித்தவன் இவ்விருவரில் விஷயத்தை விட்டவன் பரமசுகத்தைப் பெறுவான். வஸ்துக்களின் குற்றங்களையும் சரீர தோஷத்தையுந் தெரிந்துகொண்டவன் ஆசையை எளிதில் ஒழிப்பான். வாக்குமனங்களை அடக்கினவன் வேதாந்தத்தாலுண்டாகும் பூர்ண பலனைப் பெறுவான். சன்மானம் பெறுவதில் வெறுப்படையவேண்டும். அவமானத்தை அமிர்தம்போல மகிழ்ந்தேற்றுக்கொள்ளவேண்டும். ஏனென்றால் அவமானம் பெறுவதால் நல்ல நடக்கை கெட்ட நடக்கைகளைத் தெரிந்து வழிப்படலாம். அவமானஞ் செய்தவன் அழிந்துவிடுவான். தர்மம், அர்த்தம், காமம், தர்மார்த்தம், அர்த்தகாமம், தர்மகாமம், தர்மார்த்தகாமம் ஆகிய இவ்வேழையும் அடுத்த ஏழுலகங்களின் காரியங்கள் எல்லாம் அநித்தியம். ஆகையால் அவ்வநித்தியங்களைப்பற்றிய விஷயங்களைப்பற்றிப் பேசக்கூடாது. இந்திரியங்களை யடக்கல், இராகத்துவேஷங்களை விடுதல், ஜீவாத்மாக்களுக்குத் துன்பஞ் செய்யாமையாகிய இவற்றால் ஒருவன் மோட்சத்தை யடைகிறான். துர்த்தர்மம் நரகத்தில் அமிழ்த்துகின்றது. வேண்டியவர்களைத் தள்ளி வேண்டாதவர்களுடன் கூட்டிவைக்கின்றது; மூப்பினால் மெலிவிக்கின்றது; வியாதிகளால் வருத்துகின்றது; நல்ல குலத்திற் பிறந்த ஜீவாத்மாவை நாய் நரி முதலிய இழிந்த பிறவிகளில் தள்ளிவிடுகின்றது. சரீரம் படைத்தவர் தர்மத்தினால் மோட்சத்தையும், அதர்மத்தால் நரகத்தையும் அடைகிறார்களென்பதை ஸந்நியாசி நினைக்கவேண்டும். யோகமுயற்சியால் சேரும் கதியையறிந்து எவ்வகையிலும் தன் தொழிலில் தவறுதல் வராமல் நடத்துகொள்ளவேண்டும். பிரமோ பாஸகர்கள் தங்கள்

தேகத்தை விட்டு மோட்சத்தையடைகிறார்கள். இச்சரீரத்தை யெடுக்கும் படி செய்வித்த கன்மம் அனுபவித்தாலன்றி நீங்குவதில்லை. நதியின் கரையோரத்திலிருக்கிற மரம் தன்வசம் கெட்டு நதிவேகத்தால் கரையை விட்டுவிடுவதுபோல கர்மத்தினால் இச்சரீரத்தை விட்டு மறு சரீரத்தை யடைகிறான். (தொடரும்.)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## உரை நடை அல்லது வசன நடை.
## (Prose Style.)

நடை : மனதில் உதிப்பதை மரபியல் வழாமல் அனைவரும் எளிதில் உணருமாறு வாயான் மொழிந்தும் வரைந்தும் வெளியாக்குவது.

நடைக்குண்டாகும் மேன்மைக்கு ஏது : எழுதுவோனது கல்வி நலம் கொள்கை நலம்.

உரைவகை : 1. செறித்துரை, 2. விரித்துரை, 3. அணிந்துரை.

நல்ல நடைக்குள்ளன : 1. தெளிவு, 2. ஆற்றல், 3. இசை.

### I. தெளிவு.

தெளிவு நடை : நாம் வழங்கும் சொற்களும், சொற்றொடர்களும், வாக்கியங்களும் நமது கருத்துக்களைப் பிறர் வித்தியாசமாகக் கொள்ளாமல் இருக்கும்படி திருத்தமாயும், நேர்மையாயும் வெளியிட்டுரைப்பது.

மேலும், பொருள் வெளிப்படையா யிருக்கவேண்டியதே யொழிய, கொள்கை முதலானவைகள் யாவராலும் ஒப்புக்கொள்ளத்தக்கனவா யிருக்கவேண்டுமென்பது கருத்தல்ல. மற்றும், சாமானிய மாந்தர்களுக்கும் நன்கு விளங்குமாறு பொருள்கள் அமைந்திருப்பதுதான் தெளிவான நடை என்பதற்கு ஓர் அடையாளம்.

ஒருவர் நடை வேறொருவருக்குப் பயன்படாமை :

(a) சிலர்க்குத் தெளிவாயிருப்பது வேறு சிலர்க்குத் தெளிவா யிராமை.

(b) கற்றோர்க் கென்றெழுதிய நடையானது சாமானிய சனங்களுக்குப் பயன்படாமை.

(c) நியாய வாதியால் அறியப்படும் நடை, வைத்தியனால் அறியப் படாமை.

(d) சிறுவர்க்கான நடை பெரியோர்க் காகாமை.

1. சொற்கள் :

(A) ஆன்றோர்கள் ஆட்சிபெற்ற சொற்களையே வழங்குவது ஓர் வழக்கமாயினும், 'புதியன புகுதல்' என்ற ஞாயப்படி ஏற்ற ஆக்க மொழிகளைப் பிறரும் அங்கீகரிக்கத்தக்கவாறு வேண்டியமட்டில் வழங்கலாகும்.

ஏனெனில், எந்தப் பாஷைகட்கும், எக்காலத்தும் நிலை மாறுபடல் இயற்கையாதலினாலும், நாளுக்கு நாள் மாந்தர்கட்குப் புதுப்புது விஷயங்கள் அவரவர் அறிவினுக்குத் தக்கவாறு புலப்படுவதனாலும், மற்றும், கடைவீதியில் நாம் காணாத கொள்ளாத பல பொருள்கள் புதிது புதிதாகக் காணப்படுந்தோறும், அவற்றை நம்முடைய உபயோகத்துக்குத் தக்கவாறு எடுத்தாள அங்கீகரித்துக்கொள்வதுபோல், புதிய புதிய வார்த்தைகளைப் பொருளுக்கேற்க அமைத்துக்கொள்வது வழுவாகா.

உதாரணம் :—எலக்ட்ரிக் ட்ராம் வண்டி என்றுரைப்பதைப் பார்க்கிலும், மின்சார வண்டி என்று சொல்லுதல் தவறாகாதாம்.

(B) செந்தமிழ் நடையில் தள்ளுவன:—(செந்தமிழ்=கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் விளங்கக்கூடிய தமிழ்.)

1. திசைச் சொற்களை வழங்காமை.

உதாரணம் :—செப்பு என்பதிலும் சொல் எனலே மேன்மை. கேட் வாசற்படி, ஷாப்புக்கடை, வக்கீல் என்று வழங்குதலைத் தவிர்த்து, வாசற்படி, கடை, நியாயவாதி என வழங்கல்வேண்டும்.

2. வடமொழிப் பதங்களை இன்றியமையாத வழியன்றி வழங்குதலைத் தவிர்க்க.

உதாரணம் :—மானமிலான் என்பதற்கு விமானி எனலாகாது.

3. சாமானிய வழக்குச் சொற்களைக் கட்டுரையி லெழுதுதல் சிறப்பின்மையால், அதைத் தவிர்க்க.

உதாரணம் :—ஒத்துமை என்பதினும் ஒற்றுமை என்னல் மேன்மையாம். (சாமானிய வழக்கு=Colloquial Words.)

4. குறியீட்டு மொழிகள் (=Technical Words) சாதாரண நடையில் வழங்குதலையும், செய்யுள் விகாரங்களைச் செவிக்கின்பம் தோன்றுமிடத்தன்றி வசன நடையில் உபயோகித்தலையும் தவிர்க்க.

2. சொற்றொடர்களில் தவிர்க்க வேண்டுவன :—

1. ஒரே சொற்றொடரை அடிக்கடி கூறுதல்.

2. ஒரு மொழியை விளக்குமிடத்து, அதே மொழியின் திரிபுகளை உபயோகித்தல்.

3. ஒரே சொற்றொடர், சிலசமயங்களில் சொல்லப்புகும் விஷயத்தை வலியுறுத்திக் காட்டுவதா யிருப்பினும், அதனையே அடிக்கடி வழங்குதலை யொழிக்க.

4. வடநூன் முடிபுகளை ஆன்றோராட்சியின்றித் தமிழிற் பெய்தலைத் தவிர்க்க.

தவிர்க்கவேண்டுவனவற்றைத் தவிர்க்காவிடின், அதனாலுண்டாம் பயன்கள் வருமாறு :—

(a) மயக்கத்துக் கிடனுதல்.

(b) வேறு சில வேளைகளில் மாறுன பொருளுண்டாதல்.

(c) பல சொற்றொடர்கொண்ட வாக்கியத்தின்கண்ணே முடி பிலக்கணத்தை யாவரும் உற்று நோக்கவரும். அங்ஙனம் உற்று நோக்காமற்போனுல், எண்மயக்கம், பான்மயக்கம் இவைபோல்வன பிறவும் வாக்கியத்தில் நடைபெறலாகும்.

உதாரணம்.—'அவன் அப்படிச் சொல்பவ னல்ல' என்று அனேகர் கவனியாமலே உபயோகிப்பர். கவனித்தால் 'அல்லன்' என உபயோகிக்கக்கடவர்.

3. வாக்கியங்கள்:—

1. தனி வாக்கியம்(=Simple Sentence.)
2. கலப்பு அல்லது சங்கர வாக்கியம்(=Complex Sentence.)
3. தொடர் வாக்கியம்(=Compound Sentence.)

(a) தனிவாக்கியம்:— ஒரு எழுவாயும் ஒரு பயனிலையும் உடையது.

(b) கலப்புவாக்கியம்:— தனிவாக்கியத்தை அடுத்துவரும் சில அடைவாக்கியங்கள்.

(c) தொடர்வாக்கியம்:— இரண்டு மூன்று தனி வாக்கியங்களுடன் கலந்து வரும் அடைவாக்கியங்கள்.

இம்மூத்திற வாக்கியங்களும் கட்டுரையில் விரவியே வரத்தக்கன. ஆனுல் தனிவாக்கியங்கள் மிகுந்திருப்பின் உரை நடைக்கு மிகுதியான ஆற்றலுண்டாம். ஆற்றலெனினும் ஆண்மையெனினும் ஒன்றே.

தவிரவும், முற்றியல்வாக்கியம், நெகிழியல் வாக்கியம் என மேலும் இரண்டு கூறுவர்.

1. முற்றியல் வாக்கியம்:— வாக்கியத்தி னிறுதிவரை படித்தபின்னர் பொருள் விளங்குவது.

2. நெகிழியல் வாக்கியம்:— பல சிறு வாக்கியங்கள் ஒரே வாக்கியமாக அமைதல்.

உதாரணம்:—முற்றியல் வாக்கியம்:— அருமையான ஒரு நூலைப் படிக்குந்தோறும் புதிய நலங்கள் புலப்படுவதுபோல, பழகுந்தோறும் இருவர்க்கும் மகிழ்ச்சியுண்டாக்குவதே நட்பு.

நெகிழியல் வாக்கியம்:— சில நண்பர்களிடத்து நாம் கிரகிக்கவேண்டிய பொருள்கள் ஒன்றுமில்லாவிடினும், அவர்கள் நம்மைக் கேட்கும் கேள்விகளால் நம் புத்தி தூண்டப்படுகின்றது.

ஷை இரண்டு வாக்கியங்களும் ஒரு கட்டுரையின்கண் கலந்துவருதலே சிறப்பாம். ஒரே விதமான நடை அத்துணைச் சிறப்பைத் தருவதின்று.

## II. ஆற்றல் (ஆண்மை.)

பொருளை உற்று நோக்கச் செய்வதும், மனத்திற்பொருந்தச் செய்வதும், மனோபாவத்தைத் தூண்டச்செய்வதும், உணர்ச்சியை எழுப்பச் செய்வதும் ஆகிய இந்நான்கையும் அடைவிப்பது ஆற்றல் நடையாம். அடைந்தால்தான் நடைக்கு ஆண்மைத் தத்துவமாம்.

இத்தகைய நடையாண்மையில் சொல்வழக்கு, சொற்பல்காமை, சொல்லமைப்பு என்பன பெறப்படும்.

சொல்வழக்கு :— பொதுச்சொல்லை உபயோகிப்பதைப் பார்க்கிலும், சிறப்புச்சொல்லை உபயோகிப்பதுதான் சிறப்பாம்.

உதாரணம் :—"தண்ணீரிலிட்ட ஈயக்கலம்போல, அவர்கள் ஆற்றில் மூழ்கியாழ்ந்தனர்" என்ற விடத்தில், ஓர் உலோகத்தைத் தண்ணீரிலிட்டாற்போல் ஆற்றில் மூழ்கியாழ்ந்தனர் என்றால் அது மனவெழுச்சியைத் தராது.

"அத்தகைய விடத்தை இக்கண்களும் பார்த்திருக்கின்றன" என்னுமிடத்தில், அத்தகைய விடத்தை யடைந்தவர் பார்த்தலாகும் என்பது அத்துணைச் சிறப்பன்று.

வடமொழிக்கண் பிரதாப ருத்திரீயம் என்னும் அலங்கார நூலெழுதிய வித்திய நாதன், தன்நூலை 'முதன்மகள்' என்று புனைந்து அரயனிடத்துக் கூறினன். அதுபோல என்றும், எங்கும், அணிநலம் விளங்க உரைப்பது மேன்மையாம்.

சொற்பல்காமை :— ஒரு விஷயத்தை எவ்வளவு குறைந்த சொற்களை உபயோகித்து விளக்கலாகுமோ அவ்வளவு சொற்களை உபயோகித்தால், அவ்வளவுக்கும் உரை நடை மேன்மையுறும். வாக்கியச் சிறுமைகளைக் கருதிப் பொருளை மாத்திரம் சிதைக்கலாகாது.

"சில்லெழுத்தினாலே பொருளடங்கக் காலத்தாற்
சொல்லுக செவ்வி யறிந்து" என்றார் ஆசாரக் கோவையார்.

மேலும், ஒரு பொருளைத் தெரிவிக்கப் பல சொற்களை உபயோகித்தலும் பயனில்லை. சந்தர்ப்பத்தால் உய்த்துணரும் வண்ணம் எழுவாயைப் பன்முறையும் காட்டாமல் எழுதலாகாது.

சொல்லமைப்பு : நன்கு விளங்க வுரைக்க வேண்டுமானால்; எழுவாயை முதலிலும், பயனிலையை இறுதியிலும், அடைமொழிகளை இடையிலுமே வைத்து ஒரு வாக்கியத்தை உண்டுபண்ணவேண்டும்.

சில சமயங்களில் இவ்வொழுங்கை மாற்றவேண்டியும் வரும்.

வாக்கியத்தை வேறு வகையாக மாற்றவேண்டுமாயின், அதற்குத் தக்க பயனிருக்கவேண்டும்.

சில இடங்களில் ஒரு விஷயத்தைக் கூறி மறுப்பதும், மாறுதலான விஷயங்களைத் தொடுத்துக் கூறுதலும் உரைநடைக்கு மிக்க அழகுண்டாக்குவனவாம்.

இவையாவும் சொன்முரணும், பொருண் முரணும் பெறப்படும்.

உதாரணம் :—(a) சொன்முரண் :—"சிநேகம் ஓரிடத்திலேயே இராமற்போனாலும் இருக்கின்றார்கள் ;" "வறியர்களேனும் செல்வர்கள் ;" "வலியிலாரேனும் வலியுளார் ;" "இறந்தார்களேனும் உயிருள்ளவர்கள்."

(b) பொருண் முரண் :—"அசுரர்கள் தேவர்களைச் சிரணிக்க முடியாமையினாலோ, பிராமணர்கள் அற்றைநாட்களிற் செய்யும் கிரியைகளினாலோ, அசுரர்தம் இரக்கத்தினாலோ அச்சந்திரர் சூரியர் மீட்டும் உமிழப் பெறுகின்றனர்."

சில சமயங்களில், சாதாரணமாகக் கூறக்கூடிய விஷயங்களை வினாவிடையி லுரைப்போமானால் ஆண்மை மிக்கு உண்டாகும்.

உதாரணமாக :— உயிரினுஞ் சிறந்தது உலகத் தென்னுளது ? அவ்வுயிரைப் பெற்று அடையும் பெரும்பயன் யாது?

"இன்ப வாழ்க்கையே யன்றோ?" என்பதே, உயிரினுஞ் சிறந்தது உலகத்தி லொன்றுமில்லை ; அவ்வுயிரைப்பெற்று அடையும் பெரும்பயன் இன்பவாழ்க்கையே யாம் என்பதினும் நடை நலத்தைப் பயக்கின்றது.

## III. இசை.

வாக்கியத்தைப் படிக்கும்போது மெதுவாக ஓடும் அருவி, கரையிற் பரந்து கிடக்கும் பருக்கைக் கற்களோடு மோதுண்டு, இனிய கீதம் செய்வதையொப்பத் தோன்றவேண்டும்.

தெளிவு எவ்வளவு அவசியமோ அவ்வளவு இசையும் அவசியம்.

இசை நலம் உண்டாவதற்கு, இன்ன மாதிரிதான் எழுதுவதென்று வரையாதல், விதியாதல் இயலாது. அஃது, எழுதுவோனது உணர்ச்சி, ஆற்றல் இவற்றைப் பற்றியது.

தெளிவு, சொற்பல்காமை, இசையாகிய இம்மூன்றையும் கவனித்து எழுதினால் கட்டுரைச்சுவை எழுதலாகும்.

தனித்தனி விஷயங்களைத் தனியான பிரிவுகளி (Paragraphs) லமைத்தே எழுதவேண்டும். எல்லா விஷயங்களையும் மனத்திற்குத் தோன்றியபடி ஒரே தொடராக எழுதினால் தெளிவினைப் பொருந்தமாட்டாது.

### கட்டுரை வகுக்கும் விதம்.

ஒரு விஷயத்தைக் குறித்துக் குறித்த காலத்தில் நன்கு எழுதி முடிக்கவேண்டுமானால், முதன் முதல் எந்தெந்த விஷயங்களைப்பற்றி இக்கட்டுரையின்கண் எழுதவேண்டுமென்பதை ஆலோசிக்கவும்.

அங்ஙனம் யோசித்தபின்னர், அவைகளை ஒரு துண்டுக் கடிதத்தில் குறித்துக்கொள்ளவேண்டும்.

பிறகு அவ்வவ் விஷயங்களுக்குத் தனித்தனி ஒவ்வொரு பிரிவாகப் பகுத்து எழுதினால் மாணவர் முதல் எத்திறத்தினரும் திருப்தியடைவ்துடன் எவரும் சந்தோஷ மெய்துவர்.

அத்துடன் கையெழுத்தும் நன்றாயிருத்தல் அவசியம்.

சுகவனம்-சிவப்பிரகாசன்,

தமிழ்ப் பண்டிதர், ஆத்தூர்.

## மறுபிறப்பு.

கர்மத்தினுல் நமக்கு இப்பிறவி வந்திருக்கிறது. இப்பிறப்பில் செய்யும் கர்மத்தால் மறு பிறப்பை யடைகிறோம். இப்படி நாம் அனுதி தொடங்கி எடுத்த ஜன்மங்களுக் கோரளவில்லை. கர்மத்திற்குத் தக்கபடி நால் வகை யோனிகளில்* எழுவகைப் பிறவிகளை† மாறிமாறி யடைந்துகொண்டிருக்கிறோம். இம்மானிட ஜன்மத்தில்தான் பிறவியை யொழித்துக் கொண்டு முத்தியையடையலாகும். அதனுல்தான் இம்மானிட ஜன்மம் கிடைப்பது அரிது என்று ஆன்றோர் கூறினர். இதுதான் நமது மதச் சித்தாந்தம். ஆன்மாவாகிய தன் நிஜ சொரூபத்தைக் கண்டு பரமான்மாவில் இரண்டறக் கலந்துவிடுவதுதான் முத்தி.

இச்சித்தாந்தம் ஒன்றே உலகிலுள்ள சகல பிராணிகளின் சுகதுக்கம், நன்மை தீமைகளின் வித்தியாசங்களுக்குத் தக்க காரணத்தை வெளியிடுகிறது. இன்றேல் ஒருவன் அழகுடையவனுகவும் ஒருவன் அவலட்சணமுடையவனுகவும், ஒருவன் செல்வவந்தன் மகனுகவும், ஒருவன் பிச்சைக்காரன் மகனுகவும் பிறந்திருப்பதற்கு நியாயமில்லை. வேறு எக்காரணம் பார்த்தாலும் பொருந்தாதாதலின் கடவுள் பாரபட்சமுடையவரென்றுவது, ஒருநெறியின்றி கண்மூடித்தனமாய் சிருஷ்டிப்பவரென்றுவது ஒப்ப வேண்டிநேரிடும். அவ்வாறுள்ள இதர காரணங்களைக் கூறி விவகரிக்க இங்கு இடம் போதாது. மேலும் அது அனுவசியம். ஏனெனில் அத்தகைய காரணங்களனைத்தும் முன்னமே பல நூல்களில் எடுத்துக் கூறிக் கண்டிக்கப்பட்டு முன்பின் பிறவி யுண்டென்பது மறுக்கமுடியாத விதமாய் நிலை நாட்டப்பட்டிருக்கிறது. இச்சித்தாந்தமே ஆன்மா பரமான்மாவைப்போல் நித்தியம் என்பதை நிரூபிக்கிறது. எது முக்காலத்திலுமுளதோ அதுவே நித்தியம் எனப்படும். இடையில் உண்டாக்கப்பட்டது, முன்னில்லையாதலின், நித்தியமாகாது.

சென்மார்த ரஞ்செய்த வினைகளுட றருமெனித்
செல்கால மிவனுண் டலோ
கன்மாறு பவநரக சொற்கமெனில் வருகின்ற
காலத்து மிவனுண் டலோ
உன்மாத யாதனு வுடல்கடவு ளுடல்மருட
வுடன்மாறி மாறி யழியும்
தன்மாய வுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு
சத்தென்ப தொக்கு மகனே. (கைவல்யம்)

கிருஸ்தவ மதத்தின்படி ஒரே பிறப்புதான் உண்டென்பது அவர்கள் கொள்கை. அம்மதஸ்தர்கள் ஒவ்வாத காரணங்களைக் கூறி நம்மவரில்

---

* (1) சராயுஜம், (2) அண்டஜம், (3) உற்பிஜம், (4) சுவேதஜம்.

† 1. தேவர், 2. மனிதர், 3. விலங்கு, 4. பக்ஷி, 5. ஊர்வன, 6. நீர் வாழ்வன, 7. தாபரம்.

பாமரர்முன் மறுஜனனத்தை மறுத்துக்கூறுவது வழக்கம். நமது நூல்களில் எங்கேனும் ஒரு பாடல் வெளித்தோற்றத்திற்கு அவர்கள் தவறான கொள்கைக்கு ஒத்திருப்பதுபோல் தோன்றின், இந்துக்கள் நூல்களிலேயே யப்படி கூறியிருக்கிறது என்று பிரஸ்தாபிப்பது அவர்கள் வழக்கம். இவர்கள் அந்நூலில் முன்பின் விஷயத்தை விட்டுவிட்டு வெளிக்கு மாறாகத் தோன்றுவதை மட்டும் ஆதாரமாக எடுத்துக் கூறுவார்கள்.

ஒரு கிருஸ்தவர் நாயனார் கூறிய

(1) "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு" என்ற குறளையும்,

(2) "உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு" என்ற குறளையும்,

மறு பிறப்பில்லை என்று அவர் கூறியதற்கு ஆதாரமாகக் காட்டுகிறார்.

பேஷ் இவர் அறிந்துகொண்ட அர்த்தம் மிக நேர்த்தியே.

1-வது குறளின் அர்த்தம்:—"சத்தாகவும் நித்தியமாகவும் உள்ள உயிரும், ஜடமும் அநித்தியமுமாகிய தேகமும் கருவில் ஒன்றாக அமைந்திருப்பினும், வினையினால் சம்பந்தப்பட்டதேயன்றி உண்மையில் தம்முள் மாறுதலின், வினை யொழிந்ததே உயிர் உடலை அதிருக்குமிடத்தில் விட்டுப் போய்விடும்" என்பதாம். அதற்குத் திருட்டாந்தமாக முட்டையையும் அதற்குள்ளிருந்து வெளிப்படும் பறவையையும் கூறினார்.

2-வது குறளின் அர்த்தம். "நாம் தினம் நித்திரைபோய் மறுபடி விழித்துக்கொள்கிறோம். இந்த உறங்குதலும் விழித்தலும் எப்படி உயிர்கட்கு இயல்பாய் அடிக்கடி மாறிமாறி வருகின்றனவோ, அதுபோல் மரணமும் பிறப்பும் மாறிமாறி வந்துகொண்டிருக்கும்" என்பதேயாகும்:

மூடத்தனமாய் இக்குறள்களை மறுபிறப்பில்லை யென்பதற்கு ஆதாரமாய்க் கூறுவோர் நாயனாருளிய கீழ்க்கண்ட குறள்களை யுணர்ந்திலர் போலும்,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்"

(பொருள்) அகப்பற்று புறப்பற்றாகிய இருவகைப் பற்றுக்களும் ஒழிந்தால்தான் பிறப்பொழியும்—அப்பற்றுக்களொழியாவிடின் பிறந்திறந்துழல்வதாகிய நிலையாமை காணப்படும்.

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

(பொருள்) இம்மானிட ஜென்மத்தில் ஆசானனுக்கிரகித்த உபதேச மொழிகளின் மெய்ப்பொருளை யுணர்ந்தவர் மறுபடி பிறவியடையாத நெறியை யடைவார்.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

(பொருள்) இச்சையென்பது எல்லா வுயிர்களுக்கும் எக்காலத்தும் கெடாது வருகின்ற பிறப்பினை விளைவிக்கும் வித்தாகும்.

இதை நிரூபிக்க நமது நூல்களிலிருந்து இன்னும் ஆதாரங்களை நாம் காட்டுவது அனுவசியம். இந்த அற்பகால வாழ்வையுடைய ஒரே ஜன்மத்தில் மனிதனைச் சோதித்து அதோடு நித்திய மோக்ஷமோ நித்திய எரிநரகமோ சேர்த்துவிடுவதாயின் அத்தகைய கடவுளும் ஒரு கருணையுடைய கடவுளாகுமோ—பிறந்து ஒருநாள் அல்லது சில நாட்கள் அல்லது நான்கைந்து வருடங்களுக்குள் இறந்துபோகிறவர்களைக் கடவுள் மோக்ஷத்திற் கனுப்புவாரா அல்லது நரகத்திற் கனுப்புவாரா? இதற்குப் பதில் கூறுவது அவருக்கே திண்டாட்டந்தான். முன்பின் பிறவியுண்டென்ற ஒரு உண்மையே இதற்குத் திருப்தியான சமாதானத்தை யளிக்கும். இது முன்னமே எவராலும் மறுக்கமுடியாதவிதமாய் நம் முன்னோரால் நிலைநிறுத்தப்பட்டிருக்கிறது. அதனுற்றான், அமெரிகாவில் கூடிய சர்வமத சங்கத்தில் சுவாமி விவேகானந்தர் இதே கர்மம் மறுபிறப்பு என்பதை நிரூபித்து நிலைநாட்டி யிருக்கிறார்.

முன் பிறப்பிருந்தால் என் ஒருவருக்கும் நினைப்பில்லை? என்ற ஒரு கேள்வி பிறந்தது. அதற்குச் சுவாமிகள் உண்மையான சமாதானமே கூறினர். அதாவது,

"நாம் நேற்று என்ன ஆகாரம் புசித்தோமென்பது சற்று சிந்தித்தால் தான் நினைவிற்கு வருகிறது. தடாகத்தில் இருக்கும் ஜலத்தின் மேல்பாகம் காற்றால் அலையுண்டுகொண் டிருக்கும்போது அதன் அடியில் இருக்கும் பொருள்கள் நம் கண்களுக்குப் புலப்படா. ஜலம் தெளிவாய் அசைவற்று நின்றால் அவை தெரியும். அதுபோல் மனமாகிய கடலில் பூர்வ ஜன்ம சம்ஸ்காரங்களனைத்தும் படிந்துகிடக்கின்றன. மனதின் அலைவையறுத்து அதில் ஆழ்ந்து நோக்கினல், கட்டாயம் பூர்வஜன்ம விஷயங்கள் புலனுகும்" என்றார்.

நம் முன்னோரில் பலர் தங்கள் முன்ஜன்ம விஷயங்களை யறிந்துகொண் டிருக்கிறார்கள். அவர்கள் எதையும் பிரத்தியட்ச அனுபவமாயறிந்தபின்பே கூறினவர்கள். இது சத்தியம். சிலர் தாங்கள் இச்சன்மத்தில் சாயுச்சிய முத்தியடைவதில்லையென்றும், மறுஜன்மத்தில் இன்ன இடத்தில் பிறக்கப்போவதாகவும், ஆன்மா நீங்கும்போது கூறியிருக்கிறார்கள். சீடர்கள் அவ்வாறே அந்த இடம் சென்று பிறந்த குழந்தையின் வாய்ப்பிறப்பைக்கேட்டு உண்மையை யுணர்ந்திருக்கிறார்கள். எங்கோ ஒவ்வொருவர்க்குப் பூர்வ ஜன்மத்தில் செய்திருந்த சாதனுபலத்தால் முன் ஜன்மத்தின் விஷயங்கள் மனதில் உதிப்பதுமுண்டு.

இப்போது அத்தகைய அத்தாட்சி யொன்றிருக்கிறது. வடக்கிலுள்ள அல்வார் நாட்டிலிருக்கும் ஸ்ரீமான் இராய்பகதூர் ஷியாம் சுந்தர் லால், C. I. E., (Rao Bahadur Shiam Sunder Lal, C. I. E., Alwar)

என்பவர் அனேக வருடங்களாக முன் பிறப்பைப்பற்றிய சங்கதியை யறிந்துகொள்ளக்கூடியவர்கள் யாரேனு மிருக்கிறார்களா என்று ஆராய்ச்சி செய்து அவர்களைச் சோதித்துப் பத்திரிகைகளில் வெளியிட்டு வருகிறார். இப்போது அத்தகைய ஒரு ஆளைப்பற்றி அவர் "லீடர்" பத்திரிகையில் வெளியிட்டிருக்கிறார். அதைப்பற்றிய முழு விவரமும் 1923ஆ ஆகஸ்டு மீ 4உ வெளியான ஹிந்து பத்திரிகையில் காணலாம். நாம் இங்கு அதைப் பற்றி சுருக்கமாகக் கூறுகிறோம் :—

"பரதபூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த ஸேலம்பூரிலுள்ள கெயிட்ரி பிராம்மணருடைய புத்திரனாகிய பிரபு என்ற நான்கு வயதுள்ள சிறுவன் தன் பூர்வ ஜன்மத்தைப்பற்றிய விஷயங்களைக் கூறுகிறான் என்று பரதபூர் மகாராஜாவின் மூலமாகவே மேற்படி ஸ்ரீமான் இராய்பகதூர் ஷியாம் சுந்தர்லால், C. I. E., அவர்கள் கேள்விப்பட்டு, அம்மகாராஜாவின் உத்தரவுப்படி அவருடைய காரியதரிசியைக்கொண்டு நேரில்போய் சோதனை செய்தார். 1923ஆ மார்ச்சு மீ அச்சிறுவனை அவன் வீட்டில் சோதனை செய்தார்கள். அவன் பின்கண்ட விஷயங்களைக் கூறினான்.

1. முன் ஜன்மத்தில் நான் ஹாடியோரி என்ற ஊரில் ஹார்பக்ஷ் என்ற பிராம்மணன்.

2. எனக்குக் கூர், ஷாம்லால் என்ற இரண்டு புத்திரர்களும், கோகிலா, போலி என்ற இரண்டு பெண்களும் உண்டு. அவர்கள் முறையே கெர்லியிலுள்ள ராம்ஹட் என்பவனுக்கும் நாவாரிலுள்ள கோகால் என்பவனுக்கும் மணம் செய்விக்கப்பட்டார்கள். நான் முதல் பெண்ணுக்குமட்டும் கொஞ்சம் பணம் பரியமாக வாங்கிக்கொண்டேன். சின்ன பெண்ணுக்கு ஒன்றும் வாங்காமலே கொடுத்துவிட்டேன்.

3. எனக்கு ஹாடியோரியில் ஒரு நல்ல வீடிருந்தது.

4. என் வீட்டிற்குப் பக்கத்தில் ஸ்வரூப ஜாட்டின் வீடிருந்தது.

5. ஸ்வரூபஜாட்டுக்கு ஒரு புதல்வனும் ஒரு புதல்வியுமிருந்தார்கள்.

6. அங்கு கல்பதிந்த உயரமான ஒரு பாதை யிருந்தது.

7. அங்கு ஒரு குளமும், அக்குளத்தில் ஒரு வீடுமிருந்தது. குளக்கரையில் ஒரு கும்மட்டம்போன்ற சமாதியிருந்தது."

என்ற இவற்றையும் இன்னும் தன் வீட்டருகிலிருந்த நல்ல தண்ணீர்க் கிணறுகள், தோட்டங்கள், விருட்சங்கள், தன்னிடம் வேலைசெய்த குமஸ்தா, தன் தொழில், புத்திரன் தொழில், தன் சுற்றத்தார் விஷயம் முதலிய அனேக சங்கதிகளைக் கூறினான். விரிவஞ்சி நாம் அவை முழுமையும் இங்கு வெளியிடவில்லை. ஹிந்து, சுதேசமித்திரன் முதலிய பத்திரிகைகளில் முழு விவரமும் காணலாம்.

அச்சிறுவன் கூறிய யாவும் பதிந்துகொண்டு, இராய்பகதூர் ஷியாம் சுந்தர் லால், பரத்பூர் அரசரின் காரியஸ்தரையும் அச் சிறுவனையும் அழைத்துக்கொண்டு அவன் முன்ஜன்மத்தில் பிறந்திருந்த ஊருக்குச்

சென்றார். அந்த ஊரைச் சிறுவன் கண்டதுமில்லை. அதைப்பற்றிக் கேட்டதுமில்லையென்று அவர் அறிந்துகொண்டார். அதோடு அவ்வளவு சமாசாரங்களை யவனுக்கு மனப்பாடம் பண்ணிவைத்திருக்க முடியாதென்றும் அறிந்துகொண்டார்.

அங்கு சென்றபின் அவ்வூரிலுள்ள மிக்க வயதுமுதிர்ந்த ஆட்களில் ஐந்தாறு பேர்களை யொன்றுகூட்டி (அவர்கள் பெயர்களனைத்தும் பத்திரிகைகளில் காணலாம்.) எல்லா விஷயங்களையும் விசாரித்துச் சிறுவன் கூறியபடி யாவும் உண்மையாகவே யிருக்கக் கண்டார். பிறகு அச்சிறுவனே தான் கூறிய ஸ்தலங்களையும் காட்டினான்.

இவை யாவும் மேற்படி ஸ்ரீமான் இராய்பகதூர் ஷியாம் சுந்தர் லால், C. I. E., என்பவர் அலஹபாத்தில் பிரசுரமாகும் லீடர் பத்திரிகையில் விவரமாய் எழுதியிருக்கிறார். ஹிந்து, சுதேசமித்திரன் முதலிய பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப்பட் டிருக்கின்றன.

நமது மதத்தில் வீண் குற்றங்கூறி நம்மவரில் பாமரர்களை மயக்கமுயலும் பிறமதத்தினர் இதைப்பற்றி மறுத்துக்கூறும் ஆபாச வார்த்தைகளால் நம்மவர் மயக்கங்கொள்ளலாகாதென்பதற்காகவே இதைப்பற்றி வெளியிட நேர்ந்தது. சீடன்.

---

## சந்தா நேயர்களுக்கு ஓர் முக்கிய அறிவிப்பு.

கடந்த ஆகஸ்ட்மீ 1உயிலிருந்து பினங், மலாகா, ஸிங்கபூர் முதலிய இடங்களுக்கு வி. பி. அனுப்பப்பட்டு வந்த வழக்கம் நிறுத்திவிடப்பட்டது. ஆகையால் அந்நாட்டிலுள்ளோர் இனி முன்பணமனுப்பியே சந்தாதாரர்களாகச் சேரவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறோம். புது சந்தாதாரர்களைச் சிபாரிசு செய்வோரும் இதை கவனிக்கக் கோருகிறோம்.



பத்திராதிபர்.

## பகவத்கீதை வசனம்.

(69-ம் பக்கத் தொடர்ச்சி.)

அர்ச்சுனன் "ஏ பகவன்! உம்மைச் சரணடைந்து பக்தியோடு சிந்திப்பதினாலேயே இம்மாயை வெல்லக்கூடுமெனின், வேறு எவ்வழியாலும் ஒழிக்கக்கூடாத இம்மாயையை நிக்கிரகம் செய்யும்பொருட்டு யாவரும் உம்மையேன் சரணமடைவதில்லை?" என்று வினவியதற்குப் பகவான் அருளிச் செய்கின்றார்:—

"ஏ பார்த்த! பூர்வ ஜன்மங்களிற் செய்த பாப கன்மங்களின் வலியால், உள்ளம் பாழாகி, இது நமக்கு நன்மையளிக்கும், இது நமக்கு தீமையளிக்கும் என்ற விவேகம் குன்றி மாயையின் வயப்பட்டோரும், மூடரும், இடம்பம், அகங்காரம் முதலிய அசுர பாவத்தை யடைந்தவரும் என்னைப்

பூஜியார்கள். ஆயினும் என்னைப் பூஜிப்போரும் சிலர் உளர். அவர்க ளியாரென்பதைக் கூறுதும் கேட்பாயாக.

(1) உலகபோக சம்பந்தமான தனம், ஸ்திரீ, புத்திரர் முதலிய ஐசுவரியங்களை யடைய விரும்புவோர், (2) ஆபத்தையடைந்து அதினின்று தப்பவிரும்புவோர், (3) இது நித்தியம் இது அநித்தியம் என்பதையறிந்து ஜனனத்தை யொழிக்கும்பொருட்டு ஞானமடைய இச்சிப்போர், (4) எனது வாஸ்தவ சொரூபத்தைச் சாக்ஷாத்கரித்த மெய்ஞ்ஞானி, இந்நால் வரும் தத்தம் சக்திக்குத் தக்கபடி என்னை யாராதிக்கும் தவமுடையவர்க ளாம்.

இந்த நால்வரில் ஞானி (பிரத்யகான்மாவாகிய தன்னை, பரமான்மா வாகிய என்னில் அபேதமா யறிவனாதலின்) மேலானவனவன். அவன் எனக்கத்தியந்தம் பிரியன், அவனுக்கு நானும் அத்தியந்தம் பிரியன்.

[பொருளை விரும்பி ஈசுவரனைப் பூஜிப்பவன் அர்த்தார்த்திரி எனப்படு வன் (அர்த்தம்=பொருள்). ஆபத்தினின்றும் தப்புவதற்காக ஈசுரனைப் பூஜிப்பவன் ஆர்த்தன் எனப்படுவன் (ஆர்த்தி=ஆபத்து). மோக்ஷமடைய இச்சித்து ஈசுவரனைப் பூஜிப்பவன் சிஞ்ஞாசு எனப்படுவன் (சிஞ்ஞாசு= மோக்ஷவிச்சை யுடையவன்). இவர்கள் மூவரும் சுயநலமாகிய ஒன்றை யிச்சித்தே பகவானைப் பூஜிப்பவர்கள். ஞானியொருவனே நிட்காம பூஜை செய்பவன்.

சுக்ரீவன், விபீஷணன், உபமன்யு முதலியவர்கள் இகலோக போகங் களை விரும்பியும், துருவன் முதலியோர் பரலோக போகங்களை விரும்பி யும் பகவானைப் பூஜித்தார்கள். இவர்கள் அர்த்தார்த்திகள்.

துரோபதை, கஜேந்திரன் முதலியோர் ஆபத்திலிருந்து காப்பாற்றப் படவேண்டிப் பகவானை பூஜித்தார்கள். இவர்கள் ஆர்த்தர்கள்—முசுகுந் தச் சக்கிரவர்த்தி, ஜனகராஜா, உத்தவர் முதலியோர் ஞானமடையவேண் டிப் பகவானைப் பூஜித்தார்கள். இவர்கள் சிஞ்ஞாசுக்கள். இந்த மூவரில் சிஞ்ஞாசு ஞானமடைவதால் நேரே மாயையைக் கடக்கிறான். மற்ற இரு வரும் சிஞ்ஞாசுக்களாகி ஞானமடைந்தபின்பே மாயையைக் கடப்பார்கள்]

"ஏ பகவன்! ஞானியே தங்களுக்குப் பிரியன் எனில் ஆர்த்தன் முதலிய மற்ற மூவரும் அப்பிரியர்களோ?" என்னும் அர்ச்சுனன் சங்கைக் குப் பகவான் "அவர்களும் பிரியர்களே, ஆயினும் ஞானி மிகப் பிரியன்" என்று காரணத்தோடு கூறியருள்கிறார் :—

ஏ பார்த்த! ஆர்த்தன் முதலிய மூவரும் உத்கிருஷ்டமானவர்களே. எனினும் ஞானி என் உண்மைச் சொரூபத்தின்கண்ணே சாட்சாத்கார மாய்ப் பொருந்தியிருத்தலின் அவன் எனது ஆன்மாவே என எனது நிச்ச யம். இத்தகைய ஞானியாதல் பல ஜனனங்களில் கொஞ்சங் கொஞ்ச மாய் ஆசையொழிந்து நிராசையுதிக்கும் கடைசி ஜன்மத்தில் சித்திப்பதா கும்.

(" இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதிலுண்டாம்........") (வாசிட்டம்-சனகராசன் கதை.)

(அத்தகைய ஞானியின் அருமையைப்பற்றி பகவான் அருள்கிருர்.)

அந்த ஞானி அறியப்பட்ட எல்லா வஸ்துக்களும் அதிஷ்டானமாகிய என்னையன்றியில்லை என்கிற உண்மையைப் பரோக்ஷமாயறிந்து, பரமாத்மாவாகிய என்னில் அபேதமாய்ப் பொருந்தியிருப்பன். ஓ கூர்மைபொருந்திய வேலாயுதத்தையுடைய அர்ச்சுனு! அத்தகைய ஞானி அடைதற்கு மிக்க அரியவனுகும்.

ஏ பார்த்த! பூர்வ வாசனையால் தம் அந்தக்கரணங்களில் வைத்த காமாதிகளையுடையோரின் அந்தக்கரணங்கள் முழுமையும் நம்மினின்று பராமுகம் பண்ணப்பட்டு தமக்கு வேண்டுவனவற்றை யளிக்கும் க்ஷுத்திரதேவதைகளை உபாசியா நிற்பர்.

(மாரணம், மோகனம், உச்சாடனம், ஸ்தம்பனம், ஆகர்ஷணம், வசீகரணம் முதலியவற்றின் சம்பந்தமான தாழ்ந்த இச்சைகளையுடையோர் அவற்றை ஈசுரசேவையால் அடைய விரும்புவது அசக்கியமெனக் கருதி அத்தகைய அல்ப இச்சைகளைப் பூர்த்திசெய்விக்கும் க்ஷுத்திர தேவதைகளை ஜபம், உபவாசம் முதலியவற்றுல் உபாசிப்பார்கள்.) எவன் சிரத்தையோடு ஒரு தெய்வத்தைப் பூஜிக்கிருனே அந்தச் சகாமபுருஷனுக்கு அத்தெய்வத்தினிடத்து நிலையான பக்தியை அந்தரியாமியாகிய நான் அளித்திடுவேன். என்னுலளிக்கப்பட்ட பக்தியோடு அந்த அந்நிய தெய்வங்களை நாடோறும் நம்பிக்கையோடு ஆராதிப்பவர் கோரும் காமிய பதார்த்தங்களை யெல்லாம் நானே அவர்களுக் களித்திடுவேன்.

ஏ பார்த்த! இந்த க்ஷுத்திர தெய்வங்களைத் தம் மனதில் மெய்த்தெய்வங்களென்றே கருதி ஆராதனம் செய்யும் அற்ப மனமுடையவர்கள் அடையும் பலன் வீணுக நாசமுடையது. அவர்கள் ஆராதிக்கும் அத்தெய்வங்களும் நாசமுடையனவாம். அத்தேவதைகளை யாராதிப்பவர்கள் அத்தேவதைகளையே யடைவார்கள். பரமான்மாவாகிய என்னை யாராதிப்பவர்கள் என்னையே யடைவார்கள்.

[எவனெவன் எதையெதை யாராதிக்கிருனே அதையதையே யடைவன். பிரத்யகான்மாவான தன் நிஜவடிவை யறிந்து பரமாத்மாவை அபேதமாய்ச் சாட்சாத்கரித்தவன் அப்பரமான்மாவையே யடைகிருன்.

" * * *

ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது
மியாதொன்று பாவிக்க நான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்க முறலாம்

* * * * " (தாயுமானவர்)]

"ஓ பகவானே! தங்களை நேரே யுபாசிப்பதால் அழிவற்ற உத்தமப் பயனை யடையலாமெனில், யாவரும் தங்களையே உபாசிக்காத காரணமென்ன?" என்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் அருளிச்செய்கின்றார் :—

ஏ பார்த்த! விவேகமில்லாத புருடர்கள் பகவானாகிய நான் நித்தியன், அழிவற்றவன், ஒப்புவமையில்லாதவன், அத்துவிதானந்த சொரூபன் என்று அறிகிறார்களில்லை. மற்றோ இவன் கிருஷ்ணன், நந்தகோபன் மகன், நம்போல் விவகாரங்களோடு கூடியிருப்பவனாதலின் நித்தியானந்தனலன், சாதாரண சீவர்களில் இவனும் ஒருவன் என்றே கருதாநிற்பர்.

"ஏ பகவன் தாங்கள் யாவரிடத்துமில்லாத அனேக விசேஷ குணங்களும் சகலஐசுவரியங்களும் பொருந்தியுள்ள சர்வேசுரனாக விருக்கத் தங்களை அவிவேகிகள் சாதாரண மனிதனாகவும் சீவனாகவும் கருதுவானேன்?" என்ற அர்ச்சுனன் ஐயத்தை நீக்குவான் பகவான் அருளிச்செய்கிறார் :—

ஏ பார்த்த! நான் பிரகிருதியாகிய மாயையில் மறைந்திருப்பவனாதலில், உலகமாயையில் மனம் பொருந்தியுள்ள ஞான சூனியர்கள் ஜனன மரணமற்ற என்னை அறிந்துகொள்வதில்லை. முன் சென்றவைகளும், இப்போதுள்ளவைகளும், இனிமேல் உண்டாகுபவைகளுமாகிய சர்வபிராணிகளையும் நான் அறிந்துளேன். உலகிலுள்ள சகலப் பிராணிகளும் ஜனிக்கும்போதே இச்சை துவேஷம் என்னும் குண வேறுபாட்டால் உண்டாகும் மோகத்தில் அழுந்தியவர்களாய் தேகபாவனையைப் பொருந்தியிருப்பதால் அந்தரியாமியாகவுள்ள என்னை அறியமாட்டார்கள்.

[சீவர்கள், இராகத்துவேஷங்களோடு பொருந்தியவர்களாய் மனமாயையின் வழியே யுழன்றுகொண் டிருப்பதால் அத்தகையோர் பரமான்மாவின் உண்மைச் சொரூபத்தை யறியமாட்டார்கள். பரமேசுவரனை யுபாசிக்கிறவர்களாயினும் இச்சையையொழித்து மனதின் பசையறுத்து, பிரத்யகான்மாவாகிய தன்னை யறிந்தாலே பரமான்ம சொரூபத்தை அறியலாகும்.]

(மற்றப்படி எத்தகையோர் தம்மை யாராதிப்பர்கள் என்பதைப் பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! முன் ஜன்மங்களிற் செய்த நல்வினைப்பயனையுடைய அதிகாரிகள், பாவகர்மங்கள் முழுமையும் ஒழியப்பெற்று, மாயையின் மயக்கில் சிக்காதவராய் பரமேஸ்வரனாகிய என்னிடத்தில் நிலைக்கப்பெற்ற மனதோடு என்னையே ஆராதிப்பார்கள்.

(இப்போது பகவான், சில கேள்விகள் கேட்கும்படி அர்ச்சுனனைத் தூண்டும்பொருட்டுப் பின்வரும் விஷயத்தைக் கூறியருள்கின்றார். பின்வரும் 8-வது அத்தியாயத்தில் அதன்பொருள் விரித்துக் கூறப்படுகிறது.)

ஏ பார்த்த! பிணி, மூப்பு, பிறப்பு, இறப்பு ஆகியவற்றை யொழிக்கும்பொருட்டு ஞானத்தை யடையக்கருதி பரமேசுரனுகிய என்னை யாசிரயித்து பலேச்சையின்றி கர்மங்களைச் செய்யும் அதிகாரிகள், தத்பத இலக்ஷியார்த்தமான பிரம்மத்தையும், அதனையறியும் துவம்பத இலக்ஷியார்த்தமான பிரத்யகான்மாவையும், அனுஷ்டிக்கவேண்டிய சிரவணுதிகருமங்களையும் அறியாநிற்பர்.

அவ்வாறு என்னைச் சதா சிந்தியாநிற்கும் அதிகாரிபுருடர், என்னிடத்தில் பொருந்திய மனதுடையவர்களாய், இத்தேகத்தை விட்டு நீங்கும் போது பரமான்மாவாகிய என்னை யுள்ளபடியே யறிவார்கள்.

[பகவானை மேற்கண்டபடி சதா சிந்திக்கும் புருஷர்களின் இந்திரிய முதலிய கரணங்கள் ஒருமைப்படாவிடினும், பகவானது அருளாலும் பூர்வாப்பியாச சமஸ்கார வலியாலும் மரணகாலத்தில் அவர்களுடைய அந்தக்கரணம் பரமான்மாகாரத்தையே யடையும். ஆதலின் அவர்கள பக்தி யோகத்தால் கிருதார்த்தராவார்கள் என்று பகவான் அருளிச்செய்தார்.]

(தொடரும்) சீடன்.

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.



## ஓட்டு! ஓட்டு!! ஓட்டு!!!

இப்போது நம் மாகாணமெங்கும் "ஓட்டு! ஓட்டு! ஓட்டு!" என்பதே பெருங்கோஷ்டமாக விருக்கிறது. பத்திரிகைளிலும், நகரச் சுவர்களிலும் எங்கும் இதைப்பற்றிய விளம்பரமே அதிகமாக விருக்கிறது. எதை யோட்டுவதோ என்பது கேள்வி. தற்காலம் நம்மவரிற் பெரும்பாலார் கொஞ்சநஞ்சமிருக்கும் தேசாபிமானத்தையும் ஓட்டும் வழியில் நடந்துகொண்டிருக்கிறுர்கள்.

நம்மவரில் வாக்களிக்கும் உரிமைபெற்றிருப்போரில் பெரும்பாலர் கல்வியில்லாதவர்களாக அல்லது மிகக் குறைந்த கல்வியுடையவர்களாக விருக்கிறுர்கள். நகரச் சங்கங்களுக்கும், மந்திரி சபைகளுக்கும் அவயவிகளாகச் செல்ல விரும்புவோர்களில் எத்தகையோர்களுக்கு நாம் வாக்களிக்க வேண்டுமென்பதாவது அவர்கள் அங்கு சென்று என்ன செய்ய வேண்டுமென்பதாவது இவர்களுக்குத் தெரியாது.

அத்தகையோர்க்கு நாம் கூறுவதாவது :—

1. நகர சங்கத்திலாவது வேறெந்த சபையிலாவது அவயவியாக அமர்ந்தால் நமக்குச் சில அனுகூலங்கள் கிடைக்கும், கௌரவம் கிடைக்கும் என்ற நோக்கமுடைய அபேட்சகர்களை யுங்கள் மனதினின்றும் ஓட்டுங்கள்.

2. வாக்குப் பெறவேண்டிய காலத்தில் மட்டும் உங்கள் வீடுகளுக்குப் பன்முறை வந்து ஆசனங்கூட வேண்டாமென்று தெருத்திண்ணை

யின்மேலேயே உட்கார்ந்து உங்களைத் தட்டிக்கொடுத்து உங்கள் வாக்கைப்பெற்று, தம் பதவியை யடைந்தபின் உங்களுக்கு தரிசனம் கொடுப்பதே தங்கள் அந்தஸ்துக்குத் தாழ்வென்று கருதுவதோடு, ஊரார் நன்மை யெக்கேடு கெட்டாலும் கெடட்டும், அதிகாரிகளின் தயவையும், கௌரதா பட்டத்தையும் பெறக்கருதி அவர்கள் பிரியப்படி தலையாட்டும் ஆசாமிகளுக்கு வாக்களிக்கும் எண்ணத்தை யுங்கள் மனதினின்றும் அடியோடு ஓட்டுங்கள்.

3. அபேக்ஷகர் செல்வவந்தர்—மிக்க செல்வாக்குடையவர்—நாம் அடிக்கடி சந்திக்கிற மனிதர்—நம் சுற்றத்தார், சிநேகிதர்கள் வந்து சிபாரிசு செய்கிறார்கள் — அப்படிப்பட்டவர் நம் வீடுதேடி வந்துவிட்டார்—இவர் வட்டிக்கு யாவர்க்கும் பணம் கொடுப்பவர், இவர் தயவு நமக்கும் எப்போதேனும் வேண்டியிருக்கும்—என்ற காரணங்களுக்காவது—நாம் ஒருநாள் வேலைக்குப் போகாமல் வாக்களிக்கச் செல்வதற்காக நமக்கு ஐந்து ரூபாய் கொடுக்கிறார்கள், கௌரவமாய் மோடாரில் ஏற்றிச் செல்கிறார் என்கிறவைகளைக் கருதியாவது வாக்களிக்கக் கருதும் இழிவான நோக்கத்தை அடியோடு ஓட்டிவிடுங்கள்.

4. சுயநலத் தியாகம் செய்யச் சித்தமாகவிராத எவனும் பொதுநல ஊழியம் செய்யக்கூடியவனாகான் என்பது உண்மை.

ஒருவர் நகரச் சங்கத்திற்கோ வேறெந்த பொதுச்சபைக்கோ அவயவியாகச் செல்வதாயின் அவருடைய சொந்த காரியங்களில் அடிக்கடி அனானுகூலம் நேரிட்டே தீரும். அப்படியிருக்க அப்பதவியையடைய விரும்புவானேன் ?

இதற்கு, “ நம் நாட்டிற்கு நன்மை செய்யவேண்டும் என்ற எண்ணங்கொண்டு சுயகாரியங்களுக்கு இடையூறு நேர்வதையும் சட்டைசெய்யாமல் சுயநலத்தியாகம் செய்து அப் பொதுநல ஊழியம் செய்ய முன்வருகிறார்” என்று பதில் கூறலாகும்.

அப்படிப்பட்டவர் “ எனக்கு இத்தொண்டு செய்யப் பிரியமிருக்கிறது. நீங்கள் எனக்கு வாக்களித்து என்னை அச்சங்கத்தில் உங்கள் பிரதிநிதியாக அனுப்பினால் என்னால் கூடியவரையில் உங்கள் நன்மையின் பொருட்டு உழைக்கச் சித்தமாயிருக்கிறேன் ” என்று அறிவித்துவிடுவார். அவ்வளவேயன்றி அதற்காகப் பெருந்தொகையான பணத்தைச் செலவு செய்து பகீரதப் பிரயத்தனம் செய்யமாட்டார்.

இக்காலத்தில் அபேக்ஷகர்கள் வாக்களிக்கும் சுதந்தரமுடையவர்களை மயக்கி வசப்படுத்துவதற்காக அந்தந்த விடங்களுக்குத் தகுந்த ஆட்களை யேற்படுத்தி வேலைசெய்கிறார்கள். அவர்களுக்குப் பணம், சால்வை முதலியவைகளைப் பரிசளிக்கிறார்கள். தாங்களும் நேரில் சென்று வாக்களிப்போரை வேண்டிக்கொள்கிறார்கள்; அபேக்ஷகர்களுக்குள் போட்டி

யுண்டாகி ஒருவரை யொருவர் வெல்வதற்காக வேலை செய்யும்போது அத்துமீறிய காரியங்களும் நடக்கின்றன. பணமோ இலட்சியமின்றிப் பல வழிகளில் செலவழிக்கப்படுகிறது.

இப்போது சுயநலத்தைத் தியாகம் செய்துகொண்டு பொது நலத்திற்கு உழைக்க இத்தகைய சிரமம் எடுத்துக்கொண்டு பணத்தையும் செலவுசெய்யும் சுபாவம் இயற்கையில் உடைய மனிதர் இருக்கிறார்களா என்பதே நமக்கு மிக்க வியப்பை யளிக்கிறது. உண்மையில் பொதுநலத்திற்கு உழைப்பதற்கே முன்வருவோர், இன்னொருவர் தக்கவர் அதே பதவியையடைய முயல்வதைக் கண்டால் அவர்களோடு போட்டிக்கு வேலை செய்வார்களென்று நினைப்பதற்கில்லை.

பெரும்பாலான அபேக்ஷகர்கள் சபையில் அவயவிகளாக அமர்ந்ததே வாக்களித்த ஏழைகளை யடியோடு மறந்துவிடுகிறார்கள். அவர்கள் வசிக்கும் பிரதேசத்தைப் பிறகு எட்டிப்பார்ப்பதேயில்லை. தாங்கள் எவ்வாறு நடந்துகொண்டால் அதிகாரவர்க்கத்தினர்களின் தயவைப் பெறலாமோ அவ்வாறு நடக்கவே தொடங்கிவிடுகிறார்கள்.

ஆகையால் வாக்களிப்போர் அபேக்ஷகர், சீவகாருண்யமுடையவரா, சுயநலத்தைக் கருதாமல் அன்னியரின் நலத்திற்காகப் பாடுபடும் சுபாவமுடையவரா, சபையில் நமக்குள்ள குறைகளை யஞ்சாது எடுத்துக்கூறி அவற்றை நீக்க வாதாடும் தைரியமுடையவரா, அதிகார வர்க்கத்தினரின் தயவைப்பெற்று அவர்களிடம் பட்டம் வாங்கவேண்டுமென்ற ஆசையில்லாதவரா என்று நன்றாக அறிந்துகொண்டு தகுதியுடையோர்க்கே வாக்களிக்கவேண்டும். தேச ஊழியத்திற்காகப் பணம் சேர்க்கும் சங்கத்திற்கு உதவிவேண்டுமென்று கேட்டால் 5 ரூபாயும், கவர்னர் ஜெனரல் வருகிறார் அச்சமயம் வாணவேடிக்கை நடத்தவேண்டும் என்று பணம் தண்டுவோர்க்கு 500 ரூபாயும் கொடுக்கும் தேசாபிமானச் சிங்கங்களுக்கு வாக்களிக்கக் கனவிலும் கருதாதீர்கள். இவ்விஷயத்தில் வாக்களிப்போர் ஜாக்கிரதையாய் நடந்துகொள்ளாமல் சிபாரிசையும், செல்வாக்கையும், மோட்டாரையும் கருதி, சுயநலத்தையே உள்ளத்தில் வைத்துக்கொண்டு வெளிக்கு ஊராருக்கு நன்மை செய்வதற்கே அவயவியாகச் செல்ல விரும்புவதாக நடிப்போர்க்கு வாக்களித்துவிட்டால் நமக்கு நாமே கேடு விளைவித்துக் கொண்டதாகும் என்பதை மறவாதீர்கள். ஓர் நண்பன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(79-ம் பக்கத் தொடர்ச்சி.)

அச்சமயம் அருகில் எங்கோ ஆள் அரவம் கேட்டதாய்த் தெரிந்தது. கறுப்பண்ணன் "ஆ! இங்கு உற்றுக் கேட்பவர்கூட இருக்கிறார்களா" வென்று சட்டென்று வெளியிற் சென்றான். ஆனந்தஸிங் உடனே அச் சவத்தின் நெற்றி உச்சி முதலிய விடங்களில் கரத்தை வைத்துப்பார்த்து,

பனிக்கட்டிபோல் விறைந்திருக்கக் கண்டு "சரி சரி, இது சவத்தின் விறைப்பே" யென்று தனக்குத் தானே கூறிக்கொண்டான்.

அதற்குள் கறுப்பண்ணன் திரும்பி வந்துவிட்டான். ஆனந்தஸிங்கின் செய்கையை யவன் காணவில்லை. வந்தவுடனே "நீ ஏதாவது சத்தத்தைக் கேட்டாயா?" என்றதற்கு ஆனந்தஸிங் இல்லை என்றான். கறுப்பண்ணன் "அப்படியானால் நான் நினைத்தது பிசகே. இனி விவகாரம் நடக்கட்டும்" என்றான்.

ஆனந்தஸிங் :—ஆம். விஷயத்தைக் கூறு. என்னாலாகவேண்டியதென்ன? இதுகாறும் நடந்ததெல்லாம் கூடி இக்கன்னிகை இறந்துபோயிருக்கிறாள். இவ்வளவே எனக்குத் தெரிந்தது. நான் இதிற் செய்யவேண்டியதென்ன?

கறுப் :—"இவளைக் கொன்றவர்களைக் கண்டுபிடிக்கவேண்டும்" என்றான்.

இதைக்கேட்ட ஆனந்தஸிங் திடுக்கிட்டு "கொலை செய்தவர்களா! சவத்தின் நிலைமையால் அவள் அக்கிரமமாய்க் கொல்லப்பட்டதாய்த் தெரியவில்லையே" என்றான்.

கறுப் :—இவள் விஷத்தால் கொல்லப்பட்டாள்.

ஆன :—அப்படியானால் உனக்கு யார்மேலாவது சந்தேகமுண்டாயிருக்கிறதோ?

கறுப் :—உண்டு.

ஆன :—விஷத்தால் கொல்லப்பட்டாளென்று எப்படித் தெரியும்? சவச்சோதனை நடந்ததோ?

கறுப் :—இல்லை. அவளே கூறினாள்.

ஆன :—அவள் அதையறிந்துகொண்டிருந்தால், கொன்றவன் யாரென்று தெரிவித்தாளோ?

கறுப் :—இல்லை.

ஆன :—விஷம் எப்படி கொடுக்கப்பட்டது?

கறுப் :—அவளுக்குத் தெரியாது.

ஆன:—இது அதிசயமே. விஷம் வைக்கப்பட்டதென்று தெரிந்துகொண்டபோது யார் கொன்றதென்று தெரியவில்லையா?

கறுப் :—அப்படி யவளுக்குச் சந்தேகம் தோன்றியிருந்தாலும் அந்த ஆளை வெளியிடமாட்டாள்.

ஆன :—ஏன்?

கறுப் :—அவளுக்குள் காரணம் இருக்கிறது.

ஆன :—நீ சவத்தைச் சோதனை செய்ய ஏற்பாடு செய்யவேண்டும்.

கறுப் :—அது அனாவசியம். குற்றவாளியைக் கண்டுபிடித்த பின் செய்துகொள்ளலாம். புதைத்து ஒரு வருடமாகுமட்டும்கூட விஷத்தின் அடையாளம் தேகத்தில் இருக்கும்.

ஆன :—எதற்கும் நிச்சயமா யறிந்துகொள்வது நலம்.

கறுப் :—விஷம் வைக்கப்பட்டதற்கு வேண்டிய அத்தாட்சிகள் அனேகம் என்னிடமிருக்கின்றன. குற்றவாளி யகப்பட்டுவிட்டால் யாவும் ருசுப்படுத்துகிறேன்.

இவன் பேச்சுகளில் யோசனையும் தக்க காரணமும் அடங்கியிருப்பதைக் கண்ட ஆனந்தலிங் இவனை யுள்ளேயே மெச்சிக்கொண்டான். முன் இவன்மேலிருந்த சந்தேகம்கூடக் கொஞ்சம் குறைந்துவிட்டது.

ஆன :—"உனக்கு யார்மேல் சந்தேகம்?" என்றான்.

கறுப் :—அது வெறும் சந்தேகமே. நீ விவகாரத்தில் நுழைந்து உன் யோசனைப்படி யார்மேலாவது சந்தேகம் ஏற்பட்டபின் இருவரும் ஒத்திட்டுப் பார்த்துக்கொள்ளலாம். நான் இப்போதே யென் சந்தேகத்தைக் கூறிவிட்டால் உன் யோசனை யதன்மேலேயே செல்லும்.

இவன் தந்திர சாமர்த்தியத்தைக் கண்டு ஆனந்தலிங் வியப்படைந்து "நான் முதலில் பற்றிச்செல்ல எந்த உளவாவது வேண்டுமே" என்றான்.

கறுப்பண்ணன் வா என்கூடவென்று ஆனந்தலிங்கை மேல்மாடியிலிருக்கும் ஒரு அறைக்கு அழைத்துப்போய் அதன் கதவைத்திறந்து தான் வாசற்படியண்டையே நின்று, ஆனந்தலிங்கை நோக்கி அறைக்குள் சுட்டிக்காட்டி "இனி யுன்வேலையை நடத்து" என்றான்.

அந்த அறை நன்றாய் அலங்கரிக்கப்பட்ட ஒரு விசாலமான பள்ளியறை. ஆனந்தலிங் இது இறந்தவள் பள்ளியறை, இங்குதான் அவள் இறந்தாள் என்று தெரிந்துகொண்டு கருப்பண்ணனை நோக்கி,

"இந்தத் துக்கசம்பவம் நடந்ததுமுதல் இதற்குள் யாராவது வந்திருக்கிறார்களோ?" என்றான்.

கறுப் :—நானும் அம்பாலிகையின் தோழியுமட்டுமே வந்திருக்கிறோம்.

ஆன :—யார் அம்பாலிகை?

கறுப் :—இறந்தவள் பெயர் அம்பாலிகை.

ஆன :—அத்தோழிமேல் சந்தேகமுண்டோ?

கறுப் :—நீயே கண்டறியவேண்டும்.

ஆன:—உனக்குண்டோ?

கறுப் :—இல்லை.

ஆன :—"அவ்வளவு போதும். இனி நீ போகலாம்" என்றான்.

கறுப்பண்ணன் "நான் கூடத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

அவன் சென்றதே ஆனந்தலிங் அறையின் கதவை மூடி யுட்பக்கம் பூட்டுபோட்டுக்கொண்டு, பூட்டின் துவாரத்தைத் தன் கைக்குட்டையாலடைத்துவிட்டான். இது மிக்க நுட்பமான விவகாரமென்றும், கொஞ்சம்

பிசகிவிட்டால் ஏமாந்து முட்டாளாய் விடுவோமென்றும், அதோடு உண்மைக் குற்றவாளி தப்பித்துக்கொள்ளவும் நிரபராதி தண்டனை யடையவும் நேரிடுமென்றும் அறிந்துகொண்டான். ஆனால் அத்தகைய விவகாரத்திற்கு ஆனந்தஸிங் பூரணமாய்த் தகுதியுடையவனே.

அவன் அங்குள்ளவற்றை மிக்க ஜாக்கிரதையோடு அணுவளவு வஸ்துவைக்கூட விடாமல் சோதனை செய்தான். முதல்முதல் இறந்தவளுடைய புகைப்படமே யவன் கையிற் சிக்கியது. அது பின்னால் உபயோகமாகுமென்று ஜேபியில் வைத்துக்கொண்டான். பிறகு அங்கு அவனுக்கு அகப்பட்ட உளவுகள் பூரணமான அத்தாக்ஷிகளாகவும் குற்றவாளியை நேரே காட்டக்கூடியவைகளாகவு மிருந்தன. ஆனந்தஸிங் அவற்றைப் பார்த்தபின் சற்றுநேரம் சிந்தித்து,

“ஆகா! இது மிக்க தந்திரசாமார்த்தியமான விளையாட்டு. ஆயினும் கொஞ்சம் அளவுகடந்துவிட்டது. புளுகத் தெரியாதவர்கள் புளுகினால் இப்படித்தான் கொஞ்சம் அதிகப் பொய்யைச் சேர்த்துவிட்டு அகப்பட்டுக்கொள்வது வழக்கம்” என்று மெதுவாய்த் தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

ஆனந்தஸிங்குக்குச் சவம் இருக்கும் அறையில் தான் சற்று நேரம் தனியாய் இருக்கவேண்டுமென்று மனதில் ஒரு ஆவலுண்டாயிற்று. அதற்குக் காரணம் தோன்றவில்லை. அவன் சுபாவ அனுபவப்படி, அவ்வாறு தோன்றினால் அதில் தனக்கு அனுகூலமான ஏதோ விசேஷம் இருக்கிறதென்று அவன் அறிவான். அதனால் இதற்குக் காரணம் பின்னால் புலப்படும், எப்படியாவது நாம் ஒரு தந்திரம் கண்டுபிடித்து அப்படிச் செய்தே தீரவேண்டும் என்று எண்ணிக்கொண்டான். சற்றுநேரத்திற்குள் ஒரு துணிகரமான யோசனை யவன் மனதிற்பட்டது.

ஆனந்தஸிங் அறையை விட்டிறங்கிக் கூடத்திற்கு வந்தபோது கறுப்பண்ணன் மிக்க ஆவலோடு தன் வரவை யெதிர்பார்த்துக்கொண் டிருக்கிறான் என்று அவன் மனதிற்பட்டது.

கறுப்பண்ணன் அவனை யொரு சிறிய அறைக்கு அழைத்துப்போய் உட்காரவைத்து,

“உனக்குள் ஒரு வழி யேற்பட்டதா?” என்றான்.

ஆன:—ஆம்.
கறுப்:—உனக்கு யார்மேல் சந்தேகம் ஏற்பட்டது?
ஆன:—முதலாவது இந்த மனோகரன் என்பவன் யார்?
கறுப்:—இறந்தவளுடைய சிற்றப்பன் புத்திரன்.
ஆன:—நீ யவளுடைய மாற்றாந்தாய் புத்திரன்.
கறுப்:—ஆம்.
ஆன:—இப்போதிருக்கும் சந்தர்ப்பப்படி அவள் இறந்துபோய்விட்டால் அவளுடைய திரண்ட ஆஸ்தி யுனக்கே கிடைக்கும்.

கறுப் :—ஆம்.

ஆன :—இப்போதிருக்கும் மரண சாசனம் இல்லாவிட்டால் சட்டப்படி யவனே அவள் ஆஸ்தியை யடைவான்.

கறுப் :—ஆம்.

ஆன :—இப்போது மனேகரன் இந்த மரணசாசனம் செல்லத்தக்கதல்ல வென்று வழக்காடவெண்ணி யிருக்கிருனல்லவா ?

கறுப் :—ஆம்.

ஆனந்தலிங் இச்சங்கதிகளை யெல்லாம் அறையில் அகப்பட்ட பத்திரங்களால் தெரிந்துகொண்டான். அவை யிவன் கண்களுக்குச் சுலபமாய் அகப்படவேண்டுமென்றே வைக்கப்பட்டிருந்தவைபோல் அவன் மனதிற் பட்டது.

சற்றுநேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள். கறுப்பண்ணன் மனம் மிக்க ஆவலோடு பதைத்துக்கொண்டிருந்தது. அவன் ஆனந்தலிங்கை நோக்கி,

"இப்போதகப்பட்ட ருசுவுகள் மனேகரனை யுடனே கைது செய்யக் கூடியவிதமாய் நேரே யவனைக் குற்றவாளியென்று காட்டுகிறதல்லவா?" என்ருன்.

ஆன :—இல்லை.

கறுப்:—ஏன் அவள் மரணத்தினல் அவனுக்கு அனுகூலமிருக்கிறதென்று தெரிகிறதல்லவா ?

ஆன :—ஆம். உண்மையாகவே அவனுக்கு அனுகூலமிருக்கிறது. ஆனல் அதைவிட இன்னெரு மனிதனுக்கு அவள் மரணத்தில் மிக்க அனுகூலமிருக்கிறது.

கறுப் :—யாருக்கு ?

ஆன :—"உனக்குத்தான்" என்ருன். (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரம்

### ஜபானில் பயங்கரமான பூகம்ப விபத்து.

இந்த செப்டெம்பர்மாத ஆரம்பத்தில் ஜபானில் கேட்போர் மனங் கலங்கும்படியான பூகம்ப விபத்துகள் நேர்ந்தன. டோகியோ, யோகஹாமா, காமகூரா, யோகஸ்காகா முதலிய நகரங்களில் பயங்கரமான பூமியதிர்ச்சியுண்டாகிப் பிளவுகள் ஏற்பட்டு பூமியின் கீழிருந்து தீச்சுடர் கிளம்பி கட்டிடங்களெல்லாம் அழிந்து பஸ்மீகரிக்கப்பட்டன. டோகியோவில்மட்டும் இலட்சத்து ஐம்பதினயிரம்பேர் மாண்டதாக முதல்சங்கதி வந்தது. மேற்கண்ட விடங்களிலிருந்த கடற்படை யாஸ்தானங்களனைத்தும் அழிக்கப்பட்ட பேட்டைகள், தொழிற்சாலைகள், பிரம்மாண்டமான கட்டிடங்கள் யாவும் அப்படியப்படியே அழிந்து குவிந்துவிட்டன. கடலலைகள் பெருகிப் பல ஊர்களை முழுகடித்துவிட்டன.

ஜபானிய இளவரசராகிய மட்ஸிகூடா என்பவர் பூகம்பத்தால் காய மடைந்து மரித்தார். அரசரின் மாளிகை பாதிக்குமேல் தீக்கிரையாகியது. பல விடங்களில் மாண்ட ஜனங்கள் மிருகங்கள் முதலியவைகளின் தொகை யின்னும் தெரியவில்லை. நூற்றுக்கணக்கான மைல்கள் தூரம் இரயில் பாதையும் பாலங்களெல்லாமும் அழிந்துபோயினவாம். டோகியோ நக ரின் ஜனத்தொகை 21 இலக்ஷத்து 73 ஆயிரம் எனின் (சென்னை ஜனத் தொகை 5 இலக்ஷத்துச் சொச்சம்) எவ்வளவு பெரிய நகரமாக விருக்க வேண்டும். அந்நகரம் அழிவதாயின் என்ன கோரம்.

பின்னால் 6-9-'23-ல் வந்த செய்தி.

10 இலட்சம் ஜனங்கள் வீடின்றித் தவிக்கின்றனர். 15 இலக்ஷம் மாண்டனர். மந்திரிகளில் இருவர் ஒகேன், நிராகமா என்பவர்கள் காணப் படவில்லை. அரசகுமாரர்கள் கெய், யாமஷானு, ஷிமிஸவி, என்ற மூன் றுபேர் மாண்டனர். கேயின் என்ற அரசகுமாரரும் தளகர்த்தரும் காணப் படவில்லை. இரண்டு மாஜி பிரதம மந்திரிகளும் இறந்தனர். முதல்தேதி முதல் எல்லா தந்திப்போக்கு வரத்துக்களும் தடைப்பட்டிருக்கின்றன. டோகியோவில்மட்டும் 5 இலட்சம்பேர் மாண்டதாகக் கணக்கிடப்பட் டது. யோகஹாமாவில் 40 ஆயிரம்பேர் மட்டுமே யிருக்கிறார்கள். மற்ற பேர் இறந்தோ ஓடியோ போய்விட்டனர். டோகியோவில்மட்டும் 85 இலட்சம் மூட்டையரிசி நாசமாயிற்று. பல இரயில் ஸ்டேஷன்கள் எரிந்து போயின. யோகஹாமா பட்டணம் சாம்பலாய்விட்டது. இராஜ குடும் பத்தில் பலர் இறந்தனர். கஷ்டம் சகிக்கமுடியாமல் எண்ணிறந்த பேர் நதியில் வீழ்ந்து மாண்டனர். நோயாளிகளும் வயோதிகரும் மிதிப்பட்டு மாண்டனர். மொத்தம் 20 ஆயிரம் சதுரமைலுக்கு விபத்து நேர்ந்தது. கடைசியில் மாண்டவர் தொகை எண்ண ஒண்ணாததென்று கூறப்படு கிறது.

அமெரிகா மிக்க உதவி செய்யத் தொடங்கியிருக்கிறது. இங்கிலாந் திலும் சீனா, ஆஸ்டிரியா நாடுகளிலும் உதவிசெய்யப் பணம் சேர்க்கப்படு கிறது. நம் நாட்டிலும் மிக்க அனுதாபமுண்டாகி உதவிசெய்ய ஆங்காங்கு கூட்டங்கள்கூடி நிதி வசூல்செய்ய ஆரம்பிப்பதாய்த் தெரிகிறது. அந்தோ மிக்க பரிதாபம்—மிக்க பரிதாபம்—ஆண்டவன் கட்டளையை யாரே யறி யவல்லர். மனிதன் அகங்காரம்கொண்டு இயற்கையை வெல்வதாகவும், பஞ்ச பூதங்களையும் அடக்கியாள வல்லேனென்றும் அகம்பாவமடைகி றான். பூதங்களின் இத்தகைய செயல்களை நோக்கும்போது மனிதன் தன் சக்தி இம்மியளவு கூட கணக்கிடத் தக்கதல்லவென்று உணர்ந்து, சர்வ வல்லமையுடைய ஒருவனே சக்திமான் என்றறிந்து, அகங்காரத்தை யொழித்து அவன் அடியாற்கடியேன் என்று அடங்கலே தகுதியாகும்.

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## உருத்ரோத்காரிஞூ ஐப்பசிமீ—கலி 5025-சாலிவாகனம் 1846
## பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342
## இங்கிலிஷ் 1923ஞூ அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | புத | அ20-13 | உத்36-58 | அ36-58சி | விஷுபுண்யகால 31-55 |
| 2 | 18 | வியா | நவ19-53 | திரு38-45 | சித்60 | சாஸ்வதிபூஜை |
| 3 | 19 | வெ | தச21-18 | அவி42-5 | சித்60 | விஜயதசமி, சோபபத |
| 4 | 20 | சனி | ஏகா24-5 | சதை46-48 | அ46-48சி | மத்வ, சர்வ ஏகாதசி |
| 5 | 21 | ஞா | து28-3 | பூரட்52-25 | சி52-25அ | பீமநதிபுஷ்கரம் |
| 6 | 22 | திங் | திர33-3 | உத்ரட்58-55 | சித்60 | பிரதோஷம், கரிநாள் |
| 7 | 23 | செவ் | சது38-40 | ரேவ60 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 8 | 24 | புத | ○44-40 | ரேவ5-58 | மர60 | பௌர்ணமி |
| 9 | 25 | வியா | பிர50-50 | அசு13-15 | அ13-15சி | மழை 9-க்குள் |
| 10 | 26 | வெ | துதி57-10 | பா.✲.20-43 | சித்60 | கிருத்திகை |
| 11 | 27 | சனி | திரி60 | கிரு28-5 | அமி60 | திருதினஸ்பிருக் |
| 12 | 28 | ஞா | திரி3-15 | ரோ35-8 | சித்60 | |
| 13 | 29 | திங் | சது8-50 | மிரு41-40 | அ41-40சி | |
| 14 | 30 | செவ் | பஞ்13-40 | திரு47-20 | ம47-20சி | |
| 15 | 31 | புத | சஷ்17-28 | புன51-50 | சித்60 | |
| 16 | 1 | வியா | சப்19-55 | பூச53-50 | அ53-50சி | |
| 17 | 2 | வெ | அ20-30 | ஆயி55-50 | மர60 | |
| 18 | 3 | சனி | நவ19-10 | மக54-58 | அ54-58சி | |
| 19 | 4 | ஞா | தச15-55 | பூர52-15 | சி52-15அ | |
| 20 | 5 | திங் | ஏ10-48 | உத்47-48 | சித்60 | |
| 21 | 1923ஞூ நவம்பர்மீ 6 | செவ் | து3-55 திர55-45 | அஸ்41-45 | சித்60 | இராத்திரி நரகசதுர்த்தி ஸ்நானம் |
| 22 | 7 | புத | சது46-43 | சித்34-43 | சித்60 | தீபாவளி பண்டிகை, மாச சிவராத்திரி |
| 23 | 8 | வியா | ●அ37-3 | சுவா27-3 | அ27-3சித் | கேதாரிகௌரி விரதம், அமாவாசை |
| 24 | 9 | வெ | பிர27-15 | விசா19-8 | சித்60 | கார்த்திகசுத்தம் இன்றே சந்திரதரிசனம் உற்றுப் [பார்க்கவும் |
| 25 | 10 | சனி | துதி17-58 | அனு11-40 | சித்60 | |
| 26 | 11 | ஞா | திரி9-35 | கேட்4-58 மூல59-33 | மர4-58அ | ஆலோசனகௌரி விரதம், நாகசதுர்த்திவிரதம் |
| 27 | 12 | திங் | சது2-35 பஞ்57-15 | பூரா55-55 | மர60 | அவமாகம் |
| 28 | 13 | செவ் | சஷ்53-53 | உத்54-10 | அ54-10சி | கந்தர் சஷ்டி |
| 29 | 14 | புத | சப்52-33 | திரு54-33 | சி54-33பி | சர்வ முகூர்த்தம் |
| 30 | 15 | வியா | அ53-25 | அவி56-58 | சி56-58ம | கோவாஷ்டமி |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | 5உ வி-குரு<br>12 ,, து-புத<br>17 ,, விரு-சு<br>30 ,, விரு-பு | : | |
| | | | ராகு |
| | | சுக்-ச<br>சூ-கு | செ<br>புத |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | உருத்ரோத்காரிஸு ஐப்பசிமீ ௧௨ | பகுதி |
| --- | --- | --- |
| 9 | 1923ஸு அக்டோபர்மீ 17வ | 4 |

## கடவுள் வணக்கம்.

காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
கன்மப் புனற்கு ளூறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபச் சுமட்கலக்
காயத்து ளெனையி ருத்திச்
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குண் மதுவென் னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேனருட்
தோயநீ பாய்ச்சல் செய்து
நாற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப் பட்டியு
நமனுன தீப்பூடு மணுகாமன் முன்னின்று
நாடுசிவ போக மான
பேற்றைப் பகுந்தருளி யெனையாள வல்லையோ
பெரியவகி லாண்ட கோடி
பெற்றநா யகிபெரிய கயிலைமா நகர்மருவு
பெரியநா யகியம் மையே. (1)

சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
யல்லும்பகலு மாற்றுவ தென்—னல்லசிவ
ஞானமயம் பெற்றார்க ளுமில்லை யென்பரந்தோ
மோனமய மான முறை. (2)

ஐயா வருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றார் தன்னையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னான். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. மட் கரகம்=மண்குடம்.
கன்மப்புனல்=கருமமாகிய நீர். கடைகெட்ட=மிக்க இழிவான.
நவவாயில்=நவத்துவாரங்கள்.
பசுமட்கலம்=பச்சை மண்பாத்திரம்.
காயத்துள்=தேகத்தில்.

(இத்தேகம் காற்றும் நீரும் நிறப்பப்பட்டதும், ஒன்பது துவாரங்களை யுடையதுமான பச்சைமண் குடத்திற்கு ஒப்பிடப்பட்டது. எளிதில் அழி யுந்தன்மை யுடைய தாதலின் பச்சை மண்குடம் எனப்பட்டது.)

சோற்றை=ஆகாரத்தை.

துருத்திக்குண் மது என்ன துள்ளித் துடித்து=தோல் துருத்தியில் ஊற் றப்பட்ட கள் பொங்கித் துள்ளுவதுபோல் துள்ளித் துடித்து.

அருள்தோயம் நீ பாய்ச்சல்செய்து=நீ யுன் திருவருளாகிய நீரைப் (என் மனமாகிய பூமியில்) பாய்ச்சி.

நாற்றைப் பதித்ததென=நாற்று நட்டதுபோல.

புலப்பட்டி=ஐம்புலன்களாகிய பட்டிமாடுகள்.

நமனுன தீப்பூடு=எமன் என்கிற தீச்செடி.

சிவபோகம்=பரமான்ம சாட்சாத்காரம்.

"காற்றடைக்கப்பட்ட பச்சை மண்பாண்டத்திற்குச் சமானமான நிலையற்ற இத்தேகத்திலிருந்து அகங்காரத்தால் துள்ளிக் குதித்துக்கொண் டிருப்பதால் ஒரு பயனும் அடைந்திலேன். அருட்சத்தியாகிய அம்மையே நீ உன் அருள் என் மனதில் பதியும்படிச் செய்து ஞானமாகிய வித்தை நட்டு மனம் புலன்களின் வழிச் சேராமலும் எமன் (என்கிற ஆவரணமா கிய அந்தகாரம்) என்னை நெருங்காமலும் பாதுகாத்து, நான் சிவானுபூதி யாகிய பெரும்பேறு பெறும்படி யருளல் வேண்டும்" என்பது கருத்து.

மனதில் அருட்சத்தி பதிந்தால் மனம் சுத்தமாகி ஞானப்பியாசத்திற் குத் தகுதியுடையதாகிறது. ஞானமாகிய வித்து நாட்டப்பட்டபின், அதாவது ஞானப்பியாசத்தைத் தொடங்கியபின் சகல கேவலங்கள் தாக் காத நிலையையடைந்தாலன்றி ஆன்மானுபவம் சித்தியாது. மனம் புலன் களின் வழி செல்வதே சகலம். எமன் என்றதே கேவலமாகிய இருள். முக்கியமாய்க் கேவலமாகிய இருளைக் கடக்க ஈசுவர அருள் வேண்டும். அதனுற்றான் புலப்பட்டியும் நமனுன தீப்பூடும் அணுகாமல் நீ முன்னின்று காக்கவேண்டுமென்றார்.

2. சொல்லுக்கடங்கா=வாக்குமனங்களுக்கெட்டாத.
சுகப்பொருள்=ஆனந்த சொரூபமாகவுள்ள பகவான்.
"சுகப்பொருளை நாம் எனல்"=நானே பிரமம் என்று கூறுவது.

நல்ல சிவஞானமயம் பெற்றோர்கள் நாமில்லை யென்பர்=மெய்ஞ்ஞான அனுபவமுடையோர் ஆன்மசொரூபத்தை யுணர்ந்தபின் சிவசொரூபமாகிய அகண்டாகார அனுபவத்தில் அழுந்தி, தற்போதமொழிந்து இரண்டாவதில்லாத ததாகாரநிலையையடைவார்கள். ஆதலின் அவர்களிடம் " நான் " என்ற உணர்ச்சியில்லை.

'நான்' 'அது' என்ற உணர்ச்சி யிருக்குமட்டும் இவன் அதுவாகவில்லை. அத்துவித நிலையடையவில்லை. "அகம்பிரம்மாஸ்மி", "சிவோகம்" என்பவை ஐக்கியம் கூடுமுன் சீவத்வம் ஒழிவதற்காக ஸ்மரிப்பனவாகும்.

'சொல்லுக்கடங்காச் சுகப்பொருளை நாமெனவே யல்லும்பகலும் அறற்றுவதென்' என்றதால் 'சிவோகம்' அல்லது 'அகம்பிரம்மாஸ்மி' என்ற வாக்கியத்தை ஸ்மரிப்பது அடியோடு பயனில்லை யென்று கூறியதாகக் கருதிவிடலாகாது.

தாயுமான சுவாமிகளே,

"யாதொன்று பாவிக்கின் அதுவாதலால் உன்னை நானென்று பாவிக்கின் அத்துவித மார்க்கமுறலாம்" என்று கூறியுள்ளது ஈண்டு சிந்திக்கத் தக்கது.

"நீ பரமான்ம சாட்சாத்காரத்தை யடைந்து அதில் கரைந்து நீ யற்றுப்போவதை விட்டு 'நான் பிரம்மம்,' 'நான் பிரம்மம்' என்று சதா வாயில் கூறிக்கொண்டிருப்பதால் என்ன பயன்?" என்பது பொருள். அதாவது "அகங்காரத்தோடு 'நானே பிரமம்' என்றாவது 'என்னையன்றி வேறு பிரமமில்லை' என்றாவது கருதுவது அடாது. 'எல்லாம் சிவமே,' 'அவனுக்கன்னியமாய் நான் என்ற ஒன்றில்லை'என்பதே உண்மை ஞானம்" என்பது கருத்து.

"சென்று சென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம் திருப்பெருந்துறையுறை சிவனே" என்றார் மணிவாசகப் பெருமான். சீவபோதங் கெட்டு சிவத்தோ டபேதநிலை திடப்படுவதற்கே 'சிவோகம்' 'அகம்பிரம்மாஸ்மி' 'தத்துவமசி' என்ற வேதவாக்கியங்களைச் சிரணம் செய்தல்.

" அறுவகைச் சமயத் தோர்க்கு மதீதமா யகளமாகி
மறுவறு பொருளா யொன்றாய் மன்பதை தொறுநிறைந்து
குறைவறு பிரம நாமே யென்றுகோ சங்கணீங்கி
யறிவுறு வாகிநிற்ற லழகிய யோக மாமே." (வள்ளலார்)

முடிவான ஞான நிலையில் நான் என்பதே அகண்டாகாரத்தில் (கடலிலமிழ்ந்த கலசநீர்போல்) கலந்து நிற்குமெனின் "நான் பிரமம்" என்ற இரண்டுபட்ட சிந்தனைக்கு இடமேயின்றாம்.

"தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க ஒட்டாது * * *
* * * *
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்
ஆனாலு மதன்பெருமை யெவர்க்கார் சொல்வர்
ரதுவானா லதுவர்வ ரதுவே சொல்லும்"

என்று இம்மகானே அருளியுள்ளது கவனிக்கத்தக்கது. இதுவே மோன மாகிய நிலையாம்.

3. ஓர் சொல்=உபதேச வாக்கியம்.

வையகத்தோர் சாற்றரிது என்று எசற்றார்=பூலோகத்தார் அம்முடிவான நிலை (மனோ வாக்குகளுக் கெட்டாததால்) சொல்ல முடியாதென்று இளைத்துப் போனார்கள்.

தன்னையாய்=தனக்குத்தானே யொப்பாகிய.

முக்கண் எந்தை=(ஞானக்கண்ணோடு) மூன்று கண்களை யுடைய பரம சிவம்.

கடவுள் ஞானசொரூபியாதலின் அவருக்கு லலாடமையத்தில் ஞான மாகிய கண் இருக்கின்றதென்று கூறப்பட்டது.

நாற்றிசைக்கும் கைகாட்டினான்=யாவருமறியும்படி சின்முத்திரைக் கரத் தால் மோனநிலையைக் காட்டியருளினார்.

பரமசிவம் சனகாதியர் நால்வர்க்கும் கல்லாலின் கீழிருந்து மோன நிலையைக்காட்டியருளினார். அதை யருணகிரிநாதர் தாம் அருளிய கந்த ரனுபூதியில்,

"செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே"

என்று வெளியிட்டுள்ளார்.

அவரே யின்னொருவிடத்தில்,

"ஆசா நிகளந் துகளா கியபின்
பேசா வநுபூ திபிறந் ததுவே"

என்றும் அருளியுள்ளார்.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஸூ ஐப்பசிமீ

## பத்திரிகாபிமானம்.

சகோதர சகோதரிகளே!

உலகில் ஒரு நாட்டின் க்ஷேமத்திற்கும் முன்னேற்றத்திற்கும் பத்திரிகைகள் ஓர் முதற்றரமான கருவிபோ லிருக்கின்றன வென்பது அறிவாளிகளனைவரும் உணர்ந்த விஷயமே. திருட்டாந்தமாய் முன்னேற்ற மடைந்து செல்வம், பலம், செல்வாக்கு யாவற்றிலும் மேன்மை பெற்று முன்னணியில் நிற்கும் நாடுகளிலெல்லாம் ஏராளமான பத்திரிகைகள் நடை பெறுவதையும், தோட்டி முதல் தொண்டமான் வரையில் பத்திரிகைகளை வாங்கி வாசிப்பதைத் தங்கள் கடமைத் தொழில்களில் முக்கியமான ஒரு தொழிலாகக் கருதி நடப்பதையும் காணலாம்.

இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, அமெரிகா, ஜபான் முதலிய நாடுகளிலுள்ள ஜனத்தொகையையும், அவ்விடங்களில் நடக்கும் பத்திரிகைகளின் எண்ணிக்கையையும், அவற்றின் சந்தாரர்களின் தொகையையும் நமது நாட்டோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நம் நாட்டில் பத்திரிகாபிமான மென்பதே நூற்றில் ஒரு பாகம் அளவில்கூட இல்லை என்று நன்கு விளங்குகிறது. இதற்குக் காரணம் நம் நாட்டில் கல்விக்குறைவும் தேசாபிமானக் குறைவும் இருப்பதேயாகும். இக்குறைகளால் பெரும் பாலர்க்குப் பத்திரிகைகளால் நாம் அனேக நன்மைகளை யடையலாகும் என்பதே தெரியாது. "எவனோ தான் பணம் சம்பாதிப்பதற்காக கன்னாபின்னா வென்று எதைதையோ அச்சடித்து அனுப்பி விடுகிறான். அதற்குத் துட்டுகொடுத்து வீண்காலம் போக்குவதை விட நமது வேலையைப் பார்த்தாலும் பிழைக்கலாம்" என்று கூறும் மூடசிகாமணிகள் அனேகரை நம் பாரத பூமியிற்

காணலாம். இவர்கள் பயாஸ்கோப் என்ற படக்காட்சிச் சாலைகளுக்கும், நாடக அரங்கங்களுக்கும் தினம் வேண்டுமாயினும் சென்று தாராளமாய்ப் பணத்தையும் காலத்தையும் செலிவழிக்க பின்னிடையார்கள்.

பத்திரிகைகளால் அனேக நன்மைகள் உண்டாகாவிடின் அறிவாளிகள் அவற்றைச் சிலாகித்துக் கூறமாட்டார்கள்.

1. ஒரு அறிவாளி பொது நன்மைக்காகத் தான் அறிவிக்கக் கருதும் ஒரு விஷயத்தை ஏககாலத்தில் பல விடங்களில் இருக்கும் பல்லாயிரம் பேருக்கு அறிவிக்கலாம். நேரில் ஆயிரக்கணக்கான பேரைக்கூட்டிப் பிரசங்கவாயிலாக ஒரு விஷயத்தை யறிவித்தால் யாவரும் ஒரு முறைதான் அதைக் கேட்கலாகும். பத்திரிகையின் வாயிலாக அறிவித்தால் ஒருவர் பன் முறை, தமக்கு அவகாசம் ஏற்படும் காலத்தில் அதை வாசித்துணரலாகும்.

2. பத்திரீகை சகலகலாவல்லவரான ஒரு ஆசானுக்குச் சமதையானது. ஒவ்வொரு சாத்திரத்திலும் விற்பத்தி யுடையவர்கள் அந்தந்தச் சாத்திரத்திலுள்ள முக்கியமான விஷயங்களைப் பத்திரிகைகளின் வாயிலாய் யாவர்க்கும் போதிக்கிறார்கள். ஒருவன் ஒரு நூலைப் பன்னாள் பன்முறை வாசித்தபின் ஒன்று திரட்டி யுணரவேண்டிய அதன் சாராம்சத்தைப் பத்திரிகை சமைத்த உணவுபோல் ஏககாலத்தில் சுலமாய் ஊட்டுகிறது.

3. பத்திரிகைகளின் மூலமாய் நாம் சாத்திரங்களின் சாரங்களையும் கற்றுக்கொள்கிறோம். இலௌகிக விஷயங்களில் நாம் நடந்துகொள்ள வேண்டிய முறைமைகள் பத்திரிகைகளால் நமக்கு அப்போதைக் கப்போது போதிக்கப் படுகின்றன.

ஆன்மார்த்த விஷயத்தில், நாம் நெடுநாட்கள் பல சாத்திரங்களை யாராய்ச்சி செய்த பின்பே அறியத்தக்க சரியை யாதிமார்க்கங்களை பத்திரிகைகள் ஏககாலத்தில் திரட்டிப் போதிக்கின்றன.

4. தூரதேசங்களில் நடக்கும் சம்பவங்களில் நமக்கு அவசியமான வற்றைப் பத்திரிகைகள் சுலபமாய் நமக்கு அறிவிக்கின்றன.

5. ஒரு தேசம் முன்னேற்ற மடைவதற்குப் பத்திரிகைகள் முக்கிய கருவியா யிருக்கின்றன. எவ்வாறெனில், முன்னேற்ற

மடைந்திருக்கும் நாடுகள் எத்தகைய முயற்சிகளைச் செய்து மேலான நிலைமையை யடைந்தன வென்பதைப் பத்திரிகைகள் நமக்குக் கூறி வழி காட்டுகின்றன. அதோடு நம் நாட்டிலுள்ள தேசாபிமானத் தலைவர்களாகிய அறிவாளிகள் நம் தாய் நாடு முன்னேற்றமடைவதற்காகத் தற்சமயம் நாம் என்ன வேலைகளைச் செய்யவேண்டும் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்று நமக்கு அறிவிக்கிறார்களோ, அப் போதனைகளையும் கட்டளைகளையும் பத்திரிகைகளே நமக்கு வந்து அறிவிக்கின்றன.

6. பத்திரிகைகள் நமக்குத் தெய்வபக்தி, குருபக்தி தேசபக்தி, நீதிகள் முதலியவற்றைப் போதிக்கின்றன.

இதுகாறும் நம் நாட்டில் நடந்து வரும் சொல்பப்பத்திரிகைகளால் நம் நாட்டார் என்ன பயனடைந்தார்கள்? என்று வினவின், அவ்விஷயத்தில் திருப்திகரமான விடை யெதிர் பார்ப்பதற்கில்லை யென்றே விசனிக்கிறோம்.

ஏனெனில்,

(அ) கல்விக் குறைவால் பத்திரிகைகளை யென்னத்திற்கு வாசிக்கிறோ மென்பதையே பெரும்பாலோர் உணரவில்லை.

(ஆ) பத்திரிகையைக் காலப் போக்குக்காக வாசிக்கிறோமென்றே அவர்கள் கருதுகிறார்களன்றி, நாமும் நம் தாய் நாடும் முன்னேற்ற மடைவதற்கு நாம் என்ன செய்யவேண்டு மென்று பத்திரிகைகளில் கூறப்பட்டிருக்கிறதோ அவ்வாறே நாம் நடக்க வேண்டு மென்றும், இன்றேல் நாம் பத்திரிகைகளை வாசிப்பதால் ஒரு பயனுமடையமாட்டோம் என்றும் கருதுகிறார்களில்லை.

(இ) "ஆ! ............ப் பத்திரிகையில் ............ அவர் எப்போதும் பேஷாக எழுதுகிறார். ............பத்திரிகை எப்போதும் மந்தமே. இவர் சொல்வதெல்லாம் உண்மையே அதேப்படி நடந்தால் கட்டாயம் அவர் சொல்கிறபடி பயனுண்டாகும். ............" என்று இம்மாதிரி வாயாற் பேசிவிட்டுப் பத்திரிகையை யொரு மூலையில் எறிந்து விட்டு அதில் வாசித்த விஷயங்களை யுடனே மறந்து விடுகிறார்களன்றி அதில் கூறப்பட்டபடி நடந்து கொள்ள முயல்வதில்லை. இவ்வாறு நாம் எவ்வளவுகாலம் பத்திரிகைகளை வாசித்தாலும் ஒரு பயனு மடைய மாட்டோம்.

7. முன்னேற்ற மடைந்திருக்கும் எந்த நாட்டாரும் தங்கள் தாய்ப் பாஷையில் வெளியாகும் பத்திரிகை, சஞ்சிகைகளை மிக்க அபிமானத்தோடும் அன்போடும் ஆதரிக்கிறார்கள். நம் நாட்டார் மிக்க அவசியமாகத் தாய்ப்பாஷைப் பத்திரிகைகளை யாதரிக்க வேண்டியவர்கள். ஏனெனில் நமக்கு அவசியமான நீதிகளும், ஆன்மார்த்த விஷயங்களும் நம் தாய்ப்பாஷையிலேயே யுள்ளன. அதோடு இக்காலத்தில் குன்றியிருக்கும் நம் தாய்ப் பாஷையைப் பழைய உன்னத நிலைமைக்குக் கொண்டுவர நாம் கடமைப்பட் டிருக்கிறோம்.

8. பத்திரிகாபிமானிகளை அதாவது பத்திரிகை வாங்குவோரை மூன்று பிரிவாகக் கருதலாம்.

1. "பத்திரிகைகள் நம் நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியமானவை யாதலால் அவற்றை நம்மாற் கூடியவரை யாதரிக்க வேண்டியது நமது கடமை. இது நம் தாய் நாட்டிற்கு நாம் செய்யும் ஒரு தொண்டாகும். அதோடு நம் தாய்ப்பாஷையின் அபிவிர்த்திக்கும் அனுகூலமாக விருக்கும். நாமும் அனேக அரியவிஷயங்களை யறிந்து நன்மை பெறலாம்" என்ற நோக்கத்தோடு பத்திரிகைகளை வரவழைப்போர். இவர்களை உத்தம வகுப்பினர் எனலாம்.

2. "பத்திரிகைகள் வாங்கி வாசித்தால் பாஷாபிவிர்த்தியடையலாம். மேலும் அனேக அரிய விஷயங்களை யறியலாம்" என்ற எண்ணமட்டும் கொண்டு பத்திரிகை வரவழைப்போர். இவர்களை மத்திம வகுப்பினர் எனலாம்.

3. "நாம் ஒரு பத்திரிகையை வரவழைப்பது கௌரவம். மேலும் பத்திரிகை வரவழைத்தால் புத்தகங்கள் முதலியவை குறைந்த விலைக்கு கிடைக்கும்" என்று அன்னிய சுயநல நோக்கங் கொண்டு பத்திரிகை வரவழைப்போர். அவர்கள் அதம வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

இன்னொரு வகுப்பின ருளர். இவர்களில் ஆங்கிலங்கற்று தேசாபிமானமாவது, தாய்ப் பாஷாபிமானமாவது இல்லாதவர்களும் சேர்ந்தவர்கள். இவர்கள் தாங்கள் தாய்ப்பாஷைப் பத்திரிகைகளை யாதரிக்காமலிருப்ப தன்றியில், பத்திரிகை வாசிப்பவர்களை நோக்கி, "இதையேன் வீணாய்ப் படிக்கிறாய்? தமிழில் என்ன இன்டரஸ்ட் (ருசி) இருக்கிறது. இங்கிலீஷ் பேபர்களைப்

படித்தாலும் அந்த லாங்வேஜ் (பாஷாஞானம்) விர்த்தியாகும். தமிழிலே என்ன இருக்கிறது!'' என்று கூறி அவர்களுக்குள்ள அபிமானத்தைக் கெடுக்கிறார்கள். இத்தகைய புண்ணிய புருடர்களை எந்த வகுப்பில் சேர்க்கலாம். அதமாதமம் என்றும், குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக்காம்புகள் என்றும் கூறலாம். இவர்கள் தாய்ப்பாஷையை யசட்டை செய்ததால் அதன் பெருமையை யுணராதவர்களாகித் தாங்கள் கெடுவதோடு அன்னியரையும் கெடுக்கிறார்கள்.

நம் சந்தா நேயரில் ஒருவர்—ஒரு பாடசாலையின் மானேஜர் (காரியஸ்தர்)—தாம் அனுப்பிய வியாசத்தை நாம் வெளியிடாவிட்டால் தாமும் தம் நண்பரில் எழுவரும் சந்தாவினின்றும் விலகிவிடுவதாக எழுதுகிறார். நம்மவர்களுடைய தேசாபிமானம், பாஷாபிமானம், பத்திரிகாபிமானம் இந்நிலைமையிலிருந்தால் நம் தாய் நாடு எக்காலத்தில் சீர்பெறும்? மேற்கண்ட நண்பர் தமது பாடசாலையிலுள்ள உபாத்தியாயர்களுக்கும், மாணவர்களுக்கும் பாஷாபிமானம், பத்திரிகாபி மானம் முதலியவை யுண்டாகுமாறு செய்யவேண்டியவர். இனியேனும் நம்மவர்கள் நம் தாய் நாட்டின் நன்மையைக்கருதி, பத்திரிகைகளை யாதரிக்க முயல்வார்களென்று கோருகிறோம். எல்லாம் வல்ல கருணாநிதியாகிய பரம்பொருள் அருள் புரியப் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.

---

## பொய்யாமொழிப் புலவரும் கூத்தாளும்.

பண்டைக்காலத்தில் பரதகண்டத்தின் தென்பாகமாகிய, 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்,' எனும் நான்கெல்லைக் குட்பட்ட தமிழ் நாட்டை யலங்கரிக்கக் கவிமாரி பொழிந்த புலவர்கள் பலருள் பொய்யாமொழிப் புலவரென்பாரு மொருவர். அவர் தொண்டைநாட்டிற் பிறந்தவர். தம் மொழியாற் பயிரை யழித்த காளிங்கராயன் குதிரை யிறக்கவும் மீண்டுயிர் பெற்றெழவும் செய்தமையின் பொய்யாமொழிப் புலவரெனக் காரணத் திருநாமம் பெற்றவர். பெற்றோரா லிடப்பட்ட பெயர் இன்னதெனத் தெரியவில்லை. அவர் கல்விக் களஞ்சியமாயும், கற்பனை பிறப்பிடமாயும் விளங்கினர்.

அத்தகைய புலவர் பெருமானுக்குப் பழையபடியே மதுரையிற் றமிழ்ச்சங்கமொன்று நிறுவவேண்டுமென்னு மவா மேலிட்டது. அதனால், அவர் அக்காலத்து மதுரையிலரசாட்சி புரிந்துவந்த பாண்டியனிடஞ்

சென்றுலோசித்துத் தக்கது புரிவோமெனக் கருதி மதுரையை நோக்கிப் பிரயாணமாயினர். வண்டி வாகனங்களின்றித் தனித்துக் கால்நடையாகச் செல்லும் புலவர், ஒருநாள் கதிரவன் குடகடல் குளிக்குமெல்லை, காளையார் கோவில் என்னு மூரையடைந்து அங்குத் தங்குவானுன்னி, ஓர் வீட்டின் வாயிற் றிண்ணையி லமர்ந்தனர்.

அவ்வீடு ஓர் தாசியினுடையது. அவள் பெயர் கூத்தாள் என்பது. மிகுந்த அழகு வாய்ந்தவள். அவளது காளமேகம்போன்ற கரிய கூந்தலும், உண்டோ இல்லையோவென் றையுறுமாறு கொடிபோல் நுடங்கும் துடியிடையும், அன்னத்தைப் பழிக்கும் அணிநடையும் முனிவர் மனத்தையும் கொள்ளையிடாமற்போகா. ஆயினுமென்ன? எல்லா அவயங்களினுஞ் சிறந்த கண்கள்மாத்திரமில்லை. விதி வலிதன்றோ?

அருந்தமிழ்வாணர் ஆண்டடைந்த சிறிதுநேரங்கழிந்து, கூத்தாள் தட்டித்தடுமாறிக்கொண்டு வெளியே வந்தாள். அவளைப் பார்த்ததும் புலவர், "அம்மா! பசிப்பிணி வாட்டுகின்றது. சிறிது ஆகாரம் தருவீரேல் மெத்தப் புண்ணியமுண்டாகும்," என்றார். அதற்கு அவள், "ஐயா! தாங்கள் யார்? தங்கள் பெயரென்ன" வெனப் புலவர், தம் பெயர் முதலியவற்றைக் கூறினர். அவற்றைக் கேட்டவளவில் முன்னமே தானே அவரைப்பற்றிய வரலாறனைத்தையும் பலர் கூறக் கேட்டிருந்தனளாகலின், அவ்வேசை திடீரென்று அவர் பாதங்களில் விழுந்து பணிந்து, "சுவாமி! நானோ பிறவிக் குருடி. உலகம் இவ்வாறிருக்குமென் றறியேன். விலைமாதே யெனினும் கண்ணிலாக் காரணத்தால் வருவா யின்மையின், வயிற்றுச் சோற்றிற்கும் வழியற்று வாடுகின்றேன். எம்பெருமானே! எளியாளுக்குக் கண்தெரியும்படியாகத் திருவுளம்பற்றி யருளவேண்டும்" எனக் கூவி யரற்றினள்.

பெரியவர் தம்நோய்போற் பிறர்நோய் கண்டுள்ளம்
எரியி னிழுதாவ ரென்ப—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்தும் பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

என்பது பெரியோரிலக்கண மாதலின், அம்மாதின், துன்பத்தைக் கண்டு மனஞ் சகியாத மாண்புடைக் கவிஞர், "கூத்தாள் விழிகளிரு கூர்வேலாம்" எனக் கூறியருளினர். உடனே அவள் விழிகள் வேல்போல் ஒளிவிட்டு விளங்கின. அவளடைந்த ஆனந்தத்தை ஆரே அளவிட்டறிய வல்லார்! கூத்தாடினள், புலவரடிகளில் மறுபடியும் விழுந்தாள், எழுந்தாள், புகழ்ந்தாள், என் குலதெய்வமே என்றாள். கண்ணைக் கொடுத்த கடவுளே என்றாள். "அய்யனே! அடியாள் உய்ந்தேன் உய்ந்தேன் உமதருளால். ஆயினும் என் தமக்கை யொருத்தி யிருக்கிறாள். அவளும் என்னைப்போலப் பிறவிக்குருடி. அவளையும் நின் கருணையாற் காக்கவேண்டும்," என்று வேண்டினள். அவரும், "கூத்தாள்தன், மூத்தாள் விழிகள் முழுநீலம்"

என்றிசைத்தனர். அவ்வளவில் மூலைவீட்டில் முக்காடிட்டுப் படுத்திருந்த அம் மூத்தாள் கண்தெரியப் பெற்றவளாய், வியப்படைந்து வீதியிலோடி வந்தாள், உண்மையுணர்ந்தாள். பாவலர்ப் பாதங்களிற் பணிந்து, "பர துக்கஞ் சகியாத பரமபுருஷா! தங்கள் தண்ணருளால் அடியாள் கண் ணொளி பெற்றுக் கடைத்தேறினேன். இதற்குச் செய்யுங் கைம்மாறியாது? எனினும், யான் பார்வை யடைந்தது பெரிதல்ல. என் தாயும் நேத்திர மில்லாதவள். அவளுக்கும் கிருபை செய்யவேண்டும் என் தெய்வமே!" எனப் பணிவுடன் கெஞ்சினாள். அதைக்கேட்ட புலவர் பெருமான் அதி சயித்தவராய், "மூத்தாள்தன் ஆத்தாள் விழிகளரவிந்தம்" என்றனர். புறக் கடையிற் புலம்பிக்கொண்டிருந்த அவளும் 'நளினாக்ஷி' யென்னும்படி நய னம்பெற்றாள். களிப்புடன் ஓடிவந்தாள். விஷயமறிந்தாள். விழுந்தாள் கழல்களில். எழுந்து நின்று கைகூப்பி, "சுவாமி! தீனபந்துவே! என் ஆத்தாள் வயதில் மூத்தாள். நேத்திரமில்லாள். தாய் முகம் நோக்காத் தரித்திரி. அவளையும் எங்களைப்போலாக்கி யருளல் வேண்டு" மென்றாள். பார்த்தார் பொய்யாமொழியார். "இதேது குருட்டுக் குடும்பத்தில் வந் தகப்பட்டுக் கொண்டோமே. நல்லது, பார்ப்போம்" என்றுன்னி, "ஆத் தாள்தன், ஆத்தாள் விழிகளிரண்டம்பு" எனப் பகர்ந்தனர். அக்கணமே தாய்க்கிழவி குருடு நீங்கிக் குதூகலத்துடன் குமரிபோற் கும்மாளமிட்டு விழுந்தடித்துக்கொண் டோடிவந்தாள். எல்லாருமாகக் கூடிப் புலவரைப் போற்றி யுபசரித்தார்கள். இனி யொருவருமில்லை யென்றறிந்து அவ் வாக்கியங்களை யிணைத்து

கூத்தாள் விழிகளிரு கூர்வேலாம் கூத்தாள்தன்
மூத்தாள் விழிகள் முழுநீலம்—மூத்தாள்தன்
ஆத்தாள் விழிகளரவிந்தம் ஆத்தாள்தன்
ஆத்தாள் விழிகளிரண்டம்பு

என வெண்பாவாக முடித்தருளினார்.

இரவு கழிந்தது. மறுநாள் அவ்வூர்க் கணிகையரும் பிறரும் சேதி தெரிந்து பல்லாயிரம் பொன்னிறைந்த பொற்கிழியொன்றைப் புலவருக் குக் காணிக்கையாகக் கொடுத்து வணங்கி, ஆசிபெற்றுச் சென்றனர். அப் பொற்கிழியைப் பொதுமகள் பாலீந்து தாம் மதுரைக்குச் செல்வதாயும் திரும்பிவருங்கால் பெற்றுக்கொள்வதாயுங் கூறிச் சென்றனர், பொய்யா மொழிப் புலவர்.

பன்னாட் சென்றபின் பாவலர் பாண்டியனது நகரைவிட்டுத் திரும்பி வருகையில் காளையார்கோயில் வந்து தாசிவீட்டிற்குச் சென்றார். அவ்வீடு முன்போலில்லாமல் அழகிய சிறு ராஜ மாளிகைபோ லிருந்ததுமன்றி வாயிலில் காவலனொருவனு மிருக்கக் கண்டார். கண்டு களிகொண்டு காவ லனை நோக்கிக் கூத்தாளிடம் தன் வரவை யறிவிக்கும்படி சொன்னார். அவன் உள்ளே சென்று சிறிது நேரத்தில் திரும்பிவந்து, "ஐயா! இப்

போது பார்க்க அவகாசப்படாதாம். போகச்சொன்னார்கள்" என்றான். அதேசமயம் வாயிற்கதவு சாத்தித் தாளிடப்பட்டது. கண்டார் இன்னிசைக்கவிஞர். கடுங்கோபங்கொண்டு, "பழையகுருடீ கதவைத்திற," வென்று கதவைத் தட்டினர். அக்கணமே அத்தாசிகள் நால்வரும் பழைய படியே குருடிகளாகி எமது காருண்யக்கடலே யாங்கள் பேதைமையாலிழைத்த பெரும்பிழையைப் பொருட்படுத்தாது காத்தருளவேண்டும் காத்தருளவேண்டுமெனக் கதறிக்கொண்டோடிவந்து கதவைத் திறந்து பார்த்தார்கள். நாவாலுலகை நடாத்தும் நாவலரைக் கண்டாரில்லை. ஆட்களை யேவித் தேடுவித்தனர். பயனில்லை. என்ன செய்வார்கள். "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேனும் காத்தலரிதன்றே?" "குந்தினையோ குரங்கே சந்தடியடங்க," என்பதுபோல், முன்போலவே மூலையிலுட்கார்ந்துவிட்டார்கள். "பழைய குருடி கதவைத் திறவடி," என்னும் பழமொழி அதுமுதலே யாண்டும் வழங்கலாயிற்று.

"வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம்."

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(94-ம் பக்கத் தொடர்ச்சி.)

(32) அள்ளன் மடுவில் மூழ்கித்தா மநும்பட் டினிபட் டலம்வந்தும்
உள்ளந் தூய ரல்லாருக் கோருகா ரியமும் பலமாகா
கள்ள மனச்செய் தவக்கும்ப கன்னன் கருதும் வரங்கொடுக்கும்
வள்ளன் மலரோ னிடைபெற்ற வரத்தான் மாறாத் துயில்பெற்
[றான். (இரா-பிறப்பு-35.)

(இ-ள்.) வஞ்ச நெஞ்சமுடையவனான கும்பகர்னன் கடுந்தவமியற்றி வேண்டிய வேண்டியாங்களிக்கும் கந்தமலரோனாகிய பிரமனிடம் நித்தியத்துவமாகிய வரங்கேட்டும் அதனால் நன்மையடையாமல் ஒழியாத நித்திரையாகிய நித்திரைத்துவமே பெற்றான். மனச்சுத்தமில்லாதவர் எத்தீர்த்தங்களில் நீராடியும் பட்டினிகிடந்தும் என்ன கஷ்டப்பட்டாலும், அருமையான எக்காரியமும் நல்ல பலனைக் கொடுக்கமாட்டா" வென்பதாம்.

மனம் சுத்தம் அசுத்தமென விருவகைப்படும். சீவகாருண்யம், வாய்மை, அவாவின்மை, அழுக்காறின்மை முதலிய நற்குணங்களை யுடையது சுத்தமனம். அவற்றையுடைத்தாயிராதது அசுத்தமனம். சுத்தமனம் மோக்ஷத்திற்கானது. அசுத்தமனம் நரகிற் கேதுவானது. மாசகன்ற மனமுடையோர் மாண்புடைப் பெரியோர். காமம் வெகுளி மயக்கமென்னும் முக்குற்றமு மற்றோராகலின், அன்னாரியற்றும் ஒவ்வொரு காரியமும் பிறர்க்குத் துன்பம் பயவாது நன்மையே பயக்கும். அசுத்தமனத் துதிக்

கும் எண்ணங்களெல்லாம் தீயவையேயாம். சுத்தமனத்தோர் புரியும் அற மாதியவை ஒன்று பத்தாகப் பெருகும். அவர்கள் கோரிக்கைகளைக் குறைவின்றி முடிக்க முன்னவனே முன்நிற்பான்.

பொறாமை முதலிய துர்க்குணங்களோடு எத்தனை விரதங்களியற்றி ஞலென்ன? தவமேபுரிந்தாலென்ன? "கையிலே நாம் பிடிப்பது ஜெப மாலை; கக்கத்தில் வைப்பதுவோ கன்னக்கோலை," "கடவுளைத் துதிப் பதுபோல் வாய்பாடும்; கண்ணுங் கருத்தும் கண்டவிடமெங்குமோடும்." (வேதநாயகம்பிள்ளை) "படிப்பது திருவாய்மொழி இடிப்பது பெருமாள் கோயிலா?" அன்றாடம் ஆயிரம் பொய் பேசிவிட்டு அருணகிரி நாதரைச் சேவித்தாலென்ன பயன்? ஏழை எளியவரை வயிறெரியப்பண்ணி எம் பெருமானைக் கும்பிடுவதனால் யாது பயன்? இதுபற்றியே திருவள் ளுவரும்

"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.
அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்." என்றனர்.

ஆகலின், துர்க்குணங்களை யொழித்தல் மூலமாக மனதைச் சுத்தப்படுத்த வேண்டும். இருவினைக்குக் காரணமான மனம் பரிசுத்தப் படுத்துமிடத் துப் பகவா னநுக்கிரகம் எளிதினுண்டாவதாம், என்னும் நீதி இச் செய் யுளா லினிது விளங்குகின்றது.

(33) குலம்வேண்டு மென்றிருப்பார் குலத்துள்ளார்
கல்வியினாற் குறையாஞானப்
பலம்வேண்டு மென்றிருப்பார் தந்தைமார்
பரந்த பெருஞ் செல்வமுள்ள
தலம்வேண்டு மென்றிருப்பார் தாய்மார்கள்
யவ்வனமு மழகுஞ் சார்ந்த
நலம்வேண்டு மென்றிருப்பார் நாறுகுழல்
கன்னிமார் நலத்தின் மிக்கார். (ஷை-60.)

தசக்கிரீவன் ஒருநாள் வேட்டையினிமித்தம் காட்டையடைந்து ஓர் பூம்பொழிலிற் றங்கியிருந்தான். அப்போது அசுர தச்சனாகிய மயன் மண் டோதரி யென்னும் தன் மகளோடு அங்குவர, இராவணன் அவனைக் கண்டு 'நீ யார்? இம்மாதார்?' என வினவினன். அவன் தன் வரலாற் றைக் கூறி "என் புத்திரியின் குணத்திற்கும் அழகிற்கும் ஏற்ற வரனைத் தேடியலைகின்றேன். (இ-ள்.) இவ்வுலகத்திற் கன்னிகைகளுக்குக் கடி மணம் பேசுங்காலத்தில், சுற்றத்தார் நற்குலத்தை விரும்புவார்கள். தந் தைமார் கல்வியறிவை நாடுவார். தாய்மார் மிக்க செல்வமுள்ள இடமா யிருக்கவேண்டுமெனக் கோருவார். கன்னியர் யவ்வனமும் அழகும் பொருந்திய நன்மையை யிச்சிப்பார். ஆகையால் அத்தகைய கணவனைக் காணப்பெற்றிலே னென்றான்," என்பதாம்.

இவ்வாறு ஒவ்வொருவரும் வெவ்வேறுவித விருப்புடையரேனும் அவையாவுமிருத்தலே சிறப்புடையதாம். ஆனல் இந்நான்கும் பொருந்தி யிருக்கும் வரன் கிடைப்பதருமை.. ஏதேனுமொன்று குறைவுபட்டே யிருக்கும்..

இஃதிவ்வாருக, தற்கால விவாக நிலை விந்தையானது. ஐந்து வயது பெண்ணை ஐம்பது வயதுள்ளவனுக்குக் கொடுப்பதும், பதினைந்து வய துடைய பெண் தொண்ணூறு வயது பால குமாரனை மணக்கச் சம்மதிப் பதும், விந்தையேயன்றோ? நாகரீகமென்னும் பேய்பிடித்து, படித்தவர்க ளென்றழைக்கப்படும் பெண்களிடத்தே இப்பேய்க்குணம் குடியிருக்கக் காணலாம். 'கைந்நிறைந்த பொருளைப் பார்க்கிலும் கண்ணிறைந்த கண வனே மேல்,' என்னும் பழமொழி இவர்களிடந் தலைகாட்டாமல் ஒடி யொளித்தது. அற்பப் பணிகளுக் காசைகொள்வோர் கற்புப் பணியை யெங்ஙனம் கடைப்பிடிப்பர். அசாத்திய மசாத்தியம்.

இச் செய்யுளால் யவ்வனம் அழகு கல்வி அறிவு குலம் செல்வம் என்னு மிவற்றை யுடையவனைத் தேடி கன்னிகைக்கு மணமுடிக்க வேண்டு மென்பது பெறப்படுகின்றது.

> பெண்ணுதவுங் காலைப் பிதாவிரும்பும் வித்தையே
> எண்ணில் தனம்விரும்பு மீன்றதாய்—நண்ணிடையிற்
> கூரியநற் சுற்றம் குலம்விரும்பும் காந்தனது
> பேரழகு தான்விரும்பும் பெண்.

இச்செய்யுளும் ஈண்டறியத்தக்கதாம்.

(34) அறிவி லாதவர்க் கறிவன சொல்லுவா ரவரால்
இறுதி யெய்துவா ரென்னும தின்றுகை கண்டோம்
உறுதி யாயின காரிய முரைத்துவிட் டோமால்
மறுகி நேர்பொர வந்தனன் வாளெயிற் றரக்கன்.

(வரையெடுத்த-24.)

இருநிதிக்கிழவனாகிய குபேரன் தன்மேற் பொரவந்த இராவணனுக் குப் பல புத்திமதிகளைக் கூறியனுப்பியும் அக்கொடியோன் அவற்றைச் செவிக்கொள்ளாது, போருக்கு வந்தபோது கூறிய சந்தர்ப்பத்துள்ள விச்செய்புளின் பொருள்; "இகபரங்களுக் குறுதியான நன்மார்க்கத்தைப் புகட்டித் தூதனுப்பியும் வாள்போற் கூரிய பற்களையுடைய விவ்விராவ ணன் கோபித்துப் போர்செய்ய வந்துளான். 'விவேக சூன்யர்களாகிய மூடர்களுக் குபதேசம் செய்வோர் அம்மூடரால் றுன்பமடைவர்' என்னும் நீதியை இன்று நிதரிசனமாகக் கண்டோம்" எனக் கழறினன் என்பதாம்.

"நருமதையாற்றங் கரையிலிருந்த ஓர் விருக்ஷத்திற் சில தூக்கணாங் குருவிகள் கூடுகட்டிக்கொண்டு வசித்திருந்தன. ஒருநாள் பெருமழை பெய்தது. அப்போது வானரங்கள் சில மழையில் நனைந்து குளிர் கொண்டு அம்மரத்தடியிற் றங்கி வருந்திக்கொண் டிருந்தன. அப்பரிதாப

நிலையைக்கண்ட அப்பறவைகள், அவற்றை நோக்கி, ‘ நண்பர்களே! கைக ளில்லாதவர்களாகிய நாங்கள் அலகின் உதவியால் எவ்வளவோ கஷ்டப் பட்டுக் கூடு கட்டிக்கொண்டு மழையாதிய துன்பங்களுக் குள்ளாகாமல் சுகமாக வாழ்ந்திருக்க, விசேஷித்த அவயவமாகிய கையைப் பெற்றிருக் கும் நீங்கள் என் ஒரு சிறு வீடு கட்டிக்கொண்டு வசிக்கலாகாது?’ எனக் கூறின. இவ் வார்த்தையைக் கேட்டதும் வந்துவிட்டது கோபம் அக் குரங்குகளுக்கு. கையாலாகாதவர்களுக்குக் கோபம் வராமல் வேறென்ன வரும்? ‘ ஓ மூடர்களே! நீங்களா எங்களுக்குப் புத்தி புகட்டுகின்றவர் கள். நல்லது, எங்களுக்கு அழிக்கத்தெரியுமேயன்றி ஆக்கத் தெரியா’ தெனக் கூறிப் பாய்ந்து சென்று, கூடுகளை யெல்லாம் பிய்த்துச் சிதைத் தன ” என்னும் பஞ்ச தந்திரக்கதை யீண்டுணரற்பாலது.

வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தானுமோர் நெறிசொலத் தாவிப் பிய்த்திடும்
ஞானமும் கல்வியும் நயந்த நூல்களும்
ஈனருக் குரைத்திடி லிடர தாகுமே.

என்னும் செய்யுளும் இக்கருத்தையே கொண்டது.

ஆகலின், “ மூடர்களுக்கு உபதேசம் செய்வோர் தீமை யடைவ” ரென்பது, இச்செய்யுளின் நீதியாம். (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## “ சகோதரிகளுக்கோர் வேண்டுகோள்.”

சகோதரிகாள்!

பூமாதிற்கு வதனமென விளங்கும் ஒப்பும் உயர்வுமற்ற நம் நாட்டில் மேல்நாட்டு நாகரீகம், வைக்கோலிலிட்ட நெருப்புபோல் பரவி வருகின் றது. அந்நாகரீக வெள்ளத்தில் ஆழ்ந்துழலும் ஆடவர் செய்கைகள் நம் ஆன்றோர்களின் மனதை ஒருபுறம் விளக்க, அந்தோ! நமது நாட்டுப் பெண்மணிகள் கூட, சற்றும் ஆலோசியாமல் அந்த வெள்ளத்தில் இறங்கு கின்றனரே. ஆழமறியாது காலையிடுகின்றனர்.

களங்கமற்ற கற்பையுடைய மங்கைகள் வதிந்த நாட்டின்கண் வந் துதித்த சகோதரிகளே! அந்தப் பாழும் நாகரீகத்தால் பெண்மக்களா கிய உங்களுக்கு உண்டாகும் தீமைகளை நோக்கி வருந்தித் துன்புற்றிரு ந்த என் மனதில், பங்கஜம் என்னும் பெண்ணிற்குப் பாதிரிமார் இழைத்த இன்னலைப்பற்றிச் சென்ற (ஆவணி) மாத சஞ்சிகையில் படித்த. காலையில், எழுந்த கொதிப்பை ஆற்றொணுமல் ஆறாத் துயரத்துடனே இவ்வேண்டு கோளை வரையத் துணிந்தேன்.

சற்குணக் குன்றச் சகோதரிகாள்! மேல்நாட்டு நாகரீகத்தைக் கன விலும் கருதாதீர்கள். நீங்கள் உதித்த நாட்டின் சிறப்பினைச் சற்றுக் கவ

னிப்பீர்களா? உலகம் களிக்கக் கற்பின் மகத்துவத்தை நிலைநாட்டிய நற்காரிகைகளுக்குப் பிறப்பிடமன்றோ நீங்கள் தோன்றிய நாடு! புதல்வனைப் போர்க்களத்திற் கனுப்பி (அவன்) பட்டான் எனவறிந்து, பகைவர்க்குப் புறங்காட்டி யிரண்டு ஓடுங்கால் பட்டிருப்பின் அன்னவனுக்குப் பாலீந்த ஸ்தனங்களைத் துணிப்பதாகக் கூறி, வாளுடன் போர்க்களத்திற்குச் சென்ற தாய்போன்ற வீரசிகாமணிகள் விளங்கியநாடு நம் நாடன்றோ. காதலர்கள் போர்க்களத்தில் உயிர் நீத்ததைக் கேட்டலும், உயிரினும் கற்பே சிறந்ததெனத் தெளிந்து, நெருப்பில் பாய்ந்த பதிவிரதா சிரோன்மணிகள் நம் நாட்டினரல்லவா? இக் கற்பரசிகளாகிய இரத்தினங்கள் அவ்வாறு புகழ்தற்கரிய குணங்களை யடைந்தது நம் நாட்டாசாரத்தைப் பற்றியா? அல்லது மேல்நாட்டாசாரத்தைப்பற்றியா? எக்கல்வி அவர்களுக்குக் கீர்த்தியை ஈந்தது? ஆங்கிலக் கல்வியோ? கற்பிற்கு அகம் பரத கண்டமன்றோ. கற்பின் மகத்துவத்தைக் கழலவும் வேண்டுமா? காலனிடமிருந்து ஓர் காரிகை தன் கணவனுயிரை மீட்டது கற்பின் மகத்துவத்தாலன்றோ. யாவரும் புகழ்தற்குரிய நம் பெண்மணிகள் எந்நாட்டு ஆசாரத்தையும் கல்வியையும் பின்பற்றி அப்பெரும்பேற்றை யடைந்தனர்? சொல்லவியலாச் சிறப்பினையுடைய நமது நாட்டில் மேனாட்டு நாகரீகம் தாண்டவம் புரிவது நம் துர் அதிர்ஷ்டமே. அந்த நாகரீகத்தின் விசித்திரமான பழக்க வழக்கங்களைப் பற்றி, பல சகோதர சகோதரிகள் பல பத்திரிகைகள் வாயிலாக வரைந்துள்ளனர். ஆகலின் மீண்டும் எடுத்துக் கூறுவது அவசியமன்று. மேல்நாட்டு நாகரீகமோ, ஆண்களும் பெண்களும் பஹிரங்கமான இடங்களில் முத்தமிட்டுக்கொள்ளக்கூடாதென சட்டம் அரசாங்கத்தாரே பிறப்பித்திருக்கும்படியான நிலைமையிலிருக்கிறது. அங்ஙனமிருந்தும் அச்சட்டப்படி தண்டனை யடைந்தவர்களைப்பற்றிச் சமீபத்தில் பத்திரிகையில் வாசித்தபோது, அவ்வூழல்களைக் கருதும்தோறும் நகைப்பும் அத்தகைய நாகரீகத்தை நம் நாட்டினர் சிலர் விரும்புகின்றனரே என்பதை நினைக்கத் துயரமும் உண்டாகிறது.

நம் மகளிர்க்கு இன்றியமையாததா யிருந்து வருவது கற்பு. அக் கற்பென்னும் பயிரைக் காத்தற்குப் பெண்களுக்குரிய அரிய குணங்களான அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு என்பவைகள் தக்க வேலிகளா யிருக்கின்றன. ஆனால் மேல்நாட்டு நாகரீக பழக்க வழக்கங்கள், ஒவ்வொரு வகையிலும் அவ்வேலியை நாசப் படுத்துபவைகளா யிருந்து வருகின்றன. வேலியில்லாப் பயிர் என்னாகும். அந்தோ! சகோதரிகாள், சற்று ஆய்ந்தோய்ந்து பாரீர்களா? பரதநாட்டுப் பதிவிரதா ஸ்திரீகளைப்போல நம்மாசாரத்தைக் கைக்கொண்டு, நமது நாட்டுக் கல்வியைக் கற்று, அவ்வேலியை விருத்திசெய்து பயிரைக் காத்துப் பின் பலனாகிய கீர்த்தியையும் மாசற்ற வாழ்க்கையையு மடைந்து பெரும் பேற்றினைப் பெற நாடுங்கள். பெண்வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாம், எவ்வாழ்க்கைக்கும் வேண்டிய

யாவும், நம் தமிழ் நூற்களில் இலைமறைகாய்போல் மறைந்து கிடக்கின்றனவே. ஆராய்ந்தால் உண்மை நன்கு வெளிப்படுமே! பெண்கள் அறிய வேண்டியவைகள் எவை நம் நூலிலில்லை? அங்ஙனமிருக்க, தமிழ் நூற்களை ஆராயாமல் ஆங்கிலக் கல்வியை விரும்புவானேன்? அக்கல்விக்காக வல்லவா, பசுத்தோல்போர்த்த புலியினிடம் இளம் மானை ஒப்புவிப்பது போல நம்மிளமகளிரைப் பாதிரிகளிடம் ஒப்புவிக்கிறார்கள்.

அப்பாதிரிமார்கள் 'பங்கஜம்' என்னும் பெண்ணிற்கிழைத்த இன்னலை நினைக்கும்தோறும் உடலம் பதறுகின்றது. இந்த அத்யாயம் எல்லார் மனதிலும் பசுமரத்தாணிபோல் பதிந்திருக்குமென்பதில் ஐயமில்லை. பத்திரிகாசிரியரவர்கள் விவரமாக வரைந்துள்ளாராதலின் அப்பாதிரிகளைக் கண்டித்து அதிகமெழுதவேண்டுவதில்லை. அவர்களைக் கண்டித்தென்னபயன்? நாம் பெண்களை அனுப்பாவிடில் அவர்கள் யாது செய்யக்கூடும்! ஆங்கிலக்கல்வி நம் பெண்களுக்கு அவசியமன்று. அக்கல்வியே அநாகரீக வெள்ளத்தினிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும் பாதை யென்பதை மறவாதீர்கள். ஆங்கிலக் கல்வியினால் நமது பெண்களுக்குண்டாகும் கெடுதிகளை ஆனந்தன் பலமுறை நன்கு விளக்கி யிருக்கிறான்.

பெண்மகளிர் தங்கள் கடமைகளைக் குறைவறவும் கௌரவமாகவும் செய்து முடிப்பதற்குத் தமிழ்க்கல்வியே தக்க உதவியாம். பலபல எழுதுவானேன், அக்கல்வி ஒன்றே தமிழ்நாட்டுப் பெண்களுக்குத் தகுந்த துணையாகும். சில வேண்டுகோளுடன் இதை முடிக்கிறேன். நம்நாட்டு முற்காலத்துப் பெண்மணிகள் புகழையடைந்த விதத்திலேயே நீங்களும் அடைய விரும்புங்கள். அவர்கள் வழிகளைப் பின்பற்றிக் கௌரவத்தை நிலைநாட்டுங்கள். தாய்நாட்டின் பெருமையைக் காப்பாற்றவாவது நமது பழக்க வழக்கங்களைக் கையாளுங்கள். மன நிம்மதியும் கௌரவ வாழ்வும் நமது நன்மார்க்கத்திலேயே கிடைக்கும். நல்ல வாழ்க்கையை நாடுங்கள். நம்பினோரை ரக்ஷித்தருளும் முழுமுதற் கடவுள் யாவர்க்கும் கருணைபுரிவாராக.

துரைசாமி,
அயோத்திப்பட்டணம், சேலம்.

குறிப்பு:—சகோதர சகோதரிகள் இத்தகைய விஷயங்களைப் பன்முறை வாசித்தும் அது விஷயத்தில் சிரத்தையின்றி யிருப்பது மிகவும் விசனிக்கத்தக்கதே. நம் பெண்மக்களுக்கு அவசியமாக வேண்டிய கல்வி யெது? எக்கல்வி பின்னால் தாய்மார்களாகப் போகும் அவர்களுக்கும் நம் நாட்டிற்கும் நன்மைபயக்கும்? எக்கல்வி நம் புத்திரிகளுக்கு இன்றியமையாத கற்பைப் போதிக்கும்? என்பதைச் சிந்திக்காது, மேல் தளுக்கைக் கண்டு மயங்கி தகாத கல்வியைப் போதிப்பதும், அன்னியமதம் போதிக்கப்படும் பாடசாலைக்கு நம் மக்களை யனுப்புவதும் பெருந் தீங்கை விளைவிக்குமென்பதை இனியேனும் மறவாது மனத்தில் வைத்து நடப்போமாக. பெற்றோர்கள் இதைக் கவனித்து நடக்கப் பிரார்த்திக்கிறோம்.



பத்திரிகாசிரியர்.

## சந்நியாசம்—சந்நியாசிபேதம்.

(99-ம் பக்கத் தொடர்ச்சி.)

எலும்புகளாகிய கம்பத்தில் நரம்புகளாகிய புரியைச் சுற்றி மாம்ஸ சோணிதங்களால் நிரப்பினதும், அதனுல் தோலினுல் மூடினதும், பல துர்க்கந்தங்களுக்கு இருப்பிடமானதும், நரைதிரை மூப்புகளால் மெலிவடைவதும், ரோகங்களால் வருந்துவதும், அநித்தியமானதும், பசிதாக நித்திரைகளால் பீடிக்கப்படுவதுமான இந்தச் சரீரத்தில் பற்றுதல் வையாமல் மோட்சத்திலேயே சித்தத்தைச் செலுத்தவேண்டும். ஒரு வீட்டில் வசிப்பவன் அந்த வீட்டுக்கு வேருனவனு யிருப்பதுபோல இந்தச் சரீரத்தில் வசிக்கிற ஆன்மா சரீரமாகமாட்டான். சரீரத்துக்கு வேருனவனே. ஆயினும் இச்சரீரத்துக்குக் காரணமாயிருந்த கர்மம் அனுபவித்தாலன்றித் தொலேவதில்லே. ஆதலாலிது கர்மசரீரமென்னப்படும். நதிக்கரை யோரத்திலிருக்கிற ஒரு மரமானது தன் வசங்கெட்டு நதியின் வேகத்தினுல் கரையை விட்டு விலகி நதியில் விழுந்து செல்வதுபோல கர்ம வசத்தினுல் இச் சரீரமும் தன் வசமற்றுப் பிரிந்துபோகின்றது. பின்னும் கர்மசேஷத்தினுல் வேறு சரீரம் வருகின்றது. உண்மையறிந்தவர்கள், பீஷ்மர் முதலியவர்களேப்போல், கர்மம் ஞானம் இவற்றின் வலிமையினுல் தமக்கு வசமான சரீரத்தை அடைகிருர்கள். ஒரு ப்றவை தான் வசிக்கின்ற மரத்தைத் தனக்கு இஷ்டமுள்ள காலத்தில் விட்டொழிப்பதுபோல ஞானத்தின் வலிமையால் சுயமாகவே யிந்தச் சரீரத்தைவிட்டு மேலான கதியை அடைகிருர்கள்.

இவ்விதிகளே விடாமற் கைக்கொண்டு நடந்து வருவானுனுல் ஸங்கங்களே யெல்லாம் மெல்லமெல்லத் தொலேத்து இவ்வுலக பேதங்களினின்றும் விடுபட்டுப் பரப்பிரமத்தை யடைவான். எல்லாவற்றையும் பிரமமாகப் பாவித்து வருவானுனுல் கருமத்தினுல் உண்டாகும் தோஷங்கள் அவனே யணுகா. எல்லாவற்றையும் பிரமமாகக் காணும் முறைமையை யுணர்த்தும் சாஸ்திரங்களே நன்ருயறிந்து, ஒருவனுகவே தனித்து இருந்து யோகத்தில் சித்திபெற்று மோட்சத்தை யடையும் முயற்சிலிருக்க வேண்டும். ஒருவனுகவே வசித்துவரும் சந்நியாசி பிக்ஷுவெனப்படுவான். இருவராகக் கூடியிருப்பவன் மிதுனம் எனப்படுவான். மூன்று பெயர்களுடன் கூடியிருப்பது கிராமமாகும். அதற்கு மேற்பட்டவர்கள் கூடியிருந்தால் அந்தக் கூட்டம் நகரமாகும். இரண்டு மூன்று பேர்களுடன் கூடியிருந்தால் இராஜாங்க விஷயமான பேச்சுகளும், தங்களுக்குப் பிக்ஷை நடந்ததைப்பற்றிய பேச்சுகளும், கோட் சொல்லுவதும், ஒருவரையொருவர் தழுவுவதும், பொருமையுமாகிய இவைகளுண்டாகும். தனியாயிருப்பது, பிக்ஷை யெடுப்பது, தியானம், சௌசம் இந்த நான்கையுந் தவிரச் சந்நியாசிகளுக்கு வேறு செய்கைகள் சாஸ்திரங்களில் காணப்படவில்லே.

"ஸந்நியாசம் பெற்ற ஸ்திரீகளாலும்" என்ற ஒரு வாக்கியம் சாஸ்திரங்களில் காணப்படுகிறது. அதனால் ஸ்திரீகளுக்கும் சந்நியாசம் உண்டென்றும் அவர்களுக்கும் சந்நியாசத்தில் அதிகாரமுண்டென்றும் போதாயன மஹரிஷி கூறுகின்றார். விக்ஞானேசுரரும் போதாயனரை அனுசரித்து ஸ்திரீகளுக்குச் சந்நியாசத்தில் அதிகாரமுண்டென்று ஒப்பியிருக்கிறார். ஆடவ சந்நியாசிகளுக் கேற்பட்ட விதிகளையே அவர்களும் அநுசரிக்கவேண்டும். அவர்களுக்கென்று வேறு விதிகள் காணப்படவில்லை. ஜனங்களில்லாத விடத்தில் தனியாக வசிப்பது, அவிவேகிகள் கூட்டத்தில் வெறுப்புறுதல், ஆத்தும தத்துவ ஞானத்தில் எப்பொழுதும் நிலைபெற்றிருத்தல், ஞானத்திற்குப் பலன் மோட்சமென்றுணர்தல், ஆகிய இவைகளே ஞானமெனப்படும். இவற்றை விட்டிருப்பது அஞ்ஞானமாகும்.

சாதுர்மாசியம்—ஒரு ஜந்துவுக்கும் துன்பத்தை யுண்டாக்காமலிருப்பது சந்நியாசிகளுக்கு முக்கிய தர்மங்களில் ஒன்றாதலால், ஆஷாட்மாதம் (ஆடிமீ) முதல் கார்த்திகைமாதம் வரையுமுள்ள நான்கு மாதங்களும் யதி ஒரே கிராமத்தில் வசிக்கலாம். அந்தக் கிராமம் தர்மானுஷ்டானங்கள் செய்பவர்களால் நிறைந்திருக்க வேண்டும். ஜலம் சம்பூர்ணமாயிருக்கவேண்டும். காசியை அடைந்தவர்கள் அவ்வூரை விட்டுப் போக வேண்டாம். அவ்விடத்தில் மரித்தவர்களுக்கு மறுபிறப்பில்லையென்று புராதனநூல்கள் கூறுகின்றனவென்று வியாசர் கூறினார். வருஷா காலமாகிய நான்கு மாதங்களுக்குள் அதிக மழையாயின் இரண்டு மாதங்களே சந்நியாசிகள் ஒரு கிராமத்தில் தங்கலாம். அதற்குமேல் பத்து நாட்கள் கூடத் தங்கக்கூடாது. தேகம் சக்தியற்றிருந்தால் நான்கு மாதங்களிருக்கலா மென்று சங்கரர் கூறினர். வருஷாகாலமென்பது ஆடி முதல் கார்த்திகை வரையுமாமென்று விக்ஞானேசுரர் கூறினர். வருஷா காலத்தில் ஒரே இடத்தில் தங்குவதும், அதிக வயோதிகரும், கொடிய ரோகங் கொண்டவரும், ஸங்கங்களை விட்டொழிந்தவருமான யதிகள் கிராமத்திலாவது நகரத்திலாவது தங்கியிருப்பது குற்றமாகாதென்று விஷ்ணு கூறினர். அவ்விடங்கள் புண்ணிய நதிக்கரையி லிருக்கவேண்டும். அல்லது புண்ணிய க்ஷேத்திரங்களா யிருக்கவேண்டும்.

வருஷா காலத்தில் பூமியிலும் ஆகாயத்திலும் ஜீவஜந்துக்கள் நிறைந்திருக்கு மாதலால் அக்காலம் முழுமையு மோரிடத்திலேயே வசிப்பது தான் உசிதம். ஒரு வஸ்திரம் அல்லது இரண்டைத் தரித்து ஆசையற்றவனாய் ஓரிடத்தில் வசிக்கலாமென்று யம முனிவர் கூறினர். நடக்கும் போது பூமியை நன்றாகக் கவனித்துக்கொண்டே நடக்கவேண்டும். இரவிலும் மத்தியானத்திலும் இரு சந்தியா காலங்களிலும் நடப்பது கூடாது. சூனியமான விடத்தும் துர்க்க மிருக்குமிடத்தும் பிராணபாயம் நேரிடும்படியான இடத்திலும் வசிப்பது கூடாது. எந்த விடத்தில் ஈசுவரன் வசிக்கின்றாரோ அந்த விடத்தில் வசிப்பது நன்று. தன்னு

டைய குலம் கோத்திரம் ஒழுக்கம் பேர் எல்லாவற்றையும் பிறர் அறியும்படி செய்யவேண்டும். நெல் முதலிய தானியங்களை உரலிலிட்டுக் குத்துவதும், பிறரைக் குத்தும்படி செய்வதும் கூடாது. தான் பிறனொருவனை யண்டாமலும், பிறர் தன்னை யண்டாமலும் மிருக்கும்படி நடந்துகொள்ள வேண்டும். பிரணவம் உபநிஷதம் இவைகளில் தன் வாக்கைச் செலுத்த வேண்டும். வேறொன்றிலும் உபயோகிக்கக் கூடாது. இகலோக பரலோக காரியங்களைச் சற்றுங் கவனிப்பது கூடாது. நல்லறிவு பெற்றுச் சிரவண மனன நிதித்தியாஸனங்களால் ஆத்மசாட்சாத்காரத்தை விடாமற் கைக்கொண்டு, ஆச்சிரமத்துக்குரிய தர்மங்களை விடாமல் நடத்தி, நிஷித்த காரியங்களை யொழித்துவர வேண்டுமென்று ஹாரதத்தர் கூறினர். இகபர சாதனமான காரியங்க ளெல்லாம் குரு உபதேச மில்லாவிட்டால் சித்தி தருவதில்லை. ஆதலால் குருவை மிகச் சிரத்தையுடன் ஆராதிக்க வேண்டும். குருவின் அநுமதியின்றி ஒருகாரியத்தையும் ஆரம்பித்தல் கூடாது. குருவைச் சற்றேனும் விட்டுப் பிரியாமலிருந்து, தண்டம்போல அவரை வணங்கிவரவேண்டும். மனு முதலியோரால் விதிக்கபபட்ட பிரமசரிய விரதமெல்லாம் சந்நியாசகளுக்கு முரியதென்று வியாசர் கூறினர். சொர்ணம் முதலியவற்றைப் பிறரிடமிருந்து பெறுவதுகூடாது. பொன் வெள்ளி முதலியவற்றை ஆசையுடன் பார்ப்பானானல் பிரமஹத்தி தோஷத்தை யடைவான். ஆசையுடன் தொட்டால் பௌல்கஸன் என்ற இழிந்த பாபியாவான். ஆசையுடன் அவற்றைப் பெறுவானானல் ஆத்மஹத்தி செய்தவனாவான். ஆதலால் அவற்றைப் பார்ப்பதும் தொடுவதும் கூடாதென்று பரமஹம்ஸோப நிஷத்து கூறியது. அதுவே, புலன்களை யடக்கி நான் பரிபூர்ணானந்த சொரூபியான பிரமமென்று பாவித்துக் கிருதகிருத்தியனா யிருக்கவேண்டு மென்றது. மனமானது சுத்தமென்றும் அசுத்தமென்றும் இருவகைப் படும். காமமுதலியவற்றில் பற்றற்றிருப்பது சுத்தமனம், பற்றுதலுடையது அசுத்தமனமாம். இம்மனமே விஷயப் பற்றுதலால் பந்தத்துக்கும், பற்றற்றிருத்தலால் மோட்சத்துக்கும் காரணமாகின்றது. ஆதலால் விஷயப் பற்றுதலை யொழித்துவிட வேண்டுமென்று அமிருதபிந்துபநிஷத்து கூறியது.

## திகம்பர சந்நியாசம்.

திகம்பரம் என்றால் வஸ்திரமில்லாம லிருப்பது. திகம்பரன் நல்ல ஞானமுடையவனானல் அவனுக்கு யாதொரு கர்மானுஷ்டானமு மில்லை. அடையாளமுமில்லை. ஆதலால் அவன் மமதை யற்றவனும், பயமில்லாதவனும், சாந்தி யுடையவனும், சீதோஷ்ணங்களைக் கவனியாதவனும், உதிர்ந்த சருகு முதலியவற்றைப் பட்சிப்பவனுமா யிருக்கவேண்டும். அரைநாண் கௌபீனம் இவ்விரண்டையுந் தரித்துக் கொண்டாவது தரிக்காமல் விட்டுவிட்டாவ திருக்கலாம். இவன் நல்ல ஞானத்தைப் பெற்று யோகியா யிருந்தால் எங்கும் பிரமமாகக் காண்பான். ஞான

மொன்றே மோட்சகாரண மாவதன்றிக் காஷாயமுதலிய அடையாளங்க ளால் யாதொரு பயனுமில்லை. ஆகையால் திகம்பரர்களுக்கு அடையா ளம் வேண்டுவதில்லை. ஞானமொன்றே பிரதானம். ஆசிரமத்துக்குரிய குறிகளை யிழந்தவனானாலும் அதற்குரிய கருமங்களை புணர்ந்து பிரமவிரத மொன்றையே அனுஷ்டிப்பான். அந்தத் தர்மங்களை மனதில் வைத்துக் கொண்டு, பிறருக்குத் தம்மைப் புலப்படுத்தாமல் வசிப்பார். எல்லாவற் றையும் ஒழித்து ஊமையைப்போலவும், குருடனைப்போலவும், செவி டனைப் போலவும் பூமிமுழுவதும் சஞ்சரிப்பார். இவனைத் தேவர்களும் கண்டு ஆசைப்படுவார்கள். பைத்தியங் கொண்டவர்களைப் போலாவது அஃதில்லாதவர்களைப் போலாவது சஞ்சரிப்பார். சொற்ப ஆகாரத் தைப் புசிப்பார். நித்திரையிலும் நித்திரை யில்லாதபோதும் யோகத்தில் நிலைத்திருப்பார். இவ்வாறிருப்பவனைத் தேவர் பிராமணன் என்று கூறு வார்.

சாஸ்திராப்பியாசத் தாலும் நல்ல சகவாசத்தாலும் ஞானத்தைப் பெறுவது யோகத்தின் முதற்படியாம். இரண்டாவது வஸ்து விசாரணை. சங்கத்தை யொழித்தல் மூன்றாவது. வாசனை யொழித்தல் நாலாவது. சுத்தசசிதாநந்த சொரூபமே ஐந்தாவது. இவ்வைந்தாம்படியில் அரைத் தூக்கமும் அரைவிழிப்புமா யிருப்பானாயின் ஜீவன்முக்தனாம். ஆறாவது ஏதுமறியாநிலை. அதில் சுழுத்தியி லிருப்பதுபோலவே யிருந்தால் உப சாந்தி யுண்டாம். அதுவே முக்திநிலை. எல்லாவற்றையும் சமமாகப் பாவித்து நிர்மலமாக இருப்பது ஏழாம்படியாம். இவ்வேழாம்படி துரியா தீதாவஸ்தையும் நிர்வாணமுமாம். அதற்கு நிகரில் ஏழாம்படி யென்பர்.

(தொடரும்) சிவானந்தசாகரயோகீஸ்வரர்.



## வள்ளுவ நாம விளக்கம்.

தமிழறி நேயர்காள் !

சென்ற ஆடித் திங்களில் நம்மானந்தனில் வெளிப்போந்த திருவள் ளுவ மதவாராய்ச்சி எனும் வியாசத்தின் இறுதியில் நமது பொய்யில் புலவ ருக்குத் திருவள்ளுவர் எனப் பெயர் அமைந்ததற்குக் காரணம், எல்லோ ரும் திரு (செல்வம் அதாவது கல்விச்செல்வம்) அள்ளுதலாலேயே திரு வள்ளுவர் எனப் பெயரமைந்ததுபோலு மெனக் கூறியுள்ளேன். அக் கூற்று நம் உருவகமேயன்றி வேறன்று. ஆதலால் வள்ளுவர் எனும் நாமத்தை விளக்க அவாவுற்று இவ்வியாசம் எழுதத் துணிந்தனன். நம் நண்பன் ஆனந்தன் இடந்தருவானாக.

சீரியீர் ! நம் தம் தேன்மொழியன்ன தென்மொழியதனுள் வள்ளு வர் எனும் பதத்திற்கு பதார்த்தம் என்னவென்று நோக்கில் சிற்சில சான் றுகள் காணப்படுகின்றன: முதற்கண் வள்ளுவன் என்பதின் தாதுப்

பொருள் கற்றுணர்ந்தவன் எனவும் அப்பொருள் நமது தமிழ் பாஷையில் மரியாதைச் சின்னமாகவும் வழங்கிவந்தது எனவும் தெரிகின்றது.

இரண்டாவதாத பிங்கல நிகண்டில் வள்ளுவன் என்பான் அரண்மனைக் கிரியா விசேஷட மேற்பார்வை உத்தியோகஸ்தன் என்னும் பொருள்பட,

"வள்ளுவன் சாக்கை யெனும் பெயர் மன்னர்க்
குள்படும் கருமத் தலைவர்க் கொன்றும்" என்று கூறியுள்ளது.

மூன்றாவதாக கம்பராமாயணத்தில்,

"என்புழி வள்ளுவரியானை மீமிசை
நன்பறையறைந்தனர் நகர் மாந்தரும்
மின்பிறழ் நுசுப்பினார் தாமும் விம்மலால்
இன்ப மென்றனக்கரு மளக்க ரெய்தினர்" என்று கூறப்படுதலால் வள்ளுவன் அரண்மனையைச் சேர்ந்த காரியங்களை ஜனங்கட்கு அறிவுறுத்தும் சேவகனுவான் என்று புலப்படுகின்றது.

நான்காவதாக சூடாமணி நிகண்டில்,

"வரு நிமித்திகன் பேர் சாக்கை வள்ளுவன் என்றுமாகும்"
என நிமித்திகனின் பரியாயப் பதமாக வள்ளுவன் எனும் பெயர் வழங்கி வந்தது எனக் கூறப்பட்டுள்ளது. மேற்காட்டிய மேற்கோள்களால் வள்ளுவன் என்னும் பதம், கன்மத்தலைவன், ஜோசியன் எனப் பொருள்படுகின்றதாயினும் உலகவழக்கில், வள்ளுவன் என்னும் சொல் பறையர்களுக்குக் குருவாய் ஜோசியமே ஜீவனமாகவிருக்கும் வள்ளுவ ஜாதியிற் பிறந்தவனையே குறிக்கின்றது, என்பதாகக் கூறுவார் பலரும். இவ்விடயங்களைக் கவனித்து நோக்கின் வள்ளுவர் பறையரல்லர் என்பது ஒரு தலை.

இஃதோர்பால் நிற்க, ஸ்ரீமான் சேஷகிரி சாஸ்திரியார் அவர்கள் "தமிழ்க் கவிசரிதம்" எனும் நூலில், சைனர்கள், அவர்தம் சமயகுரவர்களுள் ஒருவராய ஏலாச்சாரியார் என்பவர் இந்நூலை இயற்றினர் என்று கூறுவதாகக் கூறியுள்ளார்கள். ஓர்கால் சைனர்களுக்குள் கற்றுணர்ந்தவனை, வள்ளுவனென்றழைத்தல் மரபாயிருக்கலாமென்றும் அவர்கள் ஏலாச்சாரியார் என்னும் பெயரினால் தாமுணர்ந்த திருக்குறள் நூலாசிரியர்க்கு, வள்ளுவர் என்னு மிந்நாமத்தை வழங்கியிருக்கலாமென்றும் கூறி இடவுரை கொள்ளாது போகின்றார். இவ்விதம் கூறுவது எத்துணை தூரம் உண்மையோ அறியேம்! இக்கூற்றை நம் நண்பரின் ஆராய்ச்சிக்கே யானும் விட்டுவிடுகின்றேன்.

மற்றும், பூர்வத்தில், ஓர் பிரளயம் வந்தது. அது வருமென்று பிரமன் முன்னரே யறிந்து அதில் இறவாது பிழைக்கும்பொருட்டு வேற்றுருவடைந்து ஓர் சுரைக்குடுக்கையைத் தனக்கிடமாகக் கொண்டு

அதிற்புகுந்து பிரளய வெள்ளத்தில் மிதந்துவந்தனர். அதுகண்ட சிவ பெருமானுனவர் ஒன்றுமறியார்போன்று சுரைக்கூட்டினிடை சென்று இதற்குள்ளிருப்பவன் யாவனென விழித்தலும், பிரமன் வருங்காலமறிந்து செய்ததற்கேற்ப வள்ளுவர் என்றூர். இத்தகைய பிரமனது அமிசம் இவரானதுபற்றி இவருக்கும் வள்ளுவர் எனப் பெயரமைந்தது என வழங் கும் கர்ண பரம்பரைக்காதை. திருவள்ளுவர் பிரமனது அமிசமே என் பதற்குறிய பிரமாணங்கள், திருவள்ளுவ மாலையின்கண் பலவிடத்தும் காணப்படுகின்றன. என்றூலும் சில பிரமாணங்களேக் காட்டி வள்ளுவர் பிரமனது அமிசமே என்னும் கூற்றை நிலைநிறுத்த வெண்ணுகின்றேன்.

உக்கிரப்பெருவழுதியார்,

"நான்மறையின் மெய்ப்பொருளே முப்பொருளாய் நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த—நூன்முறை" என்றும்

காரிக்கண்ணனுர்,

* * * *

மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்கு தான்வள் ளுவனுகி
அந்தா மறைமே லயன்.

என்றும் கூறுதலால் யான் பிரேரேபித்த கூற்று உறுதிப்படுகின்றது என் பது சொல்லாமலே யமையும்.

இஃ தெல்லாம் ஓர் பால் நிற்புழி, வில்சன்துரை (Wilson) யெழு திய ஓர் கதையில் வள்ளுவர் திரிபுராந்தக கவீசுவரர் என்னும் பெய ருடையவரென்றும், சிவபெருமானே கடைச்சங்கப் புலவர்களது கர்வத் தை யடக்குவான் ஓர் தமிழ்ப் பாவலராகத் தோன்றி, மேற்கூறிய திரு நாமத்தோடு திருவவதாரம் செய்தனர் என்றும் கூறுகின்றனர். இதில் இவரைச் சிவனது அமிசமெனவே கூறி அக்கூற்றை வலியுறுத்துகின்ற னர்.

தாங்கள் தாங்கள் உய்த்துணர்ந்து இவ்வள்ளுவர் என்னும் பரியாயப் பதம் நம் புலவர் பெருமகனுக்கு வந்த விபரத்தை யறிந்துகொள்ளுங்கள்.

தோ. மு. பாஸ்கரன்,
"சித்திர ஆலயம்" திருநெல்வேலி.

---

## சில மகான்களின் நீதி மொழிகள்.

1. குயவன் வீட்டில் சட்டி, பானே, தட்டு முதலிய வெவ்வேறு ருபங்களேயுடைய அநேக பாத்திரங்கள் இருந்தபோதிலும் எல்லாம் களி மண்ணுலேயே செய்யப்பட்டவையாகும். அதுபோலவே ஒருவராகிய ஈசு

வரன் வெவ்வேறு தேசங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு நாமங்களுடனும் வெவ்வேறு ரூபங்களுடனும் பூஜிக்கப்படுகிறார்.

[இராமகிருஷ்ண பரமஹம்சர்.]

2. வியாதியால் பீடிக்கப்பட்ட குழந்தைகளைப் பராமரிக்கும் தாயார் அக்குழந்தைகளின பிணிக்குத் தக்கவாறு ஒன்றுக்குச் சோறும் குழம்பும், மற்றொன்றுக்குச் சவ்வரிசி கஞ்சியும், இன்னொன்றுக்கு ரொட்டியும் கொடுப்பதுபோல, ஈசுவரன் வெவ்வேறு ஜனங்களுக்கு வெவ்வேறு வழிகளை அவரவர்களுடைய இயற்கைக்குத் தக்க பிரகாரம் செப்பனிட்டிருக்கிறார். [இராமகிருஷ்ண பரமஹம்சர்.]

3. எவனொருவன் உலகத் தூண்டுதல்களுக்குள் ளிருந்துகொண்டே பரிபூரணத்துவம் அடைகிறானோ அவனே தீரன்.

[இராமகிருஷ்ண பரமஹம்சர்.]

4. சர்க்கஸ் வித்தையிலே சிறு பையன்கள் உயரச்சென்று ஒரு கயிற்றைப் பிடித்துக்கொண்டு சிறிதும் பயமின்றிச் சுற்றி வருவதுபோல, நீ ஈசுவரனை உறுதியாய்ப் பற்றிக்கொண்டு உலக கடமைகளைச் செய்வாயானால் உனக்கு சிறிதும் பயமேயில்லை. [இராமகிருஷ்ண பரமஹம்சர்.]

5. கோபத்தை சாந்தத்தால் வெல்லு, தீமையை நன்மையால் வெல்லு, உலோபத்தை தயாளத்தால் வெல்லு, பொய்யை மெய்யால் வெல்லு. [கௌதம புத்தர்.]

6. நீ கொலை புரியாதே; விபசாரஞ் செய்யாதே; திருடாதே; பொய்சாக்ஷி சொல்லாதே. நீ உன்னை எவ்வாறு நேசிக்கிறாயோ அவ்வாறே பிறரையும் நேசி. [கிறிஸ்து]

7. பதினாயிர வருடங்கள் ஜீவித்திருக்கப் போவதாய்க் கருதி உன் வாணாளை யெல்லாம் வீணாளாய்க் கழிக்காதே. மரணம் உன் தலைமேலிருக்கிறது. நீ உயிருடனிருக்கும்போதே பிறருக்கு நன்மை செய். இது உன்னால் முடியும். [மார்க்கஸ் அருலியஸ்.]

8. பெருமை யில்லாமல் தாழ்மையாகவே இருக்கும்படி எனக்கு ஆண்டவன் கட்டளை யிடுகிறார். மேலும் ஒருவர் மற்றொருவரை ஹிம்சிக்கக் கூடாதென்றும் அவர் எனக்கு அறிவிக்கிறார். [நபிநாயகம்.]

9. அடிமையாயிராதே, தைரியவானாய்ப் பிரகாசி, உண்மையுரைக்க அஞ்சாதே, நியாயத்தைச் செய்ய பயப்படாதே, உன் கடமையைச் செய்வதில் மரணத்திற்குக் கூட பயப்படவேண்டாம். [தயாநந்த சரஸ்வதி]

ஆற்காடு-இராஜரத்தின முதலியார், பி. ஏ.

---

## தொழில் முயற்சி.

இவ்வுலகத்திலுள்ள மனிதர்கள் யாவரும் ஏதாகிலுமோர் தொழிலைச் செய்தே ஜீவனஞ் செய்யவேண்டும். ஏதாகிலுமோர் தொழிலைச் செய்யாதான் சோம்பேறியாவான். அவனை உலகம் இகழும். தொழிலில்

லாத சீவனங் கிடையாது. ஒவ்வொரு மனிதனும் அவனவனுடைய அந்தஸ்திற்கும், ஸ்திதிக்கும் தக்க தொழிலைச் செய்யக் கடமைப்பட்டவன். தொழில் செய்து சீவிப்பதிலுள்ள சுகமும், பயனும் வேறெதிலுங் கிடையாது. எவ்வாராகிலும் நாம் பொருளைத் தேடல்வேண்டும். இதைக் குறித்தே ஞானத்தாயாகிய ஔவை பிராட்டியாரும் "திரைகட லோடியும் திரவியந் தேடு" என்றனள்.

அந்தணர்களுக்கு வைதீகத்தொழிலும், வைசியருக்கு வியாபாரத் தொழிலும், குடியானவர்களுக்கு உழுது பயிர் செய்கின்ற தொழிலும் இன்றியமையாதவை. இவை யாவற்றினும் தன் பழனத்தை உழவுகோலா லிடரி, நீர் பாய்ச்சி, பரம்படித்து விதைவிதைத்து அது முதிர்ந்தகாலத்தே அறுவடைசெய்து, அத்தானியத்தைக் கொண்டு நம் வாழ்நாட்களைக் களித்துக் கழிப்பதே மிகவுஞ் சிறந்தது. இதைக்குறித்தே "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்—பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்று ஔவை பிராட்டியாரும் நவின்றனள். ஆனால், இம்மொழி, யாருக்குமானப் பொதுப் பழமொழியன்று. சொந்த நிலம் படைத்தவருக்கே இப் பழமொழி இசைந்ததாம். சொந்த பூமி இல்லாதவர் வேறு ஏதாகிலும் ஒரு தொழிலைச் செய்தே சீவனஞ் செய்யவேண்டும். மிகுந்த செல்வம்படைத்தவரா யிருந்தபோதிலும் அவரும் ஓர் தொழிலையே செய்து தம் செல்வத்தைப் பெருக்குதல் வேண்டும். உழுதொழிலின்றேல், சிறந்த வியாபாரத்தைச் செய்வதே நல்ல தொழிலாம். வியாபாரஞ் செய்வது தம்முடைய அந்தஸ்திற்கு தாழ்வானதென்பர் சிலர். அது அவர்களின் அறிவீனமே. பொய் பேசுவதும், திருடுவதும் அந்தஸ்திற்குக் குறைவேயன்றி, வியாபாரஞ் செய்வதால் ஓர் மனிதனுக்குக் குறைவு உண்டாகாது. அது அவனுக்கு நிறைவையே தரும். அரைப் படிப்பும், கால் படிப்பும் படித்து, உத்தியோகத்திலமர்ந்து, கேவலம் ஓர் மேலதிகாரிக்குப் பயந்து, அவன் மொழியும் கடுஞ் சொற்களெல்லாவற்றையுமேற்று, அவனிடும் பணிகளை யெல்லாஞ் செய்து, வாழ்வது மிகவும் கேவலம். அதிலும் சொற்ப சம்பளத்தி லமர்ந்து, குடும்பத்தைச் சரிவரக் காப்பாற்றச் சக்தியற்றவனாக வருந்தல் என்னே! நம் நாட்டில் உத்தியோகத்தைக் கருதியே பெரும்பான்மையோரும்—என் யாவரும்—கல்வி கற்கின்றனரேயன்றி, தன்னுடைய அறிவை அபிவிருத்தி செய்யப் படிப்பதில்லை. இவ்வாறு கல்விகற்கப் புகுவார் பலர் தம்மிட மிருக்கின்ற சொற்பப் பொருளையும் செலவு செய்து முழுமையுங் கற்காமல் உத்தியோகமும் கிடைக்காமல் அலைகின்றனர். அந்தோ பாவம்! இவர்கள் புத்திசாலிகளா யிருப்பரேல், தனக்குள்ள சிறிய தொகையைக்கொண்டு, ஏதாவது ஓர் தொழிலைச் செய்து அத்தொழிலின் மூலமாய்த் தன் செல்வத்தை விருத்தி செய்யலாமன்றோ? கல்வியிற் சிறந்து, பட்டதாரிகளானவர்களும், துரதிர்ட்ட வசத்தால் அதிக சம்பளம் கிடைக்கப் பெறாதவர்களாய் வருந்துகின்றனர். அதிக சம்பளக்காரர் சிலரும், வேலைக்குத்தக்க வேடம்

போடவேண்டியிருப்பதால் அவர்களுக்குக் கிடைக்கின்றசம்பளம் போதாமல் கஷ்டப்படுகின்றனர்கள். அதிகாரத்தைக் .கருதியும், பெருமையைக் கருதியும், உத்தியோகம் செய்கின்ற பலர் போதுமான சம்பளமில்லாது வருந்துவதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இவ்வுத்தியோகத்திலிருந்து நாம் நிறைந்த பொருளை ஈட்டவும் முடியாது. ஆகையால், உத்தியோகம் யாவருக்கும் பொதுவான தொழிலன்று.

இனி, இவை எல்லாவற்றையும் விட, சிறந்த தொழில் யாதென ஆராய்வோம். வர்த்தகமே இவை யாவற்றிற்கும் (விவசாயம் தவிர) சிறந்த தொழிலாம். "திரைகடலோடியும் திரவியம் தேடு"வது அவசியமானதால், நாம் தென் ஆப்ரிக்காவிற்கும், (South Africa) மெசபடோமியாவிற்கும் சென்று உத்தியோகம் செய்து பொருள் சம்பாதிக்க வேண்டுமென்பது கொள்கையல்ல. இப்பழமொழி வர்த்தகர்களையே குறிப்பிடும். கடல்களைத் தாண்டிச் சென்றும் வியாபாரம் செய்யவேண்டு மென்பதே இதன் பொருள். வியாபாரம், வாணிபம், நெசவு முதலிய கைத்தொழில்கள் இவையே மேன்மையான தொழில்களாம். இவற்றால் நாம் இரண்டுவிதப் பலனை யடையலாம். அதாவது நாம் நம்முடைய செல்வத்தை விருத்தி செய்வது ஒன்று, நாம் சீவனஞ் செய்வதிரண்டு.

நிற்க, வியாபாரத்தின் இரகசியத்தைச் சற்று விளக்குவாம். ஜனங்களுக்கு எப்பொருளின்மேல் விருப்பமதிகமோ, எப்பொருள் சீக்கிரத்தில் செலவாகுமோ, அதை வரவழைத்து வியாபாரஞ் செய்தல்வேண்டும். ஆரம்பத்தி லதிகமுதலை வைத்துக்கொண்டு வியாபாரஞ் செய்யவேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. சிறிய முதலைக்கொண்டாரம்பித்து, கொஞ்சம் கொஞ்சமாய் சரக்குகளை வாங்கி விற்றல்வேண்டும். இவ்வாறு சிறுகச் சிறுக விற்றால் பின்பு பெரிய வியாபாரியாகிவிடலாம். ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும், இந்தியாவிலும் ஏழைகளாயிருந்து வியாபாரஞ் செய்து பின்பு, பெரிய குபேரரானவர்கள் பலருண்டு. பம்பாய் நகரிலே வதியும் ஜம் ஸெட் ஜீஜிபாய் என்பவர் தனக்குக் கிடைத்த இரண்டு குப்பிகளையே முதற்பொருளாகக் கொண்டு, குபேரராயினரென்பது யாவருக்குந் தெரிந்தவிஷயமே.

வியாபாரத்திற்கு, பொய், கோபம், கடுஞ்சொல் இம்மூன்றும் கொடிய விரோதிகளாம். உண்மை, சாந்தம், இன்சொல் இம்மூன்றையுமுடையவனே நல்ல வியாபாரியாவன். இரும்பைத் தன்னிடமிழுக்கும் காந்தத்தின் சக்தியைப்போன்று, தம்முடைய வாக்கு நயத்தாலே, வாங்குபவர் தன்னுடைய கடைக்கே வர இழுக்கும் சக்தியை யுடைய வியாபாரிகளே திரளாகச் செல்வத்தைக் குவிக்க முடியும். தனலட்சுமி இவர்களை விட்டு என்றும் பிரியாள். நல்ல பண்டத்தை வாங்கி, சொல்ப லாபத்தைச் சேர்த்து, மற்ற வியாபாரிகள் கொடுக்கும் விலைக்குக் குறைந்தே விற்கின்ற வியாபாரிகளுக்கே வியாபாரம் அதிகரிக்கும். வியாபாரத்தில் பொய்

பேசவேண்டிய அவசிய மிருக்கின்றதென்றும் ஆகையால் வியாபாரம் மேலான தொழிலல்லவென்றும் சிலர் கருதுவர். அது முற்றிலுந்தவறு. வியாபாரத்தில் பொய் பேசவேண்டிய அவசியமே கிடையாது. வாங்கிய விலைக்குமேல் கொஞ்ச இலாபத்தை வைத்து விற்பதில் என்ன பொய் இருக்கின்றது. கூறுவார்களாக? இனி, வியாபாரிகள், ஒருவருக்கு ஒரு விலையும் மற்றொருவருக்கு ஒரு விலையும் சொல்லி விற்றல் கூடாது. இது அவர்களுக்கு இருவித இன்னல்களை இயற்றும். அதாவது, வஞ்சனையால் சம்பவிக்கும் பாவமொன்று, வாங்குகின்றவர்கள் இவனுடைய மோசத் தொழிலை யறிந்து இவனிடம் வியாபாரம் செய்யாது நிற்பதால் வியாபாரமின்மை இரண்டு. இப்பேர்ப்பட்ட வர்த்தகம் தேய்பிறைச் சந்திரனைப் போன்று குன்றும் என்பதற்கையமில்லை. வாணிபத்திற்கு பொறாமை கூடவே கூடாது. பொறாமை என்ற கொடிய ஆமை ஒருவனுடைய அழிவையே தேடும். பொறாமையால் பொருள் நஷ்டமும், வர்த்தகர்களுக்குள் விரோதமும் வலுக்கும். சமயத்திற்குத் தகுந்தலாபம், பொறுமை, நிராசை, இன்சொல் படாடோபமின்மை, நன்னடக்கை ஊக்கம் முதலியனவே ஓர் வலுத்த வியாபாரியின் இலக்கணம்.

வியாபாரத்திற்கு இடையறா முயற்சியும் சுறுசுறுப்பும் வேண்டும். காலமறிந்து பொது ஜனங்களின் நோக்கமறிந்து, அருமையான சரக்குகளை வரவழைத்து விற்றல் அவசியம். நல்ல வியாபாரிகள் உலகத்தில் நிறைந்த பொருளையும் புகழையும் எய்துவர்.

பெரிய அறிவாளிகள் தங்களுடைய அறிவால் நிறைந்த புத்தகங்களை யெழுதிப் பிரசுரஞ் செய்து, மிகுந்த லாபத்தை யடைவர். இதுவும் நல்ல தொழில் என்பதை யாவரும் மறுக்கமாட்டார்.

வியாபாரஞ் செய்யப் போதுமான பொருளைப் படையாதார், பல துளி பெரு வெள்ளமென்பதற்கிணங்க, கூட்டாளிகளாகச் சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்யலாம். கூட்டு வியாபாரத்திற்கு ஒற்றுமை மிகவுமவசியம்.

ஒரு நாடு முன்னேற்றமடைவதற்கு அதன் தொழில் முயற்சியே முக்கிய காரணம். இங்கிலாந்து, அமெரிக்கா முதலான மேல் நாடுகளெல்லாம் அவைகளின் தொழில் முயற்சியாலேயே இவ்வுலகத்திற்குக் கண்கள்போன்று விளங்குகின்றன. சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்பு ஜப்பான் தேசம் இருந்த இடங்கூட ஒருவருக்குந் தெரிந்திராது. அப்பேர்ப்பட்ட ஜப்பான் தேசம் அதிக விரைவில் இவ்வளவு மேன்மையையடைந்து, இப்பூவுலகிலுள்ள வல்லரசுகளில் ஒன்றாயதற்கு அதன் தொழில் முயற்சியே யன்றி வேறு எது காரணம். "தங்கக் களஞ்சிய மன்றோ ஜப்பான்" என்று ஓர் பெயர்பெற்ற ஆங்கிலேயர் அழைத்தனர்.

சகோதர சகோதரிகளே !

பண்டைக்காலந்தொட்டு, கல்வி, கேள்வி, நாகரீகம், சிற்பம், தொழில்

முதலியவைகளில் புகழ்பெற்று விளங்காநின்ற நம் பாரத நாடு, சிலகாலம் 'மழுங்குபு மண்ணுறுமணி'யைப்போன்று மழுங்கிக் கிடக்கின்றதன்றே. நம்முடைய கைத்தொழிலை விருத்திசெய்து நம் நாடும் அதனுடைய பழைய நிலையை யடைய முயலவேண்டுவது நம்முடைய கடமையன்றோ!

கைத்தொழிலை விருத்திசெய்ய முயற்சி செய்வான் பலரும் நமது நாட்டாராலேயே கெடுக்கப்படுகின்றனர்.

தற்காலத்து, கதராடையினால் நமது நாடு முன்னேற்றமடைவுதற் கையமுண்டோ. கதரை ஆதரித்துக் கட்டவேண்டியது இந்தியராகிய நமது கடமையன்றோ! கதரை உடுக்க நியூசன்ஸ் (Nuisance) ஆக இருக கிறது என்று சொல்லும் நமது இந்திய சகோதரர்களை நாம் என்ன சொல் வது. நமது சகோதரர்களின் அறிவீனத்தை நினைந்து வருந்துவதா? அல்லது நம் பாரததேவியை நொந்துகொள்வதா?

நம் நாட்டிலேயே பென்சில் முதலான சுதேசி சாமான்கள் செய்யப் படுகின்றன. அதை நாம் வாங்கி உபயோகியாது, கடைக்குச் சென்றதே "அமரிக்கன் பென்சில் இருக்கிறதா?" என்று கேட்பது தரும நியாயமா! இது என்ன விபரீதம். நாம் அச்சாமான்களை வாங்காததனால், வியாபாரி களுக்கும், அச்சாமான்களை செய்கின்றவர்களுக்கும் ஊக்கம் குறைவுபடு கின்றது. ஆகையால், வியாபாரம் செய்கின்றவர்களும், சுதேசி சாமான் களை வாங்கி விற்றல்வேண்டும். பொதுஜனங்களும் அவைகளை வாங்க வேண்டும்.

சகோதரர்களே!

ஆனதுபற்றி, அடிமைத் தொழிலை யொத்த உத்தியோகத்தை விட, அவரவர் அந்தஸ்திற்குத் தக்க வியாபாரம், கைத்தொழில் இவற்றைச் செய்து, சுயேச்சையாக வாழ்ந்து, ஜீவித்து தம்முடைய பொருளையும் விருத்தி செய்வதே இக்காலத்திற்குத் தக்க நடக்கையாகும்.

S. V. தேவராஜ அய்யங்கார்,
'சரஸ்வதி நிலயம்' உறையூர்.

---

## "ஆத்மசக்தி" ஆசிரியரின் தவறு.

9-வது தொகுதி, 1-ம் பகுதி, ஆடிமீ வெளியான ஆனந்தபோதினி யில் நாம் வரைந்துள்ள "நம்நாட்டுத் தருமம்" என்ற விஷயத்தை நேயர் கள் வாசித்திருப்பீர்கள். அதன் உண்மைக் கருத்தையும் அறிந்துகொண் டிருப்பீர்கள் என்று நம்புகிறோம். உருத்ரோத்காரிஞு புரட்டாசிமீ வெளியான "ஆத்மசக்தி" (புதுவையில் பிரசுரிக்கப்படுவது) என்ற சஞ்சி கையில், அதன் பத்திரிகாசிரியர், அந்த வியாசத்தைக் கண்டித்து கீழ்க் கண்ட விஷயத்தை வரைந்துள்ளார்:—

"ஆனந்போதினியின் பெருந் தடுமாற்றம்."

அடுத்தபடியும், உதவி யங்கமாகத் திருக்கோயில் என்னும் விஷயத்

தையே நமது சகோதரப் பத்திரிகையாகிய ஆநந்தபோதினி நம்மை எழு தவைத்த விஷயத்தில் நமது கையானது புண்ணியம் செய்ததுதான் என்று எண்ணுகிறோம்.

ஆநந்தபோதினி (தொகுதி 9, பகுதி 1) ஆடி மாத சஞ்சிகை 8-ம் பக்கம் நம் நாட்டுத் தருமம் என்ற தலைப்பின்கீழ், எழுதுகையில், பெருந் தடுமாற்றமடைந்திருக்கிறது. திருக்கோயில் விஷயத்தில் ஆநந்தனுக்கு தடுமாற்றமான அபிப்பிராயம் உண்டாகியதற்கு நாம் ஆச்சரியப்படுகிறோம். அந்த வியாசத்தில் முதலில் தருமம் இன்னின்னவென்பது முதலாக விவரித்து வந்தது. பின்னர் காலத்துக்குத் தக்க தருமம் சில இருப்பது போல் எண்ணி அவைகளை விவரிக்கத் தொடங்கிற்று. பின்னர் நம் முன்னோர் கட்டியுள்ள ஆலயங்களில் சரியாய்ப் பூசையாதிகள் நடந்து வருகின்றனவா அதன் வருமானம் சரியான வழியில் செலவழிக்கப்படுகிறதா என்பதைக் கவனித்தால் போதுமானதாக விருக்கப்—புதிதாக கோயில்களைக் கட்டுவது வீண் வேலையன்றோ? என்றும் மயங்கக் கூறியிருக்கின்றது.

நமது முன்னோர் கட்டிவைத்துள்ள கோயில்களில் பூசையாதிகள் சரிவர நடவாதிருப்பதால் கோயில்கள் கட்டுவது நிறுத்தப்படவேண்டும் போலும்! கோயில் உற்பத்தியை மறுக்கும் நாஸ்திக புத்தியைக்கொண்டு பழங் கோயில்களை நன்றாய் நடத்துவிக்கலாம்போலும்! சரியாய்ப் பூசையாதிகள் நடத்துவிக்க நமக்கு ஏது இருக்கவேண்டும் என்பதை ஆனந்தன் அறியாதது ஆச்சரியம். ஆதியில் கோயில்கள் நன்றாய்ப் பூசையாதிகளில் நடத்தப்பட்டு வந்ததற்குக் காரணம் என்ன என்பதை ஆநந்தன் ஏன்றான் உணரவில்லையோ தெரிகிலம். புதிய புதிய கோயில்கள் கட்டுவது வீண்வேலையென்று ஆநந்தன் கூறிவிட்டுப் பின்னர் இப்போது ஆக வேண்டிய வேலை மதத்தைக் காப்பதுதான் என்று முடிக்கிறது. கோயில் விர்த்தியாலேயே மதம் காப்பாற்றப்பட முடியும் என்பது நமது அபிப்பிராயம்.

இதுவரை நமது புராதன மதம் அநேகர் காவற்குட்பட்டும் இன்று ஆங்கிலேயர் காவற்குட்பட்டும் அழியாதிருப்பதற்குக் காரணம் என்னவென்று நாம் ஆநந்தனைக் கேட்கிறோம். திருக்கோயில்களே நம்மவரைப் பிறமதம் தழுவாதிருக்கப் பண்ணிவருகிறதென்றால் ஆநந்தன் ஏற்றுக்கொள்ளக்கூடுமோ என்னவோ தெரிகிலம்.

ஒதுக்கிடை கிடக்கும் சிற்றூர் வாசிகளை—ஏழைகளைப் பிறர் மதம் தழுவாதிருக்க, அங்கு இருக்கும் தெய்வங்களின் சக்தியே எச்சரிக்கின்றன என்பது ஆலோசித்தால் ஆநந்தனுக்குப் புலப்படும்.

ஒரு சேரியில் ஆயிரம் ஏழைகள் இருப்பர். அங்குப் பாதிரிகள் தந்திரம் வந்து நுழையும். காசிலும் சொத்திலும் பாதிரிகள் மதம் சிறந்ததென்று தந்திர பிரசாரம் நடக்கும். அங்குள்ள ஏழைகள் அத்தனைபேரும் பிறமதத்தைத் தழுவி விடுவார்கள் என்று பாதிரிகள் எதிர் பார்ப்பார்கள்.

அந்தச் சேரியின் தெய்வம் ஏழைகளை அசையவிடுமோ? ஆயிரம் ஆநந்த போதினி செய்யும் வேலையை அங்கு மத விஷயமாய்ச் செய்வது எது? பிடாரி கோயில்தான். எல்லைக் காளி கோயில்தான். நம்மிடம் அதிகாரம் இல்லாத வரைக்கும் நமது கோயில்கள் சரிவர நடத்தப்படா. அவைகளையும் நாம் கூடியவரை கவனிக்க வேண்டும். எங்கும் புதிய புதிய திருக்கோயில்கள் நிர்மாணிக்கப் படுவதை நாம் ஆக்ஷேபிப்பது அனர்த்தமாய் முடியும். ப-ர்.

---

இந்த வியாசம் நமது உண்மைக்கருத்தை மாற்றி அதில் இல்லாத குற்றத்தைக் கற்பிப்பதால் நாம் இதை மறுத்து உண்மையை விளக்கிக் காட்டவேண்டியது, "ஆனந்தனுக்கு" நாம் செய்யவேண்டிய கடமையாயிருக்கிறது.

நேயர்களே! ஆத்மசக்தியின் ஆசிரியர் நாம் கூறியுள்ளவற்றின் உண்மைக்கருத்தை யுணரத் தவறியதன்றி, ஆனந்தபோதினிக்கே "பெருந்தடுமாற்றம்" என்ற பட்டம் சூட்டியது நமக்கு உண்மையில் நகைப்பை யளிக்கிறது.

தாம் கண்டனம் வரைவதற்குக் காரணம் கற்பிக்கவே நமது கருத்தை மாற்றி நாம் புதிய கோயில் கட்டுவதை ஆக்ஷேபிப்பதாக வெளியிடுகிறார் என்று கருதவேண்டி யிருக்கிறது. நமது வியாசத்தில் அவர் குற்றமாகக் கூறும் பாகம் கீழ்க்கண்ட விஷயங்களே :—

"அதிகப் பணம் செலவழித்து நிலையான ஒரு பெரிய தருமகைங்கரியத்தைச் செய்வோர் காலத்திற்குத் தக்க தருமத்தைச் செய்தால் நலமாக விருக்குமன்றோ? நம்முன்னோர் கட்டியுள்ள ஆலயங்களில் சரியாய்ப் பூசையாதிகள் நடந்துவருகின்றனவா, அதன் வருமானம் சரியான வழியில் செலவழிக்கப்படுகிறதா என்பதைக் கவனித்தால் போதுமானதாக விருக்கப் புதிதாகக் கோயில்களைக் கட்டுவது வீண் வேலையன்றோ. அனேக மடங்களில் வரும் வருமானங்கள்கூட காலத்திற்கு அவசியமான வழியில் செலவழிக்கப்படாமல், குளத்தின்மேல் குளம் வெட்டுவது, மடக் கட்டிடத்தைப் பெருக்கிக்கட்டுவது முதலிய வழிகளில் செலவழிக்கப்படுகின்றன. மேலே கூறப்பட்ட தருமங்களனைத்தும் செய்யத்தகாதனவென்று நாம் குற்றமாகக் கூறுவதாய்க் கருதலாகாது. ஆனால் தற்காலத்தில் நமது தேசம், மதம், இவற்றின் க்ஷேமத்திற்காக அவசியமாகச் செய்யவேண்டிய கைங்கரியத்தை யடியோடு கவனியாமல் விட்டுவிட்டு அவசியமல்லாதனவும், அப்போதே வீண் விரையமாய் மறைந்துவிடக்கூடினவுமாகிய வழிகளில் பணத்தை விரையம் செய்வதில் யாது பயன்? அன்னதானம் மிகச் சிறந்ததானமே. ஆனால் கொழுத்த சோம்பேரிகளுக்கு அத்தானத்தைச் செய்வது தகுதியோ? அதுபோன்றே தருமமும் காலத்திற்குத் தக்கதைச் செய்வதே யுசிதம்.

நமது தருமங்களெல்லாம் மதத்தைப் பொருந்தியவைகளே. கோயில்கள், பூசைகள், உற்சவாதிகள் யாவும் மதத்தின் க்ஷேமத்திற்கே. நாம் கடவுளை மறவாது அடிக்கடி துதிப்பதற்கும் அவரிடம் பக்தி செலுத்தி அவர் அருள் பெறுவதற்குமே இவை யாவும் ஏற்படுத்தப்பட்டன. அப்படியிருக்க நமது மதம் பரவச்செய்ய நாம் முயலாவிடினும், நமது மதத்தவரில் பலர் அன்னிய மதத்தவர்களால் மயக்கப்பட்டுத் தங்கள் முன்னோரது உத்தம மதத்தைக் கைவிட்டுப் புறச்சமயங்களில் விழுந்தழிகிறதைத் தடுக்கவேனும் நாம் முயலவேண்டாமோ? இதுவிஷயத்தில் பணம் விரையம் செய்வது சிறந்த தருமமும், இச்சமயத்திற்கு அத்தியாவசியமான தருமமும் ஆகும் என்பதை நம்மவர் கருதவேண்டுமென்றோ? இந்த விஷயம் பெரிய தருமங்களைச் செய்யும் செல்வச் சீமான்களின் மனதில் உறுத்தாதிருப்பது மிக்க விசனிக்கத்தக்கதேயாகும்."

---

கோயிலில்லா ஊரில் கோயில் கட்டலாகாது என்றாவது கோயில் கட்டுவது தவறு என்றாவது நாம் கருதவுமில்லை, கூறவுமில்லை. கோயில்களின் அவசியத்தைப்பற்றியும் விக்கிரகாராராதனை, சரியை, கிரியைகளின் அவசியத்தைப்பற்றியும் நாம் பன்முறை ஆனந்தனில் வற்புறுத்தி வரைந்திருப்பதைக் கண்ட எவரும் நாம் அவ்வாறு கூறுவோமென்று கருதார்கள். கோயில் கட்டவேண்டாமென்று நாம் கூறவில்லை. "கோயிலையிடித்துக் கோபுரங் கட்டவேண்டாம்" என்பதே நாம் கூறியதும் கூறுவதும். இக்காலத்தில் கோயில்கள், மடங்கள் இவற்றின் வருமானங்கள் சரியான வழியில் செலவழிக்கப்படுவதில்லை என்ற சாக்கு கூறி அவற்றின் வருமானத்தை அத்தருமஸ்தாபனர்களின் கருத்திற்கு மாறாக வேறு காரியங்களுக்குச் செலவிடலாமென்று சட்டம் ஏற்படுத்த நம்மவர்களில் சிலரே கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள் என்பதும், அதனால் நமது மதத்திற்கே அழிவு நேரிடலாகுமென்பதும் யாவரு மறிந்தவிஷயமே. இஃதொருபுறமிருக்கக் கிருஸ்தவ மதத்தினர் நம்மவர்களில் பாமரர்களை மயக்கித் தங்கள் மதத்திற்கு இழுத்துச் செல்லும் வேலை தீவிரமாய் நடந்துகொண் டிருக்கிறது. ஆகையால் "இக்காலத்திலும் செல்வவான்கள் புது கோயில்களையும் மடங்களையும் கட்டுவதன் மட்டிலேயே கவனத்தைச் செலுத்தி சமயத்திற்கு அவசியமான மத பிரசாரத்தை மறந்திருக்கலாகாது. இக்காலத்தில் நமது பாமரஜனங்களுக்கு மதக்கல்வி யளித்து அவர்கள் அன்னியமதம் புகாவண்ணம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்" என்பதே நமது கருத்தாகும். மேலே குறிப்பிட்ட நமது வியாசத்தை வாசிப்போர்க்கு இந்த உண்மை நன்கு விளங்கும். நமது வியாசத்தில் "மேலே கூறப்பட்ட தருமங்களனைத்தும் செய்யத்தகாதனவென்று நாம் குற்றமாகக் கூறுவதாய்க் கருதலாகாது" என்று நாம் கூறியிருப்பதைக்கூட "ஆத்மசக்தி ஆசிரியர்" கவனித்திலர் போலும்.

சேரியிலிருக்கும் ஏழைகளை அங்கிருக்கும் பிடாரி காளி முதலிய தேவதைகள், அந்நியமதம் புகாது தடுப்பதாய் நமது ஆசிரியர் கூறுகிறார். அனேகரைப் பாதிரிகள் தம் மதத்திற்குச் சதா இழுத்துக்கொண்டிருப்பதையே யாவரும் பிரத்தியக்ஷத்தில் காண்கிறோம். பெரும்பாலார் அன்னியமதம்புக அதைத் தடுக்க வழிதேடாது இன்னும் புதுக் கோயில்களைக் கட்டிக்கொண்டுமட்டுமே யிருந்தால் பிறகு இக்கோயில்களுக்குச் செல்பவர் யார்?

"கோயில் கட்டுவதுதான் அவசியமானது மதப்பிரசாரம் வேண்டுவதில்லை" என்று இவர் கருதுவதாய்த் தெரிகிறது. இவரே "நம்மிடம் அதிகாரம் இல்லாதவரைக்கும் நமது கோயில்கள் சரிவர நடத்தப்படா" என்கிறார். அப்படியிருக்க — அதோடு இருக்கும் தருமத்தாபனங்களின் வருமானத்தைச் செலவிடும் அதிகாரமே நம்மைவிட்டு நழுவிக்கொண்டிருக்க — இன்னும் புதுபுது கோயில்களை எங்கும் கட்டவேண்டுமென்று இவர் முன்னுக்குப் பின் முறண்படக் கூறுவது என்ன காரணங்கொண்டோ அறிகிலேம்.

நம் தாய்நாட்டின் தலைவர்களாகிய அறிவாளிகளனைவரும் கூடிய மகா சபையில் இச்சமயம் நமதுமதம் நாடுமுழுதும் பிரசாரம் செய்யப்பட வேண்டுவது அத்தியாவசியமென்றும், அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். ஆத்மசக்தி ஆசிரியர் அது வேண்டாம் எங்கும் கோயில்கள் கட்டிவிட்டால் அவைகள் மதத்தைக் காப்பாற்றிக்கொள்ளும் என்கிறார்.

"இக்காலத்தில் பெருந்தொகையான பொருளைக் கோயில்கள் மடங்கள் கட்டுவதிலேயே செலவழித்துக்கொண்டு அவசியமான மதபோதனை, மதப்பிரசாரம், இவற்றை மறந்திருப்பது தகுதியல்ல, இக்காலத்தில் பாமரருக்கு மதக்கல்வி போதித்து மதப்பிரசாரம செய்து நம்மவர் பிறமதஸ்தரால் மயக்கப்படாவண்ணம் செய்வது பெருந்தர்மமாகும்" என்றே நாம் கூறினோம், கூறுகிறோம்.

இனி உண்மையில் "பெருந்தடுமாற்றம்" எந்தவிடத்திலிருக்கிறதென்பதை யிதை வாசிக்கும் நண்பர்களே அறிந்துகொள்ள விட்டுவிடுகிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(112-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 8-வது *எழுவகை வினவுரைத்த அத்தியாயம்.

[முன் அத்தியாயத்தின் முடிவில் பகவான் குறிப்பாய்க்கூறிய பிரமம் முதலிய எழு பதார்த்தங்களையும்பற்றி எட்டாம் அத்தியாயத்தில் வியாக்கியானரூபமாக அருளிச் செய்கிறார்.]

---

*வடநூலில் அக்ஷரப்பிரமயோகம் என்று பெயர்.

(பகவான் கூறிய ஏழு பதார்த்தங்களையும்பற்றி விசேஷமா யறிய விரும்பிய அர்ச்சுனன் அவற்றைப்பற்றி பகவானை வினவுகின்றனன்.)

இவ்வுலகை முழுவதையும் அபிமானத்தால் பந்தித்து, தாம்மட்டும் எதிலும் பந்தப்படாமலிருந்தும் யசோதாபிராட்டியின் கயிற்றால் பந்திக்கப்பட்டு பாலலீலை செய்தருளிய பகவானை நோக்கிப் பார்த்தன் பின் வரும் வினாக்களைக் கேட்கின்றான்:—

ஏ பகவன்!

1. முன்பு ஞேய வடிவமாய்த் தாங்கள் அருளிய பிரம்மம் என்பது எது? சோபாதிகமா? அல்லது நிருபாதிகமோ?

2. அத்யாத்மம் எது? அந்த அத்தியாத்மம் சுரோத்திரம் முதலிய கரணங்களின் கூட்டமோ? அல்லது பிரத்தியக் சைதன்யமோ?

(ஆன்மாவோடு சம்பந்தமுடையதாய்த் தேகத்தைத் தழுவி நிற்பது அத்தியான்மம் எனப்படும்.)

3. தாங்கள் விதித்தருளும் கருமம் யாது? அது யஞ்ஞரூபமா? அல்லது வேறு விதமானதா?

4. அதிபூதம் என்பது எது? பிருதிவி முதலிய பூதங்களைத் தழுவி நிற்கும் அற்ப காரியமா? அல்லது எல்லா காரியங்களுமா?

(பூதங்களை ஆசிரயித்திருப்பது அதிபூதம் எனப்படும்.)

5. அதிதெய்வம் எது? அது தேவதா விஷயமான தியானமா? அல்லது தேவதைகளின் ஆதித்திய மண்டல முதலியவற்றில் கலந்திருக்கும் சைதன்யமா?

(தெய்வத்தை ஆசிரயித்துள்ளது அதிதெய்வம்.)

6. அதியஞ்ஞம் என்பது எது? அது யாதேனுமொரு தேவதா சம்பந்தமானதா? அல்லது பரப்பிரம்மமோ? அந்த அதியஞ்ஞம் எவ்வாறு சிந்தித்தற்குரியது? அதாவது தாதான்மிய ரூபமாகவா அல்லது முற்றும் அபேதமாகவா? அவ்வதியஞ்ஞம் தேகத்திலுள்ளதா அல்லது புறம்பாகவுள்ளதா? தேகத்தின்கண் எனின், எந்தரூபமா யிருக்கிறது? புத்தி முதலிய வடிவமாகவா அவற்றிற் கயலாகவா?

7. மரணமடையும் காலத்தில் இந்திரியங்கள் கலக்கமடைவதால், அச்சமயம் மனம் ஒருமித்துத் தங்களை உள்ளபடி யறியும் மார்க்கம் எவ்வாறு?

ஏ பரமாத்மா! தாங்கள் சர்வஜ்ஞராதலின் அடியேனுக்கு இவற்றின் பொருள்களை யெல்லாம் விவரமாக உரைத்தருளப் பிரார்த்திக்கின்றேன்.

(பகவான் விடையளிக்கத் தொடங்கி முதலாவது பிரம்மத்தைப்பற்றி யருள்கின்றார்.)

ஏ பார்த்த! பிரம்மம் என்று கூறியது நிருபாதிகப் பிரம்மமேயாகும். அது ஒருவரால் அறிதற்கரியது, அழியாதது, யாவற்றிலும் பெரியது.

[தேசம் காலம் முதலிய எதனாலும் அழியாதது எதுவோ அதற்கு 'அக்ஷரம்' என்று பெயர். இத்தகைய அக்ஷரம் என்ற பிரம்மத்தைப்பற்றி பிரகதாரணிய உபநிடதத்தில் யாக்ஞவல்கிய முனிவர் கார்க்கி என்பவரை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார் :—

ஏ கார்க்கி! இப்பிரம்மம் தூலமன்று, அணுவன்று, குறிலன்று, நெடிலன்று, எவ்வித உபாதிகளுமில்லாதது; சூரிய சந்திராதி சர்வ ஜகத்தையும் தனதாணையில் நிறுத்துவது; சர்வப்பிரபஞ்சத்தையும் தாரணம் செய்வது; சொப்பிரகாச பரமானந்த சொரூபமாயுள்ளது; சர்வத்திற்கும் சாட்சியாயுள்ளது.]

2-வது கேள்விக்கு விடை:—

அந்தக்கரணங்களில் நிற்கும் (பிரம்மத்தின் சொரூபமான) பிரத்தியக் சைதந்நியம் இத்தேகத்தை யாசிரயித்திருப்பதால் அத்தியாத்மம் எனப் பட்டது. பிரத்யக் சைதந்நியத்தின் வேறான சுரோத்திரம் முதலியவற்றின் கூட்டமல்ல.

3-வது கேள்விக்கு விடை:—

தாவர ஜங்கம ரூபமான பூதங்களின் உற்பத்தியைச் செய்கின்ற யாகம் முதலியவை கருமம் எனப்படும். அதாவது இந்திராதி தேவதைகளைக் குறித்துச் செய்யும் யாகம், எஞ்ஞம், தானம் முதலியனவாம்.

4-வது வினவிற்கு விடை:—

தேகம் முதலிய அழியத்தக்க பொருள்களும், அவற்றில் உள்ள நான் என்னும் அபிமானமும் அதிபூதம் எனப்படும்.

5-வது வினவிற்கு விடை:—

பந்தப்படும் இச்சரீர வடிவ சர்வபுரங்களிலும் நிறைந்திருக்கும் புருஷனாகிய இரண்யகருப்பன் அதிதேய்வம் ஆகும்.

(இரண்யகர்ப்பன் சூரியன் முதலிய தேவதைகளை ஆசிரயித்து சட்சு முதலிய கரணங்கட்கு அநுக்கிரகம் செய்வதால் அதிதெய்வம் என்று கூறப்பட்டான். தேவதா விஷய தியானம் முதலியவை அதிதெய்வமன்று.)

6-வது வினவிற்கு விடை :—

அதியஞ்ஞம் நானேயாகின்றேன்.

(சர்வ எஞ்ஞங்களுக்கும் அதிஷ்டானத்தன்மை வடிவாயும், சர்வ எஞ்ஞபலனைத் தருபவராயும், சர்வ யஞ்ஞங்களின் அபிமானியாயும் உள்ள விஷ்ணுவே அதியெஞ்ஞம் ஆதலின் பகவான் அதியஞ்ஞம் நானாகவேயிருக்கிறேன் என்றருளினர். இத்தகைய சர்வவியாபியாதலின் அவ்வதியஞ்ஞம் இத்தேகத்திலுள்ளதா? புறமபேயுள்ளதா? புத்தியாதிரூபமா? என்ற சகல சந்தேகங்களும் நிவர்த்தியாயின.)

7-வது வினவிற்கு விடை :—

ஏ பார்த்த! அதியஞ்ஞவடிவ சகுணப் பிரம்மமாகிய என்னையேனும், நிர்க்குணப் பிரம்மமாகிய என்னையேனும் சிந்தித்து, அச்சிந்தனையின் வலி

யால் மரணகாலத்தில் ஐந்திந்திரியங்களையும் சத்தாதி விடயங்களையும் நிக்கிரகித்து, இத்தேகத்தில் நான் எனதென்னும் அபிமானத்தை விட்டு, சித்தத்தை என்னிடமே வைத்து மரிப்போர் எனது சொரூபத்தன்மையையே யடைவர். அது எவ்வாறெனில் கூறுதும். ஒருவன் மரணகாலத்தில் யாதொரு தேவதையின்மேல் அல்லது வேறெவ்வித வஸ்துவின் மேல் பிரியம் வைத்து சிந்திப்பவனாய் இச்சரீரத்தை விட்டுச் செல்கிறானோ, அவன் அந்தப் பாவனையால் அந்த வஸ்துவையே யடைவான். நீ எனது பாவனையையே யெப்பொழுதும் மனதில் சிந்தித்துக்கொண்டு, என்பால்வைத்த சிந்தனையோடு யுத்தம் செய்வாயாயின் என்னையே யடைவாய். இதிற் சற்றும் சந்தேகமின்று.

[நிர்க்குணப் பிர்ம்மத்தைத் தியானம் செய்பவன் நிர்க்குணப் பிரம்ம பாவத்தை யடைவன். சகுணப்பிரம்மத்தைத் தியானம் செய்பவன் தேவயான மார்க்கமாய்ப் பிரம்ம உலகத்தை யடைந்து, இரண்யகர்ப்ப உலகத்தை யனுபவித்து, முடிவில் நிர்க்குணப் பிரம்மத்தையே யடைவன். ஆயுட்காலமெல்லாம் ஈசுர சிந்தனையின்றி மனம்போனவழி உலக விஷயங்களி லுழன்றுகொண்டிருந்து, மரணம் நெருங்கும் சமயம் ஈசுர சிந்தனை செய்யலாம் என்றிருந்தால், அவ்வாறு சித்திக்காது. அந்திய காலத்தில் தேவதாஸ்மரணை யுண்டாலதற்காகவே அறிவாளிகள் சதா ஈசுர சிந்தனை செய்துவரவேண்டு மென்றனர். மரணத்திற்கு முன் இடைவிடாது செய்த தேவதா தியானத்தின் அப்பியாச பலத்தால் அந்தியகாலத்தில் அத்தேவதா ஸ்மரணம் உண்டாகும். எந்த வஸ்துவின் சிந்தனை மனதில் ஆழ்ந்து பதிந்திருக்கிறதோ அந்த வஸ்துவின் ஸ்மரணையே மரணத் தருவாயில் உண்டாகும்.]

(இலௌகிகத்திலிருப்பவன் சதா தெய்வசிந்தனையிலிருப்பது எப்படி கூடும் என்று கருதலாகும். அது கஷ்டசாத்தியமேயாகும். ஆனால் தத்துவ விசாரணை செய்து தேகம், இந்திரியங்கள், கரணங்கள் முதலிய யாவும் நாமல்ல, இவற்றுக்கெல்லாம் சாக்ஷியாகிய பிரத்யகான்மாவே நாம் என்றுணர்ந்தால், இலௌகிகத்தில் நேரும் அவசியமான தொழில்களைச் செய்தாலும் "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும் முத்தர்மனமிருக்கும் மோனத்தே" என்று பட்டினத்தடிகள் அருளியபடி, அந்தர் முகத்தில் மனதை ஈசுர சிந்தனையிலேயே தைலதாரைபோல் வைத்துக் கொண்டிருப்பது சாத்தியமேயாகும். பழகப் பழக மனம் சுலபமாகவே அதே நிலையில் நின்றுவிடும். இவ்வாறு சகுணத்தியானமே செய்யினும் அதனால் சித்தசுத்தியுண்டாகி, முடிவில் ஞானோதயமேயுண்டாகும்.

"காயத்தில் வேறாகத் தன்னைக் கண்டோன்
காயமீ தினுமறியான் கன்னற் கட்டி
தீயிற்கா யினுமரிந்த போது மின்பர்
தீராத வாறுபோற் றெளிந்த ஞானி
மாயத்தின் மோகத்தாற் பேத மாகான்
மணந்தபர புருடன்மேன் மனஞ்சேர் மங்கை
நேயத்தான் மனைத்தொழிகள் செய்யு மாபோல்
நிகழ்தொழில்செய் யினும்பரத்தி னிலைமை நீங்கான்."

(வாசிட்டம்.)

(தொடரும்) சீடன்.

---

## விஷயதானம் செய்வோர்க்கு அறிவிப்பு.

ஒரு வியாசத்தைப் பிரசுரிக்காததற்குக் காரணம் கூறப்படமாட்டாது. பிரசுரிக்கப்படாத விஷயத்தை வாபீஸ் பெற விரும்புவோர் வியாசம் அனுப்பும்போதே அதைத் தெரிவித்தால்மட்டுமே அது திருப்பியனுப்பப்படும். தபால் செலவு அவர்களுடையதே. மற்றபடி பிரசுரிக்கப்படாத வியாசங்கள் பிறகு திருப்பி யனுப்பப்படமாட்டா.

---

## "இரஞ்சிதபோதினி"யின் உளறல்.

ஒருவர் நமது சஞ்சிகைக்காக இரண்டு சந்தாநேயர்களைச் சிபாரிசுசெய்ய ரூபா 2 மணியார்டர் அனுப்பிக் கடிதமும் எழுதினர். கடிதம் நம்மிடம் சேரவில்லை. "இரஞ்சித போதினி" பத்திரிகைகள் அந்த இரண்டு நண்பர்களுக்கும் அனுப்பப்பட்டன. இச்சங்கதியை நமது நேயர் விபரமாய் எழுதி தபாலதிகாரிகளுக்கு அறிவிக்கும்படி கேட்டுக்கொண்டார். நாம் அவர் கடிதத்தையே தபாலதிகாரிகளுக் கனுப்பினோம். இடையில் நமக்கு வரவேண்டிய கடிதங்கள் சில வந்து சேரவில்லை. ஆதலின் நாம் சஞ்சிகை மூலமாய் நமது சந்தா நேயர்களுக்கு எச்சரிக்கை செய்யவேண்டியது அவசியமாயிற்று.

விஷயம் அவ்வாறிருக்க "இரஞ்சிதபோதினி" ஆவணிமீ சஞ்சிகையின் விளம்பரப்பக்கங்களொன்றில் நமக்கு மதியீனம் என்றும் பொறாமையென்றும் உளறுவதோடு, "' நமது நாட்டில் சமாதானமும் ஒற்றுமையும் கொண்டு ஒழுகும்படி ஆட்சிபுரிந்து வரு நிலைமையை வகித்துவரும் கவர்ன்மெண்டாரும் அவரது சிப்பந்திகளும் அஜாக்கிரதை யுடையவர்களென்றும் மோசக்காரர்களென்றும் எண்ணி யவர்கள்மீது பழி சுமத்துகிறார் போலும் என்ன பரிதாபம்" என்று கூறுகிறது. (அப்பத்திரிகையிலுள்ளது அப்படியே எடுத்தெழுதப்பட்டது) இது களங்கமற்றதாயின் நமது அறிவிப்பைக் கண்டு வெகுண்டெழுந்து "எங்கப்பா குதிருக்குள் இல்லை" என்பதுபோல் முன்வந்து அஷணமொழிகளை விள்ளவேண்டிய அவசியமில்லை.

நேயர்களே! நமது எச்சரிக்கையில் நாம் துரைத்தனத்தார்மேல் ஒரு குற்றமும் கூறுதிருக்க, "இரஞ்சிதபோதினிப் பத்திராதிபர் துரைத்தனத்தைப் புகழ்ந்து கூறி நாம் துரைத்தனத்தார்மேலும் அவர்கள் சிப்பந்திகள்மேலும் அத்தகைய பழி சுமத்துவதாய்க் கூறுவது எத்தகைய இழிவான எண்ணங் கொண்டென்பதை இதை வாசிப்போரே யூகிக்கலாகும். அப்படிக் கூறினுல் துரைத்தனத்தார் நம்மேல் குரோதங்கொண்டு நமது சஞ்சிகைக்கும் நமக்கும் தீங்கிழைப்பார்கள் என்ற எண்ணங்கொண்டல்லவோ இப்படி இல்லாததைக் கூறவேண்டும். "கெடுவான் கேடு நினைப்பான்" என்பது ஆன்றோர் வாக்கு.

இவர் நமக்கு பொறாமையும் மதியீனமும் என்கிறார். அந்த மறுப்பு

என்ற வியாசத்திலுள்ள மற்ற உளறல்களுக்கு நாம் விடை பகர்வது அனு வசியம் என்று கடைசியாகக் கூறுகிறோம்.

நமது நேயர் நமக்கு வரையும் கடிதங்களின் மேல்விலாசத்தைச் சரியாக வரையுமாறு மறுபடி யவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறோம்.

☞ இனி ஆனந்தபோதினிக்குக் கடிதம் வரைவோர் "ஆனந்தபோதினி" தபால்பெட்டி நே. 167, மதராஸ் என்ற விலாசமே எழுதக் கோருகிறோம். நேரில் வருவோர் நே. 6, வெங்கடேச மேஸ்திரி வீதி, (கிருஷ்ணன் குளத்தருகில்) என்ற விடத்திற்கு வரலாகும்.



பத்திராதிபர்.

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(118-ம் பக்கத் தொடர்ச்சி.)

இதைக்கேட்டதே கறுப்பண்ணன் முகம் சவம்போல் வெளுத்துவிட்டது. அவன்மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு கோபத்தோடும் வாக்குதடுமாற்றத்தோடும் " இவ்வளவு துணிகரமா ?" என்றான்.

ஆன :—துணிகரமா ? துணிகரத்திற்கு—எவ்வளவு துணிகரத்தோடாயினும் பேசுவேன்—துணிகரத்தோடு எதையும் செய்வேன்.

கறுப் :—நீ ஜாக்கிரதையாயிரு. குற்றவாளியைக் கண்டுபிடிக்க உன்னை யழைத்துவந்தேனே யன்றி யென்னை யவமானப்படுத்தவல்ல.

ஆன :—நீ யென்னை யழைத்துவந்தாயேயன்றி நான் இங்கு வலிய வரவில்லை.

கறுப் :—சில சங்கதிகள் கூறுகிறேன் கேள்.

ஆன :—சொல்.

கறுப் :—மனோகரன் இங்கு வந்திருந்தான். அவன் கொண்டுவந்த பழங்களில் ஒன்றைப் புசித்தே இவள் வியாதிகண்டு இறந்தாள்.

ஆன :—சரி. நல்ல உளவே. அவன் சென்றதற்கும் அவள் வியாதியுற்றதற்கும் இடையில் வேறு யாரும் அந்த அறைக்குள் செல்லவில்லையே.

கறுப் :—இல்லை.

ஆன :—அதை ருசு செய்வாயா ?

கறுப் :—ஆகா ருசுப்படுத்துவேன்.

ஆன :—எப்போது சவத்தை யடக்கம் செய்வது ?

கறுப் :—நாளைக்கு.

ஆன :—இரகசியமாகவா பகிரங்கமாகவா ?

கறுப் :—பகிரங்கமாகவே.

ஆன :—மரணத்திற்கு அத்தாட்சி பத்திரம் எப்படி கிடைத்தது ?

கறுப் :—பணம் செலவு செய்தால் கிடைக்கிறது.

ஆன :—சவத்தைச் சோதனை செய்யமாட்டாயோ ?

கறுப் :—குற்றவாளி கண்டுபிடிக்கப்படும் வரையில் இல்லை.

ஆன :—அப்புறம் ?

கறுப் :—சவத்தை வெளியிலெடுத்து சோதனை செய்யலாம்.

ஆன :—சரி, இந்த விவகாரத்தை யென்னிடம் ஒப்பித்துவிடுகிறாயோ ?

கறுப் :—தடையின்றி.

ஆனந்தவிங் தனக்குள் ஒரு யோசனை செய்துக்கொண்டு, கறுப்பண்ணனை உற்று நோக்கிக்கொண்டே,

"சவ அடக்கம் முடிகிறவரையில் நாம் ஒரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளலாகாது" என்றான்.

இதைக் கேட்டதே கறுப்பண்ணன் மனதில் சந்தோஷமும் நிம்மதியுமுண்டாயிற்று. அது அவன் முகத்தில் ஒருவித பிரகாசத்தை யுண்டாக்கிற்று. ஆனந்தவிங் தவிர வேறு யாராயிருப்பினும் அதையறிந்துகொண்டிருக்கமாட்டார்கள்.

ஆன :—"இச்சம்பவத்தை நீ யாருக்கும் கூறவில்லையே?" என்றான்.

கறுப் :—உன்னைத்தவிர ஒரு பூதருக்குக்கூட கூறவில்லை.

ஆன :—விஷத்தால் மடிந்தாள் என்று பிரஸ்தாபமே யில்லையே?

கறுப் :—இல்லை.

ஆன :—"சரி, இது மனதிலேயே யிருக்கட்டும். ஒருவர்க்கும் மூச்சுவிட வேண்டாம். நான் சவ அடக்கம் நடந்தபின் வருகிறேன்"

இன்னும் இரண்டு பேச்சுகள் பேசியபின் ஆனந்தவிங் விடை பெற்றுக்கொண்டு சென்றான்.

ஆனந்தவிங் இந்த அதிசயமான சம்பவத்தைப்பற்றி பேசிவிட்டுச் சென்ற ஒருமணிநேரம் கழித்து கருப்பண்ணன் வீட்டைவிட்டு வெளியில் புறப்பட்டான்.

எதிர்வாடையில் இருட்டில் பதுங்கிக்கொண்டிருந்த ஒரு கறுத்த உருவம் அவன் சென்றதை புன்னிப்பாய்ப் பார்த்துக்கொண்டே யிருந்தது. கறுப்பண்ணனுடைய காலடிச்சத்தம் செவிக்குப் புலப்படாத தூரம் சென்றதே அவ்வுருவம் துரிதமாய் பாட்டையைக் கடந்ததும் எதிரிலுள்ள மாளிகையின் வெளிவேலியைக் கடந்து தோட்டத்திற்குள் பிரவேசித்து கட்டிடத்தின் பின்பக்கம் சென்றது.

இரண்டு நிமிடங்களுக்குள் அவ்வுருவம் அம்பாலிகையின் சவம் இருக்கும் அறைக்குள் பிரவேசித்து தன்னிடமிருந்த சிறு இராந்தலைத் திறந்து அந்த வெளிச்சத்தால் சவத்தை நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு, இராந்தலை மூடிக்கொண்டு "சரி இவள் இறந்துவிட்டவளே. இவளைக் கொன்ற சண்டாளனை யெப்படியும் பிடித்தேதீருவேன்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டு வீட்டைவிட்டு வந்த வழியே வெளிப்பட்டது. அந்த உருவம் நமது ஆனந்தவிங்கேயென்று நாம் நண்பர்களுக்குக் கூற வேண்டுவதின்றாம்.

ஆனந்தலிங்குக்கு இன்னும் கொஞ்சநேர மிருந்து முன்னே தான் கண்ட அந்த அபூர்வமான மாதைக் கண்டு பேசவேண்டு மென்பதே விருப்பம். ஆனால் அவன் அப்படிச் செய்யாமல் வந்துவிட்டதே நல்ல தாயிற்று. ஏனெனில் அவன் வீட்டைவிட்டு வெளிப்பட்ட இரண்டொரு நிமிடங்களுக்கெல்லாம் கறுப்பண்ணன் வீட்டிற்குத் திரும்பி வந்துவிட்டான். மறுநாள் சவச்சடங்கு நடந்தது. செல்வாக்குள்ளவர்களாகிய அனேக நண்பர்களும், சுற்றத்தார்களும் பெருங்கூட்டமாய் வந்திருந்தார்கள். சவத்தை மசானத்திற்கு எடுத்துச் செல்லுமுன் ஆசாரப்படி சுற்றத்தார் நண்பர்களனைவரும் கடைசியாய் இறந்தவளுடைய முகத்தைப் பார்ப்பதற்காக அழைக்கப்பட்டார்கள்.

அச்சமயம் யாவரும் ஆச்சரியத்தோடு திடுக்கிடும்படியான ஒரு அதிசய சம்பவம் நேரிட்டது. (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரங்கள்.

### தீமூட்டும் ஓர் பையன்.

14 வயதுள்ள ஜோவான் பிருங்கு என்னும் ஓர் ஹங்கேரி தேசப் பையன் ஓர் நாள் கழுத்து, நெற்றி, நோவினால் வருத்தமுற்று சோர்ந்து கீழே விழுவதற்கு முன்பாக சாக்கிரதையாக சடுதியில் உட்கார்ந்தவுடன் படுக்கை மூடியிருந்த திரையும் பக்கத்துப் பலகணியும் தீப்பிடித்தெரிந்ததாகவும் இவ்விதம் "தீ" மூட்டுதல் இவனுக்குத் தலைவலி உண்டாகும் சமயத்தில்தான் விளைகின்றதென்றும் சாமான்யமான காலங்களில் அச்சக்தியில்லையென்றும் டைம்ஸ் பத்திரிகை பாரிஸ் நிருபர் அறிவிக்கிறார்.

'ஜம்புலிங்கம் கொல்லப்பட்டான்:—கீர்த்திபெற்ற கொள்ளைக்காரனும் நெடுங்காலமாக இந்திய அரசாங்கத்தை ஏய்த்துத் திரிந்த ஜம்புலிங்க நாடானும் அவன் கூட்டாளியான காசிநாடானும் சென்ற செப்டம்பர்மீ கடைசி வாரம் கொரிப்பூரில் ஒரு வீட்டிற் கொள்ளையடித்துக்கொண்டிருக்கும்போது போலீசார் ஏதோ ஒருவாறு அறிந்து ஆயுதபாணிகளாய் இருவரையுஞ் சூழ்ந்துகொண்டு குண்டுப்பிரயோகஞ்செய்தனர். இதற்கிடையில் அவர்கள் கொள்ளையடித்துக்கொண்டு நின்ற வீடு ஓலையால் வேயப்பட்ட வீடாயிருந்தமையினாலே தீப்பிடித்துவிட்டது. ஜம்புலிங்கமும் காசிநாடானும் போலீசார்மீது குண்டுப்பிரயோகஞ் செய்து இரு போலீஸ் உத்தியோகஸ்தருக்கு மோசமான காயம் விளைத்துவிட்டனர். இதற்கிடையிற் போலீசார் ஜம்புலிங்கத்தின்மீதும் காசிநாடான்மீதும் குண்டுப்பிரயோகஞ்செய்து அவர்களைப் பரலோகமனுப்பினர்.

### 1922ௐ உலகத்திலுள்ள மோட்டார் ரதங்களின் தொகை.

| | | | |
|---|---|---|---|
| யுனைடெட் ஸ்டேட் | 12239 14 | ஜெர்மனி | 128092 |
| கனடா | 509670 | ஆஸ்டிரேலியா | 82417 |
| யுனைடெட் கிங்டம் | 493271 | இத்தாலி | 53600 |
| பிரான்சு | 295876 | நியூயார்க்கில் மாத்திரம் | 1002293 |

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**உருத்ரோத்காரிஞு கார்த்திகைமீ-கலி 5025-சாலிவாகனம் 1846**
**பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜிரி 1342**
**இங்கிலீஷ் 1923ஞு நவம்பர்மீ—டிசம்பர்மீ**

| கார்த்திகை | நவம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெ | நவ56-5 | சதை60 | சித்60 | விருச்சிகரவி நா-0-58, கரிநாள் |
| 2 | 17 | சனி | தச60 | சதை1-5 | அ1-5மர | [று வெட்ட |
| 3 | 18 | ஞா | தச0-18 | பூரட்6-5 | சித்6-5அ | மாடுவாங்க, குளம் கிண |
| 4 | 19 | திங் | ஏகா5-38 | உத்ரட்13-23 | சித்60 | சர்வ ஏகாதசி, கரிநாள் |
| 5 | 20 | செவ் | து11-43 | ரேவ20-40 | சித்60 | சாதுர்மாத விரதாரம்பம் |
| 6 | 21 | புத | திர18-0 | அசு28-8 | ம28-8சி | வைகுண்ட சதுர்த்தி |
| 7 | 22 | வியா | சது24-23 | பர35-33 | சி35-33ம | கதிராறுக், அடுப்புவைக்க |
| 8 | 23 | வெ | ○30-33 | ※கிரு42-43 | சி42-43ம | கிருத்திகை விரதம், அண்ணாமலையார் தீபம் |
| 9 | 24 | சனி | பிர36-15 | ரோ49-30 | அ49-30சி | கார்த்தீயபகுளம் |
| 10 | 25 | ஞா | துதி41-30 | மிரு55-45 | சித்60 | கரிநாள் |
| 11 | 26 | திங் | திரி46-3 | திரு60 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 12 | 27 | செவ் | சது50-3 | திரு1-23 | ம1-23சி | [செய்ய |
| 13 | 28 | புத | பஞ்52-25 | புன6-13 | சித்60 | சீமந்தம், கிரகபிரவேசம் |
| 14 | 29 | வியா | சஷ்53-53 | பூச9-55 | அ9-55சி | காதுகுத்த |
| 15 | 30 | வெ | சப்53-48 | ஆயி12-23 | மர60 | சாவித்திரி கல்பாதி |
| 16 | 1 | சனி | அ52-5 | மக13-18 | அ13-18சி | கிருஷ்ணாஷ்டமி |
| 17 | 2 | ஞா | நவ48-33 | பூர12-25 | சி12-25அ | கரிநாள் |
| 18 | 3 | திங் | தச43-30 | உத்10-10 | சித்60 | கோடியுடுக்க, மாடுவாங்க |
| 19 | 4 | செவ் | ஏ36-53 | அஸ்6-8 | சித்60 | மத்வ சர்வ ஏகாதசி [ள் |
| 20 | 5 | புத | து28-58 | சித்0-40 சுவா54-3 | சித்60 | ப்ரதோஷம், மழை 7-க்கு |
| 21 | 6 | வியா | திர20-8 | விசா46-50 | சித்60 | |
| 22 | 7 | வெ | ●ச10-50 | அனு39-23 | சி39-23ம | |
| 23 | 8 | சனி | அ1-33 பிர52-58 | கேட்32-15 | சித்60 | |
| 24 | 9 | ஞா | துதி45-8 | மூல25-43 | அ25-43சி | |
| 25 | 10 | திங் | திரி38-38 | பூரா20-38 | மர60 | |
| 26 | 11 | செவ் | சது36-25 | உத்16-38 | அ16-38சி | |
| 27 | 12 | புத | பஞ்31-15 | திரு15-28 | சி16-28பி | |
| 28 | 13 | வியா | சஷ்30-55 | அவி15-58 | சி15-58ம | சஷ்டி, சம்பாசஷ்டி |
| 29 | 14 | வெ | சப்32-40 | சதை18-43 | சித்60 | சூரியவிரதம் |
| 30 | 15 | சனி | அ35-43 | பூரட்28-10 | ம28-10சி | தனுசுரவி நா-36-40 மார்கழிமாதத்து அஷ்டமிதிதியும் |

(Rows 16–30, second column: 1923ஞு டிசம்பர்மீ)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | 7உ து-செ<br>11 ,, தனு-சு<br>20 ,, தனு-பு | | ராகு |
| | புத-கு<br>சுக்-கு | சனி | செ |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry St., Madras.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 9 } ருத்ரோத்காரிஸு கார்த்திகைமீ கஉ 1923ஸு நவம்பர்மீ 16உ { பகுதி 5

## கடவுள் வணக்கம்.

*நித்தியமாய் நின்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம். (1)*

*யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி யன்பருக்கே
பேரா னந்தக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக்
கொடுத்துக் காட்டுந்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம். (2)*

---

*நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னைவைத்துப்
பூசிக்குந் தானிறைந்து பூரணமா—யோசித்து
நின்றதல்லான் மோன நிருவிகற்ப நிட்டைநிலை
யென்றுவரு மோவறி யேனே. (3)*

---

*அறிவி லறியாமை யற்றறிவாய் நின்று
பிறிவறவா னந்தமயம் பெற்றுக்—குறியவிழ்ந்தா
லன்றைக் குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே
யென்றைக்கும் வேண்டுவனே யான். (4)*

---

## அரும்பொருள் விளக்கம்.

1. நித்தியமாய்=என்றைக்குமுள்ளதாய்

நிராமயமாய்=நோயற்றதாய்

தூரமுமாய்ச் சமீபமுமாய் = தேகமே நாம் என்ற புத்தியோடு மனதின் வயப்பட்டு விஷயாதிகளில் உழன்றுகொண்டிருக்கும் அஞ்ஞானிகளுக்கு எட்டாது தூரமாகவும், ஆன்ம சொரூபமுணர்ந்த ஞானிகளுக்கு அனன்னியமா யிருத்தலால் சமீபமாகவும்

எல்லாம் வைத்திருந்த தாரகமாய்=அண்டரண்ட சராசரங்கள் யாவற்றிற்கும் ஆதாரமான இடமாய்

மனவாக்கெட்டா=மனதால் சுட்டிபுணரப் படாததும், வாக்கால் இத்தன்மையது, இவ்வுருவுடையது, இக்குறியுடையது என்று வரையறுத்துக் கூறொணாததும்

சுகாரம்பப் பெருவெளி=சதா ஆனந்தோதயமான பரவெளி; அதாவது தெவிட்டாததும் முடிவில்லாததுமான ஆனந்தசொரூபம்.

2. "யாது மன நினையும் அந்த நினைவுக்கு நினைவாகி"—மனமே எதையும் நினைப்பது. ஆனால் மனம் ஜடம். அந்த நினைவிற்கு ஆதாரமாய் ஈசுவரன் சக்தியிருத்தலினுலே மனம் நினைக்கும் சக்தியுடையதாகிறது. ஆன்மா அச்சக்தியைத் தன்னில் அபேதமானதாக உணர்ந்து மனதை எதிரிட்டு நோக்கின் மனம் இல்லாமற் போம். ஆதலின் 'மனதின் நினைவிற்கு நினைவாக இருப்பது' என்றார்.

யாதின்பாலும் பேதமறநின்று=(சூரியன் சிறிது பெரிது, சுத்தம் அசுத்தம் என்ற ஒரு வித்தியாசமுமின்றி உலகிலுள்ள சகல வஸ்துக்களின் மேலும் தனது பிரகாசத்தை வீசுவதுபோல்) யாதொரு வித்தியாசமின்றி சராசரமெங்கும் கலந்து நின்று

உயிருக்குயிராகி=ஜீவசாட்சியாய்

குணங்குறியொன்றற=நாமரூப முதலிய எத்தகைய வரம்புமின்றி

தன்னைக்கொடுத்துக்காட்டும்=நம்மைத் தானாக்கிக்கொண்டு பிரகாசிக்கும்

3. சிந்தை நினைவுக்குள்=மனம் தன் எண்ணத்தில்

உன்னை வைத்துப் பூசிக்கும்=உன்னைத் தனக்கு அன்னியமான ஒரு பொருளாகவைத்துப் பூசைசெய்யும்.

தான் நிறைந்து பூரணமாய்=தான் (ஒடுங்காமல்) வியாபகமாய் நிறைந்து

யோசித்து நின்றதலால்=ஒன்றைச் சிந்தித்து இருந்ததேயன்றி

நிருவிகற்ப நிட்டைநில யென்று வருமோ=நிருவிகற்ப சமாதி (கிட்டவில்லையாதலின் அது) எப்போது வருமோ

மனமானது ஈசுவரனைத் தனக்கு அன்னியமாக (முன்னிலையில்) வைத்துச் சிந்திக்கும் வரையில் தான் வியாபகமாகவே யிருக்கிறது. ஒருவன் அவ்வாறு பகவானை யன்னியமாகக் கருதும் வரையில் அவன் பகவானது உண்மைச் சொரூபத்தை யறிந்தவனுகான். இதில் ஆனந்தம் ஜனியாது. ஆகையால் தன்னையறிந்து, தலைவனிற் கலந்து தன்மை முன்னிலையற்ற அகண்டாகார நிலையை யடைவதாகிய நிருவிகற்ப நிட்டை என்று வருமோ வென்ருர்.

4. அறிவில் அறியாமை யற்று=சகல கேவலங்கள் நீங்கி
அறிவாய்=ஞான சொரூபமாய்
பிறிவற=இரண்டின்றி ஏகமாய்

குறியவிழ்ந்தால்=தற்போத மொழிந்த பூரண ஞானுனுபவம் பெற்ருல் பிறகு தேகம் வேண்டுவதில்லை. அதுவரையில் தேகம் வேண்டுவதே. ஏனெனில் தேகத்திலிருந்தே ஞான மடைவதாகிய காரியத்தைச் சாதிக்கவேண்டும். ஆதலின் ஞானம் கைவருமுன் வீணே யுடலை வெறுத்து அதற்கு ஆகாரமளிக்காது துன்புறுத்தலாகாது என்பதாம்.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஸு கார்த்திகைமீ

## தீங்குக்கும் துட்டு கொடுத்து வாங்குவதா.

உலகில் மக்கள் தங்களுக்கு நன்மையளிக்கும் வஸ்துக்களையும், கல்வி, நடவடிக்கை, ஆசாரம், நட்பு முதலியவைகளையும் தேக சிரமமும் பணமும் செலவு செய்தேனும் அடைய முயல்வது சுபாவம். ஆயினும் சில சமயங்களில் மனிதர் தெரிந்தும் தெரியாமலும் தீங்குக்கே துட்டுகொடுத்து வாங்குகிருர்கள். சில சந்தர்ப்பங்களில் ஒரு விஷயம் தீங்கென்று தெரிந்தே அதற்குப் பணத்தைச் செலவழிக்கிருர்கள். சில சந்தர்ப்பங்களில் கௌரவமென்றும், நாகரீகமென்றும், வேடிக்கைக் காலப்போக்கென்றும் கருதி அவ்வழிகளில் பணத்தைச் செலவுசெய்து, வீண்விரையம், சுகவீனம், வியாதி, துராசாரம் இத்தகைய தீங்குகளுக்குள்ளாவதோடு, தம் மக்களுக்கும் துராசாரம் துர்நடக்கை முதலியவற்றை விலைகொடுத்து வாங்கி யளிக்கிருர்கள். இந்த வியாபாரம் இப்

போது நமது பாரத பூமியில் ஏராளமாகவும் தாராளமாகவும் நடைபெறுகிறது.

மநு நீதிப்படி அரசன் தன் குடிகளைக் கள்ளர், பகைவர், தீ, தன் பரிவாரம் முதலியவர்களால் நேரிடக்கூடிய தீங்கிலிருந்தும் காப்பாற்றுவதோடு, அவர்கள் தரித்திரம், துர்நடக்கை, துராசாரம் முதலியவற்றை யடையாவண்ணமும் காப்பாற்றவேண்டிய கடமையுடையவன். தற்காலம் நமது பாரதபூமியில் நடைபெறும் துரைத்தனமோ மனிதனுடைய சுதந்தரத்தை முக்கியமானதாகக் கருதுவதாய்க் கூறப்படுகிறது. ஏனெனில் ஆளும் ஜாதியாராகிய ஆங்கிலர்கள் சுதந்தரத்தை யாவற்றினும் சிறந்ததாகக் கருதுகிறவர்கள். அதற்கென்னமோ ஐயமில்லை.

சுதந்தரமென்றால் ஒரு மனிதன் தன் மனோபாவத்தை உள்ளபடி பகிரங்கமாய் வெளியிடவும், தன்னைச் சேர்ந்த விஷயங்களில் தன் பிரியம்போல் நடக்கவும், தனக்குப் பிரியமில்லாததைச்செய்யாதிருக்கவும் சுயாதீன முடையவனாக விருத்தலேயாகும். இக்காரணத்தின்படி, தனி மனிதன் தன் தேகசுகத்துக்கென்றோ சந்தோஷத்திற்கென்றோ தன்வரையில் ஒரு காரியத்தைச் செய்தால் அவனைத் தடுத்தல் அவன் சுயாதீனத்திற்கு இடையூறு செய்ததாகும் என்ற கருத்தால் நம் துரைத்தனத்தார் அதில் பிரவேசிப்பதில்லை.

உலகிலுள்ள பல நாடுகளிலிருக்கும் சுயாதீனத்திற்கும் ஆபூர் நாடாகிய நம் பாரதபூமிவாசிகளால் அநுபவிக்கப்படும் சுயாதீனத்திற்கும் மிக்க வித்தியாசமிருக்கிறது. மனச்சாக்ஷிக்கு எது மெய்யான சுயாதீனம் என்று தோன்றுகிறதோ அச்சுயாதீனம் நம் நாட்டில் முயற்கொம்பே. இக்கலியுகத்தில் எல்லாம் ஆச்சரியமாகவே நேர்வதுபோல் நமது சுயாதீனமும் மிக வியப்பானதே. நமக்கிருக்கும் சுயாதீனத்தால்,

1. நாம் இஷ்டப்படி, நாட்டுச்சாராயம் குடித்தால்—கொஞ்சம் குறைந்த செலவு—சீக்கிரம் பணம் குறையாது ஆதலின்—சீமைச்சாராயம் தினம் குடித்து போட்டி போட்டுக்கொண்டு ஒட்டாண்டியாகலாம்.

2. நமது சிறுவர்கள் 5 வயது முதலே ஸிகாரெட், பீடி பிடிக்கத் தொடங்கி பலங் குன்றி வியாதியுற்று நடுவயதைக் காணாமலே ஒழியலாம்.

3. நமக்கு வருமானம் மற்ற எல்லா நாட்டாரைவிட மிகக் குறைவாயினும் ஊண் உடைகளில் வெளியாடம்பரத்தில் மயங்கி அளவுமீறிச் செலவு செய்து சதா கடனில் முழுகி நெஞ்சு கலங்கி நசிந்தொழியலாம்.

4. தீமைக்கு விலைகொடுத்துத் தாராளமாக வாங்கலாம்.

அவ்வாறு திருட்டாந்தங்களில் சிலவற்றை யீண்டு கூறுகிறோம்.

1-வது காபி கிளப்புகள் என்ற சிற்றுண்டி கடைகள். இக்கடைகள் பெரும்பாலும் பிராம்மணர்களாலேயே நடத்தப்படுகின்றன. அதனால் சகல ஜாதியாரும் அங்கு செல்கிறார்கள். அங்கு ஆசாரம் அடியோடு கெடுவதோடு, ஒரே பீங்கான் பாத்திரத்தில் சகலரும் சாப்பிடுவதால் கொடிய தொத்துவியாதிகள் சுலபமாகப் பரவுகின்றன என்று பிரசித்திபெற்ற வைத்தியர்கள் காரணங்களோடு விவரமாகப் பத்திரிகைகளில் பன்முறை வரைந்திருக்கின்றனர். முற்காலத்தில் நமது நாட்டார் காலையில் பழைய அன்னம் மோர், பிறகு பகற்போது ஒரு உணவு, இரவு ஒரு உணவு, இவ்வளவே உண்டு கொண்டிருந்தார்கள். எங்கோ சிலர் பிற்பகல் 3 மணிக்குக் கொஞ்சம் சிற்றுண்டி யருந்துவார்கள். அவர்கள் சுக தேகிகளாகவும், பூரண ஆயுளுடையவர்களாகவும் இருந்தார்கள். அப்போது மஹம்மாரி (பேதி) வியாதி அருமையாய் எப்போதோ ஒரு காலத்தில் வரும். அறுபது வருடத்திற்கொருமுறை வரும் என்று வயோதிகர் கூறக் கேட்டிருக்கிறோம்.

இப்போது காபி கிளப்புகள் உண்டானபின் மிக்க ஏழைகள் கூட அங்குசென்று ஒருவேளை சிற்றுண்டிக்கு ஆறணா அரை ரூபாய் கூட செலவழிக்கிறார்கள். தன் குடும்பத்தைச் சேர்ந்த அனைவர்க்கும் ஒருவேளைச் சாதாரண போஜனத்திற்குப் போதுமான பணத்தைத் தன் ஒருவேளை சிற்றுண்டிக்கு அளித்துவிடுகிறான். அதோடு நமது நாட்டின் உஷ்ண நிலைமைக்கு ஒவ்வாத காபி தேயிலைப் பானங்களை யருந்தி வியாதியை விலைக்கு வாங்கிக்கொள்கிறான். ஹோட்டல் முதலாளி பணம் சம்பாதிக்கிறார். அவரிடம் ஐந்தாறுபேர் வேலைசெய்து சீவிக்கிறார்கள். ஆனால் பல்லாயிரம் பேர் அனாவசியமாகப் பணவிரயம் செய்து தங்கள் ஆசாரத்தையும் தேகசுகத்தையும் கெடுத்துக் கொள்ளுகிறார்கள்.

2-வது நாடகங்கள். இதில் நேரிடும் பணச்செலவு பின்னும் வீணானது. கெடுதியும் அதிகம். இதில் அனுபவிக்கப்படுவது இந்

திரியசுகம். இதனால் விளையும் தீங்கு மிகக் கொடியது. இக்காலத்தில் நடக்கும் நாடகங்கள் ஆடவர்கள், முக்கியமாய் வாலிபர்கள் மாதர்களின் மனங்களைத் தீயவழியில் திருப்பக் கூடியவைகளே யென்பது யாவரு மறிந்த உண்மை. எங்கோ ஒவ்வொரு நாடகம் பக்தியையோ நீதியையோ புகட்டத் தக்கதாயிருக்கின்றது. அவற்றிலும் தாழ்ந்த உணர்ச்சிகளை யுண்டாக்கத்தக்க பாட்டுகளும் காட்சிகளும் இல்லாமலில்லை.

3-வது பயாஸ்கோப் படக்காட்சி. இவற்றில் விசேஷமாய் மேல்நாட்டு ஆசாரங்களும், அங்கு நடக்கும் சம்பவங்களுமே காட்டப்படுகின்றன. மேல்நாட்டு நாவல்கள் என்ற கதைகளின் காட்சிகள் இவற்றில் காட்டப்படுகின்றன. அக்கதைகளை யெழுதும் நூலாசிரியர்கள் அவற்றிலுள்ள கெட்ட நடக்கைகளைக் கண்டித்தெழுதுகிறார்கள். அதனால் அவை கெட்டவையென்றுணர்ந்து அவற்றை நிக்கிரகம் செய்யவேண்டுமென்று வாசிப்போர் உணரலாகும். இப்படக்காட்சிகளிலோ சுருக்கமாய் நடந்த சம்பவங்கள்மட்டும் காட்டப்படுகின்றன.

மேல்நாட்டில் இருக்கும் கள்ளர்கள் சாத்திர யுக்தமாக, எந்திரங்கள், மின்சாரசக்தி, முதலியவற்றின் உதவியைக்கொண்டு மிக்க தந்திர சாமர்த்தியமாகக் களவு, கொலை, கள்ள நாணயம் செய்தல், பொய்ப்பத்திரம் பிறப்பித்தல் முதலிய குற்றங்களைச் செய்வதில் மிக்க சமர்த்தர்கள். போலீஸாரையும் துப்பறியும் நிபுணர்களையும் ஏமாற்றுவதில் கைதேர்ந்தவர்கள். இவர்கள் நடக்கைகளும், நமது மதம் ஆசாரம் இவற்றின்படி கற்பற்றவையும், ஆசாரவீனமானவையுமாகிய சம்பவங்களும் இப்படக் காட்சிகளில் காட்டப்படுகின்றன. நம் நாட்டிலுள்ள கூலி வேலை செய்யும் ஏழைகள்கூட மாலை 3 மணி நேரம் அக் காட்சிகளைக் காண 2 அணு முதல் 8 அணு வரையில் செலவழிக்கிறார்கள். "நாம் தரித்திரத்தில் ஆழ்ந்து கிடக்கிறோம். இது அனாவசியமான வீண் செலவு" என்று அவர்கள் அறிவார்களேனும் இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் காட்சி யிவர்களை மயக்கியிழுக்கின்றது. வருடம் 360 நாட்களும் தினம் ஒருமுறைக்கிருமுறை இக்காட்சிகள் காட்டப்படுகின்றன. இதிலும் ஒரு முதலாளி இலாபம் பெறுவதும் சுமார் ஏழெட்டுபேர் ஜீவனம் செய்வதும் நடக்கிறது. ஆனால் நாட்டிலுள்ள அயோக்கியர்கள் தந்திர சாமார்த்தியத்

தோடு களவு முதலிய குற்றங்களைச் செய்ய நன்ருய் கற்றுக் கொள்ளுகிருர்கள். தற்காலம் சென்னையில் நடக்கும் அபூர்வக் குற்றங்களே இதற்கு அத்தாட்சியாகப் போதும். அனேகம் ஏழைகள் கடனிலும் தரித்திரத்திலும் அமிழ்ந்தழிகிருர்கள். ஆனல் ஒரு வழியில் இலாபம் இருக்கிறது. அதாவது மேல்நாட்டு இரசாயன மருந்துகளும் எந்திரங்கள் முதலிய கருவிகளும் கோடிக்கணக்கான பவுனுக்குச் செலவாகின்றன. அங்குள்ள படம்பிடிக்கும் தொழிற்சாலைகள் நல்ல பணம் குவிக்கின்றன.

இவற்றை நகர சங்கத்தாரேனும் கவனிக்கிருர்களா? துரைத் தனத்தார் வருமான வரிவந்தால் போதுமென்றிருக்கிருர்கள் போலும். துரைத்தனத்தார் இவற்றைக் கவனியாதிருந்தாலும் நகரபரிபாலன சபை, மந்திராலோசனை சபை முதலிய விடங்க ளில் அவயவிகளாகச் சென்று ஜனங்களின் க்ஷேமத்தைக் கவனிக் கும் நம்மவர்களன்ருே இத்தகைய தீங்குகளைத் தடுக்கவேண்டும். ஜனங்கள் இவ்வாறு அநாவசியமான வழிகளில் பணவிரையம் செய்து சுகத்தையும், நடக்கையையும், ஆசாரம் முதலியவற்றை யும் கெடுத்துக் கொள்வதைத் தடுக்கமுயலாமல் மற்ற விவகாரங் களைமட்டும் கவனிப்பது ஒரு கட்டிடத்தின் அஸ்திவாரத்தைப் பெருச்சாளிகள் அறுத்துக் கொண்டு போவதைத் தடுக்காமல் அக்கட்டிடத்தின் மேல்மாடிச் சுவருக்குச் சித்திரம் தீட்டுவது போல் இருக்கிற தன்றி வேறில்லை. செல்வம் மலிந்து சந்தோ ஷத்தி லிருப்பவர்கள் கேளிக்கைகளில் காலங் கழிப்பது இயற் கையே. தரித்திரத்திலும் கடனிலும் திண்டாடிக்கொண்டு சரி யான ஆகாரத்திற்கே தாளம் போடும் நமக்கு வாரத்திற்கு ஒரு முறை கேளிக்கை யென்றேனும் வரையறுக்க லாகாதா?

பொது நலத்திற்காக அவயவிகளாய்ச் செல்லும் நம்மவர்கள் இது விஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொண்டு ஜனங்களின் தீங் கைத்தடுக்க முயல்வார்க ளாயின் நாட்டிற்கு உண்மையான ஒரு பெரிய நன்மையைச் செய்தவர்களாகப் புண்ணியமும் புகழும் பெறுவார்கள். பரம் பொருளாகிய பகவானே அவர்களைத் தூண் டப் பிரார்த்திக்கிருேம்.

ஓம் தத்ஸத்.

---

## வாலிபப்பருவம் பயங்கரமான காலம்.

உலகப்பிரசித்தி வாய்ந்த ஹாவ்லாக் எல்லிஸ் (Havelock Ellis) சமீபத்தில் தாம் எழுதிய ஒப்புயர்வற்ற "ஆண்பெண் மக்களின் தத்துவம்" (Psychology of sex) என்ற நூலில் "மதசம்பந்தமாக நாம் செய்யவேண்டிய ஆராய்ச்சிகளை யெல்லாம் செய்துவிட்டோம். இனி ஆண்பெண் மக்களின் தத்துவசம்பந்தமாகத் தான் நாம் ஆராய்ச்சிகள் செய்யவேண்டும்" என்று கூறினர். இக்கூற்றின் உண்மையை நாம் உணர்ந்துகொள்வது அருமையல்ல. ஆறுபாகங்களாகப் பிரிக்கப்பட்ட அவர் எழுதிய அருமை மிக்க நூலைப் படித்தபோது ஆண்பெண் சம்பந்தமான எவ்வளவோ புதிய உண்மைகளை நாம் உணர்ந்துகொண்டோம். மகாத்மா காந்தியால் மிகப் பெரியவரென்று பாராட்டப்படும் எட்வர்ட் கார்ப்பெண்டர் (Edward Carpenter) எல்லிஸ் எழுதிய சிறந்த நூலை மிகவும் புகழ்ந்தெழுதுகிறார். நம் வாழ்க்கையின் நடுச்சக்கரமாயிருப்பது ஆண்பெண்விஷயமே என்பதை அறியாதாரில்லை. உலகத்தின் இன்பதுன்பத்திற்கும் அதுவே காரணமாம். இம்முக்கியமானவிஷயத்தைப்பற்றிய உண்மைகள்பெரும்பான்மையோர்க்குத் தெரியா. அவ்வுண்மைகளை யெல்லாம் இச்சிறு கட்டுரையில் கூறுவது சாத்தியமாகுமா? அல்லாமலும் அவ்வுண்மைகளெல்லாம் பத்திரிகையில் வெளிப்படுத்தக்கூடியனவுமல்ல. மிஸ்டர் எல்லிஸ் தம் புத்தகத்தை அமெரிக்காவில் முதன்முதல் வெளிப்படுத்தியபோது அது இங்கிலாந்துக்கு வரக்கூடாதென்று தடுக்கப்பட்டது. ஆயினும் உலகநன்மையைக் குறித்து நாற்பது ஐம்பது வருடங்களாக அரும்பாடுபட்டு எழுதிய அப்புத்தகத்தைத் தம் நாட்டில் வரக்கூடாதென்று தடுத்த குற்றத்தை ஆங்கிலேயர் பின்னர் உணர்ந்துகொண்டு அந் நிபந்தனையை நீக்கிவிட்டனர்.

இந்தப் புத்தகத்தில் அவர் மிகவும் பயங்கரமான உண்மைகளைக் கூறுகிறார். அவ்வுண்மைகளை யெல்லாம் திரட்டிக்கூற இங்கு இடமில்லாமை பற்றி யாம் வருந்துகிறோம்.

ஓர் ஆண்மகன் பதினான்குவயதடையும் வரையில் அவன் ஆணுமல்ல பெண்ணுமல்ல. இங்ஙனமாதலாலேதான் பதினான்கு வயதுக்குக்குறைந்த ஆண்பிள்ளைகளைப் பெண்ணை நேசிப்பதுபோலவே நாம் நேசிக்கின்றோம். ஓர் ஆண் மகனுக்குப் பதினான்கென்ற பருவம் மிக்க பயங்கரமானது. இந்தப்பருவத்திலிருந்துதான் அவன்பிற்காலவாழ்வு ஆரம்பமாகிறது. இந்தப் பருவத்தில்தானே அநேக பையன்கள் கெட்டுவிடுகிறார்களென்று எல்லிஸ் கூறுகிறார். இக்கேட்டிற்கு அநேக காரணங்களுள்ளனவென்றாலும் அவற்றுள் ஓர் பணிப்பெண் (ஆயா) யைக்கொண்டு பையனை வளர்ப்பதும் ஒன்றாகுமென்று உடற்கூற்று நூல்வல்லார் சொல்லுகிறார். இந்தப் பணிப்பெண் பையன் கோபமாயிருக்கும்போது அவன் கோபந் தணியவேண்டி அவனுக்கு ஒருவிதமான இன்பத்தை ஊட்டுகிறாளாம். பணிப்பெண் வைத்துக் குழந்தைகளை வளர்ப்பது அநேகமாய் நம் இந்தியர்களிடத்

தில்லை. இதைத் தப்பினும் பள்ளிக்கூடத்தில் இன்னொரு கண்டமிருக்கின்றதென்று அவர் மொழிகிறார். இந்தக்கண்டத்தைத் தப்புவதுதான் மிகவும் அரிது. இவர் உலகத்தின் பல பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலுமுள்ள பையன்களின் உண்மைகளையெல்லாம் அறிந்து வெளியிடுகிறார். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும் ஒழுக்கங்கெடாமலிருக்கும் பிள்ளைகள் நூற்றுக்கு எட்டு ஒன்பது தேறுவதும் அருமையாம். பன்னிரண்டு வயதிலிருந்தே இப்பையன்கள் கெட்டுவிடுகிறார்கள். பெரிய பையன்களும் சிறுவர்களும் அடிக்கடியும் ஒருங்கு கூடியிருப்பது பள்ளிக்கூடங்களில் சாதாரணம். அப்போது பெரிய பையன்களாயுள்ளவர்கள் சிறியவர்களைக் கெடுத்துவிடுகிறார்களாம். இவர்களுக்கெல்லாம் தாங்கள் செய்வது இன்னதென்றே தெரியாது. தங்கள் பிற்கால வாழ்க்கைக்கு முக்கிய ஆதாரமாயிருப்பது விந்து (Semen) என்ற உயிர்ப்பொருள். இதற்கு உயிர்ப்பொருள் (Life fluid) என்றும் பெயர். தேக பலத்திற்கு முக்கிய ஆதாரமாயிருப்பது இவ்வுயிர்ப் பொருளென்பதைச் சிறுவர்களுக்குப் போதிப்பது குற்றமாகாது என்று அநேக அறிஞர் அபிப்பிராயப்படுகின்றனர்.

சிறுவர்கள் அழிவிற்குக் காரணம் தற்கால நாகரிகமேயென்று சொல்வது குற்றமாகாது. பிரமசர்யத்தின் பெருமையும் குணமும் இக்காலத்தில் பெரும்பாலோர்க்குத் தெரியாமற் போயின. நம் ஆன்றோர் பிரமசர்ய ஒழுக்கத்தை மிகவும் வற்புறுத்தினர். ஒவ்வோர் இளைஞரும் இவ்வொழுக்கத்தை அநுசரிக்கக் கடமைபட்டிருந்தனர். சிற்றின்பத்திற்கு ஏதுவான விஷயானுபவங்களிலிருந்து அவர்கள் காக்கப்பட்டனர். பிரமசர்யத்தை அநுட்டிப்பதால் உண்டாகும் பிற்காலநன்மைகளையும் அவர்கள் உணர்ந்திருந்தனர். கல்வி கற்பதைக்காட்டினும் பிரமசர்யத்தின் உண்மைகளை உணர்ந்துகொள்ளலே சிறந்ததென அவர்கள் கொண்டுவந்தனர். அவர்கள் பெற்றோர்களும் அவர்கள் பிற்கால வாழ்வில் கண்ணுங்கருத்துமாயிருந்துவந்தனர். இவர்களுக்குக் கல்விபோதிக்கும் குருவும் இவர்களிடத்துத் தந்தையை யொத்த பரிவுடையவரா யிருந்தனர். இக்காரணத்தால்தான் அக்காலத்தில் ஆசிரியர் ஐங்குரவருள் ஒருவராக மதிக்கப்பட்டனர். பிரமசர்யத்தை அனுட்டிக்கும் பிள்ளைகள் பெரும்பாலும் மனித சஞ்சாரமில்லாத காட்டிலே தம் ஆசிரியரோடு சென்று தங்கள் பிரமசர்ய பருவம் முடிந்து கல்வித்துறையில் சிறக்குங்காறும் அங்கிருந்து "என்ன நோன்பு நோற்றான் கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்று கண்டவரெல்லாம் பாராட்டும்படியான இளஞ்சிங்கங்களாய் வளர்ந்து கிருகஸ்தாஸ்ரமத்தை மேற்கொள்வர். தற்கால நாகரிகம் அவ்வொழுக்கத்தை அடியோடு கவிழ்த்துவிட்டது.

நாகரிகமடைந்த தேசங்களில் அமெரிக்கா மிகவும் உயர்ந்திருக்கின்றதென்பதை மறுப்பாரில்லை. அங்குள்ள இளைஞரைப்பற்றி வால்ட் விட்

மான் (Walt Whitman) என்பவர் பின் வருமாறு கூறுகிறார்: "இங்குள்ள பிள்ளைகள் வீரமில்லாமல் இளவயதிலேயே முகம் வெளுத்துத் தலை நரைத்து முதுகு வளைந்து நரம்புந்தோலுமாய் 90 வயதடைந்த கிழவர்களைப் போல் நடைப்பிணமாய்ச் சுடுகாட்டை நோக்கி நிற்பவர்களா யிருக்கிறார்கள். இவர்கள் நிலை மிகவும் பரிதபிக்கக் கூடியது." இங்கிலாந்து முதலிய நாடுகளிலுள்ள பிள்ளைகளைப்பற்றியும் இங்ஙனேதான் ஹாவ்லாக் எல்லிஸ் முதலிய அறிஞர் கூறுகின்றார். இவ்வுண்மைகளையெல்லாம் பரியாலோசிக்குங்காலத்தில் தற்கால நாகரிகமானது உலகத்தின் புரைநோயாயிருக்கின்றதென்பது செவ்விதின் விளங்கும். "நாகரிகமும் அதுவந்தவாறும் அதனை நீக்கும் வழியும்" (Civilization, Its cause & cure) என்ற அருமைமிக்க நூலில் எட்வர்ட் கார்ப்பெண்டர் இப்போலி நாகரிகத்தின் தன்மைகளை யெல்லாம் எடுத்துக்கூறுகிறார்.

வாலிபர்கள் அழிவதற்கு இன்னும் எத்தனையோ வழிகள் உண்டு. பெண் ஆண் இன்பம் இன்னதென்று தெரியாமலே இளமைப்பருவமானது கழியவேண்டுமென்று எல்லா அறிஞர்களும் வயித்திய நிபுணர்களும் தேகதத்துவ நூலாரும் கூறுகிறார்கள். இந்தவிதமாகத் தம் பிள்ளைகளைக் காக்க வேண்டியகடமைகளைப் பெற்றோர்களும் அப்பிள்ளைகளைக்காத்து வருவோர்களும் இன்றியமையாததாகக் கொள்ளவேண்டும். எத்தனையோ வாலிபர்கள் இன்பம் ஒன்றையே கருதித்தம்மைக்காட்டிலும் வயதில் மூத்தாளோடு துயில்கின்றார்கள். வயதில் இளைய பெண்கள் தம்மின் மூத்தவர்களையும் மூத்த ஸ்திரீகள் தம்மைக்காட்டிலும் வயதில் குறைந்தவர்களையுமே கூடவிரும்புகிறார்களென்று மிஸ்டர் எல்லிஸ் கூறுகிறார். இங்ஙனமாக, வாலிபர்கள் தங்களைக்காட்டிலும் வயதின் மூத்த கைம்பெண்களையும் மற்ற ஸ்திரீகளையும் கண்டு விலகிவிடவேண்டும். இளைஞர்க்குத் தம்மின் மூத்த ஸ்திரீகளோடு எந்த வழியினும் தொடர்பிருக்கக்கூடாது. மூத்தவர்களான ஆண்கள் பெண்கள் கூட்டுறவைவிரும்பி அதில் இன்பம் காண்பதுபோல் இளைஞரும் பிறர்கூட்டுறவை விரும்பி அதில் இன்பம் காண்கிறார்களென்று எட்வர்ட் கார்ப்பெண்டர் சொல்லுகிறார். ஆயினும் இவர்களுக்குள் ஒரு வித்தியாசமிருக்கிறது. மூத்தவர்கள் சூக்கும வின்பத்தை வெறுத்து ஸ்தூல இன்பத்தை நாடுகிறார்கள்; இளைஞர்க்கு ஸ்தூல இன்பமும் சூக்கும இன்பமும் ஒன்றேயாகும். ஆதலால் ஒழுக்கமுள்ள வாலிபர்களின் கூட்டுறவும் தங்கள் பெற்றோர்களின் நட்பும் அன்பும் இவர்களுக்கு வேண்டுவது அவசியமாகுமென்று அவர் பின்னும் கழறுகின்றார். எந்த வகையிலும் இளைஞர்க்குச் சிற்றின்பத்தில் அவா வுண்டாகாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். தற்கால நாகரிகமே சிற்றின்பத்தில் அவா வுண்டாவதற்கு ஏதுவாகின்றனதென்று அவர் கூறுகிறார்.

இந்த நாகரிகத்திற்கும் பணத்திற்கும் மிகவும் சம்பந்தமிருத்தலால் பணக்காரர்கள் கெட்டுப்போவது சாதாரணமாயிருக்கிறது. இதன் பய

னுகவே பணக்காரர்கள் க்ஷீணமடைந்துவிடுகிறார்கள். அவர்களுக்குச் சந்ததி அபிவிருத்தியுமில்லை. இவ்வுண்மையை மிகச் சிலரே உணர்ந்திருக்கின்றனர். தேசசுகாதாரம் (சிக்காகோ) என்ற பத்திரிகையில் ஒருவர் எல்லா வசதிகளுமுடைய பணக்காரர்கள், சந்ததி அபிவிருத்தி செய்ய முடியாமலும், ஒரு வசதியுமில்லாத குடியானவர்கள், சந்ததி அபிவிருத்தி செய்யக்கூடியவராகவு மிருக்கின்றனரே; தகுதியுள்ளவர்கள் நிலைத்திருத்தல் (Survival of the fittest) என்பதுபோலத் தகுதியல்லாதவர்கள் நிலைத்திருத்தலென்று (Survival of the unfittest) தலைகீழாய் மாறிவிட்டதே என்று இரங்குகின்றார். இவர் எல்லிஸ் முதலியவர்களைப்போல விஷயங்களை நுணுக்கமாய் அறிபவரல்லரெனத் தெரிகிறது. உண்மை தலைகீழாய்ப் புரண்டுவிட்டதற்கு நாகரிகமே காரணமென்பதை அவர் தேறவில்லை.

தற்கால நாகரிக வாசனை சிறிதுமில்லாமலே நாம் நம் பிள்ளைகளை வளர்க்கவேண்டும். பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்களுக் கனுப்பிக் கல்வி கற்பிப்பதைப்பார்க்கினும் உத்தம குணங்களுடைய ஒரு நல்லாசிரியரிடத்து விட்டுக் கல்விகற்பிப்பதே சிறந்ததாகும். இந்நாட்களில் அப்படிச் செய்ய முடியாவிட்டால் நல்லொழுக்கத்தையும் பெண் ஆண் தத்துவ விஷயங்களையும் அவர்களுக்குப் போதித்துவரவேண்டும். ஒரு தேசத்தின் நம்பிக்கை அதன் இளைஞர்களிடத்திலிருக்கிறது. ஆதலால் பெற்றோர்களேயன்றித் தேசமும் இளைஞர்களின் நலத்தில் கருத்துவைக்க வேண்டும். இல்லையேல் அத்தேசம் துன்றியழியும். நம் அரசியல் அறிஞர் கருத்துகள் எங்ஙனமாயினும், தற்கால நாகரிகம் ஒரு தேசத்தின் உயிரை அரித்துத்தின்னுவதென்ற வகையில் எல்லாரும் கருத்தொருமைப்பட்டவரா யிருக்கவேண்டும்.

தமிழகம்.



## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(135-ம் பக்கத் தொடர்ச்சி.)

(35) உண்டிலை யென்றுந்தம்மி லுணர்வலோர் பிணங்க நின்ற
புண்டரீ கக்கண்ணனை போக்கொடு வரவிலானைக்
கண்டன மென்றோர்க் கென்றுங் காண்பரி யானை யென்றுங்
கண்டில மென்றோர் கண்ட கண்ணனைக் கண்ணிற் கண்டார்.

(நிக்குவிசயம். 181.)

(இ-ள்.) உணர்வற்றவர்கள், உண்டென்றும் இல்லையென்றும் தம்முள் மாறுபடகின்ற செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களை யுடையவனும், கண்டனமெனக் கூறுவோர்க்கென்றுங் காண்பதற் கருமையானவனும், என்றுங் கண்டிலோ மென்றோரால் காணப்பட்டவனுமாகிய ஸ்ரீமந் நாராயணனைக் கண்ணால் கண்டார்கள். (எ-று.)

'இராவணன் திக்குவிசயம் செய்யப்புறப்பட்டு தேவலோகஞ் சென்ற போது, இந்திரனுள்ளிட்ட வானவர் வெருவி, பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் பதுமநாபனிடம் தங்குறைகளைக் கூறுவானேகி, அறிதுயில் புரிபு மமலனைக் கண்டார்களென்பதைக் கூறு மிச்செய்யுள் இறைநிலையிற்றென வியம்புகின்றது.

" உருவென அருவென உளனென இலனென
அருமறை யிறுதிபு மறிவரு நிலைமையை. " என்று,

பின்னைப் பெருமாளையங்கார் கூறியாங்கு, கடவுள் உருவமுடையவனென்றும் உருவமில்லாதவனென்றும், உள்ளவனென்றும் இல்லாதவனென்றும் அறிதற்கருமையான வேதாந்தங்களும் ஒரு தலையாகத் துணிந்து அறிதற்கரிய தன்மைமை யுடையவன். ' போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியன் ' (திருவாசகம்.) இவ்வடிவினன் இவ்வண்ணத்தனென் றொருவராலு மனவிட்டறியவொண்ணாதவன். நித்தியன். வியாபகன். சகலாண்ட சராசரங்களையும் படைக்கப் பிரமனும், காக்கக் கரியமாலும் அழிக்க அந்திவண்ணனுமாகியும், அவர்களல்லாதவனாகியு மிருப்பவன். தனக்கென ஒரு உருவமும் ஒருதிருநாமமு மில்லாதவனாயினும், தமதடியார் அன்பின் மிகுதியால் எவ்வெவ்விதமாகப் பாவித்து எவ்வெப் பெயரிட்டழைத்தாலும் அவ்வவ் வடிவங்களையும் பெயர்களையுமேற்று அருள்புரியும் அப்பிரமேயன். "ஒருநாம மோருருவம் ஒன்றுமில்லாற் காயிரம் திருநாமம் பாடி நாம் தென்னேணங் கொட்டாமோ " என்றார் மணிவாசகர்.

" யாருமோர் நிலைமைய னெனவறி வரியவெம் பெருமான், "
" பேருமோ ருருவமு முளதில்லை யிலதில்லை பிணக்கே. "

என்றார் நம்மாழ்வாரும். வாக்குமன மெட்டா வான் பொருள்ன். 'எத்திக்குந்தானாகி எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்குமவ்வுயிராய் அங்கங்கிருக்கு' மகண்டபரிபூரணன். இத்தகைய கடவுளைக் கண்டமாய் ஓ ரளவுக்குட்படுத்தி யொருவராலு மறிய வியலாது. எவர்கண்டனமெனக் கழறுகின்றனரோ அவர் உண்மையிற் கண்டவர்களே யன்று, 'மனனுணர் வளவிலன் பொறியுணர் வவையிலன்.'(திருவாய்மொழி)என்றபடி, அகமுக விந்திரியங்களா லறியப்படாதவனாகலின், உருவநிலையிற் கண்டவர்கள் நிஜஸ்வருபத்தை யறியாதவர்களே. பூதசரீரத்தோடுகூடிய அவதார விசேஷங்களெல்லாம் மாயையின் காரியங்களே யன்றி நிஜவடிவமாகா. பகவத்கீதையில் பகவான் பார்த்தனை நோக்கி, "பற்குந ! அவதாரம் செய்ததுபோலத் தோற்றுகின்றதே யென்றால், சுத்த சத்துவரூபியாகிய நம்முடைய சுத்த சங்கற்பமென்னும் மகாமாயை செய்வித்திருக்கின்றதே தவிர, நான் யதார்த்தமாய்ப் பிறக்கவேயில்லை. இதின் யதார்த்தமானது நம்முடைய மாயையைக் கடந்து நம்மைத் தரிசித்துள்ள மகான்களுக்கு மட்டுந் தெரியுமேயன்றி மற்றையோர்க்குத் தெரியத்தக்க தல்ல" என உபதேசித் திருக்கின்றனர்.

ஞானதேவர் பகவானைப் பிரத்யக்ஷமாகக்கண்டு அன்னமுண்பித்தவராயும் உண்பிக்கப்பட்டவராயு 'மிருந்தும், 'வேகாதசட்டி' யெனக் கபீரால் தள்ளப்பட்டார். பாண்டவர்கள் ஸ்ரீகண்ணபிரானோடு அளவளாவிக்கலந் துறவாடினவர்களா யிருந்தும், அப்பெருமானது யதார்த்த ஸ்வரூபத்தைக் கண்டார்களில்லை. சகதேவனைப் பார்த்து, வாசுதேவன் 'என்னைப் பிடித்துக்கட்டினால் பாரதயுத்தம் நடைபெறாமலிருக்கு மென்றனையே. என்னை யெங்ஙனங் கட்டுவை?' யென்றபோது, "மாதவா! 'உன்னை நீ தானுமுணராதாய்! உன் வடிவந்தன்னை நீ காட்டத் தளைந்திடுவேன்' யாடு"என்றான். உடனே பதினாறாயிரம் வடிவங்கொண்டான் பக்தபராதீனன். அப்போது ஞானபண்டிதனாகிய சகாதேவன் இவ்வுருவங்களெல்லாம் அவனுருவங்களல்ல வென்றறிந்தவனாகலின், 'மூலமாந்தோற்றமுணர்ந்து, எவ்வுலகும் தாயஅடியிணைகளைத் தன் கருத்தினாற் பிணித்தான்.' மனமற்ற நிலையிற்றோன்றுவோ னாகலின் கண்டேனெனக் கூற வியலாது.

ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனலு மிதன்பெருமை எவர்க்கார் சொல்வார்
அதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்." என்ற

தாயுமானார் உரையின்படி, காண்பான் காட்சி காட்சிப் பொருளாகிய ஞாதுரு ஞானம் ஞேயமென்னும் திரிபுடியற்ற நிலையிலே நின்று நோக்கா நோக்கால் நோக்கப்படுவன். தன்னை யிழந்த நிலையிற் றோன்றுவதை எதனாற் கண்டதாகக் கூறுவது? ஆகையால் தெரிசித்த மகான்கள் காணவில்லையெனக் கூறுவார்கள். 'கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்' என்பது ஆன்றோர் மொழி.

உணர்ந் துணர்ந் திழிந்தகன் றுயர்ந் துருவியந்த விந்நிலைமை
உணர்ந் துணர்ந் துணரினு மிறைநிலை யுணர்வரி துயிர்காள்!

எனத் திருவாய்மலர்ந்தருளினார் சடகோபர்.

ஆகலின் பிரமநிஷ்டராகிய சற்குருவை யடைந்து ஞானோபதேசம் பெற்று, ஆசையை யொழித்து, அகப்பற்று புறப்பற்றுக்களாகிற அகங்கார மமகாரங்களை யறவே யகற்றி, மனத்தை யொருமுகப்படுத்தி அவனடியில் லயிக்கச்செய்து, மனமற்ற பரிசுத்த நிலையைப் பெற்றாரே அப்பராபரனைத் தெரிசிக்கப் பெறுவார்களென்பது இச்செய்யுளால் இனிது விளங்குகின்றது.

(36) உள்ளபோ தினிதுண் டிலாதபோ தவரோ டுறவுவிட்
டுறு மிடர்தேடும்
ஒள்ளிய ரல்லா ருறவுபோல் நெடுநோன்
உயர்தரு மலர்மது வுண்டு

மென்னவம் மரம்பூ மாறிட விட்டு
வேறொரு பூமரந் தேடி
கள்ளவிழ் கோதை கமழ்குழ லணங்கே
களிவண்டு போவன காணாய். (சீதை வனம் புகு-18)

வசந்தகாலத்தி லொருநாள் மாலைப்போதில் பிராட்டியாரோடும் பூம்பொழிலடைந்த இராமபிரான் அந்நந்தவனத்தி னெழிலை ஜானகியாருக்கு வருணித்துக் கூறியதை யுணர்த்துஞ் செய்யுட்களி லொன்றாகிய இதன் பொருள்:— தேனைச்சொரியும் மலர்மாலை மணம் வீசிக்கொண்டிருக்கின்ற கூந்தலையுடைய நாயகி ! களிப்பையுடைய வண்டுகள், 'ஒருவனிடத்து செல்வமிருந்தபொழுது உறவு கொண்டாடி யுண்டுகொண் டிருந்து கை வறண்டகாலத்தில் அவருறவைவிட்டு வேறிடந்தேடிச் செல்லும் நற்குண மில்லா மனிதரைப்போல்', அநேககாலமாய் உயர்ந்த விருக்ஷத்திலுள்ள தேனையுண்டு, பூப்பொழிந்த காலத்து அதைவிட்டு வேறொரு பூமரந் தேடிச் செல்லுந் தன்மையைப் பார்" எனக் காட்டினர் என்பதாம்.

"காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்தின் மேலாடு மீனிற் பலராவர்." "கரவாதளிப்பரே லுற்றா ருலகத்தவர்" என்றபடி, ஒருவன் செல்வந்தனாயிருக்குங் காலத்து பந்துக்களல்லாதாரும், 'என் அண்ணன் மனைவிக்கு அக்காள் புருஷன் தம்பிக்கு, இவருடைய சிறியதாயார் மகளின் மூத்தாருக்கு மச்சான் பெண்ணைக்கொடுத்திருக்கிறது' என்று ஏதோ சம்பந்தங் காட்டி இச்சகம்பேசி விலாப்புடைக்கத் தின்பதும், அவனே பின்பு ஏழையாய்விட்டால், 'அவன் எங்கோ தூர உறவு' என்று நீங்கிப்போதலும், தன்னலமிகுந்த தரித்திரங்களின் செயல்களாம். இவர்களை நாய்களினுங் கடையான நன்றிகெட்ட பேய்களென்று சொல்வதும் இழிவாகாது. இவர்கள் உண்மையான உறவினராகார். அவர்கள் இன்பமுற்றிருந்தபோது தாமுமின்பந் துய்த்ததுபோல, துன்பக்காலத்திலும் அவரோடொக்க விருந்து அத்துன்பத்திலும் பங்குடையவர்களா யிருப்போரே உண்மையான உறவினராவரென்னும் நீதியைக் கொண்டது இச்செய்யுள். இது,

அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர் — அக்குளத்தில்
கொட்டியு மாம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு.

'உற்றா ரெல்லாம் உறவின ரல்லர்' என்னும் நீதிப்பாக்களையும் நினைப்பூட்டுகின்றது. (தொடரும்)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## தனித் தமிழ்ப் பாதுகாப்பு:
(பல்லாவரம் பொதுநிலைக் கழகத்து
நாகை நீலாம்பிகை அம்மை எழுதியது.)

1923-ஆம் ஆண்டு, மாசித்திங்கள் 27-ஆம் நாள் வெளிவந்த நம் அருமைத் திராவிடனில் "தமிழ் மொழியும் அதன் முற் செலவும்" என்ற பொருள் ஒன்று "தமிழகம்" என்னும் ஓர் இதழினின்றும் எடுத்தெழுதப் பட்டிருந்தது. அதனை நன்கு பயின்றபின் அதன்கண் தமிழைப்பற்றிய பல பொருந்தாக்கொள்கைகள் காணப்பட்டன; அவைகளைப்பற்றிச் சிறிது ஆராய்வாம்.

அறிவானும் நாகரிகத்தானும் சிறந்துவிளங்கும் ஒரு கூட்டத்தார் ஒருநாட்டிலிருப்பின் மற்ற நாட்டிலுள்ளார் தாந்தொகுத்த பண்டங்களை யும் பொருள்களையும், விலைப்படுத்தும் பொருட்டு அந்நாகரிக மக்களிடம் வந்து கலப்பர்; இன்னும் பலவகை இடையூற்றானுந் தம் நாடுதுறந்து பிற நாடுபோந்து குடிபுகுந்து அவரோடு கலப்பாரும் உளர். எனவே, நாடு துறப்போர் இருவகைப்படுவர். இங்ஙனம் பண்டம் விற்போரும் குடிபுகு வோருமென்னும் இருகூட்டத்தாரும் நாகரிகவாழ்க்கையுடைய கூட்டத் தாரிடம் வந்து கலப்பது இயற்கை. இங்ஙனம் நேரும் மக்களின் கலப் பால் ஒருவர்பேசும் ஒருமொழிச் சொற்கள் மற்றையோர் பேசும் மற்ற மொழியிற் கலவாநிற்கும். இவ்வாறு நேருங் கலப்பு இயற்கை ஏதுவாகும். பண்டங்கள் விற்றற்கும் குடிபுகுதற்கும் ஒரு நாட்டார் தம் நாடு நீங்கிப் பிறிதொரு நாகரிக நாட்டிற் புகுந்து அந்நாட்டினரை ஒன்றிப் பிழைக்குங்காலத்து அவர்தம் மொழிச்சொற்கள் மற்றவர்பாற் கலக் கும். இவ்வியற்கையைத் தடுத்தல் அரிதினும் அரிதாம். ஆனாலும், நல்லிசைப் புலவர் மன ஒருமைப்பாடுடையராய்ப் பகுத்துணர்வோடு ஆய்ந்து நூல்கள் எழுதும்போது பிறமொழிச் சொற்கள் நம் மொழியில் வந்து கலப்புறாவாறு எழுதுதல் கூடும். இனி, நாம் கருதியவற்றைத் தெளிவாக விளக்கவேண்டியதற்குப் போதுமான சொற்கள் நம் மொழி யில் இருக்கின்றனவா என்று ஆராய்ந்து பார்த்துத் தம் மொழியிற் போதுமான சொற்கள் இல்லாவிடின் அவைகளைப் புதிதாகச் செய்து கொள்ளாமற் சோம்பலுற்றுப், பிறமொழிச் சொற்களை எளிதாக எடுத்து நம் மொழியிற் சேர்த்தெழுதுவதே செயற்கை ஏதுவாகும் ஒரு மொழி. பிறமொழிச் சொற்களை எடுத்துத் தன்னுட் சேர்த்து வழங்கல் வேண்டுமாயின் அம்மொழி உயர்ந்த நாகரிக வாழ்க்கைக்குப் போதுமான சொற்கள் அமையப்பெறாததோர் ஏழைமொழியாக இருத்தல் வேண்டும். ஆங்கிலமொழியானது மிகவும் ஏழைமொழியா யிருத்தலின் அதன்கண் இலத்தின் கிரீக் முதலிய பிறமொழிச் சொற்களைச் சேர்த்து வழங்குகின்ற னர். ஆங்கிலமொழியிலிருக்கும் கிரீக் இலத்தின் முதலிய பிறமொழிச் சொற்களை வேறுபிரித்தெடுத்துவிட்டால் அதனைத் தனியே வழங்குத

லும் அதன் கண் நூல்கள் எழுதுதலும் இயலா. இங்ஙனம் ஆங்கிலம் போன்ற ஏழைமொழிகட்கே பிறமொழிச்சொற்களின் உதவி இன்றியமையாது வேண்டப்படும். தமிழோ பழையகாலந் தொட்டுப் பிறமொழிச் சொற்களின் உதவியை ஒரு சிறிதும் வேண்டாது தனித்து நின்று மிகவும் அழகாய் விளங்குவது. இக்காலத்தும் தமிழ் தனித்து வழங்கவும் எழுதவும் எளியதாயிருக்கின்றது. இந்நாவலந்தீவில் வழங்கும் தமிழ் ஆரியம் முதலான மொழிகளையும், ஐரோப்பா ஆசியாவில் வழங்கும் ஏனை மொழிகளையும் நுணுக்கமாகவும் விரிவாகவும் நன்காராய்ந்த ஆசிரியர் கால்ட்வெல் துரைமகனார் தாம் ஆங்கிலத்தில் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்புமை இலக்கணம் என்னும் நூலில் தனித்தமிழின் சிறப்பைப்பற்றி எழுதியவற்றுள் ஒரு சிறு பகுதியை இங்கே மொழி பெயர்த்தெழுதுகின்றும். "வடசொற்களை நீக்கிக்கொள்வது இப்போது தெலுங்கு மொழியால் இயலாதென்பது உண்மைதான்; கன்னடத்திற்கோ இன்னும் மிகுதியாய் இயலாது; மலையாளத்திற்கோ முற்றிலும் இயலாது; இம்மொழிகள் வடமொழியினின்று ஏராளமான சொற்களைக் கடன்வாங்கி யிருத்தலாலும், ஏதோர் உதவிக்கும் வடமொழியினையே எதிர்நோக்கி யிருப்பது அவற்றிற்கு மிகவும் வழக்கமாய் வந்துவிட்டமையாலும், அவைகள் தாம் தனித்து நிற்கமுயல்வது சிறிதும் கைகூடாததொன்றும். ஆனால் திராவிட வழக்குகளுள் மிகவும் பண்படுத்தப்பட்டதாகிய தமிழ்மொழியோ வடசொற்களை அறக்களைந்து விடுதற்கு வல்லதாவதோடு, வேண்டினால் தான் தனித்து நின்று அதன் உதவியை நாடாமலே ஓங்கி வளரவுங்கூடும். ஏறக்குறையப் பழைய இலக்கண இலக்கிய நூல்கள் எழுதப்பட்டுள்ள செந்தமிழ் மொழியில் வடசொற்கள் மிகவும் அருகிக் காணப்படும். வடமொழியிலிருந்து வரும் சொற்களையும் எழுத்துக்களையும் கருத்தோடுங் கவலையோடும் முழுதும் விலக்கித் தமிழொலிகளையும் தமிழ்ச் சொற்களையும் தமிழ் முதனிலைகளையு மட்டுமே வைத்து எழுதப்படுதலினால் நூல்களிலுள்ள செந்தமிழ் வழக்கு மக்கள்பேசும் உரை வழக்குக்கு வேறுபட்டதாயிருக்கின்றது. இவ்வளவு கருத்தாக வடமொழிச் சொற்களை விலக்கும் எண்ணம் தமிழ் கற்ற அறிஞர் உள்ளத்தில் குடிகொண்டிருத்தலினால், தெலுங்கு முதலிய ஏனைத் திராவிட மொழி நூல்கள் வடசொற்களை நிரம்பச் சேர்த்துக்கொள்ளுதற் கேற்பத் தாம் உயர்வாகக் கருதப்படுதல் போலாகாமல், தமிழ்நூல்களானவை எவ்வளவுக்கு வட சொற்களைக் களைந்து தனித்து நடைபெறுகின்றனவோ, அவ்வளவுக்கு அவை உயர்ந்தனவாகவும் இனிமை வாய்ந்தனவாகவும் திருத்தமுடையனவாகவும் கருதப்படுகின்றன. மேலும், நாட்டுப் புறங்களிலுள்ள தமிழ்மக்கள் பேசும் தமிழ் மொழியானது வடசொற் கலப்பின்றித் தூய செந்தமிழ் வழக்கோடு ஒத்ததாகவும் இருக்கின்றது. எந்த நாட்டிலும் அந்நாட்டாருடைய செய்யுட்களும் அந்நாட்டின் குடியானவரின் பேச்சுக்களுமே அந்நாட்டவர் வழங்கும் மொழியின் பழந்தன்மையினைத் தெரிந்துணர்தற்குக்

கருவியாகும்." இங்ஙனமாகத் தமிழின் உண்மைச் சிறப்பை உள்ளவாறுணர்ந்து நடுநிலை வழாது அதனை அறிவுறுத்திக் காட்டிய கால்ட்வெல் ஆசிரியருடைய மெய்யறிவுதானும் இல்லாமல், நம் தமிழரில் ஒருசாரார் தமிழ் வடமொழியினின்று உண்டாயதாமெனவும், அஃது ஆரியத்தின் உதவியின்றி நடவாதெனவும் நடுநிலை வழுவிப் பொய்யுரை கூறித் தெய்வத் தமிழைப் புறம்பழித்தல் பெரிதும் நாணத்தகுவதாம். தமிழில் மற்ற மொழியின் உதவியின்றிப் பேசவும் எழுதவும் போதுமான சொற்கள் நிரம்ப உண்டென்பதை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட தொல்காப்பியம், திவாகரம் முதலிய அரும்பெருநூல்களில் எவரும் காணலாம். இவ்வுண்மைகளை உற்றுநோக்கா ஒரு சிலரே "ஒன்றே யாயினும் தனித்தமிழுண்டோ" என்று கூறி நந் தனித் தமிழுக்குக் குறைவு தேட முந்துவர்.

இக்காலத்திற் கிணங்க நந்தமிழ்மொழி வளர்ச்சியடைய வேண்டுமாயின் ஏராளமான வடசொற்களைத் தமிழிற்சேர்த்து எழுதுதலும் வழங்குதலும் வேண்டுமென்றும், ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்கும்போது வடசொற்கள் இன்றியமையாது சேர்க்கப்படல் வேண்டுமென்றும், மேற்கூறிய தமிழக இதழில் ஒருவர் கூறுகின்றார். அதனை ஆராய்வாம். நந்தமிழில் ஒருபொருளை யுணர்த்துதற்குப் பல சொற்களும் பல பொருள்களை யுணர்த்த ஒரு சொல்லும் உண்டென்பதைப் பிங்கலந்தை முதலான அரும்பெரு நூல்களினின்றும் எடுத்துக் காட்டுவாம். இயல்பினை யுணர்த்த 21 சொற்களும், உயர்வினை யுணர்த்த 17 சொற்களும், வலிவினை யுணர்த்த 34 சொற்களும், அச்சத்தினை யுணர்த்த 19 சொற்களும், மலையினை யுணர்த்த 28 சொற்களும், இன்னும் இங்ஙனமே பிற பொருள்களை யுணர்த்தப் பலவாகிய சொற்களும் இருக்க, மொழி பெயர்க்கப்போதுமான சொற்கள் மிகுதியாக இல்லையென்று கூறுவது முற்றும் பொருந்தாதன்றோ? (தமிழ்ப் பாஷையைச் செவ்வனே கற்காததால் மொழி பெயர்க்கும் ஆற்றலில்லாதார் வேறென்ன கூறுவர்?); மொழிக்குப் பாஷையென்றும், மகிழ்ச்சிக்குச் சந்தோஷமென்றும், அன்புக்குப் பக்தியென்றும், சொல்வது குற்றமாஎன்று கேட்கின்றார். மேற் குறிப்பிட்டபடி ஒரு பொருள் குறித்த பல சொற்களும், பல பொருள் குறித்த ஒரு சொல்லும் நந்தமிழில் அளவின்றி யிருக்க, அவைகளைப் புறம்பே விடுத்து வல்லோசையுடைய சமஸ்கிருதச் சொற்களை நந்தமிழோடு சேர்த்து வழங்குவது, ஒருவன் தனக்கு அரிதிற் கிடைத்த இன்சுவைப் பண்டங்களை வீசி யெறிந்துவிட்டு இல்லந்தோறுஞ் சென்று ஊசிய உணவை இரந்துண்பதற்கே ஒப்பாம். மேலும், தமிழ்ச் சொற்கள் இருக்க அவற்றை விடுத்துப் பிறமொழிச் சொற்களை எடுத்து வழங்கி வருவோமாயின், தமிழ்ச் சொற்கள் நாளடைவில் வழங்குதலின்றி ஒழியுமன்றோ? இங்ஙனம் பிறமொழிச் சொற்களை வழங்கினமையால் எத்தனையோ அருந்தமிழ்ச் சொற்கள் முன்னமே வழங்காதுபோயின.

நூல்களில் அவைகள் இல்லையானால் அவைகளை நாம் காணுதலே இயலாது போயிருக்கும்.

ருஷியர் தம்மூர்களுக்கு ஜர்மன் மொழிப் பெயர்களை அமைத்திருந்தனர். பிறகு தமக்கும் ஜர்மனியர்க்கும் போர் துவங்கியபோது தாம் பயன்படுத்திய ஜர்மன் மொழிச் சொற்களை அறவே நீக்கித் தம்மொழியினின்றே தமக்கெனப் புதிதாகச் சொற்கள் அமைத்துக் கொண்டனர். இங்ஙனம் ருஷியநாட்டினர் தமக்குப்போதுமான சொற்கள் இல்லாதிருந்தும் பின் பெரிதும் வருந்தித் தமக்கென சொற்கள் தம்மொழியிலேயே கண்டறிந்திருக்க, நந்தமிழரிற் சிலர் அரிய முழுமாணிக்கங்களாந் தீஞ்சுவைத் தமிழ்ச்சொற்களை விடுத்து ஓசையினிமை யில்லாச் சமஸ்கிருத மொழிச் சொற்களை நந்தனித்தமிழிற் சேர்த்து நந்தமிழின் இனிமையையும் பழமையையும் தாழ்த்த முயல்வதை என்னென்றுரைப்போம்!

இனிமேற் கூறியவர் கருத்துக்கிசைய, நாம் நமக்குரியவல்லா வடசொற்களை நந்தமிழிற் சேர்த்து வழங்குவதுபோலவே அவ்வக்காலத்துத் தமிழரோடு வந்து பழகும் சீனர், ஜப்பானியர், பிரஞ்சுக்காரர், ஆங்கிலர், அராபியர், முதலானவர் மொழிச் சொற்களையும் அதனோடு சேர்த்து வழங்கல் வேண்டுமென்றோ? இங்ஙனம் அவ்வக்காலத்துத் தோன்றும் வடமொழி முதலான நமக்குரிய வல்லாப் பிறமொழிச் சொற்களை நந்தமிழிற் கலந்து வழங்குவோமாயின், தமிழ் முழுதும் தன் இனிய சொற்களை இழந்து தன் உண்மைநிலை மாறிக், கன்னடம், தெலுங்கு முதலிய மொழிகளினுஞ் சீர்கெட்ட நிலையை எய்துமென்பது திண்ணமன்றோ. நந்தமிழைத் தனித்து வழங்கவும் எழுதவும் இயலுமென்பதை, நம்முன்னோரான மாணிக்கவாசகர் முதலான ஆசிரியரும் தாயுமானவர் முதலிய பெரியோரும் நன்கு உணர்ந்திருந்தும் தாமியற்றிய பாடல்களில் வடமொழிச் சொற்களைத் தமிழோடு சேர்த்துப்பாடியது என்னையோவெனின், வடநாடுகளில் இருந்த ஆரியர் அந்நாடுவிட்டுப் பெயர்ந்து தமிழ்நாட்டிற் புகுந்தபின், தமிழரும் ஆரியரும் ஒருமித்து வாழுநாளில் ஆரியர் வழங்கிய வடமொழிச் சொற்கள் தமிழினும், தமிழர் வழங்கிய செந்தமிழ்ச்சொற்கள் வடமொழியினும் கலந்து நிலைபெறுவவாயின. ஆரியர் மிக நெருங்கிப் பழகாத காலத்து எழுதிய தொல்காப்பியம், கலித்தொகை, புறநானூறு முதலிய அரியநூல்களில் ஆயிரத்துக்கு ஒன்றிரண்டு விழுக்காடு வடசொற்கள் ஓரோவிடத்து அருகிக் கலந்தன. பின் ஆரியர் நெருங்கிப் பழகப்பழகத் தமிழில் வடசொற்கள் சிறிது கூடக் கலந்தன. இக்காலத்தும் தமிழர் ஆங்கிலரோடு கலந்து பழகுவதால் ஆங்கிலச் சொற்களிற் பலவுந் தமிழிற் கலந்து காணப்படுகின்றன. முன்னொருகால் துருக்கர் அரசாண்ட காலத்து துலுக்குச் சொற்களிற் சிலவுந் தமிழிற் கலப்பவாயின. தமிழில் வடமொழிச் சொற்கள் மிகுதியாகக்காணப்படுவது போல், துலுக்குச் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் காணப்படாமையென்னையோ வெனிற் கூறுதும். ஆரியர் நடு ஆசியா என்னுங் குளிர் நாட்

டில் வறுமையில் துன்புற்றுப், பின் அதனைவிட்டுத் தமிழ்நாடு புகுந்து தமிழரை நெருங்கி யணுகி வாழ்ந்தனராகலின், அவர் சொற்கள் தமிழில் மிகவுங் கலந்தன. துருக்கரும் ஆங்கிலரும் அவர்போல் அத்துணை நெருங்கித் தமிழரோடு உறவாடாது வாழ்கின்றமையின், அவர்மொழிச் சொற்கள் மிகக்கலவாது, ஓரோவிடத்து மிக அருகிக் கலப்பவாயின. தமிழரோடு ஆரியர் கலந்து பழகத் துவங்கிய காலத்து இருவகுப்பாருஞ் சிறிதும் அழுக்காறின்றி மன ஒருமைப்பாடுடையராய்த் தமிழர் அவ்வாரியர் சொற்களையும், ஆரியர் தமிழர் சொற்களையுங் களங்கமின்றி எடுத் தாள்வாராயினர். ஆனால், இக்காலத்திலோ தம்மை ஆரியராகக் கருதியிருப்பவர் தமிழர்பால் அழுக்காறுடையராய்த் தமிழையும் தமிழரையும் மிகவும் இழித்துப் பேசுவதோடு, தமிழ் ஆரியத்தினின்றும் பிறந்ததாமெனவும் வாய்கூசாது கூறித் தமிழுக்குக் குறைவுதேடுகின்றனர். இங்ஙனம் நந் தமிழரோடு ஒற்றுமையின்றி முரண்பட்டு இழிவாகப் பேசும் பிறர் சொற்களை நாம் எடுத்தாள்வது நந்தமிழுக்கும் தமிழர்க்கும் இனி ஒரு பெருங் குறைவாம். இவ்வாறு நம்மையும் நங் தனித் தமிழையும் ஒவாது இழித்துக்கூறு நிற்கும் பிறரையும் அவர் மொழியினையும் உயர்த்திப் பேசிக் கொண்டு அலையுந் தமிழர் சிலரைத் தமிழர்எனக் கூறுதல் பொருந்துமோ?

இனி, இந்து சாதனத்தில் யாழ்ப்பாணத்துத் தமிழர் ஒருவர்தாம் தமிழ்வளர்ச்சியைப்பற்றி எழுதுகையில், ஆங்கிலமொழிச் சொற்களைத் தமிழோடு கலந்து எழுதுதல் ஆகாது என்று வற்புறுத்திக் கூறுகின்றார். அது நமக்கு மகிழ்ச்சிதருவதேயாயினும், அவர்தாமெழுதுந் தமிழ்க் கட்டுரையில் வடசொற்களைக் கலந்தெழுதுவது நமக்குப்பெரு வருத்தத்தைத் தருகின்றது. ஆங்கிலமொழிச் சொற்களை எடுத்துக்கலந்து தமிழின் தூய்மையைக் கெடுப்பது தகாதென்று வழக்காடுமிவர் ஆங்கிலத்தைப் போலவே தமிழுக்குப் புறம்பான வடமொழிச் சொற்களையும் எடுத்து வழங்கித் தமிழின் தூய்மையைக் கெடுப்பது நன்றாமா? அவர்தாம் தமிழ் வளர்ச்சி என்றெழுதிய கட்டுரையின் முதல் முப்பது சிறுவரிகளுக்குள் பாஷை, மனிதர், இருடிகள், அநேகர், சங்கம், சுத்தி, சரஸ்வதி, அவதாரம், இராஜாக்கள், வித்துவான்கள், நியமம், பிரமாணம், அங்கீகரித்தல், என்னும் வடசொற்களை எடுத்துச் சேர்த்து எழுதி யிருக்கின்றார். இன்னுமிங்ஙனமே அவர் தமது கட்டுரையில் நெடுக எடுத்துச் சேர்த்திருக்கும் வடமொழிச் சொற்கள் இன்னும் பலப்பல. இவ்வட சொற்களுக்கு நேரான செந்தமிழ்ச் சொற்களாகிய மொழி, மக்கள், முனிவர், பலர், கழகம், துப்புரவு, கலைமகள், பிறப்பு, அரசர்கள், புலவர்கள், முறை, மேற்கோள், ஏற்றுக்கொள்ளல், என்பன முறையே இருக்கவும், இவற்றை விடுத்து வடசொற்களை வீணே எடுத்துச் சேர்த்து எழுதுதல் ஆங்கில முணர்ந்தார்க்கு இவர் தாங்கூறும் குற்றத்தில் இவர் தம்மையும் வீழ்விக்கு மன்றோ ?

அங்ஙனமன்று, வடசொற்களைத் தமிழிற் கலந்து எழுதுவது இக்காலத்தில் வழக்கமாயிருக்கின்றது, ஆனால், ஆங்கிலச் சொற்களை அங்ஙனம் வழங்குவது வழக்கத்திலில்லை; அதனால் அதுகுற்றமாம் என்றுரைப்பராயின்; கூறுதும்: தமிழுக்குப் புறம்பான வடசொற்களைத் தமிழிற் கலந்தெழுதுவது பண்டைக்காலத்தில் இல்லாமல் பின்றைக் காலத்தில் உண்டாயிற்றென்பது பத்துப்பாட்டு, கலித்தொகை முதலான பண்டைச் செந்தமிழ் நூல்களையும், இராமாயணம், பாரதம், முதலான பின்றைத் தமிழ் நூல்களையும் ஒப்பிட்டு நோக்குவார்க்கு நன்கு விளங்கும். ஆகவே, பழைய காலத்திலில்லாமல், இடைப்பட்ட காலத்திற் றுவங்கிய வடமொழிக் கலப்பு அக்காலத்துப் புதிதாயிருந்து பின் வரவர வழக்கத்தில் வந்துவிட்டாற்போல, இக்காலத்திற் றுவங்கும் ஆங்கிலச் சொற் கலப்பும் இப்போது புதிதாய்த் தோன்றினும், தடை செய்யப்படாவிட்டால், இனி வரவர வழக்கமாய் வந்துவிடு மன்றோ? ஆகவே, புதியதா யிருந்தாலும் பழையதா யிருந்தாலும் பிறமொழிக் கலப்புத் தமிழ்மொழியை அழித்தலின், அதனைத் தடை செய்து தமிழைத் தூய்மையாகப் பாதுகாத்து வளர்த்தல் தமிழறிவுடைய ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையாம். ஆங்கில மொழிக் கலப்பை எளனஞ்செய்து அதனை விலக்க முன்வந்த அறிஞர் அங்ஙனமே வடமொழிக் கலப்பையும் எளனஞ் செய்து அதனையும் விலக்கித் தமிழைப் பாதுகாக்க முயலுதலே சிறந்த முறையாம்.

இனி, அவர் ஆரிய மொழி தேவர்களுக்குரிய தென்றும், தமிழ் மொழி மக்களுக்குரியதென்றும், அவ்விருமொழியும் முனிவர்களுக் குரியன வென்றும், எழுதி யிருக்கின்றார். இவர் கூறும் இக்கூற்றும் சிறிது ஆராயற்பாலதாம். இவர் கூற்றை உற்றுநோக்கின் மக்களினும் உயர்ந்தோர் முனிவரும், முனிவரினும் உயர்ந்தோர் தேவரும் ஆவரென்பது புலப்படும். அதனால், தாழ்ந்த நிலையிலுள்ள மக்கள் பேசுந் தமிழ்மொழி தாழ்ந்த தென்பதும், மிகவுயர்ந்த நிலையிலுள்ள தேவர்கள் பேசும் ஆரிய மொழி மிகவுயர்ந்ததென்பதும் அவர் கருத்தாகும். அவர் கருத்தின் படியே வைத்துக்கொள்வோமென்றாலும், தேவர்களுக்குரிய வடமொழிச் சொற்களைத் தாழ்ந்த நிலைக்கண் உள்ள மக்கள் எடுத்து வழங்குதல் பொருத்தமாமா? தேவர்களுக்குரிய அவ்வாரியச் சொற்களை மக்களுள் ஒருவராகிய தாம் தமது கட்டுரையில் எடுத்து வழங்குவது குற்றமன்றோ?

இனித் தேவர்களுக்குத் தாம் ஆரியமொழி வேண்டுமோ என்பதனை ஒரு சிறிது ஆராய்வாம். மக்களென்போர் அறியாமை யிருளால் கவரப்பட்ட உள்ளமுடையராதலால் அவர் தம்முள் ஒருவர் மற்றொருவ ருள்ளத்தில் நிகழ்வனவற்றை அறியமாட்டாதவரா யிருக்கின்றார். ஆகவே, அவர் தமதுள்ளத்திற் றோன்றும் எண்ணங்களைப் பிறர்க்குப் புலப்படுத்தவும், பிறர் உள்ளத்திற் றோன்றும் எண்ணங்களைத் தாம் தெரிந்துகொள்ளவும், சொற்களின் உதவியைப் பெரிதும் வேண்டி நிற்கின்றார். இனி, மிக

வுயர்ந்த நிலைக்கணுள்ள தேவர்களோ என்றால் அறியாமை யிருள் நீங்கி அறிவு விளக்கம் பெற்றுத் தத்தம் உள்ளங்களில் நிகழ்வனவற்றைத் தாமாகவே அறிந்துகொள்ளும் ஆற்றலுடையர்; அவர்களுள் ஒருவர் உள்ளத்திற் றோன்றிய எண்ணம் பிறர் உள்ளத்தில் உடனே புலனாகாநிற்கும். அங்ஙனம் இயல்பாக விளங்கும் உள்ளமுடைய தேவர்களுக்குச் சொற்களினுதவி சிறிதும் வேண்டப்படுவதில்லை. அவ்வாறிருக்கத் தேவர்களும் மக்களைப்போற் சொற்களின் உதவி கொண்டே, தம்முள்ளத்தில் நிகழ்வனவற்றை வெளியே புலப்படுத்துவராயின், மக்களுக்குந் தேவருக்கும் வேறுபாடென்னை? அதனால் தேவர்கள் ஆரியமொழியை மட்டுமே பேசுவரென்பது ஒரு சிறிதும் பொருந்தாது. சிற்றறிவும் சிறுதொழிலும் உடையாராகிய மக்கள் பொருட்டாகவே மொழிகள் தோன்றினவல்லது, பேரறிவும் பேராற்றலுமுடைய தேவர்கள் பொருட்டல்ல. மக்களுள்ளும் அருந்தவ ஒழுக்கத்தான்மிகுந்து அறியாமை நீங்கப் பெற்றார்க்கு எவ்விடத்தும் எக்காலத்தும் நிகழும் நிகழ்ச்சிகளெல்லாம் ஒருங்கே தோன்றுமென்றும், அது 'தவக்காட்சி'யா மென்றும் சிவஞானசித்தியாரில் "சமாதியான் மலங்கள் வாட்டிப், பொருந்திய தேசகால இயல்பகல் பொருள்களெல்லாம், இருந்துணர்கின்ற ஞானம் யோக நற்காண்டலாமே" என்னுந் திருப்பாட்டால் வற்புறுத்தப்படுதல் காண்க. மக்களினும் உயர்ந்த முனிவர்க்கே மொழிகளினுதவி வேண்டப்படாதாயின், அம்முனிவரினும் உயர்ந்த தேவர்க்கு மொழியினுதவி வேண்டப்படுமென்பது எத்துணையும் பொருந்தாததா யிருக்கின்றது! தமிழரையும் அவர் வழங்குந் தமிழ் மொழியினையும் தாழ்த்தும் பொருட்டாகவே ஆரியர் தம்மைத் தேவரெனவும், தாம் பேசும் ஆரிய மொழியைத் தேவமொழி யெனவும் உயர்த்திப் பேசிப் புராணங்களில் பொய்க்கதை கட்டிவிட்டார்கள். அக்கதையின் பொய்த் தன்மை புணராது நந்தமிழ்ப் புலவரிற் சிலரும் அதனை மெய்யெனக்கொண்டு, தம்மையும், தம் அருந் தமிழ் மொழியையும் தாமே இழிவுபடுத்தி, ஐயகோ! ஏமாந்து போயினரே! இனியேனும், அவர்கள் அப்பொய்ம்மை புணர்ந்து தமக்கும் தமது செந்தமிழ் மொழிக்கும் ஆக்கந் தேடுவாராக.

---

## சந்நியாசம்—மோட்சநிலை.

(141-ம் பக்கத் தொடர்ச்சி)

உன் இந்திரியங்களை நிக்கிரகம் செய்யும் பிரத்தியாகாரம் என்னும் யோகத்தால் கேவல சின்மாத்திரமாக இருப்பதுவே எங்கும் பொங்கிய ஏக ரஸ பிரம சமாதி யென்னும் மோட்சமாம். சுக துக்கங்களற்ற பரிபூரண சமாதியிலிருப்பவனே முக்தன் என்னப்படுவான். எல்லாப் பூதங்களிலும் பாவனையை விட்டு வெளிப்பட்டவன் சந்திரனைப்போல நிர்மலன். அவன் சூரியனைப்போலப் பிரகாசிப்பான். செய்ததும், செய்கிறதும், செய்யப் படுவதுமான கர்மங்கள் குலத்தாலும், செல்வத்தாலும், தேகவியலாலும்,

தொழிலாலும் வரும் கன்மங்களை ஞானாக்கினியால் தகித்து வெளிக்கிளம் பினவனே முக்தன். மற்ற வித்தைகள் எல்லாம் அப்பியாசம் பண்ணாமை யிருந்தால் அழியும். ஞான கலை மாத்திரம் உள்ளே விருத்தியாகும். விஷய போகங்களில் ஆசையுள்ளவரைக்கும் ஆன்மா ஜீவன் என்னப்படுவான். அந்த ஆசை அவிவேகத்தினாலுண்டானதேயன்றி ஆன்மாவிற்கு இயற்கை யானதல்ல. விவேகத்தால் ஆசை ஒழிந்தால் ஜீவாவஸ்தை ஒழிந்துபோ கும். அப்போது அவன் பிரமம் ஆய்விடுவான். நிராமயனாய் மிருத்யு வைக் கடந்து நிற்கும் அவனுடைய பரிபூரணானந்தத்துக்கு ஒப்புயர்வில்லை. உலக வாசனையைக் கடந்து சம்பூர்ண சைதன்ய மயமாய் நிற்கும் அந்த யோகியின் பரமானந்தத்துக்கு எதையும் உபமானமாகச் சொல்ல முடி யாது. சாஸ்திரார்த்தங்களி லுள்ள வாசை யொழிந்து பற்பல ரசங்களு டன் கூடின பற்பல காரியங்களில் சந்தோஷமற்றுச் சங்கற்ப விகற்பங் களை விட்டவன் சாசுவதமான சுக சொரூபமாக நிற்பான். அவன் வர்ணா சிரம சாஸ்திரக் கட்டுகளை யறுத்துக்கொண்டு கூட்டைவிட்டு வெளிப்பட்ட சிங்கத்தைப்போல விளங்குவான். விஷய வாசனை யென்கிற வியாதியை ஞான ஔஷதத்தினால் தொலைத்து விளங்குகிற அந்த யோகி சரத்கால ஆகாயம்போல நிர்மலமான பிரகாசத்தைப் பெறுவான். ஆழமானதும் நிர்மலமாயுள்ளதுமான மடுவில் காணப்படும் மலையின் நுனியைப்போல விளங்குவான். எல்லாக் கன்மங்களுமற்று நித்தியத் திருப்தியுள்ளவனான அவன் புண்ணியத்தாலாவது பாவத்தாலாவது மற்றெதனாலாவது கட்டுப் படமாட்டான். எந்தக் கன்மத்தாலும் யோகியின் மனம் விகாரம் அடை யாது. ஜனக்கூட்டத்தில் சஞ்சரித்தும், குதித்தும், ஆடியும், விளையாடியும், பாடியும் திரிவான். அவற்றால் அவன் யாதொரு கெடுதியையும் அடை யான், இதுவே மோட்ச நிலையாகும். இதை யடைந்தவன் ஜீவன் முக்த னென்று சாஸ்திரங்கள் வியந்துகூறும். அறிவிற் சிறந்த பெரியோரும் புகழ்ந்து மகிழ்வார்கள்.

## ஞானம்.

“தத்வமசி” என்னும் வாக்கியார்த்தமாகிய ஜீவாத்ம பரமாத்ம ஐக் கிய ஞானமே முத்திபெறுவதற்குக் காரணமாம். தைத்திரீய சுருதி ஞான மொன்றினாலேதான் முத்தி கிடைக்குமென்று கூறுகிறது. பிரமத்தை யறிந் தவன் எல்லாவற்றுக்கு மேலான அப் பிரமத்தை யடைவான். அந்தப் பிரமத்தின் சொரூபமாவது எக்காலத்துங் குறைவுறாத ஞானவடிவமாம். அது எங்கும் நிறைந்திருப்பதால் முடிவற்றதாயுள்ளது. இந்தப் பரம் பொருள் எல்லாவற்றினும் நிறைந்து நின்று அவை யுணரும்படி செய்கி றது. அஃதின்றேல் பத்தாத்மா (பந்தத்தில் சிக்கிய ஆன்மா) ஒன்றை யும் உணராது என அறிகிறவன், அந்த ஞான சொரூபத்துடன் ஒன்றிக் கலந்து சகல கர்ம பலன்களையு மடைவான். “சரீரங்களெல்லாவற்றிலும் சரீரமின்றியும் சரீரமில்லாத பொருள்களில் சரீரமுள்ளதுமாய் நிற்பதும்,

எல்லாவற்றுக்கும் மேலானதும், எங்கும் நிறைந்ததுமான இந்தப் பிரமத்தை யறிபவன் சோகத்தை யொழிப்பான். நல்லொழுக்கமுள்ளவன் அஃதில்லாதவன், பொறுமையுள்ளவன் அஃதில்லாதவன், மனத்தை யடக்கினவன் அடக்காதவன், இவர்கள் இந்தப் பிரமத்தை யடையமாட்டார்கள். பிரமஞானமொன்றே யதைப் பெறுவதற்குக் காரணமாகும். ஆதலால் அந்தப் பரமஞான மொன்றையே தேடிக்கொள்ளவேண்டும். ஆத்மா ஒருவனே எல்லாவற்றிலுமிருந்து நன்மையை யளிக்கின்றது என்று அறிகிறவன் குறைவற்ற சாந்தியைப் பெறுவான். இதைத்தவிர வேறில்லை" என்று கடவல்லி சுருதி கூறுகின்றது. முண்டகோபநிடதம் "கண்டமில்லாததும், ஞானவடிவானதும், முத்தியை யளிப்பதுமான பரமான்மா ஒன்றே சத்தியப் பொருளாதால் அறிஞர் அதனையே அறிவார்கள். அதனை விளக்கும் உபநிஷத்துக்களையே பயிலவேண்டும். இதையன்றி வேறு விவகாரங்களை விட்டொழிக்கவேண்டும். உலகத்தில் ஓடுகிற ஆறுகளெல்லாம் சமுத்திரத்தில் பாய்ந்து தத்தம் பெயர்களை ஒழித்துச் சமுத்திரமாகவே நிற்பதுபோலப் பிரமத்தை யடைந்த ஆன்மாவும் நாமரூபங்களொழிந்து பிரமமாகவே நிற்கும். பரமான பிரமத்தின் அபரோட்ச ஞானத்தை யறிகிறவன் பிரமமாகவே ஆய்விடுவான். இதில் சந்தேகமில்லை" என்று கூறியது.

அமிர்தபிந்தூபநிஷத் "மாயா சம்பந்தமற்றதும், கண்டமின்றி எங்கும் நிறைந்ததுமாயுள்ளதும், அசைவு முதலிய கிரியைகளில்லாததுமான பிரமம் நானே யென்று அறிகிறவன் அந்தப் பிரமமே யாய்விடுவான் என்பதில் சந்தேகமில்லை" என்று கூறியது. கைவல்லிய சுருதி "உமாகாந்தனும், எல்லாவற்றிற்கும் ஈசனும், எல்லாவற்றிற்கும் பிரபுவும், திரிநேத்திரனும், காளகண்டனும், மிகச் சாந்தனுமான இப்பொருளை விடாது தியானித்துச் சிந்திக்கிறவன் சர்வ பூதங்களுக்கும் சாட்சியைப்போல உதாசீனனுயிருந்து வரும் சிவமாகிய அந்தப் பிரமத்தையே அடைவான். ஆத்மா சர்வ பூதங்களிலுமுள்ளதாகவும், பூதங்களெல்லாம் ஆன்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்டதாகவும் நன்ருயுணர்ந்தவன் அந்தப் பொருளை யடைவானேயன்றி மற்றவன் அடையமாட்டான்" என்று கூறியது. ஜாபாலோபநிடதம்-"கண் காது முதலிய புற இந்திரியங்களை அடக்கினவனும், மனமுதலிய வுட்புலன்களை யடக்கினவனும், விஷயங்களில் உபேக்ஷையுள்ளவனும், சீதோஷ்ணங்களைச் சகித்திருப்பவனும், பேதபுத்தியில்லாதவனும், மிகச் சிரத்தையுள்ளவனுமான ஞானி அகண்டமாகிய பரமான்மா நானேயென்று அறிந்துகொள்வான். ஒன்ருகவுள்ள ஆன்மா எல்லாவற்றிலும் வியாபகமாக இருப்பதால் அவன் அந்தப் பிரமமே யாவான்" என்று கூறியது. "நானே பரமான்மா"வென்று அறிகிறவன் உலகப் பொருள்களில் சிறிதும் ஆசைவைக்கமாட்டான். ஆதலால் ஒன்றைப் புசிப்பதற்காவது அதை விரும்பியாவது சரீரத்துக்குத் தொங்கி

ரவைக் கொடுக்கமாட்டான். "பிரமமென்பது சப்த ஸ்பரிசம் ரூபம் ஒன்றுமில்லாதது. ஆயினும் அது எக்காலத்துங் குறைவை யடையாது. ரஸம் கந்தம் இவைகளில்லாததாயினும் நித்தியமாகவும் ஆதியந்த மற்றதுமா யிருக்கின்றது. இந்தப் பிரமத்தைச் சிரவண முதலியவற்றால் அறிகிறவன் ஜனனமரண ரூபமான மிருத்தியுவென்ற சமுசாரத்தினின்றும் விடுபடுவான். ஞானமென்ற நெருப்பானது சுபம் அசுபம் என்ற கட்டைகளை எரித்து ஒழித்துவிடுகின்றது" என்று வேறு சுருதிகள் கூறின. "சாஸ்திரங்களில் தேர்ந்த நல்லறிவுடையவன் கருமங்களினால் கட்டுப்படான். மெய்யறிவு பெறாதவனைத் துக்கங்கள் சூழ்ந்துகொண்டு பிரமத்தை யடையவிடாவாம். அவன் துக்க ரூபமான சம்சாரத்தில் புகுந்து நெருப்பினால் தகிக்கப்படும் வத்துக்களைப்போலச் சிறப்படையமாட்டான்" என்று மனு கூறினார். "நெருப்பு நாற்புறமுஞ் சூழ்ந்துகொண்டு கட்டைகளைத் தகிப்பதுபோல ஞானமாகிய நெருப்பு கர்மங்களை யெல்லா மெரித்துவிடும்" என்று பகவத்கீதையில் கண்ணன் கூறினார்.

சுருதிகள் கூறினவென்று யாமெடுத்துக்காட்டிய ஞானத்தைப் பக்தி சிரத்தையுடன் குருமுகத்தாலுணர்ந்துகொள்ளவேண்டும். ஞானோபதேசம் செய்கிற குருவைப் பரபிரம சொரூபமாகவே கருதி வழிபடவேண்டும். அந்தக் குரு பிரமஞானத்தை யடைந்தவரா யிருக்கவேண்டும். அங்ஙனம் தகுந்த குருவைத் தேடியடைந்து சோம்பலும் வெட்கமுமில்லாமல் பணிவிடைகள் செய்து, அவரை மனமுவப்பக்கண்டு அவரிடம் ஞானோபதேசம் பெறவேண்டும். அவ்வாறு ஆராய்ந்து செய்வதாலன்றிச் சாஸ்திர வாராய்ச்சியான்மட்டும் மெய்ஞ்ஞான முதிக்கமாட்டாது. இந்தப் பிரமஞானத்தைப் பெரும்பொருட்டே ஆன்மாவுக்கு மனித சரீரமுண்டாயிற்றென்று கருதவேண்டும்.

முற்றிற்று.

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## ப்ரகாசமாகு.

மேல் நாட்டாரின் சேர்க்கையினால் நாம் அவர்களது குணங்களைக் கொஞ்சமாயும் தோஷங்களை அதிகமாயும் பின்பற்றி யிருக்கிறோம். நமது முன்னோர்களின் நாகரிகத்தின் முக்கிய உத்தேசமானது, ஆத்மவிசாரமும் ஆத்மலாபமுமாகும். அவர்கள் சீக்கிரம் சந்தோஷமடையக் கூடியவர்கள். அவர்களுக்கு வேண்டியவைகள் மிகவும் சுவல்பம். அவர்கள் சாதாரண ஆகாரம் சாப்பிட்டாலும் சாதாரண வஸ்திரம் உடுத்திக்கொண்டாலும் அவர்களது எண்ணங்கள் மேலானவைகளாக விருந்தன. அவர்களது அந்த மேலான எண்ணங்களின் காரணமாகவே அவர்களா லியற்றப்பட்ட எண்ணிக்கையற்ற கிரந்தங்கள் மூலமாக நாம் லாபமடைந்து வருகிறோம். மஹாபாரதம், ராமாயணம், ஷட்தர்சனம் (இதிஹாஸ் மீமாம்ஸாதி) உப

நிஷத், முதலிய கிரந்தங்கள் கோட், பூட் (Coat & Boot) அணிபவர்களால் செய்யப்பட்டவையல்ல, ஆனால் கோவணத்துடன் காட்டில் வசித்து தான்யங்களை உட்கொள்ளும் புலவர்களால் இயற்றப்பட்டவையே, அவர்களது இந்த சுய நலமின்மையை நாம் அடியுடன் மறந்துகொண்டு வருகிறோம். மற்றவர்களைப்பற்றி யென்ன? பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் படிக்கும் சிறுவர்களையும், புலவர்களையும் பாருங்கள். வெயில் நாட்களிலும் அவர்கள் சரீரத்தை மூடுவதற்கு 3 துணிகள் வேண்டி யிருக்கின்றன. எண்ணெய்யும் தைலமும் வேண்டும். சீப்பு கண்ணாடி யில்லாமல் அவர்கள் வேலைகள் நடைபெறமாட்டா. எந்த சவுக்காரம் என்னும் பெயரை நமது முன்னோர்கள் கேட்டே யிருக்கமாட்டார்களோ அந்த சவுக்காரம் இப்பொழுது இவர்களுக்கு மாதத்திற்கு எத்தனை கட்டிகளோ தேவையா யிருக்கின்றன. கல்வி கற்கும் பிரம்மசாரிகள் எவ்வித ஆடைகள் அணியவேண்டுமோ, எவ்வித நித்ய கர்மானுஷ்டானங்கள் செய்ய வேண்டுமென்று ஸ்மிருதிகளில் எழுதி யிருக்கின்றதோ, அதற்கு நேர் விரோதமாக இப்பொழுது பார்க்கிறோம். ஆத்மசக்தி குறைந்து கொண்டு வருகிறது. பாரதம்போன்ற ஏழை தேசத்திற்கு இதனால் ஏற்படும் கெடுதல் சொல்லத்தரமன்று. சாரமற்றதாயிருந்தும்கூட, எவர்கள் மோஸ்தரில் (Fashion) விழுந்து வீண்பணச் செலவு செய்கிறார்களோ அவர்களை ஒருவிதத்தில் பைத்தியக்காரர்கள் என்று சொல்லவேண்டும். ஏனெனில் புத்திமான் இல்லாவிட்டாலும் ஞானமுள்ள எந்த மனிதனும் பங்குனி சித்திரைமாதங்களில் பாரதபூமியைப்போன்ற உஷ்ண தேசத்தில் பூட்ஸ், கால் சட்டை, மேல்சட்டை, மேஜோடு (Stockings) டை, காலர், பனியன், ஷர்ட்டு, வேஸ்டு கோட் முதலிய உடை தரித்துக்கொண்டு உஷ்ணத்தினால் அவதிப்படமாட்டான். மனிதனுக்கு மரியாதை அவனது குணங்களால் ஏற்படுகிறது. கேவலம் துணிமணிகளால் இல்லை.

ஈசுவர் சந்திர வித்யாசாகர் மஹாதேவ கோவிந்தரானடே, லோகமான்ய திலகர் இவர்கள் வெளிவேஷத்தில் ஒன்றும் இல்லாவிட்டாலும் (சாதாரண மனிதர்கள்போல் ஆடை உடுத்தி யிருந்தாலும்) எவ்வளவு பூசிக்கத்தகுந்தவர்களா யிருந்தார்கள். அன்னியர்போல் ஆடை தரித்தலையும் அவர்களது நடவடிக்கை முதலியவைகளை பின்பற்றுதலை விட்டு விடும்படியும், ஆடம்பரமில்லாம லிருக்கும்படியும், உயர்ந்த எண்ணங்களுடன் தனது ஆத்மாவை உன்னதமாகும்படியும் பாரததேசத்துத் தற்கால ஸ்திதி சொல்லிக்கொண்டிருக்கிறது.

சாதாரண உணவினால் சரீரம் புஷ்டியாகக் கூடுமானால் பஞ்சபக்ஷ்ய பரமான்ன ஸகிதம் உணவு சாப்பிட்டு வீணாக ரோகத்தினால் பீடிக்கப் படாதே. முரட்டு வஸ்திரம் குடுத்துணி உடுத்துவதால் சரீரப் பாதுகாப்பு ஏற்படுமானால் விலை யுயர்ந்த ஆடைகள் உடுத்தி ரூபாயைக் கரியாக்காதே. சுய நலப் பிரியர்களின் இவ்வித நடத்தைகளைப் பார்த்து சாதாரண ஜனங்களும் இவ்வித வீண்செலவு செய்வதால் தேசத்திற்கு மிகவும் கெடுதி ஏற்

படுகிறது. நீங்கள் ஸ்வராஜ்யம் விரும்புகிறீர்கள். நல்லது, முதலில் நீங்கள் ப்ரகாசமாகுங்கள். உங்கள் மனதை யடக்கியாளக் கற்றுக்கொள்ளுங்கள். பீடன், மோடார், தோட்டம், பங்களா, விலையுயர்ந்த வஸ்துக்கள் பணக்குவியல் இவைகளிருப்பதினாலேயே ஒருவனும் ப்ரகாசமாகமாட்டான். அதற்கு ஆத்ம சுத்தியும் ஆத்மவிசாரமும் வேண்டி யிருக்கிறது. ஆடம்பரமில்லாம லிருப்பதினாலேயும், உயர்ந்த எண்ணங்களுடனிருப்பதினாலுமே ஆத்மசுத்தி உண்டாக முடியும்.

மேல் எழுதிய வியாசம் சென்னையில் பிரசுரமாகும் "ஹிந்தீப்ரசாரக்" என்னும் பத்திரிகையி லிருந்து நமதானந்தனுக்காக எடுத்தெழுதப் பட்டது.

பா. அ. சங்கர நாராயண சர்மா.

குறிப்பு:—இச் சுருக்கமான வியாசத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்கள், நம் தாய் நாடு பூர்வீக உன்னத நிலையை யடையவேண்டும், நம் சந்ததியார் முன்னேற்ற மடையவேண்டும் என்று கோரும் ஒவ்வொருவரும் நன்ருகக் கவனிக்கவேண்டிய விஷயங்கள் — இவற்றை நன்கு கவனித்து மனதில் வைத்து இவற்றின்படி நடக்கும் அறிவாளிகளே பாரத புத்திரர் என்ற நாமத்திற்குத் தகுதி யுடையவர்களாவார்கள்.



பத்திரிகாசிரியர்.

## பிழை திருத்தம்.

கடந்த ஐப்பசி சஞ்சிகையில் 148-வது பக்கம் உள்ள "S. V. தேவராஜ ஐயங்கார்" என்ற கையொப்பத்தை "S. V. வரதராஜ ஐயங்கார்" என்று திருத்திக்கொள்ளக் கோருகிறோம். பத்திரிகாசிரியர்.

---

## மறுபிறப்பு.

### நம்மவர்க்கோர் எச்சரிக்கை.

புரட்டாசி மாதம் வெளியான நமது சஞ்சிகையில் "மறுபிறப்பு" என்பதைப்பற்றி பீடன் என்பவர் எழுதிய வியாசத்தை யாவரும் வாசித்திருக்கலாகும். அதற்கு மறுப்பாக இலங்கை வாசியாகிய புலி—எம்—இஞ்ஞாசி பர்னன்டஸ் என்ற கிருஸ்தவ ரொருவர் "மறுபிறப்பென்பது இறுகிறுப்பே" என்ற தலைப்பெயரிட்டுச் சில ஆபாசங்களை யெழுதி யனுப்பினார். இந்தப் புலிதான் முன்பு 'நல்லாயன்' பத்திரிகையில் நாம் கிருஸ்து மதத்தைத் தூஷிப்பதாக அபாண்டம் கூறி, சில ஆபாசங்களை வரைந்து முடிவில் ஆனந்தபோதினியை எல்லா கிருஸ்தவர்களும் பகிஷ்கரிக்க வேண்டுமென்று கட்டளை பிறப்பித்தது — அந்தோ எல்லா கிருஸ்தவர்களும் இப்புலியைப்போலவே வீண் மதத்துவேஷமும் உண்மையை யேற்றுக்கொள்ளச் சம்மதியா மனமும் உடையவர்களா யிருந்தாலன்றோ அப்படி நடக்கும்.

'கர்மம் மறுபிறப்பு' என்ற கொள்கை நமது மதத்தில் ஒருவராலும் மறுக்க முடியாவிதமாய் நிலை நாட்டப்பட்டு, அனுபவமாய் மகான்களால் உண்மையென அறிந்து நிரூபிக்கப்பட்டு எண்ணிறந்த காலமாயின. மேல் நாட்டிலிருந்தவர்களிலும் இருப்பவர்களிலும் பாரபட்சமின்றி ஆராய்ச்சி செய்த அறிவாளிகளாகிய சாஸ்திரிகளும் அதை யொப்புக்கொண்டே யிருக்கிறார்கள். ஒப்புக்கொள்கிறவர்கள் !இப்போது மிருக்கிறார்கள். அப்படியிருக்க மூர்தாநாள் முளைத்த கிருஸ்துமத சித்தாந்தத்தை நம்பி ஒருவர் அதைத் தமது குதர்க்கத்தால் மறுக்க முயல்வது நகைப்புக்கிட மன்றி வேறில்லை. அவற்றை நமது சஞ்சிகையில் பிரசுரித்துக் கண்டிப்பது வீண் ஆயாசமான வேலையன்றி வேறில்லை. நாணலைக்கொண்டு மலையை யசைக்க முயலும் புத்திசாலிக்கு நற்புத்தி புகட்டுவது வீண்வேலை. கிணற்றுத் தவளைக்கு யாவற்றினும் பெரிய கடல் ஒன்றிருக்கிறதென்று எவ்வளவு கூறினாலும் அது கிணற்றிலேயே கிடக்குமட்டும் அந்த உண்மையை நம்பாது. நிரீச்சுரவாதியோடு எப்படி வாதம் செய்யலாகாதோ அவ்வாறே இத்தகைய வீண் வாதக்காரரோடு விவகாரம் வைத்துக் கொள்ளலாகாது—இத்தகைய மறுப்புக்குச் சமாதானம் கூறி இனிமேலா மேற்கண்ட மறுபிறப்புச் சித்தாந்தம் நிலை நிறுத்தப்படப்போகிறது? அதன் உண்மையைப் புரட்டாசி சஞ்சிகையில் பூரணமாய் நாம் வெளியிட்டிருக்கிறோம்.

இப்போது நம்மவர்க்கு நாம் எச்சரிக்கை செய்வதாவது — கிணற்றுத்தவளை தன் எல்லைக்குள் "இக்கிணற்றைவிடப் பெரிய நீர் நிலை யில்லை. கடல் உண்டென்பது பொய்—நம்மவரில் யாரும் அதைக் கண்டதில்லை" என்று பறை யறைந்துகொண்டு களிக்கட்டும்—நாம் அதைச் செவி யேற்கலாகாது. பொருட்படுத்திக் கவனிக்கவுமாகாது என்பதே. இத்தகைய விஷயங்களில் செலவிடுங் காலம் மிக வீணாக்கப்பட்டதே யாகும். நாம் அவ்வீண் விஷயத்தை வெளியிடாததற்குக் காரணங்கூற இவ்வளவேனும் வரைய நேர்ந்தது. மற்றபடி ஆனந்தபோதினியின் சிறுபாகத்தையேனும் இதற்காக விட நேர்ந்ததற்கு விசனமே.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(155-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஏ பார்த்த! இடைவிடாது பரமான்மாவையே சிந்திக்கும் அப்பியாச முடையதும், அன்னிய ஜடசம்பந்தமான விடயங்களில் செல்லாததுமான மனத்தால் ஒருவன் பரமான்மாவான திவ்விய புருஷனையே யடைகிறான். நதிகள் தமது நாமரூபங்கள் குணங்கள் யாவும் இழந்து கடலில்கலந்து ஏகத்துவத்தை யடைவதுபோல் அவன் அந்தரியாமியாகிய பரமபுருடனை அபேதமா யடைகிறான்.

(அர்ச்சுனனது ஏழு கேள்விகளுக்கும் விடையருளிய பகவான் அதிகாரிகளடைதற்குரிய அப்பரம புருஷனது விசேடணங்களை அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! கருமயோகத்திலும் ஞானயோகத்திலும் செல்லத் தகுதியுடைய சித்தத்தைப் பரமாத்மாவின்பால் நன்றாய்ச் செல்லும்படி செய்து வேறொரு விஷயத்தையு மடையாதோர், சூரியமண்டலம்போல் விளங்கும் பரமான்மனை யல்லாது வேறொன்றினையு மடையார்கள். அப்பரமான்மாவின் சுபாவத்தையும் அவரை யடையும் விதத்தையும் இனிக்கூறுதும் கேட்பாயாக.

திரிகாலங்களிலு முள்ள எல்லா வஸ்துக்களையும் அறியும் சர்வக்ஞனும், அநாதியாயுள்ளவனும், யாவற்றையும் தன் ஆணைவழி நிறுத்துபவனும், சூக்கும பதார்த்தங்களுக்கெல்லாம் அதி சூக்குமமாயுள்ளவனும், (பிராணிகளின் கர்மங்களுக்குத் தக்கபடி) எல்லா பயன்களையும் அளிப்பவனும், யாவர்க்கும் சிந்திக்க வரிதானவனும், எங்குமுள்ள இருளை நீக்கிய இளஞ் சூரியன்போல் பிரகாசமுடையவனும் ஆகிய இத்தன்மைய பரம புருடனை அடைதற்குரிய அன்புடையவர்கள், மரணகாலத்தில் ஏகாக்கிர சித்தத்தோடு புருவமத்தியில் தமது பிராணவாயுவை நிறுத்தித் தேகத்தினின்றும் வெளிப்படுவோர்களாயின், இந்த யோகத்தால் அந்தப் பரம புருஷனோடு பொருந்துவர். அதன் பொருளை யின்னமும் கூறுவோம் கேட்பாயாக.

(தியானகாலத்தில் ஏதேனும் ஒரு நாமத்தால் சிந்திப்பதோ அல்லது இன்ன நாமத்தால்தான் சிந்திக்கவேண்டுமென நியமமுளதோ என்றுண்டாகும் சங்கையை யொழிக்க, பிரணவ மந்திரத்தாலேயே சிந்திக்க வேண்டுமென பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ அர்ச்சுன! வேத முணர்ந்தவர்கள் எந்தப் பிரணவத்தை அழியாததென்று போற்றுகின்றனரோ, எந்தப் பிரணவத்தை ஆசையை யொழித்த யோகிகள் அடைகின்றனரோ, எந்தப் பிரணவத்தை யடைய விரும்பினவர்கள் காமாதிகளை யிழந்து பிரம்மசரியத்தை யநுஷ்டிப்பார்களோ, எந்தப் பிரணவம் பரம்பொருளே யாகுமோ அதைச் சுருக்கமாகக் கூறுதும் கேட்பாயாக.

ஏ பார்த்த! எவன், சுரோத்திரம் முதலிய ஐந்து இந்திரியங்களையும் சத்தம் முதலிய தத்தம் விடயங்களைக் கிரகிக்க வொட்டாது செய்து மனதை இருதயத்தில் நிறுத்தி, பிராணவாயுவைச் சிரசிலேறும்படிச்செய்து யோகத்திலிருந்து, ஏகாக்ஷரமாகிய பிரணவத்தை யுச்சரித்துக்கொண்டு, மனம் வேறொரு நாட்டமுமின்றி என்னையே சிந்தித்துக்கொண்டு தேகத்தைவிட்டு நீங்குகிறானோ, அவன் நித்தியமான என்னையே யடைவான்.

இப்போது கூறியபடி ஒருவருடம் ஆறுமாதம் என்று காலவரை யெண்ணமல் எப்பொழுதும் பரமேசுவரனுகிய எனது சொரூபத்தை சிந்தியா நிற்கும் புருஷர்களுக்கு நான் சுலபமாகக் கைவசமாவேன். அத் தகையோர் நாசமுடையதாகிய ஜன்மத்தை யடையமாட்டார்கள். (அதா வது, அத்தகையோர் பிரம்மலோகமடைந்து மேலான போகங்களை யனுப வித்து, முடிவில் பிரம்மஞானமடைந்து கைவல்ய முத்தி யடைவார்களாத லால் பிறப்பதும் மறிப்பதுமாகிய இக்கன்ம ஜன்மத்தை யடையார்கள் என்பதாம். அவர்கள் பிரம்ம லோகத்தில் சுத்தமான அந்தக்கரண முடையவர்களாகச் சேர்வதால் பிறப்பு இறப்பிற்குக் காரணமாகிய கர்மங் களில் பிரவர்த்தியார்கள்.)

(இப்போது பகவான் மேற்கண்டவாறு பிரமலோக மடைவோர் மட்டுமே மீண்டும் ஜனியா நெறியடைவார்களென்றும், பரமேசுரத்தியான மில்லாமலும் ஆன்மசாட்சாத்கார மடையாமலும் பிரமலோக மடைவோர் மீண்டும் ஜனிப்பர் என்பதைப்பற்றியும் அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! தம்மால் முன் ஜன்மத்தில் செய்யப்பட்ட வினைகள் அநுபவித்துத் தீர்ந்தபோது பிரம்மலோக மடைந்தோரும் மறுபடி ஜனிப் பார்கள். என்னை யடைந்த புருஷரே மீண்டும் பிறவாத நெறியை யடைந்தோராவர்.

(பிரம்மலோகமடைகிறவர்களில் இருவிதமுண்டு. பகவான் கூறிய படி ஈசுர உபாசனையா லடைபவர்கள் ஒரு சாரார். அவர்களே மீண்டும் பிறப்பிறப்படையாமல் பிரம்மஞானம் பெற்று முத்தி யடைவோர். இவ்வாறு அடையும் முத்திக்கு கிரமமுத்தி என்று பெயர். மற்றொரு சாரார் யாக எக்யாதிக் கிரியைகளால் பிரம்மலோக மடைவோர். இவர் கள்தான் மீண்டும் ஜனிப்பார்கள்.)

பிரம்மலோகம் முதலிய சர்வ உலகங்களும் காலத்தால் பரிச்சின்னப் படுபவை. அதாவது நம்மைப்போல் ஆயுள் நிர்ணயமுடையவை. அந்த காலம் முடிந்தால் அவை நசிக்கும். அந்த ஆயுள் பிரமாணம் பின்வரு மாறு:—

சதுர்யுகம் ஆயிரமாயின் பிரம்மாவிற்கு ஒரு பகலாம். அவ்வாறே ஆயிரம் சதுர்யுகம் ஓர் இரவாகும். அதாவது 2000 சதுர்யுகம் பிரம்மாவிற் கொருநாள். இப்படிப்பட்ட நாட்கள் 15 கொண்டது ஒரு பட்சம். 2 பட்சம் 1 மாதம். 12 மாதம் ஒருவருடம். இத்தகைய நூறு வருடம் பிரம்மாவுக்கு ஆயுளாகும். அதன் முடிவில் பிரம்மா நாசத்தை யடைவர்.

இந்திராதி தேவதைகள் பிரம்மாவினும் குறைந்த ஆயுளுடையோ ராவர். பிரம்மாவின் ஒரு பகலே இவர்களுக்கு ஆயுளாகும். இரவு அவ் வுலகங்களுக்குப் பிரளயமாம். ஆகையால் இவர்களும் இவர்கள் போகங் களும் அநித்தியமே. இதனுல் இவ்வுலகங்களிற் செல்வோரனைவரும் மீண்டும் ஜனித்தே தீரவேண்டும் (மேலே கூறியபடி கிரமமுத்தி யடை வோர் தவிர) என்றுணரற்பாலது. (தொடரும்) சீடன்.

## பொறுமை.

பொறுமை என்றால் சாந்தம், அமைதி என்று பொருள்படும். இது மாந்தரிடத்தில் அமையவேண்டிய இன்றியமையாத குணங்களில் ஒன்று. கோபத்தை யறவே யொழித்தவர்க்குத்தான் அதிசுலபமாகப் பொறுமை ஏற்படும். எப்போது பொறுமை ஏற்பட்டதோ அப்போதே நாம் சுகம் அடைந்த மாதிரிதான். நாம் செய்யப்புகும் ஒவ்வொரு காரியத்தையும் பொறுமையோடே செய்தல்வேண்டும். அவசரப்பட்டுச் செய்யலாகாது. அப்படிச் செய்யின், காரியம் விக்கினமாய் முடியும். அதனால் நாம் மனதில் கோரிய எண்ணம் பூர்த்தியாகாமல் முடிகிறது. அதனால் மனத்தாங்கல் உண்டாகும். அப்போது நொந்துகொள்வதில் பயனில்லை. பொறுமையோடு செய்தால் சகலமும் கைகூடும். எவ்வளவு கஷ்டங்கள் தோன்றினும், இறுதியில் சூரியனைக்கண்ட பனிபோல் மறைந்துவிடும். அப்படி யாராகிலும் பொறுமையினால் பிரக்கியாதி பெற்றிருக்கிறார்களா என்று விசாரிக்கப்புகின், பொறுமையே பூஷணமாகக்கொண்ட கீழ்வரும் சிகாமணிகள் சரித்திரங்களா லறியலாம்.

முதலாவது அரிச்சந்திரன் தனக்கு விஸ்வாமித்திரரால் ஏற்பட்ட சகல கஷ்டங்களையும், — அதாவது பதியிழந்தார், பாலனையிழந்தார், நிதியிழந்தார், போகங்கள் யாவுமிழந்தார், ஆகிய இவைகளை — பொறுமையுடனே சகிக்கவில்லையா? ஆனால் சத்தியமும் பொறுமையும் மாத்திரம் இழக்கவில்லையல்லவா! இறுதியில் சத்தியமும் பொறுமையும் பழைய நிலைமைக்கு அவரைக் கொண்டுவந்து விடவில்லையா?

இரண்டாவது ஸ்ரீ ரகுநந்தனர் தன் தந்தையின் கட்டளைப்படி பதினான்கு வருஷங்கள் பொறுமையோடு ஆரண்ய வாசஞ் செய்யுங்காலை, தமது சீதையையுமிழந்து பொறுமையோடு சொல்லொணு துன்பப்பட்டு இறுதியில உயர் வெய்தின ரன்றோ! மற்றும், பரதன், தன் தாய்தான் ஸ்ரீராமரைக் காட்டிற் கனுப்பினதற்குக் காரணம் என்றறிந்த வுடன், உடல் பதைத்து, அவளைத் திட்டுகையில், அப்போது ஸ்ரீராமர் தடுத்து பரதனைப் பொறுக்கும்படி செய்து நீதிகளைப் புகன்று சித்திரகூடம்விட்டு அகன்றன ரன்றோ. பொறுமையே அவதாரமாகக் கொண்டவரன்றோ ஸ்ரீராமபிரான். இன்னும் இவர் கஷ்டகாலங்களிலும், தனக்குக் கோபமூட்டினவர்களிடத்தும் எப்படி பொறுமையே பூஷணமாகக்கொண்டு காரியசித்தி பெற்றார் என்பதை இராமாயணத்தில் பல இடங்களில் தெளிவாய்க் காணலாம்.

மூன்றாவது மஹா பாரதத்தில் தருமநந்தனரைப்போல் பொறுமையே பூஷணமாகக் கொண்டவர் வேறொருவருங் கிடையாது. சூதாட்டத்தில் யாவும் இழந்தது கண்டு தம்பிமார்களுள் பீமன் மிகவுஞ் சீற்றங்கொண்டு, அண்ணனைப் பார்த்து, உத்திரவு கொடுத்தால் உடனே துரியோதனாதியரைத் துவம்சப்படுத்துவதாய்க்கேட்க, அதற்குத் தருமர்தடுத்து பொறுமையுட னிருக்கவேண்டு மென்ன, அதே பிரகாரம் பன்னிரண்டு வருஷங்

கன் ஆரண்யவாசங் கடந்து ஸ்ரீகண்ணபிரானுடைய சகாயத்தால் கௌர வர்களைச் செயித்து பூபாலனஞ் செய்தனரன்றே. "பொறுத்தவர் பூமி யாள்வர், பொங்கினவர் காடாள்வார்" என்பதற்குப் பாண்டவகௌரவர் களே இலக்காக நின்றனர். இறுதியில் பொறுமையே வென்றது.

"சாந்தமு லேக சௌக்யமு லேது" என்று ஸ்ரீமத் தியாகராஜஸ் வாமிகளும் பாடியிருக்கிறார். பொறுமையின் குணத்தைப் போற்றலரிது. இதை நாம் தினந்தோறும் பழக்கிக்கொள்ளவேண்டும். ஒரே நாளில் வருவதல்ல. பொறுமையோடிருந்து வாழவேண்டும். இத்தகைய பொறுமையின் அளவுதான் என்ன என்று கேட்பீர்களோ, அந்தோ, அதன் அளவு

"பொறுமை கடலினும் பெரிது" என்று ஆன்றோரருளினர். எல்லாம் வல்ல இறைவன் இப்பொறுமையை நமக்கு பூஷணமாக அளிப்பாராக.

பூ. அமிர்தலிங்கம். சென்னை.

---

## வாழை மரம்.

இந்நாட்டில் வாழை, தென்னை, கரும்பு முதலியவைகளைச் சாகுபடி செய்யத் தகுந்த ஆறுகள், ஏரிகள், குளங்கள், நீரோடைகள் முதலிய நீர் நிலைகளிருப்பதன்றி, சாகுபடி செய்யத் தகுந்த பூமிகளுமிருக்கின்றன. இங்கே நாம் வாழையின் சாகுபடியைப்பற்றிக் கூறுவோம்.

வாழையின் வகைகள்:—இவ்வுலகில் அநேக விதமான வாழைக ளுண்டு. ஆனால்; நம்மவர்களுக்கு நன்கு தெரியும்படியானதும், சுலப மாக அகப்படக்கூடியதும்; மிக உபயோகமானதுமான சிற்சில வகை களைப் பார்ப்போம். அவைகளாவன:— மொந்தன், இரஸ்தாளி, பேயன், பூவன், பச்சைநாடன், கறுவாழை, செவ்வாழை, பச்சைவாழை, தேன் வாழை, கொட்டைவாழை, சிறுமலைவாழை, பனைவாழை எனப்படும்.

வாழை சாகுபடிசெய்யத் தகுந்தபூமி:—வாழை அநேகமாய் உஷ்ணப் பிரதேசங்களிலேயே பயிராகும். அன்றியும், களிமண் மணல் இந்த இரண்டு மண்ணுங் கலந்த ஈரக்கசிவுள்ள விடங்களில் பயிராகும். ஆற்றுப் படுக்கையில் பயிராகும். ஏரிக்கரைகளில் பயிராகும். ஆற்று வண்டல் இந்த வாழைக்குத் தகுந்த எருவாதலால், ஆற்றங்கரைகளிலுள்ள வாழை கள் மிகவுஞ் செழுமையாகப் பயிராகும். அதிகமான காய்களும், ஒவ் வொரு காய்களும் மிகப்பருத்து மிருக்கும். ஒவ்வொரு வாழையின் அடி யில் பல கன்றுகள் வெடிக்கும். அதிக காலம் நீடித்து அழியாதிருக்கும். சிலர் வாழைகளை நஞ்சை நிலத்தில் சாகுபடி செய்கின்றார்கள். பசுமை மண்ணுள்ள பூமியில் வாழை சாகுபடி செய்வது மிகவும் நலம். பேயன் வாழை, கொட்டைவாழை, இவைகளைச் சாம்பல் மண்ணில் சாகுபடி செய்யலாம்.

வாழை சாகுபடி செய்யத்தகாத பூமி:—பெருமணல் அல்லது சலங்கை மணல் உள்ள பூமிகளிலும், மிகக் கடினமான களிமண்ணுள்ள நிலங்களிலும், கப்பி மண்ணுள்ள விடங்களிலும் வாழை பயிராகாது.

வாழை சாகுபடிசெய்யப் பூமியைச் செப்பனிடுதல்:—எந்த விடத்தில் வாழைகளைப் பயிர் செய்யவேண்டுமோ அவ்விடத்தை ஓர் கெஜ ஆழந் தோண்டி மண்ணை மிருதுவாக்கி, மேடாக உயர்த்திச் சமப்படுத்தவேண்டும். பிறகு பத்தடிக்கு ஒவ்வொரு குழிகள் வீதம் தோண்டவேண்டும். ஒவ்வொரு குழிகளும் இரண்டடி நீளம் இரண்டடி அகலம் இரண்டடி ஆழம் இருக்கவேண்டும். அந்த நிலத்தில் இருபதடிக்கு ஒருதரம், ஆறடி அகலம் ஏழடி ஆழமுள்ள கால்வாய்கள் (கிடங்குகள்) வெட்டவேண்டும். அதிகமாய் அந்த கிடங்குகளில் ஜலம் வந்துவிட்டால் அந்நீரை வடிகட்ட ஓர் வழி (வடிக்கால்) யும், ஜலம் வர (நீர்பாய்ச்சல்) ஓர் வழியும் ஏற்படுத்தவேண்டும். அந்தக் கிடங்குகளில் கொஞ்சம் ஜலமிருக்கவேண்டும். அதிக ஜலமிருந்தால் வாழைகள் அழுகிவிடும். ஆனதால் கிடங்குகளில் மித ஜலமிருக்கும்படி ஜலம் விடவேண்டும். மித ஜலம் விடுவோமாயின் வாழை மிகவுஞ் செழுமையாக வளரும். தக்க லாபமும் கிடைக்கும்.

வாழைக் கன்றுகள் தயார் செய்தல்:—கன்றுகள் மூன்றடி முதல் நாலரையடி வரையில் உயரமாக விருக்கும்போதே கிழங்குகளுடன் பெயர்த்துவிட வேண்டும். பிறகு தலையை அறிந்துவிட வேண்டும். அப்படிக் கன்றை அறிந்து நடுவதால் கன்றுகளுக்குப் பல மதிகம். கிழங்குகளிலிருக்கும் வேர்கள் போகும் வண்ணம் சீவி விடவேண்டும். அக்கன்றுகளை மூன்று நான்கு நாள் ஆறவைக்கவேண்டும். பெயர்த்தவுடன் நட்டால் வேர் அழுகிவிடும். கன்றே முளைப்பது அரிதாகும். ஆனல், "வாழையை அன்று வை அல்லது கொன்று வை" என்ற பழமொழிப் போல கன்றைத் தோண்டியெடுத்தவுடன் தலையை அறியாது, இலைகளோடு நட்டு ஜலம் விட்டால் நன்ருகப் பயிராகும். மேல் சொன்னதைக் காட்டினும் இவ்வழியாக நடுவது உசிதமில்லை. வாழைக்கன்றின் கிழங்குகளைக் கரையான் அரிக்காது பாதுகாத்து வரவேண்டும்.

வாழை சாகுபடிசெய்யத் தகுந்தகாலம்:—கார்த்திகை, மார்கழி, இம்மாதங்களில் வாழை பயிரிடவேண்டும். அதிக ஈரமில்லாத சாம்பல் மண்ணில் வாழைகளைப் பயிர்செய்ய எண்ணினுல் ஆடி மாதத்தில் பயிர் செய்யலாம்.

வாழைக்கன்றுகளை நடுதல்:—வாழைக்கன்றுகளை அதிக நெருக்கமாய் பயிர் செய்தால், செழுமையாகப் பயிராகாது. சோகைப்பிடித்துவிடும். ஐந்நூறு கன்றுகளை விசாலமாகப் போடக்கூடிய ஓர் பெரிய தோட்டத்தில் ஆயிரம் கன்றுகளை நட்டுப் பயிர் செய்தால், ஆயிரங் கன்றுகளிலிருந்து வரக்கூடிய லாபத்தைக் காட்டினும் ஐந்நூறு கன்றுகளினுல் அதிக லாபம் வரும். தோட்டமும் சீக்கிரமழியாது. ஆனதால் ஒவ்வொரு

கன்றுக்கும் பத்தடி வித்தியாசமிருக்கவேண்டும். வாழைக்கன்றுகளைப் புதைத்தவுடன் குளங்களிலுள்ள பொருக்குகளைப் போட்டுக் கன்றுகளைச் சுற்றி அணைக்கவேண்டும். இதனாலும், பத்தடிக்கு ஓர் கன்று வீதம் நடுவதாலும், அந்தக் கன்றுகள் அதிகமான ஆகாரத்தை யெடுத்துக்கொண்டு முதல் தரமான சிங்கங்களை வெளிவிடுகின்றன. முதல் தரமான குலைகளையும் தள்ளுகின்றன. வாழைத் தோட்டங்களில் இந்த வாழை சாகுபடியேயன்றி இஞ்சி மஞ்சள் கருணை முதலிய கிழங்கு வகையறுக்களையும் பயிர் செய்யலாம்.

வாழை பயிராகப் போடும் எரு:—தார்போட்ட வாழை மரங்களை வெட்டாது, அழுகவைத்து, பூமியுடன் கலந்து விடுதல்; இது எருவாகும். ஆற்று வண்டல் மண், குளத்துப் பொருக்கு, புல்பூண்டுத் தழைகள், இவைகளே நல்ல எருவாகும். இந்த எருவை உபயோகிப்பதால் வாழைக்கன்றின் கிழங்குகள் பருத்து செழுமையாக விருக்கும். அதன் காய்கள் பருத்து மிகுந்த இனிப்புடையனவாக விருக்கும். தக்க விலைக்கும் விற்கும் ஆற்று வண்டல் போடுவதாலும், அழுகிப்போன வாழையின் எருவாலும் வாழைகள் நீண்டகாலம் அழியாதிருக்கின்றன. (தொடரும்)

கூறைநாடு எஸ். என். ராமு. (கற்பகம்)

---

## சோம்பேறித்தனமும் உழைப்பும்.

மனிதனாகப் பிறந்த எல்லோரும் நெற்றிவியர்வை நிலத்தில் விழ பிரயாசைப்பட்டே ஜீவனஞ்செய்யவேண்டும். நமது உணவுக்கும் இன்னுமிதர சௌகரியங்களுக்கும் வேண்டியவைகளை யெல்லாம் கடவுள் உண்டாக்கி யிருக்கிறார். ஆனால் நாம் வேலை செய்யாவிட்டால் அவைகளை யடைய முடியாது. தானியங்களை விதைத்துத்தான் அறுவடை செய்யவேண்டும். உலோகங்களைப் பூமியிலுள்ள சுரங்கங்களிலிருந்து வெட்டி யெடுத்துத்தான் நமக்கு வேண்டிய சாமான்களைச் செய்து கொள்ளவேண்டும். உரோமம் பஞ்சு முதலியவைகளை நூற்றுத்தான் பிறகு நெய்யவேண்டும். ஒவ்வொருவரும் வேலை செய்யாமல் சும்மாவிருந்தால் நமக்குக் கட்டிக்கொள்ள உடைகள் கிடைக்கா, பசிக்கு ஒருவிதமான ஆகாரமுங் கிடைக்காது, வசிக்க வீடுங்கிடைக்காது. ஆகையினால் நாம் வேலை செய்யும்பொழுது ஒருவிதமான ஆசையும், செய்தான பிறகு திருப்தியும் சந்தோஷமும் உண்டாகும்படியாக கடவுள் செய்திருக்கிறார். ஒருவேலையு மில்லாமல் வெட்டியாய் உட்கார்ந்திருப்பதைப் போல வேறொன்றும் நமக்கு விசாரத்தையும் அதிருப்தியையுங் கொடுக்கக் கூடியது இல்லை.

சாதாரணமாய் நாம் தினந்தோறும் பார்க்கிற ஒவ்வொரு சாமானும் உழைப்பினாலேயே வந்திருக்கிறது; யாராவது நமக்காக வேலை செய்

திருக்கவேண்டும். இல்லாவிடில் அந்தச் சாமான்களை நாமடையமுடியாது. காகிதமும், பேனா, மசி முதலிய எழுதுவதற்குபயோகமாயுள்ள கருவிகளுங்கூட மனிதர்கள் கஷ்டப்பட்டதனாலேயே கிடைத்திருக்கின்றன. மானிடராகப் பிறந்த நாம் ஒரு கூட்டமாக வசித்து வருகிறோம். நம்மில் ஒவ்வொரு பிரிவினரும் ஒவ்வொரு விதமான வேலையைச் செய்துவர வேண்டுமென்று நாம் நம்முள் ஏற்படுத்திக்கொண் டிருக்கிறோம். இவ்வாறாக நாம் ஒருவருக்கொருவர் வேண்டும்பொழுது உதவுகின்றோம். ஜனங்கள் நாகரீகமடையவே அவர்களுக்குத் தேவையான சாமான்களும் அதிகமாயின; ஆனால் ஒருவனே வேலைசெய்து அவனுக்குத் தேவையான எல்லாச் சாமான்களையும் சம்பாதித்துக் கொள்ளுதல் முடியாத காரியமாயிற்று. ஆகையினால் எல்லாருமாகச் சேர்ந்து அவரவர்களால் முடிந்த வேலையைச் செய்து ஒருவருக்கொருவ ருதவி வந்தனர். இம்மாதிரியாக வியவசாயிகள் நிலத்தை உழுது விதைதெளித்து தானியங்கள் விளைந்தவுடன் அறுவடைசெய்து நமது ஆகாரத்திற்குக் கொடுக்கிறார்கள். தவிர, சேணியர் நமக்குவேண்டிய ஆடைகளை நெய்துகொடுத்தும், கொத்தர் நமது வீடுகளைக் கட்டிக்கொடுத்தும், தச்சர் மேஜை, நாற்காலி முதலிய சாமான்களைச் செய்து கொடுத்தும், வண்ணான் துணிகளைச் சுத்தமாய் வெளுத்துக்கொடுத்தும், உபாத்தியாயர் நமது சிறுவர்களுக்குப் பாடஞ் சொல்லிக்கொடுத்தும், போலீசார் நமது சொத்துக்களைப் பாதுகாத்துக் கொடுத்தும், நியாயாதிபதி நமது வழக்குகளைத் தீர்த்துக்கொடுத்தும், வைத்தியர் நமது தேகஸ்திதி கெடாமல் பாதுகாத்தும் இவ்வாறாக இன்னும் பல வகுப்பினர் பல காரியங்களைச் செய்துகொடுத்தும் உதவுகின்றனர். நாமும் மனித வர்க்கத்தினர்களாகையினால் நம்மைச் சேர்ந்த கூட்டத்தினர்களுக்கு நம்மா லியன்றமட்டும் நாமும் வேலைசெய்து உதவிவர வேண்டும்.

இவ்வுலகத்தில் பொதுவாகப் பிறர் கஷ்டப்பட்டு வேலை செய்த சாமான்களை வைத்துக்கொண்டு ஒருவன் தான் ஒரு வேலையுஞ் செய்யாமல் சுகமாகக் காலங்கழிப்பதென்பது கூடாது. ஒருவன் வியாதியாயிருந்தாலுஞ் சரி, அல்லது அவனது சரீரத்திலுள்ள அவயவங்கள் பின்னப்பட்டிருந்தாலுஞ்சரி, அவன் வேலை செய்யாதிருந்தால் அவனைச் சேர்ந்தவர்கள் அவனைக் கோபித்துக்கொள்ளமாட்டார்கள். ஆனால் தேக சௌக்கியமுள்ள ஒருவன் சோம்பேறியா யிருந்தால் உலகம் சம்மதியாது. இத்துடன்கூட அவனது சோம்பேறித்தனமே அவனுக்குத் தண்டனை விதிக்கும். சோம்பேறியாயிருந்தால் மனம் துருப்பிடித்துப்போம். ஆனால் ஒருவன் சதா உழைத்துக்கொண்டே யிருப்பானாயின் அவன்மனம் மேன்மேலும் விருத்தியடையும். நாம் எப்பொழுதும் உபயோகப்படக்கூடிய வேலை யேதேனு,மொன்றைச் செய்துகொண் டிருக்கவேண்டும். இல்லாவிடில் சோம்பேறியா யிருக்கும் நம்மைச் சைத்தான் பிடித்து கொடிய பல விஷயங்களைச் செய்யுமாறு நம்மைத் தூண்டும். நாம் ஒரு வேலையு மில்லா

மற் சும்மா விருந்தால் கொடிய எண்ணங்கள் பல நமது மனத்திலுதிக்கும். நமது மனமானது சதா வேலை செய்துகொண்டேயிருக்கிறது. நாம் தூங்கும்பொழுதுகூட நமது மனம் சும்மா விருப்பதில்லை. நாம் நல்ல வேலைகளைச் செய்து நமது மனதில் நல்ல எண்ணங்களுதிக்கும் வண்ணம் செய்துகொள்ளவேண்டும். இல்லாவிடில் கெட்ட எண்ணங்கள் பல உதித்து நம்மைக் கெட்ட வழியில் திருப்புமென்பதிற் சந்தேகமில்லை. சோம்பேறித்தனமுள்ள ஒருவன் இவ்வாருகக் கெட்ட எண்ணங்களால் கவரப்பட்டுத் தன்னுயுள் முழுவதும் கஷ்டப்பட்டுக்கொண்டே யிருப்பான்.

சுறுசுறுப்பா யிருக்கும் தன்மையே நல்ல அதிட்டத்திற்குத் தாயார். உழைப்பாளிக்குக் கடவுள் சகல சம்பத்தையுங் கொடுத்துதவுகிருர். இவ்வுலகிலுள்ள ஜனங்களில் எத்தேசத்தினர் மிகுதியாக உழைத்துப் பாடுபடுகின்றனரோ அத்தேசத்தினரே பணக்காரராயும் அதிகாரமுடையவராயு மிருக்கின்றனர். இங்கிலாந்து, பிரெஞ்சு, ஹாலண்டு, ஜெர்மனி, ஜப்பான், அமெரிக்கா முதலிய தேசங்களிலுள்ள ஜனங்கள் மிகுதியாக உழைத்துச் சம்பாதித்தே முன்னுக்கு வந்திருக்கின்றனர். இந்தியாவிலுள்ள ஜனங்கள் பயிர்த்தொழில் செய்வதில் ஆயிரத்தில் ஒருபங்குகூட இங்கிலாந்திலுள்ள ஜனங்கள் செய்வதில்லை. அப்படி யிருந்தும் அவர்கள் இந்தியர்களைக் காட்டிலும் நூறுமடங்கு பணக்காரர்களா யிருக்கிருர்கள். இந்தியாவைப்போல பயிரிடுவதற்குத் தகுதியான தேசம் இப்பூலோகத்தில் வேறெங்குங் கிடையாது. கடவுள் தகுந்த எல்லா வசதியு மேற்படுத்தி யிருக்கிருர்; அப்படி யிருந்தும் கேவலஸ்திதியி லிருந்த ஐரோப்பியர்கள் நம்மைவிடப் பன்மடங்கு பணக்காரர்களா யிருப்பது ஆச்சரியமாகவே யிருக்கிறது. என்? இந்தியர்கள் ஐரோப்பியர்களைப்போல் தேகசிரமப்பட்டு வேலை செய்வதில்லை. நல்ல அதிட்டமும் கெட்ட அதிட்டமும் நம்மாலேதா னேற்படுகின்றன. நல் வாழ்வு முழுதும் நம்முடைய உழைப்பினுலேயே கிடைக்கிறது. நாம் ஏழைகளாக விருந்தாலாவது அல்லது வேறு எந்த விதத்திலாவது நாம் கஷ்டப்படும்படியாக நேரிட்டால் நாமதற்காகக் கடவுளைப் பிரார்த்திக்கவேண்டும். ஏனென்ருல் நாம் ஏழையா யிருந்தாலும் செல்வவந்தரா யிருந்தலும் சோம்பேறியா யிராமல் கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டும்.

பலர் மிகவும் ஏழைகளாக விருந்து பிறகு அவர்களுடைய உழைப்பினுல் மிகுந்த பணக்காரர்களாகி உன்னத பதவியை யடைந்திருக்கிருர்கள். ஒரு மனிதன் சிறப்படைவதற்கு உழைப்பும் அழிந்துபோவதற்கு சோம்பேறித்தனமும் முக்கிய காரணமா யிருக்கின்றன. ஆகையினுல் நாமெல்லாரும் நன்ருகக் கஷ்டப்பட்டு வேலைசெய்து வரவேண்டும்.

கே. யஸ். சுப்ரமணியம். (முன்னங்குடி.)



## அம்பாலிகை' அல்லது அதிசய மரணம்.

(159-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 3-வது அத்தியாயம்.

சற்று உயரமானவனும் நல்ல தேகபலமுமுடையவனுமான ஒரு வாலிபன் சவச்சடங்கு நடக்குமட்டும் சவத்தின் தலைப்புறம் பேசாமல் அசையாமல் நின்றுகொண்டிருந்தான். அவன் கண்களில் ஒரு துளி ஜலங்கூட வரவில்லை. அவன் தேகத்திலுள்ள சதைக்கட்டுகளில் ஒன்றேனும் சற்றுவது துடிக்கவுமில்லை.

வயது முதிர்ந்த ஒரு பெரிய மனிதன் அவ்வாலிபன் பக்கத்தில் நின்றுகொண் டிருந்தான். அவன் மிக்க மரியாதையுள்ள பெரிய மனிதனாய்க் காணப்பட்டான். அங்கிருப்பவர்களில் ஒருவருக்காவது அவன் அறிமுகமானவனல்ல. அப்படியிருந்தும் அவன் அங்கு நடக்கும் விஷயங்களை மிக்க அக்கரையோடு கவனித்துக்கொண் டிருந்தான். அவன் கண்களில் பெரிய மூக்குக்கண்ணாடி யணிந்திருந்தான்.

சடங்கெல்லாம் முடிந்தபின் சவத்தை யடக்கம்செய்வோர் சவத்தின் முகத்தின்மே லிருக்கும் மூடியை நீக்கி யாவரும் வந்து பாருங்கள் என்றழைத்தார்கள்.

முதல் முதல் சுத்தமாய்ச் சாதாரண உடையுடுத்த ஒருமாது சவத்தின் அருகிற் சென்று குனிந்து அதன் கன்னத்தில் முத்தமளித்தாள்.

அதன்பிறகு இதுகாறும் சவத்தின் தலைப்புறம் பேசாமல் நின்றிருந்த அவ்வாலிபன் சவத்தருகில் வந்தான். யாவரும் அவனையே யுற்றுப் பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அவ்வாலிபன் குனிந்து சவத்தின் கன்னத்தில் ஒரு முத்தமளித்து விட்டு நிமிர்ந்து நின்றான்.

அவன் வலிவுடையதேகம் முழுமையும் நடுக்கமுற்றது. அவன் தொண்டை விம்மியது. அவன் தன் துயரத்தை யடக்கவேண்டி மிக்க கஷ்டப்படுகிறான் என்று யாவர்க்கும் நன்றாய்ப் புலப்பட்டது. அவனும் தன்னால் கூடியவரையில் அடக்கிப் பார்த்தும் முடியவில்லை. கடைசியில் அவன் தன் துயரை யடக்கமுடியாமல் மனம் பொங்கி அக்கட்டிடமே யதிர்ந்து போம்படி மனம் துடித்துப் பதைத்துக் கதறியழத் தொடங்கிவிட்டான். அவனுடைய வைரம்பொருந்திய மனம் சுபாவமா யுண்டாகிய துயரை யடக்கச் சக்தியில்லாததா யிருந்தது.

அந்த ஒரு கதறல் அவனுடைய மனத்துயர் முழுமையும் வெளியாக்கிவிட்டது. அங்கிருந்தவர்களுடைய மனங்களெல்லாம் கரைந்து விட்டன. அவனுடைய உறுதியான மனம் அக்கதறலோடு அடங்கிவிட்டது. அவனுடைய துயரம் முழுதும் உண்மை யென்றும் சற்றேனும் அபிநயமில்லை யென்றும் யாவர்க்கும் நன்றாய்ப் புலப்பட்டது.

கறுப்பண்ணனே முறைப்படி பிறகு சென்று சவத்தின் முகத்தைப் பார்க்கவேண்டியவன்.

கறுப்பண்ணன் சவத்தருகில் செல்லும்போதும் அவ்வாலிபன் தலைப் புறத்திலேயே நின்றுகொண் டிருந்தான்.

அச்சமயம் பெரிய மூக்குக்கண்ணாடி யணிந்திருந்த அப்பெரிய மனிதன் மெதுவாய் எழுந்துவந்து அவ்வாலிபன் இருக்குமிடத்திற்கும் கறுப்பண்ண னிருக்குமிடத்திற்கும் நடுமையத்தில் சற்று எட்ட நின்றான்.

கறுப்பண்ணன் சவத்தின் அருகில் சென்று குனிந்து முத்தமிடப் போனான். அதே விநாடி ஒரு வலிவுள்ளகரம் அவன் தோளைப்பற்றியதும் ஆத்திரமும் கோபமும் நிறைந்த தொனியோடு "அட கொலைபாதகா! உன் உதடுகளால் அதைத் தொட்டாயோ, உடனே புன்னைச் சவமாய் வீழ்த்தி விடுவேன்" என்ற சொற்கள் அவன் செவியில் விழுந்தன. அவன் "ஆ இவ்வளவு துணிகரமாய்......" என்பதற்குள் முன்பு நாம் கூறிய மூக்குக்கண்ணாடி யணிந்த பெரிய மனிதன், தீட்சண்யத்தோடு ஒருவரை யொருவர் நோக்கிக்கொண்டிருக்கும் இருவர்க்கு மிடையில் வந்து, "இச்சமயம் சாந்தமாய் இருங்கள்" என்று கூறிக்கொண்டே கறுப்பண்ணனைச் சவத்தை விட்டு அப்புறம் தள்ளிக்கொண்டு வந்துவிட்டான்.

உடனே சவப்பெட்டியின் மேல்மூடி மூடப்பட்டதும் ஆணிகள் அடிக்கப்பட்டன. கண்ணாடி யணிந்திருந்த வயோதிகன் கறுப்பண்ணன் செவியில் குசுகுசுவென்று ஏதோ சிலவார்த்தைகள் கூறினான். உடனே கறுப்பண்ணன் கோபம் அடங்கி மரம்போல் அசையாமல் நின்றுவிட்டான்.

கடைசியில் சவப்பெட்டி வண்டியில் ஏற்றப்பட்டது. பின் செல்லும் வண்டிகளில் முதல் வண்டியில் கறுப்பண்ணன் ஏறிக்கொண்டான். மனோகரன் என்ற வாலிபன் வெளிவாயிற்படியில் நின்று பார்த்துக்கொண் டிருந்தான். அவன் முகத்தில் கோபத்தணல் வீசியது. உள்ளிருந்து அடக்கமுடியாத ஆத்திரம் பொங்கியது. அவன் கறுபபண்ணன் ஏறியிருக்கும் வண்டியை நோக்கிப் பாய்ந்து செல்ல அடியெடுத்து வைத்தான்.

அச்சமயம் அவன்மேல் கண்ணோக்கம் வைத்திருந்த கண்ணாடி யணிந்த கிழவன் "இரு இரு" என்று அவன் தோளைப் பிடித்துக்கொண் டான்.

வாலிபன் சட்டென்று கிழவனைத் திரும்பிப் பார்த்தான். சற்று நேரம் ஒருவரையொருவர் உற்று நோக்கினார்கள். கிழவன் வாலிபனை நோக்கி "அந்த வேலை செய்யாதே" என்றான். வாலிபன் ஆத்திரத்தோடும் வியப்போடும் "எந்த வேலை?" என்றான்.

கிழவன் பதில் கூறாமல் அவன் தோளைப்பிடித்த கரத்தால் கீழ் நோக்கித் தடவிக்கொண்டே வந்து அவன் இடுப்பில் சொருகி வைத்துக் கொண்டிருந்த கெட்டித்த கைத்துப்பாக்கியைப் பற்றினான்.

வாலிபன் மிக்க வியப்படைந்து திமிரிக்கொள்ள முயன்றான். முடியவில்லை. கடைசியில் மந்திரக்கட்டில் அகப்பட்டவன்போல் ஒடுங்கி, "நீ யார்?" என்றான்.

வயோதிகன்:—"மனோகரா! நான் யாராயிருந்தாலும் இருக்கட்டும். இச்சமயம் நீ யப்படிச் செய்யலாகாது. உன் சந்தர்ப்பம் பின்னால் வரும்" என்றான்.

மனோகரன்:—அவன் கொலைபாதகன்.

கிழவன்:—"ஆம். அவன் தக்க தண்டனை யடைவான். ஆனால் இம்மாதிரி யல்ல. இப்போதல்ல. நீ நினைத்தபடி செய்தாயோ, நீ யவனுக்கு மிக்க இரக்கம் காட்டியவனாவாய்" என்றான்.

இவர்கள் சம்பாஷித்துக்கொண்டே யிருக்கையில் சவமும் அதைப் பின்பற்றிச் செல்கிறவர்களும் போய்விட்டார்கள். மனோகரனும் கிழவனும் வீட்டிற்குள் திரும்பினார்கள்.

கிழவன் வாலிபன் கையைப்பற்றிக்கொண்டு வீட்டிற்குள்ளழைத்துச் சென்றான். வாலிபன் நீ யார் என்றான். கிழவன் தன் மடியிலிருந்து ஒரு சிறு துண்டு அட்டைக் கடிதத்தை யெடுத்துக் காட்டினான். அதில் "ஆனந்தவிங்—துப்பறிபவன்" என்று அச்சடித்திருந்தது. ஆனந்தவிங் அதைக் காட்டிக்கொண்டே "பேசாமலிரு" என்று சமிக்கை செய்தான்.

இவர்களிருவரும் வீட்டிற்குள் செல்லும்போது ஆனந்தவிங் அன்றிரவு கண்ட அந்த ஸ்திரீ யவனுக்குச் சமிக்கை செய்தாள். ஆனந்தவிங் அவள் அருகிற்சென்று என்ன சமாசாரம் என்றான்.

அம்மாது "இன்றிரவு நான் கட்டாயம் உன்னைக்கண்டு பேசவேண்டும்" என்றாள்.

ஆனந்:—எங்கே?

(இதுகாறும் மாறுவேட மணிந்திருந்த கிழவன் நமது ஆனந்தவிங்கே யென்று நண்பர்கள் அறிந்துகொண்டிருக்கலாம்.)

அம்மாது:—"உன் வீட்டில்" என்றாள்.

ஆனந்:—எந்த வேளைக்கு வருவாய்?

அம்மாது:—இரவு 12 மணிக்கு.

ஆனந்தவிங் சற்று சிந்தித்து "சரி உனக்காகக் காத்துக்கொண்டிருப்பேன்" என்றான்.

அதன் பிறகு ஆனந்தவிங்கும் அம்மாதும் சவத்தோடு சென்றவர்களின் முதல் வண்டி திரும்பி வருமட்டும் மிக்க அக்கரையோடு பேசிக்கொண்டிருந்தார்கள். அதன் பிறகு இருவரும் பிரிந்து சென்றார்கள்.

ஆனந்தவிங் அன்றிரவு பனிரண்டுமெணிக்குத் தன் அறையில் உட்கார்ந்து காத்துக்கொண்டிருந்தான். சரியாய் மணி 12 அடிக்கும் சமயம் கதவு தட்டப்பட்டதைக்கேட்டு "வா வுள்ளே" யென்றான். மறுவிநாடி நெடுக முக்காடணிந்துகொண்டிருந்த (இறந்துபோன அம்பாலிகையின் தோழியாகிய) மாது உள்ளே வந்தான். (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரங்கள்.

### ஈரோடு குரங்குகளின் ஒற்றுமை.

மூன்று மேல் நாட்டார் வேட்டைக்குச் சென்றார்கள். மான் மரைகளைச் சுட்டுக் களைத்து மரத்தின் நிழலடியில் இருவர் நித்திரை செய்ய ஒருவர் விழித்திருக்கையில், சில குரங்குகள் கூச்சலிட்டன. நித்திரைக்குப் பங்கமாயிருந்தது பொறுக்கமாட்டாமல் ஒருவர் வெடியினால் ஒரு நிறை கெர்ப்பமான குரங்கைச் சுட்டார். சுடவே அக்குரங்குக்குள்ளிருக்கும் குட்டி மண்டையில் பட்டு மேற்படி குட்டி பிரசவமாகி வெளியேறத், தாய்க் குரங்கு சில நிமிஷம் தன் மார்பிலடித்து பல அபிநயங்களால் அறிவுள்ள ஓர் ஸ்திரீயின் துயரம் காண்பித்து உயிர்விட்டது கண்டு, 1, 10, 100, 1000 பதினாயிரம் முப்பதாயிரம் எண்ண முடியாத குரங்குகள் கூச்சல், பேரிரைச்சலிட்டுக் கூடித் துக்கம் கொண்டாடின. பாதிக் கூட்டம் ஓடிச்சென்று ஒரு மாங்காயளவு ஒரு காயை ஆளுக்கொன்று கொண்டு வந்தது. இந்த அதிசயத்தையும், அவற்றின் கிரியா ஒற்றுமையையும் ஷை மூன்று பேரும் அவர்கள் வேலைக்காரர்களும் பார்த்துப் பிரமித்து விசன மடைந்தார்கள். செத்துப்போன குரங்கையும் குட்டியையும் குழி பறித்துப் புதைத்து மூடிவிட்டு ஷை எண்ணக்கூடாத குரங்குக் கூட்டம் முழுமையும் மேற்படி மூன்றுபேர்களையும் அவர்கள் கூட்டத்தையும் வளைந்துகொண்டு நெருங்கி வந்தது. ஒன்றும் செய்யக் கூடாதவர்களாய்ப் பயந்து நின்று சிந்தித்துக்கொண் டிருக்க சுட்டவரை மாத்திரம் அடையாளந் தெரிந்து பிடித்து இழுத்து உடுப்புகளெல்லாம் பீறிட்டு நிர்வாணமாய் காயப்படுத்தாமல் கீழே கிடத்தி மேற்படி காய்களைப் பரப்பி அதன்மேல் தூக்கிவைத்து மேலும் கீழும் பக்கமும் மேற்படி காய்களால் முடிய முற்றும் மூடி சில நிமிஷம் பொறுத்து எல்லாம் ஒன்றுமில்லாமல் ஓடிப் பெரும் வெள்ளம் நிறைந்துபோகும் காவேரி நதியில் குளித்து ஸ்நானம் செய்து கலைந்து பிரிந்து வழக்கம்போல் போய்விட்டன. காய்களால் மூடப்பட்டிருந்தவர் எழுந்து இருந்த உடைகளைத் தரிக்கவே தேகத்தில் ஓர் அரிப்பு சரீரம் முழுவதுங் காண, அதை மற்றவர்களிடம் தெரிவித்துச் சிரித்து சந்தோஷித்தாலும் இவர் மகா கவலையடைந்து நல்ல தண்ணீர் தடாகத்தில் நிர்வாணியாய் ஸ்நானம் செய்ய இறங்கித் தோய்த்துக் குளித்து கரையேறினார். 3, 5, நிமிஷத்திற்குள் சரீரம் துண்டு துண்டாய்—பொடி பொடியாய் உதிர எலும்பு நீங்கலாய்ச் சகலமும் துண்டு துண்டாய் விழ இரத்தம் ஓட உயிர் துறந்தார். மகா திகிலடைந்து கைபடாமல் மேற்படி காய்களை எடுத்தனுப்பிப் பரீட்சைசெய்ய மகா விஷம் நிறைந்த காய் என்று பரீட்சை செய்யப்பட்டது. ஆதலால் தெரிந்தது சொற்பம் தெரியாதது அநேகம். தமிழகம்.

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**உருத்ரோத்காரிஞூ மார்கழிமீ-கலி 5025-சாலிவாகனம் 1846**
**பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342**
**இங்கிலீஷ் 1923ஞூ டிசம்பர்மீ—1924ஞூ ஜனவரிமீ**

| மார்கழி | டிசம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | ஞா | நவ41-25 | உத்ரட்29-10 | அமி60 | ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 17 | திங் | தச47-30 | ரேவ36-18 | சி36 18சி | சத்தியகிரி தீர்த்தம் |
| 3 | 18 | செவ் | ஏகா54-0 | அசு43-45 | சித்60 | ஸ்மார்த்த ஏகாதசி |
| 4 | 19 | புத | து60 | பர51-13 | சி 51-13அ | வைகுண்ட ஏகாதசி |
| 5 | 20 | வியா | து0-23 | ※கிரு58-28 | மர60 | கிருத்திகை, பிரதோஷம் |
| 6 | 21 | வெ | திர6-23 | ரோ60 | மர60 | கரிநாள் |
| 7 | 22 | சனி | ச○11-40 | ரோ4-55 | அ4-54சி | பௌர்ணமி |
| 8 | 23 | ஞா | பவு16-20 | மிரு10-43 | சித்60 | ஸ்ரீநடராஜர் அபிஷேகம் |
| 9 | 24 | திங் | பிர1 -58 | திரு15-40 | சி15-40அ | ஆருத்திரா தரிசனம் கரிநாள் |
| 10 | 25 | செவ் | துதி22-53 | புன19-50 | சித்60 | |
| 11 | 26 | புத | திரி24-43 | பூச23-8 | சித்60 | |
| 12 | 27 | வியா | சது25-43 | ஆயி25-28 | சி 25-28அ | |
| 13 | 28 | வெ | பஞ்25-40 | மக26-50 | ம26-50சி | |
| 14 | 29 | சனி | சஷ்24-18 | பூர27-8 | சி27-8ம | |
| 15 | 30 | ஞா | சப்21-50 | உத்26-5 | அமி60 | |
| 16 | 31 | திங் | அ17-55 | அஸ்23-48 | சி23-48பி | |
| 17 | 1 | செவ் | நவ12-53 | சித்20-18 | சித்60 | |
| 18 | 2 | புத | தச6-45<br>ஏ59-45 | சுவா15-45 | சித்60 | |
| 19 | 3 (1924ஞூ ஜனவரிமீ) | வியா | து52-35 | விசா10-20 | சித்60 | மதவ, வைஷ்ணவ ஏகாதசி, ஸபலா ஏகாதசி |
| 20 | 4 | வெ | திர44-15 | அனு4-28<br>கேட்58-15 | சி4-28ம | ப்ரதோஷம், மாச சிவராத்திரி |
| 21 | 5 | சனி | சது36-30 | மூல52-28 | சித்60 | போதாயன அமாவாசை |
| 22 | 6 | ஞா | ●29-15 | பூரா47-18 | சி47-18அ | அமாவாசை |
| 23 | 7 | திங் | பிர22-58 | உத்43-10 | ம43-10அ | இன்றே சந்திர தரிசனம் உற்றுப் பார்க்கவும் |
| 24 | 8 | செவ் | துதி18-5 | திரு40-30 | சித்60 | சந்திரன் 4-ம் பிறைபோல் தோற்றும் |
| 25 | 9 | புத | திரி 14-55 | அவி39-40 | பி39-40சி | மாச சதுர்த்தி விரதம் |
| 26 | 10 | வியா | சது13-40 | சதை40-45 | ம40-45சி | பிரயாணம் விலக்க |
| 27 | 11 | வெ | பஞ்14-25 | பூரட்43-48 | சித்60 | சஷ்டி, மந்திரம் ஜெபிக்க |
| 28 | 12 | சனி | சஷ்17-3 | உத்-48-28 | சி48-28ம | விதை விதைக்க |
| 29 | 13 | ஞா | சப21-18 | ரேவ-54-40 | அ54-40சி | போகி பண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | 5உ மகர-சு<br>10 ,, மகர-பு<br>24,,விரு-செ<br>28 ,, த-வ-பு<br>29 ,, கும்-சு | | ராகு |
| சூ பு | குரு | சனி செ | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 9 } ருத்ரோத்காரிஃ மார்கழிமீ கஉ
1923ஃ டிசம்பர்மீ 16உ { பகுதி 6

## கடவுள் வணக்கம்.

வாராதெ லாமொழிய வருவனவெ லாமெய்த
மனதுசா க்ஷியதா கவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமா கவே
பூராய மாயுணர வூகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன் றெனப்
போதநெறி தந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென் னவே
நீரான மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதரு ளின்னு மின்னும்
நின்னையே துணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டா கிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்க வருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (1)

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே — பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமு நீயிறந்த
வெப்பிலே யானந் தமே. (2)

நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார் — பிறையணிந்த
மிக்ககை லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. வாராதெலாமொழிய வருவனவெலா மெய்த=(நன்மை நேரிடின் சந்தோஷமடைவதும் தீமை நேரிடின் துக்கமடைவதுமாகிய பேத புத்தியின்றி) எதுவந்தாலும் வரட்டும் எது வாராதொழிந்தாலும் ஒழியட்டும் என்ற சமபுத்தி யோடு

மனது சாட்சியதாகவே = மனம் சாட்சிமாத்திரமாய்

மருவ நிலை தந்ததும்=பொருந்தி யிருக்கும் நிலைமையை யளித்ததும்

("இருவித வினைப்பயன்களிலும் மகிழ்ச்சி வாட்டமின்றி அவைகளுக்குச் சாட்சிமாத்திரமாய்த் தாக்கற்று நிற்கும் நிலைமையை யளித்தனை" என்பதாம்.)

வேதாந்த சித்தாந்த மரபுசமரசமாகவே பூராயமாய் உணர ஊகமது தந்ததும் = வேதாந்தத்தையும் சித்தாந்தத்தையும் சமரசமாக உணர்வதற்கு வேண்டிய ஊகத்தை யளித்ததும். (ஊகம்—கருத்து) வேதாந்த மார்க்கமே சரியானது, சித்தாந்தமார்க்கம் சரியானதன்று என்று சிலரும், சித்தாந்தம் ஒன்றே சரியானது வேதாந்தம் சரியானதல்லவென்று சிலரும் பிரமாதமாய் வாதம் செய்கிறதைக் காணலாம்.)

ஆத்மாவைப்போல நித்தியத்வம்பெறாது மாறுந்தன்மையைக் கொண்டிருத்தலின் பூத சம்பந்தமான சரீரத்தைப் 'பொய்யுடல்' என்றார்.

போதநெறி—ஞானமார்க்கம்.

சாசுவத ஆனந்த போகமே வீடென்ன = அழியாத நித்தியானந்த அனுபவமே மோக்ஷ வீடென்றுணர்ந்து

நீராளமா புருக=நீரைப்போல் கரைந்துருகும்படி

உள்ளன்பு தந்ததும்=உள்ளம் அன்புருவமாகும்படி செய்ததும்

ஞானமார்க்கத்தால் அடைதற்பாலதாய நித்தியானந்த வாழ்வே முத்தியின்பமென்றுணர்ந்து அதன்பால் தைலதாரைபோன்று நெஞ்சமானது உருக மனப்பூர்வமான அன்பை யளித்தனை என்பார் 'சாசுவத வானந்த போகமே வீடென்னவே, நீராளமாயுருக வுள்ளன்பு தந்ததும்' என்றார்.

இன்னு மின்னும்=மேன்மேலும். பாராதி=நிலமுதல் நாதமீறான தத்துவம். பாராதி யறியாத மோனம்=பிரபஞ்ச வாழ்வுக் கதீதமான மௌன நிலை. இடைவிடா=நீங்காத. பற்றாக = ஆதாரமாக (பற்றுக்கோடாக)

தாயுமான சுவாமிகளே

"சந்ததமு மெனதுசெய லினதுசெயல் யானெனும்
தன்மை நினையன்றி யில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவ மிதுவே

யிந்தநிலை தெளியநான் நெக்குருகி வாடிய
வியற்கைதிரு வுளமறி யுமே''

என்றருளினர்.

அனுபவமின்றிச் சாத்திரங்களை மட்டும் வாசிப்போர் வேதாந்தம் சித்தாந்தம் என்ற கட்சிப்பற்றில் பிடிவாதங்கொண்டு தாம் பிடித்த முயலுக்கு மூன்றே காலென்று கடைசிவரை வாதாடுவார்கள். இதில் மாறுபாடாய்த் தோன்றும் முக்கிய விஷயம் எதுவெனின்:—

வேதாந்தத்தின்படி "ஜகம், ஜீவன், பரம் மூன்றும் அநித்தியம், பிரம மம்ஒன்றுமட்டுமே நித்தியமாயுள்ளது" என்பதாம்.

சித்தாந்தத்தின் கொள்கை "பதி, பசு, பாசம் மூன்றும் நித்தியம் என்பதாம்.

"இரண்டும் ஆன்றோர்களாகிய மகான்களாலேயே அனுபவமாக வுணர்ந்து ஏற்றுக்கொள்ளப்பட்டவை. அப்படியிருக்க இரண்டிலொன்று எவ்வாறு தவறாகவிருக்கும்? அனுபவத்தில் முடிவு அபேதமாகவே யிருக்கவேண்டும்" என்ற துவேஷமற்ற நோக்கத்தோடு ஆராய்வோர்க்கு வேதாந்தமும் சித்தாந்தமும் ஒன்றே என்ற உண்மை அங்கைநெல்லிபோல் விளங்கும். இந்த உண்மையை யுணரத் தாம் சிரமப்பட்டதையே "இந்த நிலைதெளிய நான் நெக்குருகி வாடிய வியற்கை திருவுளமறியுமே"என்றார்.

இவரே, இந்த உண்மையை வற்புறுத்துவானெண்ணி,

"வேதாந்த சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கும்—நாதாந்த மோன நலமே பராபரமே" என்றும் அருளியுள்ளார்.

"இன்பதுன்பங்களைச் சமமாய் நோக்குவதாகிய இருவினை யொப்பைத் தந்ததும், வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாயுணரும் ஊகத்தைத் தந்ததும், தேகம் நிலையன்றென உணரும் ஞானநெறியைத்தந்ததும், நித்தியாநந்த அனுபவமே மோக்ஷவீடென்றுணர்ந்து உளம் உருகும் வண்ணம் அன்பைத் தந்ததும் யாவும் உனது அருளே என்றார். "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்பதற்கொப்ப யாவும் உனதருளே தந்தது என்றார்.

மோனமே இடைவிடாப்பற்றாக நிற்கவருள்வாய் = வாக்குமனமற்று தற்போத மொழிந்த மோன நிட்டையிலே சதாநிற்கும் வண்ணம் அருள் புரியவேண்டும்.

2. அன்பின் மயமானார்க்கு இரங்காத பொருள் ஒன்றுமில்லை யாதலின் 'அல்லும்.........கன்னெஞ்சே' என்றார். அல்—இரவு; கல்நெஞ்சு— கல்லைப்போலும் வன்மை பெற்ற மனம்.

"கெடுக்க வல்லதும் கெட்டவர் தங்களை, எடுக்க வல்லதும் இம்மனம் என்றதை, அடக்கவல்லவன் ஐய பவக்கடல், கடக்க வல்லவனாகுக்

கடிதரோ" என்று பிரபு லிங்கலீலை கூறுகிறபடி மனமடங்கப் பெற்ற வர்க்கே ஆனந்தமுண்டு என்பார் 'பொல்லாத......யானந்தமே' என்றார்.

மனவொடுக்கத்திற்கு அன்பு காரணம்; அந்த அன்பைக் கைப்பற்றின் மனவொடுக்கம் பெற்று ஆனந்தமுறலாம் என்பது கருத்து.

நீ இறந்த எப்பிலே ஆனந்தமே = நீயற்ற நிலையில் உனக்கு ஆனந்த முண்டாம், தற்போத ஒழிவிலே யானந்த முதயமாதலின் அவ்வாறருளி னார்.

3. நிச்சயமாமோன முறையுணர்ந்தார் யாதை முயல்வார் = உண்மை யான மோனநிலையினை யடைந்தோர் எந்த விவகாரத்திலும் முயல மாட்டார்கள்.

அவர்கள் வேண்டுவது வேண்டாமை யற்றோர். அடையவேண்டிய யாவும் அடைந்தோர். குறைவற்ற ஆனந்தானுபவமுடையோர். அவர்க ளுக்கு வேண்டுவதொன்றுமே யில்லையாதலின் எதற்கும் முயற்சி செய்யார். அவர்களிடம் எவ்வித விவகாரமும் இராது.

நீர் நிறைந்த குடம் பின்னும் நீர் வேண்டாததுபோல மௌனநிலையை யடைந்தவர்க்கு அதனினும் வேண்டுவதான உயர்நிலை வேறின்மையின்— 'நிறைகுடக்.........முயல்வார்' என்றார். பிறை சந்திரகலை; வித்தகன்— ஞான சொரூபி; வேதியன்—வேதங்களால் பிரதிபாதிக்கப்படுபவன்; பிராமணன்; செக்கரணிமேனியன்—செவ்வானம் போலும் சிவந்த திரு மேனியைக் கொண்டவன். இறைவன் திருவருளைப் பெறாதவர் பல சம யங்களிலும் பற்றுற்று ஒன்றிலும் நிலை யெய்தார் என்பது கருத்து.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரி௵ மார்கழி௴ க௳

## சங்கம்.

நமது அமிழ்தினுமினிய அருந்தமிழ் மொழியில் பல் பொரு ளளிக்கும் ஒரு சொல்லும், ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற் களும் ஏராளமாகவுள. அதன்படி சங்கம் என்ற வார்த்தைக்குப் பலபொருள்களுள. ஆயினும் நாம் இந்த இடத்தில் அதைக்கூட் டம், அல்லது பலபேர் கூடிய சபை என்ற பொருளில் உபயோ கித்திருக்கிறோம்.

ஒருவரே தனித்து ஒரு காரியத்தைச் செய்வதிலும் பலபேர் கூடிச் செய்வதில் மிக்க விசேஷமிருக்கிறது. ஒருவன் யோசனையில் ஒரு காரியத்தைச் செய்வதிலும் பலர் யோசனையால் செய்தால் அக்காரியம் இடையூறின்றிச் செவ்வனே நிறைவேறும். அதோடு ஒருவரால் ஆகாத ஒரு பெரிய காரியம் பலபேர் ஒன்று சேர்ந்து ஒற்றுமையோடு முயன்றால் நிறைவேறும். உலகில் பெரும்பாலான விஷயங்கள் பலர்சேர்ந்து செய்வதாலேயே நடைபெறுகின்றன. ஏன், உலக வாழ்க்கையே இத்தகைய பரஸ்பர உதவியாலேயே நடைபெறுகிறது எனலாம். நமது வாழ்க்கைக்கு வேண்டிய ஊண், உடை, இல்லம், சாமான்கள் முதலிய ஒவ்வொரு உபகரணமும் எவ்வாறு நமக்கு அமைந்ததெனச் சிந்தித்துப்பார்த்தால் இந்த உண்மை நன்கு புலப்படும். இவ்வாறு மனிதர் ஒரு சபை அல்லது சங்கமாகக்கூடி யொன்றைச் செய்வதற்கு ஒற்றுமை இன்றியமையாததாகும்.

இவ்வாறு ஒரு சங்கமாகக்கூடி ஒரு காரியத்தைச் செய்வதிலும், தனி மனிதன் செயலைப்போன்றே சுயநலம், பொதுநலம் ஆகிய இரண்டுவித முண்டு. ஒருவர்க்கு மேற்பட்ட ஆட்கள் ஒன்றுசேர்ந்து செய்வதிலும் சுயநலம் இருக்குமோவென்று சிலர் ஐயுறலாகும். சற்று சிந்தித்து நோக்கின் உண்டென்பது புலனாகும். திருஷ்டாந்தமாக ஒன்று கூறுகிறோம்.

ஆறுபேர் ஒன்றுகூடி ஒரு வாசகசாலையை ஸ்தாபிக்கிறார்கள். இவர்கள் தலைக்கு இவ்வளவென்று பிரிவுபோட்டுக்கொண்டு நாட்டில் பிரசுரமாகும் முக்கியமான பத்திரிகைகளில் நான்கு வரவழைத்து அறுவரும் அவற்றை வாசிக்கிறார்கள். இந்த நான்கு பத்திரிகைகளுக்கும் வருடம் ரூபா 40 கட்டவேண்டும் என்று வைத்துக்கொள்வோம். இவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனி நான்கு பத்திரிகைகளையும் வரவழைப்பதாயின், சொல்ப வருமானமுடையவர்களாதலின் முடியாது. அறுவர் சேர்ந்து பிரிவு போட்டுக்கொள்வதால் தலைக்கு 6 ரூபா சில்லரையே யாகிறது.

இப்போது இவர்கள் மேற்படி பத்திரிகைகளை வரவழைத்துத் தாங்கள் மட்டும் வாசிப்பதாயின் இவர்கள் காரியம் சுயநல காரியமன்றி வேறில்லை.

சிலர் ஒரு சங்கமாகக்கூடி ஒரு காரியத்தைச் (பொது நல காரியத்தையே) சாதிக்க முயலும்போது இடையில் சிலருடைய

சுயநல நோக்கத்தால் காரியம் முடிவு பெறுமலே கைவிடப்பட்டு, சங்கம் அடியோடு பங்கமடைகிறது. நம் நாட்டில் இச்சுய நலம் என்ற பேய்ப் பெரிதும் தலைவிரித்தாடுகிறது. இதுவும் ஒற்றுமைக்குறைவுமே நம் தாய்நாடு முன்னேற்ற மடைவதற்குப் பெருந்தடைகளாக வுள்ளவை.

கல்வி யறிவு மிகுதி யுடையோருக்கும், தேச முன்னேற்றத்திற்கே பாடுபடுகிறேன் என்று முன் வருவோருக்குமே, கௌரவம், வருமானம், பட்டம்முதலியவை பெறவேண்டுமென்ற சுயநல நோக்கமிருக்கிறதெனின் ஏனையோருக்குக் கேட்கவும் வேண்டுமோ? இத்தகைய நோக்கமுடையோர் எதில் பிரவேசித்தாலும் தாங்கள் ஆசைவைத்திருக்கும் சுயநலத்தைப் பெறுவதற்கு யார்தயவு வேண்டுமோ அவர்கள் விருப்பத்தின்படி நடக்க முயல்கிறார்களே யன்றி அதனால் தேசமுன்னேற்றத்திற்கு இடையூறு நேர்வதாயினும் அதைப் பொருட் படுத்துவதில்லை.

இது கூடாதகாரியமன்றோ? நிற்க, இனி எடுத்துக்கொண்ட விஷயம் எவ்வாறிருந்தால் அது நற்பயனையும் பெரும் புகழையும் உலகத்திற்குதவும் என்பதைப்பற்றிக் கொஞ்சம் பேசுவோம்.

சங்கத்தின் இலக்கணத்தை ஒருவாறு தலைப்பில் விளக்கியுள்ளோம். ஒரு பகுதியினர்க்கோ அல்லது உலகத்திற்கோ, தகாத காரியத்தை ஒழிப்பதற்கும், தக்க காரியத்தை நுழைப்பதற்கும், அறிஞராயுள்ளோரிற் சிலர் ஒன்று கூடுவதுதான் சங்கம். இவ்வாறு கூடும் அறிவாளர் சுயநலத்தை அறவே மறந்து பொது நலத்தைப் பெரிதும் பாராட்டவேண்டும்.

"அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்"

என்னும் விதியை ஒவ்வொருவரும் ஞாபகத்திற் கொள்ளவேண்டும்; ஒருமித்து உழைக்கவேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் பிரிவு படக்கூடாது. அபிப்பிராய பேதம் உண்டாயின் பொறுமையோடு ஆலோசித்து ஐக்கியமுடிவுக்கு வரவேண்டும். இடம்பொருள் ஏவல்களை ஆய்ந்து பார்க்கவேண்டும். மறந்தும் பிறர்கேடு சூழாதிருக்கவேண்டும். இத்தகைய நல்லெண்ணத்தோடு கூடும் சங்கமே நீடித்திருப்பதுடன், உலகங் கொண்டாடும் பாக்கியத்தையும் அடையும்.

சமீபகாலத்தில் புண்ணியஸ்தலமாகிய திருவண்ணுமலையி லுள்ள வர்த்தகர்களில் சிலர் ஒன்றுகூடி ஒரு வர்த்தகர் சங்கத்தை ஸ்தாபிப்பதாகவும், பிரதி அமாவசி தினத்திலும் யாவரும் கடைகளை மூடிவிடவேண்டுமென்றும், அன்று பிற்பகல் யாவரும் ஒரு பொதுவிடத்தில் சபைகூடிப் பேசுவதென்றும் ஏற்பாடு செய்யப் பட்டிருப்பதாக ஒரு சந்தாநேயர் நமக்கு அறிவித்திருக்கிருர்.

நம்நாட்டு வர்த்தகர்கள் ஒற்றுமையாக ஒன்றுகூடி விவகாரம் செய்ய முயல்வது மிக்க சந்தோஷமான சமாசாரமே. ஆயினும் அவ்வாறு சங்கத்தைத் தாபித்து நம் தாய்நாடு முன்னேற்ற மடைவதற்கு அவசியமான காரியங்களைச் செய்ய ஏற்பாடு செய் தாலன்றி சங்கத்தாபனையால் மட்டும் ஒரு பயனு முண்டாகாது. அமாவசியன்றுமட்டும் கடைகளை மூடிவிடுவதால் என்ன பய னுண்டாகும்? மற்ற காரியங்களையும் செய்யவேண்டும்.

1. நம் நாட்டு வர்த்தகம் அபிவிர்த்தியடையும் மார்க்கத்தில் தங்கள் வர்த்தக காரியங்களை நடத்தத் திடமான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

2. வர்த்தகத்திற்கு முக்கியமான உபகரணம் கைத்தொழில். ஒரு நாட்டின் கைத்தொழில் விர்த்தியடைந்தால்தான் அந்நாட் டின் வர்த்தகம் அபிவிர்த்தியடையும். அப்போதுதான் அந்நாடு செல்வமும், பலமும்பெற்று, அன்னிய நாட்டாரின் மதிப்பைப் பெற்று மேலோங்கி நிற்கும்.

3. நாட்டின் கைத்தொழில் அபிவிர்த்தி யடையவேண்டு மாயின், வர்த்தகர்களே யதற்கு உதவி செய்யவேண்டும். நம் நாட்டில் செய்யப்பட்ட பொருள்களையே அதிகமாக வாங்கி வியா பாரம் செய்யவேண்டும். கைத்தொழிலாளிகளுக்கு நம் நாட்டி லுற்பத்தியாகும் பருத்திமுதலிய இயற்கைப் பொருள்களைச் சொல்ப இலாபத்திற்கு விற்றும், பொருளுதவிசெய்தும் அவர் களை யாதரித்து, பிறகு அவர்களால் செய்யப்பட்ட சாமான்களை வாங்கி விற்று இலாபம் பெறலாகும்.

4. இப்போது நமது நாட்டு வர்த்தகர்களிடமுள்ள சில குறைகளையும் தவறுகளையும் அடியோடொழிக்கக் கண்டிப்பான விதிகளை யேற்படுத்தி யாவரும் அதன்படி நடக்குமாறு செய்ய வேண்டும்.

நம்மிடமுள்ள குறைகளில் இரண்டொன்றைமட்டும் ஈண்டு கூறுகிறேம்—நமது வர்த்தகரில் ஒருவர் புதிதாய் ஒரு துறையில்

பேரம் செய்யத் தொடங்கினால், அல்லது ஒருவர் ஒரு புதுவழியில் பொருள்தேட முயன்றால், உடனே அதைக்காணும் மற்றொருவன், தான் இன்னொரு புதுவழியை யூகித்தறிந்து அவ்வழியில் பொருள்தேட முயல்வதைவிட்டு, முதல் ஆசாமி சென்றவழியிலேயே யிவனும் செல்லத்துணிந்து அவன் வரவழைக்கும் சரக்கையே வரவழைத்து, அதில்கூட எதையேனும் கலந்து, அவன் விற்பதிலும் குறைந்த விலைக்கு விற்கத்தொடங்குவான். இவ்வாறே இன்னும் நான்கைந்துபேரும் அம்மாதிரியே செய்யத் தொடங்கி ஒருவருக்கொருவர் போட்டிபோட்டுக்கொண்டு அந்த பேரத்தை யடியோடு கெடுத்துத் தாங்களும் கெடுவார்கள். இக்கெட்ட வழக்கம் நம்மவர்களிடமிருப்பது மிக்க விசனிக்கத் தக்கதே.

அகௌரவம் அளிக்கத்தக்க இன்னொரு தவறான வழக்கம் நம்மவரிடமிருக்கிறது. அதென்னவெனில், மேல்நாட்டு நாகரீகத்தில் எல்லாரும் மயங்கிவிழுவதுபோல் நம் வர்த்தகர்களும் மயங்கி விடுகிறார்கள். மேல்நாட்டாரைப்போல் கடிதத்தின் தலைப்புகளை மட்டும் அச்சடித்துக்கொள்ளுகிறார்கள். கூடுமானால் மேல்நாட்டுப் பெயர்களையே வைத்துக்கொள்ளுகிறார்கள். அல்லது மேல்நாட்டுப் பெயர்கள்போல் தோன்றுமாறு தம் பெயர்களை ஆபாசமாய்ச் சிதைத்து வைத்துக்கொள்கிறார்கள். "ம. கோதண்டபாணி" என்பதற்கு "யம். கே. பாணி அண்ட் கோ" என்றும், "த. கதிர்வேலு" என்பதற்கு "டி. கெ. வேல் அண்ட்கோ" என்றும், "ப. மாசிலாமணி" என்பதற்கு "பி. யம் மணி அண்ட்கோ" என்றும், "உலகநாதன்" என்பதற்கு "லோகன் அண்ட்கோ" என்றும் வைத்துக்கொள்வது எவ்வளவு நேர்த்தியா யிருக்கிறது.

இவர்கள் கருத்தென்னவெனில் வெள்ளைக்காரர் வர்த்தகசாலை யென்றால் ஜனங்கள் எல்லாம் நாணயமாய் நடக்கும் என்று நம்பி பேரம் செய்வார்கள் என்பதே. இதனால் சுதேசிகளிடம் நாணயமில்லை யென்று இவர்களே வெளியிடுகிறார்கள்.

வெளி விஷயங்களில் மட்டும் மேல்நாட்டாரைப்போல் மெருகிட்டுக்கொள்கிறார்களே யன்றி நடவடிக்கையில் அவர்களிடமுள்ள நல்வழிகளில் ஒன்றையேனும் பின்பற்றுகிறார்களில்லை. இதனால் அன்னியர் நமது வெளிவேடத்தைக்கண்டு கேலிசெய்கின்

றனர். வர்த்தகர் சங்கங்கள் இத்தகைய குறைகளை நீக்க முயல வேண்டியது மிகவும் அவசியமாகும்.

வாசகசாலை முதலியனபோன்றவைகளைத் தாபிப்போர் தங்கள் வரையில் பத்திரிகைகளை வரவழைத்து வாசித்துக்கொண்டிருப்பது பொதுநலத்திற்குப் பாடுபடுவதாகாது. இப்போது நமது நாட்டின் முன்னேற்றத்திற்கு இடையூறாகவிருப்பது பாமர ஜனங்களின் கல்விக்குறைவே. நகரங்களில் மட்டும் பிரசங்க மூலமாகப் போதனை செய்வதால் பயனுண்டாகாது. கிராமாந்தரங்களிலுள்ள ஜனங்களுக்கு அவசியமாக அறியவேண்டிய விஷயங்களே தெரியாது. அவர்களுக்குத்தான் நம் நாட்டின் தற்கால நிலைமையையும், நாம் முன்னேற்ற மடையவேண்டிய வழியையும் அறிவதற்கு அவசியமான போதனைகளைச் செய்யவேண்டும். அறிவாளிகளாகிய நமது தலைவர்கள் முதலியவர்கள் தேச முன்னேற்றத்திற்காகச் செய்யும் காரியங்களைப்பற்றி இப்பாமர ஜனங்கள் மூன்றுவது மனிதர்களுடைய காரியமாகக் கருதி விவகரிக்கிறார்களேயன்றி "இவ்வளவு காரியங்களும் நம் தாய்நாட்டிற்காக, நமது சந்ததியாரின் முன்னேற்றத்திற்காகவே செய்யப்படுகின்றன. இவை நாமே செய்யவேண்டிய காரியங்கள்" என்ற உணர்ச்சியே அவர்களுக்கில்லை. இது இராஜாங்கத்தாருக்கும் யாரோ மற்றொரு கட்சியாருக்கும் நடக்கும் போராட்டமென்றே யவர்கள் மதிக்கிறார்கள்.

கடந்த வாரம் நாம் பாதையில் வந்துகொண்டிருக்கையில் கதராடை யணிந்திருந்த நகரவாசி ஒருவனைக் கிராமத்திலிருந்து வரும் ஒருவன் கண்டபோது, அவனணிந்திருந்த உடையைத் தொட்டுப் பார்த்து "இதுதானே காந்தி துணி?" என்று கேட்கிறான். அந்தோ! இவன் அறியாமை யெவ்வளவு துக்ககரமானது! "நமது நாட்டில் உற்பத்தியாகும் பஞ்சை நாமே நூலாக நூற்று, நாமே நெய்து, அணிந்துகொண்டால் நமது தரித்திரம் நீங்கி நம் நாடே க்ஷேமப்படும் என்ற உண்மையைக் காந்திமகான் நமக்குப் போதித்தார். ஆகையால் நாம் அவ்வாறே செய்யவேண்டும்" என்ற உணர்ச்சி யிவனுக்கில்லை. விரிக்கிற் பெருகும் என அஞ்சுகிறோம்.

ஆங்காங்கு சங்கங்களை யேற்படுத்தும் தேசாபிமானிகள் கிராமங்களில் சங்கங்களைத்தாபித்து, பாமரஜனங்களுக்கு விஷயங்

களைப் போதித்து, அவர்களுக்குத் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்காக வேலை செய்வதில் ஊக்கத்தை யுண்டாக்கின் அப்போது தான் பாரதமாதா சந்தோஷமடைவாள். நமது பெருங்குறையும் ஒழியும். அம்பலத்திலாடல்புரியும் அண்ணலே அருள் புரிய வேண்டும்.

ஓம் தத்ஸத்.

---

## கோமுட்டிகளின் தந்திர சாமர்த்தியம்.

நமது நாட்டிலுள்ள கோமுட்டிச் செட்டிகள் என்ற வகுப்பாரிடம் சில விசேஷ குணங்களுண்டு. அவர்கள் பரம்பரையாய் வர்த்தகத்தையே தொழிலாக வுடையவர்கள். ஆண்பாலார் பெண்பாலார் இருவரும் வர்த்தகம் செய்வார்கள். மாதர்கள் கடையில் உட்கார்ந்து வர்த்தகத்தை நடத்துவதோடு வீட்டிற்குள்ளிருந்தபடி தங்கள் கைத்தொழிலால் பண்டங்களை யுற்பத்திசெய்து ஆடவர்களிடம் கொடுத்துக் கடையில் விற்கச் செய்வார்கள். இவ்வகுப்பார் சொற்ப வர்த்தகமாகிய அரைரூபா ஒரு ரூபாய்க்கு கடலை பட்டாணி வாங்கி விற்பது முதல் கப்பல் வர்த்தகம் வரையில் செய்வார்கள்.

வியாபாரிக்கு வேண்டிய முக்கியமான குணங்களில் சில இந்த வகுப்பாரிடம் இயற்கையா யமைந்திருக்கின்றன. இவர்கள் தங்கள் கடைக்கு ஒருவர் பேரம் செய்யவரின் வருகிறவர்கள் யாராயிருப்பினும் அவர்களிடம் மரியாதையாய் இனிய வார்த்தைகள்பேசி, அவர்கள் ஒரு பண்டம் கேட்டால் அதைக் கொடுப்பதோடு நிற்காமல், தங்களிடம் இருக்கும் மற்ற பண்டங்களையும் கூறி, இது புதுசரக்கு, நயம், இதுவேண்டுமா, அது வேண்டுமா என்று கேட்டுக் கடைசியில் வந்தவர் இன்னும் இரண்டொரு பண்டங்களையும் வாங்கும்படி பெரும்பாலும் தூண்டிவிடுவார்கள். கடைசியில் அவர்கள் போகும்போது வந்தனமளித்து "தயவிருக்கவேண்டும்" என்று கூறி யனுப்புவார்கள். இதனால் இவர்களிடம் ஒரு முறை பேரம் செய்தவர்கள் மறுபடி கடைவீதிக்கு வந்தால் இவர்கள் கடைக்கே செல்ல வேண்டுமென்ற விருப்பமுடையவர்க ளாய்விடுகிறார்கள்.

இவர்கள் கடன் கொடுப்பது அரிது. அதிலும் கடன் கொடுத்துப் பத்திரம் எழுதி வாங்கும் விவகாரமே வைத்துக்கொள்ளமாட்டார்கள். நியாயாதிபதியிடம் செல்லும் விவகாரமே வைத்துக்கொள்ளலாகாது என்பது இவர்கள் எண்ணம். கடையில் யாருக்கேனும் கடன் கொடுக்க நேர்ந்தால் யோக்கியதை யறிந்து கொடுப்பார்கள். இவ்வகுப்பாரில் யாசகர்களையாவது, குற்றம் செய்து தண்டனை யடைந்தவர்களையாவது காண முடியாது. இவர்கள் தங்களுக்கு நஷ்டம் நேரிடின் அது யாவர்க்கும் தெரிந்தால், மதிப்பு குறைவாகுமென்று கருதி அதை வெளியிடவேமாட்

டார்கள். இரவில் இவர்கள் வீட்டில் ஆயிரம் ரூபா மதிப்புள்ள நகைகளோ ரொக்கமோ வைக்கப்பட்டிருந்த பெட்டியைக் கள்ளன் கொண்டு போய்விட்டு, உடைக்கப்பட்ட பெட்டி வெளியில் அகப்பட்டு, சங்கதி பிரஸ்தாபத்திற்கு வந்து விட்டதென்று வைத்துக்கொள்வோம். அப்போது போலீசார் வந்து கேட்டால் கூட "இராத்திரி ஆபெட்டலோ நேனு ஏமி பெட்டலேது. ஆமுண்டாகொடுகு தானிலோ ஏமோ உன்னு தனிஎன்சி எத்துகொனிபோயி கடான ஏமாறி போயினுடு லஞ்சா கொடுகு" என்று கூறிவிடுவார்கள்.

ஒருவர் தங்களை வைதாலும், வேறெவ்விதமாய்க் கோபமூட்டினாலுங் கூட நீதிச் சபைக்குச் செல்லும் வேலைவைத்துக்கொள்ளவே மாட்டார்கள். அத்தகைய சந்தர்ப்பங்களில் இவர்கள் நடக்கை கோழைத்தனம் போல் தோன்றும். இவர்களுடைய தந்திரத்தைப்பற்றி யொரு கதையுண்டு. அதாவது:—

பத்து கோமுட்டிகள் ஆளுக்கு நானூறு ஐந்நூறு ரூபாய் எடுத்துக் கொண்டு சரக்குபிடிக்க வெளியூருக்குப் புறப்பட்டார்கள். வழியில் மூன்று பேர் கள்ளர் வந்து அவர்களை மடக்கிக்கொண்டு பயமுறுத்திப் பண மூட்டைகளைப் பிடுங்கிக்கொண்டார்கள். தாங்கள் பத்துப்பேராய் இருந்தும் தைரியக் குறைவால் மூன்று கள்ளருக்கு என் பயப்படவேண்டும் என்ற யோசனையும் தீரமும் அவர்களுக்கு உண்டாகவில்லை. கள்ளருக்கு இதனால் அதிக துணிகரம் பிறந்தது. ஆகவே கள்ளர்கள்,

"அடே கோமுட்டிப்பயல்களே! சற்று நேரம் எங்கள் முன் கொஞ்சம் கூத்தாடினால்தான் உங்களைப் போகவிடுவோம்" என்றார்கள்.

கோமுட்டிகள் என்ன செய்வார்கள் பாபம். விழித்தார்கள். ஆனால் அதற்குள் அவர்களில் ஒருவனுக்கு உள்ள நிலைமையைப்பற்றிய சிந்தனையுதித்தது. அதன்மேல் அவன் தன் ஆட்களை நோக்கி "பெத்தமனுஷுலு அட்லு செப்பேடப்புடு ஏமிசேசேதி—நேனுபாடுதானு. தானி கவனின்சி தானிகிசரிகா ஆடண்டி" என்று கூறிவிட்டுப் பின் வருமாறு பாடினான்:—

" தாதை தக்கத் தோம்
தாதை தக்கத் தோம்
நாம்பளும் புலிமின்னு — தாளரும் திருவின்னு
சாவின்னுத் தாளனே — திருவின்னு சுத்தினால்
சாவின்னுத் தாளன்மீதி — தக்கத்தோம் தக்கத்தோம் "

இதில் இரகசிய அர்த்தம் அடங்கி யிருக்கிறது. எப்படியெனில்:—வர்த்தகருக்குள் எண்களுக்கு இரகசியமான பரிபாஷையுண்டு. அதன்படி புலிமி என்றால் பத்து — திரு என்றால் மூன்று — சாவின்னு என்றால் ஒன்று — இதன்படி இப்பாட்டிற்கு அர்த்தம்,

நாம்பளும் புலிமின்னு = நாமோ பத்துப்பேர் இருக்கிறோம்.
தாளரும் திருவின்னு = இந்த ஆசாமிகளோ மூன்றே பேர்.

சாவின்னுத்தாளனே திருவின்னு சுத்தினுல் = அவர்களில் ஒவ்வொரு வனையும் நம்மில் மும் மூன்றுபேர் சூழ்ந்து பிடித்துக்கொண்டால்,

சாவின்னுத் தாளன்மீதி = (அப்போதும் நம்மில்) ஒருவன் மீதியா யிருக்கிறுன்.

இப்பாட்டைக் கேட்டவுடனே மற்ற கோமுட்டிகள் அர்த்தம் தெரிந்துகொண்டு, பாய்ந்து கள்ளரைப் பிடித்துக்கொண்டார்கள். மீதி யிருந்த ஒருவன் கள்ளரைக் காட்டி யுதைக்கத் தங்கள் பணத்தைக் கைப் பற்றிக்கொண்டார்கள். —————— சீடன்.

## ஹிந்துமதம் — அதன் பெருமை.

(ஸ்ரீமான் வி. நாராயணசாமி ஐயர் எழுதியது.)

நாம் ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றி எழுதப் புகுந்தால், முன்னுல் அதன் சரித்திர சம்பந்தமானவைகளை ஆராயவேண்டும். அதாவது, அத னுடைய ஆரம்பம், வளர்ச்சி, தற்கால நிலைமை முதலியவைகளைக் கவ னிக்கவேண்டும். நம் ஹிந்துமதத்தைப்பற்றி எழுதப் புகுந்த சமயத்து, அஃது எக்காலத்தில், எவரால் தாபிக்கப்பெற்றது? அது எவர்களால் அனுசரிக்கப்பட்டு வருகின்றது? அதற்கு மத்தியில் ஏதாவது மாறுதல் கள் உண்டாயினவா? எனும் வினக்களுக்கு விடையளிக்க வேண்டியவர் களாகிறோம்.

### மதம் என்பது யாது ?

முதன் முதல் மதம் என்பது யாது, என்பதை ஆராய்வோம். அது மனிதனுக்கு, அதீதமாயிருக்கும் சக்திக்கு அடங்கியாவது, அல்லது, சகு ணமாயிருக்கும் ஒரு கடவுளின் கட்டளைக்காவது, தாழ்ந்து நடக்கவேண்டு மென்று மனிதனுக்குத் தோன்றும் ஓர் இயற்கை உணர்வெனலாம். ஆகை யால் உலகத்தில் ஒரு மனிதன் எந்த மதத்தையாவது சாராம லிருக்கமுடி யாது. அவனுடைய தினசரி நடவடிக்கைகள் அதன் சார்பாகவே நடை பெறுகின்றன.

ஆகவே நம்மாலும் நம் முன்னோர்களாலும், அனுசரிக்கப்படுகிறதும், அனுசரிக்கப்பட்டதுமான மதம் ஹிந்துமதமெனப்படும். நாம் அனுசரிக் கின்ற மதத்திற்குப் பூர்வகாலத்தில், ஹிந்து மதமென்னும் பெயரே கிடை யாது. ஆனுல் அது, ஆரியமதம், சநாதன தர்மம், வைதீக மார்க்கம் எனும் அரிய பெயர்களை உடைத்தாயிருந்தது. காலக்கிரமத்தில் வெவ் வேறு மதத்தைத் தழுவிய தேசத்தவர்களுடன் சேர்ந்ததாலும், நம் முன் னோர்கள் முன்காலத்தில் சிந்து நதிக்கரையில் வசித்த காரணத்தாலும், சிந்தியர்களென்று வந்து அப்புறம் ஹிந்தியர்களாய், அவர்கள் அனுசரிக் கும் மதத்திற்கு ஹிந்து மதம் எனும் பெயர் அவர்களால் (அன்னியரால்) வழங்கலாயிற்று.

### ஹிந்து மதத்தின் புராதனம்.

நாம் நம் மதத்தை எவ்வளவு காலமாக அனுசரித்து வருகின்றோம், இம்மதம் எவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது எனும் வினக்கள் நிகழ்கின்றன.

மேனாட்டாரின் சரித்திரத்திலிருந்தும், சாஸ்திரத்திலிருந்தும், நமக்கு ஒருவிதமான திட ஆதாரமும் இவ்விஷயத்தில் கிடைக்கவில்லை. அவர்கள், மனித சிருஷ்டியே 6,000 வருடங்களுக்கு முந்தா னென்றும், யூதர்கள் தான் (Jews) முதன் முதல் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட பாக்கியம் பெற்றார்களென்றும், அனேக நூற்றாண்டுகளாக நம்பி வந்தார்கள். ஆனால் சமீபகாலத்தில், ஆராய்ச்சிக்காரர்கள், எகிப்து (Egypt) தேசம் 8,000 வருடங்களுக்கு முன் நாகரிகத்தில் சிறப்புற்றதாயிருந்ததென்று சொல்லிவிட்டார்கள். நாம் முன் காலத்தில் எகிப்து தேசத்தோடு வர்த்தகம் புரியும் அவ்வளவு நாகரிகம் உடையவர்களாயிருந்தோமென்று சரித்திரம் கூறுகின்றது. ஆகையால் நம் கால அளவோ அவர்களின் மனதிற்கே எட்டாததாக இருக்கின்றது. இந்தியாவின் பூர்வ சரித்திரத்தை, எவ்வளவு காலம் வரையில் நிர்ணயிக்கலாம் என்பதற்கு ஆராய்ச்சிக்காரர்கள் முயன்றிருக்கின்றார்கள். ஹிந்து மதத்தை அனுசரிக்கின்றவர்கள், ஆரியர்களாதலால் அவர்கள் கால நிர்ணயமும் நமக்கு அவசியமாகிறது.

நம் ஹிந்துமத புத்தகங்களில் அதி புராதனமானது ருக்வேதம் என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். இப்புத்தகத்தை இயற்றின நம் மூதாதையர்கள், முதன் முதல் இந்தியாவிலேயே இருந்தார்களில்லை. அதிக உத்தரப் பிரதேசத்திலிருந்தே குடியேறினார்கள். அவர்கள் அப்படி சுயதேசத்தை விட்டுக் குடியேறினதற்குக் காரணம் உண்டு. பிரகிருத பூகோள சாஸ்திரப் பிரகாரம் (Physical Geography) பூமியில், அடிக்கடி மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. அனேக வருஷங்களுக்கு முன் பூமியின் வடபாகங்களைச் சமுத்திரம் உண்டு பனிமூடிய காரணத்தால், ஜனங்கள் வசிப்பதற்கு சௌகரியப்படாதென்று, சூடாயிருக்கின்ற தெக்ஷண தேசங்களை அடைந்தார்கள். இது சுமார் கி. மு. 15,000 வருஷங்களுக்குமுன் என்று மேனாட்டு சாஸ்திரக்காரர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

### யுகங்களின் பிரிவு.

நம்மவர்கள் காலநிர்ணயம் செய்வது வேறு தன்மையானது. ஆரியர்கள் இந்த ஜம்புத்தீபத்தில் அதாவது ஐரோப்பாவும் ஆசியாவும் சேர்ந்த பாகத்தில் வருவதற்கு வெகுகால முன்னமேயே வசித்திருக்கவேண்டும். அக்காலங்களை அவர்கள் யுகங்களாகப் பிரித்துக்கொண்டார்கள். கிருத யுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் இந்நான்கும் சேர்ந்து ஓர் சதுர்யுகமாகிறது. இவைகள் 43,20,000 வருஷங்களாகின்றன. திரேதா யுகத்தில் ஆரியர்கள் ஹிமயமலைச் சாரலில், சூர்ய சந்திர வம்சத்து அரசர்களால் ஆளப்பட்டார்களென்று சரித்திரம் கூறுகின்றது. இது கி. மு. 1,80,000 வருஷம் வரையில். அதற்குப்பின் துவாபரயுகம் இதில் பாரத யுத்தம் நடந்ததாகத் தெரிகிறது. சுமார் கி. மு. 3,100 வருஷங்களுக்கு முன் கிருஷ்ணபகவான் வைகுண்டம் சென்றார். அன்று முதல் கலியுகம்

ஆரம்பித்து இப்பொழுது 5,025 வருஷங்களாயின. கலியுகம் 4,32,000 வருஷங்களுள்ளது. மற்ற வருஷங்கள் முடிந்த பிறகு அடுத்த சதுர்யுகம் ஆரம்பமாகும். இவற்றால் ஆரியர்கள் அனேக ஆயிர வருஷங்களுக்கு முன் இருந்தார்களென்றும், அவர்கள் அந்தக்காலத்திலேயே பெரும் தத்வ புத்தகங்களை வேதமாகவும், அவர்கள் வரலாறுகளை இதிகாஸ புராணங்களாகவும், சட்டங்களை தர்ம சாஸ்திரம் அல்லது ஸ்மிருதிகளாகவும் இயற்ற வல்ல நாகரிகத்தை அடைந்திருந்தார்களென்றும், அவர்கள் மதம் ஒருவராலேயும் ஏற்படுத்தப்படாமல் அநாதியானதென்றும் தெரியவந்தது.

காலதேச வர்த்தமானங்களுக் கேற்றாற்போல நாகரிகம் உண்டாகிறது. நாகரிகத்திற்கும் அனுசரிக்கும் மனிதர்களின் மனப்பான்மைக்கும் ஏற்றாப்போலும் உண்மை அறிந்தவர்கள் சில மதங்களை ஆங்காங்கு ஸ்தாபிக்கின்றனர். ஆகையால் மதங்களுக்குள் உயர்வு தாழ்வென்பது கிடையாது.

## மதச் சீர்திருத்தம்.

சில சமயங்களில் மத சாதாரண வழக்கங்கள் சீர்திருத்தப்படவேண்டும். அப்படி அடிக்கடி சீர்திருத்தப்பட்டும் வருகின்றன. நம் ஹிந்து மதமும் அனேக மாறுதல்களை அடைந்திருக்கின்றது. உலகத்திலிருக்கின்ற ஒவ்வொரு மதமும் பொதுவாகச் சில கொள்கைகளை உடையதாயிருக்கின்றது; தனக்கு மட்டும் உரித்தாயிருக்கின்ற சில கொள்கைகளை உடைத்தாயிருக்கின்றது. ஆனால் மனித அறிவுக்கேற்றாப்போல அவ்வப்போது சீர்திருத்தப்பட்டும், மனிதருக்கு திகழும்படியான பெரும் சந்தேகங்களை நீக்கக்கூடியதாயு மிருக்கின்ற மதங்களே உத்தமமானதெனலாம். சில மதத்தினர்கள் மூட நம்பிக்கையால் மதத்தைச் சீர்திருத்துதல் ஆகாத காரியம் என்கிறார்கள். அதனால் மத வளர்ச்சி குன்றுகின்றது.

நமது தேகம், மனம், ஆத்மாவெனும் இம்மூன்றிலும், முறையே ஒன்றைவிட ஒன்று மேலானதும், அதிககவனத்தைச் செலுத்தவேண்டியதாகவுமிருக்கிறது. ஆத்மாவைப்பற்றி யறியாதவர்கள் பெரிய ஞானிகள் அல்ல. ஒவ்வொருநாட்டுப் பெரிய தத்வஞானிகளும் ஆத்மாவைப்பற்றின விஷயங்களிலேயே சர்ச்சை செய்து வருகின்றார்கள். ஆனால் ஒரு சில மதத்தினர்களே அரும் பெரும் விஷயங்களைக் கண்டறிந்திருக்கின்றனர். ஹிந்துக்களைவிட இத்தகைய ஆத்ம ஞானத்தை யுடையவர்கள் நாமென்று வேறு யாரும் தலையெடுக்க முடியாது. "பல்லாயிரக்கணக்கான வருஷங்கள் தவமிருந்தாலும் ஹிந்துக்களைப்போல ஆத்ம ஞானத்தில் வளர்ச்சி பெற மேல் நாட்டாரால் முடியாது. ஆத்மஞானத்தைப் போதிக்கும் சாஸ்திரங்களை மேல் நாட்டார் எழுதினார்களில்லை; எழுதுகின்றார்களில்லை; எழுதப்போவதுமில்லை" என்று மேக்ஸ்முல்லர் (Max Mullar) என்னும் பெரிய ஆங்கிலர் ஒருவர் தம்மால் இயற்றப்பட்ட ஷட் தர்சினி (Six Systems of Indian Philosophy) எனும் புத்தகத்தின் முகவுரையில் அபிப்பிராயப்படுகிறார்.

### தற்காலத்தில் ஆத்மஞானப் பயிற்சி.

எல்லா ஞானத்திலும் ஆத்மஞானம் சிறந்தது. வித்தைகளில் அத்யாத்ம வித்தை நான் என்று கிருஷ்ணபகவான் கீதை வாயிலாக உபதேசிக்கின்றார். அதிகம் சொல்லி என்? ஹிந்துமதத்தைவிட வேறெந்த மதமும் ஆத்ம ஞானத்தைப் போதிக்கும் சாஸ்திரங்களை உடைத்தாயில்லை. ஆத்மஞானமல்லவோ இம்மையிலும் மறுமையிலும் சுகத்தைக் கொடுப்பது. அஃதல்லவோ கண்ணேபோல் போற்றத்தக்கது. ஆனால் ஆரிய மக்களில் எத்தனைபேர் அவ்வாத்ம ஞானத்தை இக்காலத்தில் கற்க முயற்சிக்கின்றனர்? மேனாட்டு லோகாயத நாகரிகம் பரவியிருக்கின்ற இக்காலத்தில் எத்தனை ஆரிய மாந்தர் ஞானவாசிட்டம், சிவஞானபோதம், கைவல்யம் முதலிய நூற்களை ஒதுகின்றனர். அந்தோ! பாரத்வாஜர், வசிஷ்டர், மைத்திரேயர் முதலியவர்களின் சந்ததிகளில் பிறந்தவர்கள் நாங்கள், அக்கோத்திரத்தை யுடையவர்கள் நாங்கள், எனும் சொற்களுக்கு உடையவர்களா யிருக்கிறார்களே தவிர அவர்களாலியற்றப்பட்ட நூற்கள் இருக்கின்றனவா என்றும் அறியாதவர்கள் எத்தனைபேர் இருக்கின்றனர்? இக்கோலம் நீங்கி எக்காலத்தில் அச்சாஸ்திரங்களில் கவனம் செல்லுமோ?

### ஆத்மா வென்பது என்ன?

ஆத்மாவென்பது யாது? இஃது எங்கிருந்து வந்தது? அஃது இவ்வுலகத்தில் செய்யவேண்டிய காரியங்களென்ன? இவ்வுலகத்தை விட்டதும் எவ்விடம் போகின்றது. இவ்வுலகங்களைத் தவிர ஆன்மா வசிக்கக் கூடிய வேறு உலகங்களிருக்கின்றனவா? என்பவைகளைத்தான் நாம் நம் மதத்திலிருந்து தெரிந்துகொள்ளவேண்டும். வேறுபல இருந்தாலும் முக்கியமானவைக ளிவைகளே.

ஒவ்வொரு மதமும் அதை அனுசரிக்கின்றவர்களுக்கு எதை நினைக்கவேண்டும், எதை விரும்பவேண்டும், எதைச் செய்யவேண்டும் எனும் மூன்று விஷயங்களைத் தெரிவிக்கின்றது. எல்லாத் தேசத்து மனோதத்வ சாஸ்திரக்காரர்களும், ஒரு மனிதனின் உணர்ச்சி, ஞானம், இச்சை அல்லது பக்தி, கிரியை என்று மூவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன வென்பதை ஒத்துக்கொள்ளுகின்றனர். இவைகளைத் தனித்தனியே தெரிந்தெடுக்க முடியுமானாலும் ஒன்றுக்கொன்று சேர்ந்துதானிருக்கும். இதைத்தான் மும்மார்க்கம் என்றும் சொல்வது. (தொடரும்)

(கடலூர் ஹிந்துசபையின் பிரசுரம்)

(நவசக்தி.)

---

## இலக்கணம்.

இலக்கணமாவது, நம் தமிழ்ப்பாஷைமட்டுக்குமல்ல; மற்றெல்லாப் பாஷைகட்கு முரியதே. இது, பாஷையின் இலக்ஷணமாகும். வடமொழியில் உள்ள வியாகரணத்தைவிட, நந்தமிழ் மொழி இலக்கணமே சாலச் சிறந்ததாகும். ஏனெனில், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி,

என்னும் ஐந்திலக்கணங்களினும் நடுநாயகமாக விளங்கும் பொருள் இலக்கணம், நம் தமிழ்ப்பாஷைக்குமட்டுமே யுண்டு. அத்தகைய பொருளிலக்கணத்தையே நம் கண்ணுதலவரும் சிறந்ததெனக்கருதி, "இறையனாரகப்பொருள்" என்னு நூலியற்றி யிருக்கின்றனரென்னில், இதன் மேம்பாடு வரைதற் பாலதோ! நங் கவிச்சக்கரவர்த்தியான கம்பநாட்டாழ் வாரும்,

"செவ்விய மதுரம் சேர்ந்தநற் பொருளிற் சீரிய
கூரிய தீஞ் சொல்" என்று சிறப்பித்துக் கூறி யுள்ளார்.

இத்துணைச் சிறப்பின் பாலதாய இவ்விலக்கணம், மேனாளில், திங்களங்குழவி வேய்ந்த சடைமுடிப் பெம்மானுக்கும், மலையரையன் புத்திரியான உமைக்கும், மணம் நிகழ்ந்தழி, இமவரையின்கண், ஈண்டிய பெருங் கூட்டத்தால், இந்நிலவுலகின் வடதிசை தாழ்ந்தும், தென்திசை யுயர்ந்தும், சமனுகாவிடத்துச் சமஞ் செய்தற்குக் குறுமுனிவனைத் தென்னாடு செல்வாயாக வென்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள, அகத்தியனார், தென்னாட்டின்கண் வழங்குந் தமிழ்ப்பாஷையை யடியேற் கருளவேண்டுமென்று கழற, அவ்வண்ணம் ஆண்டே, தமிழிலக்கணத்தைத் திருவாய் மலர்ந்தருளினார். அது முதலே, நம் தமிழ்ப்பாஷையானது, வரிவடிவமுள்ள எழுத்துக்களான் அமையப்பெற்று வழங்கி வருகிறது. அதற்கு முன்னர், ஒலி வடிவுள்ள வெழுத்துக்களான்மட்டும் நிலவி வந்தது. அதற்குச் சான்று, வடமொழியில் கூறிய வேதத்தை எழுதாக் கிளவி யென்னும் பெயர் புனைந்து கூறுகிறார்கள். அதனால் வடமொழி ஒரு காலத்தில், வரிவடிவுள்ள வெழுத்துக்களைப் பெறாதிருந்ததுபோலும். பாணினி முனிவர்க்கு வியாகரணத்தைச் சிவபெருமான் அறிவுறுத்திய பின்னரே வரிவடி வெழுத்துக்கள் வெளியாயின. பிறகுதான் வேதத்தை வரிவடி வெழுத்துக்களா னெழுதி, எல்லோரும் இலகுவாகக் கற்கிறார்கள் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

நிற்க, அகத்தியனார்தாம் முதலில் இலக்கணம் செய்தனர் என்றும், அவர் காலத்திற்கு முன்னேயே, தமிழ்த் தெய்வமான குமாரக் கடவுளால் செய்யப்பட்ட இலக்கணம் "குமரம்" என்னும் பெயருடன் இருந்ததென்றும் கூறுகிறார்கள். இக்காலத்து உலவிவரும் இலக்கணங்களில், மிகச் சிறந்து விளங்கும் நூல், தொல்காப்பியமே யாம். இது, தலைச் சங்கத்தார்க்கும் இலக்கணமாக விளங்கி வந்தது. இந்நூற் பெருமைக்காகவே, இந்நூலாசிரியருக்கு, ஒல்காப்புலமைத் தொல்காப்பியனார் என்னும் சிறந்த நாமம் வழங்கி வருகின்றது. இத்தொல்காப்பியம், இயற்றமிழ் இலக்கணம் ஒன்றுமே கொண்டுள்ளதாகும். மற்றைய, இசைத்தமிழ், நாடகத் தமிழ் முதலிய இலக்கணங்களை இவர் செய்யவில்லை என்பது, பனம்பாரனார் கூறிய சிறப்புப்பாயிரத்தான் விளங்கும்.

"வழக்குஞ் செய்யுளு மாயிருமுதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளுநாடி"

என்றாராகலின்.

பிற்காலத்ததாகிய நன்னூல், சின்னூல், காரிகை, அகப்பொருள் முதலியயாவும், தொல்காப்பியங் கற்கப் புகுவார்க்கு வழி காட்டிகளாக விருக்கின்றன. இத்துணையான தமிழிலக்கணங்களைக் கற்றாலன்றி, தமிழ்ச் செய்யுள்களின் பொருள்களை யறிதல் அசாத்தியமாகும். ஆனது பற்றி இலக்கணம் இலக்கியத்துக்கோர் கருவி யென்றுரைக்கிறார்கள்.

வேதாந்த சாஸ்திரங் கற்குஞ் சிலர்,

— " தொலைவில்லாச்
சத்தமும் சோதிடமு மென்றாங் கிவைபிதற்றும்
பித்தரில் பேதையா ரில் "

என்று வாயால்மட்டும் சொல்லி, உண்மையில் ஞானமடைந்தார் போன்றபி நயித்து விடுகிறார்கள். இவர்கள், விஷயந் தெரிதற்காக வசனநடையில் உள்ளவைகளைப்படிக்க ஆரம்பித்தாலும், அதற்கும் ஒரோவிடத்து இலக்கணவாராய்ச்சி வேண்டியதாயிருக்கிறது. எங்ஙனமெனில், "நீ அவ்விடமிருமதி, நான் வருவல்" என்றவிடத்து, மதியென்னும் சொல்லுக்கு, சந்திரனோ, மாதமோ, புத்தியோ என்னும் ஐயப்பாடு நிகழ்கின்றது. அந்தச் சொல், முன்னிலை யசையென்று தெரிந்திருக்குமாயின் அவ்வையப்பாடே தோன்றா தொழியும். இன்னும் "சிவஞானபோதம்", "சிவஞான சித்தியார்" "முதலிய நூல்களைச்செய்த பெரியோர்கள் இலக்கணநூல் கல்லாதவரா? அன்றியும் அத்தகைய நூல்களின் உரையாசிரியரான, சிவஞான சுவாமிகள், இலக்கணம் தெரியாதவரா? என்பதையும், இச்சிவஞான சுவாமிகள் எழுதிய மேற்சொன்ன புஸ்தகங்களின் உரைகளையும் வாசித்தறியவேண்டின், இலக்கணமின்றி யியலுமோ வென்பதையும், நன்கறிந்தார்களாயின் அப்படி நினைக்கமாட்டார்கள். இந்திரனும், பிருகஸ்பதியால், இவை வழுவுள்ளன, இவை வழுவில்லனவென்று வடமொழி இலக்கணம் மிக்க கற்பிக்கப்பட்டிருக்கிறான். ஆயின் யாவரே யாயினுமாகுக, இலக்கணங் கற்றலே பாஷையின் விருத்திக்கு ஏற்றதாகும்.

இதிகாசபுராண முதலியன வாசிப்போர், இலக்கணத்தானன்றி அவைகளின் மேன்மையை யடையார். கல்லாதார் செய்யுள்களின் பொருளாராய்ச்சியில் இடர்ப்படுவர். அவைகளிற் சில ஈண்டுக் காட்டுதும். ஒருவர், வில்லிபாரதத்தில், கிருட்டினன் தூதுச் சருக்கத்தில், "உமைக்கு நாயகனிர வொழித்தருளினான்" என வருமடியில், "இரவு" என்னும் பதம் காலப் பெயர் என்று இடர்ப்பட்டனர். அவருக்கு, அப்பதம், 'வு' கர விகுதி பெற்ற தொழிற்பெயர் என்று சொன்னால் விளங்கிற்றில்லை. அது, இலக்கணநூலாராய்ச்சி யின்மையே யாம்.

கம்பராமாயணத்தில், " குற்றபாகு கொழிப்பவர் " என்றற் றொடக்கத்துச் செய்யுளில், குற்றபாகு கொழிப்பவர் கோழிப்பன என்னும் சொல்லெச்சமும், திணை மயக்கமும் கலந்து காண்கிறது. அன்றியும் " முல்லையணிந்த முறுவல்", " அமிர்தகு குதலை " என்பனவற்றில்,

அணிந்த, உகு என்பன உவமைச் சொற்கள் என்பதும் புலப்படுகின்றன. இவைகளைத் தெரிதற்கும் இலக்கணம் மிகவும் முக்கியமே.

"வாய்பவளம்", "வாய்ப்பவளம்" ஆகிய இரண்டு பதங்களும் பொருளில் வேறுபடுகின்றன. எங்ஙனமெனில், ஒரு ஒற்றெழுத்தாகிய "ப்" என்பதன்றோ பொருளை வேறு படுத்தியது. முன்னது எழுவாய்த் தொடர். வாயானது பவளம் என்னும் பொருளின்மேற்று. பின்னையது இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. வாயாகிய பவளம் என்னும் பொருடரும் உருவகம். இங்ஙனம் ஒரு தொடரில் வந்தவழி, எழுவாய்த் தொடரில் வலிமிகாமையும், பண்புத் தொகை வலிமிக்கு வருவதையும் இலக்கணம் தெரியாதார் என்னென்ன பொருள் கொண்டு விடுவார்களென்பதை யாராய்ந்து பார்க்க.

திருக்குறள் முதலியனவற்றின் உரைகளில் உரையாசிரியர்கள் இது ஒட்டு, இது ஆகுபெயர், இது உருவகம், இது அன்மொழித்தொகை, இது தீவகம் என்று மாத்திரம் எழுதிவிட்டிருக்கிறார்களே யொழிய அவைகளை ஆண்டாண்டு விளக்குவதில்லை. அஃதவர் குற்றமே யன்றோ? அவைகளை முன்னரே யறிந்துகொண்டல்லவோ மற்றவைகளை வாசிக்கவேண்டும். மற்ற விஷயங்களையும் எடுத்துக் காட்டுவதென்றால், எழுதவும் முடியாது. இடமிடந்தராது. ஆகையால் இத்துடன், ஒவ்வொருவரும், ஆவசியகமாய்த் தமிழிலக்கணத்தைப் பயிலவேண்டுமென்றும், இனி நம்மானந்தனுக்கும், இலக்கண சம்பந்தமானவும், இலக்கிய சம்பந்தமானவும் பாஷையை விருத்திசெய்யத் தகுந்த விஷயங்களைத் தானம் செய்வார்களென்றும் எல்லாம் வல்ல ஈசனை யிறைஞ்சுகின்றேன்.

கோ. பாலசுந்தரம், காரியதரிசி,
உபாத்திமைச் சங்கம், பெருங்கட்டூர்.

---

குறிப்பு:— நமது நண்பர் வரைந்துள்ள இலக்கணத்தைப் பற்றிய விசேஷம் யாவரும் — முக்கியமாய் மாணவர்களும், உபாத்தியாயர்களும் அவசியம் கவனிக்கத்தக்கது. இக்காலத்தில் பாடசாலைகளில் இலக்கணம் மிக்க அலட்சியம் செய்யப்படுவதே நம் அருமைத்தாய்மொழி குன்றிவிடுவதன் காரணமாகும்.

நமது நண்பர் வேதாந்தசாத்திரங்கற்கும் சிலர் மொழிவதாக் கூறிய,

"தொலைவிலாச் சத்தமும் சோதிடமு மென்றோங் கிவை பிதற்றும்
பித்தரில் பேதையாரில் "

என்பதைப்பற்றி மட்டும் இரண்டொரு வார்த்தை கூற விரும்புகிறோம்.

கல்வியில், சாதாரண இலக்கண இலக்கியக் கல்விமட்டும் கற்பதாகிய பாஷைக் கல்வி யொன்று — ஆன்மார்த்தக் கல்வி யொன்று. இவற்றில் முன்னைய கல்விமட்டும் கற்பதால் அகங்காரமும் அஞ்ஞானமும் ஒழிவதில்லை. அதற்குமாறாக அகங்காரம் அதிகரித்து ஞானவான்களையும், இவ

னென்ன இலக்கண விலக்கியத்தில் ஈமக்கிணையா என்று, அவமதிக்கச் செய்கிறது. ஆனதுபற்றி ஞானமடைய முயன்று சாத்திர ஆராய்ச்சி செய்வோர் தாம் வித்வானெனப் பிறரால் மதிக்கப்பட வேண்டுமென்னும் நோக்கத்தோடு இலக்கண இலக்கியக் கல்வியில் புற்று வைக்கலாகாது. வைத்தால் அது முடிவின்றி அத்துறையிலேயே யிழுத்துச் செல்லும். இதை வற்புறுத்திக் கூறவே அன்னார்களுக்கு ஆன்றோர் அவ்வாறு கூறினரேயன்றி இலக்கணத்தை அவமதித்துக் கூறியதல்ல. சாத்திர ஆராய்ச்சி செய்வதற்கே (நம் நண்பர் கூறியபடி) இலக்கணம் அவசியம் வேண்டியிருக்கிறது. இலக்கண மறியான் கல்வி ஒருபோதும் கல்வியாகாது. நமது பாடசாலைகளில் நம்மக்களுக்கு இலக்கணம் போதிக்குமாறு ஏற்பாடு செய்ய முயல்வோரைத்தான் காணோம். இவ்வளவிற்கும் கல்வி மந்திரியா யிருப்பவர் நம்மவரே. ஆயினும் தமிழ்க்கல்வியின் அபிவிர்த்திக்கு அத்தியாவசியமான இவ்விஷயத்தை அவர்களும் கவனிப்பதில்லை. இது நமது கெட்டகாலமே. ஆண்டவன் எப்போ, தருள்புரிவாரோ அறியோம்.

பத்திரிகாசிரியர்.

---

## ஓர் சந்தோஷச் செய்தி.

### ஸ்ரீமான் இராவ் சாஹேப் R. கிருஷ்ணராவ் போன்ஸ்லே

என்ற உத்தம புருடரைப்பற்றிக் கழிந்த நவம்பர்மீ 20உ சென்னை இராஜாங்க கெஜட்டில் வெளியான ஒரு சமாசாரத்தையே நாம் ஓர் சந்தோஷச்செய்தி, என்று கூறுகிறோம். இவர் சென்னை வித்தியா இலாகா பரீக்ஷாதிகாரியின் (Commissioner for Government Examinations) மானேஜராகவிருந்த காலத்தில் தமது தொழிலில் காட்டிய சிரத்தையையும் நன்னெறியையும் நீதியையும் உணர்ந்து துரைத்தனத்தார் மேல் பதவியாகிய உதவி காரியதரிசி வேலைக்கு இவரை உயர்த்தி யிருந்தார்கள். இந்த வேலையில் இவர் காட்டிய திறமையால் திருப்தியடைந்த துரைத்தனத்தார் இப்போது இவருக்கு (ஆக்டிங்) காரியதரிசி பதவியையே யளித்திருக்கிறார்கள் என்று மேற்படி கெஜட்டில் பிரசுரித்திருக்கக் கண்டோம்.

பெருமை யின்மை, சதா பிறர்க்கு நன்மை புரிவதில் விருப்பம், பாரபட்சமின்மை, கருணை நிறைந்த சாந்தம் முதலிய சற்குணங்களே உருவாக வமைந்த ஒருவருடைய தகுதியை யுணர்ந்து கடவுளாயினும் துரைத்தனத்தாராயினும் அவர்க்கு உயர் பதவியோ, புகழோ, செல்வமோ அளித்ததை யறிந்தால் யாவர்க்கும் மனதில் மிக்க சந்தோஷமுண்டாவது இயற்கை. இப்போது இரஜாவில் சென்ற காயம் காரியதரிசிக்குப் பதிலாக இவர் அமர்த்தப்பட்டிருப்பினும், காலக்கிரமத்தில் அந்த வேலை காயமாக வேண்டுமென்றும், இவருக்கு நீண்ட ஆயுளும் தேகாரோக்கியமும் தந்து இன்னும் புகழடையுமாறு அருள்புரியவேண்டு மென்றும் கருணாநிதியாகிய பரம்பொருளைப் பிரார்த்திக்கின்றோம்.

ஆனந்தபோதினி.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (குரு.)

"குரு" என்பது அஞ்ஞானாந்தகாரத்தைப் போக்குகிறவர் என்று பொருள் தரும்: "கு" என்பது இருதயகுகை என்றர்த்தமாம். "ரு" ஒழிக்கிறவர் என்று பொருளாம்: அது இருதயமாகிய குகையின் கண்ணுள்ள அஞ்ஞானமாகிய அந்தகாரத்தை நீக்குகிறவர் என்ற பொருளில் கலந்து நின்றது. அஞ்ஞான இருளை நீக்குகிறவர் எனவே மெய்ஞ்ஞான ஒளியை அளிப்பவர் என்பது தானே யமையும். எனெனில் இருளற்ற இடமே ஒளியாவதும், ஒளியற்ற இடமே இருளாவது மாதலால் என்க. இதனால் "குரு" என்பவர் மனதின் கண்ணுள்ள இருளை நீக்கி மெய்ஞ்ஞான ஒளியை அளிப்பவராம். மெய்ஞ்ஞானம் பரப்பிரமத்தினுடைய சரீரமாம். பிரமத்துக்கு வேறு சரீரமில்லை. அகண்டஞானமே பிரம்மத்தின் சொரூபமென்று வேதங்கள் கூறுகின்றன. அது சத்து சித்து ஆனந்தமென்கிற முப்பகுதியா யுள்ளது. ஆயினு மொன்றுக்கொன்று வேறுபட்டதல்ல. எங்ஙன மெனின், "சத்து" என்பது உண்மை, நித்தியமெனப் பொருள்படும். "சித்து" என்பது ஞானமாம். ஆனந்த மென்பது அவற்றாலாகிய குணமாம். சித்து என்கிற ஞானமே நித்தியமாயுள்ளது. அழிவற்றது. குறைவில்லாதது. தளராதது. அதுவே யானந்த மயமானது. இதனால் ஞானமென்ப தொன்றே முத்திறத்தாய்க் கூறப்படுவதன்றித் தனித்தனியாய் வேறுபட்டுளதல்ல. இதுபற்றியே பிரமத்தைச் சத்துச்சித்தானந்த சொரூபி யென்று கூறுவது. இந்த ஞானத்துக்கு வேறுபட்டன வெல்லாம் அசத்தென்று கூறப்படும். அதாவது அநித்தியம், அழிவுள்ளது என்பது. சத்து அசத்தென்பவற்றின் இயல்பை புணர்வதே ஞானமாம்.

ஞானமே பிரமத்தின் சொரூபமானால் அதனை யிருளாகிய மாயாகாரிய கருவிகளைக்கொண்டு காண்பது கூடாது. எனெனில் இருளும் ஒளியும் போல் ஒன்றுக்கொன்று மாறுபட்டு நிற்பது. இருளுள்ள இடத்தில் ஒளி நில்லாது, ஒளியுள்ள இடத்தில் இருள் நில்லாது. ஒளிமயமான மெய்ஞ்ஞானத்தை ஒளியினாலேயே யறியவேண்டும். இருதயகமலத்தில் பந்தத்தினால் சிற்றறிவனான ஆன்மா பரமான்மாவைக் காணமுடியவில்லை. இருதயம் சுத்தமானால் அது ஒளியுள்ளதாகும். அப்போது ஆன்மா தன்னை புணர்ந்து பின் தலைவனாகிய பிரமத்தை அறியும். அறியவே அந்த மெய்ஞ்ஞானக்கினியினால் பந்தம் தகிக்கப்பட்டு ஆன்மா பேரொளியான பிரமத்தொடு கலந்து மோட்சமென்னு மீளாநிலைமையை அடைந்துவிடும். இதற்காகவே முன்பு கூறிவந்த வர்ணாசிரமங்களும் அவற்றினா லியற்றப்படுங் கன்மங்களும் விதிக்கப்பட்டன. இவற்றை யெல்லாம் ஒருவன் எத்தனை நூல்களைக் கற்றாலும் அறியமாட்டான். எனென்றால் சிற்றறிவனாகிய ஜீவன் ஒருவன் உணர்த்த உணரும் வன்மையை இயல்பாகவுடையவனே யன்றித் தானே புணர்ந்துகொள்ளு மியல்புள்ளவனல்ல. உலகத்தில்

ஒருவன் செய்ததைப்பார்த்து அல்லது கேட்டு மற்றொருவன் அதுபோலச் செய்வது சுபாவம். அற்ப காரியங்கள்கூட ஒருவனும் சுயமாகவே யறிய முடியாது. எல்லாம் ஒருவனைக் கேட்டே தெரிந்துகொள்ளவேண்டும். இது ஜீவான்மாவி னியற்கையாதலால் அதனை மாற்ற முடியாது. ஒருவன் தானே யுணர்ந்துகொண்டா னென்றால், அது முன் ஜன்மத்தின தொடர்பாகும். எல்லாவற்றுக்கும் குருவுபதேசம் வேண்டும். அறிவு என்பதெல்லாம் பிரமத்தினுக்குரியதே யாதலால் எந்த அறிவை ஒருவன் போதித்தாலும் அவன் குரு எனப்படுவான். அக்குரு சகலகலைகளையும் குருமுகத்தா லோதி யுணர்ந்தவரும், சத்து அசத்துக்களின் தன்மை யுணர்ந்தவரும், அதனால் மெய்ஞ்ஞானம் வாய்க்கப் பெற்றவரும், மெய்ஞ்ஞானத்தினால் பிரமானுசந்தானம் செய்து நிஷ்டை கூடினவரும், ஐம்புலன்களையும் வென்றவரும், ஆசையற்றவரும், நிர்மலச்சித்தமுடையவரும், காலதேச வேறுபாட்டால் மனநிலைத் தளராதவருமா யிருத்தல் வேண்டும். இத்தன்மை யுடையவரது உபதேசம் பசுமரத்தாணிபோலச் சீடன் மனத்தில் உறுதியாய் நிலைபெற்று மோட்சானந்த மயமாக்கும்.

குருவைச் சீடன் தெய்வமாகவும் பிதாவாகவும் பாவித்துச் சோம்பலில்லாமல் அவரிட்ட பணிவிடைகளைச் செய்யவேண்டும். அப்படி யிருந்தால் குரு சீடனைத் தமது புத்திரனாகப் பாவித்து யாவற்றையும் போதிப்பார். பூர்வகாலத்தில் கல்வி ஞானமுடையவன் தன் குருவின் பேரைப் பிரசித்தம் செய்து தனது கீர்த்தியைப் பரவச் செய்வன். குருவின் பேரைக் கூறாதவனை ஒருவரு மதிக்கமாட்டார்கள். ஒரு வித்துவானை நோக்கி மற்றவர்கள், நீ யாரிடம் கல்வி கற்றாயென்று வினவுவார்கள். பிரசித்திபெற்ற குருவின் பேரை அவன் சொன்னால் எல்லாரும் அவனுக்கு மரியாதைசெய்து அவனை வித்துவானென்று ஒப்புக்கொள்வார்கள். குருவறியாதவனை ஒரு அற்பன்கூட மதியான். சீடனது பெருமை யெல்லாம் குருவைப்பற்றியே நின்றது. ஆதலால் சீடன் குருவைத் தெய்வமாகக் கருதி வழிபாடு புரிந்து கல்விகற்க வேண்டியதா யிருந்தது.

பூர்வகாலத்தில் குருமார்கள் பொருளிலாசை யற்றவர்களா யிருந்தார்கள். ஆதலால் அவர்கள் சீடரிடத்தில் பொருள்களை யெதிர் பார்க்கவில்லை. இவ்விஷயத்தில் நாம் அந்தணர்களையே எடுத்துக்கொள்ள வேண்டும். அந்தணர்களிடத்திலேயே சகலகலைகளும் ஞானமும் நிறைந்திருந்தன. பிராமணர்களும் க்ஷத்திரிய வைசியர்களும் தத்தம் புத்திரர்களைக் குருவிடம் கல்வி கற்கும்படி விட்டுவிட்டுப் போய்விடுவார்கள். உபநயனம் செய்தவுடனே இப்படிச் செய்யப்படும். அக்காலம் அதிக பால்யமாதலால் கல்வி கற்பதில் புத்தி நன்றாய்ப்பதியும். பொருளில் ஆசையில்லாத குருமார்கள் தம் சீடருடைய ஒழுக்கம் குணம் பணிவிடை இவைகளையே பெரிதாகமதித்து அவருக்கு வேதாதி கலைகளைப் போதிப்பார்கள். காரியங்களினாலும் சற்பாத்திரங்களில் யாசிப்பதினாலும் குரு

மார்கள் போஜனக் கவலையற்றிருப்பார்கள். அரசர்களும் அவர்களுக்குக் குறைவில்லாமற் கொடுப்பார்கள். இதனால் வேதாதி கலைகளில் வல்ல அந்தணர்களுக்குப் பொருள்தேடவேண்டு மென்கிற அவசியமில்லை. அதனால் அவர்கள் சீடர்களிடத்தில் பொருளை யெதிர்பார்க்கவில்லை. இதுபற்றிச் சீடர்களிடத்தில் குருமார்களுக்குச் சர்வாதிகாரமுண்டு. தம திஷ்டம்போல் நடத்துவார்கள். சீடர்கள் நெறிதவறாமல் நல்லொழுக்கத் தில் நிலைத்திருக்கச் செய்வார்கள். சீடர்களும் உணவுக்குக் கவலைப்பட வேண்டுவதில்லை. ஏனென்றால் பிரமசாரிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் அவசியம் பிக்ஷையிட வேண்டுமென்கிற கட்டாய விதியுள்ளது: அதிதி யாராதனையுஞ் சிறப்பிக்கப்பட்டது. இவ்விரண்டு தர்மங்களும் அநாதியா கவே நமது தேசத்தில் நிலைபெற்றுள்ளன. இதனால் பிரமசாரிகளாகிய வித்தியார்த்திகள் கவலையற்றுக் குருவின் பணிவிடைகளைச் சோர்வின்றிச் செய்து ஞான சித்தியை யடைந்தார்கள். சூத்திரர்களும் பிராமணர் களுக்குப் பணிவிடைசெய்து ஞானத்தை யடைந்தார்கள். எப்பொழுதும் குருவின் சந்நிதானத்திலேயே யிருக்கவேண்டி யிருந்ததனால், அந்த வித் தியார்த்திகளுக்கு உலக வியாபாரத்தில் சித்தம் செலுத்த அவகாசமில்லை. இளம் பெண்களுடன் சம்பாஷிக்கவும் நேராது. ஊர் வம்புகளைக் கேட்க வும் சமயமகப்படாது. குரு பணிவிடைகளைச் செய்யவும், கலைகளை யாராயவுமே யவர்களுடைய காலம் செல்லும். குரு பணிவிடை யொன்றே சகலகலை ஞானங்களையுந்தரும். இவ்வாறு குரு சந்நிதியில் வசிப்பதற்குத் தான் குருகுலவாசமென்று நூல்கள் கூறும். ஸ்ரீகண்ணபிரான் கூடக் குருகுலவாசம் செய்து சகல கலைகளையு மோதியுணர்ந்தாரென்று பாரதம் பாகவதம் முதலிய நூல்கள் கூறுகின்றன. துருபதன் முதலிய அரசர் களும் குருகுல வாசத்திலிருந்து சகலகலைகளையும் கற்றுணர்ந்தார்க ளென்று தெரியவருகிறது. குருபணிவிடை செய்து செருக்கில்லாமல் அவரை யாராதித்தவர்களே மஹா ஞானிகளாய்த் தவசித்தியும் ஞான சித்தியும் பெற்றவர்களாம். எந்தச் சீடன் வெறுப்பின்றிச் செய்யும் பணிவிடைகளினாலும் வழிபாட்டினாலும் குருவை மகிழச்செய்கிறானோ அந்தச் சீடன் ஒன்றையும் ஓதாதவனா யிருந்தாலும் சகல ஞானங்களி னாலும் நிரம்பின மஹாத்மாவாவான். இத்தனை காலம் குருகுலவாசம் பண்ணவேண்டுமென்கிற வரையில்லை. எப்பொழுது குருவுக்குச் சீட னிடத்தில் மகிழ்ச்சி யுண்டாகிறதோ அப்போதே அவனுக்குச் சகலகலா ஞானங்களு முண்டாய்விடும். இதுகாரணம்பற்றியே அநேக மஹாத் மாக்கள் குருபணிவிடைகளிலே மனமகிழ்ந்து தவறுதலின்றி நடந்து வந்தார்கள். இதைப்பற்றி ஒரு இதிகாசமுண்டு.

பூர்வகாலத்தில் அபோத தௌமியர் என்று ஒரு மஹரிஷி யிருந்தார். அவருக்கு ஆருணி, உபமன்யு, வைதர் என்று மூன்று சிஷ்யர்களிருந்தார் கள். அவர்கள் குருகுலவாசம் செய்து குரு பணிவிடைகளைச் செய்வதி லேயே விருப்பமுள்ளவர்களா யிருந்தார்கள். இவர்களுடைய குரு பக்தி

யைப் பரிக்ஷித்து அவர்களுக்கு அநுக்கிரகம் செய்யக்கருதிய அபோத தௌமியர் ஆருணியை அழைத்து நமது வயலின் மடையை அடைத்துவா வென்று கட்டளையிட்டார். ஆருணி சென்று மடையை எவ்வாறு அடைத்தும் அது அடைபடவில்லை. ஆருணி இதற்கென்ன செய்வதென்று சற்று யோசித்துப் பின் அந்தமடையில் தான் படுத்துக்கொண்டான். மடை கட்டுப்பட்டது. இவ்வாறு இரண்டு மூன்று தினங்கள் சென்றன. குரு மற்றவரை நோக்கி ஆருணி யெங்கே என்று வினவினார். அவன் தமது கட்டளையின்படி வயல்மடையை அடைக்கச்சென்றானென்றார்கள். அப்படியானால் அவனைப் பார்ப்போம் வாருங்கள் என்று அவர்களையும் அழைத்துக்கொண்டு வயலின் கிட்டப்போய்க் குழந்தாய் ஆருணி! எங்கேயிருக்கிறாய் வா என்று அழைத்தார். அவன் மடையை உடைத்துக் கொண்டு வந்து குருவை வணங்கி, மடை அடைபடாமையால் நானே மடையிற் படுத்து அடைத்துக்கொண் டிருந்தேன். தமது சப்தம் கேட்டதும் இதோ வந்துவிட்டேன் என்றான். குரு மகிழ்ந்து நீ மடையை உடைத்துக்கொண்டு கிளம்பி வந்ததனால் உனக்கு உத்தாலகன் என்ற பெயர் உலகத்திற் பிரசித்தி பெறக்கடவது. உனக்கு சகல வேதங்களும் சுயமாகவே பிரகாசிக்கும். இனி நீ விரும்பின விடத்துக்குப் போகலா மென்று விடை கொடுத்தார். உத்தாலகனென்றால் உடைத்துக்கொண்டு வந்தவன் என்று பொருள். (தொடரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## சுக்கிரீவ ஆக்ஞை.

சுக்கிரீவ ஆக்ஞை என்பது நமது நாட்டில் வழங்கப்பெற்று வரும் பழமொழிகளுள் ஒன்று. ஒரு காரியத்தைச் செய்யும்படி ஒருவர் மற்றொருவருக்கு உத்தரவிட்டாலோ அல்லது அவரைக் கேட்டுக் கொண்டாலோ அவ்வாறு உத்தரவிடப்பட்ட அல்லது கேட்டுக் கொள்ளப்பட்டவர், அக்காரியத்தை உடனே செய்யத்தவறின், அன்னவரை நோக்கி "ஏன் நமது உத்தரவை அல்லது வேண்டுகோளை நிறைவேற்றவில்லை என்கிற கேள்வி நிகழும்போது "இதென்ன 'சுக்கிரீவ ஆக்ஞை' போலிருக்கிறதே" என்னும் மறுமொழி சில சந்தர்ப்பங்களில் பிறப்பது உண்டு. இதனைச் சிறிது பரியாலோசித்து, இதனால் நமது தாய் நாட்டை எவ்விதம் முன்னேற்றத்திற்குக் கொண்டுவரக்கூடுமோ அந்த உபாயத்தை யறிவோமாக.

சுக்கிரீவன் வானரேந்திரனாகிய வாலியின் தம்பி. வாலியோ அறிவு, ஆற்றல், தெய்வ நம்பகம் முதலிய சிறந்த குணங்கள் பொருந்தப் பெற்றவன். ஆகிலும் அகங்காரத்திற்கு இடங்கொடுத்தான். அக்காரணத்தால் அவ்வுயர்ந்த குணங்கள் அவனுக்கு வேண்டுஞ் சமயத்திற் பயன்படாதொழிந்தன. அவ்வாலி, சுக்கிரீவன் விஷயத்தில் "ஐயோ! இவன்

இளையவன்றானே; பெருந்தவறொன்றுஞ் செய்துவிட வில்லையே! நமது நாட்டாரின் வேண்டுகோளுக்கு இசைந்தன்றோ அரசுபுரிய உட்பட்டான்; இப்போது அச்செய்கையையும் தப்பிதமென்றே ஒத்துக்கொண்டு நம்மையே சரணாகதி யடைந்தனனே; அவனுக்கு நம்மினும் உத்கிருஷ்டமான உதவி வேறெவர்?" என்பவையாதிய நியாய நெறிகளை யொரு சிறிதும் கவனியாது, அவன் மனைவியையுங் கைப்பற்றிக்கொண்டு, 'இடங் கொடுத்தால் மடம்பிடுங்குவான்' என்றெண்ணிச், 'சிட்டுக் குருவியின்மீது இராமபாணந் தொடுத்தது' போல அவனைத் தொந்தரைக்குட்படுத்தினான். இது தனது பராக்கிரமத்துக்கே இழிவு என்பதையும் புறக்கணித்தான்.

இவ்வண்ணந் தன் உயிர்க்கு இறுதி தேடப்புகுந்த அண்ணனை "உடன் பிறந்தே கொல்லும் வியாதி"க்கு நிகரெனக் கருதி, சுக்கிரீவன் தனக்குத் தக்கதுணை சிக்குமட்டும் பக்குவமாகப் பதுங்கி யிருந்தான். சுக்கிரீவனும் சாமானியன் அன்று. உத்தம குணங்களும், உயர்ந்த நடையும் உள்ளவன். அரச தருமம் அனைத்தும் உணர்ந்தவன் "........அரசும், இல் வாழ்வா ரில்வழி யில்" ஆதலின், அதற்குப் பழுது நேராதபடி குடிகளைப் பெருக்கி அவர்களுக்குத் தன்னிடம் பூரணநம்பிக்கை யுண்டாகத்தக்க வழிகளை மேற்கொண்டு வந்தான். பால் தொட்டுப் பால் கறப்பதுபோலத் தன் பிரஜைகளிடம் அன்புகாட்டி அன்பு பெற்று வந்தான். இதனால் அவனிட மிருந்த சேனைகள் எழுபத்திரண்டு வெள்ளமும் அவன்மேற் பிரியங்கொண்டு அவன் சொற்படி நடக்க நேர்ந்தது. நிற்க,

கவலைக்கடலைக் கடக்கும்பொருட்டு, கண்ணியமானதோர் புணையாகிற துணையை நாடித்திரியும் சுக்கிரீவன்முன், இணையேற்றமிலாக் குணநிதியாகிய ஸ்ரீராமபிரான் தோன்றினன். மெய்யன்பர்க்கு இடர் நேர்ந்தபோது, உடுக்கை யிழந்தவன் கைபோன்று உதவ எங்கும் நிறைந்த ஐயன் எதிர்ப்படாமல் இருப்பனோ? "உடுத்த பெருந்திசை யனைத்தும் ஒலிகொள்ள உறுதுயரால், அடுத்த பெருந்தனி மூலத்தரும் பரமே! பரமே!! என், றெடுத்து", கரிராஜனொருவன் அழைத்தபோது, அபயாஸ்தத்தை அவன்மீது வைத்து "என் அப்பா! இப்படிக் கூவுகின்றாய்? நான் தூரத்தில் இருப்பதாக நினைத்துவிட்டாயோ? தற்போதமற்ற அன்பர்களிடமே சதா குடிகொண்டிருப்பவன் யான் என்பதை மறந்தனைபோலும்; மார்ச்சால நியாயத்தால் வழிபடுவோரையும், பெற்றதாயினும் பற்று மேற்கொண்டு, இரக்ஷிப்பவனன்றோ?" என்றருளிய பரமபுருஷன், நமது சுக்கிரீவன் சஞ்சலத்தைத் தீயிலிட்ட பஞ்சுபோலாக்க ஸ்ரீராமபிரானாகத் தோன்றினான்.

பண்டிதோத்தமரான மாருதியால் சுக்கிரீவன் ஸ்ரீராமபிரானுடைய குணாதிசயங்களை நன்கறிந்து, பிரியா நட்பைப் பிரியமாய்ப்பெற்று, பகைவனை வென்று சுகக்கடலி லாழ்ந்தான். பிறகு,

சுக்கிரீவன் தனக்கு மந்திரியாக மாருதியையும், பகைவரைத் தடுக்க வல்லதும், நட்பினரை ஆதரிக்க வல்லதுமாய், வற்றாத நீரையும், வெளிப் பிரதேசத்தையும், செழுமைவாய்ந்த பெருத்த மலைகளையும், அடர்ந்த வனங்களையும், கொண்ட கிஷ்கிந்தையை நாடாகவும் கொண்டு, ஊக்கமும் உற்சாகமும் உள்ள சேனை வீரர்களையும், ஐக்யமும் அன்புந் தழைத்த குடி மக்களையும் துணையாகப்பெற்று, செய்தொழிலில் அசட்டையா யிருத்தல் அளவறியாது செய்தல், பொருந்தாதவற்றை மேற்கொள்ளல் முதலிய விலக்குகளை யனுசரித்து, காருண்யத்துடன் நடந்து வந்தபடியால் அவனுடைய கட்டளையை அவனது குடி ஜனங்கள் 'இராணுவக்கட்டளை' போல் தழுவி, சிறிதும் வழாது கீழ்ப்படிந்து வந்தனர். அக்கட்டளை உலகுள்ளளவும் நின்று நிலவ 'சுக்கிரீவ ஆக்ஞை' என்று வழங்கி வருகிறது. இத்தகைய கட்டளை, ஒற்றுமையோடு கூடிய கட்டுப்பாட்டைப் பலப்படுத்துகின்றது. இதற்குத் தலைவனுக்கும் பிறர்க்கும் இருக்கவேண்டிய பரஸ்பரோக்தமான அன்புதான் காரணம். உயிர் நிலையே அன்பின் வழியதாதலின், அந்த அன்பு எங்கு வளர்ந்து வருகிறதோ அங்கு சித்திக்காத விவகாரம் ஒன்றுமே யில்லை.

ஆகவே, ஒவ்வொரு குடும்பத்திலும் இத்தகைய அன்பானது தோஷ ரகிதமாகப் பரவி, பெரியோர் கட்டளைக்குச் சிறியோர் கீழ்ப்படிந்து நடந்துவரின், ஒற்றுமை பலத்து, சுதந்தரத்வம் தானே உண்டாகி விடும். குடும்பத்திலுள்ள பெரியோர், இந்த நோக்கத்தை யுட்கொண்டு, தம்மைப் பின்பற்றி யுள்ளவர்களை வேண்டிய உபாங்கங்களுடன் சீர்திருத்தி வந்தால் எல்லா நன்மையும் தன்னிடையே கைகூடும்.

ம. இராஜகோபால பிள்ளை,
கோமளேசுவரன் பேட்டை.

---

## பகவத்கீதை வசனம்.

(189-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பகவான் பிரம்மப் பிரளயத்தைப்பற்றி இன்னும் விவரமாய்க் கூறுகிறார்.)

ஏ பார்த்த! அப்பிரம்மாவிற்குப் பகல் வந்தால் அவ்வியத்தத்தினின்றும் (காணும்படி புலப்படும் பிரபஞ்சமுதலிய) இந்த வியத்தங்களெல்லாம் உண்டாகின்றன. பிரம்மாவிற்கு இரவுவரின் தோன்றிய அனைத்தும் அவ்வியத்தத்தில் பிரளயமாய் விடுகின்றன.

[அவ்வியத்தம் = தெரியும்படி தோன்றாமலிருப்பது. அதாவது வெளிப்படாது மறைந்திருத்தல் — வியத்தம் = காணும்படி வெளிப்படுதல்.]

முன் கற்பத்திலுள்ள பிராணிக்கூட்டங்களே உத்தரோத்தர கற்பத்திலு முண்டாகின்றன. அவை பிரம்மாவின் பகற்குள் தோன்றி இரவிற்

குள் இலயமாகின்றன. ஆன்மஞானமின்றிய அஞ்ஞானிகளால் செய்யப்படும் கர்மங்கள், எவ்வளவு காலமாயினும் போகத்தைக் கொடுத்துப் புசிக்கச் செய்யாமல் நாசமாகா. ("எஞ்சிய பிராரப்தத்தின் வினை யனுபவித்தே தீரும்" — கைவல்யம்) ஆதலின் முன் கற்பத்திலுள்ள பிராணிகளே பின் கற்பத்தில் தோன்றுகின்றனவன்றி புதிது புதிதாய்ப் பிராணிகளின் தோற்ற முண்டாகாது.

[இதுவே வேதாந்த சித்தாந்தத்திற்கு உடன் பாடாம். சூரியன், அண்டங்கள் முதலிய யாவற்றையும் முன்னுள்ளவாறே பின் கற்பத்திலும் பரமேசுவரன் சிருட்டித்தான் என்று சுருதி கூறுகிறது.

பிரளயத்தில், மெழுகுருண்டையில் தங்கரேணுக்கள் அடங்கி மறைந்திருப்பதுபோல், சீவன்கள் மாயையில் மறைந்திருக்கின்றன வென்றும், தயாநிதியாகிய பகவான் அச்சீவர்கள் அஞ்ஞானத்தை நீக்கிக்கொண்டு தம்மை வந்தடையும் பொருட்டுக் கருணையோடு அவர்களுக்குத் தநுகரண புவனபோகங்களை யளிக்கின்றார் என்றும் சுருதி கூறுகிறது.

பிரம்ம உலகமீறாகிய கதிகளனைத்தும் காரியமேயாகும். கற்பிதமான சர்வ உலகங்களிலும் அந்தரியாமியாயுள்ள சச்சிதானந்த சொரூபமே யாவற்றிற்கும் காரணமாம். எதை யடைந்தோர் மீண்டும் பிறப்பதில்லையோ, அச்சத்தா வடிவ சச்சிதானந்த சொரூபமே எனது வடிவமாம் என்று பகவான் அருளினார். எந்த அதிகாரிக்கு ஈசுவரனிடத்திலும் குருவினிடத்திலும் அநந்நிய பக்திபுளதோ அவனுக்குச் சகல சாத்திர அர்த்தங்களும் எளிதில் புலப்படும். அப்பக்தியில்லார்க்குப் புலப்படாது. ஆதலின் ஞானமடைய விரும்புவோர்க்கு பக்தி அவசியம் வேண்டியதாகும்.]

(இப்போது பகவான் முன்புகூறிய பக்தியோகமே பரகதி யடைதற்குரிய உபாயமாகுமென்று அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! எல்லாப் பூதங்களும் எந்தப் புருஷனிடம் அடங்குகின்றனவோ, சர்வபூதங்களிலும் அந்தரியாமியாய் வியாபித்துள்ள பரம புருஷன் எவனோ, அத்தகைய பரமாத்மாவாகிய என்னை அடைதற்குரிய மார்க்கம் அநந்நிய பக்தியே யாகும். (அநந்நியபக்தி = வேறெவ்வித சிந்தனையுமில்லாது தைலதாரைபோல் சதா ஈசுவரனையே அன்போடு சிந்தித்தல்.)

அர்ச்சுனன்:—"பகவான்! எத்தகைய நிலைமையான காலம் வரும்போது மரணமடைந்தோர் மறுபடி பிறப்பதில்லையோ, அப்படி வாரா நிற்குங் காலத்தை அடியேனறியுமாறு கூறி யருளல் வேண்டும்" என்றான்.

(இப்போது பகவான் தேவயான மார்க்கமும் பிதுருயான மார்க்கமும் அருளிச் செய்கின்றார்.)

ஏ அர்ச்சுன! எந்த மார்க்கத்தில் சோதி சொரூபமான அக்கினியும் பகலும், சுக்கிலபட்சமும் பொருந்துகின்ற ஆறுமாதங்களாகிய உத்தரா

யணம் உள்ளதோ, அதுவே தேவயான மார்க்கமாகும். அக்காலத்தில் மரிக்கும் சகுணப்பிரம்மோபாசகர்கள் மீண்டும் பிறப்பை யடையார்கள்.

(இவர்கள் மேலே கூறப்பட்ட அக்கினி, பகல், சுக்கிலபக்ஷம், உத்தராயணம் முதலியவற்றின் அபிமான தேவதைகளால் அந்தந்த உலகங்களுக்குக் கொண்டுபோகப்பட்டுக் கடைசியில் பிரம்மலோகத்திற்குக் கொண்டுபோகப்படுவர். ஆங்கு அவர்கள் இரண்யகர்ப்பரூபமான சகுணப்பிரம்மத்தை யடைந்து, அதன் மூலமாய் நிர்க்குணப் பிரம்மத்தை யடைவர்.)

எந்த மார்க்கத்தில் தூமமும், கறுப்பாகிய இரவும், கிருஷ்ணபட்சமும், ஆறுமாதங்களாகிய தக்ஷிணாயனமும் உளதோ, அதுவே பிதுருயான மார்க்க மெனப்படும். அக்காலத்தில் மரிப்போர் மீண்டும் உலகில் சனிப்பர். இம்மார்க்கத்தில் செல்வோர் புண்ணியகர்மம் பாபகர்மம், இவை இரண்டும் கலந்தமிசிர கர்மம், ஆகிய மூன்று கர்மங்களை யுடையோர். இவர்கள் தூமம், இருளாகிய இரவுகாலம், கிருஷ்ணபட்சம், தக்ஷிணாயனம் ஆகியவற்றின் அபிமான தேவதைகளால் அந்தந்த உலகங்களை யடைந்து முடிவில் சந்திரனுலகத்தை யடைவர். அங்கு பாபகர்மம், புண்ணியகர்மம் ஆகிய இரண்டின் பலன்களையும் பொசித்த பின்னர், மிசிரகர்ம பலத்தை யனுபவிக்கப் பூமியில் மறுபடி சனிப்பர். (இருளாகிய இரவுகாலத்தின் அபிமான தேவதையே காலன்.)

உத்தராயணம் தக்ஷிணாயனங்களில் உத்தராயணமே உத்கிருஷ்டமானதாகும். இதில் மரித்துப் பிரம்மலோகம் செல்பவர்களில் சகுணப்பிரம்ம உபாசகர்களாகிய யோகிகள் மீண்டும் பிறவார்கள். ஏனையோர் மட்டும் மீண்டும் சனிப்பர். ஆனால் தக்ஷிணாயனத்தில் மரித்துச் செல்வோர் அனைவரும் மீண்டும் பிறவியை யடைவார்கள்.)

(இப்போது பகவான் தியானயோகத்தில் அதிகாரிக்குச் சிரத்தையை யுண்டாக்கும் பொருட்டு அதன் விசேஷத்தைக் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! இத்தேவயான மார்க்கம் என்ற சுக்லபக்ஷ (உத்தராயண) மார்க்கம் கிரம முத்தியையே தருவதாகும். பிதுருயான மார்க்கம் என்ற கிருஷ்ணபக்ஷ (தக்ஷிணாயன) மார்க்கம் பிறவியையே தரும் என்னும் இந்த இரண்டு மார்க்கங்களையும் உணர்ந்த சகுணப் பிரம்மத்தியானபரரில் ஒருவரும் மயக்கத்தை யடையார்கள்.

ஏ அர்ச்சுன! அச்சகுணப் பிரம்மத்தியானம் புனராவிர்த்தி யில்லாத பலத்தையே தருவதாகும். ஆதலின் நீயும் அந்தச் சகுணப் பிரம்மத்தியான யோகத்தையே செய்வாயாக.

இருக்காதி வேதங்களை அத்தியயனம் செய்கிறவனும், அசுவமேதாதி யாக எக்கியங்களைச் செய்பவனும், சாந்திராயணம் முதலிய விரதங்களைக் கிரமப்படி யனுட்டிப்பவனும், இடம் காலமறிந்து சத்பாத்திரங்களுக்கு

உத்தம தானங்களைச் செய்கிறவனும் எந்த புண்ணிய பலன்களை யடைவார்களென்று சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கிறதோ அப்புண்ணிய பலன்களை யெல்லாம் தியானயோகி அதிக்கிரமணம் செய்து (கடந்து சென்று) யாவற்றிலும் மேலான மோக்ஷத்தை யடைவான்.

[பாபகர்மம் புண்ணியகர்மம் ஆகிய இவற்றின் பலன்களை யனுபவித்த பின் சந்திரமண்டலத்தில் இருக்கும் ஆன்மாவிற்கு மிசிரகர்மம் (பாபம் புண்ணிய மிரண்டும் கலந்தது) ஒன்றே அனுபவிக்க வேண்டிய மீதியாயிருக்கிறது. ஆவரணம் அக்கர்மத்தை ஆன்மாவோடு பொருத்தி வைத்துக்கொண்டிருக்கும் பசைபோலிருக்கிறது. ஆன்மா மறுபடி உலகில் சனிக்கவேண்டிய காலம் வரும்போது அதன் மிச்ரம கன்ம பலன் மழை அல்லது பனித்துளியின் வழியாய்ப் பூமியிலிறங்குகிறது. பிறகு அது ஜலமாகவோ, அல்லது அது சேர்ந்து உற்பத்தியான தானியம், பழம், ஔடதம் முதலியவற்றில் ஒன்றின் உருவமாகவோ, அந்த ஆன்மா எத்தந்தைக்கு சனிக்கவேண்டுமோ அந்த ஆடவனுடைய தேகத்தில் பிரவேசித்து இரத்தமாய் மாறிய பிறகு சுக்கிலமாகி, அதன்பிறகு தாயின் கருப்பத்தில் போய்ச் சேர்கிறது. அங்கு அது தாயின் சுரோணிதத்தோடு கலந்து தேகமாய், அதாவது குழந்தை யுருவமாய் மாறுகிறது. ஆன்மா முன்செய்த கர்மங்களின் பலமே இத்தேகமாய் உற்பத்தியாகிறது. இக்கர்மங்களை யொருவன் மனம், வாக்கு, காயம் என்ற திரிகரணங்களாலேயே செய்கிறான்: ஆகையால் இவன் செய்த கர்மங்களின் பலனுக்குத் தக்க தேகமே இவனுக்கு அமைக்கப்படுகிறது. அதன்படியே அழகிய தேகமோ, குரூபியானதோ, முடமானதோ, குருடானதோ அமைகிறது. மனமும், வாக்கும் சிலர்க்கு நல்லவையாகவும், சிலர்க்குக் கெட்டவையாகவும் இயற்கையிலேயே அமைவதற்கு இதுவே காரணம். உலகில் சிலர் இயற்கையிலேயே ஜீவகாருண்யமும் இரக்கமும் பொருந்திய மனமுடையவர்களாகவும், உண்மையும் இனியமொழியுமே பேசுபவர்களாகவும், சிலர் கடினசித்தமும் கொடுமையும் கெட்ட எண்ணங்களும் நிறைந்த மனமுடையவர்களாகவும் பொய்யும் கெட்ட வார்த்தைகளும் பேசுபவர்களாகவும் இருப்பதைப் பிரத்தியக்ஷத்தில் காண்கிறோம். இவ்வாறு கர்மபலனே தேகமாயமைந்திருப்பதால் கர்மபலன்களை யனுபவித்து முடிந்தபின் ஒரு விநாடி கூடத் தேகம் நில்லாது.

"வினைப்போக மேயொரு தேகங் கண்டாய் வினைதா னொழிந்தால்
தினைப்போ தளவு நில்லாது கண்டாய் சிவன்பாத நினை
* * * * * * "

என்றனர் மெய்ஞ்ஞானச் செல்வராகிய பட்டினத்தடிகள்.

தாயின் கர்ப்பத்தில் குழந்தையின் தேகம் பூரண உருவமடைந்தபின் கபாலத்திலுள்ள உச்சித்துவார வழியாய் தேகத்திற்குள் வந்து சேருகிறது. சந்திர மண்டலத்திலுள்ள ஆன்மாவின் மிசிரம கர்மபலன் அதை

விட்டுப் பிரிந்தபின், பூமியில் சனிக்குமட்டும் அந்த ஆன்மாவிற்குத் தன்னைப்பற்றிய முன்பின் விஷயங்கள் யாவும் தெரியுமென்று கூறப்பட்டிருக்கிறது.]

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

——— (தொடரும்) சீடன்.

## உண்மையைக் காணலாகாதாம்.

ஏன்? கண்டால் அது காண்போர்க்குத் தன்னிடம் பிரிய முண்டாகச் செய்யும். விஷயம் என்னவெனில் நம்மிடம் எஞ்சியிருந்த ஆனந்த போதினி சஞ்சிகைகளில் சிலவற்றை மாதிரிப் பிரதியாகப் பலர்க்கு அனுப்பினேம். அவ்வாறு அனுப்பப்பட்டவர்களில் கிருஸ்தவர்கள் சிலர் தமக்கு வந்ததை வாபீஸ் செய்துவிட்டார்கள். அவர்களில் ஒருவர் "நான் காதோலிக் கிருஸ்தவனானதால் அஞ்ஞானிகளின் பத்திரிகை யெனக்கு அவசியமில்லை" என்றும், ஒருவர் "நான் ஞானமார்க்கமாகிய கிருஸ்து மதத்தை யனுசரிப்பவன். அஞ்ஞான மதவிஷயங்களைப் பிரசுரிக்கும் பத்திரிகையைத் தாங்கள் எனக்கனுப்பியது மிக்க வியப்பே. இனி யனுப்பவேண்டாம்" என்றும், இன்னொருவர் அத்தகைய விஷயங்களை மட்டும் எழுதுவதோடு நில்லாமல் "தங்களைப் போன்ற அறிவாளி மெய்ஞ்ஞான மார்க்கமாகிய கிருஸ்து மார்க்கத்தில் சேராமல் இன்னும் அஞ்ஞானத்தில் அமிழ்ந் திருப்பதற்காக விசனிக்கிறேம்" என்றும் கடிதங்கள் வரைந்திருக்கிறார்கள்.

நம் நாட்டிலுள்ள சகல மதஸ்தர்களும் நம் ஆனந்தனை வரவழைத்து அதை யாதரித்து வருகின்றனர். கிருஸ்தவர்களில் குறுகிய மதியுடையோர் இம்மாதிரி நடந்து கொள்ளுகிறார்கள். "ஞானம்" என்பதன் பொருள் இன்னதென்றே அறியாத இவர்கள் (இவர்கள் பைபிலில் ஞான மார்க்கத்தைப்பற்றிக் கூறப்படவில்லை) தாங்களே ஞானிகளென்றும், மற்ற அன்னிய மதத்தவர் அனைவரும் அஞ்ஞானிகளென்றும் கூறுவது வழக்கம்.

நம் நாட்டாரில் தம்மதத்தைவிட்டுக் கிருஸ்துமதத்தில் போய்ச் சேர்வோர்கள் சில விஷயங்களில் தங்கள் சுயாதீனத்தை யிழந்து பாதிரிகளின் நிபந்தனைகளாகிய கட்டுப்பாட்டுக் கடங்கி நடக்கவேண்டியவர்களாய் விடுகிறார்கள். அந்த நிபந்தனைகளில் சில பின் வருமாறு:—

1. இவர்கள் அன்னியமத சம்பந்தமான, முக்கியமாய், நமது மதசம்பந்தமான நூல்கள், பத்திரிகைகள் முதலிய வற்றை வாசிக்கலாகாது.

2. நமதுமத சம்பந்தமான பிரசங்கங்களைக் கேட்கலாகாது.

3. காங்கிரஸ் முதலிய இராஜாங்க சம்பந்தமான விஷயங்களில் தலையிடலாகாது.

4. தேசாபிமானக் கூட்டங்கள், தேச முன்னேற்றத்திற்காக ஏற்பட்டிருக்கும் சங்கங்கள் இவற்றில் சேரக்கூடாது முதலியவைகளாம்.

இக்காரணத்தால் நம்மதத்தை விட்டு அம்மதத்தில் போய்ச்சேரும் நமது சகோதர சோதரிகள் தாய் நாடென்கிற பற்றை யடியோடிழந்து, தங்கள் பூர்வீக ஆசாரம் நடையுடை முதலியவற்றை யலட்சியஞ்செய்து மேல்நாட்டு ஆசாரம், நடையுடைகளைப் பின்பற்றி அவற்றையே கௌரவமென்று கருதி நடக்கிறார்கள். இதுமட்டுமல்ல; தாய்ப்பாஷையையே தாழ்வென மதித்துவிடுகிறார்கள். இவர்களிற் சில மாதர்கள், ஆங்கில பாஷையையே வீட்டில் (குழந்தைகளோடு கூட) பேசுவதைக் கண்டிருக்கிறோம்.

பாதிரிகள், இவர்கள் நமது மதச் சார்பான நூல்கள் பத்திரிகைகளை வாசிக்கலாகாதென்று திட்டம் செய்வதேனெனில், தங்கள் மதத்தில் மனதால் சிந்தித்து உள்ளத்தில் அனுபவமா யறியத்தக்க விஷயம் ஒன்றுமேயில்லை. அப்படி யிருக்க நமது மத சம்பந்தமான விஷயங்களை யிவர்கள் வாசிக்கத் தொடங்கினால் அவற்றிலுள்ளவற்றின் விசேஷத்தை யறிந்து அவற்றை யனுசரிக்க ஆவல்கொள்வார்கள்; பிறகு தாங்கள் அன்னியமதத்தில் நுழைந்தது மூடத்தனம் என்றுணர்ந்து அதைப் புறக்கணித்து விடுவார்கள் என்ற பீதிக்காகவே யப்படிச் செய்கிறார்கள்.

இவர்கள் உண்மையைக் கண்டால், அது பற்றிக்கொள்ளுமென வஞ்சி இவ்வாறு நடக்கையில், நித்தியமும் சத்தியமுமான மதத்தில் ஜனித்த நம்மவர் நமது மார்க்க நூல்களை யாராய்ச்சி செய்து மெய்ஞ்ஞானத்தைப் பெறமுயல்வதைவிட்டு, வீதிகளில் அன்னிய மதஸ்தர்கள் நின்று பிரசங்கம் செய்யும் தந்திரவார்த்தைகளைச் செவிகொடுத்துக் கேட்டுக் கொண்டு நிற்பது தகுதியோ?

இவர்கள் தமது பாடசாலையில் வாசிக்கும் நமது மக்களைக்கூட நமது மதசம்பந்தமான பத்திரிகைகளை வாசிக்கவிடாமல் தடுக்கிறார்கள். இதைப் பற்றி யாழ்ப்பாணத்தில் பிரசுரமாகும் இந்து சாதனம் பத்திரிகையில் (3-12-1923) வெளியாகி யிருக்கும் விஷயத்தை ஈண்டு வரைகிறோம்:—

"இத்துணை ஆத்திரமேன்?

நமது பத்திரிகாபிமானிகளுள் ஒருவர் 'இந்துசாதன'ப் பத்திரிகையை, யாழ்ப்பாணத்துள்ள மிஷன் விடுதிப் பெண்பாடசாலை ஒன்றில் கல்வி பயிலுந் தமது புதல்விக்கு அனுப்பும்படி கேட்டுக்கொண்டபடியால், நாங்கள் அப்படியே செய்து வந்தோம். நமது பத்திரிகை தனக்குச் சேராமையினால், பத்திரிகை வரவில்லையென்று மகள் தகப்பனுக்குத் தெரிவிக்க, நாங்கள் பத்திரிகையைக் கிரமமாக அனுப்பிவருகின்றோமென்பதைத் தந்தைக்குத் தெரிவித்தோம். பத்திரிகை சேராமையைப் பின்னர் ஆராய்ந்தபோது விஷயம் வெளிப்பட்டது. அந்த விடுதிப் பாடசாலையின் தலைமை உபாத்தியாயினியம்மாள், தனது விடுதிச் சாலையில் இருக்குஞ்

சிறுமியர் இந்தப் பொல்லாத இந்துசாதனத்தைப் படிக்கவொண்ணு தென்னும் நோக்கம் பற்றி, பத்திரிகை செல்லுந்தோறும் கொடாது மறைத்துவிட்டனள். இதனுலேயே குறித்த பிள்ளைக்கு இந்து சாதனங் கிடையாதொழிந்தது. இதனை யுணர்ந்த தந்தையார் பத்திரிகையை மக ளுக்கு அனுப்பவேண்டாமென்றும், தம்முடைய மனைவியாருக்கு அனுப் பும்படியும் எங்களுக்குத் தெரிவித்தனர்.

* * * * * ”

---

## உபவாச மிருத்தல்.

உபவாசம், ஒருபொழுது, நிர்ச்சலம் என்பன ஒரு பொருள் குறிக்கும் சொற்கள். உபவாச மிருத்தல் என்பது சில புண்ய தினங்களில் உணவை நீக்கி விரதம் அனுஷ்டிப்பதாகும். அதாவது வெள்ளி, சனி, ஞாயிறு, திங்கள் இக்கிழமைகளிலும், அமாவாசை, பௌர்ணமி, கார்த் திகை, சிவராத்திரி, வைகுண்ட ஏகாதசி, ஸ்ரீராம நவமி, தைப்பூசம், பங் குனி உத்திரம், மாசப்பிறப்பு, வருடப்பிறப்பு முதலிய விசேட நாட்களி லும் சில வைணவர்களும் சைவர்களும் தத்தம் ஆசார அனுஷ்டானங்கள் மூலமாய், மாயைத் திறத்தைப் பழித்தொழித்து திரிகரண பரிசுத்தம் எற் பட்டு இகபரங்களில் சுகவாழ்வு பெற்று உஜ்ஜீவிப்பதற்கு எதுவாகும்.

ஆனுல், சுத்தமான ஆகாரம், ஜலம், காற்று இவை மூன்றும் இக்கலி யுகத்தில் இப்போது மானிடர்க்கு இன்றியமையாதவைகளாய் விட்டன. தவிரவும், பல ஆகாரம் '(பழம் உட்கொள்வது' என்ற அர்த்தம் மாறி, பலகாரங்கள் (பக்ஷணங்கள்) பற்பல தட்டுகளில் ஏறிவிட்டன. உபவாசத் தின் மகிமைகுன்றி 'நிர்ஜ்ஜலம்' என்பதற்கு த்ரவ பதார்த்தமாயிராமல் (ஜலம் இல்லை) திட (கனமான) பதார்த்தங்கள் என்று பொருள் கொள்ள லாயிற்று. வெறும் நாளில் அரைப்படி அன்னம் புசிப்பவன் விரததினத் தில் குறைந்தது முக்கால்படி நிறையுள்ள தோசைகளாய் இட்லிகளாய் நாசித்துவாரத்தின் கீழுள்ள குகையினுள் தள்ளிவிடுகிறுன். “ஒருவேளை யுண்போன் யோகி; இருவேளை யுண்போன் போகி; மூவ்வேளை யுண் போன் ரோகி” என்னும் பண்டைக்காலத்துப் பழமொழியும் வழங்கி வருகின்றது. 'மீதூண்விரும்பேல்'

ஆர்ய வர்த்தம் என்கிற நமது இந்தியாவில் பண்டைக்காலத்தில் நித் யானுஷ்டானபரர்களாயும், விரத சீலர்களாயுமுள்ள யோகிகள், மஹரிஷி கள், முனிபுங்கவர்கள், சுசீலர்கள் பலர் விளங்கி யிருந்தனர். உபவாச மிருப்பவர்கள் ஏனைய தினங்களைவிட மேற்கூறிய விசேஷ புண்ணிய தினங்களில் திரிகரண சுத்தத்துடனிருத்தல் வேண்டும். இவ்விதமாய் நடப்பின், மானிடர் அனைவர்க்கும் உயரிய அன்பு என்கிற கடவு ளிடத்தே பக்தி யுண்டாவதற் கையமின்று. ஆகவே, ஆத்மலாபம் அடை வதற்கு சிற்சில தினங்களில் உபவாசமிருத்தல் சிறந்த சாதனமாகும்.

சரீராரோக்யம் வேண்டின், சிற்றுண்டிகளையும் இடைவேளைப் பானங்களையும் அறவே யொழித்து இருவேளை யுண்பதே சரியான மார்க்கம். அதுவே சிறந்த விரதம்.

அன்றியும், உபவாச மிருப்பதினாலேயே உடம்பைப்பற்றிய அநேக உபாதிகளை (வியாதிகளை) தடுத்துக்கொள்ளலாம்.

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்"

என்றார் நமது தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும். ஜீரணிக்கத் தகுந்த பக்குவமான உணவு உட்கொண்டால், மானிடர்க்கு மருந்தே வேண்டிய தின்றாம். உணவு வகையிலும், மரக்கறி பதார்த்தங்கள் பரி பக்குவமானவைகளாயும், முன்னோர் கூறியுள்ள விதிவிலக்குகளுக்கு விரோதமின்றியும் இருத்தல்வேண்டும். இன்றேல், வாதிப்பிரதிவாதிகள் (வியாதிகள், பெருவியாதிகள்) ஜனிப்பர். அப்போது அவர்களுக்குக் கொண்டாட்டம். வைத்தியர்களுக்குங் கொண்டாட்டம்! ஆன்பாடு எப்படியும் திண்டாட்டம்!

ஆனால், விரதமிருப்பதினாலேயே நோய்கள் ஒழிந்து சரீரம் குணப்படுமோ? என்கிற சந்தேகம் சிலருக்குண்டாகலாம். வயிற்றில் ஆகாரம் இல்லாதபோது நமது எண்சாணுடம்பில் நகசிகை பரியந்தம் (முடி முதல் அடிவரை) சேர்ந்துள்ள இதர அழுக்கு முதலிய அந்நிய பதார்த்தங்களும், மூளையின் கழிவுகளும் உணவாக மாற்றப்படுகின்றன. இவ்விதம் ஜீரணமானவுடன், நோய்கள் நீங்கி சரீரம் சுகப்படுகின்றது. சித்த சுவாதீனமற்றவர்களையும் உபவாச மிருக்கச் செய்து (அதாவது இங்கு பட்டினி போடுவது என்பது பொருள்) குணப்படுத்தலாமென்றால், ஏனைய வியாதிகளை எவ்வளவு அற்பமாய் எண்ணவேண்டும்?

"உபவாசத்திற்குமேற்பட்ட ஒளடதம் இல்லை. ஆகையால் உபவாச மிருப்பது மிகுந்த புண்ணியம் அளிப்பதாம். உபவாசம் சக்தியில்லாதவனுக்குச் சக்தியளிக்கும்; புண்பட்டவனுக்குப் புண் ஆற்றும்; நோயாளிக்கு ஒளஷதமாகும்! கோபிஷ்டனது கோபத்தை யகற்றும்; வறுமைப் பிணியால் அவதிப்படுபவனுக்கு செல்வங்கொடுக்கும்; தேகத்திலுள்ள அழுக்குகளை நீக்குவதற்காகவும், இந்திரியங்களின் விஷயப்பற்று நீங்க ஒருவேளை புசிப்பதையும், உபவாச மிருப்பதையும் விரதங்களாக மனிதர் கொள்கின்றனர்" என்று ஓர் நூலாசிரியர் எழுதி யுள்ளார்.

'உண்மையான நல்ல பசியானது தேக மனோ சம்பந்தமான வியாதிகளைக் கண்டிக்கிறது' என்று 'டாக்டர்' பட்டதாரியான சர்வ கலாசாலை போதனாசிரியர் ஒருவர் அறிவித்துளார்.

விரத மிருப்பவர்கள் குறைந்தது பன்னிரண்டு மணி நேரமாயினும் யாதொன்றும் உட்கொள்ளலாகாது. விரதகாலத்தில் இறுதி பரியந்தம் தண்ணீர் மட்டும் பருகலாமே யன்றிப் பிறிதொன்றும் அருந்தலாகாது.

சிரவணம், படனம், மனனம் இத்தியாதிகளில் விரதகாலத்தைக் கழிக்க வேண்டும்: ஸத் கதா பிரஸங்கம், தேவார திருவாசகம், இராமாயணம், பாரதம், பாகவத, புராணப் பிரசங்கம் முதலியவை, கடவுள் வழிபாடுடைய பஜனைகள், காலக்ஷேபங்கள் முதலிய விடயங்களில் காலத்தைப் போக்கவேண்டும். உலகம் போற்றும் மஹாத்மா காந்தி யடிகள் காட்டியுள்ள சத்தியாக்கிரக விரதமும் இத்தகைய மகிமை பெற்றது.

அன்றியும், மேற்கூறியபடி மட்டுமிதமின்றி, சிற்றுண்டிகள், பேருண்டிகள், பானங்கள் முதலியன உட்கொள்ளல் விரதத்திற்கு விரோதமானவை. எப்போதும் வெறும் சாப்பாட்டுராமர்களாயும், குண்டோதரர்களாயும், அரிசி கொல்லும் இலாகாவிற் சேர்ந்த அறிவிலிகளாயும் இருக்கலாகாது.

ஆகவே, அன்பர்களே! இந்திய சகோதர சகோதரிகளே! நாம் உபவாஸமிருத்தலின் அருமை பெருமைப் பலன்களை அறிந்துகொண்டு கூடிய மட்டில் விரதத்தைச் சரியாய் அனுஷ்டிக்கவேண்டும். முடியாவிடிலோ, தினப்படியில் சிற்றுண்டி விலக்கி இருவேளைக்குமேல் உணவு கொள்ளாதிருத்தல் வேண்டும். மிதபோஜனம் தேகாரோக்யமளிக்கும். விரதானுஷ்டானம் காமக்குரோதாதிகளைக் கெடுக்கும்; இகபர சுகங்களைக் கொடுக்கும். ஓம் தத் ஸத்.

க. ஸ்ரீ துரைசாமி அய்யங்கார்.
'ஸ்ரீரங்க விலாஸ்,' சைதாப்பேட்டை.

---

## நம் பெண்மணிகளும் ஆங்கிலமும்.

தற்கால நாகரீகத்தில் பெண்கள் ஆங்கிலங் கற்பதும் விசேடமான விஷயமாயிருக்கிறது. ஆங்கிலங் கற்பதிலிருந்து நம்மூர்ப் பெண்மணிகள் மேலைத்தேயப் பழக்கவழக்கத்தை யறிபவராய், அனுட்டிப்பவராய், விடுகின்றனர் என்பதை யாரும் மறுக்கார். அப்பழக்கவழக்கத்திலே பெண்கள் நாயகர்க்கு அடங்கியவராய், தன்னிட்டமற்றவராய் இருக்கவேண்டுமென்பது ஒதுக்கிவிடப்படுகின்றது. அவ்வழக்கே ஒரு பெண் தன் நாயகனைத் தள்ளிவிட்டுத் தான் விரும்பியவனைக் கூடிக்கொள்ளலா மென்பதையும் கற்பிக்கிறது. கற்பு என்ற சொல் அருவருக்குஞ் சத்துருவா யிருக்கிறது.

பெண்களுக்குரிய வீட்டுக்கடமைகளாயுள்ள வீடுகூட்டல், மெழுகுதல், சமைத்தல், நாயகனுக்குணவளித்தல் ஆகிய இவை அவளுக்குரிய கடமையல்ல வென்று ஒதுக்கப் படுகின்றன. முட்டுப்பட்ட குடும்பத்திற் பிறந்தவளானாலும் ஆங்கிலங் கற்றவளுக்கு மேற்கூறிய வீட்டுக்கடமைகளுக்கு ஒரு வேலைக்காரியோ வேலைக்காரனோ வேண்டியது நிச்சயமே. வேலையாளில்லையேல் அவ்வேலைகளும் நாயகன் தலைமேற் பாரமாகவே யிருக்கின்றன. மேலைத் தேயப் பழக்கவழக்கம் என்றதினால் மேலைத் தேசங்களிலுள்ளவர் எல்லாரு மிப்படி யங்கே நடக்கிறார்களென்பது தெங் கருத்தல்ல. இவ்வழக்கை மேலைத்தேச வாசிகளின் இடையிட்ட வழக்கென்றே சொல்லுகின்றோம்.

மேலைத்தேசங்களிலிருந்து இங்குவந்து சீவிப்பவரின் நவநாகரீக வழக்கென்றே இதைக் கூறவேண்டி யிருக்கிறது. இந்த நாகரீகம் நம்மவரை மிருகக்குணமுடையவராய்க் கீழ்ப்படுத்திவிடுகிறது. நம் பெண் மணிகாள்! நீங்கள் இங்கிலீஷ் கற்பது எதற்காக? உங்கள் சுயபாஷையென்று? தமிழிலறியப்படாத ஞானத்தை இங்கிலீஷில் அறிந்துவிட வேணுமென்று? உங்களுக்கதினூற் சங்கை யிருக்கிறதென்று? உங்களுக்கு வரும் நாயகர் தமிழறியாத பறங்கி ஆங்கிலேயரென்று? தமிழரை விவாகஞ் செய்கிறதில்லை யென்ற தீர்மானங்கொண்டா? அல்லது உங்கள் நாயகரின் உத்தியோக எசமான்களாயுள்ள வெள்ளைக்காரரைச் சந்தித்தால் அவர்களுடன் பேசிக் கைகுலுக்கி அவர் லேடிகளுடன் பேசலாம், உலாத்தலாம், என்று? அன்றி உங்கள் கணவரின் உத்தியோகமாயுள்ள வேலைகளுக்கு உதவி செய்யவா? கணவரின் வேலைக்குதவி செய்யத்தான், பிள்ளைகளுக்குக் கற்பிக்கத்தான் என்பீராயின், பிந்தியதை ஒருவாறு ஒத்துக்கொள்வோம். கணவருக் குதவ எனத்துணிவீரேல் உங்களுக் குதவ உங்கள் கணவர் சமையல்வேலை பழகி யிருக்கவேண்டியது அகத்தியமல்லவா ? அவர்களுதவி புங்களுக்குத் தேவையில்லையா ?

பெண்மணிகாள்!! மேலைத்தேயப் பாஷையும் அந்த நாகரீகமும் உமக்கு அவசியமா? தமிழ்ப் பாஷையில் உலக அறிவை யூட்டும் ஔவையார் பாடல், நல்வழி, நன்னெறி, மூதுரை, திருக்குறள் முதலிய பலவும், சமய அறிவை யூட்டும் சைவசமயநெறி, சைவபோதம், சித்தாந்த தீபிகை முதலிய பலவும், பக்தியை யூட்டும் சமயகுரவர் தேவாரம், திருவாசகம் முதலிய பலவும், வீட்டு வேலையிற் சிரமமாயுள்ள சமையல் அறிவை யூட்டும் பாகசாஸ்திரம் முதலியனவும் இருப்பது உங்களுக்குத் தெரியாதா ? நீங்கள் அகத்தியங் கற்கவேண்டியவைகளாயுள்ள, இகபர சிலாக்கியத்தையும் மரியாதையையும் தருவதாயுள்ள இவைகளைக் கற்று உங்கள் தேசத்துக்கும், சாதிக்கும், சமயத்துக்கும் மாறுபாடற்ற பழக்க வழக்கங்களை யனுசரிப்பதை விட்டு, அழுக்கையேந்தி நெய்யைக் கீழ்விடும் (நெய்யரி) பன்னாடைபோல் அருவருப்பான அவசியமற்றமேலைத் தேசப் பழக்க வழக்கைத் தற்கால நாகரீகமென்று மெச்சிப்பாராட்டி அனுசரிப்பது எவ்வளவு மடமை, எவ்வளவு வெட்கமென்று நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

உங்கள் சுயபாஷையைக் கற்றுப் பண்டிதைகளாய் உங்கள் தேசத்துக்கு, உம்மூர்ச் சிறுமிகளுக்கு, உங்கள் சமயத்துக்கு உங்கள் நாயகருக்கு, உங்களுதரக்கனிகளான பிள்ளைகளுக்கு உபயோகமுள்ளவராயிருக்கும் மதிப்பைவிட மேலைத் தேயப்பாஷையும் பழக்க வழக்கமும் மதிப்புள்ளதென்று கருதுகிறீர்கள்?இதை உம்மேற் குற்றமென்றும் சொல்வது-எமக்குப் புத்திபோற் காணப்படவில்லை. உம தன்னை தந்தையர் மேற் குற்றமென்று சொல்லுவதே புத்தியாகும். அவரே புங்களை இந்நிலையில் வைக்க விரும்பியவர். அவரே மேலைத் தேயப் பழக்க வழக்

கத்தை நீவிர் கையாடுவது தமக்கு மகிமையென விரும்பியவர். அவரறிவுக்குறைவே உங்கள் கெடுதலுக்குக் காரணம் என்று நாம் துணிந்து கூறுவோம். (சுதேச நாட்டியம்.)

குறிப்பு :—சகோதர சகோதரிகாள்! ஒரு விஷயத்தை மேல் போக்காக வாசித்து மறந்துவிடுவதால் ஒரு பயனு மடையீர்கள். மேற்கண்ட விஷயத்தை வாசித்து நன்ருய்க் கவனியுங்கள். நமது பெண்மக்கள் தெய்வத்தன்மை பொருந்திய கற்பரசிகளாக வேண்டுமென்ற எண்ணம் உங்களுக்கிருக்குமாயின் மேற்கண்ட நற்புத்திகளின்படி நடவுங்கள். அமிழ்தினு மினிய நம் தாய்மொழியிலேயே நம் பெண்மக்களுக்கவசியமான கல்வியைக் கற்பியுங்கள். அன்னியபாஷையைக் கற்பதால் ஆடவரே பல துர் ஆசாரங்களில் பிரவேசித்து தெய்வசிந்தனை குன்றியவர்களாகிருர்களெனில், பேதைப்பெண்கள் அதைக் கற்ருல் என்னகதி யாவார்கள் என்பதைச் சிந்தியுங்கள். பத்திரிகாசிரியர்.

---

## சுக்குநீர் கியாழம்.

காப்பியை உபயோகிப்பதால் கெடுதி உண்டென்பது உண்மையான விஷயமே. காப்பியை உபயோகித்தவர்கள் இப்போது விட்டு விடுவது கஷ்டமா யிருக்கிறதென்று சொல்லும் நண்பர்களுக்கு ஓர் முக்கிய விஷயம்:— காப்பிக்குப் பதிலாக சுக்குநீர் கியாழத்தை உபயோகியுங்கள். (தோல் சீவப்பட்ட) சுக்குக்குத் தகுந்த தித்திப்பிட்டு அத்துடன் காப்பிக்கு உபயோகிப்பதுபோல் பாலைச் சேர்த்து காப்பியைப்போல் உபயோகம் செய்து சாப்பிடுவதனுல் அனேக நன்மைகள் உண்டாவது அனுபவம். இந்தச் சுக்குநீர் கியாழத்தை நான் உபயோகித்து வருவதில் என்னிடம் குடிகொண்டிருந்த அனேக வாய்வு சம்பந்தமான வயிற்று எரிவு, குடலைப் புரட்டல், பித்த மயக்கம், அடிக்கடி உண்டாகும் பித்த சுரம், கைகால் அசதி, முதலிய அனேக நோய்கள் என்னைவிட்டு அகன்றுபோயின. இன்னும் பல தொந்திரவும் குணப்பட்டு இருக்கிறதும் தவிர, தேகத்துக்கு எவ்வளவோ ஆரோக்கிய மாகவும் இருக்கிறது. இன்னும் இந்த சுக்குக் கியாழத்தில் சேரக்கூடிய பாலினுல் தாது விருத்தியும் தேக பலமும் இன்னும் அனேக நன்மைகளும் அடையலாம் என்பதற்குச் சந்தேகம் இல்லை. ஆனதால் ஒவ்வொருவரும் காப்பி தேயிலை முதலிய பானங்களுக்குப் பதிலாய் இந்த சுக்குநீர் கியாழத்தை உபயோகிப்பீர்களென்று நான் மனப்பூர்வமாக நம்புகின்றேன்.

மு. சு. வீராசாமி செட்டியார்.
பலசரக்கு மளிகை, வீரக்கல், திண்டுக்கல் போஸ்டு.

குறிப்பு:—ஒன்றை வாசிப்பதால் மட்டும் பயனில்லை. வாசித்தபடி நடந்தாலே பயனடையலாம். அதே அறிவாளிக்கழகு. ப-ர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(198-ம் பக்கத் தொடர்ச்சி)

அவள் உள்ளே வந்ததும் மிக்க ஆததிரத்தோடு "சீக்கிரம் சீக்கிரம் புறப்படு. அம்பாலிகை புதைக்கப்பட்ட மயானத்திற்கு உடனே புறப்படு. ஒரு விநாடி ஆலசியத்தால்கூட காரியம் மிஞ்சிவிடும்" என்றாள்.

ஆனந்தஸிங் மிக்க வியப்படைந்து "எந்தகாரியம் கெட்டுவிடும்? என்ன நீ கூறுவது?" என்றான்.

அம்மாது மிக்க கலவரத்தோடும் ஆத்திரத்தோடும், "அய்யோ அய்யா! நான் எப்படி உயிரோடிருக்கிறேனோ அப்படியே அம்பாலிகை இறந்து போகவில்லை. உயிரோடு புதைக்கப்பட்டிருக்கிறாள். சீக்கிரம் சீக்கிரம் மிஞ்சிவிடும்" என்று பதை பதைத்தாள்.

இம்மொழிகளைக் கேட்டதே ஆனந்தஸிங் திப்பிரமை யடைந்துவிட்டான். முதலில் தானும் அப்படியே சந்தேகித்தான். ஆயினும் இவள் நிச்சயமாய் இப்படிக் கூறியதைக் கேட்டதே அவன் மனதில் பலவித யோசனைக ளுண்டாய்விட்டன. ஆயினும் அவள் கூறியதை யுடனே யவன் ஒப்புக்கொள்ளவில்லை.

ஆனந்தசிங் தன் அனுபோகத்தில் மனிதர், இறந்தவர்மேல் கொண்ட வாஞ்சையால் இம்மாதிரி கலவரத்தால் அவர்கள் இறக்கவில்லை யென்று பிடிவாதமாய் நம்பிக்கொள்வதுண்டு என்று கண்டிருக்கிறான். இதுவும் அப்படித்தானிருக்குமென்று கருதினான். அதன்மேல் அம்மாதை நோக்கி, "நீ கூறுவது எனக்கு மிக்க வியப்பாயிருக்கிறது. இரண்டொரு கேள்விகள் கேட்கிறேன். அவைகட்கு மட்டும் பதில் கூறிவிடு" என்றான்.

அம்மாது:—உன் கேள்விகளுக் கெல்லாம் நான் பதில் கூறிக்கொண்டிருந்தால் அவள் சவப்பெட்டியிலேயே மூச்சடைத்து மடிந்து போவாள்.

ஆனந்:—அவள் உயிரோடிருக்கிறாளென்று உனக்கு எப்படித் தெரியும்?

அம்மாது:—எனக்குத் தெரிந்ததை யெல்லாம் கூற அவகாசமில்லை. அவளுக்குக் கொடுத்திருக்கும் மருந்தின் மகிமையால் சவம்போலாய் விட்டாள். அவளுக்கு மருந்தளிக்கப்பட்டதை நான் கண்ணால் பார்த்தேன்.

ஆனந்:—அப்படி யிருந்தால் ஏன் அதை வெளியிடாம லிருந்தாய்?

அம்மாது:—நான் என் பிராணனுக்குத் துணிந்து, நடக்கும் சங்கதிகளைக் கவனித்து வருகிறேன். கொஞ்சம் என்மேல் சந்தேகம் தோன்றிற்றோ உடனே என் உயிர் போய்விடும்.

கடைசியில் ஆனந்தஸிங் அவள் கூறுவதை நம்பி அவள் பிரியப்படி நடக்கத்துணிந்தான்.

உடனே இருவரும் ஒரு வண்டி பேசிக்கொண்டு மயானபூமிக்குப் புறப் பட்டார்கள். அது கறுப்பண்ணனுடைய குடும்பத்தார் அடக்கம் செய் யப்படும் பிரத்தியேக இடம். வழியில் ஆனந்தலிங் அம்மாதை நோக்கி "உனக்கு எல்லாம் தெரிந்திருந்தும் ஏன் யாருக்கும் வெளியிடா திருந் தாய்?" என்றான்.

அம்மாது:—அய்யோ! அப்படிச் செய்திருந்தால் காரியம் பயனில்லாமற் போய்விடும். கறுப்பண்ணனுடைய கொடிய செய்கைகள் உனக்குத் தெரியாது. அவனைப்போன்ற பரமசண்டாளனும், எத்தகைய பாத கத்திற்கும் அஞ்சாதவனும் உலகில் எவனுமிருக்கமாட்டான். அவன் எவ்வளவோ தந்திரங்கள் செய்து தன் எண்ணங்களெல்லாம் ஏககா லத்தில் நிறைவேறும்படி வழிதேடி யிருக்கிறான். பார்! அவன் கூட் டாளியாகிய மலையாளத்தான் ஒருவனே அவனுக் கிணையானவன். நான் இப்போது வெளியில் சங்கதியைக் கூறினால் அவன் அடி யோடு தப்பித்துக்கொள்வதோடு என்னை யுடனே கொன்று விடு வான். பிறகு அம்பாலிகையைக் காப்பாற்ற வேறு யாருமில்லை. அவள் பிறந்த ஒரு மணி நேரத்திற்கெல்லாம் அவள் தாயார் அவளை என்னிடம் ஒப்புவித்தாள். அதுமுதல் சரியாய் ஒரு மணிநேரம் நான் அவளை விட்டுப் பிரிந்ததே யில்லை. ஒரு சமயம் மெய்யாகவே அவளைக் கொன்று விட்டாலும் கொன்று விடுவான்.

ஆன:—உன் பெயரென்ன ?

அம்மாது:—என் பெயர் பவானி.

ஆன:—அவன் இப்போதே யேன் அப்படிக் கொல்லக்கூடாது ?

பவானி:—நான் அவசரப்படாமல் இருப்பதால்தான் எல்லா சங்கதிகளும் எனக்குத் தெரிகிறது. அவளுக்காக உயிருக்குத் துணிந்து, அவ னும் மலையாளியும் பேசும்போதெல்லாம் நான் ஒத்துக் கேட்கிறது. நீயும் அவனும் பேசும்போதுகூட கேட்டுக்கொண்டிருந்தேன். எல் லாவற்றையும் தெரிந்துகொண்டபின் அவளை யடியோடு அவன் கையிலிருந்து விடுவித்துவிடவேண்டுமென்பது என் நோக்கம். அன்று இரவு நீ வந்திருந்தாயே அப்போதே யெனக்குச் சரியான சம யம் கிடைத்திருந்தால் யாவும் கூறிவிட்டிருப்பேன். இவன் இப் போதே யேன் அவளைக் கொல்லவில்லை யென்றல்லவா கேட்கிறாய். உலகில் அவனுக்கு வேண்டியது பணமே. அதற்காக எத்தனை கொலைகளாயினும் செய்யத் துணிவான். அதற்கு இரண்டாவதாய் அம்பாலிகைமேல் காதல்கொண் டிருக்கிறான். கூடுமானால் அவளை உலகத்திற்குச் செத்தவளாய் நிரூபித்துவிட்டு, அவளை விஷமிட்டுக் கொன்றதாய் மனோகரன் மேல் பழி சுமத்தி அவனையும் ஒழியச் செய் துவிட்டு,ஆஸ்தியைக் கைப்பற்றிக்கொண்டு, அம்பாலிகையை உயிர்ப் பித்து தூரதேசத்திற்குச் சென்றுவிட வேண்டுமென்பது அவன்

எண்ணம். பணத்திற்கு இடையூறு நேர்வதாயின் அம்பாலிகையைக் கொல்ல எள்ளளவும் பின்வாங்கமாட்டான். அந்தோ அவன் அப்பாவி கையில் சிக்கிக்கொண்டால் இராக்ஷதனிடம் சிக்கியது போலவே யாகும். அதைவிட அச்சவப் பெட்டியிலேயே மடிந்துபோவது நலம்" என்றாள்.

ஆனந்தஸிங் "என்னுயிருள்ளமட்டும் அவள் அப்படி விட்டுவிடப்பட மாட்டாள். அவளை யெப்படியேனும் மீட்டுக் கொலை பாதகரை யழிக்காமல் விடமாட்டேன். நான் பெருமைக்கு எதையும் கூறுவதில்லை" என்றான்.

அதற்குள் வண்டி நகரைக் கடந்து மயானத்தை நெருங்கியது. வண்டியைத் தூரத்திலேயே ஒரு மறைவிடத்தில் நிறுத்திவிட்டு இருவரும் இறங்கி நடந்தார்கள். ஆனந்தஸிங் எப்படிப்பட்ட அவசர காரியத்திலுங் கூட முன் யோசனையையும், முன் எச்சரிக்கையையும், சமயோசித புத்தியையும் கைவிடுபவனன்று. அவன் வீட்டிலிருந்து புறப்படும்போது ஒரு கைபிரம்பமும் இன்னும் சில ஆயுதங்களும் கையில் எடுத்துக்கொண்டு சென்றான்.

இருவரும் மயானத்தருகிற் சென்றார்கள். பகிரங்கமான வழியின் கதவு பூட்டப்பட்டிருந்தது. மயானத்தைச் சுற்றி வேலிபோல் மிக்க உயரமான மரப்பலகைகள் நாட்டப்பட்டிருந்தன. ஆனந்தஸிங் ஐந்து நிமிடங்களில் இரண்டு பலகைகளை யறுத்துவிட்டான். உடனே யதன் வழியாய் இருவரும் உள்ளே சென்றார்கள். அங்குள்ள சமாதிகளின் இடைவழிகளிலே நுழைந்து சற்று தூரம் மெதுவாய்ச் சென்றபின் பவானி "ஆ இங்குதான்" என்றாள். அந்த சவக்குழி ஒரு குன்றின் அடியில் தோண்டப்பட் டிருந்தது. அந்நாட்டில் செல்வவந்தரா யிருப்போர் சவப்பெட்டியை மண்ணில் புதைத்து விடுவதில்லை. பூமிக்குள் ஒரு அறைபுண்டாக்கி அதில் பெட்டியை வைத்துவிட்டுக் கதவு வாசற்கால் வைத்து பூட்டிவிடுவார்கள். மிக்க செல்வவந்தர் பூமியின் கீழ் பலமான பெரிய மண்டபமே கட்டி அதில் மேடைகள் ஏற்படுத்தி அவற்றின்மேல் தங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுடைய சவங்களைப் பெட்டிகளில் வரிசையாய் வைத்து வைப்பார்கள்.

பவானி அக்கல்லறை யருகில் நின்று இதுதான் என்றவள், ஆனந்தஸிங் அதன் கதவைப் பார்க்கத் திரும்புவதற்குள், அலறிப் பயந்து அவன் தோளைப் பிடித்துக்கொண்டு "அய்யோ யாரோ இருக்கிறார்கள்; அதோ! அதோ! ஒருவன் குனிந்துகொண்டிருக்கிறான் பார்" என்று கையால் சுட்டிக் காட்டினாள். சிறு நிலவின் பிரகாசம் இருந்ததால் சற்று தூரம் வரையில் யாவும் நன்றாகப் புலப்பட்டன. நான்கைந்து சமாதிகளுக் கப்பால் இடுப்பளவு உயரமுள்ள ஒரு சமாதி யோரத்தில் ஒருவன் நின்றுகொண்டு சமாதிமேல் கவிழ்ந்துகொண்டிருப்பது தெரிந்தது. (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

## பொது சமாச்சாரங்கள்.

### விக்கிரகப் புதையல்.

இலங்கை கீரிமலையிலுள்ள கப்பல் செய்யும் கம்பெனியாரின் கப்பல்களில் ஒன்று சில வருடங்களுக்கு முன் புயல் காற்றினால் கரை தட்டிப் போய்விட்டது. அக்கப்பல் கிடைத்தால் சுப்பிரமணியர் ஆலயம் கட்டுவதாக அக் கம்பெனிக்காரர் பிரார்த்தனை செய்து கொண்டார்; சில தினங்கள் கழித்து அக்கப்பல் கொஞ்சம் சேதப்பட்டு அவருடைய கப்பல் கட்டும் சாலைக்கருகில் கரையில் மோதியது. கீரிமலையிலுள்ள திருக்குளத்திற் கருகில் சமுத்திர முகமாக அவர் கட்டிய ஆலயம் இப்போது முடியும் தருணத்தில் இருக்கிறபடியால் அதற்கு விக்கிரகங்கள் வேண்டியதைப்பற்றி அவர் வியாகூலப்படலானார். கப்பல் கட்டும் சாலைக்கு அருகிலிருக்கும் பாழடைந்த ஒரு குட்டையில் பல விக்கிரகங்கள் கிடப்பதாக அவர் ஒரு நாள் இரவு கனவு கண்டார்; உடனே அவர் கூலிக்காரர்களை அழைத்துச் சென்று அக் குட்டையைத் தோண்டியபோது முப்பது அடி ஆழத்தில் சிவபிரான், சுப்பிரமணியர், வள்ளியம்மையார், தெய்வயானை அம்மையார், சிவலிங்கம் ஆகிய இவர்களின் அதிக சித்திர வேலைப்பாடு அமைந்த கற்சிலைகளைக் கண்டு அதிக பரவசமானார்; ஜனங்கள் ஆயிரக்கணக்காகச் சென்று அவைகளைத் தரிசித்து, அவைகளை மேற்படி ஆலயத்தில் அமர்த்துவதற்கு ஏற்படக்கூடிய செலவுக்குத் தம்மாலியன்ற காணிக்கை செலுத்தினர்; சிலைகள் இப்போது கீரிமலையில் ஒரு மடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன; அந்தச் சிலைகளைக் காட்சிச் சாலையில் வைக்க அரசாங்கத்தார் எத்தனித்தனர்; ஆனால் இந்துக்கள் விண்ணப்பம் செய்து கொண்டதன்மேல் அவர்கள் அந்த எத்தனத்தை விட்டு விட்டனர். பக்தியின் மகிமைக்களவில்லை.

### ஓர் நீர் நாயின் சமர்த்து.

சில மாசங்களுக்கு முன் கனடா தேச நீர் நாய்கள் 2 மிருககாட்சிச் சாலைக்குக் கொண்டுவரப்பட்டன. அதற்கு முன் அங்குள்ள குட்டையொன்றில் ஒரு பெண் நீர்நாய் சுமார் 8-வருஷ காலமாக இருந்து வந்தது. ஆகையால் இருப்புத் தட்டியைக்கொண்டு அக்குட்டையை இரண்டு பாகமாகத் தடுத்து ஒரு பாகத்தில் இப்புதிய நீர் நாய்களை விட்டிருந்தார்கள். இதிலுள்ள ஆண் நீர்நாய் அடுத்த பாகத்திலுள்ள நீர் நாயின் சிநேகம் பெற விரும்பியதால் சுரங்கமொன்று அறுத்து அதின் வழியாகச் சென்று அங்கிருந்த பெண் நீர் நாயின் சிநேகிதத்தையும் கோரியபடி அடைந்தது. இதைப் பார்த்து தனித்து நின்ற நீர் நாயும் அச்சுரங்கத்தின் வழியாய் அவைகளுடன் சென்று சேர்ந்து மூன்றும் சிநேகமாய் இருந்து வந்தன. இதைப் பார்த்த அவ்விடத்து அதிகாரி இருப்புத் தட்டியை எடுத்து விடவே மூன்றும் சுகமாய்க் காலங்கழித்து வருகின்றன.

மூட்டுப் பூச்சிகளை ஓட்ட — கட்டில்கள் முதலியவைகளில் மூட்டுப் பூச்சிகள் இருந்தால் கற்பூரத்தை சலத்திற் கரைத்து அந்தச் சலத்தை அந்த இடங்களில் தெளிக்கவேண்டும். மூட்டுப் பூச்சிகள் ஓடும். (இதன் உண்மையை யனுபவத்தி லறியவேண்டும்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## உருத்ரோத்காரிஞூ தைமீ—கலி 5025-சாலிவாகனம் 18

## பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342

## இங்கிலீஷ் 1924ஞூ ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | திங் | அ26-53 | அசுவனி60 | சித்60 | கரிநாள, பொங்கல் பண்டிகை,அனந்தசனத்தில் லக்ஷதீபம் |
| 2 | 15 | செவ் | நவ33-13 | அசு1-43 | சித்60 | மாட்டுப்பொங்கல் |
| 3 | 16 | புத | தச39-38 | பர.⚹.9-15 | சித்9-15அ | கரிநாள், கிருத்திகை |
| 4 | 17 | வியா | ஏ45-35 | கிரு16-35 | மர60 | மத்வ சர்வ ஏகாதசி |
| 5 | 18 | வெ | து50-40 | ரோ23-15 | ம23-15சி | கூர்ம துவாதசி |
| 6 | 19 | சனி | திர54-45 | மிரு28-58 | சித்60 | சனிப்ரதோஷம், தாவயம் செலவிட |
| 7 | 20 | ஞா | சது57-38 | திரு33-8 | சித்60 | கதிரறுக்க |
| 8 | 21 | திங் | ○59-28 | புன36-58 | அ36-58சி | பௌர்ணமி |
| 9 | 22 | செவ் | பிர59-53 | பூச39-20 | சித்60 | தைபூசம், புஷ்யபகுளன் |
| 10 | 23 | புத | துதி59-48 | ஆயி40-40 | சித்60 | நவக்கிரகசாந்திசெய்ய |
| 11 | 24 | வியா | திரி57-58 | மக41-0 | அ41-0சி | |
| 12 | 25 | வெ | சது55-38 | பூர40-30 | சித்60 | |
| 18 | 26 | சனி | பஞ்52-35 | உத்39-15 | மர60 | |
| 14 | 27 | ஞா | சஷ்48-40 | அஸ்37-10 | அ 37-10சி | |
| 15 | 28 | திங் | சப்44-13 | சித்34-30 | பி34-30அ | |
| 16 | 29 | செவ் | அ39-10 | சுவா31-13 | சி31-13ம | |
| 17 | 30 | புத | நவ-3335 | விசா27-25 | சித்60 | |
| 18 | 31 | வியா | தச28-8 | அனு23-18 | சி23-18பி | |
| 19 | 1924ஞூ பிப்ரவரிமீ 1 | வெ | ஏ21-40 | கேட்18-58 | ம18-58அ | |
| 20 | 2 | சனி | து15-43 | மூல14-48 | சித்60 | |
| 21 | 3 | ஞா | திர10-8 | பூரா10-58 | சி10-58அ | மாச சிவராத்திரிவிரதம் |
| 22 | 4 | திங் | ச●5-18 | உத்10-35 | ம10-35அ | தை அமாவாசை, அரசபிரதக்ஷணம் |
| 28 | 5 | செவ் | அமா1-15 பிர58-45 | திரு5-35 | சித்60 | மாகசுத்தம் |
| 24 | 6 | புத | துதி57-33 | அவி4-35 | பி4-35சி | சந்திர தரிசனம் |
| 25 | 7 | வியா | திரி 57-50 | சதை5-5 | ம5-5சித் | பிரயாணம் விலக்கல் |
| 26 | 8 | வெ | சது60 | பூரட்7-10 | சித்60 | திருதினஸ்பிருக், திலசதுர்த்தி [பஞ்சமி |
| 27 | 9 | சனி | சது0-3 | உத்-10-30 | சி10-30ம | வசந்தபஞ்சமி, மதன |
| 28 | 10 | ஞா | பஞ்3-8 | ரேவ-16-8 | அ16-8சித் | சஷ்டி, சர்வமுகூர்த்தம் |
| 29 | 11 | திங் | சஷ்8-35 | அசு22-30 | சித்60 | வித்யாரம்பம் செய்ய |
| 30 | 12 | செ | சப்14-28 | பரணி29-38 | சித்60 | விஷ்ணுபதிபுண்யகாலம் திருதினஸ்பிருக் |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே சுக் | 25உ மீன-சு 25உ மகர-ருக் புத | | |
| சூரி | | | ராகு |
| புத | குரு செ | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 9 | ருத்ரோத்காரி௵ தை௴ கஉ | 1924௵ ஜனவரி௴ 14உ | பகுதி 7

## கடவுள் வணக்கம்.

பாராதி ககனப் பரப்புமுண் டோவென்று
படர்வெளிய தாகி யெழுநாப்
பரிதிமதி காணாச் சுயஞ்சோதி யாயண்ட
பகிரண்ட வுயிரெ வைக்கும்
நேராக வறிவா யகண்டமா யேகமாய்
நித்தமாய் நிர்த்தொந் தமாய்
நிர்க்குண விலாசமாய் வாக்குமன மணுகாத
நிர்மலா னந்தமய மாய்ப்
பேராது நிற்றிநீ சும்மா விருந்துதான்
பேரின்ப மெய்தி டாமல்
பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோல்
பித்தாக வோமனதை நான்
சாராத படியறிவி னிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத நிஷ்டை யருளாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (1)

---

நீயற்ற வந்நிலையே நிட்டையதி னியிலையோ
வாயற் றவனே மயங்காதே — போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா. (2)

---

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போ
லாருந் துறக்கை யரிதரிது — நேரே
மனத்துறவு மப்படியே மாணு விவற்றி
லுனக்கிசைந்த வாறென்றே யோர். (3)

---

## அரும்பொருள் விளக்கம்.

1. பாராதிககனப்பரப்பும் = பிருதிவிமுதல் எல்லை யற்றதாகப் பரந்து தோன்றும் ஆகாயம் ஈருக உள்ள தூலபஞ்ச பூதங்களும்.

உண்டோ என்று = உண்மையில் இருக்குமோ வென்று சந்தேகிக்குமாறு.

படர்வெளியதாகி = (யாவற்றையும் அதிக்கிரமித்து) வியாபித்துள்ள பரமாகாச வடிவமாகி.

எழுநா=அக்னி. பரிதி=சூரியன். மதி=சந்திரன்.

பரமாகாயம் (சிதாகாயம்) தனக்குமேல் வியாபகமான தொன்றின்றித் தான் சர்வவியாபகமா யிருப்பதால், எல்லையற்ற அந்த அகண்டாகார நிலைமையை நோக்க, இந்தப் பிருதிவியாதி தூலபூதங்கள் அணுவளவாய்க் கூட மதித்தற் கில்லாமையால் அவைகள் 'உண்டோவென்று ஐயுறும்படி' என்றார்.

அக்கினி சூரியன் சந்திரன் மூன்றுக்கும் பிரகாசத்தைத் தந்து, தான் அன்னியப் பிரகாசத்தை யெதிர் பாராமல், சுயம்பிரகாசமா யிருத்தலால் "எழுநாப் பரிதிமதி காணுச் சுயஞ்சோதியாய்" என்றார்.

நிர்த்தொந்தமாய் = (எங்கும் அறிவு சொரூபமாய் வியாபித்திருப்பினும்) எப்பொருளோடும் சம்பந்தமின்றி.

நிர்க்குணம் = குணாதீதம்.

வாக்குமன மணுகாத = வாக்கால் இவ்வகைப்பட்டதென்று வரை யறுத்து மொழி யொணுததும், மனதினுல் இத்தன்மையதென நினைக்கொணுததுமான

பேராது நிற்றிநீ = நீ சலனமின்றி நிற்கின்றாய்.

சும்மா இருந்து பேரின்பம் எய்திடாமல் = (நான், மனம் வாக்கு காயம் மூன்றின் செயல்களையு மடக்கி) மௌன நிலையில் நின்று பேரின்ப சுகத்தை யடையாமல்

"சும்மாவிருக்கச் சுகமுதயமாகுமே" என்று இம்மகானே மற்றோரிடத்தில் கூறியருளினர்.

"இறப்பும் பிறப்பும் பொருந்த — எனக்
கெவ்வணம் வந்ததென் றெண்ணியான் பார்க்கில்
மறப்பு நினைப்புமாய் நின்ற — வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது தோழி — சங்கர......"

என்று இவர் கூறியதுபோல், மனமே பிறவிப்பிணிக்குக் காரணம் — மனதோடு எதுகாறும் சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கிறோமோ, அதுகாறும் பிறவி யொழியாது. மனமே மாயையாதலின், எத்தனை சாத்திரங்

கள் வாசித்தாலும், எத்தனை வித்தைகளைக் கற்றாலும் மனதை யடக்கக் கல்லாவிடின் ஞானோதய முண்டாகாது. பேரின்பம் கிடைக்காது.

"சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தி யெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"

என்றனர் தாயுமானவரே.

இம்மனம் சதா சலித்துக்கொண்டு குழப்பத்தை யுண்டாக்கி ஞான மடைதற்குத் தடையா யிருப்பதால் "பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோல் பித்தாகவோ" என்றார்.

மனம் மகா கொடிது. கொஞ்சத்தில் அடக்கொணாதது. இதனால் இம்மனதை யான்றோர்கள் பேய் என்றும், நாய் என்றும், குரங்கென்றும் இன்னும் பலவாறாகவும் கூறி யிருக்கிறார்கள். பிரபஞ்சம் இதன் நினைவி லிருந்தே தோன்றுகிறது. இது நினைத்தால் உலகுண்டு, நினையாவிட்டால் இல்லை. இது யாதினும் வன்மையுடையது.

"கடுமனவன் பேய்கனலிற் கொடிதாகு
மலைகளினுங் கடத்தற் கொண்ணா
நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி
மேருவினை நேரே பேர்த்துச்
சுடுகனலை விழுங்கினு நிறுத்தரிது
புலன்முழுதுந் தோன்று மூலங்
கெடுமுலகீ துண்டெனிலுண் டிலதாகி
லிலதிதனைக் கெடுத்தல் வேண்டும்"

(வாசிட்டம் - வைராக்கியப் பிரகரணம்.)

(இதன் பொருள்) வலிமை பொருந்திய கொடிய மனமாகிய பேய் தீயினும் கெட்டதாகும். மலைகளைக்காட்டிலும் கடத்தற்குக் கஷ்டமானது வயிரத்திலும் கடினமானது. ஆலகடலையே விழுங்கிவிட்டு, மகம்மேரு மலையை அடியோடு பேர்த்தெறிந்து, கொழுந்துவிட்டெரியும் அனலையே விழுங்கினாலும் விழுங்கலாம்; இம்மனதை நிறுத்துவதரிது. இதுவே மற்ற புலன்கள் முதலிய யாவும் தோன்றுவதற்கு மூலமாகும். அழிவுடைய இவ்வுலகம் இம்மனம் உண்டென்றால் உண்டு, இது இல்லையென்றால் இல்லை. இத்தகைய மனதை யழித்துவிட வேண்டும்.

அறிவின் நிருவிகற்பாங்கமாம் சாசுவத நிஷ்டை யருள்வாய்=அறிவுமயமாயிருக்கும் அழியாத நிருவிகற்ப நிஷ்டையை யருளிச் செய்யவேண்டும்.

'சச்சிதானந்தம்' என்பது சிவத்தின் சொரூபம். (சத்து+சித்து+ஆனந்தம்.)

சத்து=முக்காலும் உள்ளது. அழியாதது.

சித்து=சுயம்பிரகாசமுடையதாய், தான்வேறு பிரகாசத்தை விரும்பாமல் யாவற்றையும் பிரகாசிக்கச் செய்வது.

ஆனந்தம்=துக்கமற்றது.

2. நீயற்ற அந்நிலை = நான் என்றதற்போதம் ஒழிந்த நிலை. இந்த நிலையே பட்டினத்தடிகள் "செத்தாரைப்போலேதிரி" என்றதும், மணிவாசகப் பெருமான் "அப்பா! செத்தே போயினேன்" என்றது மாகிய நிலை.

போய் அற்று இருந்தாலும் = அந்நிலையிற் சென்று தற்போதம் ஒழிந்து இருந்தாலும்

நீ போகாய் = ஆன்மாவாகிய நீ போய்விடமாட்டாய்.

என்று முளாய் = நீ என்றைக்கும் அழியாதிருக்கும் நித்தியப்பொருள்.

"தற்போத மொழிந்த விடத்தில்தான் ஆனந்த முண்டாதலின், அங்கு நாம் அடியோடு இல்லாமற் போய்விடுவோமோ வென்று அஞ்சாதே, நீ என்றைக்குமுள்ள நித்தியன். பேசாமல் அந்த நிலையை யடைய வருதி" என்பதாம். 'தற்போதம்' என்பது நான் என்ற தடிப்பு; இது உள்ளவரை அத்துவிதம் சித்திக்காது. 'நான்' என்ற தன்மை புணர்ச்சி யுளதேல் முன்னிலையும் ஒன்றுளதாகும்.

இம்மகானே,

"நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானு வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமை யெவர் சாற்ற வல்லார்
* * * * * * "

என்றும்,

" ஞானுகா ரத்தினெடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும் "

என்றும் அருளியுள்ளார்.

3. பாரனைத்தும் = உலக போகங்களனைத்தும். பொய்யெனவே = கானல் நீரைப்போலும், கனுத்தோற்றம்போலும் உண்மை யல்ல வென்றுணர்ந்து. பட்டினத்துப்பிள்ளை = காவிரிப்பூம்பட்டினத்தில் அவதரித்த பட்டினத்துப்பிள்ளை என்ற திருவெண்காட்டடிகள்.

நேரே மனத்துறவும் அப்படியே = நேராக அகத்துறவடைந்தோர் மார்க்கமும் அதுவே.

இவற்றில் உனக்கிசைந்த ஆறு ஒன்றே ஓர் = அகத்துறவு புறத்துறவு என்ற இரண்டனுள் உனக்குப் பொருத்தமாகிய மார்க்கம் ஒன்றே. அதை ஆராய்ந்து கொள்.

உலகில் செல்வமின்றி வருமையை யனுபவித்துக்கொண் டிருக்கும் ஒருவன் உலகை வெறுத்துப் புறத்துறவடைவது சுலபம். திருவெண் காடர்க்கு அரசன் பொறாமை கொள்ளும் அளவிறந்த செல்வமும், வனப் புடைய கற்பரசியாகிய மனைவியும், தாயும், சகல போகபாக்கியங்களு

மிருந்தும், உடை கோவணமாகவும், உறங்குவது புறந்திண்ணையாகவும் உணவு கையேற்றுண்பதாகவும் துணிந்து முற்றத்துறந்த மகானதலின், அவரைப்போல் துறவடைதல் யார்க்கும் அரிது என்றனர்.

துறவு, புறத்துறவென்றும், அகத்துறவென்றும் இருவகைப்படும். புறத்துறவு என்பது உயிர்ச் சார்பு, பொருட் சார்பாகிய இருவகைப் பற்றுக்களையும் விட்டு நீங்குதல். இவற்றில் உயிர்ச்சார்பு "பெற்றோர், மனைவி மக்கள், சுற்றத்தார் முதலிய ஜீவர்கள். பொருட்சார்பு என்பது வீடு, பூமி, பொன் முதலியவைகளாம்.

இந்த இருவகைச் சார்பையும் விட்டு நீங்குதல் புறத்துறவு.

அகத்துறவு என்பது இவ்வுலகபோக பாக்கியங்களும், தேவலோகாதி போகங்களும் யாவும் அநித்தியமென உணர்ந்து இவற்றின் ஆசையையடியோ டொழித்தல்.

புறத்தில் யாவற்றையும் விட்டு நீங்கி உள்ளத்தில் அவற்றின் இச்சை நீங்காதிருந்தால் அத்துறவால் பயனில்லை. புறத்தில் ஒன்றையும் விடாமல் ஒருவன் அகத்துறவடைந்திருப்பானாயின், அவன் தாமரையிலைநீர் போல் ஜகத்தொடுகூடி யிருப்பினும் ஞானமடைவான். ஆகையால் அகத்துறவே சிரேட்டமானது. அதுவே ஞானத்தை யளிக்கும். புறத்துறவு ஒருவனுக்குப் பலகாரணங்களால் நேரிடலாகும். அவன் வெளிக்குச் சந்நியாசிபோல் தோன்றினும் மனதில் பற்றற்றவனாகான். விரிக்கிற் பெருகும்.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரி௵ தைமீ கவ

## விளம்பர வித்தை.

'விளம்பரம்' என்றால் ஒரு விஷயத்தைப்பற்றிப் பலர்க்கும் அறிவிப்பது என்பது பொருள். இங்கு நாம் கூறுவது வர்த்தகர்கள் தங்களிடமுள்ள சரக்குகளைப்பற்றிச் செய்யும் விளம்பரமேயாகும். வர்த்தகர்க்கு விளம்பரம் இன்றியமையாதது. விளம்பரத்தின் மூலமாக வர்த்தகர் தங்களிடமுள்ள பொருள்கள் இன்னின்னவை யென்று தங்கள் நாட்டார்க்கு மட்டுமல்ல, அன்னிய நாடுகளிலுள்ள ஜனங்களுக்கும் அறிவிக்கிறார்கள். எவ்வள

வுக்கெவ்வளவு அதிகமாகப் பல வழிகளில் விளம்பரம் செய்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அதிகமாய் அவர்கள் வியாபாரம் நடைபெறுகிறது.

விளம்பரம் செய்வதிலும் ஒருவித ஒழுங்கும் சாமார்த்தியமும் வேண்டியிருக்கிறது. விளம்பரமும் ஒரு வித்தையேயெனலாம். அந்த வித்தையில் மேல்நாட்டார் மிகக் கைதேர்ந்தவர்கள். மேல்நாட்டு வர்த்தகர்கள் விளம்பரத்திற்குப் பெருந்தொகையான பணத்தைத் தாராளமாகவும் நம்பிக்கையோடும் செலவுசெய்கிறார்கள். உலகிலுள்ள முதன்மையான செல்வவந்தர்க ளனைவரும் வியாபாரிகளே யாவர்.

நமது நாட்டார், மேல்நாட்டாருடைய நாகரீக ஆசாரங்களைப் பின்பற்ற முயல்வதுபோல், இதிலும் அவர்களைப்போல் நடிக்க முயல்கிறார்கள். ஆனால் எவ்வளவு வரையில் இதில் நன்மையான மார்க்கத்தில் செல்கிறார்கள் என்று பார்ப்போம்.

விளம்பரம் செய்வதன் நோக்கம்:—

1. ஒருவன் தான் வர்த்தகனென்றும், தன் இருப்பிடம் இன்னதென்றும், தன்னிடமுள்ள சரக்குகள் இன்னின்னவையென்றும்,

2. தன் சரக்குகளின் குணங்கள் இப்படிப்பட்டவையென்றும், விலை முதலியவைகளையும் யாவர்க்கும் அறிவிப்பதேயாகும்.

இப்படி யறிவிப்பதில் தன்னிடமுள்ள சரக்கு மேன்மையானதென்றும், விலையிலும், சரசமானதென்றும், தன்னிடமுள்ளவற்றை வாங்குவது அனுகூலமென்றும் விளம்பரத்தை வாசிப்போர் மனதிற் படும்படி செய்வதே விளம்பரம் எழுதுவதன் சாமர்த்தியமாகும். விளம்பரத்தின் தலையங்கமும் முக்கிய அம்சங்களும் காண்போர் கண்களை யுடனே கவரும் வண்ணம் பெரிய எழுத்துக்களில் அச்சியற்றப்பட வேண்டும். அதோடு படங்கள் (தகுதியான உருவங்கள்) அமைப்பது அதிக கவர்ச்சியை யுண்டாக்கும் என்று அந்த வித்தையில் தேர்ந்தவர்கள் அறிந்திருக்கிறார்கள்.

விளம்பரம் எழுதுவதிலும் தந்திரமும் புத்திசாதுரியமும் உபயோகிக்கப் படுகின்றன. நேரே சரக்கின் பெயரைக் கூறாமல் இருவர் சம்பாஷிப்பது போலும் ஒருவரையொருவர் கேட்டறிவது போலும், ஒருவர்க்கு மற்றவர் சிபாரிசு செய்வதுபோலும்,

இப்படிப் பல விதமாய் எழுதி, முடிவில் சரக்கின்பெயர் கிரையம் முதலியவைகளை வரைகிறார்கள். ஒரு பத்திரிகையில் ஒரு விளம்பரத்தை மட்டும் தலைகீழாகத் திருப்பிப் பிரசுரம் செய்வதும் ஒரு விதத் தந்திரம். அப்படிச் செய்வதால் பத்திரிகை வாசிப்போர் இதென்ன வென்று வியப்போடு பத்திரிகையைத் திருப்பி அந்த விளம்பரத்தை யவசியம் வாசிப்பார்கள்.

இக்காலத்தில் வெளிவரும் மேல் நாட்டு வர்த்தகர்களின் விளம்பரங்களையும் நம் நாட்டு வியாபாரிகளின் விளம்பரங்களையும் கவனித்தால் நாம் சுருக்கமாய்க் கூறிய விஷயங்கள் நன்கு விளங்கும். இவையொரு பக்க மிருக்க, இக்காலத்து விளம்பரங்களில் உண்மையும், நம்பிக்கையும் எவ்வளவு வரையில் அடங்கி யிருக்கின்றன என்பதைக் கவனிப்போம்.

உலகில் தன்னிடமுள்ள குற்றம் குறைகளை ஒளிக்காமல் வெளியிடும் சுபாவ முடையவர்களைக் காண்பது மிக அரிதே. ஆனால் அத்தகையோர் இல்லாமலுமில்லை. வர்த்தகரிலேயே சிலர் தங்களிடம் இருக்கும் ஒரு சரக்கை யொருவர் வாங்கவந்து, அய்யா! இது புதிதா பழையதா என்று கேட்டால், பழையதாயின், பழைய சரக்குதான் என்று உண்மையைக் கூறி விடுகிறார்கள். ஜவுளி வியாபாரிகளிலும் 'இந்தச் சேலை சாயம் கெட்டிச் சாயமல்ல' என்று உண்மையைக் கூறிவிடுகிறவர்கள் இருக்கிறார்கள். இவர்களிடம் ஜனங்களுக்கு நம்பிக்கையும் நன்மதிப்பும் உண்டாகின்றன. இவர்கட்கு நல்ல கீர்த்தியும் கிடைக்கிறது.

ஒரு வர்த்தகன் ஒரு சரக்கை வாங்கியபின் அதைத் தன்னிடம் கொண்டுவர நேரிட்ட வண்டிசத்தம் அல்லது கூலி, அதை விளம்பரம் செய்த கூலி, கடைவாடகை, குமஸ்தாக்கள் சம்பளம், மற்ற சில்லரைச்செலவு, தன் முதலுக்கு வட்டி அதாவது தனக்கு வருமானம், இவையாவும் அச்சரக்கின் கொள் முதலோடு சேர்த்தே விற்க வேண்டும். ஒரு சமயம் தான் வாங்கிவந்த சரக்கு பிறகு விலைகுறைந்ததாகி விடலாம். அப்போது இவனுக்கு நஷ்டம் நேர்ந்தேதீரும். அவற்றை யெல்லாம் அவன் மற்ற சரக்குகளின் இலாபத்திலேயே சரிப்படுத்த வேண்டும். ஆகையால் ஒரு வர்த்தகன் ஒரு சரக்கை யதிக இலாபத்திற்கு விற்பதால் அவன் மேல் குறைகூற இடமில்லை. அது அநீதியுமாகாது. அப்படியவன் அளவு மீறி யதிக இலாபம்வைத்து விற்கவும்

முடியாது. ஏனெனில் மற்ற வர்த்தகர்கள் புளி வீசை 4 அணு வென்று விற்கும் போது, ஒருவன் மட்டும் 6 அணு என்ருல் யார் வாங்குவார்கள்? சாதாரணமாக மேல் நாட்டார் வைத்துக் கொள்ளும் இலாபம் நம் நாட்டு வர்த்தகர்கள் வைத்துக்கொள்ளத் துணியார்கள். அய்யோ! இது பெரும்பாதகம். தெய்வத்திற் கும் பொறுக்காது என்று எண்ணி அஞ்சுவார்கள்.

மேல் நாட்டார் அமெரிகாவிலிருந்து ஒரு புதுவிதமான சாமான் வரவழைத்தார்கள் என்று வைத்துக்கொள்வோம். அதன் கொள் கிரயம், கப்பல் கூலி, சுங்கம், வண்டிச்செலவு யாவும் சேர்ந்து சாமான் 1-க்கு 7 ரூபா யாகிறதென்று வைத் துக்கொள்வோம்: இதற்கு எவ்வளவு இலாபம் சேர்க்கலாம், அதாவது விற்கும் விலை என்ன ஏற்படுத்தலாம் என்று யோசிக் கும்போது, அவர்கள் கவனிப்பது இரண்டே விஷயங்கள். ஒன்று, இதே சரக்கு நமது நாட்டில் வேறு வர்த்தகர்கள் வர வழைத்திருக்கிருர்களா? இரண்டாவது, இக்காலத்தில் இது யாவர் க்கும் வேண்டுவது தானு? என்பவைகளே. அச் சரக்கை வேறு யாரும் வரவழைக்கவில்லை யென்றும், அது இச்சமயம் யாவர்க் கும் வேண்டியதென்றும் தெரிந்தால் 15 ரூபாய் விலை வைக்கச் சற்றும் பின்னிடையார்கள். இது நாம் அனுபவமாகக் கண்ட சங்கதி. ஆயினும் மற்ற விஷயங்களில் அவர்களிடம் ஒருவித ஒழுங்கும், நாணயமும், தம் தொழிலில் சீர்திருத்தமும் இருக் கின்றன. அவர்கள் தங்கள் விளம்பரங்களைப் பகட்டாய்ச் செய்து ஜனங்களின் மனதை வசீகரிக்கும்படி பிரசுரிக்கிருர்கள். அவ் விளம்பரங்களைப் பர்க்கும்போது "அப்பா! விளம்பரமே இவ்வளவு செலவிட்டுச் செய்திருக்கும்போது, இவர்கள் பெருத்த வியாபாரம் செய்பவர்களாகவும் இருக்கவேண்டும்" என்று வாசிப்போர் மனதிற்குப் புலப்படுகிறது. அவர்களும் தங்கள் சரக்குகளின் குணங்களைப்பற்றி சிலாகித்து எழுதினுலும் பச்சை யாய் அடிபோடில்லாததைப் புளுகமாட்டார்கள். தங்கள்மேல் குற்றங்கூற இடம் கொடாமலும், கூடியவரையில் நாணயத்திற் குப் பழுதுவராமலும் கவனிப்பார்கள்.

இப்போது மேல் நாட்டாரைப் பார்த்து வெளி வேடங் களில் மட்டும் அவர்களைப் பின்பற்ற முயலும் நம் நாட்டார்கள் இவ் விஷயத்தில் எப்படி நடந்துகொள்ளுகிருர்கள் என்று பார்ப்

போம். பத்திரிகைகளுக்கு விளம்பரங்கள் அனுப்பப்படின் பத்திரிகையின் காரியஸ்தர்கள் விளம்பர விகிதம் பெற்று விளம்பரத்தைப் பிரசுரித்து விடுகிறார்கள். அவ் விளம்பரத்தில் கூறப்பட்டிருக்கும் சரக்கின் குணங்களைப்பற்றிய உண்மை யவர்களுக்குத் தெரியாது. ஆதலின் அதற்கு அவர்கள் பொறுப்பாளிகளல்லர். சில விளம்பரங்கள், பார்க்கும்போதே ஜனங்களை மோசம் செய்யத் தக்கவையென்றும் ஏமாற்றமுடையவை யென்றும் புலப்படலாகும். அத்தகைய விளம்பரங்களைப் பொது நலத்தைக் கவனிக்கவேண்டிய பத்திரிகைக் காரியஸ்தர்கள் தம் பத்திரிகைகளில் வெளியிடலாகாது. ஆனால் சிலர் விளம்பர விகிதம் ஒன்றை மட்டுமே கவனித்து, எந்த விளம்பரமாயினும் சரி என்று பிரசுரித்து விடுகிறார்கள். இதனால் அப் பத்திரிகையில் வரும் விளம்பரங்களை யுண்மையென மதிக்கலாகாதென்று ஜனங்கள் கருத நேர்கிறது.

இப்போது நம் நாட்டில் வெளிவரும் பெரும்பாலான விளம்பரங்கள் உண்மையைக் கவனித்து எழுதப்படுபவையல்லவென்றே யாவரும் கருதுகிறார்கள். ஏனெனில், வர்த்தகன் தன் சரக்கின் நற்குணங்களைப்பற்றிக் கூறவேண்டியது அவசியமே. ஆனால் அச் சரக்கில் அடியோடில்லாத குணத்தைக் கற்பிப்பதும், சாதாரணமாய் இரண்டொரு கடைச் சரக்குகள் சேர்த்து தயாரிக்கப்பட்ட ஒரு ஔஷதத்தை "அநேக வன மூலிகைகளும் விலை யுயர்ந்த சரக்குகளும் சேர்த்து மிகப்பிரயாசையோடு செய்யப்பட்டது" என்று கூறுவதும், கடையில் விற்கப்படும் மேல்நாட்டு இரசாயன மருந்தை "இது ஒரு பெரிய மகானால் கண்டு பிடிக்கப்பட்ட முறைப்படி இமயமலையிலிருக்கும் மூலிகைகளால் செய்யப்பட்டது" என்று எழுதுவதும், அளவுமீறிப் புகழ்வதும், விளம்பரத்தின் மதிப்பை யடியோடு கெடுத்து அந்த வர்த்தகனையும் பொய்யனாக்கி விடுகிறது.

இதோடு இக்காலத்தில் வர்த்தகர்கள் தாம் விளம்பரம் செய்யும் சரக்கு, நம் நாட்டிற்கு நன்மை பயக்கத்தக்கதா அல்லவா என்பதை யடியோடு கவனிப்பதில்லை. "கள்ளுவிற்றுக் கலப்பணம் சம்பாதிப்பதினும் கற்பூரம் விற்றுக் கால்பணம் சம்பாதிப்பது நலம்" என்ற பழமொழியை யடியோடு அவமதித்து, இலாபம் ஒன்றையே கருதி, சுத்த ஆபாசமானவையும் யோக்யதைக்கு

மாறுனவையுமான வஸ்துக்களைப் பற்றியும் மனம் கூசாமல் விளம்பரம் செய்கிறுர்கள். இவற்றால் இக்காலத்தில் விளம்பரங் களில் கூறியிருப்பவைகளில் ஜனங்களுக்கு நம்பிக்கையில்லை. இத ஞல் விளம்பரச் செலவு வீண்செலவாவதோடு வர்த்தகரிடம் நம் பிக்கைக்குறைவு ஏற்படுகிறது. நம் நாட்டு வர்த்தகர்கள் இத் தகைய குறைகளையும் தவறுகளையும் நிவர்த்திசெய்ய வேண்டியது அவர்களின் நன்மைக்கு இன்றியமையாததாகும்.

ஓம் தத்ஸத்.

---

## சகோதரத்வ பாவனை.

இந்திய மக்கள் எவரும் ஒருமித்த
சிந்தைய ராகிச் சிநேகித்துச் — சந்ததமும்
சோதரத்வம் பாராட்டின் துன்பமின்றி வாழ்வரென
ஆதரத்தோ டோதுமறை யாய்ந்து.

சகோதரத்வ பாவனை என்பது, ஆறறிவிற் குரிய மக்களனைவரும், வித்தியாச நோக்கமின்றி, எவ்விஷயத்திலும், ஒன்றிய மனமுடையவ ராய்க் கூடி வாழுந்தன்மையை வெளிப்படுத்த வல்லதோ ரறிகுறியாம். இப்பாவனை ஒவ்வொரு குடும்பத்திலும் அவரவர்க்கு இளமையிலிருந்தே பெரும்பான்மையும் பயிற்றுவிக்கப் பெற்று வருவதொன்று. அன்பு, அருள், ஈவு, இரக்கம் முதலிய சுகுணங்களின் அபிவிருத்திக்கு இந்தப் பாவனை மூலதனமாகின்றது. பகுத்தறிவை எச்சரிக்க வல்லது. ஐக்கியப் பாட்டைப் பசுமரத்தாணிபோ லாக்கத்தக்கது. இராஜாங்க விசுவாசத் தையும், தெய்வ விசுவாசத்தையும் பலப்படுத்தும் பீடமாவதற்கு யோக் கியம் வாய்ந்தது. தேசாபிமானத்தை வளர்க்குங் கருவி இதுவே. அன்னிய நாட்டாரையும் ஆதரிக்குஞ் சக்தி யிதனிடம் குடிகொண்டுளது. பெரியார் சிறியார் இவர்களிடம் தழுவவேண்டிய முறைமையை ஊட்ட அருகமானதும் இச்சகோதரபாவனையே. நல்வழியின் பாற்பட்ட எத் தகைய காரியங்களையும் இதன் வாயிலாக இலேசில் பெற்றுக் கொள்ள லாம். நீதிநூலார்,

" ஆ தரை மிசைநர ராய யாவரும்
சோதரர் எனமிகத் துன்னல் நன்றென
வேதமே யோதுமேல் விளங்குஞ் சோதரர்
மீதமை நட்பினை விளம்பல் வேண்டுமோ "

என்று இதனைப் புகழ்ந்திருக்கின்றனர்.

இந்தப் பாவனை கெட்ட வழியிலுங்கூடக் கூடும். ஆறறிவினர்க்கு அஃதழகன்றும். அப்பாவனையும் உண்மைப் பாவனையாகாது. அது பற்றி நாம் சிந்திக்கவேண்டிய தனுவசியமாயினும்,

" ஊணுடை யெச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு "

என்று நாயனுர் அருளியதைக் கவனிக்கவேண்டும். கவனியாது கைவிடின் அன்னவரை உலகமும் கைவிடும். "இவனென்ன வெட்கங் கெட்டவன்; மானமில்லாதவன் ; மானியன்றோ மனிதன்? இவனிடம் நமக்கென்ன பேச்சு. நாய்குலேத்தா நத்தம் பாழாகப்போகிறது. சீ!

" தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை "

எனத் தெய்வப் புலவர் தெரிவிக்கின்றார் என்று சாதாரணமா யுலகம் ஆசார ஈனரைக் கடிந்துரைக்கும் கட்டுரைக்குக் கட்டுப்பட்டாகவேண் டும். ஆதலின் தீயவழியில் இப்பாவனையை நாடாமல் எப்போதும் நல்ல வழியில் நாடுவதே நன்று. சற்சங்கத்தாலல்லவா நன்மை சித்திப்பது. சற்சங்கத்திற்கு இச்சகோதரபாவனையே பெருஞ் சாதனம்.

நமக்கு உறுதியாய சற்சங்கத்தைக் கைகூட்டவல்ல இப்பாவனு நோக்கமொன்றே, நாம் எடுத்த உடம்பை யழகுபடுத்தத்தக்கது. இப்படி உயர்நிலை யடைவதற்கு முக்கிய உதவிக் கருவியாயுள்ள உடம்பை, உள்ள வரையில் அழகுபடுத்தவேண்டுவது நமது கடமையன்றோ? இன்றேல் " உடன் பிறப்பில்லா உடம்பு பாழ் " என்பதற்குத் தடையென்ன?

இத்துணைச் சிறப்பினதாய சகோதரத்துவ பாவனையை விரும்புவோ ரிடம், 1. ஆற்றுதல், 2. போற்றுதல், 3. பண்பு, 4. அன்பு, 5. அறிவு, 6. செறிவு, 7. நிறை, 8. முறை, 9. பொறை என்னும் இரத்தினங்கள் ஒன்பதும் கையிருப்பாய் இருத்தல்வேண்டும். இந் நவமணிகளின் அரு மையை ஆசிரியர் நல்லந்துவனுர் தமது கலித்தொகை, நெய்தற் கலியில் விசேடித்துப் பேசியுள்ளார். அக்குண விசேஷங்களையும் நாம் அறிந் திருக்கவேண்டும். அவை—

1. "ஆற்றுதல் என்பதொன்றலர்ந்தவர்க் குதவுதல்" அதாவது இல் லறத்தை யொழுங்குபெற நடத்துதலென்று மொழிவது, தரித்திரர்க்கு ஏதாவதொன்ற்ற யுதவுதல்.

2. "போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை":—ஒன்றைப் பாதுகாத்தலாவது நேசித்தவரை விட்டு நீங்காதிருத்தல்.

3. "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகுதல்":—நற்குண நற் செயல் என்று கூறப்படுவது உலக நடையை புணர்ந்தொழுகுதல். "உல கத்தோடொட்ட வொழுகல் பலகற்றும் கல்லார் அறிவிலாதார்" என்பர் செந்நாப் போதார்.

4. "அன்பெனப்படுவது தன்கிளை செறாமை":—அன்பாவது தன் உறவின் முறையாரை வருத்தாதிருத்தல்.

5. "அறிவெனப்படுவது பேதையார் சொல் நோற்றல்":—அறிவாவது அறியாதார் தன்னை நோக்கிக் கூறும் மொழிகளைப் பொறுத்துக் கொள்ளுதல்.

6. "செறிவெனப்படுவது கூறியது மறாமை":— செறிவாவது சொன்ன தொன்றைப் போற்றுதல்.

7. "நிறையெனப்படுவது மறை பிறரறியாமை:"—நிறையாவது மறைந்ததொரு காரியத்தை அயலறியாவா றொழுகுதல்.

8. "முறை யெனப்படுவது கண்ணோடா துயிர்வௌவல்":—முறையாவது நம்மவரென்று தாக்ஷண்ணியம் பாராது அவர் செய்துள்ள குறைக்குத் தக்கபடி அவரது உயிரை வாங்குதல்.

9. "பொறை யெனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்":—பொறையாவது பகைவரைக் காலம் நோக்கிப் பொறுத்திருத்தல்.

இத்தன்மையான குணங்களில்லார் மாட்டுச் சகோதரத்துவ பாவனை பயன்பெறாது. முக்குண வயத்தரான மக்கள் என்றும் பிழைக் குரித்தானவரே. அதுபற்றி அவரை நாம் அறவே வெறுப்பதுகூடாது. சிறு பிழைகள் பொறுக்கத் தக்கனவே யன்றோ? அன்றியும் மழையினிடத்தில் இடியும், மலரினிடத்தில் முள்ளும், சந்திரனிடத்தில் களங்கமும், கனியினிடத்தில் தோலுங் கொட்டையும் இருத்தல் இயல்பாதலின், எவ்வாறு நாம் இக்குறைகளை நோக்காது இவற்றை ஆதரிக்கின்றோமோ அவ்வாறு மக்களையும் ஆதரித்து நல்வழிப்படுத்துவது சகோதரத்துவ பாவனைக்கின்றியமையாத கடனும். இங்கு இரண்டு உதாரணங் காட்டுவாம்.

தொண்டை நாட்டில், முதிரமலை என்னும் பதியை அரசுபுரிந்து வந்த குமணராஜனைப்பற்றி நாம் பன்முறை படித்தும் கேட்டும் வருகிறோம். புகழொடு தோன்றிய இச்சிற்றரசனை உலகம் மறப்பதுண்டோ? மேற்சொன்ன நற்குணங்கள் யாவும் இவனிடம் பொருந்தியிருந்தன. தமிழறிந்தவன். பரோபகாரம் புரிந்து வருவதே பிறவிப்பயன் என்னும் உத்கிருஷ்ட நோக்கங்கொண்டவன். கற்றாரைக் காதலிப்பவன். இன்ன புவிராஜனைக் கவிராஜரான பெருந்தலைச் சாத்தனார் காணவேண்டிச் சென்றார். சென்றவர், சிம்மாதனத்தில் குமணனுக்குப் பதிலாக அவன் தம்பி இளங்குமணன் வீற்றிருக்கக்கண்டார். விசாரணையில், குமணனுடைய உதாரகுணத்தைச் சகியாத இளங்குமணன் கவலைபுற்றிருந்ததைக் கண்ணுற்றுக் குமணன் இராஜ்ஜியத்தைத் தன் பின்னவன் வசமே விட்டுவிட்டுத் தானெங்கோ மறைந்திருப்பதாகவும், இராஜ்ஜியம் தன் வசமானவுடனே இளங்குமணன், "இதுதான் தக்க சமயம். காற்றுள்ள போதன்றோ தூற்றிக்கொள்ளவேண்டும். அண்ணனுள்ளவரையில் தனக் காபத்தே" என்று எண்ணி, "எனது அண்ணன் சிரத்தைக்கொண்டு வருபவர்க்குப் பொன்கோடி அளிக்கப்படும்" என்று விளம்பரப்படுத்தி

யிருப்பதாகவும், இவ்வநீதத்தை ஜனங்கள் வெறுத்திருப்பதாகவுங் கேள்வி யுற்றார். மனம் வருந்தினார். தமர்க்கிடர் கண்டபோது கறவையும் கன்றும் போலாதலன்றோ கற்றோர்கியதி. உடனே அங்கு நின்றும் வெளியேறினார்.

வெளியேறிய பெருந்தலைச் சாத்தனார், மார்தையம்பதியில் வாழும் மகுடத்தியாகியை நேசித்து, "சகோதரரே! உம்மாலாகத்தக்க தொன்றுளது. அதுவோ பரோபகாரத்தின்பாற் பட்டது. குமணராஜனை நீரறிந்தவர்தானே. அவ்வேந்தர் பிரானுடைய சிரமானது புதிதாக வெட்டுண்டதுபோற் றோன்றுங்காக்ஷியில் ஒன்று அமைத்தளிக்கவேண்டும்" என்று கேட்டு அவனையும் புகழ, அவன் அவ்வண்ணம் அமைத்துக் கொடுத்த தலையைக் கொண்டுவந்து இளங்குமணனுக்குக் காட்டினார். அதனைக்கண்ட இளங்குமணனது மனம் முன்னைய நிலையினின்றும் மாறிப் பெருங்கவலைக்குள்ளாயது. அவன் சாத்தனாரைப் பார்த்து, "ஐயா! புலவர் பெருமானே! இனி நான் என்னுடன் பிறந்த அண்ணனாரை உயிரோடு காணப்போகிற தொழிந்ததோ? என் அறியாமையின் பயனாய், மகிழ்வைத் தருமென்றெண்ணிய வென் எண்ணம் இப்போது பழியோடு கூடிச் சதா என்னை வருத்தக் கூடிய துன்ப வடிவாக மாறிவிட்டதே" என்று வாய்விட்டுப் புலம்பலானான்.

அப்போது வித்வகோலாகலர் அவனை நோக்கி அண்ணலே!

" எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு "

என்னும் இதோபதேசத்தை மறந்து, நீரே தேடிக்கொண்ட இதற்கு வருந்துவது பேதைமைத்தனமல்லவா? ஆயினும் எங்கட்கு உயிர்ப்பிக்கும் வல்லமையுமுண்டு. நீர் மனப்பூர்வமாக விரும்பின், உமது அண்ணனாரைப் பழையபடி எழுப்பித் தருவோம்" என்றனர்.

இவ்வமுதமொழி இளங்குமணனுக்குப் பேரானந்தத்தை யளித்தது. உடனே அவன் "கவீச்சுரரே! புவீச்சுரனான என்னைக் கனப்படுத்த எனது அரும்பெற லண்ணனாரை எழுப்பி யருளக்கடவீர்; முன் விளம்பரப்படுத்திய பரிசுக் கதிகமான பரிசு உமக்களிப்பேன்" என்று போற்றினன். கவீந்திரரும் குமணராஜனைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்தனர். அச்சமயம் உடன்பிறந்தாராய அவ்விருவர்க்கும் இரத்த பாசத்தாலுண்டான அன்பின் செய்கை கண்டோர் மனதைக் கவர்ந்து, "ஆ! சகோதரத்துவ பாவனையின் மகத்துவம் இருந்தவாவென்னே என்று உரத்துச் சொல்லும்படி அவர்களை ஆனந்தாதிசயக்கடலில் அமிழ்த்திவிட்டது. குமணராஜன் சபையோரைப் பார்த்து, "சகோதர சகோதரிகாள் !

" வெம்புங் காலம் வெதும்பி விழுஞ்சிரம்
செம்பொன் கோடி விலையெனச் செப்பினன்
உம்பர் நாடும் உலகெங்குந் தேடினும்
எம்பி போலெனக் கியாவர் இனியரே "

என்றான். இவ்வாறல்லவா சகோதரத்துவபாவனை இருக்கவேண்டும். இது நிற்க, இராம ராஜ்ஜியத்தில், இச்சகோதரத்துவ பாவனையை, ஸ்ரீராம பிரான் நடத்திக்காட்டிய அற்புதத்தையும் சிறிதுபேசி, அச்சகோதரத்துவ பாவனையில் நாம் உள்ளபடி ஈடுபடுவோமாக. (வரும்)

ம. இராஜகோபால பிள்ளை,
கோமளேசுவரன் பேட்டை.

---

## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(174-ம் பக்கத் தொடர்ச்சி.)

(37) இன்பத்தி லிறுமாந்து தோணோக்கி யின்றமத
துன்பத்தி லழுந்துவார் தொல்லுலகி லறியாதார்
இன்பதுன் பங்களே யெய்தியபோ திவை யெல்லாம்
முன்பற்று விடாதவினைப் பயனென்பார் முழுதுணர்ந்தோர்.

(சீதை வனம்புகு. 72.)

இச்செய்புள், இளையபெருமாள் பிராட்டியாரை யரண்யத்தில் விட்டு வர வழைத்தேகு நெறியின்கண், அன்னையார்க்கு மனோதிட முண்டாமாறு உன்னற்கரிய இன்னல் பல மன்னிய ஞான்றும் தன்னிலை திரியா மன்ன வர் சரிதையை நன்னயமுடனே நவின்ற சந்தியிலுள்ளது.

(இ-ள்.) "அம்மா! இம்மாநிலத்து கல்வி யறிவில்லாச் சிறியோர் இன்பமுற்ற காலத்திறுமாப்புக்கொண்டு தோள்கள் பூரிக்கக் களிப் படைந்து, துன்பம் நேர்ந்தழி துக்கசாகரத்தழுந்தி வருந்துவார்கள். முற்றுமுணர்ந்த பெரியோர், இன்பமேனும் துன்பமேனும் தம்மை யடைந் தக்கால் இவைகளெல்லாம் பழவினையின் பயனெனக் கருதி, இன்பத்தி லின்பமடையாமலும் துன்பத்திற் றுன்பமடையாமலும் சமமாக்கருதி யிருப்பார்" (எ-று.)

இன்பமும் துன்பமும் ஓரிடத்தும் நிலைபெற்றிருப்பனவல்ல. சகடக் கால்போல மாறிமாறிவரு மியல்புடையவை. 'யாரே கடைபோகச் செல்வ முய்த்தார்?' 'அளந்தனபோக மவரவராற்றால்'. இன்பமென்பது துன்பக் கடலினிடையிலுள்ளது. சேற்றின் நடுவிற் றோன்றுஞ் செங்கமலம். விடவா யராவினுச்சியி னொளிரும் உச்சிதமணி, எளிதி னெய்தப் பெறுவ தொன்றன்று. இன்ப மிறை யளவிற்றாயின் துன்பந் தொடுகட லொக்கும். ஊன்றியோசிக்கு மிடத்து ஊனேறுடலுயிர் வாழ்க்கையே உறுகணிற் குறையுள் (துன்பத்திற்கிருப்பிடம்). ஆகவே, இன்பமெய்தியக்கால்,உள்ள முவந்தும், இடுக்கண்வந்துற்றபோது இருந்தேங்கியு மிருப்போமாயின் நமது வாழ்க்கை துக்கவாழ்க்கையாகவே முடிவுறும். நிற்க,

துன்பத்தினிமித்தம் சோகிப்பதாலுண்டாம் பயன் யாது? சிறி தளவையேனும் குறைவுபடுத்தவோ 'உறற்பால நீக்கலுறுவர்க்கு மாகா! அணைகடந்த வெள்ளம் அழுதாலும் திரும்பாதே. அழுவதால் துன்பமதி

கரிக்குமேயன்றி அணுவேனுங் குறையாது. 'வருந்தி யழைத்தாலும் வாராத வாரா; பொருந்துவனபோமி னென்றால் போகா'.

"சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத் தூற்றாகா வாமிடத்தே — யாகும்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனால்
இறுகாலத் தென்னை பரிவு." (சமணமுனிவர்.)

நாமியற்றிய நல்வினைப்பயனாகிய இன்பத்தைக் களிப்புடனேற்றுக் கொள்வதேபோல், தீவினைப்பயனாகிய துன்பத்தையும் ஏற்றுக்கொள்ளாமல் முறுமுறுப்பதென்னை? இக்கருத்தை நாயனாரும்,

"நன்றாங்கால் நல்லவாக் காண்பவ ரன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்?" என்னும்

குறளால் விளக்குகின்றார்.

ஆகையால், "நாம் இன்பவாழ்க்கையை — துக்கமற்ற வாழ்க்கையை யுடையோரா யிருக்க விரும்பினால், பிராரப்தத்தால் வரும் இன்பதுன்பங்களைச் சமமாய்க்கருதி, நடுநிலைமையிலிருந்து, இவைகளெல்லாம் நமக்கல்லவெனக்கருதி—இன்பத்தில் மகிழாமலும் துன்பத்தில் துயருறாமலு மிருத்தல்வேண்டும்" என்னும் நீதியை இச்செய்யுளால் அறியவேண்டியவர்களாகின்றோம்.

"வாழ்வது வந்தபோது மனந்தனில் மகிழவேண்டாம்
தாழ்வது வந்தானால் தளர்வரோ தக்கோர்"
* * * * * * "
"ஞானிக்கில்லை யின்பமுந் துன்பமும்"

38. மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கில் முதலற முருக்குமாப்போலத்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து தன்னுறு கிளையெலாஞ் சயிக்கும்
ஆங்கதன் தன்மை யறிந்தவர் கமையாலதனை யுள்ளடக்கவு மடங்கா
தோங்கிய கோபத் தீயினை யொக்கு முட்பகை யுலகில்வே றுண்டோ
(இலவணன் வதை. 29.)

இப்பா, எப்பாருமேத்தும் ஒப்பாரிலாத அப்பிரமேயனாகிய காகுத்தன் இலக்குவனுக்கு இராசநீதி யியம்பிய வவசரத்துள்ளது.

(இ-ள்.) "தம்பி! மூங்கிலில் பிறக்கும் அக்கினியானது, அம்மூங்கிலை வம்சத்துட னெரித்தழித்து விடுவதுபோல, மனிதனிடந்தோற்றும் அடக்கமுடியாத கோபமாகிய நெருப்பும் அவனைக் கிளையோடு நாசமாக்கும். அதன் தன்மையை யறிந்தவர்கள் பொறுமையாலடக்கினாலும் அடங்காமல் மூண்டெழும் கோபாக்கினியைப் போன்ற கொடிய பகை உலகத்தில் வேறொன்றுண்டோ?" எனக்கூறினார். கோபம், குரோதம், சினம், சீற்றம், வெகுளி முதலியன ஒரு பொருட் சொற்கள்.

பகை, அகப்பகை புறப்பகை யென விருவகைத்து. அகப்பகை, நமக்குள்ளிருக்கும்பகை. அவை, காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மார்ச்சரியம் எனவாறு. அன்னியமாக விருப்பது புறப்பகை. இவற்றுட் பின்னதின் முன்னதே இன்னாதது. அறிபகையினின்றுந் தப்பலாம்; அறியாப்பகையினின்றுந் தப்புதலரிதரிது. ஆகலின், அகப்பகை விஷயமாக நாம் மிக்க எச்சரிக்கையோடிருத்த லத்தியாவசியம். கோபத்தை யடக்கவேண்டும். கோபத்தை யடக்குதலே சற்குணம். அதுவே தவம்.

" உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க — வெள்ளம்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு "

" எள்ளிப் பிறருரைக்கு மின்னுச்சொல் தன்னெஞ்சில்
கொள்ளி வைத்தாற் போலக் கொடிதெனினும் — மெள்ள
அறிவென்னும் நீரா லவித்தொழுக லாற்றின்
பிறிதெனினும் வேண்டாம் தவம். "

'கோபமே பாபங்களுக்கெல்லாம் தாய்தந்தை', 'கோபத்தாலழிந்தவர் கோடி கோடியே'. ஆகையால் 'ஆறுவது சினம்'. புறப்பகையாலழிந்தவரினும் அகப்பகையால் மாண்டவ ரநேகம். காரியசித்திக்குச் சத்துரு சினமே. வெகுளாமை சுவராஜ்யசித்திக்கு மார்க்கம். 'வெல்வது வேண்டின் வெகுளிவிடல்'. கோபம் பைத்தியம்போன்ற வோர்நோய். உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கொள்ளிவாய்ப்பேய். நல்லறிவைக் கெடுக்கும் நன்றிகெட்ட நாய். கோபகாலத்தில் கண்ணும் முகமும் சிவப்பது எதனால்? இரத்தம் குபீரெனப் பொங்குவதால். உடல் விடவிடத்தலும், உதடு துடிதுடித்தலும், நாப்படபடத்தலும் உண்டாவது இரத்தம் இரத்தக்குழாய்களில் அளவுக்கதிகமாய்ப் பாய்வதனாலேயே. இது சற்று மிதமிஞ்சின் அக்குழாய்கள் வெடித்துப் பிராணப்பிரயாணமுண்டாதல் திண்ணம். சினந்தணிந்தபின் சரீரநிலையை, உடலின் இளைப்பை, நரம்புத் தளர்ச்சியை, உற்று நோக்குவோர்க்கு உண்மை புலனாம். கோபம் சண்டாளம். சிற்றம் கூற்றினும் கொடிது.

" தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்."

" சினத்திற் பகையு முளவோ பிற. " (குறள்.)

இக்காரணத்தாலேயே, பொய்யாமொழியார் இக்கொடிய கோபத்திற்குச் 'சேர்ந்தாரைக் கொல்லி' யெனப் பெயரிட்டனர்.

அக்கோபத்தீயை அறிவென்னும் நீரினால் அவித்துத் தலையெடுக்க விடாதிருப்பின்,

" உள்ளிய வெல்லா முடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின். "

என்ற தமிழ் மறையின்படி கோபத்தை விடின், இம்மை, மறுமை, வீடு முதலான நினைத்த காரியங்களியாவும் கைகூடப்பெறும். இன்றேல் தரையிலறைந்தகை தப்பாமற் படுதல்போல இம்மை மறுமைச் சுகங்களை யிழந்து மீளா நரகிற் காளாக வேண்டிவரும்.

ஆகலின், கோபத்தை யொழித்துச் சாந்தத்தை — பொறுமையை— மனோவடக்கத்தை — பூஷணமாக்கொண்டு ஒழுகுவோமாயின் ஆண்டவனருளுக்குப் பாத்திரராகி, அர்தமிலின்பத் தழிவில் வீட்டை யெய்தப் பெறுவோ மென்பது பெறப்படுகின்றது. ஓம்சாந்தி: ஓம்சாந்தி: ஓம்சாந்தி:

கம்பராமாயண நீதிச்செய்யுள் முற்றுப் பெற்றது.

தமிழுலகம் பிழை பொறுக்க.

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## ஹிந்துமதம்—அதன் பெருமை.

(ஸ்ரீமான் வி. நாராயணசாமி ஐயர் எழுதியது)

(215-ம் பக்கத் தொடர்ச்சி.)

### மும்மார்க்கம்.

மும்மார்க்கத்தின் பகுதியாக நமது மதம் முக்கியமாய் உபதேசிப்பது யாதெனில், சர்வ வியாபியாயும், சர்வ சக்தனும், சர்வஞானியாயு மிருக்கின்ற ஒரு வஸ்து, உலகத்திலிருக்கப்பட்ட ஜீவராசிகளைத் தர்ம மார்க்கத்தில் சினேக பந்தத்தால் கட்டுகின்ற தென்பதாம். இவ்வுண்மையை வேதாந்தத்தின் பிரகாசமான உபதேச மொழிகளால் அறிகின்றோம். "சர்வம் கலு இதம் பிரமம்" இவைகள் எல்லாம் பிர்மம், "தத்வமஸி" நீ அதுவா யிருக்கிறாய். "அகம்பிர்மாஸ்மி" நான் பிர்மமா யிருக்கிறேன் என உபநிஷத்துக்கள் கோஷிக்கின்றன.

இரண்டாவதாகத் தெரிந்து கொள்ளுகிறது கடவுள் மூவகையாக உலகத்தில் பிரகாசிக்கின்றார் என்று. படைக்கின்றார், காக்கின்றார் அழிக்கின்றார். இவைகளைத்தான் கார்யத்திற்கொரு மூர்த்தியாக முறையே பிர்மா, விஷ்ணு, ருத்திரன் என வகுத்திருக்கின்றோம். ஆனால் சாதாரண மனிதருக்குள் தகுந்த ஆராய்ச்சியும் போதுமான சாஸ்திர ஞானமுமில்லாதவர்கள், இவ்வெறும் கட்டுக்கதைகளை நம்பி ஒரு மூர்த்தி மற்றொன்றைவிடப் பெரிதென்றும் சிறிதென்றும் சண்டையிடுகின்றனர். ஒரே கடவுள் மூன்று விதமாகத் தோன்றுகின்றார் என்பதுதான் ரகஸ்யம். இதை எம்மதமும் மறுக்கவில்லை.

மூன்றாவதாக இவ்வுலகத்தைவிட வேறு உலகங்களிருக்கின்றன வெனும் நம்பிக்கை. ஒவ்வோர் உலகமும் அதிக வேற்றுமைகளை யுடையதாக விருக்கின்றது. இவ்வூனக் கண்ணால் பார்க்கும்படியான அனேக நக்ஷத்திரமண்டலங்கள் சூர்யமண்டலங்கள் முதலியவைகளைத் தவிர

ஜீவராசிகள் வசிக்கத் தகுந்ததாயும் நமது ஊனக் கண்களுக்குத் தெரியாததாயு மிருக்கின்ற உலகங்களிருக்கின்றன. இப்பூவுலக வாசமானதும் ஆன்மாக்கள் தங் தம் கர்மாவிற்குத் தகுந்தாப்போல் அவ்வவ்விடங்களுக்குப் போய் வசிக்கின்றன. திரும்பவும் இவ்வுலகத்தில் பிறக்கின்றன.

மற்றோர் நம்பிக்கை சாதாரணமாக நம்மவர்களுக்கு உண்டு. அதாவது சர்வசக்தனான ஒரு கடவுளின் ஆக்ஞைக்கு அடங்கினவர்களாய் இயற்கைக்கும் சட்டங்களுக்கும் விரோதமில்லாமல், அனேக உலகங்களை ஆளத் தகுந்தவர்களாய் தேவதைகள் எனும் பெயருடன் வசித்து வருகின்றனர் என்பது.

## அவதார விசேஷம்.

எல்லா மதத்தினர்களும் நம்புகின்றதா யிருந்தாலும், நம்மதத்திற்கு விசேஷ உரிமையுடைத்தா யிருப்பது. அவதாரங்களிடத்து நம்பிக்கை வைப்பது. இவ்வவதாரங்கள் சர்வக்ஞனான ஒருவனிடத்திலிருந்து உண்டாகிறதினால் பிரிக்க முடியாதது. ஆனால் அவைகள் எப்படி தோன்றுமென்றால் அனேக குன்றுகள் மத்தியில் மலை எப்படியோ. அனேக நக்ஷத்திரங்கள் மத்தியில் சந்திரன் எப்படியோ அப்படியே. இவர்களைத் தான் கடவுள் அம்சம் பெற்றவர்களென்றும், ஆவேசங்களென்றும் மற்றும் பல பெயர்களுடனும் வழங்குவது. உலகத்தில் கஷ்டங்களோ அதர்மங்களோ மனிதர்களால் நிவர்த்திப்பதற்கு முடியாத அளவு அதிகமாய் விட்டால் அதை நிவர்த்திப்பதற்குக் கடவுளேயோ, அல்லது அவரம்சம் பெற்றவரோ வரவேண்டி இருக்கின்றது. கடவுள் ஓர் உருவத்துடன் வந்துவிட்டால் மற்ற விவகாரங்களைக் கவனிப்பது யார் எனலாம். ஆனால் எப்படி ஒரு மனிதனை முள் தைத்தபொழுது, அவ்வலியை நிவர்த்திப்பதற்கு அதிக ஜீவசக்தி வேண்டி இருந்தபோதிலும் மற்ற கார்யங்களும் அவன் தேகத்தில் நடைபெறுகின்றனவோ அதே போல்தான்.

கடைசியாக, நமது வைதிக மதம் போதிப்பது, நம் ஆன்மாவானது கடவுளின் ஓர் அம்சம் என்று தான். சிருஷ்டி சமயத்தில் கடவுளிடத்திலிருந்து ஆன்மாவானது பிரிகிறது. பிரிந்து அனேக சுகங்களையும் கஷ்டங்களையும், பல ஜென்மங்களில், முன்செய்துள்ள கர்மங்களுக்குத் தகுந்தவாறு அனுபவித்து, கடைசியாக பிர்மஞானம் பெற்று, ஜீவன் முக்ததிசை எனும் பெரும்பேற்றை யடைந்து கடவுளிடத்தே போய்ச் சேருகின்றது.

## எதை விரும்பவேண்டும்?

இதுவரையிலும் அதிக சுருக்கமாக "நினைக்கவேண்டியவைகள் யாவை" எனும் கேள்விக்கு, நம் ஹிந்து மதம் என்ன பதில் அளிக்கின்றதென்பதைப் பார்த்தோம். இனிமேல் "எதை விரும்பவேண்டும்" எனும் விஷயத்தை ஆராய்வோம்.

நாம் எல்லோரிடத்தும் அன்புள்ளவர்களாக இருக்கவேண்டுமென்று விரும்பவேண்டும். இதைத்தான் ஹிந்து மதத்தின் ஒவ்வொரு சாஸ்திர

மும் கூறுகிறது. "அஷ்டாதச புராணேஷு-போதஸ்ய வசனத்வயம்! பரோபகாராய புண்யாய பாபாய பரபீடனம்!" பதினெண் புராணங்களி லும் புத்திமான் சொல்வது இருவார்த்தைகளே. பிறருக்கு நன்மை செய் வது புண்ணியம், தீமை செய்வது பாபம் என்பதே. நம்மைவிட மூத்த வர்களிடத்தும், ஞானிகளிடத்தும் மரியாதை மூலமாகவும், நம்மை ஒத்த வர்களிடத்து சினேக பாவத்தாலும், நம்மைவிடத் தாழ்ந்தவர்களிடத்து பரிதாபத்தாலும், கருணையாலும், நம் அன்பைக் காட்டவேண்டும். எம் மதம் இவ் அன்பை போதிக்கின்றதில்லையோ, அது ஹிருதய மில்லாத மனிதன் எப்படி இறந்து அசுத்தப்படுவானோ, அதேபோல் அம்மதமும் ஒழியும்.

எம்மதத்தினர்களாவது எத்தேசத்தவர்களாவது, உத்தமமான நாக ரிகத்தை யடையவேண்டுமானால் அவர்கள் மூன்று விதத்தில் உயர்வு பெற் றிருக்கவேண்டும். (1) எல்லாவித அறிவையும் போதிக்கக்கூடிய சாஸ்தி ரங்கள் அதிகமிருக்கவேண்டும். (2) தேர்ந்த கைத்தொழில்க ளிருக்க வேண்டும். (3) எல்லாவற்றையும் விட அதிமுக்கியமாய் சுத்தமான நட வடிக்கைகள் வேண்டும். கருணையும் தர்ம சிந்தனையும், ஜீவராசிகளிடத்து அன்புமில்லாத நாகரிகம் உத்தமமானதல்ல. எல்லாத் தேசத்தவர்களும் எல்லாச் சமயத்திலும், 'அன்பே சிவம்!' உன்னைப்போல் உன் அயலானை நினை என்பவைகளையே போதிக்கின்றனர். ஒரு மதம் உத்தமமான தென்று சொல்வதற்கு முன்பாக, அது சந்தோஷம் அடைவதற்குக் காரணமாயிருக்கின்ற 'உலக சகோதரத்வத்தை'ப் பெறவேண்டும். ஆனால் தற்காலத்தில் தெய்வீக சக்தியையும், அன்பையும் விட்டுவிட்டு, மூட நம் பிக்கைகளால் குரூரத்தன்மையைக் கைக்கொண்டு மதத்தின் உண்மை விளக்கத்தை மறந்து, போலிகுருக்கள் கூறுகின அறிவினால் தூண்டப் படும் சமய சச்சரவுகளும் ஜாதிச் சண்டைகளும் அதிகமாகின்றன. நம் ஹிந்து மதமும் தற்காலத்தில் அத்தகைய நிலைமைக்கே வந்துவிட்டது. அந்தோ! ரிஷிகளுடைய சந்ததிகளைச் சேர்ந்தவர்களென்று, வாய் கூசா மல் சொல்லிக்கொண்டு, கடவுளின் புத்திரர்களாகிய சில மனிதருக்கு ஜீவஜெந்துக்கள் அடையக்கூடிய சாதாரண உரிமைகளைக்கூடக் கொடுக்க மறுக்கின்றார்கள். என்ன பேதைமை! இவ்வுலகத்திடத்து அவர்கள் உரிமை யிழந்தவர்கள் போலும்! இத்தகைய சமூகச் சீர்க்கேட்டை நிவர்த் திக்கவேண்டி சமய ஆசாரியர்களும், கற்றறிந்த பெரியோர்களுமே முன் வரல்வேண்டும்.

### சடங்குகள்.

கடைசியாக எதைச் செய்யவேண்டும் என்பதைப்பற்றி ஹிந்துமதம் தெரிவிப்பது யாதெனில், சமூகத்திலேயும் தனியேயும் ஒவ்வொருவரும் எப்படி நடந்து கொள்ளவேண்டுமென்றும் அவன் வாணாட்களில் செய்ய வேண்டிய சம்ஸ்காரங்களையும், சடங்குகளையும் பற்றியேயாம். இவ் வழக் கங்கள், தேசங்களைப் பொறுத்து வேறுபடுகின்றன. மனோதேக தத்வங்

களின்மேல் வேறுபடுகின்றன. ஆகையால் ஒரு தேசத்தில் செய்யும் சடங்குகள் மற்றொரு தேசத்தில் செய்யவேண்டிய அவசியமில்லை. இச்சடங்குகளும் சம்ஸ்காரங்களும் ஒவ்வொருவருக்கும் வேண்டுமென்பதில்லை. ஆனால், எல்லோருக்கும் வேண்டாம் என்றும் சொல்ல முடியாது. ஒரு ஜீவனின் வளர்ச்சிக்குக் குறிப்பிட்ட காலம்வரை இவைகள் அவசியம் வேண்டியே இருக்கின்றன. நம்மவர்கள் முக்கியமாய் மூன்றுவித சடங்குகள் செய்கிறார்கள். அவைகள், பிறப்பதற்குமுன், பிறந்தபின் வாழுநாட்களில், இறந்த பிறகு, செய்யவேண்டியவைகள் என்பதே. இச்சடங்குகள் எல்லாம் ஆத்மாவின் ஸ்தூல, சூட்சும தேகங்களின் அழுக்குகளைப் போக்கிச் சுத்தம் செய்து இம்மையிலும், மறுமையிலும் உத்தமமானவைகளாகச் செய்து கடவுளின்பால் சேர பக்குவமாக்குகின்றன. நமது கண்களுக்குத் தெரியாது உலகத்தில் வசிப்பவர்களோடு 'சம்சர்க்கம்' வைத்துக்கொள்வதற்கும், அவர்களிடமிருந்து அனேக நன்மைகளைப் பெறுவதற்கும் சில சடங்குகளிருக்கின்றன.

நம் மதத்தின் இப்பகுதியிலேயே வர்ணாச்ரம தர்மங்கள் அமையப் பெற்றிருக்கின்றன. இவைகள் அருத்தமில்லாமல் ஏற்படுத்தப்பட்டனவென்று குறை கூறுகின்றனர். ஆர்யவர்க்க சிருஷ்டி ஆரம்பத்திலேயே வைவஸ்வத மனுவினால், அவர் குழந்தைகளாகிய நமக்கு, கொடுக்கப்பட்ட ஒரு பெரிய தர்மத்தைக் குறைகூற முடியுமா? கேவலம் மனோதத்வ ஆதாரத்தின்மேல் ஸ்தாபிக்கப் பெற்றதாகையால் சாஸ்திரமானது குறை கூறமுடியாதது; அழிய முடியாதது. ஆனால் அத்தர்மம் தற்காலம் சங்கரமித்து சீர்குலைந்திருக்கின்றது. அதனால்தான் தீய சம்பவங்கள் பல நேருகின்றன. ஆனால் தக்க பெரியார்கள் அதைச் சீர்ப்படுத்தலாம். அவர்களுடைய வரவு இக் காரியத்தில் நல் வரவாகும்.

மேற்கண்ட கருத்துக்களை ஹிந்துமதத்தின் ஒவ்வொரு சமயங்களும் (sects) அவர்கள் பழையவர்களாக விருந்தாலும், நவீனர்களாக யிருந்தாலும் வைதீகர்களாக விருந்தாலும், லௌகிகர்களாக விருந்தாலும் ஒத்துக்கொள்ளுவார்கள்.

### மதம் என்பது அநுபவம்.

நம் மதத்தில், மதம் என்பது "அநுபவம்" என்பதை நாம் மறக்கலாகாது. நாம் வேதாகமங்களில் "அநுபூதி" எனும் சொல் எல்லாவிடங்களிலும் பிரகாசிக்கின்றது. கேவலம் மதப் புத்தகங்களைப் படித்தறிந்தவரா யிருப்பதாலேயோ, எழுதுவதினாலேயோ ஒருவனை "அநுபூதி" (Realisation) அடைந்தவன் என்று சொல்ல முடியாது. சில ஹிந்து கொள்கைகளில் நம்பிக்கை வைத்து அதைப் பேசுவதால் மட்டும் நாம் ஹிந்து மதத்தினர்களாக முடியாது. "பிர்மத்தை அநுபவிக்கவேண்டும்" "கடவுளில் வசிக்கவேண்டும்" பிரிக்க முடியாத ஐக்கியம் ஆள்கிறவனுக்கும் ஆளப்படுகிறவனுக்கும் இருக்கவேண்டும் என்பதே ஹிந்துக்களின்

தினசரி பிரார்த்தனையாக இருந்து வருகிறது. இச்சொற்களைக்கொண்டு கிளியைப்போல சொல்வதில் பிரயோஜனமில்லை. நாம் கடவுளிடத்து நம்பிக்கை வைப்பது, நம் புத்திக்கு ஏற்றதாக விருக்கிறது என்பதால் மட்டுமல்ல. ஆனால் நம் முன்னோர்கள் கடவுளை அறிந்திருக்கிறார்கள். நாமும் அறியலாம். ஆத்மா இருக்கிறது எனும் நம்பிக்கை அது இருப்பதற்குக் காரணங்கள் தோன்றுவதால் மட்டுமல்ல. ஆனால் ஆயிரக்கணக்கான நம் மூதாதைகள் நம் ஆத்மாவை அனுபவித்து உணர்ந்திருக்கிறார்கள். இப்பொழுதும் அத்தகையவர்கள், குறைந்த எண்ணிக்கை புடையவர்களாக இருந்தாலும் இல்லாமலில்லை. இனிமேல் ஆயிரக்கணக்கானவர்கள் வருவார்கள். அப்பொழுதுதான் இந்தியாவிலிருக்கின்ற சமயச் சண்டைகளும் சாதிச்சண்டைகளும் ஒழியும். தேசீய வளர்ச்சிக்கும் ஒற்றுமைக்கும் பாதகமாயிருக்கின்ற இச்சண்டைகள் சீக்கிரம் ஒழிய வேண்டுமென்றே ஒவ்வொரு ஹிந்துவும் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும்.

என் போன்றவர்களால் எழுத முடியாத ஒரு பெரும்விஷயத்தை, ஏதோ அரைகுறையாக எழுதி முடித்தேன். இச்சிறு கட்டுரையானது மனிதவர்க்கத்தில் சிறப்புற்றவர்களால், அனுசரித்து வந்ததும் வருகிறதுமான மதத்தைப் பற்றின விஷயங்களை ஆராயப் புகுவதற்கு ஓர் ஆரம்ப முகவுரையாகத்தானிருக்கும் என்று நம்புகிறேன்.

(கடலூர் ஹிந்துசபையின் பிரசுரம்)

(நவசக்தி.)

---

## ஸ்திரீகளுக்கு வேண்டாதவை.

ஓர் அமெரிக்கன் சங்கத்தில் மனைவிகளுக்கு வேண்டாமென்னும் ஓர் உபதேசத்தைச் சட்டமாகப் பாவிக்குமாறு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. என்ன வேண்டாமெனின்:—

1. கலியாணஞ் செய்துகொண்ட மனைவிகள் ஊதாரித்தனமா யிருக்கலாகாது.

2. உன் வீட்டுவாசல் கடக்கவேண்டாம்.

3. வீட்டைக் கவர்ச்சியில்லாததா யிருக்க இடங் கொடுக்கவேண்டாம்.

4. வேறு ஆடவர்களின் வார்த்தைகளுக்குச் செவி கொடுக்கவேண்டாம்.

5. உன் தாயாருடன் அதிக நேரம் கழிக்கவேண்டாம்.

6. உன் பிள்ளைகளை அவர்கள் தகப்பனார் கூறும் நற்புத்தியினின்று கலைக்கவேண்டாம்.

7. உன் கணவன் மனம் வெறுக்கத்தக்க வார்த்தைகள் பேசவேண்டாம்.

8. உன் வீட்டு விஷயமாகவும் உன் கணவனை நடத்தும் விதத்தையும் அக்கம் பக்கத்தார் போதிக்க வந்தால், அதைக் கொஞ்சமும் அங்கீகரிக்கவேண்டாம்.

9. ஆண்பாலர் உன்னை ஊர்ந்து நோக்கும்படி எதிரே நிற்கவேண்டாம்.

10. கணவனை அடிக்கடி பணத்திற்குத் தொந்தரவுசெய்யவேண்டாம்.

11. தினந்தோறும் கடவுளைத் தொழுதற்கு மறக்கவேண்டாம்.

12. நல்ல ஸ்திரீ, உத்தமி, தாய்க்கொப்பானவளென்ற அரிய பேரெடுக்கும் முயற்சியில் சிறிதும் குன்றவேண்டாம்.

குறிப்பு:—சகோதரிகளே! மேல்கண்ட விஷயங்களை நன்ருகக் கவனியுங்கள். இதுகாறும் நமது மதம் ஆசாரம் முதலியவற்றை அநாகரீகமென்றும், மூடத்தனமான கொள்கைகளென்றும் மேல் நாட்டார் கருதியும் கூறியும் வந்தார்கள். இப்போது கொஞ்சகாலமாக உண்மையையறிந்துவருகிறுர்கள். நமது மதம் சகல மதங்கட்கும் அஸ்திவாரம் போன்றதென்றும், சகல ஞானங்களிலும் சிறந்ததான ஆத்மஞானத்தை யடையும் மார்க்கம் நமது மதத்தில்தான் கூறப்பட்டிருக்கிறதென்றும், மேல்நாடுகளிலுள்ள சிறந்த பண்டிதர்களும் அறிவாளிகளுமாகிய அனேகர் உணர்ந்தும் வெளியிட்டுமிருக்கிறுர்கள். மேலும் நமது மதாசாரம் இலௌகிக ஆசாரங்கள் யாவும் சாத்திரயுக்தமாய் அனுபவத்தின்மேல் ஏற்படுத்தப்பட்டவையென்றும் அறிந்துகொண்டிருக்கிறுர்கள்.

இப்போது நமது நாட்டு மாதரின் ஆசாரப்படி நடக்கவேண்டுமென்று அவர்கள் கருதுகிறுர்கள். அப்படியிருக்க உங்களில் சிலர் மேல்நாட்டு மாதரைப்போல் நடையுடை பாவனைகளில் பழக முயல்வது சற்றேனும் ஒழுங்காகுமோ? நீதியாகுமோ? அல்லது நம் நாட்டின் க்ஷேமத்திற்கு அநுகூலமாகுமோ? சகோதரிகளே! நம் தாய் நாடாகிய புண்ணிய நாடு தெய்வீகத்தன்மை பொருந்திய கற்பரசிகளுக்குப் பிறப்பிடமானது. பெண்களுக்குரிய அச்சம், மடம், நாணம் என்ற குணங்கள் கற்பென்னும் தேவ விருக்ஷத்திற்கு வேலிகள் போன்றவை. அவைகள் அழிந்துபோகத்தக்க ஆசாரங்களை நீங்கள் கைப்பற்றுவீர்களாயின் கற்பென்பது ஒருபோதும் நிலைத்திராது என்பது சத்தியம்.

நம் நாட்டு ஆடவர்களில், ஆங்கிலங் கற்றதால் மேல் நாட்டு நாகரீகமே சிறந்ததென மயக்கங் கொண்டிருக்கும் சிலர் வாலிபவயதுடைய தங்கள் மனைவியர் சகோதரிகள் முதலியவர்கள், தங்கள் நண்பர்கள் முதலிய அன்னிய புருடர்களிடம் தாராளமாய்க் கலந்து பேசுவதும், தாராளமாய் வெளியில் சென்றுலவுவதும் உயர்தரச் சீர்திருத்தம் என்று கருதி, அம்மாதர்கள் அவ்வாறு நடக்குமாறு பழகச் செய்கிறுர்கள். ஆயினும் எல்லாப் பெண்களுமே யத்தகைய ஆசாரங்களுக்கு இடங்கொடுக்க மாட்டார்கள். சகோதரிகளே! நம் முன்னேர்களாகிய ஞானவான்கள்

உங்களுடைய இவ்வுலக நன்மைகளை மட்டுங் கருதி உங்களுக்கு ஆசாரங் களை விதிக்கவில்லை. முக்கியமாய் உங்களுடைய மறுமைப்பயனைக் கருதியே, அதாவது மறு ஜன்மத்தில் நீங்கள் தேவலோக போகபாக்கியங் களையும் மோக்ஷானந்தத்தையும் அடையவேண்டு மென்பதைக் கருதியே உங்களுக்குத்தக்க ஆசாரங்களை விதித்திருக்கிறார்கள். அவற்றின்படியே நடக்குமாறு பராசக்தி யுங்களுக்கு அருள் புரியவேண்டுமோகப் பிரார்த்திக் கிறோம். பத்திரிகாசிரியர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (குரு.)

(223-ம் பக்கத் தொடர்ச்சி.)

இந்த ஆருணி யென்பவரே உத்தாலகரென்று நூல்களாற் புகழ்ந்து கூறப்பட்டவர். வெறுப்பின்றிக் குரு பணிவிடை செய்து சகல கலா ஞானங்களையும் பெற்றுச் சிறப்பு அடைந்தார்.

பிறகு தௌமியர் தமது மாணுக்கர்களுட் சிறந்த உபமன்யு என்ப வனை நோக்கி நீ நமது பசுக்களை மேய்த்துக் கொண்டிரு என்று கட்டளை யிட்டனர். அவன் அப்படியே பசுக்களை மேய்க்குந் தொழிலைச் செய்து கொண் டிருந்தான். ஒரு நாள் குரு அவனை யழைத்து நீ யெடுத்துவரும் பிக்ஷான்னத்தை யெனக்குக் காட்டிப் பின் புசி யென்றார். அவன் அப்படியே பிக்ஷான்னத்தைக் கொண்டுவந்து வைத்தான். அவர் அவ் வன்னத்தைத் தாமே உண்டுவிட்டார். இவ்வாறே தினந்தோறும் புசித்து வந்தார். பிறகொருநாள் "உபமன்யு! நீ பிக்ஷை யெடுத்துவரும் அன் னத்தை நான் புசித்து விடுகிறேனே; நீ புஷ்டியா யிருக்கிறாயே எவ்வாறு ஜீவனம் செய்கிறாய்" என்று கேட்க, அவன் நான் இரண்டாம் தடவை பிக்ஷை யெடுத்து ஜீவிக்கிறேன் என்று விடை பகர்ந்தான். "குரு நீ செய் தது தவறு. உன்னைப்போல் பலபேர் பிக்ஷை யெடுப்பார்கள். நீ யிரண் டாம் முறை பிக்ஷை யெடுத்தால் மற்றவர்களுக்கில்லாமற்போகும். அத னால் நீ திருடனாவாய். இனி யப்படிச் செய்யாதே" யென்று கூறினார். இன் னும் சின்னாட்கள் கழிந்தபின் ஒருநாள் உபமன்யு நீ யிரண்டாம் முறை பிக்ஷை யெடுப்பதில்லையே எப்படி ஜீவிக்கிறாயென்று கேட்டார். உப மன்யு நான் பசுவின் பாலைக் குடித்து ஜீவிக்கிறேன் என்றார். பசுவின் பாலைப் புசிக்கும்படி நான் உனக்குக் கட்டளையிடவில்லை. அப்பசுவின் பால் அக்கினிஹோத்திரம் யக்ஞங்களுக்கு உபயோகமாவது. அதை நீ குடிக்கத் தகாது என்றார்.

இன்னும் சிலநாட்கள் கழித்து உபமன்யூ! நீ யிப்பொழுது எவ்வாறு ஜீவிக்கிறாய்? பசுவின் பாலையும் குடிப்பதில்லையே என்று கேட்டார். சுவாமீ! இப்பொழுது பசுவின் கன்றுகள் ஊட்டின பிறகு அவற்றின் கடைவாயில் ஒதுங்கி யிருக்கும் நுரையால் ஜீவிக்கிறேன்' என்றான். குரு

அப்பா குழந்தாய்! கன்றுகள் உன்னிடத்தில் பிரியமாயிருக்கின்றன. அதனால் அதிகமாக நுரையை ஒதுக்கும். நீ யதை யருந்தினால் கன்றுகளுக்கு ஆகாரம் குறைந்து அவைகள் இளைத்துப்போகும். இது பசுவின் கன்றுகளுக்குத் துரோகம் செய்வதாகும். இனி யப்படிச் செய்யாதே என்றார். உபமன்யு புசிப்பதற்கு ஒன்றுங் கிடையாமையால் காட்டில் தானாகவே முளைத்திருக்கும் எருக்கம் செடிகளின் இலைகளைத் தின்று ஜீவிக்கத் தொடங்கினான்.

எருக்கிலை தின்பதனால் சரீரத்தில் வெப்பம் அதிகரித்துக் கண்பார்வைகள் மறைந்துபோயின. கண் தெரியவில்லை. அதனால் வழியை யறியாமல் ஒரு பாழ்ங்கிணற்றில் தவறி விழுந்துவிட்டான். மாடுகள் வீடு போய்ச் சேர்ந்தன. அதைக் கண்டு குரு வித்தியார்த்திகளை நோக்கித் உபமன்யு எங்கே யென்று கேட்டார். அவர்கள் "சுவாமி அவனைப் பசுக்களை மேய்க்கும்படி கட்டளை யிட்டீர்களே! அவன் வனத்துக்குப் போயிருப்பான். பசுக்கள் வந்துவிட்டன. அவன் இன்னமும் வரவில்லை" என்று சொன்னார்கள். அப்படியானால் நாமும் வனத்துக்குப்போய் அவனை அழைத்துக்கொண்டு வருவோம் வாருங்களென்று சீடர்களுடன் குருவானவர் அரண்யத்தில் பிரவேசித்தார். அங்கே போய் "அப்பா குழந்தாய்! உபமன்யு! நீ எங்கே யிருக்கிறாய்? இங்கேவா" என்று அழைத்தார். அது கேட்ட உபமன்யு சுவாமி நான் இந்தப் பாழுங்கிணற்றில் விழுந்திருக்கிறேன்; கரையேற முடியவில்லை யென்று சொன்னான். குரு, அப்பா! நீ யேன் கிணற்றில் விழுந்தா யென்று கேட்டார். அவன் "சுவாமீ! புசிப்பதற்கு யாதொன்றுங் கிடையாமையால் எருக்கிலைகளைத் தின்று ஜீவித்தேன். அதனாற் கண்பார்வை கெட்டுப்போனமையால் வழி காணமுடியாமல் கிணற்றில் விழுந்து விட்டேன்" என்று கூறினான். குரு குழந்தாய்! நீ வேதமந்திரங்களால் அசுவினி தேவர்களைத் தோத்திரம் செய். அவர்கள் வந்து உனக்குக் கண்ணளிப்பார்கள் என்று சொல்லி விட்டு மாணாக்கர்களுடன் ஆச்ரமம் போய்ச் சேர்ந்தார்.

உபமன்யு அசுவினி தேவர்களைத் துதிக்கத் தொடங்கினான். சூரியனுக்கு முன் செல்கிறவர்களே! சிறகுள்ளவர்களே! அழிவில்லாதவர்களே! தேவலோகத்திற் பிறந்தவர்களே! ரஜோகுணமற்றவர்களே! விமானத்திற் சஞ்சரிப்பவர்களே! ஆபத் பந்துக்களே! நீங்கள் பக்தர்களைக் காப்பாற்றுகிறவர்கள். ஆபத்தினின்றும் விடுவிப்பவர்கள். அஸத்தியமில்லாதவர்கள். நாஸத்தியர் என்று புகழப்படுகிறீர்கள். மோட்சங் கொடுக்கிறீர்கள். கர்மபலனை விருத்தி செய்கிறீர்கள். தாமரை மலர் மாலையை யணிந்த உங்களைத் துதிக்கிறேன்" என்று வேதமந்திரங்களால் துதித்து எனக்குக் கண் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான்.

இவ்வாறு துதித்துப் பிரார்த்திக்கப்பட்ட அசுவினிகள் பிரத்தியட்சமாய், இதோ நாங்கள் வந்துவிட்டோம். உனக்குச் சிறிது பட்சணங்

கொண்டுவந்திருக்கிறோம். இதைப் புசி, உனக்குக் கண் தெரியும் என்று கூறினார்கள். உபமன்யு குருவின் கட்டளை யின்றி நான் எதையும் புசிப்ப தில்லை என்று கூறினான். தேவர்கள் மருந்துக்கு அது அவசியமன்று, நீ உண்ணு என்று சொன்னார்கள். உபமன்யு நான் குருவின் உத்தரவில் லாமல் எதையும் உண்ணமாட்டேன் என்றான். அவர்கள் “முன் ஒரு தரம் நாங்கள் இதைக் கொண்டுவந்து உன் குருவுக்குக் கொடுத்தோம். அவர் தம் குருவின் உத்தரவில்லாமலே உண்டார்” என்றார்கள். உபமன்யு “எனக்குக் கண்ணில்லாமல் போனால் போகட்டும். நானிதை உண்ணமாட் டேன்; நீங்கள் விரும்பிய இடத்துக்குப் போங்கள்” என்று சொன்னான். அசுவினி தேவர்கள் சந்தோஷித்து “நாங்கள் உனது குரு பக்தி விசுவா சத்துக்காக மகிழ்ச்சி அடைந்தோம். உன் குருபக்தி உன்னைப் பாதுகாக் கும். உன் கண்பார்வைகள் விளங்கும். சகல சாஸ்திரார்த்தங்களும் உனக்கு விளங்கும்” என்று அநுக்கிரகம் செய்துவிட்டு மறைந்துபோனார் கள். உபமன்யுவுக்குக் கண்பார்வை விளங்கிற்று.

அவன் மனமகிழ்ச்சியுடன் குருவினிடம் போய்த் தனக்கும் அசுவினி தேவர்களுக்கும் நடந்த சம்பாஷணைகளையும், அவர்கள் தனக்குக் கண் பார்வை யருளியதையும் சவிஸ்தாரமாகச் சொன்னான். தௌமியர் அதைக்கேட்டு மகிழ்ந்து “உனக்குச் சகல வேதசாஸ்திர இரகசியங்களெல் லாம் விளங்கும்படி நான் அநுக்கிரகம் செய்துவிட்டேன். நீ விரும்புகிற இடத்துக்குப்போய் உன் இஷ்டம்போலத் தவஞ்செய்” என்று கூறி விடை யளித்தார். உபமன்யு விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார். பைதர் என்பவர் குருவின் கடினமான பணிவிடைகளை யெல்லாம் செய்துகொண் டிருந்து, குருவுக்கு மகிழ்ச்சி யுண்டாக நடந்து விடை பெற்றுச்சென்று கிரகஸ்தாச்சிரமத்தை அநுஷ்டித்துக்கொண் டிருந்தார். அவருக்கும் மூன்று சிஷ்யர்களுண்டு. அவர்களுள் உதங்கர் என்பவர் சிரேஷ்டமானவர். குரு பக்தியிற் சிறந்தவரென்று நூல்களாற் புகழப்பட்டவர். குரு பக்தி விஷயத்தில் உதங்கரையே எல்லாரும் உபமானமாக எடுத்துக் கூறுவார் கள். இவர் குரு பக்தியினால் சர்வ ஞானத்தையும் அடைந்து தவச்சிரேஷ் டராய் விளங்கினார்.

தர்மபுத்திரர் செய்த அசுவமேத யாகத்துக்குச் சென்றிருந்த கிருஷ் ணபகவான் மீண்டுந் துவாரகைக்குப் போகும்போது இந்த உதங்கர் ஆச்ர மத்தை யடைந்து, அவருக்கு வந்தனை வழிபாடுகளைச் செய்து பேசிக் கொண்டிருக்கும்போது உதங்கர் “கிருஷ்ணா! நீ பாரத யுத்தத்தை முன் னிட்டு அநேக பிரஜைகளை அழித்துவிட்டாய். உன்னால் உலகமே அழிந்து போயிற்று என்னலாம். அதனால் நான் உனக்குச் சாபங்கொடுக்கக் கருதுகிறேன்” என்று கூறினார். கண்ணன், “தபோநிதியே பாரத யுத்தம் நடந்ததற்கு விதியே காரணம். என்னால் ஒன்றும் நடக்கவே யில்லை. பாரத யுத்தத்தில் பிரஜைகள் அழிந்த குற்றம் என்னுடையதன்று. விதி யைக்கடக்க வல்லவர் யார்? நீர் சாபங்கொடுக்க விரும்பினாற் கொடும்.

நான் ஏற்றுக்கொள்கிறேன்" என்று வணக்கமாய்க் கூறினர். உதங்கர் மனமகிழ்ந்து கண்ணனை உபசரித்து விடைகொடுத் தனுப்பினர். கூட விருந்த தம்பியாகிய சாத்தியகி அண்ணனை நோக்கி "அண்ணா! இவர் யார்? இவர் உமக்குச் சாபங்கொடுக்கிறேனென்று கூறியது எனக்கு மிகவும் ஆச்சரியமாக விருக்கிறது" என்று கூறினன். கிருஷ்ணபகவான், "அப்பா! இவர்தான் குரு பக்தியிற் சிறந்த உதங்க மஹாரிஷி என்பவர். மஹா மகிமையுள்ளவர். சபிக்கத் திறமையுள்ளவர். நானும் சாந்தீபினி முனிவரிஷ்டப்படி கஷ்டமான வேலைகளை யெல்லாம் செய்து நிறைவேற்றினதினுலேதான் மஹா மகிமையோடு புகழப்பட்டு விளங்குகிறேன். குரு பக்தியால் ஆகாதது ஒன்றுமில்லை" என்று கூறியருளினர். ஆதலால் குரு பக்தி ஒன்றுதான் சகல ஞானங்களுக்கும் காரணமாக இருக்கிறதென்று நன்கு விளங்குகிறது.

பூர்வகாலத்திலிருந்த தவச்சிரேஷ்டர்கள் எல்லாரும் குரு பக்தியாலேயே சகல சித்திகளையும் பெற்று விளங்கினர்கள். எந்த வித்தையையும் குருவினிடத்திற் கேட்டே தெரிந்துகொள்ளவேண்டும். கிஞ்சிஞ்ஞர்களாகிய ஜீவர்கள் தாமே யுணர்ந்துகொள்ளு மியல்பில்லாதவர்கள். முன்கூறியபடி குரு சிஷ்யர்களிடத்தில் பொருளை அபேட்சிப்பதில்லை. அவர்கள் தங்களுக்குரிய அறு * தொழில்களாலேயே ஜீவித்தார்கள். ஆகாராதிகளுக்குக் குறைவில்லாத சிஷ்யர்களும் கவலையின்றிக் குருவினு லிடப்பட்ட பணிவிடைகளைச் செய்துகொண்டு ஓதிச் சாஸ்திரங்களின் கரையைக் கண்டார்கள். பிரமசாரிய தர்மம் தவருமல் நடந்து வந்தது. அவர்கள் குருகுலவாசஞ் செய்து சதா குருவின் சந்நிதியிலேயே யிருந்தமையால் சதாசாரப் பிரவர்த்தகர்களாகவே யிருந்தார்கள். ஒழுக்கந் தவறியவர்களைக் குருகுல வாசத்திலிருந்து விலக்கி விடுவார்கள். சிஷ்யரிடம் தவறு கண்ட குருமார்கள் அப்பொழுதே யவர்களைத் தண்டித்து நல்வழிப்படுத்தி வந்தார்கள். அன்ன வஸ்திரங்களுக்குக் குறைவில்லாமையால் மாணக்கர்களுக்கு ஆசை யென்பதில்லை. சதா வேதசாஸ்திரங்களை ஓதுவதால் மனம் ஒரு நிலைப்பட்டு நிற்கலாயிற்று. மனம் வசப்படவே தெய்வசிந்தனை யுண்டாயிற்று. தெய்வதியான மகிமையால் ஞான சித்தியைப் பெற்றார்கள். கல்வி யறிவும் சாஸ்திரஞானமும் எளிதிற் கைகூடின. குருகுலவாசத்தில் கல்வியைவிட சதாசாரமே மிகுதியாகக் கவனிக்கப்படும். குருமார்கள் தமது சிஷ்யர்களுக்கு நல்லொழுக்கங்களையே புகட்டி வந்தனர். இது காரணமாகவே முன்னோர்கள் சீருஞ் சிறப்பும் பெற்றுச் சிறந்து வாழ்ந்தார்கள். (தொடரும்.)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

* 1. ஓதல், 2. ஓதுவித்தல், 3. வேட்டல், 4. வேட்பித்தல், 5. ஈதல், 6. ஏற்றல்.

(229-ம் பக்கத் தொடர்ச்சி.)

# 9-வது மாயாவிகார* அத்தியாயம்.

(முன் அத்தியாயத்தில் சகுணப்பிரம்ம உபாசனையால் பிரம்மலோகத்தை யடைந்த உபாசகன் அங்குள்ள போகங்களைப் புசித்தபின் கற்பாந்தத்தில் பிரம்மஞானத்தால் முத்தியடைவன் என்று பகவான் அருளிச்செய்தமையால், "அந்தப் பிரகாரமே முத்தியடையப்படுவதா? அல்லது வேறு அந்நிய மார்க்கத்தாலும் அடையப்படுவதா?" என அர்ச்சுனனுக்குண்டாகும் ஐயத்தை நீக்கும்பொருட்டு இந்த அத்தியாயம் தொடங்கப்படுகிறது.)

துன்பத்தை யளிக்கும் பிறவியை யொழிப்பது முன் அத்தியாயத்தில் கூறப்பட்ட கிரம முத்தியோ அல்லது அந்நிய முத்தியுளதோ என்று அர்ச்சுனன் மனதில் உதித்த சந்தேகத்தை யறிந்த மேகவர்ணனாகிய கண்ணபிரான் பின்வருமாறு அருளிச் செய்கிறார்:—

(இப்போது பகவான் முன் கூறிய சகுணப் பிரம்மத்தியானத்திலும் ஆன்மஞானமே சாட்சாத் மோக்ஷசாதனம் என்பதை யறிவிக்கத் தொடங்குகிறார்.)

ஏ பார்த்த! உலகிலும் சாத்திரங்களிலும் கூறு நிற்கும் சகல ஞானங்களிலும் முதன்மையானதும் அநுபவமா யறியக்கூடியதுமான ஞானத்தை, இரகசியமான பொருள்களனைத்தினும் அதி இரகசியமானதை, எள்ளளவேனும் துன்பமில்லாததை, பல ஜன்மங்களிற் றேடிய சகல பாபங்களையும் ஒழிக்கும் உத்தம பவித்திரமாயுள்ள ஞானத்தை உனக்குரைக்கின்றேன் அறிந்துகொள்வாயாக.

அத்தகைய இணையற்ற ஆன்மஞானமானது அக்ஷயமாக (அழிவற்றதாக) உள்ளது. பல ஜன்மங்களிற் செய்த நிஷ்காம தருமங்களின் பல வடிவமானது. குருவருளால் கஷ்டமின்றி அடையத்தக்கது. ஆயினும் அதை யடையவேண்டுமென்ற சிரத்தை யில்லாதோர் என் அருளைப் பெறாமல் பிறப் பிறப்பாகிய துன்ப சாகரத்தில் உழன்றுகொண்டிருப்பர்.

[ஞானத்தை யடையவேண்டும் என்ற சிரத்தையோடு குரு முகத்தில் சிரவண மனனாதிகளைச் செய்து முயன்றால்தான் ஞானம் கிட்டும். ஏனையோர்க்கு அது அடையச் சாத்தியமானதன்று.]

(இப்போது பகவான் ஆன்ம ஞானத்தை யருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! ஒருவராலும் காணப்படாத அவ்வியக்த மூர்த்தமே சொரூபமாகவுடைய நான் ஜகங்களனைத்தும் வியாபித்து நிற்பேன். சராசரங்களனைத்தும் என்னிடத்தில் பொருந்தி யிருக்கும். ஆனால் சர்வேசுர

* இதற்கு வடநூலில் "இர்ாஜவித்தியா ராஜகுய்ய யோகம்" என்று பெயர்.

ளுகிய நானே அவற்றில் பொருந்தியிரேன். எனது அவ்வியக்த சொரூபத்தை யறியாதவர்களது ஊனக்கண்ணிற்கு நான் இப்பிரபஞ்சத்தில் பொருந்தி யிருப்பவன்போலவே காணப்படும்.

அர்ச்சுனன்:—ஏ பகவான்! தாங்கள் அவ்வியக்த மூர்த்தியாதலின் தங்களுக்குச் சகத்தில் ஸ்திதிகூடாதேனும் சகல பிரபஞ்சத்திற்கும் தங்களிடத்தில் ஸ்திதிகூடுமல்லவா?

பகவான்:—ஏ பார்த்த! நான் சிருட்டிக்கு முன்பு ஒன்றோடும் சம்பந்தியாமலே இருப்பேன். உலகம் கற்பிதமான தாகையால் அது என்னோடு சம்பந்தித்து நிற்காது: அற்புதமான என்றன் இயற்கையினைப் பார்ப்பாய்.

("எனது சச்சிதானந்த சொரூபம் ப்ரபஞ்சங்கட்கெல்லாம் காரணமாகவிருந்தாலும் அவற்றில் நானிருப்பதன்றாம். பிரபஞ்சங்களும் ஆரோபமாகிய கற்பிதமாதலின் உண்மையில் என்னிடத்தில் அவை இருக்கவில்லை" என்பதாம்.)

(இப்போது பகவான் தாம் உலகிற்காதாரமா யிருக்கும் விவரத்தைத் திருட்டாந்த பூர்வகமாய் அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! எல்லா விடங்களிலும் சென்றுகொண்டு எல்லையிலாத அளவாய்ச் சதா சலித்துக்கொண்டிருக்கும் வாயுவானது ஆகாயத்தில் எப்படியிருக்கிறதோ, அவ்வாறே சகல பிரபஞ்சங்களும் எனது சொரூபத்தில் சம்பந்தப்பட்டாலும், என்னைத்தவிர வேறொன்றினிடத்தும் தோன்றாமலும் எப்போதும் என்னிடத்திலேயே நிலைத்திருக்கின்றன.

(பிரபஞ்ச உற்பத்தியிலும் திதியிலும் தாம் அசங்கமாக விருப்பதையருளிச்செய்த பகவான் இப்போது பிரளயகாலத்தும் தமக்கு பிரபஞ்சத்தோடு சம்பந்தமில்லை யென்பதை யருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! இங்கு காணப்படும் ஆகாச முதலான எல்லாப் பதார்த்தங்களும் பிரளயகாலத்தில் முக்குண சம்பந்தமான எனது பிரகிருதியினிடத்தே இலயமாகும். சிருட்டிகாலத்தில் அவை மறுபடி அப்பிரகிருதியிலிருந்தே கிரமப்படி யுற்பத்தியாகும். ஆகையால் உண்மையாகப் பார்க்கில் சர்வஞ்ஞன நானே பிரபஞ்சமனைத்தும் சிருட்டித்து இரட்சித்து அழிக்கின்றேன்.

(இப்போது பகவான் சிருட்டியாதிகளைச் செய்வதால் தமக்குப் பந்தமுண்டாகாதென அருளிச் செய்கின்றார்.)

ஏ! அர்ச்சுனா! நான் பலன்களில் இச்சை வைத்தல், வெறுத்தல் என்கிற வேண்டல் வேண்டாமையின்றி மித்தியாவடிவமான இச்சிருஷ்டியாதி கிருத்தியங்களைச் செய்கின்றேன். ஆகையால் அக்கருமங்கள் என்னைப் பொருந்தா. சிலந்திப் பூச்சி தன் வாயால் நூல் நூற்று அந்நூலால் தான் கட்டுண்பதுபோல் பலன்களை யடையக்கருதி கர்மங்களைச் செய்

வோர் அக்கர்மங்களால் பந்திக்கப்பட்டு அக்கர்ம பலன்களில் சிக்கி யுழலா நிற்பர்.

[ஈசுவரனது மாயையாகிய பிரகிருதியே இப்பிரபஞ்சத்தைத் தோற்று வித்து சகல கிருத்தியங்களேயும் செய்கிறது. சூரியன் ஒரு சிந்தனேயு மின்றி யிருக்க, அதன் பிரகாசத்தால் நீரிலுள்ள தாமரை மலர்வதும், தரையிலுள்ள தாமரை உலர்ந்தழிவதும், நீர் ஆவியாக மாறுவதும், ஈர வேஷ்டி உலர்வதும், கல்லில் சூடேறுவதுமாகிய பல விகாரங்கள் (அந் தந்த வஸ்துவின் நிலைமைக்குத் தக்கவாறு) உண்டாவதுபோல, ஈஸ்வர சந்நிதான விசேஷத்தால் பிரகிருதியிடம் சிருஷ்டியாதி கிருத்தியங்கள் நிகழ்கின்றன. சீவன்கள் அவரவர் கர்மத்திற்குத் தக்கவாறு சுகதுக்கங் களை யனுபவிக்கிறார்கள். இதனால் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்வதால் அரசனுக்குப் பாவபுண்ணியம் சித்திக்காததுபோல், பஞ்ச கிருத்தியங்களால் ஈசுவரனுக்கு எவ்விதப் பந்தமும் நேராது. ஈசுவரன் சூரியனைப்போல் பிரகாசித்துக்கொண்டிருப்பதை யன்றி ஒரு தொழிலும் செய்பவனல்ல. அவனிடம் செய்கையும் செய்விக்கையுமில்லை.

"செய்கையும் செய்விக்கையு மற்றிருக்கும் காந்தச்
சிலைமலைமுன் அயங்கள்வந்து சேட்டிக்கு மாபோல்
செய்கையும் செய்விக்கையு மற்றிருக்கு மென்முன்
சடமான வுலகமெலாம் சேட்டை செய்யும்
* * * * " (கைவல்யம்)

"ஐவகைய சத்தியினா லைந்தொழிலு மாருயிர்க்காய்ச்
செய்யாமற் செய்யும் சிவம்"
"வாளிரவி சந்நிதியின் மரைமலர்ந்து வாடிடினும்
வாளிரவிக் குண்டோ மயல்" (பதியியல்)

(இப்போது பகவான் அவிவேகிகள் தம் உண்மையை யுணராது சாதாரண மனிதனாக எண்ணுவதைப்பற்றி அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! சச்சிதானந்த சொரூபியாகவும், சர்வப் பிராணிகளிடத் தும் ஆன்மரூபமாகவும் உள்ள என்னைக் காலதேச வஸ்து பரிச்சேதமற்ற பரமேசுவரனாக அறியாத அவிவேகிகள், சாதாரண மனிதனென வெண்ணி அவமதிப்பார்கள். அவர்கள் மனதின் கண் ஆசை பொருந்தியவர்களாய்க் கர்மங்களைச் செய்து நரகங்களில் சஞ்சரிக்கத் தக்கவர்களாகிய இராக்க தர் முதலியோராவர்.

(இனி தம்மை யறிந்து பூசிப்போர் இத்தகையோர் என்று பகவான் அருள்கின்றார்.)

விவேக ஞானத்தால் என்னைப் பரிபூரண சொரூபியாகிய பரமேசுர னென உணர்ந்து, மனதை யடக்கிப் புலன் வழிகளில் செல்லவொட்டாது தடுத்து சதா என்னையே ஸ்மரித்துக்கொண்டிருப்போர் தேவர்களாகக் கருதப்பட்டவராவர்.

அவ்வாறு மனவடக்கத்தோடு தங்களைப் பஜிக்கும் புருடர்கள் எவ்விதமாய்ப் பஜிக்கிறார்கள் என்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் விடை யருள்கின்றார்:—

ஏ பார்த்த! காலத்தாலும், இடத்தாலும், வஸ்துவாலும் பரிச்சின்னமாகக் கருதவொண்ணாத என்னை ஞான தரிசனத்தால் அபேதமாகவும், பலவிதமான சொரூப வணக்கங்களால் பேதமாகவும் (அன்னியமாகவும்) ஞான யோகங்களினால் உபாசனை செய்யா நிற்பர். அவர்களது தன்மையைக் கூறுதும் கேட்பாயாக.

[உபாசகர்களாகிய அதிகாரிகள் உத்தமம், மத்திமம், மந்தம் என்ற மூவகையாய்ப் பிரிக்கப்படுவர்.]

1. உத்தம அதிகாரிகள்—மனதை இந்திரியங்களின் வழிச்செல்லவொட்டாது தடுத்து ஒடுக்கி ஞான யோகத்தால் ஈசுவரனை அனந்நியமாக உபாசிப்போர்.

2. மத்திம அதிகாரிகள் — ஈசுவரனை சொரூபமாக (விக்கிரகாதி உருவங்களாக) அன்னியமாக, உபாசிப்பவர்கள். (சரியை கிரியைகளின் வழியாக ஈசுவரனைப் பஜிப்பவர்கள்.)

3. மந்த அதிகாரிகள் — சூரியன், அக்னி முதலிய தெய்வ சொரூபங்களை யுபாசிப்பவர்கள்.

[ஒருவன் சரியையில் ஈசுவரனைத் தனக்கன்னியமான சடவடிவாய்க் கண்டு வணங்குகிறான். கிரியையில் மந்திர பூர்வமாகத் துதிக்கிறான். யோகத்தில் தனக்குள்ளாகவே தரிசிக்கிறான். ஞானேதயமானவனே அபேதமாய் இரண்டற்ற நிலையில் (தானதுவான நிலையில்) சாக்ஷாத்கார அனுபவத்தை யடைகிறான்.

"சரிதையிலே யீசன் சடவடிவாய் நின்றான்
கிரியையிலே மந்திரத்திற் கிட்டி—யருகிருந்தா
னூனமிலா யோகத்தி லுள்ளொளியா யேநின்றான்.
ஞானமதி ஞானி னன்." (ஞானவிளக்கம்)]

"ஏ பகவான்! இவ்வாறு பல தெய்வங்களை யுபாசிக்கிறார்களே, அந்த அதிகாரிகளனைவரும் ஈசுரனாகிய தங்களையே உபாசிக்கிறார்கள் என்பது எப்படி பொருந்தும்?" என்று அர்ச்சுனன் கேட்ட சங்கைக்கு ஸ்ரீபகவான் விடை யருள்கின்றார்:—

ஏ பார்த்த:— வேதத்தில் கூறப்பட்ட அக்நிஷ்டோமாதி யாகங்களும், எக்ஞங்களும், பிதுர்க்களுக்குச் செய்யும் சிரார்த்தம் முதலியவைகளும், மூவித அக்னிகளும், பிரணவாதி மகாமந்திரங்களும் யாவும் நானாக இருக்கின்றேன்.

மேலும் சகல ஜகங்களையும் இரட்சிக்கும் மாதா பிதாவும் பிதா மகரும் நானே. அவரவர்கள் முன் ஜன்மத்தில் செய்த கர்மங்களுக்குத் தக்க சுக

துக்காதி பலன்களை யளிக்கும் தாதாவும் நானே. வேதங்களும் பிரணவமும் நானே. எல்லாரும் அடையும் சுவர்க்காதி பலன்களும் நானே. இருவினையின் வழியே சீவன்களைப் போஷிப்பவனும் நானே. எல்லார்க்கும் தலைவனும், எல்லாப் பிராணிகட்கும் சாக்ஷியா யிருப்புவனும் நானே.

(தொடரும்) சீடன்.

---

## நட்பு.

நட்பு என்பது சிநேகிதர் இருவர் அல்லது பலரிடம் குடிகொள்ளும் உள்ளத்தின் நெகிழ்ச்சியாம். இவ்வித நட்பு புன்சிரிப்பு முறுவல் முதலிய வெளிவேடத்தால் காட்டக்கூடியதல்ல. உள்ளத்தின் அன்பாலே நாட்ட வேண்டியது. இதுபற்றியே நமது திருவள்ளுவரும்,

" முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு "

என்று திருவாய்மலர்ந்தருளியுள்ளார். ஆதலால் நண்பர்கள் அவசியமாய் உள்ளத்தில் அன்புகொண்டு நடந்துகொள்ளவேண்டும்.

ஒருவன் தீச்செயல்களிற் செல்லும்போது அவ்வாறு செல்லாமற் றடுத்து நல்வழிகளிற் செல்லத் தூண்டுதலும், அவனுக்கு யாதாயினும் கேடுவந்த காலத்தில் அதைத் தடுக்க முயலுதலும், அது முடியாவிடின் அதனால் வருந்துன்பத்தை அவனோடுகூடத் தானும் அனுபவித்தலும், எக்காலத்தும் வேறுபடாதிருத்தலும், ஆகிய இவை முதலிய நற்குணங்களை உடையவனே சிநேகன் ஆவான். மனஒற்றுமை யுடைமையே சிநேக விருத்திக்குக் காரணமாம். பெரியவர்களுடைய சிநேகம் பிறைபோல நாளொரு வண்ணமாக வளர்ந்துகொண்டு வரும். கரும்பு நுனியிலிருந்து தின்பவனுக்கு மேலே தின்னத் தின்னச் சுவையை மிகக் கொடுத்துக் கொண்டு வருவதல்போல நல்லோருடைய சிநேகமும் பழகப்பழக உறுதியையும் மனமகிழ்ச்சியையும் மிகவுங் கொடுத்துக்கொண்டு வரும். இவ்வியல்புடைய சிநேகிதத்தைப் பெறுதல் மிகுந்த அருமையாம்.

ஒருவரோடொருவர் சிநேகஞ் செய்தல், தகாத செயல்கள் காணப்படுமிடத்து இடித்துப் புத்திகூறி நல்வழிப் படுத்துதற்கன்றித் தம்முட் சிரித்து விளையாடுதற்கன்று. கண்டவிடத்து முகமாத்திரம் மலரும்படி சிநேகிப்பது சிநேகமன்று; மனமும் மகிழும்படிசிநேகிப்பதே சிநேகமாகும்.

ஒருவருடைக் குணங்களை ஆராயாமற் சினேகஞ் செய்தலாகாது. ஆபத்துக்காலத்தில் கைவிடுவோரையும், தமக்குப் பிரயோசனமுள்ள காலத்தில் வந்து கூடி, அது இல்லாத காலத்தில் விட்டு நீங்குவோரையும், மூடரையும், சொல்லொன்று செயலொன்று யிருப்போரையும் சிநேகஞ் செய்தலாகாது. இதனாலன்றோ ஒளவையாரும் "நல்லிணக்கமல்ல தல்லற் படுத்தும்" என்று அருளிச் செய்தார்.

இன்பதுன்பங்கள் மனத்தில் அடைபட்டுக் கிடப்பதும் ஒரு பிணி

யாம். "மனக்கவலை பலக்குறைவு" மனத்தில் அடையப்பட்டிருக்கும் இன்பதுன்பங்களை வெளிப்படுத்துவதே மனநோய்க்குப் பரமௌஷதம். ஆயினும் இவைகளை வெளிப்படுத்துதற்கு ஒரு போக்கு வீடு வேண்டும். அங்ஙனம் போக்குவீடு ஆகின்றவன் நண்பனே — உண்மை நண்பனிடத்தில் உள்ளத்திலுள்ளதை உரைத்துக் கொள்வதால் நன்மைகள் இரண்டுளவாம். துன்பம் பாதியாகக் குறையும். உவகை ஒன்றிரண்டாம் நண்பனே எதற்கும் ஏற்ற வெற்றி சூழ்ச்சி சொல்லுவதற் குரியவன்.

நீர் சேர்ந்தபாலை நெருப்பில் வைத்துக் காய்ச்சும்பொழுது நீர் சுவறுகின்றது; அதுகண்டு தன்னுடன் சேர்ந்த நீருக்கு நேர்ந்த துன்பத்தை சகிக்காது கலத்தின்மேல் பொங்கி அக்னிப்பிரவேசஞ்செய்ய முயலுகின்றது. அப்பொழுது சிறிது நீரைக் கலத்தில் தெளித்தால் 'நம் நண்பன் உயிர்த்தெழுந்தான்' என்று அந்தப்பால் அடங்குகின்றது. அதுபோலவே நேயன் சாமானியனானாலும் அவனுக்கு ஒரு துன்பம் வந்துற்றபொழுது உண்மை சிநேகிதன் அவனுக்குத் துணை செய்யாமலிரான்.

" உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு "

என்று நாயனார் கூறினார்.

அதாவது ஆடை யவிழ்ந்தால் கையானது எவ்விதமாகத் துரிதத்துடன் அவ்வாடையைக் கட்டிவிடுகிறதோ, அதுபோல உண்மை நண்பன் தீங்கு வந்த காலத்து நண்பனைக் காப்பாற்றவே வகை தேடுவான்.

அற்றகுளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர் — அக்குளத்தில்
கொட்டியு மாம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு.

என்பதுபோல், இழிந்தோர் பறவைகள்போல் தம் நண்பரின் செல்வமும் இன்பமும் அனுபவித்து அவர் வறுமையும் துன்பமும் அடைந்த காலத்தில் அவரைவிட்டு நீங்கிப்போய்விடுவர். உயர்ந்தோரோ, கொட்டியும் ஆம்பலும்போலத் தமது நண்பர் துன்புற்றகாலத்தில் அவரோடு துன்பத்தை அனுபவித்து அவரைவிட்டு நீங்காதிருப்பர்.

பழுக்கக் காய்ந்த இரும்போடு நீர்த்துளி சேருமாயின் நீர் என்னும் பெயரும் அழிகின்றது. அந்நீர்த்துளி தாமரையிலையின்மீது தங்கியபொழுது அது முத்துப்போலத் தோன்றுகின்றது. மற்றும் அந்நீர்த்துளியே கடலிலுள்ள இப்பியின் வாயில் விழுமானால் அது அரசரும் விரும்பிக்கொள்ளும் அரிய விலையுள்ள ஆணிமுத்தாகின்றது. இவ்வாறே நமது நட்பை யாரிடம் வைக்கிறோமோ அதற்குத் தக்க பலனே யுண்டாகும். இதற்காகவே "சேரிட மறிந்து சேர்" என்றனர் ஆன்றோர். அதம, மத்திம, உத்தமர்களுடைய சிநேகமும் இதுபோலத்தா னிருக்கின்றது. மூடருடைய சிநேகம் எல்லாத் தீமைகளையும் உண்டாக்குதலாலும்,

அறிவிற்சிறந்த பெரியாருடைய சிநேகம் எல்லா நன்மைகளையும் உண்டாக்குதலாலும் சிறியாரோடு சிநேகஞ் செய்தலைக் கைவிட்டுப் பெரியாரோடு சிநேகஞ் செய்தல் வேண்டும். இச்சிநேகத்தால் உடையானுக்கு எவ்வகைப்பட்ட இடர்களும் நீங்கி, எல்லா நன்மைகளும் தாமே உண்டாகும்.

" அழிவி னவைநீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதாம் நட்பு "

எனவும் திருவள்ளுவர் கூறினர்.

ஆகையால் மானிடராகப் பிறந்த நாமெல்லோரும் நட்பினராய் ஒத்து வாழ்வோமென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றோம்.

தீ. போ. மாணிக்கவாசகம், வரகநேரி.

---

## வாசகசாலைகள்.

ஒரு தேசமோ அல்லது ஒரு மனித வகுப்பினரோ ஸகல வழிகளிலும் முன்னேற்றமடைந்து சீர்பெற்று விளங்குவதற்கு அவர்கள் அறிவையடைபவேண்டிய தவசியம். அதுமட்டுமல்ல; அவர்கள் தங்கள் அறிவைமென்மேலும் விசாலப்படுத்திக் கொள்வதும் அவசியமே. இப்படி ஜனங்களுக்குள் அறிவைப் பரவச்செய்து அதை விருத்தியாக்கும்படி செய்ய அனேக சாதனங்களுண்டு. அச்சாதனங்களில் பொது வாசகசாலைகளை ஏற்படுத்துவது ஒன்றாகும்.

வாசகசாலை யென்பது அறிவை யூட்டும் நூல்களும், பலவிதமான புஸ்தகங்களும், முக்யமான தேசப் பத்திரிகைகளும் கொண்டு பொது ஜனங்களின் உபயோகத்திற்கு ஏற்படுத்தப்படு மோரிடம். சாதாரணமாக புஸ்தகங்களென்றால் எல்லாவித புஸ்தகங்களும் அடங்கி யிருப்பதவசியம். தாய்ப் பாஷையிலுள்ள புஸ்தகங்களும், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் முதலிய வேறு பாஷைகளிலுள்ள புஸ்தகங்களும் இருக்கவேண்டும். இன்னும், வாசகசாலை யென்றால், குறைந்தது ஒன்று இரண்டு பத்திரிகைகளையாவது வரவழைத்தல் அவசியம்.

இப்பேர்ப்பட்ட வாசகசாலையை நடத்துவது ஒருவரால் எளிதில் முடியாது. ஏனெனில், நடத்துபவர் மிக்க செல்வவந்தரா யிருந்தாலன்றி, புஸ்தகங்களை வாங்குவதற்குப் பணம் செலவழிப்பது கஷ்டமாயிருக்கும். ஆகையால் நான்கு அல்லது ஐந்துபேர்கள் கூட்டுறவாகச் சேர்ந்துகொண்டு பொதுஜன நன்மைக்காக வாசகசாலையை ஏற்படுத்தல் வேண்டும். ஒவ்வொருவரும் தங்களாலியன்றவாறு பணம் கொடுத்து புஸ்தகங்களை வாங்கவேண்டும். முக்யமான பத்திரிகைகளையும் வரவழைப்ப தவசியம். வாசகசாலையைக் காலை மாலை ஆகிய இருவேளைகளிலும் திறந்து வைக்கலாம். குறைந்தது, மாலை சுமார் 3 - மணிமுதல் 8 - மணி வரையில் திறந்து வைப்பது அவசியம். ஏனெனில், அனேகமாய் மனிதர்கள் அவ்வேளைகளில்தான் ஒழிவுபெற்று வாசகசாலைக்கு

வருவார்கள். இப்படி ஒரு நல்ல வாசகசாலையை ஸ்தாபித்து விட்டால் அதனால் பொது ஜனங்களுக்கு எவ்வளவோ நன்மை யுண்டு.

சில இடங்களில் வாசகசாலையின் பிரயோஜனத்தை யடைவதற்கு மாதம் மாதம் சந்தாத்தொகை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். சந்தாத் தொகை செலுத்தும் அங்கத்தினர்தான் வாசகசாலைக்குச் செல்லலாம் என்று விதி ஏற்படுத்துகிறார்கள். இந்த ஏற்பாடு வாசகசாலையின் அபி விருத்திக்கு ஏதுவாயிருந்தாலும், தற்காலத்தில் சந்தாத்தொகை என் றேற்படுத்திவிட்டால் ஜனங்கள் சேருவது கஷ்டம். காசுகொடுத்து வாசகசாலையின் அங்கத்தினராகச் சேரப் பிரியப்படார்கள். ஆகையால், பொதுஜன நன்மையையே லக்ஷியமாகக்கொண்டு 'இலவச வாசகசாலை களையே' ஏற்படுத்துவது தேசாபிமானிகளான தனவந்தர் செய்யத்தக்க காரியம்.

சில இடங்களில் இவ்வளவு உத்தமமாக, சிலர் கூட்டுறவாகச் சேர்ந்து கொண்டு புஸ்தகங்களையும் பத்திரிகைகளையும் வரவழைத்து வாசக சாலையை யேற்படுத்துவது கஷ்டமான காரியமா யிருக்கலாம். அப்படி இருந்தாலும், ஒருவரே தம்முடைய செலவில் ஒன்றிரண்டு தினசரிப் பத் திரிகைகளையும் வாரமாதாந்தரப் பத்திரிகைகளையும் மட்டும் தருவித்து அவைகளைக்கொண்டு வாசகசாலை ஏற்படுத்திப் பொதுஜன நன்மையைச் செய்வது மிகவும் சிலாக்யமே. "ஒன்றுமில்லாததற்குக் கொஞ்சமிருந்தா லும் நல்லதே" (Something is better than nothing) என்னும் பழ மொழிப் பிரகாரம், கையில் இருப்பதைக் கொண்டு பொது ஜன நன்மைக் காக வாசகசாலைகள் ஏற்படுத்துவது மிகவும் நல்லதே.

பத்திரிகைகளைப்பற்றி ஒரு விஷயம் இவ்விடம் சொல்லவேண்டி யிருக்கிறது. அனேக வாசகசாலைகளில் சீமையிலிருந்து வரும் (Punch) 'பஞ்ச்' முதலிய அதிகப் பிரயோஜனமில்லாத பத்திரிகைகள் அதிகமாக வரவழைக்கப்படுகின்றனவே யன்றி, நம் நாட்டில் வெளியிடப்படும் பத்தி ரிகைகள் ஆதரிக்கப்படுவதில்லை. இதேனோ வீண்மயக்கம்! நமது நாட்டிலேயே, எவ்வளவோ அறிவை யளிக்கும் சிறந்த வார மாதாந்தி ரப் பத்திரிகைகளிருக்கும்போது, நிரந்தரமான விஷயமொன்றுமே அடங்கி யில்லாத (Punch) முதலிய மேல் நாட்டுப் பத்திரிகைகளை மட்டும் வரவழைப்பது அழகல்ல. நம் நாட்டு தேசியபத்திரிகைகளை ஆதரிப்பதே மிகவும் அவசியம். ஜனங்களுக்காகப் பாடுபட்டு உழைத்து வரும் பத்திரிகைகளை நாம் ஆதரிக்கவேண்டாமா? உதாரணமாக, "ஹிந்து," "ஸ்வராஜ்யா," "சுதேசமித்திரன்" முதலிய பத்திரிகைகளை நாம் ஆதரிக்கலாம். ராஜ்ய விஷயங்களிலே கலக்காது, ஜனங்களி னுடைய க்ஷேமத்தையும் முன்னேற்றத்தையுமே கருதி, ஜனசாரம், மதம் முதலிய விஷயங்களில் பாடுபட்டு உழைத்துவரும் நமது "ஆனந்தபோதி னி"யைப் போன்ற பத்திரிகைகள் ஆதரிக்கப்படவேண்டியது மிகவும் அவசியம்.

நிற்க, இப்பேர்ப்பட்ட வாசகசாலைகளின் பிரயோஜனங்களைப்பற்றிக் கொஞ்சம் கவனிப்போம். முதல் முதல் ஒரு வாசகசாலை இருப்பதினால் ஜனங்களுக்கு கல்வி அபிவிருத்தி உண்டாகிறது. அடிக்கடிபோய்ப் பல வித புஸ்தகங்களை எடுத்துப் படிப்பதனால் பற்பல விஷயங்களை அறிந்து ஞானம், விவேகம், அறிவு முதலியவைகளை விருத்திசெய்துகொள்ள ஏது ஏற்படுகிறது. ஆகவே, பொது ஜனங்களின் கல்வி விருத்தியடைகிறது. இரண்டாவதாக, பத்திரிகைகளைப் படிப்பதனால் உலகத்தில் நடக்கும் விவகாரங்களை அறிகிறோம். மனிதவாழ்க்கையின் பல துறைகளிலும் ஏற்படும் மாறுதல்களும், சீர்திருத்தங்களும், நாகரீக அபிவிருத்தியும் நமக்குத் தெரியவருகின்றன. அதனால், நாமும் நம்மை முன்னேற்றிக்கொள்ள வேண்டி அவைகளில் வேண்டியவைகளைக் கைக்கொண்டு அனுஷ்டிக்கிறோம். இதுமட்டுமல்ல. பெரிய ராஜீய மதவிஷயங்களில் பல பிரமுகர்களினுடைய அபிப்பிராயங்களும், விவாதங்களும் நமக்குத் தெரிய ஏதுவுண்டாகிறது. இப்படியாக, நாம் இருந்த விடத்திலேயே இருந்துகொண்டு, வாசகசாலையி னுதவியால், கல்வி, அறிவு, ஞானம், விவேகம் முதலியவைகளை வேண்டுமளவும் விருத்தி செய்துகொள்வதுமன்றி, உலக நடவடிக்கைகளை யெல்லாம் அவ்வப்பொழுது அறிந்துகொண்டிருக்கிறோம். இப்படி வாசகசாலையானது ஜனங்களை எல்லா விஷயங்களிலும் முன்னேற்றமடையும்படி செய்கிறது. ஒவ்வொரு பட்டணம்தோறும், கிராமந்தோறும் இப்பேர்ப்பட்ட வாசகசாலைகள் இருந்தால், நமது நாட்டிற்கே ஒரு பெரிய நன்மை. நமது நாடு முழுதும் ஸகல விஷயங்களிலும் முன்னேற்றமடைந்து, மேலான ஸ்திதியைப் பெற்று விளங்குமென்பதற்கையமில்லை.

R. நாராயணஸ்வாமி, தஞ்சாவூர்.

குறிப்பு:—நமது நண்பர் கூறியபடி வாசகசாலைகளுக்குப் பொருள் வேண்டிய தவசியமே. பணமில்லாமல் எக்காரியமும் நடவாது. பத்திரிகைகளை வரவழைக்கவும் புத்தகங்கள் வாங்கவும் பணம் வேண்டும். ஒருவரே அதைச் சமாளிக்க முன் வருவது கடினம். பணமிருந்தால் மனமிராது. மனமிருப்பவரிடம் பணமிராது. அதிலும் நம் நாட்டிலுள்ள செல்வவந்தரில் பெரும்பாலர் ஒரு பெரிய அதிகாரி வருவதாயின் அவரை வரவேற்க 500 ரூபாய் வேண்டுமாயினும் வலியக் கொடுத்துத் தமது கரத்தால் அந்த அதிகாரிக்குப் பூமாலை சூட்டும் கௌரவம் கிடைத்தால் சொர்க்கமே கிடைத்ததாக மகிழ்வார்கள். இன்னும் ஒரு பட்டம் கிடைப்பதாயின் ஆயிரக்கணக்காய்க் கொடுப்பார்கள். தாய் நாட்டின் பொதுநலத்திற் கென்று கேட்டால் அது பயனற்ற செலவெனக் கருதுவார்கள்.

ஆகையால் தேசமுன்னேற்றத்தில் அக்கரையுடைய அபிமானிகள் சிலர் ஒன்றுசேர்ந்து நிலையான சந்தாதாரர்களாய் இருந்து வாசகசாலையைத் தாபித்து நடத்தவேண்டும். அவர்களுக்கு அங்குள்ள புத்தகங்களை ஒவ்வொன்றாக வீட்டிற்கு எடுத்துப்போய் வாசிப்பதுபோன்ற சில உரிமை

கள் இருக்கவேண்டும். வாசகசாலைக்கு வந்து புத்தகங்களையோ பத்திரிகைகளையோ வாசித்துப்போக விரும்புகிறவர்களுக்கு சொல்ப சந்தா ஏற்படுத்தவேண்டும்.

இவ்வளவோடு நடந்தாலும் அதில் சேர்ந்திருக்கும் கூட்டத்தாரின் சுயநலமாகவே முடிகிறது. நம் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடவேண்டுமாயின்,

1. தினம் மாலை 6-மணிக்குமேல் ஒரு மணி நேரமாவது கைத்தொழிலாளிகள், ஏழைகள் முதலிய பாமரர்க்குக் கல்வி இலவசமாய்க் கற்பிக்கவேண்டும். கற்பிக்கும் தொழிலைத் தேசாபிமானமுடைய வாசகசாலை அவயவிகள் வாரமொரு முறை ஒவ்வொருவர் முறையாய் ஏற்றுக் கொள்ளலாம்.

2. பாமரர்களுக்குப் பத்திரிகையிலுள்ள முக்கிய விஷயங்களை வாசித்துக்காட்டி அவர்களுக்குத்தேச பக்தியும், நம் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு நாம் செய்யவேண்டிய தின்னதென்ற விஷய வுணர்ச்சியும் உண்டாகுமாறு செய்யவேண்டும்.

இத்தகைய காரியங்களைச் செய்தால்தான் வாசகசாலைத் தாபித்து நடத்துவது பொதுநல ஊழியமாகிய தேசத் தொண்டாகும்.



பத்திரிகாசிரியர்.

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(238-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்தலிங் பவானியை நோக்கி "பயப்படாதே. சந்தடி செய்யாமல் தரையில் உட்கார். நான் சங்கதி தெரிந்து வருகிறேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டான். அவன் மடியிலிருந்த தன் கைத்துப்பாக்கியைக் கையில் பிடித்துக்கொண்டு மெதுவாய் அம்மனிதனிருக்குமிடத்தை நோக்கிச் சென்றான். கிட்டே செல்லச் செல்ல அம்மனிதன் எள்ளளவுகூட அசைவின்றி யிருப்பதாய்த் தெரிந்தது. ஆனந்தலிங் ஒரு சமயம் இது எதிரிகளின் சதியாலோசனையா யிருக்கக் கூடுமென்று மிக்க எச்சரிக்கையோடு இன்னும் நெருங்கினான். அப்போதும் அம்மனிதன் அசையவில்லை. சற்று சந்தடிசெய்து பார்த்தான். அப்போதும் அவன் அசையவில்லை. கொஞ்சம் அதிகமாகவும் சத்தம்செய்து பார்த்தான். அவன் அசையவேயில்லை. கடைசியில் அருகிற்சென்று அவன் தோளைப் பற்றினான். அப்போதும் அசையவில்லை. குனிந்து அவன் முகத்தைப் பார்த்தான். உடனே சங்கதி தெரிந்துவிட்டது. அவன் பிணமாயிருக்கிறான். அதோடு அங்கு தோய்ந்திருந்த இரத்தக் கறைகளால் அவன் கொல்லப்பட்டான் என்றும் தெரிந்துகொண்டான்.

### 4-வது அத்தியாயம்.

ஆனந்தலிங் முன் யோசனை யுடையவனாதலால் சவத்தை யப்படியே அசைக்காமல் விட்டுவிட்டுத் திரும்பி பவானியிடம் வந்தான். அவள் "அய்யோ அந்த ஆள் இன்னும் அங்கேயே யிருக்கிறானே" யென்றாள்.

ஆனந்த:—"ஆம் அது சவம்" என்றான்.

அதைக் கேட்டதே யவள் திடுக்கிட்டு "ஐயோ!" என்றாள்.

ஆனந்த:—"வா! அவன் உனக்குத் தெரிந்தவனா பார்ப்போம்" என்று அவளை யழைத்துக்கொண்டு சென்றான்.

இருவரும் சவம் இருக்குமிடத்திற்குச் சென்றதும் ஆனந்தஸிங் சவத்தின் முகத்தை திருப்பிக்காட்டி இவன் யார் தெரிகிறதாபார் என்றான்.

பவானி யம்முகத்தைக் கண்டதே அலறிப் பின்னிடைந்தாள். ஆனந்தஸிங் "அவன் யார் தெரிகிறதா?" என்று கேட்டான். அம்மாது ஆம் தெரியும். இவன் பெயர் அச்சுதன் இவன் என் தாயார் இறந்த போது மரணசாசனம் எழுதிய லாயருடைய குமாஸ்தா" என்றாள்.

ஆனந்த:—கருப்பண்ணன் இக்கொலையால் அனுகூலமடைவானல்லவா?

பவானி:—"ஆம் அப்படித்தான். அதோ பார்" என்று இறந்தவன் தேகத்தில் காயம்பட்டிருந்த விடத்தைக் காட்டினாள்.

அவன் அணிந்திருந்த உட்சட்டையின் பொத்தான்கள் கழற்றப்பட்டிருந்தன. அவன் ஹிருதயத்தில் ஒரு சன்னமான ஈட்டியால் நேராய்க் குத்தப்பட்டிருந்தது.

பவானி "இது மலையாளத்தான் வேலை" என்றாள்.

ஆன:—அப்படியா?

பவானி:— "ஆம்" என்றாள்.

ஆனந்தஸிங் அதன் உளவு ஏதாவது அகப்படுகிறதாவென்று கவனித்தான். அதற்குள் அம்மாது, "அந்தோ சவப்பெட்டியிலிருக்கும் உயிர்ப் பிராணியை மறந்துவிட்டாயே" என்றாள்.

ஆனந்தஸிங் ஆம் ஆம் என்று உடனே அவளை யழைத்துக்கொண்டு அம்பாலிகையின் சவக்குழிக்குச் சென்றான்.

இருவரும் அங்கு சென்று நின்றதும் ஆனந்தஸிங் சவக்குழியின் கதவைத் தொட்டுப் பார்த்தான். அது பூட்டப்படாமலிருந்தது. அதைக் கண்டதே மிக்க வியப்படைந்து, "ஆ! காரியம் மிஞ்சிவிட்டது" என்றான். பவானி, "என்ன? என்ன?" என்றாள்.

ஆனந்தஸிங் "வந்துபார்" என்று கூறிக்கொண்டே கதவைத் திறந்து உள்ளே சென்று தன்னிடமிருந்த இராந்தலைத் திறந்தான். இவர்கள் கண்முன் சவப்பெட்டி யிருந்தது.

பவானி சந்தோஷமடைந்து "ஆ பெட்டி யிதோ விருக்கிறது" என்று ஆவலோடு கூறினாள்.

ஆனந்த:—"இரு பார்ப்போம்" என்றான். அவன் மனதில் சவப்பெட்டி யிருந்தாலும் உள்ளே யொன்றுமிராது என்றே எண்ணிக்கொண்டு ஒரு கையால் அப் பெட்டியை யிழுத்தான். அது பளுவா யிருப்பதைக் கண்டதே யவனும் மிக்க வியப்படைந்துவிட்டான்.

பெட்டியை மெதுவாய் இழுத்துவந்து இராந்தலைப் பவானியிட மளித்து தன்னிடமிருந்த ஒரு திருப்புளியை யெடுத்து பெட்டியின் மேல் பலகையைக் கழற்றினன். இருவரும் உடனே உள்ளே யிருந்த உரு வத்தை நோக்கினர்கள். உடனே இருவரும் வீறிட்டலறி "இதென்ன அதி சய கோரம்" என்றார்கள்.

அப்பெட்டியில் ஒரு பெண்ணின் சவமே யிருந்தது. ஆனல் அது முகம் புகைநிறமடைந்து மிக்க அகோர மாறுதலடைந்திருந்தது. தலை மயிர்மட்டும் அம்பாலிகையின் கூந்தலைப்போலவே செழித்து வளர்ந் திருந்தது.

பவானி ஆனந்தலிங்கின் பக்கத்திலிருந்து அவ்வுருவத்தை யுற்றுப் பார்த்து "இது இறந்த தேகம்தானே?" என்றாள்.

ஆனந்த:—ஆம்.

பவானி:—"அய்யோ! இவள் சவப் பெட்டிக்குள் இருக்கும்போதே ஸ்மரணை வந்து விட்டது. காற்றில்லாததால் மூச்சு திணறி மிக்க பரிதாபமாய் இறந்துபோ யிருக்கிறாள்" என்றாள்.

ஆனந்த:—இவ்வளவு விகாரம் இதற்குள் எப்படி யுண்டாய்விட்டது.

பவானி:—பெட்டியிலிருக்கும்போதே ஸ்மரணை வந்துவிட்டதால் மூச்சு விட முடியாமல் இரத்தம் முகத்திலேறி யங்கேயே நின்றுவிட்டது.

ஆனந்த:—ஒருக்காலுமில்லை. இவள் செத்து ஒருவாரமாய் விட்டது.

பவானி:—ஒருகாலுமில்லை.

ஆனந்த:—இல்லை நான் கூறுவது உண்மை.

பவானி:—அப்படியாயின் இது அந்த மலையாளத்தான் செய்த சாமார்த் தியம்.

ஆனந்த:—இது அம்பாலிகையின் சவமல்ல.

பவானி:—இல்லை. ஒருக்காலுமில்லை நான் பிரமாணிக்கம் செய்வேன். இது அவளுடைய தேகமே.

ஆனந்தலிங் அதைப்பற்றி யொன்றும் கூறாமல் "சரி இனி நமக்கு இங்கே ஒரு வேலையுமில்லை. வா போவோம்" என்று கூறிவிட்டுச் சவப் பெட்டியின் மேல்மூடியை முன்போலவே ஆணிவைத்து தைத்து அதை யிருந்த விடத்தில் வைத்துவிட்டு சவக்குழியைவிட்டு வெளிவந்து கத வைப் பழையபடியே மூடிவிட்டான்.

பிறகு பவானியை நோக்கி "நீ யிங்கேயே நின்றுகொண்டிரு. ஓரடி இதை விட்டு நகராதே. நான் வருமட்டும் இங்கேயே யிரு பத்திரம்" என்றான்.

பவானிக்கு ஒன்றும் விளங்கவில்லை யாதலால் "என் என்னை யிங் கேயே நிற்கச் சொல்கிறாய்?" என்றாள். (தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

## ஒரு கற்புள்ள மாது.

ராமநாதபுரம் ஜில்லா மானுமதுரைத் தாலூக்கா ஆண்டு கொண்டான் என்ற கிராமத்தில் பள் அல்லது குடும்பன் என்ற சாதியைச் சேர்ந்த கறுப்பனென்பவன் தனது மனைவியான பெரிய கறுப்பி என்பவள் வியபிசாரம் செய்துவிட்டதாக ஒருவன் வார்த்தையைக்கேட்டு அவளை வெட்டப் போனான். அப்போது அவள் சுற்றத்தாரும் பிறரும் நூற்றுக் கணக்கானவர் கூட்டம் கூடி விசாரித்தார்கள்; அவள் வியபிசாரம் பண்ணினதேயில்லையென்று பஞ்சாயத்தார் முன்னிலையில் சத்தியமாகக் கூறினாள். அதைக் கணவன் அங்கீகரியாது கொழுவை அக்கினியில் பழுக்கக் காய்ச்சி அந்தக் காய்ந்த கொழுவை எடுத்துக் கையில் கொடுத்தால்தான் நம்புவேன்; இல்லாவிட்டால் இவளை வெட்டுவேன் என்று கூறினான்; அவள் அப்படியே செய்வேனென்று பஞ்சாயத்தார்கள் முன் நெருப்பில் இரும்புக் கொழுவைக் காய்ச்சிக் கையிலெடுத்துக் கொண்டுவந்து கணவன் கையில் கொடுத்தாள். அவன் அதன் சூட்டைச் சகிக்க சக்தியில்லாதவனாய் பயந்து வாங்கவில்லை. அவன் மனைவியைப் பொதுஜனங்கள் யாவரும் பூசித்து அவளைச் சந்திரமதி யென்று போற்றினார்கள். (இ-சா.)

குறிப்பு :—இத்தகைய கற்புடைய மாதர்கள் இப்போதும் நம் நாட்டிலில்லாமலில்லை. சில வருடங்களுக்குமுன் வட ஆற்காடு ஜில்லாவில் ஒரு உத்தமி காயும் எண்ணெயில் கைதோய்த்திருக்கிறாள். கற்பின் மகிமைக்கு அளவில்லை யென்பதை நம் நாட்டுச் சகோதரிகள் மறக்கலாகாது.

பத்திரிகாசிரியர்.

## பகிரங்கப் புத்தகாலயம்.

தஞ்சாவூர் அரண்மனையிலுள்ள புத்தகாலயம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பாகத்தில் நாய்க்க அரசர்கள் ஆண்டகாலத்தில் தாபிக்கப்பட்டது. அதற்கு "தஞ்சாவூர் சரபோஜிமகாராஜா சரஸ்வதி மஹால் புத்தகாலயம்" என்று பெயர். அது சரபோஜிமகாராஜாவின் உருவச்சிலை அமைக்கப்பட்டிருக்கும் நாய்க்கர் தர்பார் ஹாலுக்கு எதிரிலிருக்கிறது.

இப்புத்தகாலயத்தில் ஓலையிலும் கடிதத்திலும் எழுதியவைகளாக சுமார் இருபத்தையாயிரம் நூல்கள் இருக்கின்றன. இவை தேவநாகரி, நந்திநாகரி, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், கிரந்தம், வங்காளி, உரியா பாஷைகளில் இருக்கின்றன. இவற்றில் ஏறக்குறைய எல்லாவித சாத்திரங்களைப்பற்றிய நூல்களும் இருக்கின்றன. பெரும்பாலான நூல்கள் வடமொழியிலேயே யுள்ளன. இவையன்றி 5000 ஆங்கிலம், பிரன்சு, ஜர்மென், லாடின், கிரீக், இடலி பாஷைப் புத்தகங்கள் இருக்கின்றன. அவைகள் 19-வது நூற்றாண்டின் முற்பாதியில் மேல் நாட்டில் பிரசுரிக்கப்பட்டவை. இவையன்றி விசேஷமான தேச விஷயங்களைப்பற்றிய அச்சுப் பிரதிகளும், சித்திரப்படங்களும் சேகரம்செய்து வைக்கப்பட்டிருக்கின்றன. பூர்வீகத்திலேயே நம் நாட்டில் இத்தகைய விவகாரங்களுண்டாகி யிருந்தன.

## உலகிலுள்ள பெரிய வர்சக சாலைகள்.

இங்கிலாந்திலுள்ள பிரிடிஷ் பொருட் காட்சிச்சாலையிலிருக்கும் வாசகசாலையில் 40 இலட்சம் புத்தகங்களிருக்கின்றன.

பாரிஸிலுள்ள ஜாதீய வாசகசாலையில்— 30 இலட்சம் புத்தகங்களுள.

அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களில் வாஷிங்டன் நகரிலுள்ள காங்கிரஸ் வாசகசாலையில் 25 இலட்சம் புத்தகங்களிருக்கின்றன.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**உருத்ரோத்காரி௵ மாசிமீ—கலி 5025-சாலிவாகனம் 1846**
**பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342**
**இங்கிலீஷ் 1924௵ பிப்ரவரிமீ—மார்ச்சுமீ**

| மாசிமீ | பிப்ரவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | புத | அ20-43 | ※கிரு37-0 | அ37-0சித் | கிருத்திகை |
| 2 | 14 | வியா | நவ26-53 | ரோ44-0 | மர60 | மத்வநவமி, ஸ்ரீமதாநந்தர் தீர்த்தம் |
| 3 | 15 | வெ | தச32-8 | மிரு50-13 | சித்60 | நாமகரணம் காதுகுத்த |
| 4 | 16 | சனி | ஏ36-13 | திரு55-13 | சித்60 | மத்வசர்வ ஏகாதசி |
| 5 | 17 | ஞா | து38-48 | புன58-48 | சித்60 | பீஷ்மதுவாதசி |
| 6 | 18 | திங் | திர39-53 | பூச60 | சித்60 | பிரதோஷம், சர்வ முகூர்த்தம் |
| 7 | 19 | செவ் | சது39-25 | பூச0-50 | சித்60 | மீனாயனம் நா-52-0 |
| 8 | 20 | புத | ○37-40 | ஆயி1-23 | சித்60 | மாசிமகம், பௌர்ணமி |
| 9 | 21 | வியா | பிர34-40 | மக0-38 பூர58-48 | அ0-38சித் | மாசபகுளம் |
| 10 | 22 | வெ | துதி30-25 | உத்56-3 | சித்56-3அ | தானியம் வாங்க, சர்வ [முகூர்த்தம் |
| 11 | 23 | சனி | திரி25-40 | அஸ்52-38 | மர60 | |
| 12 | 24 | ஞா | சது20-18 | சித்48-53 | சித்60 | |
| 13 | 25 | திங் | பஞ்14-43 | சுவா45-3 | அ45-3சித் | |
| 14 | 26 | செவ் | சஷ்8-55 | விசா41-33 | ம41-33சி | |
| 15 | 27 | புத | சப்3-25 அஷ்58-0 | அனு37-30 | சித்60 | |
| 16 | 28 | வியா | நவ53-5 | கேட்34-10 | பி34-10சி | |
| 17 | 29 | வெ | தச48-35 | மூல31-13 | அ31-13பி | |
| 18 | 1924௵ மார்ச்சுமீ 1 | சனி | ஏ44-43 | பூரா28-53 | சித்60 | |
| 19 | 2 | ஞா | து41-33 | உத்27-13 | அமி60 | |
| 20 | 3 | திங் | திர39-13 | திரு26-20 | அ26-20சி | மஹா சிவராத்திரி |
| 21 | 4 | செவ் | சது37-53 | அவி26-20 | சி26-20ம | |
| 22 | 5 | புத | ●37-35 | சதை27-28 | சி27-28அ | சர்வத்திர அமாவாசை |
| 23 | 6 | வியா | பிர38-38 | பூரட்29-48 | சித்60 | பால்குணசுத்தம் |
| 24 | 7 | வெ | துதி40-53 | உத்-33-15 | சி33-15அ | சந்திர தரிசனம் 4-ம் பிறைபோல் தோற்றும் |
| 25 | 8 | சனி | திரி44-28 | ரேவ-38-3 | ம38-3சித் | பிரயாணம் விலக்க |
| 26 | 9 | ஞா | சது49-10 | அசு43-55 | சித்60 | ஸாந்த, மாச சதுர்த்தி விரதம், சர்வ முகூர்த்தம் |
| 27 | 10 | திங் | பஞ்54-43 | பரணி50-40 | சி50-40ம | அடுப்புவைக்க [ருக் |
| 28 | 11 | செ | சஷ்60 | ※கிரு58-0 | சித்58-0அ | கிருத்திகை, திருதினஸ்பி |
| 29 | 12 | புத | சஷ்0-53 | ரோ60 | சித்60 | திருதின ஸ்பிருக், சர்வ முகூர்த்தம் |

| | | | |
|---|---|---|---|
| சுக் | | | |
| சூரி கே | 12உ த-செ 17உ கும்-புத 20உ மே-சுக் | | |
| புத | | | ராகு |
| | குரு செ | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி 9 | ருத்ரோத்காரி௵ மாசிமீ ௧உ<br>1924௵ பிப்ரவரிமீ 13உ | பகுதி 8 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு
    மிவ்வுலக மெவ்வுல கமோ
என்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ
    வென்னின்மக மேரு வாக்கிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
    சுமையாளு மாக்கி நாளும்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையும்
    சூறையிட் டிந்த்ர ஜாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
    யம்மம்ம வெல்ல வெளிதோ
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
    தருளோவ லாது மருளோ
சமயநெறி காணாத சாக்ஷிநீ சூக்ஷ்மமாத்
    தமியனேற் குளவு புகலாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
    சச்சிதா னந்த சிவமே. (1)

---

யான்றா னெனலறவே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ—தோன்றி
யிழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர
வழுக்கடிக்கும் வண்ணார்போ லாய். (2)

---

எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—யங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே நானுன் பரம். (3)

---

## அரும்பொருள் விளக்கம்.

இமையளவு போது=ஒரு இமைப்பொழுது.

ஒரு கற்பகாலம்=பிரம்மாவின் ஆயுட்காலம். 2000 - சதுர்யுகம் பிரம்மாவிற் கொருநாள் என்றும், அத்தகைய 30 நாள் ஒரு மாதம் என்றும், அத்தகைய மாதம் 12 ஒரு வருடமென்றும், அப்படி நூறு வருடம் பிரம்மனுக்கு ஆயுள் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

மாதர் சிற்றின்பம் = பெண்ணாசை.

[பிறப்பு இறப்பிற்குக் காரணமாக இவ்வுலகில் மனிதனுக்குள்ள ஆசைகள் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என மூன்றாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் பெண்ணாசையே மிகக் கொடிதாதலின் அதை மட்டுமே கூறினார். மனிதனுடைய இவ்வுலகபோகங்களனைத்திற்கும் ஸ்திரீயே மூலாதாரமா யிருக்கிறாள்.

" பாரியை யுடையான் யாவன் அவனுக்கே பற்றும் போகம்
நாரியை யில்லா தாற்குப் போகத்தின் நலனெங் குண்டாம்
காரியை தன்னை நீங்கில் கருத்துறு ஜகத்து நீங்கும்
பேரியற் சகத்து நீங்கில் பிறிவில் பேரின்ப முண்டாம் "

என வசிஷ்டர் வாசிட்டத்திற் கூறி யருளினார்.

ஒருவன் ஸ்திரீயை யிச்சிப்பதால் குடும்ப பாரம் தாங்கொணாததாகிறது. குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காகப் பொருள் தேடுவதிலேயே இவன் காலமெல்லாம் செலவழிக்கப்படுகிறது. போதிய பொருள் கிடைக்காவிடின் கடன்பட்டுத் துன்பத்தை யனுபவிக்க நேர்கிறது. குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர்க்கு யாதேனும் துன்பம் நேரின் இவன் தீராத வியாகூலத்தை யடைகிறான். சில சமயங்களில் குடும்பத்தில் நேரிடும் இக்கட்டுகளை நீக்குவதற்காக, பொய்கூறல், ஒருவரை மோசம் செய்தல், களவாடல் முதலிய பாப காரியங்களைச் செய்து பிறவிப் பெரும் பிணிக்கு வித்தாகிய கருமங்களைப் பெருக்கிக்கொள்கிறான். இதனாற்றான், "மாதர் சிற்றின்பமோ வென்னின் மகமேருவாக்கி............இந்திர ஜாலமமைய வொரு கூத்தும் சமைந்தாடும்" என்றார்.]

குறையிட்டு = கொள்ளையடித்து.

இந்திரஜாலம் அமைய = இந்திரஜாலம் போன்ற

'இந்திரஜாலம்' என்பது ஜாலக்காரன் தன் ஜாலவித்தையால் காட்டும் அதிசயமான காட்சிகள். அவை காண்போர் கண்களுக்குப் பிரத்தியட்சமாய்த் தோன்றுபவையேயன்றி உண்மையாக நிலைத்திருப்பவை யன்றாம்.

பரம்பொருளினிடத்தில் *ஆரோபத்தால் தோன்றும் இப்பிரபஞ்சம் இந்திரஜாலத்திற்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. ஈசுவரனே ஜாலக்காரன், மாயையே அவனது ஜாலவித்தை. பிரபஞ்சமே யவன் காட்டும் ஜாலம். அஞ்ஞான வயத்தராகிய சீவர்களே அந்த ஜால வித்தையைக்கண்டு அது மெய்யென மயங்குவோர்.

"இந்திர ஜாலங் கனவு கானல்நீ ரென வுலகம் எமக்குத் தோன்ற" என்றனர் தாயுமானவரே மற்றொரு பாசுரத்தில்.

மனமாயை = மனமாகிய மாயை.

மனமே அனுபவத்தில் மாயையாக விருக்கிறது. மனதின் பசையற்றொலொழிய மாயையை வெல்லமுடியாது. இப்பிரபஞ்சமே நினைவிலிருந்து உதிக்கிறது. நினைவே மனதிற்கு வேராகும். ஆசையே மனதின் சொரூபம்.

" மனமாயை மாயையிம் மாயை மயக்க
மனமாயை தான்மாயு மற்றொன்று மில்லை
பினமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே " (திருமந்திரம்.)

(மனமாயைமாயை = மனோசங்கற்பமே மாயையாம்
இம்மாயை மயக்க = இச்சங்கற்பத்தைக் கெடுக்க
மனோ சங்கற்பத்தை யொழித்தால் மாயை யொழியும் என்பது கருத்து.)

சமயநெறி காணாத சாக்ஷி நீ = நீ ஒன்றோடொன்று மாறுபடும் சமயக் கட்டுகளுக்கடங்காது, சமயாதீதனாய், சர்வ சமயங்களுக்கும் சாக்ஷியாய் விளங்கி யிருப்பவன்.

தாயுமானவரே மற்றோரிடத்தில் "சமயாதீதப் பழம் பொருளை" என்றார்.

மாயையின் வல்லமையால் கால அளவு பலவேறு விதங்களாகத் தோன்றும். உலகத்தில் ஜீவராசிகளின் ஆயுட்பிரமாணம் பல அளவாயிருக்கிறது. நமது ஒரு பகலுக்குரிய கால அளவாகிய முப்பது நாழிகையையே ஆயுட்பிரமாணமாகவுடைய ஜந்துக்களும் உள. அவை காலையில் ஜனித்து, நடுப்பகல் யௌவனமுற்று, மாலை மரிக்கின்றன. நாம் சில சமயங்களில் இரண்டுநாட்கள் மூன்று நாட்களில் நடந்த விஷயங்கள் போல் கனவு காண்கிறோம். உண்மையில் நாம் அக்கனவைக் கண்ட காலம் ஒரு நிமிடமே யிருக்கலாகும். சாதாரண காலத்திலேயே மனம் ஏதேனும் ஓர்

---

*ஆரோபம் = கொஞ்சமாயிருக்கும் இருளில் கயிறு பாம்புபோல் தோன்றுவதுபோலவும், சூரியப் பிரகாசத்தில் கிளிஞ்சில் வெள்ளிபோல் தோன்றுவது போலவும், கானலில் நீர்போல் தோன்றுவதுபோலவும், ஒருவஸ்துவில் இல்லாத வேறொருவஸ்து பிராந்தியால் தோன்றுவதற்கு ஆரோபம் அல்லது அத்தியாசம் என்று பெயர்.

விஷயத்தில் அமிழ்ந்திருக்கும் சமயத்தில் காலங்கழிந்தது நமக்குத் தெரிவதில்லை. மனம் அடியோடு ஒடுங்கி யிருக்கும் சுழுத்தியிலும் கால அளவு தோன்றுவதில்லை. காலமாயையிவ்வாறிருப்பதால் "இமைப்பளவு போதையொரு கற்பகாலம் பண்ணும்" என்றார்.

இத்தகைய மனமாயையை வெல்வது மிக அரிது. சதா இச்சையென்ற காற்றின் வழியே அலைந்துகொண் டிருப்பதையே சுபாவமாகவுடைய இம் மனதை ஒரு கணமேனும் அலையவொட்டாது ஒரு நிலையில் நிற்கச் செய்தல் மிகக் கஷ்டம். இச்சை யொழிந்தாலன்றி மனம் அடங்காது. இதனாற்றான் "மனமாயை யம்மம்ம வெல்ல வெளிதோ" என்றார். (ஓகாரம் எதிர்மறைப் பொருளது.)

2. யான் = நானென்னும் அகங்காரம்.

தான் = எனதென்னும் மமகாரம்.

அருணைக்கோன் = அருணகிரிநாதர்.

அகங்கார மமகாரங்கள் ஒழியுமட்டும் ஆனந்த நிலையாகிய நிஷ்டை சித்திக்காது. நெஞ்சின் அலைவு ஒழிந்தால்தான் நிஷ்டை கூடும். மேற்கண்ட அகங்கார மமகாரங்கள் ஒழிந்தால்தான் மனச்சலனம் நீங்கும் என்பது கருத்து.

3. எங்கும் சிவமே = அகண்டாகார சிவ சொரூபமே சர்வமுமாய் நிற்கின்றதென்ற நிலையில்.

இரண்டற்று நிற்கில் = முன்னிலைச் சுட்டும் தற்போதமு மொழிந்து நிற்கில்.

சுகம் தங்கும் = ஆனந்தம் சித்திக்கும்.

ஆகையால் மனமே நீ சதா அலைந்துகொண்டிருந்து என்னைப் பிறப்பிறப்பாகிய துன்பத்தில் உழலும்படி செய்யாதே என்றார்.

---

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஸு மாசிமீ கஉ

## சென்னையில் யாசகர்.

ஒரு தொழிலைச்செய்து அதன் வழியாய்ச் சீவிப்பதை விட்டு அன்னியரிடம் பணம் உடை ஆகாரம் முதலியவற்றைக் கெஞ்சிக் கேட்டு வாங்கி அதன் வழியாய்ச் சீவிப்போரே யாசகர் எனப் படுவர். உலக வாழ்க்கையில் எப்படிப்பட்டவராயினும் இன்னொரு வரிடம் ஒன்றைக்கேட்டு வாங்காம லிருக்கமுடியாது. ஆனல் அப்படி வாங்கும்போது, வாங்கும் பொருளை மறுபடி திருப்பிக் கொடுத்து விடுவதாய்க் கூறி வாங்கி அவ்வாறே கொடுத்து விடு கிறோம். அப்படி வாங்குவதற்குக் கடன் என்று பெயர்.

யாசிப்பவர்களுக்கு அவர்கள் வேண்டியதை யளிப்பதே தருமம் எனப்படுகிறது. இதுவே ஈகை யென்பதாம். இரப் போர்க்கீவது உயர்ந்த குணமாகும். இரப்பதோ தாழ்ந்த இழி வான நடக்கையாகும்.

"இட்டார் பெரியோர் இடாதா ரிழிகுலத்தோர்" என்று ஆன் ரோர் கூறினர். ஔவைப் பிராட்டியார் "ஏற்பதிகழ்ச்சி" என்ற னர். அவ்வம்மையாரே "ஐயமிட்டுண்" என்றனர்.

இந்த இரண்டு வாக்கியங்களையும்பற்றிச் சிலர் "பிச்சை யெடுப்பது இழிவு என்று கூறிவிட்டு, பிச்சைக்காரருக்கு அன்ன மிட்டுப் புசி என்று கூறுவது ஒன்றுக்கொன்று முரணாக விருக்கி றது" எனக் கூறுகிறார்கள். இது அறியாமையே யாகும்.

உலகில் இரப்போரும் ஈவோரும் எப்போதுமே யிருப்பர். ஆயினும் இரப்பது இழிவு என்று அறிந்து தம்மாலியன்றவரை யந்த வழிச் செல்லாமல், பாபமற்ற ஒரு தொழில் செய்து சீவிக்க முயலவேண்டுமென்று அறிவுறுத்தவே யவ்வாறு கூறினர். மனித னுக்குச் சீவகாருண்யம் அவசியம் இருக்கவேண்டிய குணமாகும். இதுவேஅறத்திற்கு வித்தாகும். அதிலும் அன்னதானம் மிகச்

சிறந்தது. பசி யென்றவர்களுக்கு அன்ன மளிப்பது முக்கிய தருமம். அதை வற்புறுத்தவே "ஐயமிட்டுண்" என்றனர். நமது புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டமே அறத்தில் சிறந்ததாகும்.

முற்காலத்தில் நம் நாட்டார் தாங்கள் போஜனம் செய்யும் போது வீதியில் சென்று அதிதிகள் யாரேனு மிருக்கிறார்களா வென்று பார்த்து ஒரு அதிதிக்கேனும் அன்னமிட்டே யுண்பார்கள். அறத்தின் பெருமையை யுணர்ந்த நம்முன்னோர் அதை முப்பத்திரண்டு வகுப்பாகப் பிரித்திருக்கிறார்கள். அந்த முப்பத்திரண்டு தருமங்களிலும் அன்னதானம், கல்வித்தானம் இரண்டுமே மிகச் சிறந்தவை. கல்வித்தானம் எல்லாராலும் செய்யக்கூடியதல்ல. அன்னதானமோ எவரும் செய்யக்கூடியது. இப்போதும் யாசகம் எடுக்கும் சிலர் வீடுவீடாய் அன்னம் கேட்டுக் காவடியில் வாங்கிப்போய் வேறு சில பரதேசிகளுக்கும் அன்னமளித்துத் தாங்களும் புசிக்கிறார்கள். இல்லறத்தார்க்கு விதிக்கப்பட்ட கடமைகளில் அதிதிக்கு அன்னமளித்தபின்பே புசிக்கவேண்டுமென்பது ஒரு முக்கியவிதி. ஆனால் இக்காலத்தில் பெரும்பாலர் போசனத்திற்கு உட்காரும்போது தெருக்கதவை மூடித் தாளிட்டு விடுவதையே விதியாக வைத்துக்கொண் டிருக்கிறார்கள்.

பூர்வீகத்திலிருந்தே ஈகையில் இணையற்றோர் நம் நாட்டில் இருந்திருக்கிறார்கள். அவர்களுக்கு வள்ளல்கள் என்று பெயர். கொடையிற் சிறந்த அவர்களைத் தலை வள்ளல், இடை வள்ளல், கடை வள்ளல் என முத்திரமாய் நம் நாட்டார் பிரித்திருக்கிறார்கள். அத்தகை வள்ளல்கள் வேறெந்த நாடுகளிலும் இருந்ததாகச் சரித்திரங்களில் காணப்படவில்லை.

இவர்களில்,

முதலெழு வள்ளல்கள்:—குமுணன், சகரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி.

இடை யெழு வள்ளல்கள்:—அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கர்ணன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன்.

கடை யெழு வள்ளல்கள்:—எழிலி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன் என்பவர்களே.

இவ்வாறே யாசகர்களையும் முத்தரத்தினராகப் பிரிக்கலாகும்.

1-வது—வயோதிகத்தாலோ, அவயவக்குறைவாலோ எவ்வகைத் தொழில் செய்யவும் சக்தியின்றி, போஷிப்போரும் இல்

லாம லிருப்பவர்கள். தருமம் செய்வதற்கு இவர்களே தகுந்த பாத்திரமாவர். இத்தகையோர்க்குத் தருமமளிப்பது அவசிய மாகும்.

2-வது—தொழில் செய்யச் சக்தி யுடையதும் அவயவக் குறைவில்லாததுமான தேகத்தோடிருந்தும் யாசகம் செய்வதையே தொழிலாகக்கொண்டு ஜீவிப்பவர்கள். இவர்களில் ஒரு சாரார் யாசகம் செய்வதையே குலத்தொழிலாகக்கொண்டிருக்கிறார்கள். மற்றபடி இலௌகீகத்தில் இவர்கள் இல்லறவாசிகளாய்ப் பெண்டுபிள்ளைகளோ டிருப்பவர்களே. இவர்கள் யாசகம் செய்தே செல்வமும் சேர்க்கிறார்கள்.

இவர்களில் தனியாக இருப்போர்களில் சிலர் விபூதி உருத்திராக்கம் அல்லது திருமண் துளசிமணிமாலை முதலிய சின்னங்களை யணிந்து ஈசுவர நாமங்களை யல்லது தோத்திரப் பாடல்களைக் கூறிக்கொண்டு யாசகம் செய்கிறார்கள். இவர்கள் மனதிற்கும் இவர்கள் வாயால் கூறும் பாடல்களுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. இவர்களெல்லாம் சோம்பேறிகளாய் அன்னியர் கஷ்டத்தினால் சீவனம் செய்பவர்கள்.

உலக போகங்களின் அநித்தியத்தை யுணர்ந்து இச்சை யொழித்து விரக்தி யடைந்து, சதா ஈசுர சிந்தனையி லிருந்து கொண்டு, பசிவந்தபோது ஜாதிமதபேதமின்றி எங்கேனும் யாரையேனும் ஆகாரம் கேட்டு வாங்கி யுண்போர்களுமுண்டு. இவர்களை யிந்த யாசகர் கூட்டத்தில் நாம் சேர்க்கவில்லை. ஏனெனில் இவர்கள் சந்நியாசிக்குரிய காஷாயம் முதலிய சின்னங்களை யணிந்திருந்தாலும் இல்லாவிடினும் சந்நியாசிகளே யாவர். ஏனெனில் சந்நியாசத்திற்கு விரக்தி காரணமேயன்றி வேடங் காரணமன்று. இத்தகையோரை ஈசுவரனாகவே கருதி பக்தியோடு உபசாரம் செய்து இவர்களுக்கு உண்டியளிப்பது ஈசுவரனுக்கே செய்தது போலாகும். இவர்கள் தாங்கள் புசிக்கும் அன்னத்தை ஈசுரார்ப்பணம் செய்பவர்கள். ஆனால் இத்தகையோர் சாதாரணமாய்க் கிடைப்பவர்களல்ல.

யாசகர்கள் மலிந்துள்ள நாடு தரித்திரத்தைக் காட்டுகிறது. தரித்திரத்தில் நம் தாய்நாடே யிப்போது தலைசிறந்து விளங்குகின்றது. அதற்குக் காரணம் கூறப்புகின் ஈண்டு விரியும். இப்போது நம் நாட்டில்மேற்கண்ட யாசகர் தவிர வேறு இரண்டுவித

யாசகர் உற்பத்தியா யிருக்கிறார்கள். அவர்கள் டிராம்வண்டி யாசகரும், இரயில்வண்டி யாசகருமே.

சிறுவயதுடைய பிள்ளைகள்கூட டிராம்வண்டியின் கூடவே வயிற்றிலடித்துக்கொண்டு ஓடி வருகிறார்கள். பத்து வயது முதற் கொண்டுள்ள ஆண்மக்கள் பெண்மக்கள் இருபாலாரும்-நல்ல சுக தேகிகள், தொழில்செய்து ஜீவிக்கச் சக்தியுடையோர் - இரயில் வண்டிகளில் பாட்டுப்பாடிப் பிச்சை யெடுத்துக்கொண்டே செல் கிறார்கள். இவர்கள் சென்னையிலிருந்து பொன்னேரி, திருவள்ளூர், செங்கற்பட்டு முதலிய இடங்கள் வரையில் செல்கிறார்கள். இவர் களவ் களவுகூட நடப்பதாகக் கூறப்படுகிறது. பிரயாணிகளுக்கு இவர்களால் தொந்திரவதிகம். இரயிலதிகாரிகள் இவர்களைத் தாராளமாய்க் கும்புகும்பாய்ப் பிரயாணச்சீட்டில்லாமலே செல் லும்படி விட்டுவிடுகிறார்கள்.

இங்கிலாந்தில் யாசகம் செய்வோரைப் பிடித்துப்போய் அதற்கென்று அமைக்கப்பட்டிருக்கும் தொழிற்சாலைகளில் விட் டுத் தொழில்செய்யச்செய்து கூலி கொடுத்து அவர்களை நல்வழிப் படுத்துகிறார்கள். ஆனால் நம் நாட்டிலோ தொழில் செய்யச் சக்தியற்ற யாசகர்களை, கூன் குருடு முடம் முதலியவர்களைக்கூட ஆதரிப்பார் ஒருவருமில்லை. அக்குற்றத்தை யார்மேல் சுமத்து வது. வீண் பெருமைக்குப் பணவிரயம் செய்யும் நம் நாட்டுச் செல்வர்கள் மேல்தான் சுமத்தலாகும். நம் நாட்டைப்பற்றி நமக்கே அக்கரையின்றேல் அன்னியர்க்கு எப்படி யுண்டாகும்.

நம் நாட்டுக் கைத்தொழில்களை யுஜ்ஜீவிக்கவேண்டிய அவசி யம் நேர்ந்திருக்கும் இக்காலத்திலேனும் செல்வவந்தர்கள் நெச வுச்சாலை, நூல் நூற்கும்சாலை முதலிய தொழிற் சாலைகளைத் தாபித்து தேகபலமுள்ள யாசகர்களைக் கொண்டு தொழில் நடத் தினால்,அவர்களும் கௌரவமாகச் சீவனம் செய்வார்கள். தொழிற் சாலைகளைத் தாபித்தோர்க்கும் இலாபம் கிடைக்கும், நாட்டுக் கைத்தொழில் விர்த்தி யடையும், வர்த்தகமும் ஓங்கும், தாய்நாடு முன்னேற்றமடையுமன்றோ.

உடை யெப்போதும் வேண்டுவதே அது கெட்டுப்போகிற சரக்குமல்ல. நாமோ நம் க்ஷேமத்தையும் மானத்தையும்கூடக் கருதாமல் உடைக்கும் அன்னிய நாட்டை யெதிர்பார்த்துக்

கொண்டிருந்து இலக்குமியை நாட்டைவிட்டோட்டினோம். இப்போதுதான் சற்று அறிவு உதித்திருக்கிறது. இனியேனும் நம் நாட்டுச் செல்வவந்தர்கள் நாட்டுத்தறி நெசவுச் சாலைகளைத் தாபித்து நம் பாரதமாதாவின் தரித்திரத்தையகற்ற முயலவேண்டாவோ. இது பெரும் புண்ணியத்தையு மளிக்குமன்றோ. தேசாபிமானமுடைய புண்ணியவான்களிற் சிலர் ஆங்காங்கு முன்வந்து முயற்சி யெடுத்துக்கொண்டால் இது முடியாத காரியமன்றே. இத்தகைய முக்கியமான விஷயங்களைக் கருதாமல் மேல்போக்கான சம்பாஷணையிலேயே யிருந்தால், எக்காலத்தில் நம்நாடு சீர்படுமோ அறியோம். நம் நாட்டார் இன்னும் சுயநலத்தையும் வீண்வேஷமாகிய கௌரவத்தையும் கருத்தில் வைத்து அவற்றிற்காகப் பணத்தைத் தாராளமாய் விரையம் செய்வதாயின் கடவுளுக்கே அது ஒப்பாது. எல்லாம் வல்ல அக்கருணாநிதியே நாம் நல்வழியில் செல்ல நமக்கு அறிவுறுத்த வேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.

---

## சகோதரத்வ பாவனை.

(254-ம் பக்கத் தொடர்ச்சி.)

நாம் சுகவாழ்வைப் பெற்று, புகழுடன் விளங்கி, நித்தியானந்தப் பேற்றுக்கு யோக்கியராவதற்கு, சகோதரத்வபாவனையே வழி காட்டி என்று சென்ற மாதப் பத்திரிகையில் விளக்கினோம். இப்போது அச் சகோதரத்வ பாவனையை ஸ்ரீராமபிரான் எவ்வாறு நடத்திக் காட்டினரென்பதைப்பற்றிச் சிறிது பேசுவாம்.

ஸ்ரீராமபிரான் இளம்பிராயத்திலேயே இன்பத்திலும் துன்பத்திலும் சமமான நோக்கத்தைக் கொண்டிருந்தார். இந்த நோக்கம் சகோதரத்வ பாவனைக்கு இன்றியமையாதது. தமது பிரஜைகளில் எவரையேனும் சந்திக்க நேர்ந்தால் அவரை அன்புடன் நோக்கி இனியமொழிகளால் க்ஷேமாதிசயங்களை விசாரிப்பார். சக்ரவர்த்தி, தாசரதியைப் பார்த்து "இனி இந்த இராஜ்யபாரத்தை என்னால் தாங்கமுடியாது. எப்போது தக்க புத்திரர்கள் எனக்கு ஏற்பட்டுவிட்டார்களோ அப்போதே நான் இப்பாரத்தை அவர்களிடம் ஒப்பித்துவிட்டு, என் ஆத்மா கடைத்தேறும்படியான மார்க்கத்தில் பிரவேசிக்கவேண்டும். ஆகையால் உத்தம குணங்கள் பொருந்திய நீயே இதனை யேற்றுக்கொண்டு என்னை விடுவிக்கவேண்

டும்'' என்றார். இரகுநாயகன் அதற்கு உடன்பட்டார். உடனே கைகேயி இதனை உணர்ந்து,கூனியின் துர்ப்போதனைக்குட்பட்டுத் தான் முன்னதாகவே பெற்றிருந்த இரண்டு வரங்களை இப்போது பயன்படுத்திக்கொள்ள அனுமதிகொண்டு, ஒரு வரத்தால் இரகுநந்தனை வனத்துக்கனுப்பவும், மற்றொன்றால் தன் மகன் பரதனை அரசாளச் செய்யவும் நினைத்து, முடிசூட்டிக்கொள்ள ஆயத்தமாயிருந்த ஸ்ரீராமபிரானை அழைத்து ''இராமா! பரதன் அரசாளப் போகிறான். ஆதலால் நீ பதினான்கு வருஷம் வனவாசஞ் செய்துவரவேண்டும். இது சக்ரவர்த்தியின் கட்டளை'' என்றனள். இம்மொழி கேட்டதும் சீதாபதி பெருங்களிப்படைந்து "அம்மா! மகா பாக்கியம். இராஜ்யத்தை நான் ஆண்டாலென்ன, என் தம்பி யாண்டாலென்ன? இரண்டுமொன்றே. என் பின்னவனாகிய பரதன் பெற்ற செல்வம் நான்பெற்ற தென்பதற்குத் தடையாது?'' என்றனர். இவ்வாறு ஸ்ரீராமபிரான் பேசும்போது அவருடைய முகம், எவ்விதமான வாட்டத்துக்கும் இடந்தராது,சித்திரத்தில் தீட்டப்பெற்ற மலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்தைப்போலும் விளங்கியது. இதனால் அவர் சுகதுக்கங்களில் சமநோக்குடையவரென் றேற்பட்டது.

ஸ்ரீராமபிரானுக்கு இலட்சுமணன், பரதன், சத்துருக்கினன் என்கிற தம்பிமார் மூவருண்டு. இவர் வனத்திற்குப் புறப்பட்டபோது முதல் முதல் குகன் என்னும் வேடர்தலைவனைச் சந்தித்தார். குகன் இவரிடத்தில் கரைகடந்த அன்புகொண்டு இவரை விட்டுப் பிரிய மனமில்லாதவனா யிருந்தான். இவர்க்கு வேண்டும் பணிவிடைகளைக் குறிப்பறிந்து வெறுப்பின்றிச் செய்து வந்தான். இவரும் அவன் திறத்தில் பேரன்புடையவரானார். பிரிய நேர்ந்தபோது குகனை ஓர் ஏழை வேடனென் றெண்ணாமல் ஸ்ரீராமபிரான் அவனைப்பார்த்து "சகோதர! நின் நட்பைப்பெற நான் செய்த புண்ணியமே புண்ணியம். நீயே எனக்கு ஆருயிர்த் தோழன். இந்த இலட்சுமணனாகிய என் தம்பி உனக்குந் தம்பியே. என் மனையாளான் இச்சீதை உனது கொழுந்தி. இது உபசாரமொழி யன்று; உண்மைமொழியே'' என்று கூறி அவனை மார்பிறுகத் தழுவி உச்சி மோந்தனர். நிற்க,

ஸ்ரீராமபிரானைத் தேடிவந்த பரதனும் இவ்விஷயத்தை யுணர்ந்து குகனிடம் சகோதரத்வம் பாராட்டினான். அப்போது "இவன் யார்?'' என்று வினவிய கோசலா தேவியைப் பார்த்துப் பரதன் "அம்மா! இப்பெருந்தகை எங்களண்ணனால் ஆதரிக்கப் பெற்றவர். அண்ணாவுக்கு இளைய சகோதரராவர். எனக்கும் மற்றையோர்க்கும் மூத்தவராக வேண்டும்'' என்று மொழிந்தனன். அது கேட்டுக் கௌசல்யை "அப்படியா? மெத்தவும் சந்தோஷம். அப்பா பரதா! நீங்கள் 'ஐவிரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்திரென்றாள்.'

இது விஷயமாய்த் திருமங்கை மன்னரும், அன்பாயினு ரெவரிடத்தும் எவ்வித வித்தியாசமுமின்றிப் பகவான் காட்டுங் காருண்யத்தை வியந்து,

"ஏழை *ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்ற†வற்கு இன்னருள் சுரந்து
‡மாழை மான் மடநோக்கி யுன் தோழி
உம்பி எம்பி யென்று ஒழிந்திலே உகந்து
தோழன் நீஎனக் கிங்கொழி என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்திருந்திட
ஆழிவண்ண! நின் அடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே"

என்று பாடியுள்ளது கவனித்தற் குரியது.

மற்றொரு சமயம் ஸ்ரீராமபிரான் சுக்கிரீவ னென்னும் வானர பூபதியின் நட்பை யங்கீகரித்தபோது, அப்பெருமான் அவனை நோக்கி, "சகோதர! இனி நானுனக்குச் சொல்லவேண்டிய தென்னவிருக்கின்றது. தேவலோகத்திலாகிலும் சரி, இப்பூலோகத்திலாகிலுஞ் சரி, உனக்கு விரோதஞ் செய்தவர் எனக்கு விரோதஞ் செய்தவராவர். நற்குண நற்செய்கையில்லாதவராயினும் உன்னை நேசித்தவர் என்னை நேசித்தவராவர். உன் சுற்றத்தார் என் சுற்றத்தாரே. நீ நிர்ப்பயமாகவும் சுகமாகவும் இருக்கலாம்" என்றார். இது சகோதரத்வக் கட்டுப்பாட்டை நன்கு விளக்குகின்றது.

"சீதா பிராட்டியைத் தேடிப் பிடிக்க எனது சேனைகளை நாலாபக்கங்களிலும் அனுப்புவதற்குக் கார்காலம் கழிந்ததும் உம்மிடம் வருவேன்" என்று ஸ்ரீராமபிரானுக்கு வாக்களித்துச்சென்ற சுக்கிரீவன், அக்கார்காலங் கழிந்தும் வாக்களித்தபடி வரவில்லை. அப்போது ஸ்ரீராமபிரான், இலக்ஷ்மணரை யழைத்து "தம்பி! சுக்கிரீவன் நமக்குதவிபுரிய வருவதாகச் சொன்ன கெடு முடிந்தும் அவன் வராதிருக்கும் காரணம் தெரியவில்லை. நீ உடனேபோ யறிந்துவா" என்று சொல்லி அனுப்பினர். இலக்ஷ்மணரும் கோபாவேசராய் "இதோ அறிந்துவருகிறேன்" என்று புறப்பட்டார். இப்புறப்பாட்டைக் கண்ட ஸ்ரீராமபிரான் "இவன் நோக்கத்தைப் பார்த்தால் கிஷ்கிந்தையையே முற்றும் அழித்துவிடுவான்போ லிருக்கிறதே" என்று நினைத்து, அவரை மறுபடியுங் கூப்பிட்டு, "தம்பி! பிழை ஜீவரிடத்தில் குடிபுகுவது இயற்கை. அதுபற்றி அவர்களைக் கருணையின்றி வருத்துதல் கூடாது. நயபயத்தாலேயே கண்டிக்கவேண்டும். சுக்ரீவன் பெரும்பிழை யொன்றுஞ் செய்துவிடவில்லை. பின்னரலதை நீ நன்குணர்

*ஏதலன் - அயலான்; †அவற்கு - குகனுக்கு; ‡மாழை - அழகு; மடநோக்கி - நிர்த்தோஷமான பார்வையை யுடைய சீதாபிராட்டி.

வாய். "சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்னும்நீதியை மறவாதே. ஆயினும்,

" நஞ்ச மன்னவ ரைநலிந் தாலது
வஞ்ச மன்று மனுவழக் காதலால்
அஞ்சி லம்பதி லொன் றறியாதவன்
நெஞ்சில் நின்று நிலாவ நிறுத்து வாய் "

அடா! தம்பி! விஷத்துக்குச் சமானமானவரை வருத்துவது தப்பாகாது. அது மனுநீதியே.

" துர்சனரும் பொன்னும் துடியும் துரகதமும்
அச்சமற முன்னிற்கும் ஆயிழையும் — நச்சரவும்
கண்டித்த எள்ளும் கரும்பும் இளநீரும்
தண்டித்தார்க் கன்றோ சயம் "

என்று தருமநூல் கூறுகின்றது. சுக்கிரீவனோ 'அஞ்சிலம்பதி லொன்றறியாதவன்' அதாவது நிரக்ஷரக்குக்ஷி. (அஞ்சு+அம்பது+ஒன்று = 56 எழுத்து—இதில் ஒன்று மறியாதவன்) மந்திரியான மாருதியால் நடத்தப்படுபவன் ('ஐம்பது', 'அஞ்சு'- போலி). எழுத்துவாசனை அவனுக்கிருந்தால் 56-வது வருஷத்தின் பெயரையாவது அவன் மறப்பானா? அது துந்துபி அல்லவா? துர்துபி என்னும் அரக்கனது பெருத்த உடலைத் தூக்கி யெறியச் செய்து நமது பராக்கிரமத்தைச் சோதித்தறிந்தவனா யிற்றே. ஒருவேளை அவன் "நாம் மலைப் பிரதேசத்தில் வசிப்பதால் நம்மை இங்கு வந்து எவரும் ஒன்றுஞ் செய்யமுடியாது" என்று நினைத்திருக்கலாம். 'அஞ்சிலம்பதில்' அதாவது உலகிலுள்ள அழகிய மலைகளில் அவன் இக்கிஷ்கிந்தையைத் தவிர வேறெதை யறிந்திருப்பான். அறிந்திருந்தால் சொன்ன வாக்கினின்றுந் தவறுவானா? நல்லது அஸ்திர வித்தையிலாவது தேர்ந்தவனா? 'அஞ்சிலம்பதில்' அழகிய சில அஸ்திரங்களுள் — ஒன்றும் பிரயோகிக்கத் தெரியாதவன். கடைசியில் அவன் 'அஞ்சிலறியாதான் ஐம்பதிலுந்தானறியான்' என்கிற பழமொழிக் கொப்பானவனே. அவனை நாம் காப்பதாக வாக்களித்திருக்கிறோம். ஆகையால் நீ அவனைக் கடினமான தொந்தரைக்குட்படுத்தாமல் அவன் மனதிற் பதியும்படி வேண்டிய புத்திமதிகளைச் சொல்லி அழைத்துவா" என்றனர்.

சகோதரத்வம் பூண்டவர்க்குள் தவறு நேரின் அதைச் சாந்தமாகவே நீக்கிக்கொள்ளவேண்டுவது அன்னோர் கடமை என்பதை மேற் சொன்ன பாடல் தெரிவிக்கின்றது.

அண்ணனால் அநாதரிக்கப்பட்ட விபீஷணர் "உடன் பிறவா மாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கும்" என்று ஸ்ரீராமபிரானிடம் சரணாகதியானார். பண்டித சிரோமணியான ஆஞ்சநேயரைத் தவிர ஏனையோர் யாவரும் "இவன் நமது பகையாளியின் தம்பி. உளவறிந்துபோக இங்கு

வந்திருக்கிறான். இவனை நமது கூட்டத்திற் சேர்த்துக்கொண்டால் அது நமக்கே கெடுதியை யுண்டாக்கும். ஆதலால் இவனை உடனே அகற்றி விடவேண்டும்" என்று மொழிந்தனர். மாருதி மாத்திரம் "நான் பார்த்த வரையில் இவ் விபீஷணர் மிக்க தூய்மையும், தக்க வாய்மையும், மற்றுமுள்ள சுகுணங்களும் கொண்டவரென்றே தெரிந்துகொண்டேன். அடைக்கலம் புகுந்தோரை ஆதரிப்பதுதான் நமக்கழகு" என்றனர்.

ஸ்ரீராமபிரான், "ஆம். சரணடைந்தோரைத் தள்ளலாகாது. விரோதியாயினும் சரணம் என்று வந்தால் அவனை ஆதரிப்பதுதான் ஆண்மகனுக்கழகு. அவ்வாறு ஆதரிப்பதால் ஆதரித்தவனுக்குத் துன்பம் நேரிடினும் அது புகழாகவே முடியும்.

'உடைந்தவர்க் குதவானாயின் உள்ளதொன் றீயானாயின்
அடைந்தவர்க் கருளானாயின் அறம் என்னும் ஆண்மை என்னும்'

என்றன்றோ நூல்கள் முறையிடுகின்றன. ஆதலால் இவ்விபீஷணனை ஆதரிப்பதே நமக்குரியகடன்" என்று சொல்லி, விபீஷணரை முகமலர்ச்சியோடு நோக்கி, "சகோதரா! உனது தந்தையாரான சக்ரவர்த்தி நெடுங்காலம் புத்திரரின்றி மனக்கவலை கொண்டிருந்தார். மகரிஷிகளின் உதவியால் முடிவில் நான்கு புத்திரர்களைப் பெற்றெடுத்தார். அந்நால்வரில் நானும் இலக்ஷ்மணனும் அவருடைய கட்டளையால் கானகம் வர நேர்ந்தது. இங்கு எங்களுக்குச் சகோதரப் பெருக்கம் விர்த்தியாய் அவருக்குப் புத்திரபாக்கியத்தை அதிகரிக்கச் செய்தது. எப்படி யென்றால்,

"குகனொடும் ஐவரானோம் முன்பு பின் *குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானோம் எம்†முழை யன்பிற் போந்த
‡அகனமர் காதல் ஐய! நின்னொடும் எழுவரானோம்
புகலருங் கானந் தந்து புதல்வரிற் ¶பொலிந்தான் §உந்தை"

என்றார்.

குகனிடம் ஸ்ரீராமபிரான் வெளியிட்ட கருணைவிசேஷத்தை நினைத்துப் பிராட்டியும், பெருமூச்செறிந்து, "இவனே புருஷோத்தமன்" என்று கண்களினின்றும் நீரானது ஆறாய்ப்பெருக,

"ஆழநீர்க் கங்கை *யம்பி †கடாவிய
ஏழை வேடனுக் கெம்பியுன் றம்பிநீ
தோழன் நங்கை கொழுந்தி யெனச் சொன்ன
ஆழி நண்பினை யுன்னி ‡யழுங்குவாள்"

என்பதும் கருதற்பாலதே.

---

[*குன்று சூழ்வான் மகன் - சூரிய புத்திரரான சுக்ரீவன். †உழை - இடம். ‡அகனமர் காதல் - மனப்பூர்வமான அன்பு. ¶பொலிந்தான் - சிறந்தான். §உந்தை - உனது தகப்பன்.]

[*படகு; †செலுத்திய; ‡வருந்துவாள்.]

இங்கு கர்ண பரம்பரையாக வழங்கும் மற்றோரதிசயமும் நோக்கத் தக்கதே. அதாவது இராவண சம்மாரமானபின், ஸ்ரீராமபிரான் அயோத்திக்கெழுந்தருளி இராஜ கோலத்துடன் பரதலக்ஷ்மண சீதா சமேதராய் மந்திரி முதலிய மேதாவியர் சூழக் கொலுவீற்றிருக்கும் நாள்களில் ஒரு நாள், ஸ்ரீராமபிரானைக் குழந்தைப் பருவத்தில், வீதியில் விளையாடி வந்த போது, கண்டு களித்து வந்த ஒருஏழை மனிதன், அவர் காட்டுக்குப்போனதுகேட்டு அதுமுதல் அழுதகண்ணுஞ் சிந்தியமூக்குமா யிருந்தவன், அவர் திரும்பிவந்து அரசுபுரிகிறார் என்பதறிந்து, அன்பால் மூடப்பட்டவனாய், இன்னதுதான் செய்கிறோமென்கிற நினைவு யின்றி, ஓரே ஒட்டமாக ஓடிவந்து "அடா! இராமா! என்கண்ணே! எப்போதடா திரும்பி வந்தாய்"என்று சொல்லி, ஓவென்று புலம்பியவண்ணம் அவரைத் தழுவிக் கொண்டான்.

ஸ்ரீராமபிரானும், அவனுடைய அசுத்தமான உடை முதலியவற்றையுங் கவனியாது, சிம்மாதனத்தினின்றும் இறங்கி, அவனை இறுகத் தழுவிக்கொண்டு தாமும் அழத் தொடங்கினார். இது அங்குள்ளார் எல்லோர்க்கும் பெருவியப்பைத்தரா நின்றது. கடைசியில் அந்த மனிதன் தன் அழுகையை நிறுத்தித் தன் அழுக்கு வஸ்திரத்தால் ஸ்ரீராமபிரானுடைய கண்களைத் துடைத்து,"அப்பா! அழாதே" என்று தேற்றும் வரையில் அவர் அழுதபடியே யிருந்தார். அழுது ஓய்ந்ததும் சபையைப்பார்த்து ஸ்ரீராமபிரான் "காலஞ்சென்ற எனது தந்தையை இன்று கண்டேன்" என்றார். எப்படி யெனில்'அடா'என்று தம்மை யழைப்பவர் தமது தந்தையைத்தவிர வேறெவருமிலர் என்பதை விளக்கிக்காட்டினார். பிறகு அந்த ஏழை மனிதனை அன்புடன் உபசரித்தார். இவ்வாறன்றோ நாம் சகோதரத்வம் பாராட்டவேண்டும். "காலத்துக் கேற்ற கோலம் என்கிறபடி நமது நாயகன் குகன் விஷயத்தில் பேரன்புகாட்டி நடந்தார். இராஜ கோலத்துடன் இருக்கும்போது குகன் போன்ற ஏழைகளை இப்படி ஆதரிப்பாரா? என்று சந்தேகங்கொண்டிருந்த பிராட்டியும் குகனிலும் இழிவான ஒருவன் திறத்தில் அவர் நடந்துகொண்ட தன்மையைக் கண்டு வெட்கி, ஆண் மகனாய்ப் பிறந்தவனுக்குப் பகவானுக்கிருக்குங் குணங்கள்போல * சுவாமித்வம்; † சௌலப்பியம், ‡ சௌசீல்யம், ¶ வாத்ஸல்யம் என்கிற நான்கு குணங்களும் இருந்தாற்றான் அவன் பூரண மனிதனாய் உலகைத்தைச் சகோதர பாவனையில் நடத்த முடியும் என்று திருப்தியடைந்தாள்.

ஸ்ரீராமபிரான் தாம் சிநேகிக்க நேர்ந்தவர்களிடம் சகோதரத்வம் பாராட்டினார். அப்போது அவர்களிடம் தம்மை வேறுபடுத்திக்கொள்

---

* அரிய காரியத்தையும் செய்து முடிக்கும் ஆற்றல். † எல்லோரிடத்திலும் வித்தியாசமின்றிக் கலத்தல். ‡ சீலம் பாராட்டாமை. ¶ பசுவும் கன்றும்போ லிருத்தல்.

னாது அவர்களைத் தமது இரத்தக்கலப்பினர்போலவே பாவித்து உள்ளன் போடு மெய்ம்மை விளங்க வார்த்தை யாடினர். துன்பம் நேர்ந்தபோது அவர்களுக்கு அர்த உரிமையோடு உதவுவதைச் செயலிலுங் காட்டினர். இதுபோலவே நாமும் நடக்க முயல்வோமாயின் நாம் பாராட்டும் சகோத ரத்வமும் உண்மைச் சகோதரத்வமாகும். அது எவ்வித மனஸ்தாபத்திற் கும் இடந்தராமல் மனோற்சாகத்தை அபிவிர்த்தி செய்யும். இப்படி மனக் களிப்பிற்கு ஆதாரமான சகோதரத்வ பாவனையை நாம் கைப்பற்ற நமக்கு நல்ல ஞானத்தையும் மனோதிடத்தையும் கொடுத்தருளும்படி பகவானைப் பிரார்த்திப்போமாக. சுபம். சுபம்.

ம. இராஜகோபால பிள்ளை,
கோமளேசுவரன் பேட்டை.

## யானைக்கால் வியாதியும், அதைத் தடுப்பதும்.

இவ்வசாத்திய வியாதிசம்பவம் நமது நாட்டில் விசேஷமாய் பரவி விட்டது. ஜனசமூகம் நிறைந்ததும் வடிகால் வசதியற்ற குளம் குட்டை கள் உள்ளதுமான சாக்கடை, மோரி, கக்கூஸ் முதலியவைகளுள்ள நகரங் களிலேயே இவ்வியாதி சம்பவம் விசேஷமாய் உண்டாகிறது.

நகரம் அருகாமை யல்லாத குக்கிராமங்களில் இவ்வியாதி சம்பவம் உண்டாகிறதில்லை. ஆகவே முற்காலத்திய வைத்திய சாஸ்திரங்களிலும் இவ்வியாதியின் நிதானம், சிகிச்சைகளையும் சிறிது விவரித்திருக்கினும், விசேஷ சம்பவம் இருந்ததில்லை என்றே தெரிகிறது.

மேல்கண்ட சாக்கடை, மோரி, முதலிய சுத்தமான கசமாலங் களில் ஜனிக்கும் விஷத்தன்மையுடைய கொசுக்கடி, மண்உணி, மண் அட்டை முதலிய கடி விஷங்களும் மேற்சொல்லிய கசமாலங்களின் துர்க் கந்தமான விஷக் காற்றுகளின் வழியாகவும் தேகத்தில் பரிசுத்த உதிரத் தில் மேல்படி விஷம் கலந்த கொடுமையால் முறிவுபெற்ற உதிர ஊன்கள் தேகத்தின் கீழ்நோக்கிய அங்கங்களான முன்கால், முன்கை, பீஜம், முத லியவற்றில் நாளடைவில் நாளங்களின் வழியே சென்று தங்குவதினுல் சிறிது சிறிதாய் வீக்கமுற்று, அதைத்துப் பருத்து அவ்வுணர்ச்சி யற்ற ஊனிடையே, உணர்ச்சியற்ற ஓர்வித தசை வளர்ந்து பருத்து சுமைபோ லாகி விடுகிறது.

இவ்வியாதி உற்பவிக்குமுன் உண்டாகும் குறிகளில் சிலவற்றை ஈண்டு கூறுவாம்.

மலபந்தம், இடுப்பில்வலி, துடையின் முன்பக்கமாய் கீழ்நோக்கி முழங்கால்வரை அல்லது சற்று கீழ்நோக்கியும் கடைக்காலிலும் மேற் சொல்லிய விஷ ஊன்கள் சுத்த இரத்த நரம்பில் கலந்து கீழ் நோக்கிப் போவதால் அவ்வகை நரம்பு தடித்து, கடுகடுத்துச் சகிக்கொணு வலி எடுக் கும்.

சிலருக்கு தொடையிலும், கெண்டைக்காலிலும் வேதனை எடுக்கும். அதினின்றுங் கணைக்காலில் சுளுக்குப்போன்ற வலியும் சிறிது வீக்கமும் உண்டாகும். சுளுக்கென்றும், வாயுவென்றும் பத்து முதலிய மேல் பூச்சு மருந்துகள் உபயோகிப்பார்கள். வலிமட்டும் சிறிது குறைந்தாலும், வீக்கம் மட்டும் குறைவதில்லை. சிலருக்குத் தொடைச்சந்தில் நெரிகட்டும். மேல்கண்ட விஷக் கொடுமையால் வாதபித்த ஐயங்கள் கோளாறடைந்து தாங்கொணாச் சுரம் உண்டாகி இரண்டொரு நாளில் குறைந்துவிடும்.

அவ்வகைச் சுரம் சிலருக்கு அடிக்கடி உண்டாகும். சிலருக்குச் சுரம் உண்டாவதுமில்லை. இவ்வாதபித்தாசயங்கள் கோளாறடையும்படியான மேல்கண்ட விஷத்தன்மையாலும் பித்தாசயமும், மூளையும் விகல்பமடைந்து, பயித்தியம் அல்லது உன்மத்தரோகம் சம்பவித்துத் திரியும். சில படிப்பாளிகளான மேதாவிகளும்கூட, நகரங்களில் நடமாடுவதை நாம் காண்கிறோம் இவையும் அக்கொடுமையால் விளைகிறதென்றே எண்ணப்படுகிறது. இவ் வியாதியஸ்தர்கள் ஆரம்பத்திலேயே சரியான சிகிச்சை செய்துகொள்ளாமல் கண்ணில் கண்ட இலை தழைகளை அவித்துக் காலில் கட்டுவதும், பத்துமுதலிய மேல்பூச்சு மருந்துகளை உபயோகித்து, குளிக்கப்போயும் சேற்றைப் பூசிக்கொள்வதுபோல் தேகத்தை சிலர் புண்படுத்திக்கொள்கிறார்கள். சாதாரண வாயுவென்றும், சுளுக்கென்றும் இவர்கள் மதித்துச் செய்யும் பரிகாரங்களெல்லாம் வீண் பிரமையே யாகும்.

சிலர் காலில் கம்பளியைச் சுற்றிக்கொள்கிறார்கள். அதினாலொன்றும் சுகமில்லை. மாசம் இரண்டு கஜம் நீளமான கம்பளிதான் தேவை.

இலகு விரேசன மருந்துகள் அடிக்கடி சாப்பிடலாம்.

தமிழ் முறையாகச் சரியான பக்குவமாகச் செய்த வல்லாதி மருந்துகள் சாப்பிடலாம். வான்மெழுகு அல்லது வாலை ரஸமெழுகை பத்தியமாயும், பத்தியமின்றி நீடித்தும் சாப்பிடலாம். யானைக்கால் தீர லேகியம் ஒன்று புலிப்பாணியர் வைத்திய நூலில் சொல்லியிருக்கிறது. அதைச் சரியான முறையாகவும் நம்பிக்கையாகவும் சிலநாள் பொறுமையாயும் சாப்பிடலாம். 15-நாளைக்குமேல் குணம் காட்டும்.

தசாவதாரமாத்திரையும் சீந்தில் கொடி கஷாயமும் சுமார் 3-மாசத்துக்குக் குறையாமல் சாப்பிட்டு வந்தால் குணம் வரும். எல்லாம் நம்பிக்கையாயும் அவசரமன்னியில் பொறுமையுடன் சாப்பிட்டு வந்தால் குணம் காணலாம்.

கடுக்காயை பசு மூத்திரத்தில் ஊரவைத்து, உலர்த்தி இந்தப்படி இரண்டு மூன்று தடவை செய்து வைத்துக்கொண்டு, மாசத்தில் ஒரு நாள் அல்லது இரண்டொள் 1 கடுக்காயை ¼ சேர் பசுமூத்திரத்தில் அரைத்துக்

குழப்பி யருந்தலாம். (பத்தியம்) இந்தப்படி சிலநாள் செய்துவர குணம் உண்டாகும்.

தனியாக சீந்தில் கொடி கஷாயத்தில் மிளகு பொடி அல்லது அரிசி திப்பிலி பொடி சேர்த்து காலைதோறும் ½ சேர் அளவு வீதம் சாப்பிட்டு வந்தால் மூன்று மாதத்தில் குணம் தெரியும். சுயானுபவம்.

G. கண்ணுசாமி பிள்ளை,
ஸ்ரீ ஷண்முகானந்த தர்ம வைத்தியாலயம், திருவாரூர்.

---

## மாதர் நீதி மஞ்சரி.

### முன்னுரை

பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்யாசம் என மக்களாவார் ஆசிரயித்திருக்கவேண்டிய நிலைகள் நான்கு. அவற்றுள், கிருகஸ்தாச்சிரமிகளே ஏனைய மூவரும் தங்கள் தங்கள் நிலைமையில் தவறாதிருக்க உதவுகின்றோராகலின், கிருகஸ்தாச்சிரமமே சாலச் சிறப்புடையதென்பது ஆன்றோர் கொள்கை. இதனை இல்லறமென்றும் இயம்பலாம். இல்லறமாவது, அன்புள்ள ஆடவனும் ஸ்திரீயும் விவாக மூலம் கணவனும் மனைவியுமாக இருந்து அறநெறிவழாது ஒழுகலேயாம்.

இரண்டு கண்களும் கூடியே ஒரு பொருளைப் பார்த்தல்போல, அவ்விருவரும் பரஸ்பரம் அன்பும் ஒற்றுமையுமுடையவர்களாய் இல்லிற்குரிய காரியங்களை நடத்தவேண்டும். அதற்குரிய விதிகள் பல. அங்ஙனம் தங்கள் கடமையை யறிந்து அந்நிலையில் நில்லாது தவறி, மாறுபட்ட மனமுடையவர்களாயின் அவ்வில்லறம் மிக்க துன்பத்தையே விளைக்கும். நிலை தவறின எப்பொருளும் இழிவடையுமன்றோ?

புருடர் வெளி வியவகாரஸ்தராயும், மாதர் வீட்டுக் காரியஸ்தராகவுமிருப்பதால், அம்மாதரே இல்லறநெறிக்குப் பெரும் பொறுப்பாளராயிருக்கின்றனர். இல், இல்லாள், மனை, மனைவி, மனையாட்டி, கிருஹிணி முதலிய பெயர்கள் அவர்களுக்கே சிறப்பாக அமைந்திருத்தலை ஆராயின், மாதர்கள் குடும்ப நிர்வாகத்தில் எவ்வளவு பொறுப்புள்ளவர்களாயிருக்கின்றனரென்பது இனிது விளங்கும். ஆகையால் மாதர் பொறுமை, அடக்கம், அன்பு முதலிய பொதுக் குணங்களையும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நால்வகைச் சிறப்புக் குணங்களையும் பெற்றிருத்தலவசியம். அதற்கு அவர்கள் தங்கள் கடமைகளைச் செவ்வனே யுணரவேண்டும். ஆன்ற கல்வியும் அனுபவமுமின்றேல் அக்கடமைகளை யறிய வியலாது. எத்தொழிலாளருக்கும் தத்தம் தொழிலுக்கேற்ற கல்வியும் அனுபவமு மின்றியமையாதன. உதாரணமாக, ஓர் வைத்தியரை எடுத்துக் கொள்வோம். அவர் தம் தொழிலுக்கேற்ற சாஸ்திரங்களை நன்றாய்க் கற்கவேண்டியதோடு, பல்வேறிடங்களிலுள்ள வைத்திய சாஸ்திர நிபுணர்

கள் செய்துள்ள அரிய பெரிய காரியங்களை யெல்லாம் கிரந்தங்கள் வாயிலாக ஆராய்ந்து, இன்னின்னார் இன்னின்ன முறைகளைக் கையாண்டதால் இன்னின்ன பலன் பெற்றனர், இன்னின்ன முறைகளிற் றவறியதால் பயன் பெறாதொழிந்தனரென்று அறியவேண்டிய அனுபவத்தையும் அடைதல் அத்தியாவசியம்.

நமது பெண்கள் கல்வியில் எவ்வித நிலைமையிலிருக்கின்றன ரென்பதைக் கூறவேண்டிய தில்லை. கொடுக்கப்படும் சிறிது கல்வியும் 'இல்லாதிருந்தால் நலமா யிருக்கும்' என்னலாம்படி யிருக்கிறது. இவ்வாறு பல வகைக் காரணங்களால் நமது மாதர் தங்கள் கடமைகளை யுணர்ந்து அந்நெறியில் நிற்கக்கூடாதவர்களாய் விட்டனர். கற்பு என்பதைக் காதிலும் கேட்டறிவதற்கில்லை. இது எத்துணை விசனிக்கத்தக்க விஷயம்.

ஆகையால், எனது சகோதரிகளின் நிமித்தம் இம் 'மாதர் நீதிமஞ்சரி'யின் வாயிலாக, அவர்களுடைய கடமைகளையும் பொறுப்புக்களையும் செவ்வையாக விளக்கிக்காட்டவேண்டுமென ஓர் விருப்ப மெமக்குள் ளுதித்ததாகலின் அதற்கிசைந்து இதை எழுதத் துணிந்தனம்.

அறிவினுக் கறிவாகி எமக்கு இவ் வெண்ணத்தைத் தந்து எழுதுந் திறமையும் சிறிதளித்த எல்லாம் வல்ல இறைவன் இதை இனி முடித் தருளுமாறும் இறைஞ்சுவோமாக.

'பலனை எதிர்பாராது செய்வது நம் கடமை. பலன் தருவது பராபரன் கடமை'

திரௌபதியும், சத்திய பாமையும்.

ஆண்டவனருளைப் பெற்ற பாண்டவர் தீண்டாத கற்புடைய திரௌபதியுடன் துரியோதனன் ஏற்பாட்டின்படி வனவாசஞ் செய்துகொண்டிருந்தார்கள். பதினொன்றும் வருஷம் காமிய வனத்தில் தங்கி யிருந்தனர். அப்போது ஸ்ரீகிருஷ்ணர் பகவான் அவர்களைப் பார்க்க விரும்பி, துவாரகையினின்றும் பிரயாணப்பட்டார். அதை யறிந்த சத்தியபாமை தானும் கூட வருவதாகக் கூறினாள். நல்லதென்று சுவாமியானவர் சத்தியபாமையை யழைத்துக்கொண்டு காமியவனம்போய் பாண்டவர்களைக் கண்டார். பகவானைக் கண்ட பாண்டவர்கள் எதிர் கொண்டுவந்து தெண்டனிட்டு அநேக உபசாரங்கள் செய்து அழைத்துப் போனார்கள். சத்தியபாமை திரௌபதியிடஞ் சென்றாள். திரௌபதியும் சத்தியபாமையை அன்புடன் தழுவி உட்காரவைத்து க்ஷேமலாபங்களை விசாரித்துக்கொண்டிருந்தாள். அப்போது சத்தியபாமை திரௌபதியைப் பார்த்து, "அம்மா! நான் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். அதாவது,

"அண்ணி! இந்த உலகத்தில் ஒரு ஸ்திரீயானவள் தன் புருஷனைத் திருப்தி செய்வது மிகக் கஷ்டமாயிருக்கிறது. அவள் எவ்வளவுதான் நியத்தோடு நடந்துகொண்டாலும், அக்கணவன் அவளைக் கோபிக்

கிறான்; திட்டுகிறான்; அடிக்கிறான்; சில சமயங்களில் வீட்டை விட்டுத் துறத்தவும் பார்க்கிறான். 'ஐயோ என் விவாகம் செய்துகொண்டேன்!' என்று தன்னைத்தானே நொந்துகொள்ளுகிறான். பிறமாதர்களிடத்தில் ஆசை கொள்ளுகிறான். எல்லா வீடுகளிலும் இந்தக் கஷ்டமாகவே யிருக்கிறது. பூவும் மணமும்போல இருக்கவேண்டிய கணவனும் மனைவியும் நாயும் பூனையும்போல் இருக்கிறார்கள். வேறொன்றும் வேண்டாம். உன் அண்ணாவையே பார். அவரைத் திருப்திசெய்ய எவ்வளவோ பாடு படுகிறேன். முடியவில்லையே! இப்படி யிருக்க நீயோ ஐந்து கணவரை வைத்துக்கொண்டு எப்படி சமாளிக்கிறாயோ? மிக்க ஆச்சரியமா யிருக்கிறது. அவர்கள் உன் வார்த்தை மீறாமல் உன் சொற்படி நடந்தும், உன் மேல் மிக்க அன்புடையவர்களாகவு மிருக்கின்றார்களே. அப்படி யிருப்பதற்கு நீ அவர்களை எவ்வாறு வசப்படுத்துகிறாய்? ஏதாவது மருந்தின் வல்லமையா? மந்திர சக்தியா? வேறு தந்திர சாமர்த்தியமா? சொல்ல வேண்டும்'' என்று வினவினாள்.

திரௌபதி:—''அம்மா! சத்தியபாமா! நீ கேட்ட கேள்வி எனக்கு மிக்க அதிசயத்தை உண்டு பண்ணுகின்றது. நான் இதுவரையில் உனது விஷயத்தில் மிக்க கௌரவமான எண்ணங்கொண்டிருந்தேன். வேதங்களாலும் ரிஷிகளாலும் காணமுடியாத திருவடியை யுடைய தேவ தேவனாகிய கண்ணபிரானையே கணவனாகப் பெற்றிருக்கும் உன் பாக்கியமே மிக்க சிலாக்கியமும் யோக்கியமுமென் றெண்ணி யிருந்தேன். நீ இவ்விதம் சொல்வது தகாது. மருந்தும் மந்திரமும் விரும்பினாய். அது தாசி வேசிகளுடைய தொழிலாம். தங்கள் நாயகருக்கு மருந்தும் மந்திரமும் தேடும் பெண்கள் மீளா நரகத்திற்கே ஆளாவார்கள். அதனாலவர்களடையும் பயன் சிறிதுமில்லை. நோயும் தரித்திரமும் அவர்களைப் பீடிக்கும். இவ்விதம் பலவகை உபாயங்களால் நாயகரை வசப்படுத்த நினைக்கும் நாரியர் மிக்க கேவலமான நாய்களினுந் தாழ்ந்தவராவர்.

அம்மா! என் கணவர் என்னிடம் அன்பா யிருப்பதற்குக் காரணம் கூறுகிறேன் கேட்பாயாக. நான் என் கணவர் ஐவரையும் சாமான்ய புருஷர்களாக நினைக்காமல் ஐந்து தெய்வங்களாக நினைத்திருக்கின்றேன். 'குற்றமற்ற மனைவிக்குத் தன் கணவன் சொல்லைமீறி நடவாதிருத்தலே சிறந்த தவமும் தேவபூஜையும்' என்று வேதவிதி யிருப்பதனாலே, நான் அதையே முக்கியமாகக் கொண்டிருக்கிறேன். ஆகையால் எனக்கு வேறு தெய்வமும் தவமும் நோன்பும் தீர்த்தமும் க்ஷேத்திரமும் இல்லை. இதுவே கற்பின் லக்ஷணமும். நான் இவ்வாறு, 'எல்லாம் அவர்களே. அவர்களை விட வேறில்லை' யென நினைத்துத் திரிகரண சுத்தியாய் அவர்களுக்கு வேண்டியவைகளைக் குறைவறச்செய்து வருகின்றமையால், அவர்களும் என்னிடம் மாறாத விசுவாசம் வைத்தும் அந்நியஸ்திரீகளை விரும்பாமலு மிருக்கின்றார்கள். ஒருவேளை அவர்கள் பிறமாதரை இச்சித்தாலும்

நானும் அவர்களுக்குச் சகாயமாயிருந்து, அந்த ஸ்திரீகளுக்கு மிக்க உபசாரத்துடன் ஆடை ஆபரணங்களைக் கொடுத்தனுப்பி மரியாதை செய்வேன். இப்படிச் செய்வதால் கணவர், மனைவியர்மீது மிக்க அன்பு வைப்பதுடன் தங்கள் குற்றத்தையு முணர்ந்து அத்தகைய தொழிலில் பிரவேசிக்கமாட்டார்களென்பது நிச்சயம். அப்படி திருந்தாவிட்டாலும் மனைவியர்மீதுள்ள பிரியம் நீங்காமலிருக்குமல்லவா? அதுதானே மனைவியர்க்குத் தேவை! (அதைவிட வேறென்னவேண்டும் என்பது கருத்து.) அப்படிக்கின்றி நாம் கோபித்துக்கொண்டு அவர்களுடன் பேசாமலும் உணவளித்தல் முதலிய உபசாரங்களைச் செய்யாமலு மிருப்போமானால் அவர்கள் நம்மேல் வெறுப்புக்கொண்டு தாசிகள் வீடே கதியாய் அவ்விடத்திலேயே தங்கி விடுவார்கள். அப்பொழுது நாம் செய்வதென்ன? அதனால் வரும் லாபமென்ன? ஒன்றுமில்லை. ஆகையால் நாம் அவ்வாறு செய்யலாகாது.

இன்னமுங்கேள் சத்தியபாமா! காலமறிந்து வேளையறிந்து சமயமறிந்து தக்க விதமாகப் போஜனம் உடை படுக்கை முதலியவற்றை யமைப்பேன். எத்தனை வேலைக்காரர்களும் எத்தனை சமயற்காரர்களும் இருந்தாலும், நானே நேரிலிருந்து பார்த்து என் கையாரப் படைத்து அவர்களைச் சாப்பிடும்படி செய்தால் மாத்திரம் என் மனம் திருப்தியடையும். நமக்கிருக்கும் அக்கரை வேலைக்காரர்களுக் கிருக்குமோ? இருக்காது.

தவிர, 'கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி' என்பதுபோல், அவர்களுடைய கோபம் சந்தோஷம் பொறுமை தயாளம் இவைகளின் குறிப்பறிந்து, எந்தெந்த சமயத்தில் எவ்வெவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமோ அப்படி யெல்லாம் நடந்துகொள்ளுவேன். அவர்கள் கொலுவிற்கோ, வேட்டைக்கோ, யுத்தத்திற்கோ, நகரி சோதனைக்கோ புறப்படும்போது அததற்கு வேண்டிய ஆடை அணிகளா லலங்கரித்து, ஆயுதங்கள் வாகனங்கள் முதலியவற்றைச் சித்தப்படுத்தி வைப்பேன். மாமன் மாமிகளைக் குலதெய்வங்களைப்போலப் பாவித்து வேண்டிய பணிவிடைகள் புரிவேன்.

நான் என் புருஷர்களிடத்தி லிருக்கும்பொழுது நல்ல ஆடை ஆபரணங்களா லலங்கரித்துக்கொண்டு, வாசனைத் திரவியங்கள் பூசிக்கொண்டு, நறுமலர் தரித்து மலர்ந்த முகத்துட னிருப்பேன். அவர்கள் வீட்டிலில்லாத காலங்களிலும் நான் வெளியேபோக நேரிடும் பொழுதிலும் சாமான்யமாக அலங்காரமின்றி நாலுபேரைப்போ லிருப்பேன். சத்தியபாமா! இது உனக்கு ஆச்சரியமாயிருக்கும். ஏனெனில் சாதாரணமாக அநேகம் பெண்கள் நாயகருடன் வீட்டிலிருக்கும்போது தலைவிரி கோலமாய் அழுக்கடைந்த பழைய வுடை உடுத்து விகாரமாகக் காணப்படுவார்கள். வெளியில் புறப்படும்போதோ இரவல் வாங்கியாவது சிங்காரித்துக் கொண்டு வெளிப்படுவார்கள். அலங்காரம் யாருக்காக? அன்னியருக்காகவா? அன்னிய புருடர்கள் நம்மைப் பார்க்கும்போது என்ன பேசிக்

சொல்வார்கள்? பரிகசிப்பார்கள்; அவமானமாகப் பேசுவார்கள். சிலர் நம் கற்பைக் கெடுக்கவும் முயல்வார்களன்றோ? அப்படியில்லாமல் சாதாரணமாகப் புறப்பட்டால் யாருமே ஏறெடுத்துப் பார்க்கமாட்டார்களல்லவா? அது 'உடம்புக்குப் பால் குடிக்காமல் ஊருக்குக் குடிப்பது' போலல்லவோ ஆகும்.

சில சமயங்களில் என் கணவர்களிடம் சிநேகரைப்போல நடந்துகொள்வேன். மந்திரிகளைப்போல் நியாயங்களை எடுத்துச் சொல்லுவேன். சில சில சமயங்களில் வேலைக்காரர்களைப்போல் கடினமான வேலைகளைச் செய்வேன். வீட்டு வியவகாரங்களை அவர்கள் கவனியாதபடி எல்லாம் நானே, அவர்கள் செய்தால் எப்படி செய்வார்களோ அவ்வாறே செய்து முடிப்பேன். அதிகமாகச் சொல்லுவானேன். எந்தவிதம் நடந்தால் அவர்களுக்குச் சந்தோஷமும் சாந்தமும் சுகமும் இன்பமும் உண்டாகுமோ அவ்விதமெல்லாம் செய்வேன். இது தானம்மா என் வசிய முறை."

சத்தியபாமை:—"அண்ணி! நான் இதுவரையில் இவ்விஷயம் தெரியாமல் தாறுமாறாய் நடந்துகொண்டதுமன்றி உன்னையும் சாதாரணமாகவெண்ணிக் கேட்டேன். என்னை மன்னிக்கவேண்டும்."

திரௌபதி:—"சத்தியபாமா! இனிமேல் நான் சொன்ன பிரகாரம் நீயும் நடந்துகொண்டால் அதனாலுண்டாகும் பலனை நீயே அறிந்து சந்தோஷித்து மறுமுறை என்னைப் பார்க்கும்பொழுது என்னிடமே சொல்லிக் கொண்டாடப் போகிறாய்."

சத்தியபாமை:—"அண்ணி! தவறாமல் செய்வேன். அதோ உன் அண்ணா பாண்டவரிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு புறப்படுகிறார். நானும் போகவேண்டும். விடைகொடு. போய் வரட்டுமா?

திரௌபதி:—"அம்மா! சுகமாய்ப் போய்வா." (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (குரு)

(266-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிறகு நமது பரதகண்டத்திற்குக் கஷ்டகாலம் கிட்டியது. ஒரு சாரார்ரால் பிரமம் என்று புகழ்ந்து கொண்டாடப்பட்டகாலம் நிர்விசாரமாய்ச் சலனமற்று நிற்பினும், ஜீவாத்மாக்களுடைய கர்மத்தை யனுசரிக்கும் வியாதியை முன்னிட்டு மாறிக் காணப்படுவது அதனியல்பு. ஒரே தன்மையான ஒரு கூட்டத்தார்க்கும் ஒரு தேசத்தார்க்கும் நன்மையாகவும் ஏனையர்க்குத் தீமையாகவும் மாறிக் காணப்பட்டுப் பலனளிக்கு மியல்புள்ளது. ஆயினும் அது கர்மத்தைப்பொறுத்தே யாகின்றது. பரதகண்டவாசி

களுக்குத் தங்கள் குலாசார ஒழுக்கங்களில் அசிரத்தை யுண்டானதே யிந்த மாறுதலுக்கு முக்கிய காரணமாம். கர்மத்தில் அசிரத்தை யுண்டாகவே ஒழுக்கங்கள் பிறழ்ந்தன. அதனால் பலவகையான ஆசைகளுமுண்டாயின. இத்தருணத்தில் நாஸ்திகர்களும் சமண பௌத்தர்களும் பரவலாயினர். அவர்கள் உபதேசமே ஜனங்கள் மனதுக்கு இனிப்பாயிருந்தது. கலி பிறந்த மூவாயிர வருஷங்களுக்குப் பின்னரே இம்மாறுபாடுகள் தோன்றின.

பௌத்த மதத்தைச் சாக்கிய புத்தர் என்றவர் பரப்பினர்: விஷ்ணுவே ஒரு காரணார்த்தமாகப் பௌத்தராக அவதரித்ததாகவும் சரித்திரமுண்டு. எவ்வாற்றானும் ஒரு காலத்தில் பௌத்தமதம் நம் நாட்டில் அதிகமாகப் பரவி யிருந்தது. இங்கிருந்தே சீனா, ஜப்பான், திபேத் முதலிய நாடுகளுக்குக் கொண்டுபோகப்பட்டது.

வைதிகமதம் தலை யெடுக்கும்போது இந்த மதங்கள் ஒடுங்கி மறைந்து கிடக்கும். வைதிக மதத்தில் சிரத்தை குறையும்போது இம்மதங்கள் பிரபலப்படும். இந்தப் புறமதங்களேயன்றி வைதிகமதமே பல பிரிவுகளாகப் பிரிந்தது. அவற்றுள் சைவம், வைணவம், சாக்தேயம், பாசுபதமென்பனப் பிரதானம். சைவ வைணவங்களே யிப்போது மிகுதியாகக் காணப்படுகின்றன. இவ்விதக் குழப்பங்களாலே வைதிகத்தில் எல்லாருக்கும் சிரத்தை குறைந்து வந்ததனால் குரு சிஷ்ய பரம்பரையும் மாறுபடத் தொடங்கியது. குருமார்களுக்கு வேறு மார்க்கமில்லாமையால் சிஷ்யர்களிடத்தில் பொருளை அபேட்சிக்கத் தொடங்கினார்கள். அதனால் சிஷ்யர்களைக் கண்டித்துச் சிக்ஷித்து நடத்த முடியாமற் போயிற்று. சிஷ்யர்களும் பணம் கொடுப்பதனாலே தம்மை யுயர்வாகவும் குருவைத் தாழ்வாகவுங் கருதத் தொடங்கினார்கள். அந்நிய நாட்டுப் புதிய நாகரிகமும் கலந்துகொள்ளவே குருவை யொரு வேலைக்காரனாகவும் தங்களை எஜமானர்களாகவும் மதித்துக் குருவின்மேல் அதிகாரம் செலுத்தவும் தொடங்கினார்கள். குருமார்களும் சிஷ்யர்களுக்குப் பயந்து அடங்கி நடக்கலானார்கள். மானத்துக்குப் பயந்த சில கல்விமான்கள் குருத்தொழிலை வெறுத்து ஜீவனத்தை யுத்தேசித்து வெவ்வேறு தொழில்களிற் பிரவேசித்துவிட்டார்கள். இக்காரணங்களால் நியாயமான கல்விபோதனை சீர் குலைந்தது. அந்நிய நாகரிகமே மேலாயிற்று. குரு சிஷ்யர்கள் என்கிற பேரே மறையக் குயுக்தியும் குதர்க்க வாதமும் மிகுந்தன. ஒரு குருவினிடத்தில் பாடங்கேட்பது மிகவுங் குறைவாகக் காணப்பட்டது.

தற்காலத்தில் அச்சுக்கூடம் அதிகப்படவே புஸ்தகங்களும் ஏராளமாகப் பிரசுரமாயின. அந்தப் புஸ்தகங்களே பேருக்குக் குருவாயின. குருவின் பேர் சொல்வார் எவரையும் காணோம். நானே படித்துக் கல்வியில் தேர்ச்சி யடைந்தே னென்பதே பெருமையாகக் கொள்ளப்பட்டது. ஒரு குருவினிடத்தில் படித்துத் தெரிந்துகொண்டேன் என்றால் அது பெருங்

குறைவென்று கருதப்படுகிறது. தானே படித்த கல்விமான்களே ஏராளமாகக் காணப்படுகின்றனர். குரு முன்னிலையில் ஓதித் தெளிந்தவர்கள் மிகவும் சொற்பமாகவே காணப்படுகிறார்கள். அவர்கள் பொருளீட்டுந் தொழிலிற் பிரவேசித்திருப்பதினால் கல்வி போதிக்க அவகாசமில்லை. இதனால் உண்மையான கல்வியும் உபதேசமும் ஒழிந்துபோயின.

ஆயினும் நெறி தவறாதவர்களும், பக்திமான்களும், வைதிக சம்பிரதாய முணர்ந்தவர்களும் முற்றும் ஒழிந்து போகவில்லை. நீறுபூத்த நெருப்பைப்போலக் காலக் கொடுமைக்கஞ்சி மறைந்திருக்கிறார்கள். அவர்களை யாராய்ந்து தெரிந்துகொண்டு அவர்களுக்குப் பணிவிடைசெய்து மெய்யான கல்வியையும் உண்மை ஞானத்தையும், தெய்வ மகிமையையும் உணர்ந்துகொள்வது அறிஞர் கடமையாம். இவ்வாறு உணர்ந்துகொண்டாலன்றி உண்மை ஞானம் விளங்காது.

சத்தியம், ஞானம், சந்தோஷம், வெறுப்பின்மை, கருணை, போதிப்பதில் ஆவல், இந்தக் குணமுடையவர்களே குருவாக அடைவதற் குரியார். இந்த ஆறு குணங்களும் ஈசுவரனுக்குரிய குணங்களாம். ஆதலால் தெய்வ பக்தியுள்ள உண்மை ஞானிகளுக்கு இக்குணங்கள் உரியவைகளாம். அகண்டமாய், ஏகமாய், சர்வ வியாபகமாய், சர்வஞானமாய், நித்தியமாய், மனோவாக்குகளுக் கெட்டாததாய், உண்மையான ஞானிகளின் அறிவில் அறிவுருவாக விளங்குவதான ஏகரச பரம்பொருளைப் பிறருக்குபதேசிப்பது சிற்றறிவினராகிய மனிதர்களாலியலாது. அந்தப் பரப்பிரமத்தோடு ஏகமாய்க் கலந்து நிற்கும் மெய்ஞ்ஞானிகளே யுபதேசிக்கும் வல்லமையுடையவராவார். அந்தக் குருவும் பரப்பிரம்மமும் வேறான பொருள்களாகா. ஆதலால் சிஷ்யர்கள் குருவைப் பரமாத்மாவாகவேகருதி வழிபட வேண்டும். குணங்குறி கடந்த அந்தப் பரம்பொருளே மனித உருவங் கொண்டு குருவாக எழுந்தருளும் என்று கொள்ளும் பட்சத்தாரும் பலர் உளர். இவர்கள் தமது குருவையன்றி மற்ற எதனையும் வணங்குவதில்லை.

இதில் உண்மையிது. பல கோடி ஜன்மங்களிற் செய்த பூஜா பலத்தால் பரசிவனிடத்தில் உண்மையான பக்தி யுண்டாகும். அந்தப் பக்தியின் முதிர்ச்சியால் ஞானம் கிட்டும். அந்த ஞானத்தில் நிலைபெற்று நிற்பவர் அந்த ஞானாக்கினியால் மல மாயா கன்மங்களைத் தகித்து விடுவர். அதனால் அவர்களது கரணங்கள் எல்லாம் சிவகரணங்களாய்விடும். அவர்களும் பிரமத்தில் ஒடுங்கி நிற்பதினால் பிரமமே யாய்விடுவார்கள். அத்தகைய பெரியோரது அனுக்கிரகத்தினாலாகாதது ஒன்றுமில்லை. அவர்கள் தமது கடாட்சவீட்சண்யத்தினாலும், ஹஸ்த ஸ்பரிசத்தினாலும் திருவடிகளை முடிமேல் சூட்டுதலாலும் தமது சிஷ்யர்களுடைய மலமாயா கன்மங்களை நசிப்பித்து, அஞ்ஞானாந்தகாரந் தொலையுமாறு மெய்ஞ்ஞானத்தைக் கொடுத்தருள்வராதலால் அவர்களுக்கும் பரமாத்மாவுக்கும் வேறுபாடு

கிடையாது. வேருகக் கருதுகிறவன் பிறவிக்கடலைக் கரைகாணமாட்டான். இதுபற்றியே குரு, லிங்கம், சங்கமம் என்று மூன்றுவித சொரூபங்களை நூல்கள் விதித்தன. இவற்றுள் மனித வடிவாய் நின்று உபதேசிப்பவர் குரு. பாணலிங்கம், விக்கிரக சொரூபம், இவையே லிங்கம் தேவனடியாரே சங்கமர். இம்மூன்று சொரூபங்களையும் வணங்கி ஞானம் பெற்று முத்தி பெற்றவர் பலர். இவற்றுள் ஒவ்வொன்றைத் தனித்தனியே வணங்கி முத்தி பெற்றவர்கள் பலர். இவ்வாறு வழிபட்டு குரு பக்தியால் முக்தி பெற்றவர்களே நமது தேசத்திற் பிறந்த மகாத்மாக்கள்.

(தொடரும்.)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## சுக்குநீர் கியாழம்.

### திருப்பூர் வி. மகாலிங்கம் அவர்கள் கேட்டுக்கொண்ட பிரகாரம் மறுபடியும் எழுதலாயிற்று.

சுக்கின்மேல் உள்ள தோலில் ஓர்வித விஷ சத்து இருப்பதினல் தோல் சீவ வேண்டியது அவசியமா யிருக்கிறது அப்படி தோல் நீக்கிய சுக்குடன் பனைவெல்லமாவது அல்லது சர்க்கரையாவது சேர்த்து கியாழம் செய்தாவது அல்லது காப்பித்தூளைப்போல் தூள்செய்து வைத்துக் கொண்டு காப்பியைப் போலாவது உபயோகிக்கலாம். சோம்பல் உண்டாகும் காலத்தில் இந்த கியாழத்தை உபயோகித்தால் உடனே சோம்பலை நீக்குகிறது. சந்தோஷமில்லாத வேளைகளிலும், ஜலதோஷம் பற்றிய காலத்தும் தலை நோய் ஜுரம் உண்டாயிருக்கும் காலத்தும் இந்த சுக்குநீர் கியாழத்தை உபயோகிக்கலாம். இதனால் அநேக நன்மைகளும் இருக்கிறது. இந்தக் கியாழத்தை ஸ்நானம்செய்தவுடனும் அல்லது தினப் பிரதியும் உபயோக்கலாம். இதனல் ஜலதோஷம் ஜுரம் தொத்துவியாதி முதலியவைகள் அணுகவொட்டாமல் தடுக்கிறது. ஆதலால் இந்த சுக்குநீர் கியாழத்தை யாரும் உபயோகிக்க ஏதுவா யிருக்கிறது.

சுக்கு அறியாத கியாழமுண்டோ என்னும் வாக்கியம்போல் எல்லா கியாழத்திலும் சுக்கு முதல்காரணமாக இருப்பதினல் இந்த சுக்குநீர் கியாழம் மேலானதாக எண்ணப்படுகிறது.

மு. சு. வீராசாமி செட்டியார்,
பலசரக்கு மளிகை, வீரக்கல், திண்டுக்கல் போஸ்டு.

---

## பஞ்சாயத்து.

"பஞ்சாயத்து" என்ற பதம் "பஞ்ச" என்ற பதத்திலிருந்து வந்திருக்கின்றது. இது ஐந்துபேர் கூடியதோர் சபை எனப் பொருள்படும். ஓர் தெருவிலோ கிராமத்திலோ உள்ள மக்களின் சண்டை சச்சரவுக்களை

யும், குற்றங்களையும் விசாரித்துத் தண்டிக்கவோ அல்லது சீர்திருத்தவோ, இச்சபை ஏற்பட்டுள்ளது: இச்சபையின் கருத்து, அந்தக் கிராமத்திலுள்ள குற்றங்களைப் போக்கி நியாய பரிபாலனம் செய்வதேயாம்.

இத்தன்மைத்தாய பஞ்சாயத்தில் உரிமை வகிப்பதற்குக் கிராமத்திலுள்ளோர் செல்வமும், செல்வாக்கும், சத்தியமு முள்ளவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் தீர்ப்பிற்கு முழுதும் அடங்கி நடப்பர். கிராமத்தினுடைய முழுமையான பொருப்பும், இப்பஞ்சாயத்தாரிடத்து ஒப்பிவிக்கப்பட்டிருக்கின்றமையினால், பஞ்சாயத்தார் மிகவும் நல்லறிவு, நல்லொழுக்கம், நடுவுநிலைமை, சாதிமதவேறுபாடின்மை, சட்டதிட்ட வுணர்ச்சி, பழிபாவங்கட்கு அஞ்சுதல், தெய்வபக்தி முதலிய நற்குணங்களுடையவரா யிருத்தல் அவசியம். தீர்ப்பு செய்வதில் கடவுளை முன்னிலையாக நிறுத்தி, இரு கட்சியாரின் வாக்குமூலங்களையும் தெளிவுறக்கேட்டு, பாரபட்சமின்றி, சீர்தூக்கித் தீர்ப்புச் செய்யவேண்டும். இத்தன்மையுள்ளாரே பஞ்சாயத்தின் அவயவிகளா யிருக்க அருகராவர். இன்றேல் சரியான நியாயம் கிடைக்காததால், கட்சியினர் ஏமாற்றமடைந்து மனம் நொந்து உதிர்க்குங் கண்ணீரானது இவரையும் இவருடைய சுற்றத்தாரையும் சுற்றி நாசஞ்செய்யும்.

பஞ்சாயத்தின் பொருளையும், பஞ்சாயத்தாரின் தன்மையையும் பற்றி விவரித்த பின்னர், பஞ்சாயத்தினால் நாம் எய்தும் பயன் யாவை என்பதைப்பற்றி இங்கு கவனிப்பாம். கிராமங்களில் ஆங்காங்கே பஞ்சாயத்துக்களிருப்பின் அவ்வக்கிராமங்களில் சண்டை சச்சரவுகளும், கெடுதிகளும், அநியாயங்களும் குறையும். அவைகள் குறையவே, அமைதியும், நன்மையும், ஒற்றுமையும் ஏற்படும். அவைகள் ஏற்படவே, சமாதானமும், நம்பிக்கையும், வாய்மையும் தினகரனைப்போல் ஒளிவிட்டு விளங்கும். இவ்வாறின்றி நாம் தற்காலத்து நவீன நாகரீகமென்று சொல்லப்படுகின்ற அநாகரீகத்தில் தட்டுத்தடுமாறிப் பஞ்சாயத்துகள் ஏற்படுத்தாமல் நம் வழக்குகளைத் தற்காலத்து ஆங்கில நியாய சபைகளுக்குக் கொண்டுபோவதினால் நாம் மிகவும் கெடுதல்களை யடைகிறோம். முதலாவது அதிக பணத்தை விரையம் செய்யவேண்டி யிருக்கிறது. அவ்வளவு செல்வத்தைச் செலவிட்டாலும், வழக்கறிஞர்களது (வக்கீல்கள்) வீடுகளிற்போய், அவர்களுடைய சௌகரியத்தைப் பார்த்துக்கொண்டு அடிமைபோலிருக்கவேண்டி யிருக்கிறது. ஐயகோ! இதென்ன விபரீதம்! நம் கண்ணுக்கு முன்னால் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இவை யாவும் தெரிந்திருந்தும் அவ்வாறு செய்வது நம் அறியாத்தன்மையாகும். தொன்மை நாகரீகம் படைத்த நம் இந்தியர் இப்பொழுது இவ்வித இழிதொழிலும் செய்வரோ ! செலவு செய்தபோதிலும் நியாயமான தீர்ப்பு கிடைக்குமென்ற நிச்சயமில்லை. எனவே நமக்கும் நம் தாயத்தாருக்கும் அப்பணம் சேராமல், அந்நியர்களால் அடித்துக்கொண்டு போகப்படுகிறது.

மற்றும், நம் வழக்குகளை அந்நியரிடத்துக் கொண்டுபோவதால், அவர்கள் நம்மை மிகவும் இழிவாகவும், ஒற்றுமை யற்றவர்களென்றும் நினைப்பதற் கிடமாகிறது. இவ்விதமாக நாமே நம்மைக் கெடுத்துக் கொள்ளலாகுமோ? இது நமது அறியாமையே யாகும்.

தி. போ. மாணிக்கவாசகம், வரகநேரி.

குறிப்பு:—பூர்வீகத்திலிருந்து நம்நாட்டில் எல்லா விஷயங்களும் பஞ்சாயத்தாராலேயே நடைபெற்று வந்தது. நாட்டாண்மைக்காரர் என்பவர் அந்தப் பஞ்சாயத்து சபையில் தலைமை ஸ்தானத்தை வகிப்பர். கிராமங்களில் ஒரு கிராமத்திற்கு ஒரு பஞ்சாயத்து சபை யிருக்கும். நகரங்களில் வீதி அல்லது பேட்டைக்கு ஒரு பஞ்சாயத்துச் சபை யிருக்கும். பெருத்த விவகாரமா யிருந்தால் ஐந்து பேருக்குமேல், அங்குள்ளவர்களில் முதன்மையான இன்னும் சிலரும் சபையில் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள்.

நம் நாட்டார் சேர்ந்த அத்தகைய சபைகள் ஆங்காங்கு இருப்பதால் நமக்கு அனேக நன்மைகளுண்டு. அவற்றில் முக்கியமானவைகளை யீண்டு கூறுகிறோம்:—

1-வது — ஆங்கில நீதிச் சபைக்குச் செல்வதால் நேரிடும் பணச் செலவு இங்கில்லை. அங்கு சுத்த ஏழைக்கு நியாயம் பெற வழியே யில்லை. ஒரு ஏழையை யொருவன் அக்கிரமமாக அடித்துக் காதை யறுத்து விட்டான் என்று வைத்துக்கொள்வோம். அவன் பிராது கொடுக்கவே பணம் வேண்டும். அதற்குமேல் ஒரு நியாயவாதி (வக்கீல்) க்குப்பணம் கொடுத்து அமர்த்திக்கொள்ள வேண்டும்.

2-வது — இதற்குள்ளாகவே இரண்டொருதினங்கள் கழிந்துவிடும். பிராது தாக்கல் செய்தபின், நீதவான் விசாரணைக்கு நாள் குறிப்பார். அது 10 அல்லது 15 நாட்கள் கழிந்தபின்பாககூட விருக்கும். விசாரணை தொடங்கிய பின்பும் ஒரு நாளையில் விவகாரம் முடியாது. இதனால் தீர்ப்பு கூறுவதற்குள் பல நாட்கள் கழியும்.

இந்த ஆலசியத்தால் பிராதிக்கு வீண் செலவுகள் பல நேரிடும்.

3-வது மேற்கண்ட ஆலசியத்தால் வேறொரு பெருங்கெடுதியு மிருக்கிறது. அதாவது குற்றம் செய்தவன் சாட்சிகளைத் தன் வசப்படுத்திக் கொள்ளப் பூரண அவகாசமிருக்கிறது.

பிராதியின் வக்கீல் "சரியான சாக்ஷி ஒருவராவது வேண்டுமே; உனக்கு வேண்டியவர்கள் யாரேனுமிருந்தால் கொண்டுவா, நான் தயார் செய்து விடுகிறேன்" என்று கூறினால் அப்படியும் செய்யவேண்டியதே. ஆனால் இச்சாட்சி பொய்ச் சாட்சி யாதலால் குற்றவாளியின் வக்கீலுடைய குறுக்குக் கேள்விகளால் பயனற்றதாய்விடும்.

4-வது நியாயாதிபதிக்கு பிராதியாவது குற்றவாளியாவது சாட்சிகளாவது ஒருவரும் தெரியாது. வக்கீல்களோ தங்கள் தங்கள் கட்சிக்கு அநுகூலமாவதைமட்டுமே கருதி மனச்சாக்ஷி கூறுவதை யடியோடு தள்ளிவிட்டு மெய்யைப் பொய்யென்றும், பொய்யை மெய்யென்றும் நியாயாதிபதிக்கு நிரூபித்துக்காட்ட முயல்வார்கள். நியாயாதிபதி யென்ன செய்வார்? சட்டத்தைமட்டும் கவனித்து தம் மனதிற்குக் குற்றம் நடந்தது உண்மையே யென்று தெரிந்திருந்தாலும், "சரியான ருசுவில்லாததால் குற்றவாளியை விடுதலை செய்துவிட்டேன்" என்று தீர்ப்பளித்து விடுவார்.

பிரத்தியட்சத்தில் பிராதியின்காது அறுபட்டிருக்கிறதே, இக்குற்றவாளி நிரபராதியாயின் வேறு யார் இந்த அக்கிரமச் செய்கையைச் செய்தது? அந்த ஆளைக் கண்டுபிடித்து தண்டிக்கவேண்டுமெல்லவா? அதைப் பற்றிக் கேட்க ஆங்கில நீதியில் வழியில்லை.

நம் நாட்டுப் பஞ்சாயத்தார் முன் இக்குற்றச்சாட்டு கொண்டுவரப்பட்டால் மேற்கண்ட தொல்லைகளெல்லாம் நடைபெற மார்க்கமில்லை. பிராதிக்கும் குற்றவாளிக்கும் செலவேயில்லை. பிரயாணச் செலவாவது படிச் செலவாவது இல்லை. பிராதி வாயால் நடந்ததைக் கூறவேண்டியதே. அன்றே அல்லது மறுநாளே, கூடிய சீக்கிரத்தில், அதில் சம்பந்தப்பட்ட அனைவரும் பஞ்சாயத்தார் முன் வரவழைக்கப்பட்டு விசாரிக்கப்படுகிறார்கள். பஞ்சாயத்தார்களுக்கு அவர்களனைவரும் நன்றாகத் தெரியுமாதலால் அவர்கள் முன் பிராதியேனும், குற்றவாளி, சாட்சிகளேனும் பொய் கூறித் தப்ப முடியாது. சாட்சிகளைக் கெடுக்கவோ சமயமுமிராது. அப்படி இரகசியமாகச் செய்யவும் முடியாது.

இத்தகைய அனுகூலமான சந்தர்ப்பங்களால் தவறாது நியாயம் கிடைக்கும். இந்த உண்மையை யலக்ஷியம்செய்து நம்மவர் நீதிச்சபைகளுக்குப் பன்முறைசென்று அவதிப்பட்டுப் பணத்தை வீணாக்கிறைத்து நாட்டில் வறுமை யதிகரிக்கச்செய்வது நமது குற்றமேயாகும். இனியேனும் எச்சரிக்கை யடைந்து தங்கள் தங்கள் எல்லைக்குள் பஞ்சாயத்துச் சபைகளை யேற்படுத்திக்கொள்ள ஆண்டவன் அருள் புரிவாராக.

பத்திரிகாசிரியர்.

---

## விஷயதானம் புரிவோர்க்கு ஓர் அறிவிப்பு.

1. விஷயதானம் புரிவோர் ஒரு நல்ல விஷயத்தைப் பலரும் வாசித்துணர்ந்து பயனடையவேண்டுமென்ற நோக்கங்கொண்டே அவ்வாறு செய்கிறார்கள். ஆயினும், சிலர் தாம் வியாசம் வரையும் சக்தியுடைய அவ்வளவு கல்விமான் என்று பலரும் அறியவேண்டுமென்ற நோக்கங்கொண்டு அப்படிச் செய்வோரு முண்டு. அதாவது தமது பெயரால்

ஒரு வியாசம் வெளிவரின் அது ஒரு கௌரவமென வெண்ணுகிறார்கள். உண்மையான கல்வி யறிவுடையோர் கௌரவத்தையும் பெருமையையும் மதியார்கள் என்பது தெரிந்த விஷயமே.

2. தமது பத்திரிகைக்குச் சமயோசிதப்படி யுக்தமாகத் தோன்றும் வியாசங்களையே ஒரு பத்திரிகாசிரியர் தமது பத்திரிகையில் பிரசுரம் செய்வார். நாமும் அம்முறைப்படியே கூடியவரையில் நமது சஞ்சிகையில் வெளியிட்டு வருகிறோம்.

ஒரு வியாசத்தைப் பிரசுரிக்காமல் விடுப்பதற்குப் பலகாரணங்களுண்டு. அவற்றில் சிலவற்றை யீண்டு கூறுகிறோம்.

(அ) பத்திரிகையின் கொள்கைக்கு மாறான கொள்கை யடங்கியதா யிருத்தல்.

(ஆ) ஒரு வகுப்பார், ஒரு ஜாதியார் முதலியவர்களின் மனதைப் புண்படுத்தும் விஷயமடங்கியதா யிருத்தல்.

(இ) சமீபத்தில் வெளிவந்த விஷயமாகவே யிருத்தல்.

(ஈ) பயனற்ற அனாவசியமான சாமாசாரமா யிருத்தல்.

(உ) வீண் வாதத்தை கிளப்பக்கூடியதா யிருத்தல்.

(ஊ) அனாவசியமான கண்டனம் அல்லது மறுப்பு.

(எ) பாஷாஞானம் சற்றுமின்றி வரையப்பட்டிருத்தல்.

(ஏ) வாசிப்போர் மனதிற்கு விளங்காததா யிருத்தல்.

(ஐ) சத்தில்லாத வீண்கதையா யிருத்தல்.

(ஒ) ஒரு இடத்தில் நடந்ததும், பலர் மனதையும் கவரக்கூடாததுமான விஷயமாயிருத்தல்.

(க) கடிதத்தின் இரண்டு பக்கங்களிலும் வரைந்திருப்பது அல்லது விளங்காதபடி குறுக்கியோ கிறுக்கியோ வெழுதி யிருப்பது.

(ங) எழுதியனுப்புவோரின் பெயர் விலாசம் குறிக்கப்படாதிருத்தல்.

இத்தகைய பல காரணங்களிருப்பதால் பத்திரிகாசிரியர்கள் ஒரு வியாசத்தை வெளியிடாததற்குக் காரணம் கூறுவதில்லை. இதைப்பற்றி சஞ்சிகையில் முன்னமே யறிவித்திருக்கிறோம்.

அப்படி யிருந்தும் சிலர் "நான் அனுப்பிய விஷயத்தை வெளியிடாததற்குக்காரணம் தெரிவிக்கவேண்டும்" என்று பன்முறை எழுதுகிறார்கள். சிலர் "நான் எவ்வளவோ கஷ்டப்பட்டு எழுதி யனுப்பி யிருக்க அதை வெளியிடாதிருப்பது ஒழுங்கல்ல" என்றும், "என் வியாசம் அவ்வளவு குறைந்து விட்டதா, நீங்கள் பிரசுரிக்கும் மற்ற வியாசங்களெல்லாம் மட்டும் உயர்ந்தவைகளா" என்றும், "என் வியாசத்தைப் பிரசுரிக்காவிட்டால் நானும் என் நண்பர்களும் சஞ்சிகை வரவழைப்பதை நிறுத்தி விடுவோம்" என்றும், பலவாறு வரைகிறார்கள்.

இப்போது நாம் முடிவாகக் கூறுவதாவது:—

1. ஒரு வியாசம் பிரசுரிக்கப்படுவது அந்த வியாசத்தின் தகுதியையும் சமயோசிதத்தையும் கருதியேயன்றி மற்ற எக்காரணத்தையும் உத்தேசித்தல்லவென்பதை விஷயதானம் புரியும் நண்பர்கள் நன்கறியவேண்டும்.

2. ஒரு வியாசம் வெளியிடாததற்குக் காரணம் அறிவிக்கப்படமாட்டாது.

3. வியாசம் அனுப்பும்போதே "இதைப் பிரசுரிக்காவிடின் திருப்பியனுப்பவேண்டும்" என்று அறிவிக்கப்பட்டால் மட்டுமே அந்த வியாசம் திருப்பி யனுப்பப்படும். திருப்பியனுப்பத் தபால்பில்லைகளனுப்பவேண்டும். மற்றபடி வெளியிடப்படாத வியாசங்கள் திருப்பியனுப்பப்படமாட்டா.

பத்திரிகாசிரியர்.



## தனித்தமிழ்ப் பாதுகாப்பு.

தங்கள் அருமையான "ஆனந்தனில்" சென்ற கார்த்திகை மாத சஞ்சிகை 175-ம் பக்கத்தில், மேல் குறிப்பிட்ட வியாசத்தை வாசித்துப் பார்க்க நான் மிக களிப்புக்கொண்டேன். அதை யெழுதிய நாகை நீலாம்பிகை அம்மையாரும் கூடுமானவரையில் வடமொழிகளில்லாமலும் தமிழ்ச் சொற்களையே வழங்கி இருந்தாலும் "இலக்கணம்," "தெய்வம்" "காலம்," போன்ற சில ஆரிய மொழிகளை முழுதும் விலக்க முடியவில்லை போலும்! மேலும் தெலுங்கு பாஷை வடமொழி கலப்பில்லாமல் தனியே இருக்க முடியாதென்றும், தமிழிற்குத்தான் அப்படி முடியுமென்றும் வற்புறுத்தி இருக்கிறது. ஆனால் தெலுங்கு பாஷையும் நமது தமிழைப்போலவே தனித்திருக்க முடியுமாகையால்தான் அம்மாதிரிச் சில "சுத்த ஆந்திர" செய்யுள்களுமுண்டு. நிற்க வடமொழியைத் தெய்வ பாஷை யென்று சொல்லியது பொருந்தாவிட்டால், "தெய்வத்தமிழ்" என்று அம்மையாரே கூறுவதெப்படி? அம்மையார் சமஸ்கிருத பாஷையை "ஓசை இனிமை இல்லாதது" என்று சொன்னால் அதனால் தமிழுக்கு என்ன இனிமை அதிகமாக வந்துவிடும்? ஆரியர்கள் தமிழ்ச் சொற்களைக் கலந்து கொண்டே வந்தார்களென்று நம் அம்மையார் அபிப்ராயப்பட்டாலும் அம்மாதிரிச் சில மொழிகளேனும் அத்தாட்சியாக வெடுத்துக் காட்டி இருந்தால் நன்றாய் இருக்குமல்லவா? ஆனால் சாதாரணமாய் பார்க்கில் ஆரியம் கலப்பில்லாமல் தமிழ் எழுதுவதும் மிகவும் கடினம்தான். ஒளவையார் அருளிச்செய்த 109 ஆத்திசூடி நீதிவாக்கியங்களில் சுமார் 20 வாக்கியங்களில் ஆரிய பதங்கள் கலக்கப்பட்டிருக்கின்றன. அம்மாதிரியே 91 கொன்றைவேந்தன் அடிகளிலும் ஏறத்தாழ 33 அடிகளில் வடமொழிகள் வந்துள.

திருவள்ளுவர் செய்த திருக்குறளிலும் வேண்டியவரையில் ஆரியம் கலக்கப்பட்டிருக்கிறது. முதல்குறளிலேயே, "ஆதி," "பகவன்," "உலகு," யென்னும் மூன்று வடமொழிச்சொற்கள் வந்திருக்கின்றன வல்லவா! ஆனால் சமஸ்கிருதம் கலப்பில்லாமலே சில தமிழ் நூல்கள் இல்லை யென்று நான் சொல்ல வரவில்லை. ஆனால் அப்படியேதான் சில தெலுங்கு கிரந்தங்களும் வடமொழிகள் நீங்கலாகத் தனித்திருக்கிற தென்பதை நான் ஈண்டு வற்புறுத்துகிறேன். சென்னை தினசரி "ஹிந்து" என்னும் ஆங்கில பத்திரிக்கையில் சில பண்டிதர்கள் ஆரிய திராவிட சண்டையை நடத்திக்கொண் டிருப்பதை நான் படித்து மிக நொந்தேன். காலம் சென்ற ஸ்ரீமான் சுவாமி விவேகானந்தரும் அம்மாதிரியே ஆரிய திராவிட விவாதம் குழந்தைகள் சண்டைபோல் அறியாமையால்தான் நடைபெறு மென்றார்! ஆகையால் நாம்எல்லோரும் சமமாகவும் சகோதரபாவத்துடனும் ஒன்றை உயர்த்தாமலும் மற்றொன்றைத்தாழ்த்தாமலும் அவரவர்களுடைய தாய்ப் பாஷைகளை அவரவர்கள் பயிற்சிசெய்ய முயலவேண்டு மென்பது தான், ஆனந்தனுடைய நண்பர்களுக்கு, என்னுடைய வேண்டுகோள்.

வா. உ. துரைசாமி ஐயர், வாலாஜாபேட்டை.

குறிப்பு:—தமிழ் ஒரு பூரண பாஷை யென்பதும், அன்னிய பாஷைக் கலப்பில்லாமலே நடை பெறக்கூடியதென்பதும் மறுக்கொணு விஷயங்களே. அவ்வாறே காலக்கிரமத்தில் ஆரியமொழிகள் பல கலந்துபோய் அவற்றிற்குரிய தமிழ் மொழிகள் வழங்கப்படாமற் போனமையின் இப்போது ஆரியக் கலப்பில்லாமல் தனித்தமிழ் எழுதுவது மிகவும் கடினமே என்பது பிரத்தியட்ச அனுபவத்தாலேயே தெரிகிறது. தமிழில் ஆரியம் கலந்திருப்பது போலவே, மகம்மதியர் அரசாண்ட காலத்தில் அனேகம் உர்து, ஹிந்துஸ்தானி மொழிகளும் கலந்துகொண் டிருக்கின்றன. ஜாகீர், ஹுஸுர், இலாகா, கலால், ரஸ்தா, கிஸ்தி, கஜானு, பசலி, ஜாமீன், தாசில், வக்கீல் முதலியவற்றைத் திருட்டாந்தமாகக் கூறலாம். இப்போது, கலக்டர், இன்ஸ்பெக்டர், வாரன்ட், ஸம்மன், டிக்ரீ முதலிய ஆங்கில மொழிகள் சாதாரணமாக வழங்கப்படுகின்றன. தமிழ் இராஜ பாஷையா யில்லாத தாலேயே இப்படி நேர்கின்றது.

ஆனல் கூடியவரையில் அன்னிய மொழிக் கலப்பில்லாமலே தமிழை நடைபெறச்செய்ய முயல்வதே நமது கடமையும் சிறப்புமாகும். தமிழ் ஆரியம் இவை யிரண்டற்கும் பரமசிவமே ஆசிரியர் என்று கூறப்பட்டவரையில் இரண்டும் தெய்வீக மொழிகளென்றே நாம் மதிக்கவேண்டுமென்றி இவற்றில் உயர்வு தாழ்வு கற்பிப்பது பரமசிவத்தையே குறை கூறியதாகு மென்பதே நமது கருத்து. இத்தகைய வாதத்தை யடியோடொழித்துத் தமிழை யாதரித்து அதைப் பூர்வீக நிலைமைக்குக் கொண்டுவர முயல்வதே சிறந்த செய்கையாகும். பத்திரிகாசிரியர்.

---

# பகவத்கீதை வசனம்.

(271-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஏ பார்த்த! எல்லார்க்கும் சுவர்க்காதிபலன்களா யிருப்பவன் நானே. இருவினை வழியே யாவரையும் போஷிப்பவனும், யாவர்க்கும் துக்க நிவர்த்தி யுண்டாக்குபவனும், யாவர்க்கும் பிரதிபலன் கோராமல் உபகாரம் செய்பவனும், எல்லாப் பொருள்கட்கும் காரணமா யிருப்பவனும் நானே.

பூமியின்கண்ணுள்ள நீரை இரவியாய் நின்று ஆக்ருஷணம் செய்கின்றவனும், மீண்டும் அதை மழையாக வருஷிக்கிறவனும் நானே. யார் எந்தத் தெய்வத்தைப் பூசித்தாலும் அவர்கள் என்னையே பூசிக்கிறார்கள். கர்மவயத்தராகிய மாந்தர் ஞான சொரூபியாய் ஏகமாய் உள்ள என்னையே (பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், அக்னி, ஆதித்தன் முதலிய) நானா ரூபங்களாகப்பாவித்து யாகாதிகளால் பூசிக்கிறார்கள். அத்தகையோர் சுவர்க்கலோகமடைந்து அங்குள்ள போகங்களைப் புசித்து, மறுபடி இம்மண்ணுலகில் ஜனித்து, இவ்வாறே இச்சையினால் மீண்டும் மீண்டும் பிறப்பதும் இறப்பதுமாய் அலைவர்.

[புண்ணிய கர்மங்களையும், யாகாதி யக்ஞங்களையும் செய்வோர் மேலுலக போகங்களால் அப்புண்ணிய கர்மபலன்களை யனுபவித்து மீண்டும் பிறப்பிறப்பை யடைவர் என்று பகவான் கூறியது சகாய புருடர்களைப்பற்றியே. அதாவது இச்சையோடு, பிரதிபலனை யெதிர்பார்த்துக் கருமங்களைச் செய்வோர்களைப்பற்றியே. இச்சையே பிறவிக்குக் காரணம். மனம் இச்சா சொரூபமே.]

இப்போது பகவான் தத்துவஞானிகளாகிய நிஷ்காம புருஷரைப் பற்றி அருளிச்செய்கின்றார்.

ஒளி பொருந்திய வேலாயுதத்தை யேந்திய அர்ச்சுனா! என்னையே அநந்யமாய்ச் சாக்ஷாத்கரித்துச் சதா சிந்திக்கும் துறவிகள் வேண்டிய யாவற்றையும் நானே உடனுக்குடன் கொடுத்து இரட்சிப்பேன்.

(எல்லார் வேண்டியவற்றையும் பகவானே யளிப்பவராயிருக்க ஈண்டு ஞானிகள் வேண்டுவனவற்றைப்பற்றி மட்டும் விசேஷித்துக் கூறுவதென்னை யெனின், மற்றப் பிராணிகள் வேண்டியவற்றிற்கு முன்னே பிரயத்தனத்தை யுண்டுபண்ணி அப்பிரயத்தன வாயிலாய் அளித்து இரக்ஷிக்கிறார். ஞானிக்கு வேண்டியவற்றைப் பிரயத்தனமின்றியே யளிக்கிறார். அதனாலே உடனுக்குடன் அளிக்கிறார் என்று கூறப்பட்டது.)

அர்ச்சுனன்:—பகவான்! தாங்கள் அருளியவற்றால் இந்திரன் முதலிய அநந்ய தேவதைகளும் உமது சொரூபமேயாகும். ஆதலின் அத் தேவதைகளை யுபாசிப்போர் உம்மையே யுபாசித்தவராவர். அவ்வாறிருக்க

அவர்களெல்லாம் மீண்டும் பிறப்பிறப்பை யடைவரென்பதும், தங்கள் பக்தர்கள் மட்டும் பிறவி யடையார் என்பதும் எவ்வாறு பொருத்தமாகும்?

ஏ பார்த்த! இந்திரன் முதலிய தேவர்களை வணங்குவோர் உண்மையில் என்னையே வணங்குகிறார்கள். ஆயினும் அவர்கள், அந்த தேவதைகள் எனது சொரூபமே என்பதை அறியாத அஞ்ஞானத்தோடு பொருந்தியிருந்தே அப்படி வணங்குகிறார்கள். ஆதலின், மீண்டும் ஜனிக்கிறார்கள்.

(ஞானியோ எல்லாம் என்னுடைய சொரூபமே யென்றும், என்னையன்றி வேறொன்றுமில்லை யென்றும் அறிவதாகிய ஞானத்தோடு என்னை வணங்குகிறானாதலின் பிறவியில்லாத நித்தியானந்தப் பேற்றை யடைகிறான்.)

(இந்திராதி தேவர்களைப் பூசிப்போர் பிறப்பிறப்பற்ற உயர் பதவியை யடையாரெனினும், அந்தந்த தேவதையின் ஆராதனைக்குரிய அற்பபயனை அவசியம் அடைவார்களென்றும், நேரே தம்மையே பூசிப்போருக்குரிய விசேடணத்தையும் அருளிச் செய்கின்றார்.)

இந்திரன் முதலிய தேவர்களை யாராதிப்போர் அத்தேவர்களே யாவார்கள். பிதிர்க்களை யாராதிப்போர் அப்பிதிர்க்களே யாவார்கள். யார் எந்தப் பூதங்களிடத்து அன்புவைத்து ஆராதிக்கிறார்களோ அவர்கள் அப்பூதங்களே யாவார்களெனின், என்னை யாராதிப்போர் நானே யாவார்களென்பதில் ஐயமுண்டோ? இல்லை.

(இப்போது பகவான் தனது பக்தர் அழியாத பலனை யடைவர் என்பதை யருளிச்செய்து, தமது ஆராதனம் கஷ்டமின்றென்பதையும் அதன் பிரகாரத்தையும் யருளிச் செய்கிறார்.)

ஏ பார்த்த! பத்திரம், புஷ்பம், பழம் முதலிய சுலபமாய்க் கிடைக்கத்தக்கவற்றைக்கொண்டு உள்ளன்போடு அரங்கிய பக்தியால் என்னை யாராதிக்கும் பரிசுத்த உள்ளமுடைய அன்பர்கள் எனக்கு அர்ப்பணம் செய்ததையே நான் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்வேன். ஆதலின் ஈவன, நோற்பன, உண்பனவாகிய, இவற்றையெல்லாம் அன்போடு எனக்கு அர்ப்பணம் செய்தால் பிரம்ம சொரூபியான என்னையே அடையலாகும்.

(இந்திராதி தேவதைகளை யாராதிப்பதிலும் யாகாதி எக்ஞங்களைச் செய்வதிலும், மிகு திரவியச் செலவும், தேகப்பிரயாசமும் உண்டு. ஈசுவரனை யாராதிப்பதற்கு மெய்யான பக்தி யொன்றே போதும். ஆதலின் தம்மைப் பூசிப்பதின் சுலபத்தைப் பகவான் அருளிச்செய்தார்.)

(பகவானே! உமது பக்தர்க்கு அநுக்கிரகம் செய்து மற்றையர்க்குச் செய்யாததால் தம்மிடம் இராகத்துவேஷாதிக விருப்பதாகவன்றோ எண்ணவேண்டுமென்ற அர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ பார்த்த! ஈசுவரனாகிய நான் எல்லாப் பிராணிகளிடத்தும் சமானமாகவே யிருப்பவனாதலின், எனக்கு யாவரும் சமானர்களே யன்றி இன்னவர் பிரியமானவர், இன்னவர் பிரியமில்லாதவர் என்ற வித்தியாசமில்லை. ஆயினும் எவன் என்னை இவ்வாறறிந்து, சர்வ கர்மபலன்களையும் எனக்கே அர்ப்பணம்செய்து என்னிடம் அநந்யபக்தி செலுத்துகிறானோ அவன் என்னிடத்துள்ளவனாவான். நானும் அவனிடத்திருந்து அவனுக்கு அநுக்கிரகம் செய்வேன்.

(அக்கினி, ஜலம், கற்பகவிருட்சம் இம் மூன்றும் இராகத்துவேஷமுடையவை யல்லவேனும் தம்மை யடைந்தவர்களது குளிரையும், வெப்பத்தையும், குறையையும் முறையே தவிர்ப்பதுபோல், ஈசனும் தம்மை யடைந்தவர்க்கருள் செய்வார். மற்றையர்க்குச் செய்வதில்லை.)

ஒருவன் உணவு முதற்கொண்டு எனக்கே அர்ப்பணம்செய்து, என்னிடத்தில் அநந்ய பக்தி புடையவனாயின், அவன் மிக்க துராசாரமுடையவனாயினும் சாதுவே யாவன். அவன் துராசாரமுடையவனா யிருந்திருப்பினும் என்னிடத்துவைத்த பக்திப் பிரபாவத்தால் எப்போதும் துன்பமில்லாது நித்தியமான நிரதிசயானந்த மோட்சத்தையே யடைவான் என்பது சத்தியமே.

வேளாண்மை, வாணிபம் முதலிய எத்தகைய தொழில் செய்பவராயினும், இன்னும் தாழ்ந்த தொழில் செய்பவராயினும், ஸ்திரீகளாயினும் என்னிடத்து அநந்ய பக்தி வைப்பராயின் அத்தகையோர் பந்தத்தினின்றும் விடுபட்டுப் பரகதி யடைவாரெனின், மன்னர்களும் பிராம்மணர்களும் என்னிடத்து வைத்த பக்தியால் பிறப்பிறப்பை யொழித்து முத்தியின்பமெய்துவர் என்று கூறவும் வேண்டுமோ? (தொடரும்)

சீடன்.

---

## ஆனந்தபோதினி வாழ்த்து.

### கலி வெண்பா.

a விண்ணளியா லோங்கும் விரிநீர் தனைபுடுத்த
மண்ணளிக்க வந்தநம் மக்களுக்கு — நண்ணிப் (1)
பழுத்தது போலும் b பயன்மரம் உள்ளூர்
வழுத்திறைவன் தண்ணருளை வாய்ந்தெண் — ணெழுத்தால் (2)
அறிவைப் பெருக்கி யறம்பொருளோ டின்பச்
c செறிவைச் சிறப்பிக்கச் செய்யும் — d நெறியுதவிப் (3)
பொற்குலத்தை e வெற்பிற் பொருந்துவிளக் கிற் f புரக்கும்
நற்குணத்தை நல்கி நயந்தருளும் — g அற்பும் (4)

---

a மேகத்தின் சகாயத்தால், b பலனைத்தரும் மரம், c மிகுதியை, d வழியைக் காட்டி, e மலைமேல் வைத்த தீபம்போல், f பாதுகாக்கும், g அன்பும்.

விருத்தியுற வைத்து வியனெற் றுமையைப்
பொருத்தியின்ப வாழ்விற் புகுத்தி — திருத்தமிடும் (5)
ஆனந்த போதினியே! ஆரேயுன் மாட்சிதனைத்
தேனுந்து சொற்களால் செப்பவல்லார்? — மானே! (6)
"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற" வென்று — தக்க (7)
திருவள் ளுவரான் மகற்சுட்டிச் செப்பும்
திருமொழிக்கு நீயுஞ் சிறந்தாய் — உரிமையுடன் (8)
உன்னை யளித்திவ் வுலகைமகிழ் விக்குமவன்
என்னதவஞ் செய்தானோ யாமறியேம் — அன்னவன்றான் (9)
நீர்வளஞ்சூழ் நல்ல நிலனும் பணியாளும்
ஏர்வளனு மாடு மெழில்வீடும் — பேர்விளங்கும் (10)
தொல்குலனு மன்பார்ந்த சுற்றமுநட் பும்புகழை
நல்கு நறுங்கல்வி நல்லறிவும் — பல்வளஞ்செய் (11)
பொன்னு மணியும் பொற்கலனுங் கற்புநலன்
மன்னு மனையு மகப்பேறுந் — தன்னித்திர்க் (12)
காபு ளொடுநோ யற்ற பெரும்வாழ்விக்
கேயவே வாழ்கவென வேத்தியே — நேயமுடன் (13)
இல்லையெனுஞ் சொல்லிவன்கண் இல்லையென வந்தவர்தந்
தொல்லைதவிர்த் தாதரிக்குந் தூயவனும் — வல்ல (14)
கடவுள்விசு வாசங் கடவாதான் இந்தப்
புடவியின்பாற் றக்கவரைப் போற்றுந் — திடமுடையான் (15)
ஆகவே யாகா தறையஇவன் சீரிவன்றான்
நாகவே டென்னு நறும்பதியான் — மோகவேள் (16)
போற்றுஞ்செவ் வேளின் புனிதமலர்த் தாள்மறவா
தேற்று மனதுடைய ஏந்தல்காண் — சாற்று முனி (17)
சாமியெனு நாமந் தழைக்கவடைந் தோன்கங்கை
யாமின் குலதிலகன் ஆண்டகையான் — நாமுரைக்க (18)
நீடூழி தன்பத் திரிகையுடன் நீணிலத்தில்
h பீடேன்றி வாழ்க பெரிது. (19)

ம. இராஜகோபால பிள்ளை,
கோமளேசுவரன் பேட்டை.

---

h கீர்த்தியை நிலைக்கச் செய்து.

# அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(278-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்தஸிங் "இப்போதொன்றும் கேட்காதே எல்லாம் பின்னால் தெரியும்" என்று கூறிவிட்டு கொல்லப்பட்டிருக்கும் சவத்தை நோக்கிச் சென்றான்.

ஆனந்தஸிங்கின் மனதில் இப்போது ஒரு புது யோசனை யுண்டாய் விட்டது. என்னவெனின் பவானிமேல் பெரிய சந்தேகம் தோன்றிவிட்டது. ஏனென்றால் இப்போது பெட்டியிலிருக்கும் சவம் அம்பாலிகை யல்லவென்று அவனுக்கு நன்றாய்த் தெரியும். அதிலிருப்பது வேறொரு கன்னிகையின் சவமென்றும் அவளுடைய கூந்தல்மட்டும் அம்பாலிகையின் கூந்தலைப்போலவே செழித்து நீண்டு வளர்ந்திருக்கிறதே யொழிய மற்றபடி உருவம் வேறு உருவமே யென்றும், அதோடு அவள் இறந்து ஒரு வாரத்திற் கதிகமாகி யிருக்கவேண்டுமென்றும் அவனுக்கு நன்றாய்த் தெரியும்.

பவானி தான் கூறியதை மறுத்து இப்போதிருக்கும் சவம் அம்பாலிகை யுடைய சவமே யென்று ஒரே பிடிவாதமாய்ச் சாதிக்கவே, "ஓகோ, இவள் கறுப்பண்ணனைச் சேர்ந்தவளே. இவள் செய்ததெல்லாம் பாசாங்கே. நம்மை யழைத்துப்போனதால் தங்கள் நோக்கப்படி காரியம் சித்தியாகவில்லை யென்றும், அதற்குமாறாய் நம்மால் உண்மை கண்டு பிடிக்கப்பட்டு தங்களுக்கே ஆபத்தாய் முடிந்தாலும் முடியுமென்றும் கறுப்பண்ணன் தெரிந்துகொண்டான். ஆகையால் நம்முடைய உளவுகளையும் யோசனைகளையும் தெரிந்து கொள்வதற்கும் இப்போது சவப் பெட்டியிலிருப்பது அம்பாலிகையின் உருவமே, அதாவது அம்பாலிகை யிறந்துபோனது உண்மையே யென்று நம்மை நம்பும்படி செய்யவும் எண்ணிக்கொண்டு இவளை நம்மிடம் அனுப்பி யிருக்கிறான். இவள் அப் பெண்பிறந்ததுமுதல் அவள் கூடவே யிருந்தவளானதால் இவள் நமது சார்பாய்ப் பேசுவதையும் அத்தேகம் அம்பாலிகையுடைய தென்று கூறுவதையும் நாம் நம்பி ஏமாந்து விடுவோமென்று எண்ணி யிந்த யோசனை செய்திருக்கிறார்கள்" என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டான்.

ஆனந்தஸிங் கொல்லப்பட்டவன் சவத்தருகில் சென்று அதைக் கீழே கிடத்திச் சோதித்தான். அதனுடைய உட்சட்டை கிழிக்கப்பட்டு இருதயத்திற்கு நேராய் ஒரு மெல்லிய ஈட்டியால் குத்தப்பட்டிருந்தது. ஆனந்தஸிங் அச்சவத்தை மிக்க அக்கரையோடும் கவனத்தோடும் சோதித்தான். அதில் அவன் தன் சாமார்த்தியத்தை யதிகமாய்க் காட்டினான். அந்த விவரம் முழுமையும் பின்னால் போகப்போக விளங்கும்.

அவன் அங்கிருந்து திரும்பி பவானியிடம் வந்ததும் "சரி புறப்படு செல்வோம்" என்றான். உடனே இருவரும் புறப்பட்டு வண்டி நின்றிருக்குமிடத்திற்குச் சென்று ஏறிக்கொண்டு நகரத்தைச் சேர்ந்தார்கள்.

ஆனர்தஸிங் பவானியிடம் அவசியமானமட்டுமே பேசினனன்றித் தன் மனதிலிருப்பவற்றில் ஒன்றையேனும் வெளியிட்டவனல்ல.

பவானியோ அதிகமாய்ப் பேசினுள். ஒரு சமயம் அவள் வார்த்தைகளால் "சே இவள் உளவாளியல்ல உண்மையானவளே யென்று ஆனந்தஸிங் மனதில் தோன்றியது. மறுசமயம் அவளுடைய வார்த்தைகள் அவள் மோசக்காரியே யென்று நினைக்கச் செய்தன.

இருவரும் ஆனந்தஸிங்கின் அறையில் உட்கார்ந்ததே பவானி "என்னை மறுபடி யெப்போது வரச்சொல்லுகிறுய்?" என்றுள்.

ஆனந்த:—எப்போது எதாவது சங்கதி கிடைக்கிறதோ அப்போது வா.

பவானி:—இந்தக் கறுப்பண்ணனைக் கைது செய்யமாட்டாயோ? அவன் தன் துஷ்டச் செயல்களுக்கு அனுகூலமாய் இன்னும் சுயாதீனத்தோடு உலவிக்கொண்டிருக்கும்படி விட்டு வைக்கத்தான் போகிறுயோ?

ஆனந்:—அது போகப்போகத்தான் தெரியும்.

பவானி:—நீ யவனைக் கைது செய்யாவிட்டால் நான் நடந்த சங்கதிகளனைத்தும் நியாயாதிபதிக்குத் தெரியப்படுத்தி விடுவேன்.

ஆனந்:—எனக்குத் தெரிவிக்காமல் அப்படியொன்றும் செய்துவிடாதே. உன் எண்ணமே யடியோடு கெட்டுவிடும்.

அவன் இப்படிக் கூறவே ஆனந்தஸிங்குக்கு மறுபடி மனதில் கலவரமும் சந்தேகமுமாய்விட்டது. பவானி சற்றுநேரம் சும்மா யிருந்து மறுபடி யவனை நோக்கி,

"நீ யெனக்கு உதவியாயிருப்பதாக வாக்குறுதி கூறவேண்டும். இன்றேல் நான் கட்டாயம் எல்லா சங்கதிகளையும் வெளியிட்டுவிட வேண்டியதே" என்றுள்..

ஆனந்:—ஏன் ?

பவானி:—"இன்றேல் அவன் என்னைக் கொன்றுவிடுவான்" என்றுள்.

ஆனர்தஸிங் சற்று சிந்தித்து "நீ நாளை யிரவு வா; அதைப்பற்றி சிந்திக்கலாம்" என்றுன்.

பவானி யுடனே விடைபெற்றுக்கொண்டு சென்றுள்.

ஆனர்தஸிங்குக்கு இப்போது மிக்க கலவரமும் சந்தேகமுமுண்டாய்விட்டன. சங்கதியை வெளியிட்டு விடுவேன் என்று அவள் கூறியதுகூட தன்னை யேமாற்றுவதற்கே யிருக்கலாகும் என்று அவன் மனதிற்றேன்றியது. கறுப்பண்ணனைக் கைது செய்யலாமெனின் அவன் ருசுவிற்கு வரக்கூடிய குற்றம் எதையேனும் செய்ததாக இன்னும் தெரியவில்லை. மேலும் விவகாரங்கள் இப்போதிருக்கிற நிலைமையில் எந்த கிமிடத்தில் வேண்டுமாயினும் எல்லா ருசுக்களும் மனேகரனுக்கு ஆபத்தை

யுண்டாக்கத்தக்க விதமாய்த் திரும்பிவிடலாம். இந்தப் பவானியே அவனுக்கு விரோதமான முதற் சாக்ஷியாய்த் திரும்பிவிடலாம். இதனால் அவனுக்கு எதுவும் கலவரமாகவே யிருந்தது. விஷயம் அவன் பிரியப்படி நடைபெறத் தொடங்கவில்லை.

மறுநாட் காலையில் நேர்ந்த ஒரு சம்பவம் ஆனந்தலிங்கிற்கு இன்னும் பெரிய விபரீத சந்தேகத்தையும் கலவரத்தையும் உண்டாக்கிவிட்டது. எப்படி யெனில் மறுநாட்காலை ஒரு வேலையாக ஆனந்தலிங் ஹரியாற்றின் மேற்பக்கமாய்ச் சற்று தூரத்திலிருக்கும் ஒரு கிராமத்திற்குப் படகிற் சென்றான்.

அவன் படகின் அடித்தட்டிலிருந்து மேல்தட்டிற்குச் செல்லும் ஏணி வழியாய் ஏறும்போது அங்கு எதிரிலிருந்த ஒரு நிலைக்கண்ணாடியில் பிரதிபலித்த ஒரு உருவத்தைக் கண்டதே சட்டென்று மூச்சுத் திணறி பிரமித்து அசைவற்று நின்றான். அவ்வுருவம் இரண்டொரு விநாடியே அங்கு தோன்றி யிருந்தது. ஆ அதற்குள் அந்த அழகிய உருவம் சவக்குழியில் அழுகிக் கொண்டிருக்கிறதென்று யாவராலும் கருதப்படும் அம்பாலிகையின் உருவமே யென்று அவன் மனதில் அய்யமறத் தோன்றியது. "இது எப்படி யுண்மை? இச்சம்பவம் நேர்ந்தது முதல் நம் மனதில் அவள் கவனமே யிருந்ததால் இப்படித் தோன்றியதோ. இப்படி நேர்வது அனுபவம்" என்று அவன் சற்றுநேரம் நின்று சிந்தித்தான். இது வேதோ பொய்த் தோற்றமென்றே தோன்றியது. அவன் கலவரத்திற்கு அளவில்லை. அதோடு அச்சமயம் அவனுக்குத் தெரிந்தவரையில் நாற்பக்கங்களிலும் ஒரு ஆளாவது இல்லை.

கடைசியில் அப்படி ஒருவருடைய நிழல் தோன்றியதாயின் இப்படகின் எப்பாகத்திலாவது அந்த ஆள் இருக்கவேண்டுமெல்லவா? ஆகையால் படகு முழுதும் (பெரிய ஆறுகளில் செல்லும் படகுகள், சிறிய கப்பல்கள் போன்றனவே) தேடினான். எங்கும் அத்தகைய ஆள் அகப்படவில்லை. தன் துப்பறியும் சாமார்த்தியத்தைக் கொண்டு படகிலிருந்த ஆட்களை விசாரித்தான். அவர்களில் ஒருவன் தாங்கள் சொல்வதுபோல் அழகிய பெண் முகத்தோடு ஒரு சிறுவன் இருக்கிறானே யொழிய வேறு யாருமில்லை யென்றான்.

ஆனந்தலிங் கடைசியில் இது நமது மனதிலிருந்துண்டான பொய்த் தோற்றமேயென்று தீர்மானித்துக்கொண்டு, தான் இறங்கவேண்டிய விடத்தில் படகைவிட் டிறங்கிவிட்டான்.

இதற்கிடையில் மயானபூமியில் இறந்துபோயிருந்த ஆசாமியின் சவம் கண்டுபிடிக்கப்பட்டு சவங்கள் சோதனை செய்யப்படும் இடத்திற்குக் கொண்டுபோகப்பட்டது. பத்திரிகைகளில் அவன் தற்கொலை செய்து கொண்டதாய் கூறப்பட்டிருந்தது. ஆனந்தலிங்குக்கு அதன் உண்மை தெரியும். ஆனால் அவன் மௌனமா யிருந்தான்.

ஆனந்தஸிங் அன்றிரவு தன் அறையிலேயே உட்கார்ந்துகொண்டிருந்தான். ஏதோ விசேஷ சமாசாரம் வருமென்று அவன் மனதில் தோன்றியது.

அவன் கருதியபடியே பவானி வந்தாள். அவள் முன்தினமிருந்ததுபோலவே மிக்க கலவரமும் ஆத்திரமும் துடிதுடிப்புமான மனதோடிருந்தாள்.

ஆனந்தஸிங்:—என்ன சங்கதி ?

பவானி:—நாம் இன்று மறுபடி சவக்குழிக்குப் போகவேண்டும்.

ஆனந்:—என் மறுபடி செல்வது ?

பவா.—அங்கிருக்கும் சவம் அம்பாலிகையின் சவந்தானென்று திட்டமா யறியவேண்டும்.

ஆனந்:—என் நேற்று பார்த்தோமே ?

பவா:—ஆயினும் நேற்று இருந்த மனக்குழப்பத்தால் நான் சரியாய் கவனிக்கவில்லைபோ லிருக்கிறது.

ஆனந்:—அப்படியானால் இடையில் ஏதோ சம்பவம் நேர்ந்து உன் அபிப்பிராயத்தில் சந்தேகத்தை யுண்டாக்கிவிட் டிருக்கவேண்டும்.

பவானி:—ஆம். மிக்க மனத்திடுக்கை யுண்டாக்கத்தக்க சம்பவம்.

ஆனந்.—என்ன அது ?

பவானி:—நான் உயிருக்குத்துணிந்து அச்சண்டாளர்களாகிய கறுப்பண்ணனும் அவன் துஷ்டக் கூட்டாளியுமான மலையாளத்தானும் இரகசியமாய்ப் பேசுவதை யுற்றுக் கேட்கிறேனென்று கூறியிருக்கிறேனல்லவா ?

ஆனந்:—ஆம்.

பவானி:—இன்று நான் உற்றுக்கேட்டதில் என் மனதில் பயங்கரமான யோசனைக ளுண்டாய்விட் டிருக்கின்றன.

ஆனந்:—நீ யென்ன உற்றுக்கேட்டாய் ?

பவானி:—கறுப்பண்ணனும் அவன் கூட்டாளியாகிய மலையாளத்தானும் உன்னைப்பற்றிச் சச்சரவு பட்டுக்கொண்டார்கள்.

ஆனந்:—என்னைப்பற்றியா? என்?

பவானி:—உன்னை இதில் சம்பந்தப்படுத்தலாகாதென்று மலையாளத்தான் ஆரம்பத்திலேயே ஆக்ஷேபனை செய்தானாம்.

ஆனந்:—இருக்கட்டும். அதற்கும் இச் சங்கதிக்கும் என்ன சம்பந்தம் ?

பவானி:—நான் சொல்வதைக் கேள். இப்போது மலையாளி மனோகரனைக் கொன்றுவிட வேண்டுமென்று கூறுகிறான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

## பஞ்சாங்க அறிவிப்பு.

முன்னதாகத் தவணைக்குள் சந்தாவைச் செலுத்திய சந்தா நேயர்கட்கெல்லாம் பங்குனிமாதம் 1௳ முதல் அம்மாதக் கடைசிக்குள் பஞ்சாங்கம் அனுப்பப்படும். பத்திராதிபர்.

## பாரசீக தேசத்தில் சுதேசி இயக்கம்.

"பார்வாடு" பத்திரிகை பின்வருமாறு எழுதி யிருக்கின்றது:— பாரசீக தேசத்திலுள்ள பார்லிமெண்ட் சபை ஒரு புதிய சட்டத்தைச் செய்திருக்கின்றது. அந்தச் சட்டத்தின்படி அரசாங்கத்தில் வேலை பார்க்கின்ற ,உத்யோகஸ்தர்கள் எல்லோரும் தங்கள் உத்தியோகசாலையில் வேலை செய்யும்பொழுது பாரசீகதேசத்தில் செய்யப்பட்ட சுதேச ஆடைகளையே அணிந்துகொள்ளவேண்டுமாம். பார்லிமெண்டு சபையின் அங்கத்தினர்களும், மந்திரிகளும், கவர்னர்களும், நீதிபதிகளும் அந்தச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டுமென்று தெரிகிறது. அந்தச் சட்டத்தை மீறி நடப்பவர்களுக்கு, முதலில் கொடுக்கப்படுகின்ற சம்பளத்தில் 100-க்கு ½-வீதம் குறைக்கப்படும். ஆறுமாத காலத்திற்குப் பிறகு இந்தச் சட்டத்தை மீறி நடக்கின்றவர்களின் சம்பளம் 100-கு 1-வீதம் குறைக்கப்படும்.

## ஒரு மஹான்.

திபெத்திற்குச் சமீபத்தில் போய்வந்த கூட்டத்தாரைச் சேர்ந்த மேஜர் கிராஸ் என்ற வெள்ளைக்காரர் பாஞ்சியம் என்ற இடத்தில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசியபொழுது, சில ஆச்சரியப்படத்தக்கவிஷயங்களை வெளியிட்டார். அவர் இமயமலையில் 240 வயதுள்ள ஒரு வயோதிக குருவைக் கண்டார். பிரமஞான சங்கத்தை ஆதியில் ஸ்தாபித்த மாடம் பிளாவட்ஸ்கி என்ற மாது முன்னம் இந்தியாவிற்கு வந்திருந்தார். அம்மாதுக்கு இவர் (Kut-humi Lal கூட்ஹூமிலால்) குருவா யிருந்தவராம். அவருக்கு விசேஷ சக்திகளுண்டாம். கணித சாஸ்திரத்தில் நிபுணராக விளங்குகிறாராம். தமது அவயவங்களைப் பெரிதாக்கிக் கொள்ளவும், சிறிதாக்கிக் கொள்ளவும் நினைத்த மாத்திரத்தில் திடீரென்று மறைந்துவிடவும், திடீரென்று தோன்றவும் அவரால் முடிகிறதாம். இமயமலையிலுள்ள மஹான்களை யெல்லாம் விட இவர் பெரியவராகக் காணப்படுகிறாராம். அவருக்குள்ள சக்தியினால் அவர் ஜீவியகாலத்தை அதிகப்படுத்திக்கொண்டு போகிறாராம். 1927-ம் வருஷத்தில் கொடுமையான பஞ்சத்துடன் ஒரு பெரிய யுத்தம் ஆரம்பமாகுமென்று அவர் சொல்லுகிறாராம். ஒரு குழந்தை மூலமாக அவர் அபாரச் செயல்களைச் செய்து காண்பித்ததுடன், ஒரு கண்ணாடியின்மீது சிறிது நேரம் தனது பார்வையை ஒருமித்துச் செலுத்தியதினால் அக்கண்ணாடி துண்டுத் துண்டாக உடைந்து போயிற்றாம்.

நமது நாட்டில் இத்தகைய மகான்கள் அனேகர் உளர். இவர்கள் அட்டமா சித்தி கைவந்தோர். கூட்ஹூமிலால் என்பவர் பஞ்சாப் தேசத்தவர். வருடாவருடம் இவர்கள் புது சீடர்களைப் பொறுக்கிச் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். அனேகர் இத்தகையோரைத் தரிசித்து வந்திருக்கிறார்கள்.

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

உருத்ரோத்காரிஞு பங்குனிமீ—கலி 5025-சாலிவாகனம் 1846
பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1342
இங்கிலீஷ் 1924ஞு மார்ச்சுமீ—ஏப்ரல்மீ

| பங்குனி | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 18 | வியா | சப்7-28 | ரோ5-18 | மர60 | சம்பத்கௌரிவிரதம் |
| 2 | 14 | வெ | அ12-40 | மிரு12-15 | சித்60 | யாத்திரை விலக்க |
| 8 | 15 | சனி | நவ17-13 | திரு18-15 | சித்60 | பிரயாணம் தவிர்க்க |
| 4 | 16 | ஞா | தச20-23 | புன22-38 | சித்60 | சீமந்தம், காதுகுத்த |
| 5 | 17 | திங் | ஏ21-43 | பூச25-20 | சித்60 | மத்வசர்வ ஏகாதசி |
| 6 | 18 | செவ் | து21-5 | ஆயி26-40 | சித்60 | கரிநாள், பிரதோஷம் |
| 7 | 19 | புத | திர18-43 | மக25-28 | சி25-28அ | காமதஹனம் |
| 8 | 20 | வியா | ச○14-38 | பூர22-58 | சி22-58ம | பங்குனி உத்திரம், ஓலி |
| | | | | | | பண்டிகை |
| 9 | 21 | வெ | பௌ9-20 | உத்19-8 | சித்19-8அ | வசந்தோற்சவம் |
| 10 | 22 | சனி | பிர2-45 | அஸ்14-15 | மர60 | சாதுர்மாஸ்யதுதியா |
| | | | துதி55-35 | | | பால்குணபகுளம் |
| 11 | 23 | ஞா | திரி48-3 | சித்9-0 | சித்60 | யாத்திரை விலக்க |
| 12 | 24 | திங் | சது40-43 | சுவா3-20 | அ3-20சித் | வியாசராயர் தீர்த்தம் |
| | | | | விசா57-50 | | |
| 18 | 25 | செவ் | பஞ்33-38 | அனு52-53 | சி52-53ம | |
| 14 | 26 | புத | சஷ்27-13 | கேட்48-40 | சி48-40ம | |
| 15 | 27 | வியா | சப்21-40 | மூல45-20 | சித்60 | |
| 16 | 28 | வெ | அ17-18 | பூரா43-10 | பி43-10சி | |
| 17 | 29 | சனி | நவ13-58 | உத்42-5 | சித்60 | |
| 18 | 30 | ஞா | தச11-43 | திரு42-8 | அ43-8மர | |
| 19 | 31 | திங் | ஏ10-40 | அவி43-18 | சித்60 | |
| 20 | 1924ஞு ஏப்ரல்மீ 1 | செவ் | து10-45 | சதை45-30 | மர60 | |
| 21 | 2 | புத | திர10-40 | பூரட்48-35 | அ48-35சி | |
| 22 | 8 | வியா | ச●13-45 | உத்-52-43 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 23 | 4 | வெ | அ16-43 | ரேவ-57-40 | அமி60 | ரைவதமன்வாதி |
| 24 | 5 | சனி | பிர20-45 | அசுவனி60 | சித்60 | திருதினஸ்பிருக், யுகாதி |
| | | | | | | பண்டிகை [க்க |
| 25 | 6 | ஞா | துதி25-30 | அசு3-30 | சித்60 | கதிரறுக்க, அடுப்பு வை |
| 26 | 7 | திங் | திரி31-3 | பர.※.10-18 | சி10-18டி | கிருத்திகை, மச்ச ஜயந்தி |
| 27 | 8 | செ | சது37-3 | கிரு17-28 | சி17-28அ | மாசசதுர்த்தி விரதம் |
| 28 | 9 | புத | பஞ்13-18 | ரோ24-58 | சித்60 | லட்சுமி பஞ்சமி, ஸ்ரீ பஞ் |
| 29 | 10 | வியா | சஷ்49-15 | மிரு32-20 | மர60 | சஷ்டி [சமி |
| 30 | 11 | வெ | சப்54-25 | திரு39-5 | சித்60 | கங்கோற்பத்தி |
| 31 | 12 | சனி | அ58-20 | புன44-48 | சித்60 | 33-20முதல் 53-20 வரை |
| | | | | | | விஷுபுண்ணியகாலம் |

| | | | |
|---|---|---|---|
| சூரி | சுக் | | |
| கே புத | 6உ மீன-பு<br>17உ ரிஷ-சு<br>20உ மே-புத<br>31உ மக-செ | | |
| | | | ராகு |
| செ | குரு | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE 'ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



| | | |
| --- | --- | --- |
| தொகுதி 9 | ருத்ரோத்காரிஸு பங்குனிமீ கஉ<br>1924ஸு மார்ச்சுமீ 13உ | பகுதி 9 |

## கடவுள் வணக்கம்.

கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள்
கற்றுமறி வில்லாத வென்
கர்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகேன்
கைவல்ய ஞான நீதி
நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் கர்ம மொருவன்
நாட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழி யிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவக ரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்தி தருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (1)

என்னையுன்னை யின்னதிது வென்னும வெிற்குநிலை
தன்னை யருளென்ற தருணத்தி — லன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
யுள்ளத்தி னுள்ளே புணர். (2)

சொன்னவர்தா நிட்டை தொகுத்திரா நிட்டையிலே
மன்னினவர் போதியார் ஸாமிஞானன் — றன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்க வடகீழ்
[illegible] ளிருவிகற் பத்தே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. கற்றும் அறிவில்லாத = கல்விகற்றும் நல்லறிவு பெருத.

என் கர்மத்தை = என் கெட்ட கர்ம பலனை

மதியை = அறிவுவிளக்கம் பெருத புத்தியை

கற்பதனல் அறிவு விளக்கம் பெறவேண்டும்: கற்றும் அறிவு விளக்கம் பெருதவர்களைவிடக் கல்லாத பேர்களே நல்லவர்கள் என்ருர். எவ்வாறெனின் கல்லாதவர்கள் நாம் கல்விகற்கவில்லை என்று தங்கள் நிலைமையை யுணர்ந்து கொஞ்சங் கற்றவர் முன்புகூட அடக்கமாய் ஒழுகுவார்கள். கற்றும் அறிவு விளக்கம் பெருதோர்கள் நாம் கல்வி கற்றிருக்கிறோம் என்று அகங்காரமடைந்து தம்மைப் பிறர் மதிக்கவேண்டுமென்ற விருப்பங்கொண்டு வீண் குதர்க்கவாதம் செய்து தமது கொள்கையையே சாதித்து நிலைநாட்ட முயல்வார்கள். இத்தகையோர் எதிரியின் கொள்கையே சத்தியமான தென்றும், அவர் வாதமே நியாயமான தென்றும் தமக்குள் உணர்ந்தாலும், அதை மறுத்துத் தமது கொள்கையையே வாய் வல்லமையால் நிலைநாட்ட முயல்வார்கள். இவர்கள் ஒரு சமயம் தாங்களே நிலைநாட்டும் ஒரு சித்தாந்தத்தை மற்றொரு சமயத்தில் தாங்களே மறுத்துக் கண்டித்து மாருன ஒரு சித்தாந்தத்தைத் தாபிப்பார்கள். இவர்கள் ஒருபோதும் மெய்யறிவை யடைவதில்லை. இத்தகையோர் நடக்கையையே பின்னல் விவரித்துக் கூறி யருளினர்.

கைவல்ய ஞான நீதி நல்லோருரைக்கிலோ = பெரியோர்கள் ஞானமே மோக்ஷத்தை யளிப்பது என்று கூறினல்

கர்மம் முக்கியமென்று நாட்டுவேன் = அப்படியல்ல, கர்மமே மோக்ஷத்தை யளிப்பது என்று சாதிப்பேன்.

கர்மம் ஒருவன் நாட்டினலோ = (அப்படிக்கின்றி) ஒருவர் கர்மமே மோக்ஷத்தை யளிப்பது என்று நிரூபித்துக் காட்டினல்.

பழைய ஞானம் முக்கியமென்று நவிலுவேன் = முன்பு மறுத்துக்கூறிய அதே ஞானந்தான் மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமென்று வாதிப்பேன்.

வடமொழியிலே வல்லான் ஒருவன் வரவும் = சம்ஸ்கிருத பாஷையில் பாண்டித்ய முடைய ஒருவன் வந்தால்.

திராவிடத்திலே வந்ததா விவகரிப்பேன் = தமிழில் பாண்டித்ய முடையவன்போல் பேசுவேன்.

வல்லதமிழ் அறிஞர்வரின் = தமிழ்க் கல்வியுடைய அறிவாளி வந்தால்.

அங்ஙனே வடமொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன் = (நான் சம்ஸ்கிருதம் கற்றவன் என்று காட்டிக்கொள்வதற்காக) அப்போது சம்ஸ்கிருத மொழிகளில் சிலவற்றை வெளியிடுவேன்.

இத்தகைய நடக்கைகளெல்லாம் "அப்பா இவன் பிரமாத கல்வி மான், இவனிடம் வாதம் செய்ய யார்தரம்" என்று கருதும்படி உலகினரை மிரட்ட உதவுமேயன்றி இத்தகைய கல்வி யொருபோதும் மோக்ஷத்தை யளிக்காது. அறிவு விளக்கம் பெறக் கற்கும் கல்வியே மோக்ஷத்தை யளிக்கும் என்று அருளினர்.

2. என்னை உன்னை, இன்னது இது என்னுமல் நிற்கும் நிலை = நான் நீ என்ற தன்மை முன்னிலை யற்றதும், (இது இன்ன வஸ்து, இன்ன காலம், இன்ன இடம் என்றுணர்வதாகிய) காலதேசவஸ்து பரிச்சேதமற்றதுமாகிய (பிரம்ம சாட்சாத்கார) நிலை.

அருள் என்ற தருணத்தில் = அந்த மோன நிஷ்டையாகிய நிலை நமக்கு அருளப்படும் சமயத்தில்

அன்னைபெற்ற பிள்ளைக்கும் சொல்லாதபெற்றி = தாயார் தான்பெற்ற பிள்ளைக்குக்கூட வாயாற் சொல்லமுடியாத தன்மையானது (அந்த நிலை.)

(அப்படியாயின் அதை யெப்படி யறிவதெனின்.)

உள்ளத்தினுள்ளே யுணர் = (ஊமைகண்ட கனவு போல் உன் உள்ளத்தில் நீ யுணரத்தக்கதே யன்றி வாயால் கூறத்தக்கதல்ல.

(பின் வெண்பாவில் அந்த நிட்டானுபவம் வாயாற் கூறத்தக்கதல்ல வென்பதைத் திருட்டாந்த பூர்வகமாய்க் கூறுகிறார்.)

3. சொன்னவர் = அந்த நிட்டானுபவம் இத்தகையதென வாய்விட்டுக் கூறியவர்.

நிட்டை தொகுத்திரார் = (மெய்யான) நிட்டையைப் பொருந்தியிருக்க மாட்டார்கள்.

நிட்டையிலே மன்னினவர் = அந்நிட்டையை யுள்ளபடி யனுபவித்தவர்கள்.

போதியார் = அது இத்தகைய நிலை யென்று வாயாற் கூறமாட்டார்கள்.

ம்மௌனன் = மௌன குருவாகிய தக்ஷிணாமூர்த்தி.

விருப்பாகக் கைகாட்டி = (ஜனகாதியர்க்கு) அன்போடு சின்முத்திரைக் கரத்தைக் காட்டி.

வடநீழல் = வடவால விருக்ஷத்தின் கீழ்.

தன்னுள் இருப்பான் நிருவிகற்பத்தே = தனக்குள்ளாகவே நிருவிகற்ப நிட்டையில் அமர்ந்திருப்பான்.

பரமசிவன் ஜனகாதியர்க்குச் சமாதி நிலையை வாக்கால் கூறுமல் குறிப்பாகச் சின்முத்திரையாற் காட்டித் தாம் அச் சமாதி நிலையில் அமர்ந்தது ஈண்டு திருட்டாந்தமாகக் கூறப்பட்டது.

---

ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஞூ பங்குனிமீ கஉ

## நமது புத்தி.

அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபியாகிய ஆண்டவன் அனாதி மலத்தில் அழுந்திக்கிடந்த ஆன்மாக்கள் மல நீக்கம் பெற்று நித்தியானந்த நிலையாகிய தம்மை வந்தடையும் வண்ணம் அருள் நோக்கங்கொண்டு அவற்றிற்கு தநு, கரணம், புவனம், போகம் ஆகியவற்றை யளித்தார்.

இவற்றில் தநு என்பது தேகம்; கரணம் என்பது அந்தக் கரணங்கள்; புவனம் என்பது உலகம்; போகம் என்பது இவ்வுல கில் சீவன்களின் போகானுபவத்திற்கு அவசியமான பொருள் கள். இவற்றுள் கரணங்கள் முக்கியமானவை. தேகத்தோடு சேர்ந்த இவைகளே சீவன் தன் மலம் அல்லது அஞ்ஞானத்தை நீக்கிக்கொண்டு நித்தியானந்தமாகிய முத்திவீட்டை யடைவதற்கு முக்கிய சாதனமாயுள்ளவை. நாம் எடுத்துக்கொண்ட புத்தி என் பது இந்த அந்தக்கரணங்களில் ஒன்றாக இருப்பதால் அவற்றைப் பற்றிமட்டும் சுருக்கமாய்க் கூறுவாம்.

அந்தக்கரணங்கள், 1 மனம், 2 புத்தி, 3 சித்தம், 4 அகங்கா ரம், 5 உள்ளம், என ஐந்தாம். இவை சூக்கும பஞ்சபூதங்களின் சத்துவகுண சமஷ்டியில் (சமஷ்டி = ஐந்தும் ஒரு கூட்டமாய்ச் சேர்ந்தது) உற்பத்தியாயின. அதனால் இவை தனித்தனியா யிரா மல் ஒன்றுபோலவே காணப்படும். ஆயினும் ஐந்து பூதங்களின் குணபேதங்களால், அந்தந்த பூதங்களின் இயற்கைக்குத் தக்கபடி ஐந்து குணங்களை யுடையதாய், ஐந்து தொழில்களை யுடையதாய் இருக்கின்றது. அவ்வாறே ஐந்து நாமங்கள் அமைந்திருக்கின்றன.

இவற்றில் (1) மனம் வாயுவின் அம்சமாதலின் வாயுவைப் போல் சதா சலித்துக்கொண்டே யிருக்கும். (2) சித்தம் அப்பு

வின் அம்சமானதால் சலம் ஒரு அணுவிலிருந்து மற்றொரு அணுவைப்பற்றி ஊறிச் செல்வதுபோல் விஷயங்களைத் தொடர்ந்து பற்றிச் செல்லும். (3) அகங்காரம் பிருதிவியின் அம்சமானதால் அதன் குணமாகிய கடின குணமுடையதாய், நான் என்று தடித்து நிற்கும். (4) உள்ளம், ஆகாயத்தி னம்சமானதால், ஆகாயம் மற்ற நான்கு பூதங்களுக்கும் இடங்கொடுத்துத் தான் சலனமின்றி களங்கமற்றிருப்பதுபோல், மற்ற நான்கு கரணங்களுக்கும் இடமளித்துத் தான் சலனமின்றி யிருக்கும்.

இனி நாம் எடுத்துக்கொண்ட (5) புத்தி என்பது அக்னியின் அம்சம். பிரகாசத்தை யளித்து இது இன்ன வஸ்து இது இன்ன வஸ்து என்று விளக்கிக்காட்டுவதே அக்கினியின் தொழில். அது போன்றே புத்தி விஷயாதிகளின் உயர்வு தாழ்வு நன்மை தீமை யாதிகளை நமக்கு விளக்கிக்காட்டுகிறது.

அறிவு வேறு புத்தி வேறு. அறிவு என்பதும் உள்ளம் என்பதும் மனச்சாக்ஷி யென்பதும் ஒன்றே. அறிவு சலனமற்றிருப்பது. அதுவே உள்ளம். மனம் முதலியவற்றின் தொழில்கள் அறிவின் சந்நிதானத்திலேயே நடைபெறவேண்டும். அவற்றின் இருப்பிற்கு வேறு இடமில்லை. மற்ற நான்கு கரணங்களுக்கும் உள்ளமே இடங்கொடுத்திருப்பதால் இவ்வாறு தன் சந்நிதியில் நடக்கும் தொழில்களனைத்தையும் அறிவு பார்த்துக்கொண்டிருப்பதால் அது சாக்ஷியாயிற்று. அது பாரபட்சமற்றது. மனதின் தொழில்களில் இது நல்லது இது கெட்டது என்று உணர்த்தும் சக்தி வாய்ந்தது. அதனாலேயே அது பகுத்தறிவு என்றும் கூறப்பட்டது.

இந்த அறிவு ஆறறிவுடைய மக்களனைவர்க்கும் உண்டு. சதா கொடிய பாபங்களையே செய்துகொண்டிருக்கும் பரம துஷ்டனுக்கும் தான் செய்தது பாபம், கெட்ட செய்கை என்று அவன் மனதிற்குள் ஒரு உணர்ச்சி யுண்டாகவே யுண்டாகும். அறிவில்லாதவன் எவனுமில்லை. ஆனால் அறிவு கூறுவதை யவமதித்து தன் மனப்போக்கின்படி செல்கிற ஒருவனையே அறிவில்லாதவன், அறிவுகெட்டவன் என்கிறோம்.

இந்த அறிவே தன் பூரணப் பிரகாசத்தைப் பெறும்போது, அதாவது தன் சாக்ஷாத்கார நிலையை யடையும்போது ஞானம்

எனப்படுகிறது. ஆதலின் ஞானமில்லாதவரும் ஒருவருமில்லை. சாமானிய ஞானம் யாவர்க்கும் உண்டு. தேகத்திற்குள் நான் என்ற ஒன்று இருக்கிறதென்பதையும், கடவுள் என்ற ஒன்று இருக்கிறதென்பதையும் உணர்வதே ஞானம் இருப்பதன் அடையாளமாம். இதுவே சாமானிய ஞானம். இந்த ஞானம் அஞ்ஞானத்தையழிக்கக்கூடியதல்ல. அதற்கு மாறாக அதோடு கலந்தேயிருக்கும். ஆனால் இதுவே விர்த்தியடைந்தபோது அஞ்ஞானத்தையழிக்கும். அப்போதுதான் ஞானம் உதயமாயிற்று என்கிறோம். இவற்றைப்பற்றி ஈண்டு விரிக்கிற் பெருகும்.

இனிப் புத்தியின் தொழிலைக் கவனிப்போம். புத்தி பிரகாசமுடையதென்றும் விஷயங்களை விளக்கிக் காட்டுவதென்றும் முன்னம் கூறினோம். ஆகையால் நமது செய்கை ஒவ்வொன்றிலும் புத்தி நமக்கு உதவி செய்யக்கூடியது என்று உணருகிறோம். நாம் ஒரு காரியத்தைச் செய்யக் கருதும்போதே புத்தியைக் கொண்டு ஊகித்தால் அக்காரியத்தால் நன்மை யுண்டாகும், தீமையுண்டாகும், கௌரவம் நேரிடும், அகௌரவம் நேரிடும், இவ்வழி செய்தால் இப்பலன் உண்டாகும் என்று புத்தி விளக்கிக் காட்டும்.

ஒருவன் நடு இரவு பணமூட்டை யெடுத்துக்கொண்டு ஒரு ஊருக்கு செல்கிறான். காட்டுவழி செல்லவேண்டும். அப்போது புத்தியைக் கேட்டால் என்ன சொல்கிறது ?

"அய்யோ காட்டுவழி சென்றால் கள்ளர் உன்னைக் கொன்று பணத்தை யெடுத்துக்கொள்வார்கள். அதோடு காட்டு மிருகங்கள் உன்னைக்கண்டால் கொன்று தின்றுவிடும். மேலும் இருட்டில் வழிதவறிவிட்டால் பெரிய ஆபத்திற்குள்ளாவாய். பக்கத்துக் கிராமத்திற்குச்சென்று படுத்திருந்து காலையில் புறப்பட்டுப்போ" என்று கூறுகிறது. அது கூறுகிறபடி கேட்டால் நன்மை யடைகிறோம் இதுதான் புத்தியின் தொழில்.

ஒருவன் உன்னிடம் வந்து "நண்பா! ஒரு இடத்தில் சூதாடுகிறார்கள். பத்து ரூபாய் மட்டும் எடுத்துக்கொண்டு சென்றால் இரவிற்குள் நானூறு ஐந்நூறு சம்பாதித்து வரலாம்" என்று கூறுகிறான். அச்சமயம் புத்தியோடு ஆலோசித்தால், புத்தி "பணம் வருவது நிச்சயமல்ல. நம்மிடமுள்ளது போய்விட்டால் துக்கம்.

மேலும் எந்த சமயத்திலும் போலீஸார் வந்து பிடித்துக்கொள்ள லாகும். அதோடு நம் குடும்ப மானமே போய்விடும். தண்டனை யடைவோம்'' என்று கூறுகிறது.

இத்தகைய சமயங்களில் நாம் புத்தி கூறுகிறபடி நடந்து கொண்டால் "இவன் புத்திசாலி'' என்று அழைக்கப்படுகிறோம். அப்படிக்கின்றி புத்தியை யலட்சியம் செய்துவிட்டு மனத்தூண்டு தலின்படி நடந்து துன்பத்திற்குள்ளாயின் "இவன் புத்திகெட்ட வன்'', "அவன் சொன்னால் இவனுக்குப் புத்தி எங்கு போயிற்று?'' என்று தூஷிக்கப்படுகிறோம். "எண்ணித் துணிக கருமம் துணிந்த பின்—எண்ணுவ மென்ப திழுக்கு'' என்று பொய்யாமொழியார் அருளியது, நாம் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கு முன்பே இதைச் செய்தால் பின்னால் இதனால் எத்தகைய பயனுண்டாகும் என்பதைப் புத்தியைக்கொண்டு ஆலோசித்தபிறகே செய்ய வேண்டும் என்பதற்காகவே.

அப்படியிருக்க அனேகர் புத்தியை யலட்சியம் செய்துவிட் டுத் தம் மனம்போனவழி செல்வானேன்? கோபம் அல்லது ஆசை யிவற்றால் தூண்டப்பட்டவர்கள் புத்தியைக் கவனியாமலே மனம்போனபடி நடக்கிறார்கள். புத்தியாகிய தீபவொளியில் அறிவாகிய கண்ணை யூன்றி நோக்கினால் விஷயங்களின் பலாபலன் கள் புலப்பட்டே தீரும். ஆண்டவன் கிருபையோடு இக்கருவிகளை நமக்களித்திருக்க நாம் அவற்றை யுபயோகியாது மாயா சம்பந்த ஆசை முதலியவற்றால் மயக்கப்பட்டு அவற்றின் வழி யுழன்று அல்லற்படுவது நமது குற்றமேயாகும். எந்த நாட்டார் எதையும் புத்தியைக்கொண்டு சிந்தித்துச் செய்கிறார்களோ அவர்கள் மேலான நிலைமை யடைகிறார்கள்.

இப்போது நாம் (நம்மில் பெரும்பாலார்)எவ்வாறு புத்தியை யுபயோகிக்கிறோம் என்பதைப்பற்றி இரண்டொரு திருஷ்டாந்தங் களைமட்டும் கூறிவிட்டு இதை முடிக்கிறோம்.

1. பத்திரிகைகளை வாசிப்பதில் புத்தியை யுபயோகிக்கி றோமா?

பத்திரிகைகளை யேன் வாசிக்கவேண்டும்? அதனால் என்ன பயன்? பத்திரிகைகளை வாசித்தால் நாம் கண்டும் கேட்டு மிராத பல அரிய விஷயங்களை யறிகிறோம். நாம் க்ஷேமமடைவதற்கு—

நமது முன்னேற்றத்திற்கு—நாம் என்ன செய்யவேண்டும் என்ற அரிய வழிகளையும் புத்திமதிகளையும் ஆன்றோர் பத்திரிகைகளின் வாயிலாக நமக்குப்போதிக்கிறார்கள். நாம் அவற்றை வாசித் தறிந்து அவ்வாறு நடந்தால் கட்டாயம் முன்னேற்றமடையலாம். இவ்வளவு விஷயமும் புத்தியால் நாம் அறியக்கிடக்கிறது. அவ் வழியே நடக்கும் நாட்டினர்களெல்லாம் மேலோங்கி க்ஷேமமும் பலமும் பொருந்திய நிலைமையி லிருக்கிறார்கள். நாமோ புத் தியை யுபயோகித்து அவ்வழி நடக்காததால் எல்லா நாட்டாரி லும் இழிவான நிலைமையி லிருக்கிறோம்.

2. நேராய் நமது சொந்த நன்மையை யுண்டாக்கும் விஷ யத்திலேனும் நாம் புத்தியை யுபயோகிக்கிறோமா? நாம் உடுத்திக் கொள்ளும் உடைகளை நாமே நூல் நூற்று நெய்து உடுத்துக் கொண்டால் நாம் நமது தரித்திரம் நீங்கி க்ஷேமப்படுவோம். நாம் மட்டுமல்ல, நமது தாய்நாடே முன்னேற்றமடையும் என்று நம் நாட்டு அறிவாளிகள் சதா நமக்குப் போதித்துக்கொண்டிருக்கிறார் கள். நாம் நமது உடைக்கே அன்னியநாட்டை யெதிர்பார்த்திருப் பதால் எவ்வளவோ தீமை யிருக்கிறதென்றும், நாமே உற்பத்தி செய்து கொண்டால் மிக்க நன்மை யுண்டாகுமென்றும் புத்தி நன்றாய் நமக்கு அறிவிக்கிறது. ஆனால் நாம் அதன்படி நடக்கி றோமா ? அந்தோ ! இல்லையே.

பொதுநலத் தொழிலிலாவது நாம் புத்தியை யுபயோகிக்கி றோமா ? நாம் மந்திராலோசனைச் சபைகளில் அவயவிகளா யிருக்கிறோம். ஒரு சமயத்தில் இரண்டு பிரேரேபனைகள் கொண்டுவரப்படுகின்றன. 1. ஆரம்பப் பாடசாலைகளிலுள்ள உபாத்திமார்களுக்குச் சம்பளத்தை யுயர்த்த வேண்டும். 2. ஐந் நூறு ரூபாய்ச் சம்பளம்பெறும் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்க ளுக்கு இப்போதிருக்கும் தினப்படி ஐந்து ரூபாயைப் பத்து ரூபா யாக்கவேண்டும்.

இந்த இரண்டு பிரேரேபனைகளில் எதை யங்கீகரிக்கவேண் டும்? என்று புத்தியைக்கொண்டு சிந்தித்தால், புத்தி பின்வரு மாறு கூறுகிறது. "ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுக்கும் சம்பளமும் படியும் இப்போதிருப்பதே யதிகம். அதே வேலையில் ஒரு இந்தியனை வைத்தால் அச்சம்பளத்திலும் படியிலும் பாதிகொடுத்தால் போதும். தகுதியுடைய இந்தியர்

இல்லாமலில்லே. ஆரம்ப ஆசிரியர்க்கோ கொடுக்கப்படும் சம்பளம் சாப்பாட்டிற்கே போதாது. அவர்கள் மனோ நிம்மதியும், உற்சாக மும் சற்றுமில்லாத நிலைமையி லிருக்கிருர்கள். இந்த நிலைமையில் அவர்கள் எப்படிச் சரியாகத் தம் கடமையைச் செலுத்துவார்கள். உபாத்திமைத் தொழிலோ யாவற்றிலும் கஷ்டமானது. மனப் பூர்வமாய் அத்தொழிலேச் செய்வது யோகசாதனையிலும் கடினம் எனலாம். அவர்களே மற்ற எல்லா தொழிலாளிகளைவிடவும் மிகக் குறைந்த சம்பளம் அளிக்கப்படுகிருர்கள். நம்மக்களுக்கு ஆரம்பக் கல்வியே பிரதானமானது. அது திருப்தியாய் நடைபெறவேண்டு மாயின் அந்த ஆசிரியர்களின் குறைகள் நீக்கப்படவேண்டும்.''

புத்தி யிவ்வாறு கூறுவதை நாம் லட்சியம் செய்கிரேமா? இல்லே: நமது பதவி அதிகாரிகளால் நமக்களிக்கப்பட்டதாகவும், அவர்களுக்குத் திருப்தியாய் நடந்துகொண்டால்தான் நமக்குக் கௌரவம் கிடைக்குமென்றும், அவர்கள் தயவு பெற்ருல் செல் வாக்கும் கௌரவப்பட்டமும் பெறலாமென்றும் கருதி "ஆரம்ப ஆசிரியர் விஷயத்தைப்பற்றி பின்னுல் சிந்திக்கலாம். ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களின் கோரிக்கையை யுடனே நிறைவேற்ற வேண்டும்'' என்ற கட்சியில் சேர்ந்து கொள்கிரேம்.

விளக்கிருந்தும் நாம் கண்களை மூடிக்கொண்டால் விளக்கால் என்ன பயனடைவோம். அதுபோல் நம் தாய்நாட்டின் நன் மையை, நமது சந்ததியாரின் க்ஷேமத்தை, நமது சகோதரர்களின் கஷ்ட நிலைமையொழிவதைக் கருத்தில் வைத்து நடவாமல், அற்ப மான சுயநல நோக்கங்கொண்டு, புத்தியைப் புறக்கணித்து நடக் கிறவரையில் நாம் ஒருபோதும் நன்மை யடையோம். கருணாநிதி யாகிய பரம்பொருள் நாம் நம் புத்தி யறிவிக்கிறபடி நேர் வழியில் நடந்துகொள்ளுமாறு அருள்புரியவேண்டுமாய்ப் பிரார்த்திப்போ மாக.

ஓம் தத் சத்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (குரு.)

(304-ம் பக்கத் தொடர்ச்சி.)

குரு பக்தி செய்கிற புண்ணிய புருஷர்கள் மாதா பிதாக்களையுங் குரு வாகக்கருதிப் பக்தி செய்யவேண்டும். இவ்விருவருள் மாதாவை யதிக உயர்வென்று நூல்கள் புகழ்கின்றன. ஜீவான்மாக்கள் அறிவித்தா லறியு

மியல்புள்ளனவென்று முன்னர்க் கூறினோம். தாமே யறியச் சக்தி யில்லாதவையேயாம். தந்தையிடமிருந்து ஜீவசொரூபமே கருப்பாசயத்திற் பதிவது. அது தாயின் உதிராம்சத்தைக் கிரகித்து விருத்தியடைகின்றது. ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி யென்னும் மூன்றவஸ்தைகளுள் ஜாக்கிரமே சிறப்புடையது. ஏனெனில் ஜாக்கிராவஸ்தையிலிருந்துதான் சகல ஞானங்களையும் பெறவேண்டும். அதற்கு மனமாதி கருவி கரணங்கள் தாயினிடத்தி லிருந்தே பெற்றுக்கொள்ளப்படுகின்றன. பூமியிற் பிறந்து சிசுக்களா யிருக்கும்போதும் தாய்ப்பால் குடிப்பதனாலேயே சரீரம் விருத்தியடைவது பிரத்தியட்சம். இவ்வாறு கருவிகளெல்லாங் கொடுத்தருளிய தாயே உலக அறிவையும் புகட்டுகின்றாள்.

"அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" என்ற உபதேசத்திற் கூறப்பட்ட இருதெய்வங்களுள் தாயே முதல் தெய்வமும் குருவுமாவாள். குருவானவர் தமது சிஷ்யனுக்குக் காட்டுவதுபோலத் தாயே, தன் குழந்தைக்கு அதன் தந்தையாகிய தெய்வத்தைக் காட்டுகின்றாள். "அப்பா" என்று அழைக்கக் கற்றுக்கொடுக்கின்றாள். சாதம் பால் முதலியவற்றின் பேர் சொல்லி அப்பொருள்களைத் தெரிவிக்கின்றாள். பரம்பொருள் உண்டென்பதைத் தாயே குழந்தைக்குத் தெரிவிக்கின்றாள். சுவாமியைக் கும்பிடவும் தொழவுங் கற்றுக்கொடுக்கின்றாள். பாவபுண்ணியங்களுண்டென்று அறிவிக்கின்றாள். பாவத்தொழிலைச் செய்யவொட்டாமல் தடுக்கின்றாள். புண்ணிய செய்கைகளைத் தெரிவித்து அவற்றைச் செய்யக்கற்பிக்கின்றாள். சரீர போஷணைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் பெயர்களோடு தெரிவித்து உபயோகப்படுத்தவும் போதிக்கின்றாள். தேவாராதனை செய்யப்படும் விசேஷ தினங்களில் ஸ்நானஞ்செய்து சுத்த வஸ்திரந் தரித்துப் பரிசுத்தரா யிருக்கும்படி போதிக்கின்றாள். ஐந்து வயதாவதற்குள் ஒரு குழந்தைக்கு உலக வாழ்க்கைக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவுந் தாயின் உபதேசமேயாகும். இந்த உபதேசத்தினால் குழந்தைகள் பிறர் சொல்வதைத் தெரிந்துகொள்ளவும், தம் கருத்தைப் பிறர்க்குத் தெரிவிக்கவும் அறிந்துகொண்டு சிறப்படைகின்றன. அதற்குமேல் தந்தை கல்வி போதிக்கத் தொடங்குகிறான். தாயி னுபதேசத்தினால் பிறர் கூறுவதையறிந்து கொள்ளச் சக்திபெற்ற குழந்தை கல்வியிற் சிறப்படைகின்றது. இக்காரணங்களால் சகல அறிவிற்கும் தாயே காரணமாகிறாள். இதனால் தான் "ஈன்றாளி லென்ன கடவுளுமில்" என்று பெரியோர் கூறியருளினார்கள். இவற்றால் தாயே மேலான தெய்வமும் குருவுமா யிருக்கிறாளென்று வேதாதி நூல்கள் கூறுகின்றன.

இதனாலேதான் தந்தையைவிடத் தாய் சிறந்தவளென்று கூறுகிறார்கள். தாய் பாபியானாலும் அவளை நிந்திக்கப்படாது என்கிற விதியுமுண்டு. புத்திரன் சந்நியாசியாக இருக்கிறான். அவன் தகப்பன் அந்தச் சந்நியாசியான புத்திரனை வணங்கவேண்டும். சந்நியாசம் பெற்ற புத்திரன்

தாயையே வணங்கவேண்டும். இதனால் தாயின் சிறப்பு மிகப் பெரிது என்றறியலாம். "அன்னை பிதா" என்று கூறுவதுபோல ஸம்ஸ்கிருதத்திலும் "மாதாபிதா" வென்றே தாயை முன்வைத்துக் கூறப்படுகின்றது. இதனால் தாயே சிறந்த தெய்வமும் குருவுமாமென்று அறிவுள்ளவர்கள் அறிந்துகொள்வார்கள்.

கல்வியைத் தானே போதித்து வேதாதி கலைகளையும் முறைப்படி உபதேசித்தால் அந்தப் பிதாவும் சிறந்த குரு தெய்வமாகவே மதிக்கப்படுகிறான். பிதாவை விடக் கல்வி போதித்தவன் சிறந்தவன். அவனை விட வேதாதிகலைகளை யோதுவித்தவன் சிறந்தவன். அவனைவிட மந்திரம் முதலிய வுபதேசித்துத் தேவாராதனை செய்யக் கற்பித்தவன் சிறந்தவன். பிரம ஞானோபதேசம் செய்து பிரமத்தை யறிவிப்பவன் எல்லாரையும் விடச் சிறந்தவன். தந்தை சரீரத்தை மாத்திரம் கொடுக்கிறான். ஞானோபதேச குருவோ ஜனனமரணங்களற்ற நித்தியாநந்த பேரின்ப மோட்சத்தை யளிக்கிறான். ஆதலால் ஞானோபதேச குருவை யெல்லாரினும் மேலானவனென்று நூல்கள் கூறுகின்றன. பிரமஞானம் பெற்றவனுயினும் முதற்றெய்வங்களாகிற மாதா பிதாக்களை அலட்சியம் செய்யக் கூடாது.

முற்காலத்தில் தர்ம சந்தான விருத்தியைக் குறித்தே விவாகம் செய்யப்பட்டது. அதனால் அந்த மாதாபிதாக்கள் தர்ம சந்தானத்தையுற்பத்தியாக்கித் தர்மாபி விருத்தி செய்தார்கள். அதனால் புத்திரர்களைச் சதாசாரத்தில் பிரவிருத்தி யுள்ளவர்களாக நடத்தி வந்தார்கள். மாதாபிதாக்களுக்கு அபரக்கிரியை செய்வதே புத்திரர்களுக்குச் சிறந்த தர்மமாகக் கருதப்பட்டது. அது மாதுர் யக்ஞம், பிதுர் யக்ஞமென்று நூல்களாற் புகழ்ந்து கூறப்பட்டது. மாதாபிதாக்களைப் போஷிப்பதே புத்திரர்களுக்குச் சிறந்த தர்மமா மென்பர் பெரியோர். இல்லறத்திலோ அதற்கு மாருகத் தன் சுகத்தைக் கருதியே விவாகம் நடத்தப்படுகிறது. தர்மாபி விருத்திக்காகப் புத்திரர்களைப் பெறுவதென்பதில்லை. தமது வயோதிக காலத்தில் தம்மைப் போஷிப்பதற்காகவே புத்திரர்களை விரும்புகிறார்கள். எந்த வழியிலாவது பணம் சம்பாதிப்பவனே சிறந்த புத்திரனுகப் புகழப்படுகிறான். கல்வியும் ஞானமுமுள்ள புத்திரன் பெருமை பெறுவதில்லை. இதனாலும் வேறு காரணங்களாலும் அதிதி பூஜையாதி பஞ்சமகா யக்ஞங்களும் மறக்கப்பட்டன. காசு சம்பாதிப்பதையே முக்கியப் பொருளாகக் கொண்டு புத்திரர்களைப் படிப்பிப்பதினால் சமயநூலுணர்ச்சி மறைந்தே போய்விட்டது. தெய்வமுண்டென்பது சந்தேகமே; அதைக் கவனிப்பாரில்லை. தெய்வ சிந்தனை குறைந்ததனால் தர்மசிந்தை குறைந்துபோயிற்று.

தெய்வநிச்சயமும் தர்ம சிந்தனையுங் குறையவே பஞ்சமும் தரித்திரமும் பரவின. அதுகாரணமாகவே பலவகையான நூதன நோய்கள் உற்பத்தியாகின்றன. வானம் மழை பொழிதலை மறந்தது. அகால மழை

பெய்து பயிரை யழிக்கின்றது. காலமழை யில்லை. சூரியன் காய்ந்து கொல்கிறான்.

இனியாவது பிரஜைகள் தமது புத்திரர்களுக்கு மத நூல்களைப் போதித்துத் தெய்வ ஞானமும் தர்மசிந்தையு முண்டாகும்படி செய்வார்களாயின் ஈடேறுவார்கள். பிராமணர்களிற் பலர் சுஜாதி தர்மத்தைக் கவனிப்பதில்லை. முன்பு அவர்களாலேயே உலகம் நடைபெற்று வந்தது. பிராமணர்கள் தமது குலாசாரந் தவறாமல் நடப்பதற்காகவே பலவகையான ஆபத்தர்மங்கள் நூல்களால் விதிக்கப்பட்டுள்ளன. சமைய நூல்கள் போதிக்கப்பட்டால் அவர்கள் ஆபத்தர்மங்களை யுணர்ந்து, தமது குலாசார ஒழுக்கம் கெடாமலிருந்து, தர்மத்தையும் செய்வார்கள். பிராமணர்களுடைய தவறுதலாலேயே ஏனைய வருணத்தாரும் நெறிகடந்து நடக்க நேரிட்டது. பூசுரர்களென்று நூல்களாற் புகழப்பட்டு யாவருக்கும் நன்மார்க்கத்தை யுபதேசித்துக் குருமார்களென்று சிறந்து விளங்கின பிராமணர்கள் இப்பொழுது தாங்களிருக்கும் நிலைமையை யோசித்து, முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்ட சன்மார்க்கத்தைக் கைக்கொண்டு நடக்க முயல்வார்களானால் அப்பொழுதே பரத கண்டத்துக்கு க்ஷேமம் பிறந்ததென்னலாம். முற்றிற்று.

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## இந்தியாவின் சாயத் தொழில்.

பண்டைய காலத்தில் நம் இந்திய நாட்டினர் பற்பல கைத்தொழில்களில் பிரபலத் தேர்ச்சி யடைந்திருந்தனர். இந்திய சில்பிகள், கம்மாளர், சேணியர், இரஜகர் முதலிய தொழிலாளிகளின் திறமையைக் கண்டு பிரமை கொண்டு அவர்களைப் புகழாத தேசத்தார் கிழக்கில் சீன நாட்டிலிருந்து மேற்கில் இங்கிலாந்து வரையில் ஒருவரேனுமில்லை. அவர்களால் செய்யப்பட்ட வஸ்துக்கள் அக்காலத்தில் இந்தியாவுடன் வியாபாரம் செய்துவந்த எல்லா நாடுகளிலும் நன்கு மதிக்கப்பட்டு அதிக லாபத்துடன் விற்கப்பட்டு வந்தன. ஆனால் இப்பொழுதோ காலவித்தியாசத்தினாலும் நம்முடைய மதியீனத்தினாலும் அக் கைத்தொழில்களில் அநேகம் சீர்குலைந்தும், அநேகம் க்ஷீணித்தும் போய்விட்டன. நம்நாட்டில் இவ்வாறு க்ஷீணதசை யடைந்திருக்கும் கைத்தொழில்களில் சாயத்தொழிலும் ஒன்று.

இவ்வுலகத்தில் தொன்றுதொட்டு கையாளப்பட்டுவரும் தொழில்களில் சாயம் தோய்க்கும் தொழிலும் ஒன்றென்று சொல்லலாம். உலகில் நாகரிகம் அதிகரிக்க அதிகரிக்க அநேக வஸ்துக்கள் தள்ளப்பட்டு வருகின்றன. அப்படித் தள்ளப்பட்ட வஸ்துகளுக்குப் பதிலாகப் புதியவையும் அவைகளைவிட உயர்ந்தவையுமான சாமான்கள் சில சமயங்களில் செய்து உபயோகிக்கப்பட்டு வருகின்றன. ஆனால் இவ்வுலகில் நாகரீக

விருத்தியால் சாயங்களுக்கும் சாயம் தோய்க்கும் தொழிலுக்கும் இது வரையில் யாதொரு குறைவும் நேரிடவில்லை; இனிமேலும் நேரிடப் போகிறதுமில்லை. உலகமுள்ள பரியந்தம் சாயத்தொழில் மேன்மேலும் விர்த்தியாகிக்கொண்டே வருமென்று நாம் துணிபுடன் சொல்லலாம்.

ஜெர்மெனியர்கள் கலவைச் சாயங்களை (Synthetic dyes) செய்யத் தொடங்கியதற்கு முந்திய காலங்களில் நம் இந்தியாவில் செய்யப்பட்டு வந்த நீலசாயம் உலகமெங்கும் பிரசித்திபெற்றிருந்தது. இது இந்திய இரஜகர்களுக்கு ஏராளமான இலாபத்தையும் கொடுத்துவந்தது. ஆனால் இந்தியாவில் இக்காலத்தில் இதன் நிலைமை மிகவும் விசனிக்கத்தக்கதே. சாயங்களைச் செய்வதும், அச்சாயங்களைத் துணிகளுக்குத் தோய்ப்பது மான தொழில் வெகு காலத்திற்குமுன் நம் இந்தியாவில் முதல் முதல் ஆரம்பிக்கப்பட்டு, இந்நாட்டிலிருந்து சுமார் 2300-வருஷங்களுக்கு முன் மேல் நாடுகளுக்குப் பரவியதென்று தெரியவருகிறது. மகா அலெக் ஸாண்டர் சக்ரவர்த்தி (Alexander the Great) என்னும் கிரேக்க தேசத்து அரசன் இந்தியாவிலிருந்து தன் தேசத்திற்குத் திரும்பிப் போகையில், சாயம் தோய்த்த பஞ்சு வஸ்திரங்களை மாதிரிக்காக இவ் விடத்திலிருந்து தன் நாட்டிற்குக் கொண்டுபோனதாகவும், அத்தேசத் தார் அவ்வஸ்திரங்களைக் கண்டதும் அவ்விதமானவைகளை உடுக்க அபே க்ஷித்து அது முதல் அம்மாதிரியான வஸ்திரங்களை இந்தியாவிலிருந்து தருவிக்கத் தொடங்கியதாகவும், அதன் பிறகு ஐரோப்பாவிலுள்ள மற்ற தேசங்களும் ஒன்றின்பின் ஒன்றாய் இவ்விதத் துணிகளையும் இந்திய சாயங் களையும் வாங்கத் தொடங்கியதனால் இந்தியர்கள் அதுமுதல் அநேக நூற் றாண்டுகள் வரையில் இவ்வியாபாரத்தை மேல் நாட்டாருடன் செய்து மிகவும் இலாபமடைந்து வந்ததாகவும் தேசசரித்திரங்களின் மூலமாய் நமக்குத் தெரியவருகிறது.

அக்காலத்திய ஜனங்கள் இயற்கை சாயங்களோடு (with natural dyes) திருப்தி யடைந்திருந்தனர். ஆனால் இக்காலத்திய மனிதர்கள் ரஸாயன சாஸ்திரத்தில் தேர்ச்சியடைய வடைய கலவைச்சாயங்கள் செய் யப் புகுந்தனர். இதனால் மேல்நாட்டுக் கலவைச் சாயத்திற்கும் நம் நாட்டு இயற்கைச் சாயத்திற்கும் போட்டி புண்டாயிற்று. இந்தப் போட்டியில் மலிவான கலவைச்சாயமே ஜெயித்து விட்டது. அந்தோ, இயற்கை சாயங்களுக்கு பிறப்பிடமாயிருந்து, அவைகளை மேல் நாடுகளுக்கு ஏராள மாய் ஏற்றுமதி செய்துவந்த நம் நாடு நாளடைவில் இயற்கைச்சாயம் செய் யும் தொழிலைக் கைசோர விட்டுவிட்டு மேல் நாட்டிலிருந்து—முக்கியமாய் ஜெர்மெனியிலிருந்து கலவைச் சாயங்களை வாங்கி உபயோகித்து வரு கிறது. (இயற்கைச் சாயமானது கலவைச் சாயத்தைக் காட்டிலும் சற்று விலை யதிகமானதா யிருந்தபோதிலும் அதைவிட மிகவும் "கெட்டி யானது" என்பதில் சந்தேகமில்லை.)

இப்பரிதாப நிலைமையிலிருந்து நமக்கு விமோசனமில்லையா? என் இல்லை? நமது சாயத் தொழிலுக்கு நேர்ந்த விபத்துகளைப்போலவே நமது நெசவுத் தொழிலுக்கும் நேர்ந்தது. கையினால் செய்யப்பட்ட டக்கா (Dacca) மஸ்லின் முதலிய மிக்க நாணயமான வஸ்திரங்களுக்கு உலகெங் கும் பிரசித்தி பெற்றிருந்த நம் பொன்னாடு முரட்டுத் துணிகளையுங்கூட இங்கிலாந்திலிருந்து தற்காலத்தில் தருவித்து உபயோகிக்கும் நிலைமையில் இருக்கிறது. இந்நிலைமையிலிருந்து நாம் உயர்வடைய மகான்கள் இப் பொழுது நமக்கு விமோசனம் அளித்துக்கொண்டு வரவில்லையா? நம் நாட் டார் இப்பொழுது கதர் உடுக்க ஆரம்பித்திருப்பதினால் க்ஷீணதசையி லிருந்த நம்முடைய நெசவுத் தொழிலுக்கு பெருங்கிளர்ச்சி யுண்டாக வில்லையா? வெளிநாடுகளிலிருந்து நம் இந்திய நாட்டுக்கு வரும் துணி வகைகளின் தொகை இப்பொழுது வருஷத்திற்கு வருஷம் குறைந்து கொண்டே வரவில்லையா? இதுபோலவே இப்பொழுது கதர் அபிவிர்த்திக் காக தமது வாழ் நாட்களையும், சுகத்தையும், தியாகஞ் செய்துவரும் தேசாபிமானிகளும், நம் நாட்டு இராஜகர்களும் "கதருக்கும், நம் நாட்டில் சாயம் தோய்க்கப்படும் ஏனைய துணிகளுக்கும், கடவுளின் அநுக்கிரகத் தால், நம்மால் இயன்றவரையில் நம் நாட்டில் செய்யப்படும் இயற்கைச்- சாயங்களையே உபயோகிப்போம்" என்ற ஓர் பிரதிக்ஞை செய்து கொண்டு, அவ்வாறே நடந்துவந்தால் இன்னும் பத்து வருஷங்களுக்குள் நம் தேசத்து சாயத்தொழில் மிகவும் உன்னத பதவிக்கு வந்துவிடு மென் பதற்கு சற்றேனும் ஐயமில்லை. இதுவுமன்றி இந்திய மகாஜனங்களும் இத்தகைய சாயம் தோய்க்கப்பட்ட வஸ்திரங்களையே தம்மால் இயன்ற வரையில் உடுப்பதென்று தீர்மானஞ் செய்துகொண்டு அத்தீர்மானத்தில் உறுதியாய் நிற்கவேண்டும்.

எனது அருமைச் சகோதரர்களே! நீங்கள் அப்படி நெறியில் நிற்பீர் களா? ஐயோ! கண்ணிருந்தும் குருடர்போலும், கற்றறிந்தும் மூடர் போலும், தேசாபிமானத்தைத் தினையளவு மெண்ணாமல் அயல்நாட்டு 1703-ம் நம்பர் சலவைமல் துணியையே மேலும் மேலும் ஆதரித்துவர விரும்புவது அழகாமா? ஆழ்ந்து யோசிப்பீர்களாக.

ஆற்காடு, இராஜரத்தின முதலியார், பி. ஏ.

---

## மாதர் நீதிமஞ்சரி.

(301-ம் பக்கத் தொடர்ச்சி.)

### கௌசிக வேதியரும் கற்புடைப் பத்தினியும்.

விசிட்டபுரமென்னும் நகரத்தில் கௌசிகனென்னும் பெயருடைய வேதியரொருவரிருந்தார். அவர் தம் இளம்பருவத்திலேயே சரீரம் செல் வம் முதலியவற்றின் நிலையாமையை புணர்ந்தார். "நிலையாமையாகிய

சரீரத்தைக்கொண்டு, நிலைமையுடையதாகிய மோக்ஷ சாம்ராஜ்யத்தையடைய முயலவேண்டும். அதற்கு வேதாத்தியயனமே சிறந்த சாதனம். வேதமறியாமல் வேதியனெனப் பெயர் வைத்துக்கொள்வது, இரண்டு கண்களு மில்லாதவளைப் *பங்கஜாக்ஷி என்றழைப்பது போலாகும்'' என்று பலவாறு சிந்தித்துத் தகுந்த ஆசாரியனைத்தேடித்திரிந்து, முடிவில் வசிஷ்டமகாமுனிவரை யடைந்து, சாஷ்டாங்கமாக அவரடிகளில் விழுந்து நமஸ்கரித்து, "சுவாமி! அடியேன் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து சம்சாரக்கிலேசங்களை யொழித்து உய்யும்படிக் கிருபை புரியவேண்டும்'' என வேண்டி அவரருள் பெற்று, வேதங்களைக் கற்றுக்கொண்டிருந்தார்.

இங்ஙனமாக, ஓர்நாள், அப்பார்ப்பனர் ஏதோ வொரு காரியமாக வெளிச் சென்றார். நடுப்பகலாகலின் சூரிய வெப்பந் தாங்கமுடியாமல் ஓர் மரநிழலில் தங்கினார். அப்படி உட்கார்ந்துகொண்டிருக்கும்பொழுது, குளிர்ந்த ஸ்பரிசத்தை யுடைய யாதோ ஒரு பொருள் தலைமீது விழுந்ததாகத் தோன்றவே அவர் திடுக்கிட்டு, கையால் துடைத்துப் பார்த்தார். அது ஓர் பறவையின் எச்ச (மல)மாகக் காணப்பட்டது. அண்ணாந்து நோக்கினார். தன் தலைக்கு நேராக அம்மரத்தின் கிளை யொன்றில் ஒரு கொக்கு உட்கார்ந்திருப்பதைக் கண்டு, 'அதுவே எச்சமிட்ட தென்றும், அவ்வெச்சமே தம் தலையை அசுத்தப்படுத்தி விட்டதென்றும் அறிந்தார். அவ்வளவுதான், வந்துவிட்டது அன்பில்லாத கோபம் ஐயருக்கு. கண்களிரண்டும் சிவந்தன. சிவபிரான்மேல் மன்மதன் மலர்ப்பகழிகளை யெய்தபோது அப்பரமசிவன் சினந்து நெற்றிக்கண்ணால் உறுக்கிப் பார்த்தாற்போல பார்த்தார் அக்கொக்கினை. உடனே சிவனுடைய பார்வையால் மதன் எரிந்து சாம்பலானதுபோலவே கொக்கும் சாம்பலாய்விட்டது.

அந்தணருக்குண்டான ஆச்சரியத்திற்களவே யில்லை. "ஆ ஆ என்ன என் மகிமை! இதுவரை என் பெருமையை யான் அறிந்துகொள்ளாமலிருந்தேனே! என்போன்ற தவச் சிரேஷ்டர் இவ்வுலகில் வேறு யாவரிருப்பார்'' என்றெண்ணினார். அகங்காரம் மேலிட்டது. அனைவரும் தன்னை விடத் தாழ்ந்தவர்களே யெனக் கருதினார். உலகத்தை யழிக்கவும் படைக்கவும் காக்கவும் தன்னாலாகுமென்று இறுமாப்புக்கொண்டார். அந்தோ பாவம்! அழிவுக்கு முன்னது அகந்தை யென்பதை அறியவில்லை போலும் அவ்வந்தணர்.

மீண்டும் நடந்து சென்றார். பொழுது பட்டது. கொக்கை யெரித்த கௌசிகரைப் பசி யெரிக்க ஆரம்பித்தது. அவர் அகங்காரம் பசியிடம் செல்லுமோ? அருகிலிருந்த அக்கிரகாரத்துள் நுழைந்து ஓர் வீட்டின் தலைக்கடையில் நின்று அன்ன மிரந்தார். அதை அவ்வீட்டிலுள்ள உத்தமி கேட்டாளாயினும் தன்நாயகன் சாப்பிட்டுக்கொண் டிருந்தமையால்,

---

*பங்கஜம் - தாமரை; அக்ஷம் - கண்; பங்கஜாக்ஷி - தாமரை மலர் போன்ற அழகிய கண்களை யுடையவள்.

அவருக்குப் பணிவுடனும் பக்தியுடனும் சமீபத்திலிருந்து வேண்டிய உபசாரங்களைச் செய்துகொண் டிருந்தாளாதலின் வந்த அதிதிக்கு உடனே அன்னமிடக்கூடவில்லை. ஓர் தாயானவள் தன் குழந்தைக்கு அன்னமூட்டும்பொழுது சமீபத்திலிருந்து பலவகை வேடிக்கைகளைக் காட்டி உண்பிப்பதுபோல மனைவியும் கணவன் போஜனம் செய்யுங்காலத்தில் அருகிலிருந்து, சாப்பிடவொட்டாது தடுக்கும் எவ்வகை யெண்ணங்களும் மனத்தில் தோன்றாதபடி, இனிய வார்த்தைகளால் சந்தோஷமுண்டாக்கிக் கொண்டிருக்க வேண்டியது கடமை யல்லவா?

பர்த்தாவைப் பக்தியுடன் உபசரித்து உண்ணச்செய்து கொண்டிருந்த அவ்வுத்தமி, அவர் உண்டு முடிந்ததும் கைகால்களைச் சுத்தம் செய்வித்து, தாம்பூலமளித்துவிட்டு, அதிதிக்கு அன்னமிட ஆவலோடு சென்று ஓர் பாத்திரத்தில் அன்னமெடுத்துக்கொண்டு வெளியில் வந்தாள். "வெறுவாயை மெல்லும் அம்மைக்கு நாழி அவல் அகப்பட்டதுபோல" என்னும் பழமொழிப்படி, தன் கோபப்பார்வையானது எதிரில் பட்ட பொருள்களை யெல்லாம் எரிக்குந் தன்மையுடையது என்னும் அகங்காரம் தலைக்கேறி, உலகமுழுதும் தனக்கு அடங்கி மரியாதையுடன் நடந்து கொள்ளவேண்டுமென்றும், தற்பெருமை கொண்டிருக்கும் அவர் ஓர் பெண்பால் தன்னை யலட்சியம் செய்யக்கண்டால் சும்மா இருப்பாரா? காலாக்கினி ருத்திரன்போலச் சினந்து "பெண்ணே! நான் எவ்வளவு நேரமாக இங்கு நின்றுகொண் டிருக்கிறேன்! உண்டென்றும் இல்லை யென்றும் உடனே சொல்லி விடாமல் என்னைக் காக்க வைத்தாயல்லவா? வந்த அதிதிக்கு உபசாரம் செய்வதைவிடப் புருடனுக்குத் தொண்டு செய்வது சிரேஷ்டமென்று நினைத்தாய்போலும்! என்னை யாரென்றெண்ணினை? தராதரந் தெரியாமல் சாமானியனாகக் கருதியோ உபேக்ஷை செய்தாய்?" என்று கூறிக் கண்களை உருட்டி ஒரு பார்வை பார்த்தார். அப்படிப் பார்த்தால் கொக்கைப்போலச் சாம்பலாய் விடுவாள் என்ற எண்ணம் போலும்.

அவரது உள்ளக்கருத்தை உள்ளபடி உணர்ந்த அவ்வுத்தமி அவரது பேதைமையைக் குறித்து நகைத்து அவரை நோக்கி "ஓ பிராம்மணா! என்னைக் கொக்கென்று நினைத்தாயா? நீ ஒன்றுமறியாதவன். தருமநெறி இன்னதென்பதை நீ அறியாய். தெரியாதவன் ஒருவன், தன்னை எல்லாந் தெரிந்தவனாக மதித்து விடுவானானால் பிறர் சொல்வதையும் கேட்கமாட்டான். நீயும் அத்தகைய நிலையிலிருக்கிறாய். யாதையால் சொன்னாலும் கேட்கப்போகிறதில்லை 'அரை கல்வி முழுமொட்டை' யென்பார்கள். நிறைகுடம் நீர் தளும்பாது. நீ குறைகுடமாகலின் கூத்தாடுகின்றனை. நீ இன்னும் பக்குவப்படவேண்டி யிருக்கிறது. அதற்குள் அவசரப்பட்டுவிட்டாய். அந்த அகங்காரம் உன்னைக் கெடுப்பதற்காக உன் தலைமேல் ஏறி உட்கார்ந்துகொண் டிருக்கிறது. நீ பக்குவப்படவேண்டுமானால் பொறு

மையுடன் சாஸ்திரவிசாரணை செய்து சாது சங்கப் பழக்கமுறவேண்டும். நான் இவ்வாறு சொல்வதன் காரணமென்னவென்றால், நான் என் கடமையினின்றும் சிறிதும் தவறவேயில்லை. அதற்காக நீ சந்தோஷிக்க வேண்டியதை விட்டுக் கோபங்கொண்டனை. இது நீ அனுபவமற்றவனென்பதைக் காட்டுகின்றது. என்போன்ற மாதர்களின் கடமையைச் சுருக்கமாகக் கூறுகிறேன் கேட்பாயாக.

"குலமகட்குத் தெய்வம் கொழுநனே" என்றபடி கற்புடை மடந்தையர்க்குக் காந்தனே கடவுள். ஆகலின் பதி பக்தியே பகவத்பக்தி. கணவன்தொண்டே கடவுள்தொண்டு. கணவன் கட்டளையைக் கடவாமையே சிறந்த தவம்; அதுவே கற்பு. "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" அதுவே தானமும் தருமமும். காரிகைகளுக்குக் கணவனைத் தவிர வேறு கடவுளில்லை; தவமில்லை; தருமமில்லை; தானமில்லை. நாயகனது குறிப்பறிந்து நடப்பவளே நல்ல மனைவி. "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்பது முதுமொழி. பர்த்தா எக்காரணத்தாலேனும் கோபித்தாலும் தாங்களும் கோபிக்காமல் பொறுமையைக் கைக்கொள்ளல் வேண்டும். அவர் துன்பம் தம் துன்பமாகவும், அவர் இன்பம் தம்மின்பமாகவும், அவர்பகைவரைத் தம் பகைவராகவும், அவர் நட்பினரைத் தம் நட்பினராகவும் கருதி யொழுகல் அவசியம். அவர் புசித்தபின் தாம் புசிக்கவேண்டும்; அவர் உறங்கியபின்பு தாம் உறங்கவேண்டும்; அவர் விழித்தெழுமுன் தாம் எழுந்து தந்தசுத்தி செய்து முகங்கழுவி மங்களகரமான முகத்துடன் நாயகர் துயில்விட்டெழுகையில் அவரெதிர் சென்று பாதங்களில் விழுந்து பணிதல் வேண்டும். அன்னிய புருடரைக் காண்டலும், அவர்களைப் புகழ்ந்து பேசுதலும், பிறர் புகழக்கேட்டலும் கூடாவாம். பொதுவாகக் கூறினால், மனைவியர் மணாளரை அன்ன பானாதிகளால் போஷிக்கும் விஷயத்தில் அன்னையைப்போலவும், பணிவிடை புரியும் விஷயத்தில் அடிமையைப்போலவும், அவர்களாலாவது குடும்ப நிர்வாகத்தாலாவது எவ்வளவு கஷ்டங்கள் நேரினும் பொறுமையுடன் சகிப்பதில் பூமிதேவியைப்போலவும் நடந்துகொள்ள வேண்டும். இவ்வாறு பிறதெய்வங்களைத் தொழாமல் கொண்டாரையே குலதெய்வமாகக் கொண்டொழுகும் கோதையர் சிறப்பை யார் குணிக்க வல்லார்? அன்னார் மழை பெய்யெனப் பெய்யுமே. உலகத்தை யழிக்கக் கருதினும் அக்கணமே அழியுமே. ஆகையால் அந்தண! என் நாயகன் பணிவிடையில் நானிருக்கும்போது சாக்ஷாத் பரமசிவனே வந்தாலும் எனக்கு நிமித்தமில்லை. இங்ஙனமாக, நீ தெரியாத்தனத்தால் கோபிப்பது அழகல்ல" வெனக் கூறி முடித்தாள்.

அதைக்கேட்ட கௌசிக வேதியர் பயந்து ஸ்தம்பித்து நின்று 'என்ன வியப்பு! எனக்கு மாத்திரம் தெரிந்த கொக்கின் சங்கதியை, இவ்வம்மையார் எங்ஙனமறிந்தார்? கற்பின் மகிமையே மகிமை! இவளல்லவா பாக்கிய

சாலி! விரதசீலி! எனப் பலவாறு புகழ்ந்து மும்முறை வலம்வந்து முடி அடியில் பட விழுந்து பணிந்து எழுந்து கைகூப்பி, "தாயே! என்னைப் புனிதனுக்கவேண்டும்" என வேண்டினர். அப்புனிதவதியார், அவரைப்பார்த்து "ஐயா! மிதுலாபுரியில் தருமவியாத னென்றொரு வேடனிருக்கிறான். அவனிடம் சென்று தருமோபதேசம் பெற்றுக்கொள்ளும்" எனக் கூற, வேதியர் மறுபடியும் அவ்வம்மையை நமஸ்கரித்து, "யான் செய்த தவமே வடிவெடுத்து வந்தாற்போலும் அம்மணி! என் குற்றத்தை மன்னிக்கவேண்டும் தாயே" என்று புகழ்ந்து விடை பெற்று, மிதுலா நகரஞ்சென்று, தருமவியாதனிடம் உபதேசம்பெற்று சன்மார்க்கத்தை யடைந்தார்.

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## கம்பராமாயண வினு விடை.

சென்ற புரட்டாசிமாத சஞ்சிகையில் கம்பராமாயணவினு வென்று தலைப்பெயர் கொண்டு ஓர் வியாசம் வெளிவந்தது. அவ்வியாசத்தை வாசித்ததும் என் மனதி லவ்வினுவுக்கு விடைதோன்றியதை நான் வெளியிடுகிறேன்.

கம்பர் பாடிமுடித்த காப்பியத்தை திருவரங்கம் திருக்கோயில் ஸன்னிதானத்தில் அரங்கேற்றல்வேண்டி யவ்வரங்க வாசிகளின் முக்கியமானவர்களை வினவ வவர்களதில் நரஸ்துதி யிருக்கக்கண்டு அது அச்சந்நிதானத்தி லரங்கேற்றத்தக்கதல்லவென்று மனதினினைந்தவர்களாய் வீணுக வ்வரை அவர் கையொப்பம் இவர் கையொப்பம் வாங்கிவரச்சொல்லி அதின் மூலமாயினும் விக்கினங்கள் நேரட்டுமென்றெண்ணிக் கடைசியாகவவர் மகன் அம்பிகாபதியின் கையொப்பமும் வாங்கிவரச் சொன்னர்கள். தனக்கு மேலான வித்துவானல்ல னுதலால் சற்று கிலேசித்து ஆயினுமவன் தன் மகன்தானே என்றெண்ணி அவனிடம் சென்று பிள்ளாய்! இக்காவியத்திற்கு உன் கையொப்பமும் வேண்டுமாம் கொடுவென்றார். தனக்குக்கொடுக்கக் கூடிய பூஸ்திதி யொன்றும் தன் பிதாவிடமில்லை; பெருங் காப்பியம்பாடி முடித்தனரே அதில் ஏதாவது சூட்சும மந்திரமிருக்கும் அது தனக்குப் பயன் பயக்கும் அதை யறிந்துகொள்வோமென்று கருதி இக்காவ்வியத்தில் எனக்கு ஏதாவது ஆஸ்பதமிருக்கிறதாவென்று வினவினன். அழுகிற குழந்தைகளை சாந்தப்படுத்துவதற்காக அடைமொழிகள் சேர்த்துச் சளசள கோள கோள சளசள மளமள என்று பெற்றோர்கள் சொல்வதுண்டு. தன்மகன் என்ற ஸ்வாதந்தரியத்தோடு நீ ஆஸ்பதம் வேண்டுகிருயே உனக்கும் வைத்திருக்கிறேன் என்று சளசள கனகன, கொள கொள, கிளுகிளு என்ற விந்நான்கு அடைமொழிகளையும் அவைகள் அமைந்துள்ள பாடல்களையும் எடுத்தோதினர். இது தான் சாதாரணமாய் வழங்கி வருகிற இச்சந்தர்ப்பத்தின் கருத்து.

உளக் கருத்து ஒன்றுள அதாவது.

அம்பிகாபதி என்பது யாருடைய நாமம்? அம்பிகை யென்று பார்வதிக்குச் சொல்லுகிறது. பார்வதியை யாதிபத்தியமாகக் கொண்டவர் ஈசுவரன். அம்பிகாபதி யென்றது ஈசுவரனுடைய திருநாமம். அவ்வீசுரனை ஆராதிக்கும் வழிகளில் சோடச உபசாரங்கள் ஏற்பட்டன. அவைகளில் முக்கியமானவைகள் நான்கு அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்தியம், கற்பூரஹாரதி யிவையே தெய்வத்தன்மை வாய்ந்த தாயுமானரும் இதைப் பாடியுள்ளார்.

துரியநிறை சாந்த தேவதையா முனக்கே
தொழும்பனன்ப பிஷேக நீர்
உள்ளுறையி லென்னுவி நைவேத்தியம் பிராண
னேங்கு பதி தூபதீபம்.

ஒருகாலமன்றிது சதாகால பூஜையாம்.

[அர்ச்சனை எல்லாவற்றிலும் முக்கியமானது. பூஜை யென்றலே அர்ச்சனை யென்றர்த்தமாகும்.]

சளசள வென்று மழைத்தாரைகள் விழுவதுபோல் கங்கா ஜலத்தாலும் பால், இளநீர், பந்நீர், முதலானதுகளாலும் தாரை தாரையா யபிஷேகம் செய்வதும், களகளவென நல்முத்துதிர்தல்போல் புஷ்பங்களை யுதிர்த்து அர்ச்சனை செய்வதும், கோளகோள பாயஸம் முதலான வற்புதமான உண்டிகளை நைவேத்தியம், செய்வதும் கிளுகிளெனப் பிரகாசமாக கற்பூர ஹாரதி யெடுப்பதுமே அம்பிகாபதியை வழிபடக்கூடிய சிறந்த பூஜையாகும். இந்நான்கினையும் நீ கைக்கொண்டு தினந்தோறும் நீ யீசுவரனை யாராதித்து வந்தாயானல் உனக்கு மேலான பதவி கிடைக்குமென்று குறிக்கும்படியாக அந்நான்கு அடைமொழிகளை எடுத்துக் காட்டினர் என்றும். வே. நரஸிம்மய்யர், B. A.,

Senior Auditor, Local Fund Accounts, Camp Mergin, Burma.



## சுக்கு கியாழமோ வல்ல பால் கஞ்சியே

### காலைக் காப்பிக்குப்பதில் பருகும் நல்லுணவாம்.

சுக்குநீர்க் கியாழத்தைத் தித்திப்பிட்டு பால்சேர்த்து காப்பியைப் போல் செய்து காப்பிக்குப் பதிலாக அதைப் பருகுவதினுல் தேகத்திலுள்ள அனேக வியாதிகளை யகற்றிவிடுமென்றும் ஆதலால் ஒவ்வொருவரும் சுக்குநீர் கியாழத்தையே காப்பி தேயிலை முதலான பானங்களுக்குப்பதிலாகச் சாப்பிட்டுவரும்படிக்கும் ஓர் நிருபர் வேண்டியுள்ளார். சுக்குக் கியாழத்தை 10 பொழுது 20 பொழுது சாப்பிட மேற்கூறிய சௌக்கியங்களைக் கொடுப்பதுண்மையே. அதைத் தினசரி ஆகாராதிகளிலொன்முகக் காலையிலு மிடைவேளையிலும் பருகுவது தேக அசௌக்

கியத்தை யுண்டாக்கு மல்லாது தேக சௌக்கியத்தைக் கொடாது. நோய் கண்டபொழுது மருந்துண்டால் அந்நோயைக் கண்டிக்கும். நோயைக் கண்டிக்கக்கூடிய குணம் தன்னிடத்தி லிருக்கிறதென்று வம்மருந்தை உணவாக வுண்ணலாமா. சுக்கு வயிற்றைக் கல்லும், வயிற்றில் புண்ணை புண்டாக்கும். அதனால் ஜீரண சக்தி குறையும் அது கொடிய வுஷ்ணம். பிரதிதினமுமுட்கொண்டால் வயிற்றிரைச்சல், வயிற்றுநோவு, தலைவலி முதலான வியாதிகளுக்குக் காரணமாகும்.

நன்னாரிவேரைத் தூளாக்கி அதைக் காப்பியைப்போல் தயார்செய்து பருகுவதுண்டு. அது வயிற்றழலை யெடுத்துவிடும். தேகத்திற்குக் குளிர்ச்சியைக் கொடுக்கும் என்றாலும் நெடுநாள் சாப்பிட்டு வந்தால் வாதத்திற்கிடமாகும். இதை யெல்லாம் காப்பிக்கு மாற்றாகவும் தற் கால சாந்தியாகவும் இடையிடையே பருகலாமே யல்லாது தினசரி உண வாக வுட்கொள்ள முடியாது.

காலையில் ஒரு முஷ்டி (கைப்பிடியளவு) அரிசி நொய்யை யெடுத்துக் களைந்து காலேயரைக்கால் அல்லது அரைபடி ஜலத்தில் கஞ்சியாக காய்ச்சி அக்கஞ்சியைக் கரையவிட்டு கஞ்சித்தெளுவை யிறுத்துக் கொண்டு வேண்டிய பாலையும் சீனியையும் சேர்த்து 10 நிமிஷம் வைத் திருந்து பிறகு அடுப்பிலிருந்து யிறக்கி அதைத் தினம் காலையில் காப்பிக் குப்பதிலாகப் பருகினால் தேகத்துக்கு வலுவுமன்றி காப்பி, தேயிலை, கொக்கோ சுக்குக் கியாழம் இவைகளைப்போல் கெடுதல் செய்யாது. தேகசௌக்கியத்தைக் கொடுக்கும். இது ஓர் நல்லுணவுமாம். இதி னனுபோகத்தைப் பாருங்கள். ஓர் நண்பர்.

குறிப்பு:—இது உத்தமமான ஆகாரமே. வியாதியஸ்தரும் அருந்தலாம். இக்கஞ்சியில் ஒரு சிறு சுக்குத் துண்டைப்போட்டுக் காய்ச்சுவதால் மணம் தருவதோடு வாயு சேராமலும் செய்யும். மற்றபடி இந் நண்பர் கூறுவதுபோல் சுக்குக்குச் சில கெட்ட குணங்களு முண்டு. அதை எப் போதும்தோலை நீக்கியே உபயோகிக்கவேண்டும். பத்திரிகாசிரியர்.

---

## செவிச் செல்வம்.

இப்பூவுலகின்கண் எல்லாம்வல்ல இறைவனால், தமது வாணாளில் இன்பங்களை நுகர்ந்தின்புறுதற்காக மக்கட்கு நல்கப் பெறும் செல்வங்கள் பற்பல வகையாம். ஆயினும் அவர்களது அறிவுக்குறைவினால், அவற்றை வாய்க்கப் பெறாரகளெனின், அப்பிழை அவர்களைச் சார்ந்ததேயன்றி இறைவன்பாலதன்று. அவற்றுள், முற்காலத்தும் இக்காலத்தும் எக்கா லத்தும் பெருமை பெற்றோங்குவன சிறப்பான பொருட்செல்வம் கல்விச் செல்வம் எனு மிரண்டேயாம். ஏனையவனைத்தும் அவற்றுளடங்கும். இவை யிரண்டினுள்ளும் கல்விச் செல்வமே சிறப்புடைத்து. ஏனெனில்

அச்செல்வம் பொருட்செல்வம்போல் எவ்வாற்றானும் எக்காலத்தும் ஒரு சிறிது மழியாதாகலின். நிற்க,

இக் கல்விச் செல்வம் இருவகையாற் பெறலாம். ஒன்று கற்றுணர்ந்த வல்லுநர்பாற் சென்று, அவர்கட்கு ஊழியம் புரிந்து, அவர்கள் நீண்ட காலமாகச் சேமித்து வைத்திருக்கும் அரும்பெரும் பொருள்களாய உறுதிப் பொருள்களென்னு முண்மைகளைப் பன்முறை கேட்டுச் சிந்தித்துணர்தல்; மற்றொன்று தானே பிறிதெவருடைய உதவியுமின்றி தனதறிவைக் கொண்டே பன்முறைபயின்று ஆராய்ந்து தெளிந்துணர்தல். முன்னையதே இவை யிரண்டினுள்ளும் சாலச் சிறப்புடையது. எங்ஙனமெனில், தானே கற்றுத் தெளிதலில் பிழைகள் நேரிடக்கூடும். அன்றியும் பழக்கத்திற் கொணர்தலு மருமை. கேட்டலிலோவெனில் அறிஞர்கள்பால் வழி வழியாகக் கேட்டுணர்ந்த பெரியார்களிடத்திற் கற்பதில் பிழைகளிருத்தலரிது. ஆசிரியரிடத்தும் தம்மையொத்த சீடர்களிடத்தும் அவ்வப்போது தமக்குண்டாகும் ஐயங்களையும் நீக்கிக்கொள்ளலாம். அன்றியும் குருகுல வாசம் செய்யும்போது, குருவினது உபதேச மொழிகளை அனுபவத்தில் பெற்றுக்கொள்ளப் பழகுதலு மியல்பு. இக்கருத்து கீழ்வரும் நன்னூற் சூத்திரங்களாற் புலனாகும்:—"ஆசானுரைத்த தமைவாக்கொளினும் - காற் கூறல்லது பற்றலனாகும்; அவ்வினையாள ரொடுபயில்வகை யொருகாற்— செவ்விதினுரைப்ப வவ்விருகாலும் — மையறு புலமை மாண்புடைத் தாகும்." இதுபற்றியே தமிழ்ப்பெரு மூதாட்டியாம் ஒளவையார் "கேள்வி முயல்" எனவும், ஆன்றோர்கள் "கற்றலிற் கேட்டலே நன்று" எனவும் அறிவுறுத்திப் போந்தனர்.

இயற்கை மண்டபங்களாய கொழுமையுற்ற மரங்களினடியி லமர்ந்து உயிர்க்குறுதி பயப்பனவாய உயர்பொருள்களை, ஐயமற ஆசிரியரால் ஊட்டப்பெற்று நற்கல்வி பயில்வதை விடுத்து, கற்களாற் கட்டப்பட்ட பிரமாண்டமான கட்டிடங்களில் உயரிய ஆசனங்களி லமர்ந்து, பிறநாட்டு சரித்திரங்களையும், பொருளாதார நிலைமைகளையும் விரித்துப் போதிக்கும் புத்தகங்களைக் கட்டி யழுது, சந்தேகங்கள் மலிந்து குழம்பிய மனத்தினராய்—கேள்வி புணர்விலராய்—வாழ்வதை விரும்பும் இளைஞர்கள் மலியுங் காலமும், இப்பாரத மணித்திருநாட்டிற்கு வந்துள்ளதை இறைவன் திருவிளையாடலெனாது வேறென்னென் றியம்புவது? அந்தோ! தமிழ்த் தாய்க்கு இன்னும் நற்காலம் பிறக்கவில்லைபோலும்! இவ்விடத்தி லிதைப் பற்றி இன்னும் விரித்துரைப்பது அனாவசியமாதலின், மேற்செல்வோம்.

ஒருவன் அறிவுநூல்கள் பலவற்றையும் ஓதாதுணரும் பேற்றை இயல்பாகவே பெற்றுளானாயினும் தக்க ஆசான்பால் அந்நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிதல் வேண்டும். அத்தகையாரே பொது மக்களாற் போற்றற்குரியராவர். இதுபற்றியே யன்றோ சர்வேஸ்வரனின் ஸாக்ஷாத் அம்சமாய ஸ்ரீராமன் வசிஷ்ட விசுவாமித்ரர்களிடத்தும், ஸ்ரீ கிருஷ்ணன்

சாந்தீபமுனி யிடத்தும் கலைகளைக் கற்றனர்? அன்றியும் ஒருவன் கல்லாத வனு யிருப்பினும் அறிவாளிகளிடத்தில் உண்மைப் பொருள்களைக் கேட்டுணர்ந்திருப்பின், அவைகள் அவனுக்குத் தளர்ச்சி வந்தவிடத்து பேருதவி புரிவனவாகும். சிவபெருமானுரது திருக்கண்களி லிரத்தம் வடி யக்கண்டு, அஃது நிற்குமாறு காணுது பலவாறு துயருற்றுத் தியங்கிய கண்ணப்பனுருக்கு, "ஊனுக்கு ஊண் அப்புதல் வேண்டும்" எனுங்கேள்வி யறிவு தக்க சமயத்தில் பேருதவி செய்ததன்ருே ? இதுபற்றியே "கற்றில னுயினுங் கேட்க வஃதொருவற்—கொற்கத்தி னூற்ருந் துணை" எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவனுரும் கூறியருளினர். அன்றியும், பலகலை களும் வல்ல காண்டீவதாரியான பற்குணன் போர்க்களத்தை நண்ணிய தும் தனது செயலால் விளையப்போகும் துயரங்கட் காற்ருனுகி, செய லற்றுச் சோர்ந்து வீழ்ந்தவிடத்து, ஆபத்சகாயனுப ஆதி மூலனது திவ் யோபதேசங்களைச் செவியுற்ற பின்னரன்ருே, தனது ஜாதி தர்மத்தையும் கடமையையும் வீரத்தையு முணரப்பெற்று போர்க்கெழுந்து பொருதிப் புகழ் பூண்டனன்.

எண்குணமுடைய இறைவனை அடைதற்பொருட்டு மக்கட்கு எளிதி லுதவி புரிவதெது? கேள்வியறிவே யன்ருே? இக்கருத்தை நனிவிளக்கு தற் பொருட்டே, சைவானுபூதி கைவரப்பெற்ற தவப்பெருஞ் செல்வ ராந் தாயுமானவர்,

"பெற்றவர் பெற்ற பெருந்தவக்குன்றே ! பெருகிய கருணைவாரிதியே !
நற்றவத்துணையே ! ஆனந்தக்கடலே ! * ஞாதுரு ஞான ஞேயங்கள்
அற்றவர்க்கருத நட்புடைக் கலப்பே ! அனேகமாய் நின்னடிக்கன்பு
கற்றதுங்கேள்விகேட்டதும்நின்னைக்கண்டிடும்பொருட்டன்ருேகாணே"

எனவும்,

"† கேட்டன் முதனுன்காலே ‡ கேடிலா நாற்பதமும்
வாட்டமற வெனக்கு வாய்க்குநா ளெந்நாளோ"

எனவும், அருளிச் செய்வாராயினர். இத்தகைய செவியின்பம் நிறையப் பெற்ற காலக்ஷேபங்கள் நவீனநாகரிகம் பெருகிவரு மிக்காலத்தும், பற் பல விடங்களிற் பெரும்பாலாரால், மிக்க சிரத்தையுடன் விரும்பிக் கேட் கப் பெறுவது மிகமகிழ்வைத் தரத்தக்க தொன்ரும். அன்றியும் கேள்வி யறிவினை யுடையவர்கள், இப்பூவுலக்கத்தவரானுலும் தேவர்களொடு மொப்பாவரென்பதை,

"செவிபுணவிற் கேள்வி யறிவுடையா ரவியுணவி
னன்ருரோ டொப்பர் நிலத்து"

என நாயனுர் பொய்யாமொழியிற் புகன்றுளாரன்ருே ?

---

* ஞாதுரு-காண்பான்; ஞானம்-காட்சி; ஞேயம்-காணப்படு பொருள்.
† கேட்டன் முதனுன்கு=கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல்.
‡ நாற்பதங்கள்=சாலோகம்; சாமீபம்; சாரூபம்; சாயுஜ்யம்.

மற்றும், கேள்வி யறிவாற் றுளைக்கப் பெறாத செவிகள், ஓசை மாத்திரத்தை உணருந் தன்மையவாயினும், உண்மையிலவை செவிடேயாம். இஃது "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்—றோட்கப் படாத செவி" எனும் திருவள்ளுவரது திருவாக்கால் தெளிக. அன்றியும் ஒருவன் சிறிதாயினும் உறுதிப்பொருள்களைச் செவியேற்றக் கடவன். அவை அவனுக்கு, நிறைந்த பெருமையை நல்கும். ஆகலின் கூர்ந்தாராயுமிடத்து செவிச் செல்வத்தினும் சிறந்ததொரு செல்வம் பிறிதெஃது மில்லை யென்பது வெள்ளிடை மலைபோற் செவ்விதிற் புலனும். இது கீழ் வரும் பொய்யிற் புலவரது திருவாக்குகளாற் றெரிகிறது.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"

"செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை"

இறுதியாக, அன்பர்காள்! இதுகாறுங் கூறியவாற்றால், "கற்றலிற் கேட்டலினிது" எனு முண்மை நனி பெறப்படுகின்றது. ஆகலின், கற்றுணர்ந்தடங்கிய கல்வியாளர்களிடத்து, உயிர்க்குறுதி பயப்பனவாய உண்மைப் பொருள்களைக் கேட்டுணர்ந்து, அதன்வழி நடத்தலின் பயனை ஆதிமுதல்வனாய ஆண்டவனது திருவருள் பெற்றுத் திளைத்திருப்போமாக.

ஆ. வ. பதுமநாபபிள்ளை,
"திருமகணிலயம்," ஆரியூர்.



## நமது "ஆனந்த போதினியும்" கிறிஸ்து மதமும்.

நமது ஆனந்தனின் மாதாந்தப் பத்திரிகைகளிற் சிலவற்றை யான் எனது நண்பரொருவரிடம் வாங்கிப் படித்ததில் ஆடம்பரமாக வெளிவரும் ஏனைய பத்திரிகைகளைப்போ லன்றி, சிறந்த விஷயங்களை யுடையதாகவும் ஏழைகள்கூட வாங்கி வாசிக்கக்கூடிய அவ்வளவு குறைந்த சந்தாவை யுடையதாகவும் இருக்கக்கண்டு, இவ்வருஷமுதல் யானும் அதற்கு ஓர் சந்தாதாரராகச் சேர்ந்திருக்கின்றேன். ஆனால் என்னைப்போன்ற கிறிஸ்தவ நண்பர்களிற் சிலர் என்னிடம் வந்து "ஆனந்தபோதினி" சதாகாலமும் கிறிஸ்துமதத்தைத் தூஷித்தெழுதுகிறதென்றும், உண்மையான கிறிஸ்தவர்கள் இப்பத்திரிகையை ஆதரிக்கக் கூடாதென்றும் புத்தி சொல்லுகிறார்கள். அவர்களோடு நான் வாதாடினதில், சுருக்கமாய்ச் சொல்லுமிடத்து, கிறிஸ்துமதம் தவிர மற்ற மதங்களெல்லாம் பொய் யென்றும், அம்மதங்களைத் தழுவி நிற்போருக்கு மோட்சம் (கைலாசம்) கிடையாதென்றும் சாதிக்கிறார்கள். இவ்விதண்டவாதம் எனக்குச் சற்றேனும் பொருத்தமாகத் தோற்றவில்லை. இவர்கள் தங்கள் புத்தியைச் சற்று விசாலப்படுத்தி யோசிப்பார்களானால் இப்படி வீண்வாதம் செய்ய முன் வரார்கள். கிறிஸ்து மதம் உண்மையான மதம் என்பதற்கு ஆக்ஷே

பனேயில்லே யெனினும், மற்ற மதங்கள் உண்மையானவையல்ல வென்ப பதற்கு என்ன ஆதாரமுண்டோ தெரியவில்லே. ஆனல் இவர்கள் கூற்றுக்கு நிற்காத பலவித காரணங்களே யெடுத்துக் காட்டுகிருர்கள். ஒரே கடவுள் எப்படிப் பல மதங்களே யுண்டாக்குவாரென்றும், கடவுள் ஒன்ருயிருக்கும்போது மதமும் ஒன்ருய்த்தா னிருக்கவேண்டும், அந்த மதம் கிறிஸ்துமதந்தான் என்றும் வாதாடுகிருர்கள். ஏன் அந்த மதம் இந்து மதமா யிருக்கக்கூடாது என்று நாம் கேட்குமுன் கீழ்க்கண்ட உதாரணத்தைக் கவனிப்போம்.

2. ஓர் மாமரத்தை எடுத்துக்கொள்வோம்; அதன் அடிமரம் ஒன்று. அதினின்றும் பல பெரிய கிளேகளிலிருந்து பல நூறு கிளேகளும் பிரிகின்றன. ஆனல் எல்லாக் கிளேகளிலும் ஒரே விதமான ருசியுள்ள பழங்கள் தான் கிடைக்கும். அம்மரத்தின் கிளேகளில் அவரவர் இஷ்டப்படி எந்தக் கிளேயில் ஏறினலும் பழங்கள் கிடைப்பது நிச்சயம். ஒருமரம் எப்படிப் பல கிளேகள் விடும் என்று கேட்பது எப்படிப் பொருந்தாதோ, அப்படியே ஒரே கடவுள் எப்படிப் பல மதங்களே யுண்டாக்குவார் என்பதும் பொருந்தாது. அவனவன் பிரயாசத்துக்குத் தக்கபடி எந்தக் கிளேயிலேறினலும் பழம் கிடைப்பதுபோல் எம்மதத்தைத் தழுவினும் அவனவன் பாவ புண்ணியங்களுக்குத் தக்கவாறு கைலாச பலனே யடைவான். அடிமரமாகிய கடவுளின் வழியாய் மதங்களெனப்படும் கிளேகளில் எதைத் தழுவினலும் பலன் ஒன்றே யாகும்.

3. உலகத்திலேயே தாங்கள்தான் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட மேலான மனிதரென்றும், மற்ற தேசத்தாரும், ஜாதியாரும் தங்களுக்கு அடிமைகளென்றும், உலகத்திலுள்ள சகல போக பாக்கியங்களேயும் தங்களேத் தவிர வேருெருவர் அனுபவிக்க லாயக்கானவர்களல்லவென்றும் நினேப்பவர்கள் தோன்றியிருக்கும் இக்கலிகாலத்துக்கேற்றபடி, ஒரே மதம் தான் (கிறிஸ்து மதம்) உண்மையானது என்று சொல்லும் வாதமும் தலே காட்டி யிருப்பதாகக் கருதவேண்டி யிருக்கிறது. இதை இம்மட்டோடு நிறுத்திக்கொண்டு, "ஆனந்தன்" மதத்தைத் தூஷிக்கிருன் என்னும் கூற்றைச் சற்று ஆராய்வோம்.

4. இதற்கு உதாரணமாக ஆனந்தனிலுள்ள சில வியாசங்களே எடுத்துக் காட்டினர்கள். அவ்வியாசங்களே வாசித்துப் பார்த்ததில், வயிற்றுப் பிழைப்புக்காக மட்டும் மத ஊழியம் செய்தும், புறமதங்கள் பொய் யென்று தெருக்களிலும், சந்திகளிலும் நின்று பிரசங்கம் செய்தும், ஏழைகளேயும், ஸ்திரமான புத்தி யில்லாதவர்களேயும் ஏமாற்றி, ஆசை வார்த்தை காட்டி மயக்கி கிறிஸ்துமதத்தில் சேர்த்தும், மேலான அதிகாரிகள் முன் கிறிஸ்துமேல் வெகு பக்தி யுடையவர்கள்போல் நடித்தும், தங்கள் காலத்தைக் கழித்துவரும் சிலருடைய செய்கைகளே மாத்திரம் தகுந்த முகாந்தரங்களேக்கொண்டு கண்டித்தெழுதியிருக்கிறதே தவிர, எந்தச் சமயத்தை

யும் எம்மதத்தையும் சிஞ்சித்தும் தூஷித்தெழுதி யிருப்பதாகத் தெரிய வில்லை. "வேலியிலிருக்கும் ஓணானைப் பிடித்து உள்ளே விட்டுக்கொண்டு குடைகிறதே குடைகிறதே" என்று கத்துவதுபோல் இவர்களே (கிறிஸ்தவர்களே) முதலில் இந்துமதம் பொய்யென்று தண்டோராப் போடுவதினால் ஆனந்தன் தன் மதத்தின் உண்மையை எடுத்துக்கூறி ஸ்திரப்படுத்துமாறு, அன்னாரின் கூற்றைத் தவறு என்று ரூபிக்க முன் வருகின்றானேயொழிய எந்த மதத்தையும் தூஷிப்பதற்காகவல்ல. ஓர் மதத்தைவிட்டு இன்னொரு மதத்தைத் தழுவுவது கூடவே கூடாது என்பதுதான் எனது அபிப்பிராயம். ஏனெனில் ஒருவன் தன் மதத்தின் உண்மையை முற்றிலும் ஆராய்ந்து சந்தேகமானவைகளைத் தேர்ந்த ஆசானிடம் (குருவிடம்) கேட்டுத் தெளிந்து பின்னும் பொய்யென்று அறிந்தால் மட்டும் வேறு மதத்தைத் தழுவலாம். அப்போதுங்கூட புறமதங்களில் எதைத் தழுவலாம் என்பதையறிய உலகத்திலுள்ள மற்ற மதங்களை யெல்லாம் ஆராயவேண்டும். அதன் பின்பே ஓர் மதத்தைத் தழுவவேண்டும். இதற்கு ஒரு மனிதனுடைய ஆயுளே போதாது. மேலும் இது எல்லா மனிதராலும் செய்யச் சாத்தியப்பட்ட ஓர் காரியமுமன்று.

5. ஆகவே இருந்தது இருந்தாற்போல் ஓர் மதத்தைவிட்டு மற்றொரு மதத்தைத் தழுவுவதற்கு பலகாரணங்க ளிருக்கவேண்டும். அவற்றில் முக்கியமானவை. தரித்திரம், ஆசை, வீண் டாம்பீகம் என்ற இம்மூன்றும் முக்கியமானவை. தம்மால் உபதேசிக்கப்பட்ட புண்ணியச் செயல்களை எடுத்து மற்றவர்களுக்குச் சொல்லி சன்மார்க்கத்தில் நடக்கச் செய்ய வேண்டுமென்பது இயேசு நாதருடைய கட்டளையே யன்றி, வயிற்றுப் பிழைப்புக்காக வேத ஊழியஞ் செய்யும் கொஞ்ச வயதுள்ள பெண்களைப் பைபில் ஊமனுக (Bible women) நியமித்து அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் பெண்களுக்குரிய மேலான குணங்களை விடுத்து வீடு வீடாய்ச் சென்று, படித்துக் கொடுப்பதுபோல் பாசாங்கு செய்து, ஒன்றுமறியாத பங்கஜத்தைப்போன்ற சிறுமிகளை நயவஞ்சகங்காட்டி ஏமாற்றி, பெற்றோரும், மற்றோரும், வயிரெரியவிட்டு, நடுராத்திரியில் திருடிச் சென்று மதத்தில் சேர்க்கும்படியாக அவர் சொல்லவே யில்லை.

6. "தன்னைப்போல் பிறனை நேசி" என்று இயேசுக் கிறிஸ்து திருவாய் மலர்ந்தருளியதை இவர்கள் எந்த விதத்தில் கைக்கொள்ளுகிறார்கள் என்பதுதான் விளங்கவில்லை. தங்களுடைய (கிறிஸ்துவர்களுடைய) பெண்களைப் புறமதஸ்தர் இப்படிச் செய்தால் வயிற்றெரிச்சல் பட்டு என்னென்னவோ காரியங்களெல்லாம் செய்வார்களல்லவா? அப்படிப் போல் மற்றவர்களுக்கு மிருக்கு மென்பதை ஏன் இவர்கள் கிஞ்சித்தேனும் உணருவதில்லை? தங்களுக்கு ஒரு நியாயம் பிறருக்கொரு நியாயமா? தற்காலம் உலகமே அப்படித்தானிருக்கிறது. பல உத்தியோகஸ்தர்களை நியமித்து சத்தியத்தையும் சன்மார்க்கத்தையும் போதிக்கலாமே தவிர மேற்கண்ட

வாறு பேதைகளை ஏமாற்றி மதத்தில் சேர்ப்பது வயிற்றுப் பிழைப்புக் காக கிறிஸ்து மதத்தை வியாபாரம் செய்வதற்கே யொப்பாகும். இப்படி யெல்லாம் வம்பிழுத்துவிட்டு ஆனந்தன்மேல் வீண்பழி சுமத்துவது பேதமை யன்றோ !

7. கிறிஸ்துமதத்தில் சேர்ந்ததின் பலன் தற்காலம் எப்படி யிருக் கிறதென்றால், அநேக கிறிஸ்தவர்களுக்குத் தாய்நாட்டில் பற்றின்மை, அடிமைப்புத்தி, நம் தேசத்துக் கடுக்காத அநாகரிகத்தை நாகரீகமாகக் கருதி டாம்பீகச் செலவுசெய்வது, தாய்ப்பாஷையை அவமதிப்பது, தலை மொட்டையானது, பாதிமீசைபோனது, பீடி சிகரட்டு சுருட்டு குடிப்பது, மிருகங்களைப்போல் பல்துலக்காமல் பெட்காபி (Bed Coffee) அருந்து வது, மேல்சட்டை, உள்ச்சட்டை, நடுச்சட்டை, கால்சட்டை, பூட்ஸ், மேஜோடு, காலர், டை, தொப்பி முதலிய அணிவது; இச்செய்கைகளால் நமது பாரதநாட்டைத் தரித்திரத்துக் குள்ளாக்குவது முதலியவைகளே. தற்காலம் இந்துக்களில் உயர்ந்த ஜாதிமுதல் தாழ்ந்த ஜாதிவரையில் இத்தீய வழக்கங்கள் பரவிவிட்ட தெனினும் முதன் முதலாய் இவ்வழக் கங்களை யனுசரித்தவர்கள் கிறிஸ்தவர்களே. இன்னும் இதைப்பற்றி எழுதின் விரியுமாதலால் ஆனந்தனில் இடம் கிடைக்குமோ வென்றஞ்சி இத்துடன் நிறுத்துகிறேன். தற்காலம் கிறிஸ்தவர்களிற் பலர் மேற்படி தீயவழக்கங்களை அறவே யொழித்து வருகிறார்களென்பதை இங்கு திருப் தியுடன் குறிப்பிடுகிறேன். அதுபோல் விதண்டாவாதம் செய்து ஆனந் தன்மேல் பழிசுமத்தி, தேசநன்மையைக் கருதி அவன் சுமந்துவரும் பல அரிய விஷயங்களைப் பலரும் அறியவொட்டாமல் தடுப்பதை விட்டு, எல் லாக் கிறிஸ்தவ சகோதரரும் ஆனந்தனில் சந்தாதாரராகச் சேரும்படி பன்முறையும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

A. மெத்துசலா உபாத்தியாயர்,
போர்டு பெண்பாடசாலை, ஜெயங்கொண்ட சோளபுரம்.

குறிப்பு:—பாரபட்ச மின்மையும், உண்மையைத் தாட்சணிய மின்றி கூறும் தைரியமும், விசாலித்த நோக்கமும், கடவுளின் உண்மை லட்ச ணத்தை யறியும் அறிவு முடையோர் எம்மதத்திலும் உளர் என்பதற்கு நமது நண்பர் ஒரு பெரிய அத்தாட்சியா யிருக்கிறார். இவருடைய உயர் வான கொள்கைகள் எம்மதத்தினரும் திருப்தியோடு ஏற்றுக்கொள்ளத் தக்கவைகளே.

கிருஸ்தவர்களில் சிலர் வலிய நமது மதத்தைக் குறைகூறி தூஷித்து நம்மவரை மயக்க முயல்வதால் நாம் நம்மவர்க்கு நமதுமதத்தின் மேன் மையை யெடுத்துக் காட்டி எச்சரிக்கை செய்யவேண்டியது நமது கடமை யாகிறது. இன்றேல் நாம் அன்னிய மதங்களிலுள்ள போதனைகளைத் திருஷ்டாந்தமாக மட்டும் அவசியம் நேர்ந்தபோது எடுத்துக் கூறுவோமே

யன்றி, அவற்றைப்பற்றி நம்மவர்க்கு எச்சரிக்கை செய்யவேண்டிய அவசியமே யிராது.

"எச்சமயத்தும் இயற்கையை விட்டிடலாகாது" என்ற நம்முன்னோர்களாகிய மகான்கள் கொள்கையே நமது கொள்கையும். இச்சஞ்சிகையின் மற்றோர் பக்கத்தில் "ஓர் புதுச்சஞ்சிகை" என்ற விஷயத்தில் நாம் இதைப்பற்றி கூறியுள்ளதைப் பார்க்கக் கோருகிறோம். எம்மதத்தையேனும், எம்மதத்தில் கூறப்பட்ட கடவுளையேனும் தூஷிப்பது ஏகநாயகனாகிய அந்த ஒரு கடவுளைத் தூஷிப்பதாகவே ஆகும் என்பதே யுண்மை. அப்படித் தூஷிப்போர் எல்லா மதங்களாலும் பிரதிபாதிக்கப் படுபவர் அந்த ஒருகடவுளே என்ற உண்மையை யறியாதவராவர்.

நமது நண்பர் உண்மை யறிவோடு சத்தியத்தை மொழிந்ததால் கிருஸ்தவர்களில் சிலர் "இவர் மெய்யான கிருஸ்தவரல்ல" என்று தூஷிப்பார்கள் என்று கருதுகிறோம். அது அவர்களுக்குச் சுபாவமென்பதைத் திருட்டாந்தமாய் அறிந்திருக்கிறோம். பாரபட்சமின்றி நியாயத்தைக் கூறும் நியாயாதிபதியைக் குற்றவாளி தூஷிப்பதியற்கையே.

பத்திரிகாசிரியர்.

---

## முக்கியமாய் அறியவேண்டிய விஷயம்.

கீழ்க்கண்ட விஷயம் "தமிழர் இயக்கம்— "தமிழ்நாடு" — திரு-வி-கலியாண சுந்தரமுதலியார் உபந்நியாசக் குறிப்புகள்" என்ற தலையங்கத்தோடு (28-2-24) நவசக்தியில் வெளிவந்தவற்றிலிருந்து எடுக்கப்பட்டது:-

"தமிழை வளர்த்தல் வேண்டும். தமிழ்த் தாய்க்குச் சிலப்பதிகாரம் மணிமேகலை மட்டுமின்றி ஏனைய அணிகலன்கள் தேவை. அந்நிய பாஷையிலிருக்கும் அருமை விஷயங்களைத் தமிழில் மொழி பெயர்த்திடல் அவசியம். ஆங்கிலேயர் திருக்குறள், திருவாசகம் முதலியவற்றை என் மொழி பெயர்க்கின்றனர்? அவர்கள் பாஷை உலக முழுதும் பரவுவதற்குக் காரணம் இதுவே. தமிழும் உலகறியும் பாஷையாகல் வேண்டும். அப்போது சட்ட சபைகளில் தமிழ்த்தாய்த் தாண்டவம் புரிவாள்.

* * * * * * *

"இவ்வேலை எவரால் செய்யப்படல் வேண்டும்? பண்டிதர்களால் முடியுமா என்றால் முடியாது. அவர்கள் வறுமை, பொறாமை, செருக்கு என்ற மூவகைப் பேயினால் கட்டுண்டு கிடக்கிறார்கள். ஆங்கிலம் பயின்ற தமிழர் என் செய்கின்றனர்? தங்கள் ஓய்வு காலங்களைத் தமிழ் மொழியை வளர்க்க ஏன் செலவிடல் கூடாது? வயது சென்ற முதிர்ந்தவர்களையும் விடுவோம். மாணக்கர்கள் மனதில் இந்த இயக்கந் தோன்றல்வேண்டும். இத்தாலியா தேசத்து மாசினி இளைஞர்களையே பிடித்தார். தமிழ் எல்லா பாஷைகளுக்கும் முற்பட்ட பாஷை. அயர்லாந்து பெருமைபெற அடிப்படையாக விருந்தது பாஷாபிவிருத்தியன்றோ? தமிழர் இயக்கத்தில் சேருங்கள், மரியாதை பெறுவீர்கள். நீங்கள் போற்றப்படவேண்டுமானால் பிறப்புரி

மை பெறவேண்டுமானால் தமிழ்நாட்டைப் போற்றுவீர்களாக. தமிழர்கள் என்ற உணர்வு கொண்டு பல வேற்றுமைகளைக் களைவீர்களாக. தமிழ்நாடு பரிணமிக்கும்.''

குறிப்பு :—மேற்கண்ட விஷயம் தமிழ்மக்களனைவரும் அவசியம் கவனித்தொழுகவேண்டிய விஷயம் என்பது யாவர்க்கும் நன்கு விளங்கும். நம் நாடு சீர்பட்டு முன்னேற்றமடையவேண்டுமெனின், அன்னிய பாஷையிலுள்ள சாத்திரங்களில் நமக்கு அவசியமானவற்றை யெல்லாம் நம் தாய்ப்பாஷையில் மொழிபெயர்த்து நம் நாட்டார்க்குக் கற்பிக்கவேண்டும். ஜபான் தேசம் இவ்வளவு சீக்கிரத்தில் முன்னேற்றமடைந்ததற்கு இதுவே காரணமாகும். அந்த நாட்டிலுள்ள படிப்பாளிகள் அமெரிகா, இங்கிலாந்து, ஜர்மெனி முதலிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டு, அவசியமான தொழில்களையும் சாத்திரங்களையும் கற்றுக்கொண்டு தங்கள் நாட்டிற்கு வந்து, அச் சாஸ்திரங்களைத் தங்கள் தாய்ப்பாஷையில் மொழிபெயர்த்து, பாடசாலைகளும், தொழிற்சாலைகளும் ஸ்தாபித்துத் தம் நாட்டினர்க்கு யாவும் கற்பித்தார்கள்.

ஆனால் அவர்களுக்கு ஒரு முக்கியமான உதவியிருந்தது. அதாவது அவர்கள் துரைத்தனமே இக்காரியத்தில் முன்னின்று, அது கைகூடும்படி செய்தது. நாம் நமது துரைத்தனத்தாரிடம் இவ்விஷயத்தில் உதவி பெறும்படியான புண்ணியம் நமக்கிருப்பதாய்த் தோன்றவில்லை. அத்தகைய விஷயத்தில் முயற்சி யெடுத்துக்கொண்டு நாம் ஜெயமடைவது காருண்யம் பொருந்திய நமது துரைத்தனத்தாருக்கு திருப்தியாயிருக்குமோ என்பதே நமக்குச் சந்தேகமாயிருக்கிறது. ஆகையால் இவ்விஷயத்தில் நாமே முயற்சி யெடுத்துக்கொண்டு பாடுபட்டால்தான் க்ஷேமமடையலாம் என்பது நன்றாய்த் தெரிகிறது.

வித்வான்கள் வறுமை, பொறாமை, செருக்குடையவர்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. முதல் அம்சம் சாதாரணமாய்ப் பெரும்பாலாரிடம் இருப்பது பண்டைக்காலமுதல் அனுபவமே. ஆனால், தான் வித்வான் என்று பிரசித்தி பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு பாஷைக் கல்வி மட்டும் கற்றுள்ளவரிடமே பொறாமையும் செருக்குமிருக்கும். "கற்றதும் கேள்வி கேட்டதும் நின்னைக் கண்டிடும் பொருட்டன்றோ காணே'' என்று ஆன்றோர் கூறியபடி மெய்யறிவைப் பெறவேண்டுமென்ற நோக்கத்தோடு கல்வி கற்றவர்களிடம் அப்பேய்கள் தலைகாட்டா.

நிற்க, மேலே கூறியபடி சாஸ்திரங்களை நம் தாய்ப்பாஷையில் மொழிபெயர்க்கும் வேலை ஆங்கிலம் தமிழ் இரண்டும் கற்றவர்களாலேயே ஆகவேண்டும். அத்தகையோரில் பெரும்பாலர் தமிழை யிழிவாகவும் அலக்ஷியமாகவும் கருதுவோரே. அவர்களுக்கு மேற்படி காரியத்தைச் செய்யவேண்டுமென்ற எண்ணமும் சிந்தையும் உண்டாவது அரிதினுமரிதே. மனிதசுபாவத்தின்படி, அவசியமென்று தோன்றி அக்கரை யேற்பட்டால்தான் ஒரு காரியத்தைச் செய்ய விருப்பமுண்டாகும்.

ஆங்கிலம் வாசிப்போர் இரசாயன சாஸ்திரம், பௌதிக சாஸ்திரம் முதலியவற்றைக் கற்பது உண்மையே. ஆனால் அக்கல்வியைப் பரீட்சை நடக்குமிடத்திலேயே ஒப்பித்துக் கைகழுவி விடுகிறார்கள். பின்னால் அவற்றைப்பற்றி சிந்திக்கவேண்டிய அவசியமே அவர்களுக்கில்லை. ஏனெனில் மாணவராக விருக்கும்போதிருந்து, வாசிப்பு முடிந்ததும் நாம் துரைத்தனத்தில் ஒரு உத்தியோகம் பெறவேண்டுமென்ற ஒரு நோக்கமே அவர்கள் மனதில் வேரூன்றி யிருக்கிறது. சிறு வயதிலேயே அந்த இழிவான நோக்கம் பெற்றோராலும் மற்றோராலும் அவர்கள் மனதில் ஊட்டப்படுகிறது. அத்தொழிலுக்கு அவர்களுக்கு அனுபவத்தில் வேண்டுவது ஆங்கிலபாஷாஞானமும், கொஞ்சம் கணிதமுமே.

கலாசாலையில் மேற்கண்ட சாத்திரங்களைக் கற்றுப் பட்டம் பெற்ற ஒருவன் விவசாயத் தொழிலைச் செய்ய முன்வருவானேல், மேற்படி சாத்திரக்கல்வியின் அனுபவத்தை யுபயோகப்படுத்தவேண்டிய அவசியம் அவனுக்கேற்படும். இரசாயன சாஸ்திரம், பௌதிக சாஸ்திரங்கள் கற்றிருப்பதால் இன்னவிதமான எருவை யுண்டாக்கி இன்ன பூமிக்கு உபயோகித்தால் அதிக பலன் தரும் என்றுணர்ந்து அவ்வாறே செய்வான். தன் தாபர சாஸ்திர அறிவைக்கொண்டு நஞ்செய்ப் பயிர்களையும் தோட்டப் பயிர்களையும் உன்னத நிலைமைக்குக் கொண்டுவருவான். தன் யந்திர சாஸ்திர ஆராய்ச்சியைக்கொண்டு விவசாயத்திற்கு வேண்டிய நூதன விதமான கருவிகளைச் செய்வான்.

அப்படிப்பட்டவனுக்கு இந்தச் சாஸ்திரங்களை நம் தாய்ப்பாஷையில் மொழிபெயர்த்து நம் நாட்டாருக்குப் போதிக்கவேண்டும் என்ற அக்கரை தானேயுண்டாகும். ஏனெனில் நம் ஒருவனுக்கு மட்டும் இவை தெரிந்திருப்பதால் யாவற்றையும் நாமே செய்யவேண்டியதாயிருக்கிறது; பலர்க்கும் தெரிந்திருந்தால் சுலபமாய் வேலைகள் நடக்கும் என்பதை யவன் உணர்வான். அப்படிக்கின்றி ஆங்கிலங் கற்போரனைவரும் அதமத்தொழிலாகிய சேவகா விர்த்தியிலேயே நாட்டம் வைத்திருக்கும் வரையில் நாம் க்ஷேமமடைவது முயற்கொம்பே.

பெற்றோர் இனியேனும் தம் மக்களுக்கு சேவகத் தொழிலின் அடிமைத் தன்மையையும், அதிலுள்ள கஷ்டங்களையும், இழிவையும் நன்கு விளக்கிக் காட்டவேண்டும். சுயாதீனமான விவசாயம், வர்த்தகம், நெசவு முதலிய கைத்தொழில் இவற்றின் கௌரவத்தையும், அவைகளே செல்வத்தையும் பலத்தையும் அளிக்கத்தக்கவை யென்ற உண்மையையும் அவர்களுக்கு நன்ருகப் போதித்து அந்த வழியில் ஜீவனம் செய்யும்படி அவர்களைத் தூண்டவேண்டும்.

நமது நாட்டில் இன்னொரு அறியாமை யிருக்கிறது. வர்த்தகர் முதலிய செல்வவந்தர்களின் புத்திரர்கள் பெரும்பாலும் கல்வியற்றவர்களாகவும், தாய்நாட்டிற்கு ஒரு நன்மையும் செய்யாதவர்களாகவுமே யிருக்கிறார்

கள். அத்தகையோர் ஜீவனத்திற்காக கல்வி கற்கவேண்டிய அவசிய மில்லை என்ற காரணத்தைக் கூறியே கல்வியை யலட்சியம் செய்வதை யொருபெருமையாய்க் கருதுகிறார்கள். பெற்றோரும் "என்மகன், இருக்கும் சொத்தை வைத்துக்கொண்டு வட்டியைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தால் போதும். அவன் படிக்கவேண்டுமென்ற கட்டாயமில்லை. எழுதப் படிக்கத் தெரிந்தால் போதும்" என்று பெருமையாய்க் கூறுகிறார்கள்.

உண்மையில் அவர்களே ஒரு கவலையுமின்றி நன்றாய்க் கல்விகற்று விவசாயத்தைச் சீர்திருத்தத்தோடு நடக்கச்செய்தும், தொழிற்சாலைகளைத் தாபித்து நம் நாட்டார்க்குப் பல்வகை கைத்தொழில்களைக் கற்றுக்கொடுத்தும், தாங்கள் திரண்ட செல்வம் பெறுவதோடு தாய்நாட்டிற்கு க்ஷேமத்தை யுண்டாக்கி இம்மையில் அழியாப் புகழையும், மறுமையில் பெரும் புண்ணியப் பயனையும் அடையவேண்டும்.

இவ்வுலகிலுள்ள கோடீஸ்வரர்களில் முதன்மை பெற்றவர்களில் ஒருவராகிய ஜான்-டி-ராக்பெல்லர் என்பவருடைய பேரனாகிய காட்பிரே என்பவர் என் வேலைசெய்யவேண்டும்? அப்படி யிருந்தும் அந்த இளைஞர் தற்காலம் அமெரிக்காவிலுள்ள ஒரு பாங்கியில் சொற்ப சம்பளத்தில் வேலைக் கமர்ந்திருக்கிறார். ஏன்? செல்வமிருப்பினும் நாம் ஒரு தொழிலைப் பூரணமாகக் கற்று அவ்வழியில் நாமே சம்பாதிக்கவேண்டும் என்ற கருத்துகொண்டே அப்படிச் செய்கிறார். அவர் பூரணமாக வேலை கற்றுப் பிறகு தாம் ஒரு பாங்கியை ஸ்தாபித்துத் தம் முன்னோரினும் சிறப்பாக அதை நடத்திப் பிரசித்தி பெறுவார். மேல்நாட்டுச் செல்வவந்தரின் மக்கள்மட்டுமல்ல, அரசர்கள், சக்கிரவர்த்திகளின் பிள்ளைகள்கூடச் சிறு வயதிலேயே ஒவ்வொரு தொழிலில் பிரவேசித்து அதில் தேர்ச்சியடைகிறார்கள். அவர்கள் அவ்வாறு அறிவாளிகளாக நடந்துகொள்வதால்தான் உன்னத நிலைமையி லிருக்கிறார்கள்.

நமது நாட்டார் அவர்களைப் பின்பற்றி நடந்தால் நம் நாடும் சீக்கிரத்தில் மேன்மைபெறும். நம்மவரோ, நமக்கு அனாவசியமும் தகாதனவுமாகிய விஷயங்களில் மட்டும் மேல்நாட்டாரைப் பின்பற்றி நடக்க ஆவலுள்ளவர்களாக விருக்கின்றனர். இது நம் நாட்டின் கெட்டகாலக் கொடுமையோ அல்லது நமது அறியாமையோ அறியோம். எல்லாம்வல்ல பரம்பொருளாகிய கருணாநிதியே நமக்கு நல்லறிவு புகட்டி நல்வழி காட்ட வேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(318-ம் பக்கத் தொடர்ச்சி.)

"ஏ! அர்ச்சுனா! மின்னலைப்போன்று தோன்றி யழியுந்தன்மைத்தாய இம்மானுட வாழ்வில் உள்ள நீ பக்தியோடு திரிகரணங்களால் என்னையே நமஸ்கரித்து, சதா என்னையே சிந்திப்பாயாகில் நித்தியானந்த சொரூபியாகிய என்னையே யடைவாய்" என்று பகவான் அருளிச் செய்தார்.

[எவன் உலக சம்பந்தமான எந்த வஸ்துவிலும் மனம் பற்ருதவனுய், அதாவது நிராசை புடையவனுய் ஈசுவரனுடைய நிஜ சொரூபத்தில் பக்தி புடையவனுய்ச் சதா அவனையே திரிகரண சுத்தியோடு சிந்தித்துக்கொண் டிருக்கிருனே அவன் முடிவில் பரமானந்த சொரூபியாகிய அப்பகவானையேயடைகிருன். எவ்வாறெனின், நதிகளெல்லாம் கடலை நோக்கிச் சென்று முடிவில் தமது நாமம் உருவம் யாவும் ஒழிந்து கடலிற் கலந்து கடலே யாவதுபோல ஆன்மாவும் பிரம்ம சொரூபத்தை யடைகிறது.]

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.



## 10-வது விபூதியோகவத்தியாயம்.

(ஏழு, எட்டு, ஒன்பதாம் அத்தியாயங்களில் பகவான் தத்பதார்த்த வடிவனுன பரமேஸ்வரனது சோபாதிக நிருபாதிக சொரூபங்களைக்காண் பித்தனர். அவற்றில் ஒன்று தியானத்திற்கு மார்க்கம்; மற்ருென்று ஞான மடையும் மார்க்கமாகும். அத்தகைய பரமேஸ்வரனுடைய *விபூதிகள் ஏழாவது, ஒன்பதாவது அத்தியாயங்களில் சுருக்கமாகக் கூறப்பட்டன. அவற்றை விரித்துக் கூறவே பகவான் இப்பத்தாவது அத்தியாயத்தை ஆரம்பித் தருளுகின்ருர். கருணாநிதியாகிய பகவான் அர்ச்சுனன் வினவாமலே அவனுக்கு அருளிச் செய்கின்ருர்.)

நான்மறை யுச்சியில் நடனம்புரியும் கார்வண்ணனுகிய பகவான் பார்த்தனை நோக்கி, "ஏ அர்ச்சுனு! முன்பு எனது பிரபாவங்களைச் சுருக்கமாகக் கூறினேன். அவற்றைக் கேட்ட உன் மனதில் களிமிகும்படி அன்பனுகிய உனக்கு மீண்டும் அதை விவரமாகக் கூறுகிறேன் கேட்பாயாக" என்று அருளிச்செய்தனர்.

(பரமேசுவரராகிய தங்கள் பிரபாவங்களை எனக்கு உபதேசிக்கத் தக்கவர்கள் இந்திரன், மகரிஷிகள் முதலியவர்கள் இருக்கையில் அதைத் தாங்களே ஏன் உபதேசிக்கவேண்டுமென்று அர்ச்சுனனுக்கெழும் சந்தேகத்தை நிவர்த்திக்கவேண்டி பகவான் பின்வருமாறு அருளிச் செய்கின்ருர்.)

ஏ பார்த்த! இந்திரன் முதலிய தேவர்களும் பிருகு முதலிய ரிஷிகளும், அசுரரும், சித்தர்களும் ஆகிய யாவரும் எனது பிரபாவத்தை யுணரார்கள். ஏனெனில் தேவர் முதலிய அனைவர்க்கும் நான் காரணனுக விருக்கிறேன். அவர்களுடைய புத்தியாதிகளைப் பிரவர்த்திப்பிக்கும் காரணன் நானுகவிருக்கிறேன். அவர்களனைவரும் என் காரியங்கள். ஆகையால் என் பெருமைகளை யவர்கள் உணருகின்ருர்களில்லை. மரணமும் பிறப்புமில்லாத என்னை யறியத்தக்கவர்கள் சகல பாவகர்மங்களையும் அறவே விடுத்து நிரதிசயானந்தமாகிய முத்தியை யடையாநிற்பர்.

---

* விபூதிகள்=விசேஷ குணங்கள், ஐசுவரியங்கள்.

புத்தி (அந்தக்கரணங்களின் தொழில்,) பொறுமை, தவம், ஞானம், புகழ்ச்சி, அபகீர்த்தி, ஜீவ இம்சை செய்யாமை, சத்தியம், சமை (உட்கரணங்களை யடக்கல்,) தமை (புறக்கரணங்களை யடக்கல்,) ஜபம், தானம், மரணம், பிறப்பு, பிராரப்த வசத்தால் கிடைத்ததுகொண்டு திருப்தியடைதல், சுகம், துக்கம், பயம், பயமில்லாமை இவை யாவும் என்னிடத்தினின்றே உண்டாகின்றன வென்பதை நீயறிவாயாக.

எவ்வகைப்பட்ட தவங்களை-யுடைய ரிஷிகளும், ஸ்தாவர சங்கம ரூபமாகிய சகல உலகங்களையும் உண்டாக்கிய (சுவாயம்பு முதலிய பதினன்கு) மநுக்களும், ஜனகர், ஜநத்குமாரர், ஜனந்தனர், ஜாதனர் ஆகிய நான்கு மகரிஷிகளும், எனது சங்கற்பமாத்திரத்தால் உதித்தவர்கள் என்று அறிவாயாக.

இவ்வாறு என்னையுள்ளபடி யறிந்த அறிவாளிகள் என்னிடம் தங்கள் பிராணனோடு சித்தத்தை அர்ப்பணம் செய்வார்கள். அவர்கள் தங்கள் மாணாக்கர்களையும் அவ்வாறே செய்யும்படி செய்வார்கள். சதா என்னைப் பற்றியே போதியா நிற்பர்; என்னைப்பற்றிய சம்பாஷணையிலேயே சந்தோஷமடைவர்; அதிலேயே இன்புற்றிருப்பர்.

(இவ்வாறு தமது பிரபாவத்தை யறிந்து பஜிக்கும் அன்பர்கள் அடையும் பயனை பகவானருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! இவ்வாறு என்னைச் சதா சிந்திக்கும் அத்தகைய பக்தர்களுக்கு நான் கூறிய அந்த ஞான யோகத்தை யுண்டாக்குவேன். அதனாலவர்கள் என்னைத் தமதான்ம வடிவமா யடைவார்கள். நான் அவர்களது துன்பத்தைப்போக்கி, அவர்கள் எனது உண்மைச் சொரூபத்தை யாராய்ந்தறியும் புத்தியை யளித்து, அவர்களது அஞ்ஞானத்தாலுண்டான ஆவரண இருளை ஞான வொளியால் நாசமாக்குவிப்பேன்.

(இவ்வாறு பகவான் கூறியவற்றைச் சாமான்யமாய்க்கேட்ட அர்ச்சுனன், அதைமீண்டும் விசேடமாகக் கேட்க ஆவல்கொண்டவனாய்ப் பகவானைத் துதிக்கிறான்.)

ஏ பரந்தாமா! பிறப்பிறப்பற்றவன், எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் விபு, பேரானந்த சொரூபி, சர்வ ஜகத்திற்கும் காரணனான ஆதிதேவன், பரப்பிரம்மம், நாசமற்றவன், வேதங்களுக்கெட்டாதவன், யாவற்றையும் பிறப்பிப்பவன் என்று மெய்ஞ்ஞானிகளாகிய மகரிஷிகள் அருளிச் செய்த வனைத்தையும் தாங்களே எனக்கருளிச் செய்தீர்கள். சர்வ பூதங்கட்கும் ஒப்பற்ற காரணனே! சர்வ ஜனங்கட்கும் ஈசுவரனே! தேவர்கட்கும், உலகங்களுக்கும் இறைவனே! "என்னை நானே அறிவித்தாலல்லது ஒருவரும் அறியார்கள். என்னை நானே யறிவேன்" என்ற வாக்கியங்களிலுள்ள பொருள்களனைத்தும் சத்தியமே யாகும். யானும் அந்த உண்மையை யறிந்து சந்தேக மொழிந்தேன்.

["அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்று மணிவாசகப்பெருமான் அருளியபடி ஈசுவரன் கருணைகூர்ந்து தன்னை யறிவித்தாலன்றி அவனை அறிய வொண்ணாது. அப்பர் சுவாமிகளும் "(உம்மைக்) காண்பாரார் கண்ணுதலே (நீர்) காட்டாக்காலே" என்றருளினர். தாயுமான சுவாமிகளும் "அதன் பெருமை யெவர்க்கார் சொல்வார், அதுவானால் அதுவாவர் அதுவே சொல்லும்" என்றருளினர். இதனானே முத்தியடைவதற்குப் பக்தி இன்றியமையாததென உணரக்கிடக்கிறது. பக்தியாலேயே ஈசுவரனது அருளைப் பெறலாகும்.]

ஏ பரந்தாமா! பற்பலவிதமாக உள்ள இந்தப் பிரபஞ்சத்தின்கண்ணே எத்தகைய உருவங்கள் மெய்யான தன்மையினையுடைய தங்கள் சொரூபங்கள் என்பதை அடியேன் அறிந்திலேன். அத்தகைய தங்கள் சர்வ விபூதிகளையும் தங்களையே தஞ்சமென நம்பிய அடியேனுக்கு உபதேசித்தருளப் பிரார்த்திக்கிறேன். தங்கள் பிரபாவங்களாகிய உபதேசவமிர்தத்தைப் பருகும் எனக்கு ஒருபோதும் திருப்தியுண்டாகிறதில்லை. ஆகையால் அடியேனுக்கவற்றைப் பூரணமாக உபதேசித்தருளல் வேண்டும். என்று இவ்வாறு பிரார்த்திக்கும் அர்ச்சுனனுக்கு முக்காலங்களிலும் வளர்தலும் குறைதலுமின்றி என்றும் ஒரே சச்சிதானந்த சொரூபியாய் விளங்கும் பகவான் பின்வருமாறு அருளிச் செய்கின்றார் :— (தொடரும்)

சீடன்.

---

## ஆனந்தபோதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கம்.

போற்றுகின்ற சோதிடநூல் பொய்யா தொருநாளுஞ்
சாற்றலறி யாதவர்க் கதுபொய் — நேர்த்திபுள
வாசானைத் தேடி யவர்பதத்திற் றொண்டுசெய்து
பேசானைப் போலே பிழை.

என்பறடி நம் தாய்நாட்டில் வசிக்கும் ஞானயோக பக்தி விசுவாசரா யிருக்கப்பட்ட சோதிட பண்டிதர்களுக்கு அறிவிப்பது என்னவெனில்:— திருக்கணிதம் இல்லாத பஞ்சாங்கத்தைக்கொண்டு ஜாதகம், குறிப்பு, ஆருடம், கோசாரம்—இவைகளைக் கணித்து பலன் சொல்லுவதால், பலாபலன்கள் ஒத்துவராத காரணம் என்னவெனில்—சாதாரண பஞ்சாங்கங்களில் நக்ஷத்திரங்களும் கிரஹசாரங்களும் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுவதால், பலன்கள் ஒத்து வருகிறதில்லை. அதினால் ஜனங்களுக்குச் சோதிடமென்பதே அவநம்பிக்கையாய் அனேகர் நிவர்த்திசெய்து இருக்கின்றதும் தவிர, சாஸ்திரங்கள் தினே தினே க்ஷீணித்து வருகின்றன. ஆகையால், அடியேன் இருபது வருஷகாலமாய் அனேக பஞ்சாங்கங்களைச் சோதித்தும் மேல்கண்டபடி பலன்கள் ஒத்துவராமலே இருந்தன. இப்போது மூன்று வருஷகாலமாய் ஆனந்தபோதினி சுத்த வாக்கியத் திருக்கணித பஞ்சாங்கத்தைக்கொண்டு அநுபவித்து வருவதால் சகல பலன்களும் ஒற்றுமையாய் வருகின்றன. ஜனங்களுக்கும் அதிக சந்தோஷமாயிருக்கிறது. ஆகையால் நம் தாய் நாட்டில் இருக்கப்பட்ட சகல சோதிடர்களும் மேல்கண்ட ஆனந்தபோதினி திருக்கணித பஞ்சாங்கத்தைக் கையாண்டு வருவீர்களாகில் சகல ஜனங்களுக்கும் சோதிட விஷயத்தைப் பற்றி மனதிற்கு ஆனந்தத்தை புண்டாக்கும். இந்தப் பஞ்சாங்ககணிதம் சாஸ்திரவாதிகளுக்கு மிக்க அநுகூலமா யிருக்கின்றது.

வே. நா. முனிசாமி முதலியார்,
ஸ்ரீ சுப்ரமண்ணிய பராக்கிரம ஜோதிஷ வயித்தியசாலை, பெங்களூர் சிட்டி.

---

## ஓர் புது சஞ்சிகை.

[சகோதர சகோதரிகாள்! முக்கியமாய் ஹிந்துக்களா யுள்ளோர் இதைக் கவனமாய் வாசிக்கக் கோருகிறோம்.]

"கிறிஸ்தவ பிரபல்ய போதினி"

என்ற மாதாந்தச் சஞ்சிகை யொன்று நமக்கு அனுப்பப் பெற்றோம். இது 1924ஹு ஜனவரிமீ வெளியான 2-ம் பகுதிச் சஞ்சிகை. இத்தகைய சஞ்சிகை யொன்று சென்னையைச் சேர்ந்த இராயபுரத்தில் தோன்றி யிருக்கிறதென்று நாம் அறியச் செய்ததற்காக, நமக்கிதை யனுப்பியவருக்கு மனமார்ந்த வந்தனமளிக்கிறோம்.

இச் சஞ்சிகை கிறிஸ்தவ மதத்திலுள்ள விசேஷங்களை வெளியிடுவதோடு நிற்காது, இந்துமதத்தைக் குறை கூறுவதும் தூஷிப்பதுமே தன் நோக்கமாகக் கொண்டிருக்கிறது. "ஏசுகிருஸ்துவையே கடவுளாகக்கருதி அவரையே பக்தி செய்தால்தான் முத்தியடையலாம்" என்றும், "கிருஸ்து மதம் மட்டுமே கடவுளின் பிராத்தன்மையைத் தெரிந்துகொண் டிருக்கிறதென்றும், இந்து மார்க்கமுங்கூட அவ்வாறு தெரிந்துகொள்ளவில்லை" யென்றும் கூறி யிருப்பதோடு, பகவானுடைய கிருஷ்ணாவதாரத்தையும், விக்கிரகாராதனையையும், காசி, இராமேச்சுரம் முதலிய புண்ய க்ஷேத்திரங்களையும், புண்ணிய தீர்த்தங்களையும் இழிவுபடுத்திக் கூறியிருக்கிறது.

நேயர்களே! இது இவர்களுக்கு இயற்கையாக விருக்கிறது. இவர்கள் மதத்தின் முழுகொள்கையும் சேர்ந்து பின் வருவதில் அடங்கி யிருக்கிறது. அதாவது:—

"ஏசுவை நம்பி அவர் மூலமாகப் பாபவிமோசனம் பெற்றால்தான் முத்தி பெறலாம். அவர் நமது பாபங்களை யெல்லாம் மன்னித்து விடுவார். குருவிடம் நாம் செய்த பாபங்களைக் கூறி மனத்தாபப்பட்டால் அவர் ஏசு மூலமாய் பாபமன்னிப் பளித்துவிடுவார். இறந்தவர்களெல்லாம் புதைக்கப்படுவார்கள். ஒரு நாளைக்கு ஆண்டவன் வானத்திலிருந்து இறங்கி யாவரையும் எழுப்புவார். யாரார் கிருஸ்து மார்க்கத்தில் சேர்ந்திருக்கிறார்களோ அவர்களெல்லாம் என்று மழியாத மோட்சத்திற்கு அனுப்பப்படுவார்கள். மற்ற பேரெல்லாம் என்று மொழியாத அக்னிச் சுவாலையாகிய கொடிய நித்திய நரகில் தள்ளப்படுவார்கள்" என்பதே. மற்றவை யாவும் பத்து கட்டளைகள் சம்பந்தமான புத்திமதிகளும் நீதிகளுமே.

பிரத்தியக்ஷ அனுபவமாய் நமது மதத்தில் கூறப்படாத எந்த விஷயமும் அவர்கள் வேதமாகிய பைபிலில் இல்லையாதலின், அவர்கள் மதப்பிரசாரம் அந்நியமத தூஷணையாகவே யிருக்கிறது. அவர்கள் கூறும் மோக்ஷம் அதிக கஷ்டமின்றி இச்சன்மத்தோடு கைகூடுவதென்று கூறப்படுவதால் ஆன்ம விசாரணை செய்யக்கூடிய அறிவு வல்லமை யில்லாப் பாமரர்களுக்கு அது சுலபமான வழியாகத் தெரிகிறது. கிருஸ்து மதத்தில் சேராதவர்களெல்லாம் நித்திய நரகத்தில் தள்ளப்படுவார்களென்ற விஷயம் உண்மையா என்பது அறிவாளிகள் சுலபமாக அறியத்தக்கது. அது விஷயமாய், கடவுள், அவ்வளவு குரூரமானவரா என்றும், 'உன் விரோதியையும் நேசி,' 'ஒருவன் உன் வலது கன்னத்தி லடித்தால் அவனுக்கு இடது கன்னத்தையும் காட்டு' என்று கூறிய பரமசாதுவின் வாக்கினின்றும் இது வந்திருக்குமா? என்பது முதலான பல கேள்விகள் கிளம்ப

இடமிருக்கிறது. ஆதலின் அவர்கள் கொள்கைகளைப்பற்றி நாம் ஒன்றும் கூறாமல் நம்மவர்களுக்கு எச்சரிக்கை செய்யவேண்டிய கடமைக்காகப் பின் வரும் விஷயங்களை மட்டும் கூறுகிறோம்.

1. நமது மதத்தில் கடவுள் இலக்ஷணம் ஆன்மலட்சணம், மோக்ஷலக்ஷணம், மூன்றும் பூரணமாகக் கூறப்பட்டிருக்கிறது. இதில் கூறப்பட்டிருப்பதற்கு மேல் இன்னும் அதிகமாய்க் கூற ஒன்றுமேயில்லை. கடவுள் தந்தை லட்சண மட்டுமல்ல தாயின் லட்சணமுமுடையவரென்றும், அவர் தாயாகவும், தந்தையாகவும், எஜமானாகவும், தோழனாகவும் பாவிக்கப்படலாமென்றும் நமது நூல்களில் நன்கு விவரிக்கப்பட்டிருக்கிறது. தந்தையினும் தாயே சிறந்தவள் என்பது வெளிப்படையாக யாவரு மறிந்த விஷயம். காரணம் இதே சஞ்சிகையில் 330-31ம் பக்கங்களில் பார்த்தால் விளங்கும். "அம்மையே அப்பா!" என்றே நம் முன்னோர் கூறியிருக்கின்றனர். நமது மதத்தில் கடவுள் கருணையே புருவானவர் என்ற உண்மை நன்கு விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. அவருக்கு ஒருவர் மேல் விருப்பும், ஒருவர்மேல் வெறுப்பும் ஒருபோதுமில்லை. அவர் தம் மதம் என்று ஒன்றையுடையவரல்ல. மதாதீதர். ஆகையால் ஒரு மதத்தினரைமட்டும் மோக்ஷத்திற்கனுப்பி மற்ற மதத்தினரை நித்திய நரகிற் றள்ளுகிறார் என்றால் அவர் ஒருபோதும் கருணையுடையவராகார். கடவுளுமாகார். சாதாரண மனிதரிலேயே தன் விரோதிக்கும், தனக்குத் தீங்கு செய்கிறவனுக்கும் தீங்கிழைக்காது நன்மையே செய்கிறவர்கள் மகா உத்தமரெனவும் சாதுக்கள் எனவும் கருதப்படுகிறார்கள். தந்தையானவன் தன் புத்திரர்களில் அயோக்கியனையும் கண்டித்துத் தண்டித்து நல்வழிக்குத் திருப்பி அவன் க்ஷேமமடையவே வழிதேடுவான்.

கடவுளும் அவ்வாறே செய்கிறார். துஷ்டர்களை, தன்னைத் தூஷிப்பவனையும், கருணையோடேயே தண்டித்துக் கடைசியில் அவனையும் தம்மிடம் சேர்த்துக்கொள்வார். அவ்வாறு காட்டும் கருணைக்கு மறக்கருணை யென்று பெயர். ஏனெனில் அவர் செய்யும் தண்டனையும் அவனை மோட்சத்திற்குப் பாத்திரவானாக்க வேண்டுமென்ற கருணையாலேயே செய்வதாகும். நல்லோர்க்கு நன்மையே யளித்து அந்தியத்தில் முத்தியளிக்கும் கருணைக்கு அறக்கருணை யென்று பெயர். பகவான், பூர்வத்தில் செய்த சொற்ப கருமத்தால் நெறி தவறுவோர்களையும் தடுத்து அவர்களைத் தம் பக்தர்களாகத் திரும்பும்படி செய்கிறார். புறச்சமயத்தில் சேர்ந்திருந்த அப்பர் சுவாமிகளை யவ்வாறே திருப்பியருளினார். இன்னும் இதற்குப் பல திருஷ்டாந்தங்களுண்டு. விரிக்கிற் பெருகும். அவ்வாறு தடுத்தாட்கொள்ளச் சக்தியில்லாதவரா யிருந்தால் அவர் சர்வ வல்லவராகமாட்டார்.

தாமே எல்லா மதத்தினரையும் சிருட்டிப்பவரா யிருக்கச் சிலரை மோக்ஷத்திலும் சிலரை மீளா நரகிலும் தள்ளுவாரெனில் அவர் கருணையுடையவராகவேமாட்டார். மனிதர் பிறப்பது தம்மிஷ்டப்படியல்ல. அப்படி யிருக்க தமக்கு விருப்பமல்லாத மதத்தில் மனிதரை யேன் படைக்கவேண்டும்?

முடிவில் ஒருவிதமான குறையும் கூறவொண்ணாதபடி கடவுள் லட்சணம் நமது மார்க்கத்தில் கூறப்பட்டிருக்கிறது.

2. நமது மதத்தில் கூறப்பட்ட மோக்ஷம் செத்தபிறகு வருமென்று எதிர் பார்ப்பதல்ல. தன் ஆன்மாவையே யித்தகையதென அறியாதவன் கடவுளை யெப்படி யறிவான்? ஒருபோதுமறியான். ஆன்மாவை யறியும்

மார்க்கமும் (யோகம்), கடவுளை யறிந்து அவரோடு சேர்ந்துகொள்ளும் மார்க்கமும் (ஞானம்) நமது மதத்தில் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கிறது. இத்தேசத்தி லிருக்கும்போதே யந்த அனுபவங்களைப் பிரத்தியட்சமாய் அங்கை நெல்லிபோல் அறியலாம். நம் முன்னோராகிய மகான்கள் அவ்வாறறிந்தே அவற்றினுண்மையை வெளியிட்டிருக்கின்றனர். இப்போதும் அத்தகையோர் உளர்.

சகோதர சகோதரிகளே! இத்தகைய அழியாத உண்மைகளை யுடைய மதத்தில் புண்ணிய வசத்தால் ஜனித்தும் சுயமதக்கல்வி யில்லாததால் புறச்சமயத்தாரின் மாயவலையிற் சிக்கி, உலக இன்பங்களில் ஆசை வைத்து, நமது உத்தமமதத்தைக் கைவிடுவது பெரும் பாதகச் செயலன்றோ. நம்மதத்தைக் குறை கூறித் தூஷித்து, பொருள், உத்தியோகம், அந்தஸ்து முதலிய உலக ஆசைகளைக் காட்டித் தங்கள் வலைக்குள் உங்களை யிழுக்க முயலும் புறச் சமயத்தவர்கள் பிரசங்கங்களுக்குச் செவி கொடாதீர்கள். அத்தகைய விடத்தைக் கண்டதே துரிதமாக எட்டச் செல்லுங்கள், அத்தகையபத்திரிகை சஞ்சிகைகளைக் கண்ணாலும் பாராதீர்கள். மனமாகிய மாயை சுலபத்தில் தீயவழிகளிகல் இழுத்துச் செல்லும். தீயதை நல்லதுபோல் முதலில் காட்டும். நாம் அதனால் மயங்கி அதன் வழிச்சென்று குழியில் வீழ்ந்தபின்பே உண்மை தெரியும். பிறகு என்ன பயன்? பழைய நிலைமையை யடைதல் மிக்க கஷ்டம். ஆகையால் எப்போதும் எச்சரிக்கையா யிருங்கள். நமது மக்களுக்கு ஆரம்பத்திலேயே நம் மதக்கல்வியைப் புகட்டுங்கள். கடவுளுக்கு எல்லா மதமும் ஒன்றே. எம்மதத்தில் பிறந்தாலும் அம்மதக் கொள்கைகளின்படி நடந்து ஞானநெறியைக் கைக்கொண்டால் ஆண்டவனருள் பெறலாம். குறுகிய மனமும் அறிவும்கொண்டு "இந்த மதத்தில் மட்டுமே மோக்ஷமுண்டு. மற்றதிலில்லை" என்று கூறுவது சுத்த அஞ்ஞானமான மதவைராக்கியம் என்றே கூறப்பட்டிருக்கிறது. இதுவே எல்லாமத அறிவாளிகளின் கொள்கையும். ஆண்டவன் கருணை புரிவாராக. பத்திரிகாசிரியர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்.

(318-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்:—ஆ! மனோகரன் எங்கே இருக்கிறான்?

பவானி:—சடங்கு நடந்தது முதல் நான் அவனைக் காணவில்லை.

ஆனந்:—இதைப்பற்றி யவனுக்கு ஏதாவது சந்தேகமுண்டா யிருக்குமோ?

பவானி:—ஆம். அவன் கொலையாளியை யெப்படியும் வெளிக்குக் கொண்டு வரவேண்டு மென்று தீர்மானித்துக்கொண்டிருக்கிறான். அத் துஷ்டர் சம்பாஷணையால் மனோகரன் சவத்தைக் குழியிலிருந் தெடுத்து சோதனை செய்ய முயன்றுகொண் டிருப்பதாய்த் தெரிகிறது. அதனால்தான் மலையாளி யவனைக் கொன்றுவிடவேண்டும் என்கிறான். அதைக் கேட்ட கறுப்பண்ணன் "அது அவசியமல்ல. அப்பெண்ணின் தாயாரே வந்து பார்த்தால்கூட அவள் அம்பாலிகை யல்லவென்று சந்தேகிக்கமாட்டாள். அதிலும் அத்தேகம் இப்போதிருக்கும் நிலைமையில் ஒருவரும் கண்டுபிடிக்க முடியாது" என்றான்.

பவானி கூறியதைக் கேட்டதே யானந்தஸிங் துள்ளிக் குதித்தான். இப்போதுதான் விவகாரங்கள் அவனுக்குப் பிரியமான வழியில் திரும்புகின்றன. அவன் பவானியை நோக்கி,

"இச்சமயம் மனோகரன் எங்கிருப்பானென்று உன்னால் உத்தேசிக்க முடியாதா?" என்றான்.

பவானி:—"எப்படிச் சொல்வது? அவன் வாசஸ்தலம் தென்னாட்டில். ஒரு சமயம் அங்கு சென்றிருக்கிறானோ வென்னவோ!

ஆனந்:—நீ சொன்னபடி சவத்தைச் சோதிக்க முயல்கிறவனா யிருந்தால் அவன் அங்கு போய்விட் டிருக்கமாட்டான்.

பவானி:—அதுவும் சரிதான். அவன் எங்கிருக்கிறா னென்று எனக்குத் தெரியவில்லை.

இவர்களிப்படி சம்பாஷித்துக்கொண் டிருக்கையில் யாரோ தெருவாயிற் கதவைத் தட்டினார்கள். ஆனந்தஸிங் மனதில் ஒருவித யுணர்ச்சி யுண்டாயிற்று. அவன் உடனே பவானியை நோக்கி,

"நீ புன் முகமூடியை மூடிக்கொள். வருகிறவன் மனோகரனா யிருந்தால் உடனே யெழுந்து உள்ளே போய்விடு. அவன் சென்றபின் இங்கு வா" என்றான்.

## 5-வது அத்தியாயம்.

மறு நிமிடம் ஒரு ஆள் அறைக்குள் வந்தான். ஆனந்தஸிங் அவனைக் கண்டதே அவன் மனோகரனென்று தெரிந்துகொண்டான். பவானியும் உடனே யெழுந்து உள்ளே போய்விட்டாள்.

மனோகரன்:—அந்த ஸ்திரீ யார்?

ஆனந்:—முன்னே நீ யாரென்பதைக் கூறு.

மனோ:—அப்படியானால் நீ யென்னை யாரென்று தெரிந்துகொள்ள வில்லையோ?

ஆனந்த:—நான் உன்னை முன்னே பார்த்திருக்கிறேனா.

மனோகரன் புன்னகையோடு "நீ துப்பறிபவனாதலால் எதிலும் ஜாக்கிரதையா யிருக்கவேண்டியதுதான். நான் அம்பாலிகையின் சவச்சடங்கில் உன்னைக்கண்டேன். உன்னால் நான் உத்தேசித்தபடி ஒரு காரியத்தைச் செய்யாமல் விட்டுவிட நேர்ந்தது. அப்போது நீ மாறுவேட மணிந்திருந்தாலும் இப்போது நான் நீயே யானந்தஸிங்கென்று தெரிந்துகொண்டேன்.

ஆனந்:—அப்படி யாயின் நீ மனோகரனா?

மனோகரன்:—ஆம்.

ஆனந்:—நீ என்ன சந்தர்ப்பமாய் என்னிடம் வந்தாய்?

மனோகரன்:—முதல்தரமான பிரக்யாதிபெற்ற ஒரு துப்பறிபவன் வேண்டுமென்று விசாரித்தேன். கடைசியில் இந்த விலாசத்தைக் கூறினார்கள். உண்மையில் யாரென்று எனக்குத் தெரியாது. இந்த அறைக்குள் நுழைந்ததே தெரிந்துகொண்டேன்.

ஆனந்:—நீ என்ன காரியமாய் என்னிடம் வந்தாய்?

மனோ:—நீ முன்னமே இக்குற்றத்தில் ஒரு கட்சியில் சேர்ந்திருக்கிறாய் என்று நினைக்கிறேன்.

ஆனந்:—எந்த குற்றத்தில் ?

மனோ:—கறுப்பண்ணன் சம்பந்தமாகிய குற்றத்தில்.

ஆனந்:—நான் உண்மையை மனம்விட்டுக் கூறுகிறேன். கொலைசெய்தவனைக் கண்டு பிடிக்கும்படியாய் நான் அவனால் அமர்த்தப்பட்டிருக்கிறேன்.

மனோ:—அப்படியானால் நீ குற்றவாளியை யதிகதூரம் தேடிச் செல்ல வேண்டியதில்லை. உன்னை யமர்த்தியவனே கொலை பாதகன்.

ஆன:—நானும் முதலில் அப்படியே யுத்தேசித்தேன். பின்னால் நடந்த சம்பவங்களால் எனக்குச் சந்தேகம் உண்டாய்விட் டிருக்கிறது.

மனோ:—ஓகோ! அப்படியாயின் அவன் உன் கண்ணிலும் மண்ணைத் தூற்றிவிட்டிருக்கிறான். நீ யவனை விட்டு விட்டு என் கட்சியில் வந்துவிடு. மிக்க சுலபமாய்க் குற்றவாளியைக் கண்டு பிடிக்க சுலபமான ருசுவுகளைக் கொடுக்கிறேன்.

ஆனந்:—"நான் முன்னமே யுன் கட்சியில்தான் வேலை செய்கிறேன்" என்றான்.

இதைக் கேட்டதே மனோகரன் மிக்க வியப்படைந்து "என் பட்சத்தில் வேலை செய்கிறாயா? எப்படி?" என்றான்.

ஆனந்:—அதை விவரமாய் இப்போது கூறமுடியாது. ஒன்று மட்டும் கூறுகிறேன். நான் மெய்யான குற்றவாளியைப் பின்பற்றி யிருக்கிறேன். எப்படியும் அவனை விடாமல் பிடித்தே தீருவேன்.

மனோகரன்:—முதலாவது சவத்தை யெடுத்து சோதிக்க வேண்டும்.

ஆனந்:—ஆம்! அது அவசியம்தான். ஆனால் மிக்க துக்ககரமான சம்பவம். தெய்வ சங்கல்பமாய் அது நமக்கு அனாவசியம்.

மனோ:—அப்படியானால்முன்னாடியே அதற்கு சேகரித்துக்கொண்டாயோ?

ஆனந்:—நான் மிக்க ஆச்சரியமான ஒரு சம்பவத்தைக் கண்டு பிடிக்கும் சமயத்தி லிருக்கிறேன். ஆனால் நீ மட்டும் எனக்கு ஒரு உபகாரம் செய்யவேண்டும்.

மனோ:—அது இன்னதென்று மட்டும் கூறிவிட்டால் உடனே செய்கிறேன்.

ஆனந்:—நீ இந்த விஷயத்தில் என்னை யறியாமல் எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ளாதே. முழுவிஷயத்தையும் என் பொறுப்பில் விட்டு நீ மிக்க ஜாக்ரதையாய் எங்காவது ஒளிந்துகொண் டிருக்கவேண்டும்.

மனோ:—ஏன் ?

ஆனந் :—அத்துஷ்டர்கள் உன்னைக் கொன்றுவிடத் தீர்மானித்துவிட்டிருக்கிறார்கள்.

மனோ:—அவர்கள் கெட்டார்கள். நான் அதற்குப் பயந்தவனல்ல.

ஆனந்:—இருக்கட்டும். நீ நாளை காலைவரையில் மட்டும் ஒளிந்துகொண்டிரு. நான் சொன்னபடி மிக்க ஆச்சரியமான ஒரு சம்பவத்தை யுனக்கு வெளியிடுகிறேன். அதனால் உன் யோசனைகளனைத்தும் அடியோடு மாறுதலடையும். (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

———

## சந்தாநேயர்களுக்கு.

அடுத்த வருடம் முதல் சந்தா நம்பர்களைப் புதுப்பித்து எல்லா விலாசங்களையும் அச்சிடப் போவதால் இப்போது சிலர் விலாசங்கள் கையால் எழுதியனுப்பப்படுகின்றன. "என் மேல்விலாசம் அச்சடித்தனுப்பப்படா விட்டால் அடுத்த வருடம் முதல் சஞ்சிகை வரவழைப்பதை நிறுத்திவிடுவேன்" என்று ஒரு சந்தாதார் எழுதுகிறார். ஆனந்தபோதினியை வாசிக்கும் ஒருவர் இந்த அல்ப விஷயத்தை யொரு கௌரவயீனமாய் மதிப்பதைப்பற்றி மிக்க விசனிக்கிறோம். பத்திராதிபர்.

## இங்கிலாந்தும் மதுபானமும்.

1922-ம் வருஷத்தில் மதுபானத்திற்காக இங்கிலாந்து தேச முழுவதிலுஞ் செலவிடப்பட்ட திரவியம் 35,41,81,000 பவுன்களாம். ஆனால் இத்தேசத்தின் ஜனத்தொகையோ 4,75,47,000. சராசரி ஆள் ஒன்றுக்கு 79 பவுனும், பருவமானவர்களைமட்டும் கணக்கெடுத்தால் ஆள் ஒன்றுக்கு 1210 பவுனும் மதுபானச் செலவாகும்.

## இப்பெருந் தொகையை மனதில் கிரகிக்கும் வழி.

1922-ம் வருஷத்தில் கிரேட் பிரிட்டனில் மதுபானத்திற்காகச் செலவிடப்பட்ட திரவியங்களை ஒரு பவுன் நோட்டுகளாக மாற்றி அவற்றை ஒவ்வொன்றாக 18 வயதுள்ள ஓர் சிறுவன் எண்ணுவதாகப் பாவித்துக் கொள்வோம். ஒரு நிமிஷத்தில் 200 ஒரு பவுன் நோட்டுகளை எண்ணினால், ஒரு நாள் ஒன்றுக்கு 12 மணி நேரம் வேலைசெய்யும் விஷயத்தில் அவ்வளவு திரவியத்தையும் எண்ணி முடிக்குமுன் அவனுக்கு 21 வயதாகிவிடுமாம். ஆனால் ஒரு வாரத்திற்கு 6 நாளாகவும், ஒரு வருஷத்திற்கு 48 வாரங்களாகவுங் கணித்த திருஷ்டாந்தமாகும்.

கிரேட் பிரிட்டனில் 1922-ம் வருஷத்தில் செலவான பீர் பீப்பாக்களை ஒரு நீண்ட குழாய்மாதிரி அடுக்கி வைக்கும் விஷயத்தில் அந்தக் குழாய் 13,500 மைல் தூரம் செல்லுமாம்.

## நாய்களின் நுண்ணறிவை விளக்கும் ஆச்சரியச் சம்பவங்கள்.

ஒரு டெரியர் ஜாதி நாய்க்குச் சொந்தக்காரர், வெளிதேசம் செல்ல வேண்டியதாக இருந்தபடியால் அந்நாயைத் தமது சினேகிதரிடம் விட்டுச் சென்றிருந்தார். சிலகாலத்திற்கப்பால் அவர் தனது சுயதேசம் திரும்பி வந்து தனது சினேகிதருக்குக் கடிதம் எழுதியிருந்தார். சினேகிதர் அக்கடிதத்தை வாசிக்கையில் வேடிக்கையாக அந்நாயிடம் "உனது எஜமான் வந்துவிட்டார்" என்று சொல்லிய சற்றுநேரத்திற்குப் பின் நாயைக் காணாதபடியால் விசாரித்ததில் அதன் எஜமானனிடம் சேர்ந்திருப்பதாகத் தெரியவந்தது.

ஓர் நியு பௌண்ட்லாந்து நாயும் மற்றொரின் வேட்டைநாயும் கடல் பாலத்தோரம் சண்டையிட்டுக்கொண்டிருக்கையில் இரண்டும் தவறி தண்ணீரில் விழ நியுபௌண்ட்லாந்து நாய் நீந்திக் கரைசேர்ந்து மற்றநாய், கஷ்டப்படுவதைப் பார்த்து திரும்பவும் தண்ணீரில் மூழ்கி அந்நாயைக் கரைசேர்த்ததாம்.

## விழித்தவுடன் கண்ணாடி பார்த்தலின் குணம்.

தூங்கி விழித்தவுடன் கண்ணாடி பார்க்கிறதினால் வீரிய விருத்தியும் மகிழ்ச்சியும் சர்வவசியமும் ஞானமும் அதிகரிக்கும்.

## "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

இரக்தாக்ஷிஞு சித்திரைமு—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847,
பசலி 1333—கோல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1342,
இங்கிலீஷ் 1924ஞு ஏப்ரல்மு—மேமு

| சித்திரை | ஏப்ரல் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 18 | ஞா | நவ60 | பூச48-53 | சித்60 | வருஷப்பிறப்பு, ஸ்ரீராம நவமி, திருதினஸ்பிருக் |
| 2 | 14 | திங் | நவ0-28 | ஆயி51-8 | சி51-8மர | நவக்கிரகசாந்தி செய்ய |
| 8 | 15 | செவ் | தச0-43 ஏ58-55 | மக51-20 | சித்60 | பிரயாணம் விலக்க, ஸ்மார்த்த ஏகாதசி |
| 4 | 16 | புத | து55-8 | பூர49-38 | அமி60 | வைஷ்ணவ ஏகாதசி |
| 5 | 17 | வியா | திர49-25 | உத்45-58 | ம45-58சி | பிரதோஷம் |
| 6 | 18 | வெ | சது42-23 | அஸ்40-50 | அ40-50சி | கரிநாள் |
| 7 | 19 | சனி | ○34-18 | சித்34-38 | ம34-38அ | சித்திரா பௌர்ணமி |
| 8 | 20 | ஞா | பிர25-8 | சுவா27-45 | சி27-45ம | சைத்ரபகுளம், |
| 9 | 21 | திங் | துதி16-18 | விசா20-38 | ம20-38சி | துதிகைஸ்ரார்த்தம்நாழி |
| 10 | 22 | செவ் | திரி7-33 சது59-20 | அனு13-50 | சி13-50ம | அவமாகம் [14-க்குமேல் |
| 11 | 23 | புத | பஞ்51-43 | கேட்7-43 | சித்7-43ம | |
| 12 | 24 | வியா | சஷ்46-18 | மூல2-40 பூரா59-0 | சித்60 | |
| 18 | 25 | வெ | சப்41-53 | உத்56-55 | சி56-55ம | |
| 14 | 26 | சனி | அ39- 5 | திரு56-28 | சித்60 | |
| 15 | 27 | ஞா | நவ88-3 | அவி57-30 | ம57-30சி | |
| 16 | 28 | திங் | தச38-25 | சதை60 | சித்60 | |
| 17 | 29 | செவ் | ஏ40-15 | சதை0-20 | மர60 | |
| 18 | 80 | புத | து43-3 | பூரட்3-5 | அ3-50சித் | |
| 19 | 1924ஞு மேயீ 1 | வியா | திர46-50 | உத்-8-38 | சித்60 | பிரதோஷம் |
| 20 | 2 | வெ | சது51-58 | ரேவ-14-13 | அமி60 | கிருஷ்ணாங்கார சதுர்தசி |
| 21 | 8 | சனி | ●56-33 | அசு20-30 | சித்60 | அமாவாசை, கத்திரி ஆ |
| 22 | 4 | ஞா | பிர60 | பரணி27-20 | சித்60 | திருதினஸ்பிருக் [ம்ப |
| 28 | 5 | திங் | பிர1-38 | கிரு ⁂34-33 | ம34-33அ | கிருத்திகை, சந்திரதரிச |
| 24 | 6 | செ | துதி8-20 | ரோ41-58 | அ41-58சி | பரசுராம ஜயந்தி |
| 25 | 7 | புத | திரி14-30 | மிரு49-30 | சித்60 | திருதின ஸ்பிருக் |
| 26 | 8 | வியா | சது20-30 | திரு56-43 | ம56-43அ | பிரயாணம் விலக்கல் |
| 27 | 9 | வெ | பஞ்26 | புன60 | சித்60 | சஷ்டி, வித்தியாரம்பம் |
| 28 | 10 | சனி | சஷ்30-35 | புன3-8 | சித்60 | |
| 29 | 11 | ஞா | சப்33-48 | பூச8-28 | சித்60 | சங்கோற்பத்தி |
| 30 | 12 | திங் | அ35-13 | ஆயி12-13 | சி12-13ம | நவக்கிரகசாந்தி செய்ய |
| 31 | 18 | செ | நவ34-40 | மக14-5 | சித்60 | ரிஷபரவி நா-42-55விஷ்ணுபதி புண்யகாலம் |

| | | | |
|---|---|---|---|
| | சூரி புத | சுக் | |
| கே | 15உமிது-சு | | |
| செ | | | ராகு |
| | குரு | சனி | |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry St., Madras.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 9 } இரக்தாட்சிஹு சித்திரைமீ கஉ { பகுதி 10
1924ஹு ஏப்ரல்மீ 13உ

## கடவுள் வணக்கம்.

பன்மு கச்சமய நெறிப டைத்தவரு
மியாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
படிற ருந்தலை வணங்கிடத்
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
தரும னும்பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்பவட நீழ லூடுவளர்
சநக னாதிமுநி வோர்கடம்
சொன்ம யக்கமது தீர வங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே
சுத்த நித்தவரு ளியல்ப தாகவுள
சோம சேகர கிர்பாளுவாய்
தென் முகத்தின்முக மாயி ருந்தகொலு
வெம்மு கத்தினும்வ ணங்குவேன்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (1)

எனக்கு முனக்கு முறவில்லை யெனத்தேர்ந்தே
நினைக்க வரிதான வின்பநிட்டை—தனைக்கொடுத்தே
யாசான் மவுனி யளித்தானெஞ் சேயுனையோர்
காசா மதியேனான் காண். (2)

எல்லாமே மோனநிறை வெய்துதலா லெவ்விடத்து
நல்லார்கண் மோனநிலை நாடினார்—பொல்லாத
நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோனகுரு வே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. பன்முகம்=(ஒன்றுக்கொன்று மாறுபட்ட) பலவிதங்களையுடைய.

சமயநெறி படைத்தவரும்=சமய மார்க்கங்களை யுடையவர்களும்.

வாததர்க்கமிடு படிறர்=(உண்மையறிவதற்காகச் சுருதி யுக்தி அனுபவங்களுக்குப் பொருத்தமானபடி தர்க்கித்து உண்மையை யேற்றுக்கொள்வதைவிட்டு, தாம் கூறுவதையே சாதிப்பான் கருதி) குதர்க்கமாகிய விதண்டா வாதம்செய்யும் சுபாவமுடைய வஞ்சகர்களும்.

தலைவணங்கிட=(மறுக்கமுடியாது நாணத்தோடு) தலைவணங்கித்தொழ

தன்முகத்தில்=தன்னிடத்திற்கு

உயிர்வர அழைக்கும்=உயிர்களெல்லாம் வரும்படிச் செய்யும்.

பகடு மேய்க்கி=எருமை மேய்ப்பவன்.

தனியிருப்ப=(செயலற்று) ஒரு புறம் நிற்க.

வடநீழலூடுவளர்=கல்லால விருட்சத்தின் கீழ் இருக்கும்.

ஜநகஞதியர்=ஜநகர், ஜநத்குமாரர், ஜநந்தனர், ஜநாதனர் ஆகிய நான்கு மகரிஷிகள்.

அங்கைகொடு மோன ஞானமது உணர்த்தி=சின்முத்திரைக் கரத்தால் மோனமாகிய ஞானநிலையை யுணர்த்தி.

அருள் இயல்பதாகவுள=அருளே திருமேனியாகவுடைய.

சோமசேகரகிர்பாளு=சந்திரனைச் சிரசில் தரித்த கிருபாமூர்த்தி.

தென்முகத்தின் முகமாய் இருந்த கொலு=தக்ஷிணாமூர்த்தியாக வெழுந்தருளியிருந்த கொலுவினை.

எம் முகத்தினும் வணங்குவேன்=எந்தத் திக்கிலும் அச் சொரூபமே புளதாகப் பாவித்து வணங்குவேன்.

தெரிவதற்கரிய=ஒருவராலும் அறியவொண்ணாத.

"பன்முகச் சமயநெறிபடைத்தவர்" என்பது, சர்வமதங்களாலும் பிரதிபாதிக்கப் படுபவர் ஒரே கடவுளென்பதையும், அவர் சமயாதீதர் என்றும், ஒரு சமயக்கட்டுக் குட்பட்டவரல்லவென்றும் உணராது, என் சமயம் மெய், உன் சமயம் பொய், என்று பேதபுத்தி கொண்டு வாதமிட்டலையும் பல்வேறு மார்க்கங்களையுடைய திமிர சமயவாதிகளைக் குறிக்கிறது.

"யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவர்" என்பது, "நானே பிரம்மம்' அதாவது 'இந்த வியஷ்டி ஆன்மாவே பிரம்மம்' என்று உணர்வதே முத்திநிலை என்ற கொள்கையுடையோரைக் குறிக்கிறது. அவ்வாறு கூறுவது அகங்காரமாதலாலும், அது பாதகச்செயலாதலாலும் அவர்களைப் பாதகத்தவர் என்றனர்.

"அகம் பிரம்மாஸ்மி" (உள்ளம் பிரம்மமா யிருக்கிறது) என்று வேதம் கூறியது. "ஆன்மா பிர்ம்மத்தைப்போலவே சச்சிதானந்த சொரூப முடையது-இரண்டும் ஒரு இனமே"என்று உணர்வதற்கேயன்றிவேறில்லை. இரண்டும் ஒரு இனமே யென்றறியாவிடில், (குடநீர் கடல் நீரில் கலந்து கடலேயாவதுபோல்) ஆன்மா பிரம்ம சொரூபத்தோடு கலந்து பிரம்மமே யாகும் என்பதில் ஐயமுண்டாகும். 'ஆன்மாவாகிய நீயே பிரம்மம், வேறு பிரம்மமில்லை' என்ற பொருளில் வேதம் கூறியிருக்குமாயின், ஒவ்வொரு ஆன்மாவும் ஒவ்வொரு பிரம்மமாகி முடிவில் எண்ணிறந்த பிரம்மங்களாகி விடும். மேலும் அப்படி அர்த்தம் கொள்வதாயின் "தத்வமசி" (அது நீயா கிருய்) என்ற மகாவாக்கியம் எழக்காரணமில்லை. நாம் மோக்ஷமடையப் பக்தியவசியமென்பதும் வேண்டியதில்லை. அவனருளைப் பெறவேண்டும் என்ற எண்ணமே வேண்டியதில்லை. உண்மை "பிரம்மத்தை யன்றி ஆன்மா வேருயில்லை" என்பதாம்.

வேதத்திலுள்ள நான்கு மகா வாக்கியங்களும் ஒரு முடிவை ஐயமின் றிக் காட்டவெழுந்தவை. அவற்றில் சாமவேதம் சாந்தோக்கிய உபநிடதத் துள்ள "தத்வமசி" மகாவாக்கியமே முடிவான அநுபவத்தைக் கூறுவது. ஆதலின் ஒன்றைமட்டும் எடுத்துக்கொண்டு அதையே முடிவான பொரு ளாகக் கொள்வது தவருகும்.

" என்று மிருந்த படியிருக்கு மியல்பே யென்னு மொருவேதம்
ஒன்றே யொழிய விரண்டாம்வத் தில்லை யென்னு மொருவேதம்
வென்றிப் பரமும் நீயும்வே றில்லை யென்னு மொருவேதம்
துன்று மதுவே நீயாகு யென்றே சொல்லு மொருவேதம்."

(வள்ளலார்)

தக்ஷிணாமூர்த்தி ஞானகுரு. "தக்ஷிணாமூர்த்தி" என்ருல் "தெற்கு நோக்கியபடி யிருப்பவர்" என்பது பொருள். அவர் எச்சமயத்தவர்க்கும் பொதுவானவர். சமயாதீதர். அவர் காட்டும் மோக்ஷ நிலையும் எச்சமயத்த வரும் அடையத்தக்கதே. அதனுனே அவர் யாவரும் வணங்கற்குரியவர் என்ருர். அவர் காட்டும் நிலை மரணம் பிறப்பற்ற நிலையாதலாலும் அந்த நிலையில் இருப்பவர்களிடம் எமனுக்கொருவேலையு மில்லையாதலாலும் எமனை 'எருமை மேய்ப்பவனுய்த் தொழிலற்று ஒரு பக்கம் இருப்பான்' என்று கூறினர்.

2. நெஞ்சே=ஓ மனமே! (எனக்கும் உனக்கும் உறவில்லை.)

ஆன்மா தாதான்மியத்திரியங்களால் மயங்கி மனதோடு கலந்து அதன் தொழில்களை யெல்லாம் தன் தொழில்களாகக் கருதி இடர்ப்படுகிறதே யன்றி உண்மையில் மனதிற்கும் ஆன்மாவிற்கும் ஒரு சம்பந்தமுமில்லை. ஆன்மா சத்து சித்து. மனம் அசத்து ஜடம். ஆன்மா மனதை வேறு பிரித்தறிந்து நிராகரித்துவிடக்கூடும். அதனுல் மனமே உனக்குமெனக் கும் உறவில்லை யென்று தெளிந்தேன் என்ருர்.

மனதை யொடுக்கியபின்பே நிட்டை கைகூடும். அதன்பிறகு மனம் தலையெடுத்தாடாது. ஆகையால் சற்றும் உன்னை மதிக்கமாட்டேன் என்றார்.

மனம் மடிந்து ஞானநிட்டை கைவந்தவிடத்துண்டான ஆனந்தத்தால் மனதை நோக்கி அவ்வாறு கூறினார்.

"மனம்வேறு, நாம் என்ற ஆன்மாவேறு என்றுணர்ந்தால்தான் மனதை யடக்கமுடியும். அப்போதுதான் நிட்டைகூடும்" என்று இது உணர்த்துகிறது.

3. எல்லாமே மோன நிறைவு எய்துதலால்=சகலமும் முடிவில் மோன நிலையாகிய முத்தி நிலையை அடைவதால்.

நல்லார்=அறிவாளிகளாகிய முமுட்சுக்கள்.

மோனநிலை நாடினார்=அந்த மெய்ஞ்ஞான நிலையை யடைய முயன்றார்கள்.

(ஆனால் நானோ)

பொல்லாத நான் என ஒன்றை=பொல்லாங்கை விளைவிக்கும் "நான்" என்கிற அகங்காரத்தை.

இங்கு நடுவே முளைக்கவிட்டு=இங்கே மத்தியில் உண்டாக்கிக்கொண்டு.

அலைந்தேன்=(பிறப்பிறப்பாகிய துன்பங்களில் இதுகாறும்) அலைச்சற்பட்டேன்.

'பொல்லாத நான்' என்பதை பெயரெச்சத் தொடராகப் பொருள் கோடலினும், இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகையாகக்கொண்டு "பொல்லாததை விளைவிக்கும் நான்" என்று பொருள் கோடலே பொருத்தமாகும். பின்னால் "நான் என்ற ஒன்றை" என்று வருவதனாலும் இது நன்கு விளங்கும்.

'நான்' என்கிற அகங்கார கிரந்தியே பிறப்பிறப்பிற்குக் காரணமாகையால் இவ்வாறு கூறினார்.

தாயுமானவரே மற்றோரிடத்தில் "நான் நான் எனு மகந்தை இங்கெனக்கேன் வைத்தாய்" என்று கூறியுள்ளதையும்,

"நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் ஜகமாயை நானாவாகித்
தான்வந்துதொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்றவல்லார்
* * * * "

என்ற பாசுரத்தையும் ஈண்டு கவனித்துணர்ந்தால் மேல்கூறப்பட்ட பொருளே சுவாமிகளின் கருத்தெனவறியலாம்.

# ஆனந்தபோதினி

இரக்தாட்சி௵ சித்திரை௴ க௳

## தேசக்ஷேமம்.

ஒரு தேசம் க்ஷேமமா யிருக்கிறது என்றால், அத்தேசத்தி லுள்ளோர் உலகவாழ்க்கைக்கு வேண்டிய உபகரணங்கள் யாவும் பூரணமாகப் பெற்று சுகதேகிகளாய் வியாகூலமின்றி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதே பொருளாகும். மனிதருடைய வாழ்க்கைக்கு முக்கியமாய் வேண்டியவை. (1) உணவுக்கு வேண் டிய பலவகைப் பொருள்கள், (2) உடுக்க ஆடைகள், (3) ஆபர ணங்கள், வசிக்க வசதியான இடம் முதலிய இவைகளே.

1. உணவுக்கு வேண்டிய பொருள்கள் யாவும் பூமியிலிரு ந்தே உற்பத்தியாகவேண்டும். பால், தயிர், நெய் இவைமட்டும் ஆடு மாடுகளிலிருந்து உற்பத்தியாகிறவை.

2. உடைக்கு வேண்டியவற்றில் பருத்தி முக்கியமானது. அதுவும் பூமியிலிருந்தே உற்பத்தியாகவேண்டும். கம்பளி ஆடு முதலிய மிருகங்களின் உரோமத்தால் செய்யப்படுகிறது.

3. ஆபரணங்களுக்குப் பொன் வெள்ளி முதலிய உலோகங் களும் நவரத்தினங்களும் வேண்டும்.

இவையன்றி வாசம்செய்ய வீடு கட்டவும் சாமான்கள் செய்து கொள்ளவும் அவசியமான விருட்சங்கள் முதலியவை ஏறக் குறைய எல்லா நாடுகளிலும் கடவுளால் உற்பத்தி செய்யப்பட்டே யிருக்கின்றன.

ஆகையால் மேல்கண்ட பொருள்களெல்லாம் எந்தத் தேசத் தில் போதுமான வரையில் கிடைக்கின்றனவோ அந்தத் தேசம் க்ஷேமமாக விருக்கிறதென்றே கருதலாகும்.

சாதாரணமாய் உலகில் ஒருவனிடம் பணம் அதிகமாகவிருந்தால் அவனுக்கொரு குறையுமில்லை யென்று கூறுகிறார்களே, அதுவுமன்றி "பணம் பத்தெட்டும் செய்யும்" என்று பழமொழியேயிருக்கிறதே என்று கேள்வி பிறக்கலாம். இவ்வாறு கூறுவது உண்மையே. ஆயினும் பணம் நேராக க்ஷேமத்தை யளிக்காது க்ஷேமத்திற்கு அவசியமான மேற்கண்ட பொருள்களை வாங்குவதற்குப் பணம் உபயோகப்படுமேயன்றி பணம்மட்டும் ஒரு பிரயோசனமுமில்லை. ஆதிகாலத்தில் ஒரு பண்டத்தை யளித்து, வேண்டிய மற்றொரு பண்டத்தை வாங்கிக்கொண் டிருந்தார்கள். இப்போது பணம் எதை வாங்குவதற்கும் ஒரு பொதுமாற்றுப் பொருளாக விருக்கிறது. பாலைவனத்தின் மத்தியில் சிக்கிக்கொண்ட ஒருவனிடம் கோடி ரூபா பெறும்படியான நவரத்தினங்கள் இருந்தாலும் என்ன பயன்?

இப்போது மனிதர் க்ஷேமமாக வாழ்வதற்கு அவசியமான பொருள்கள் இன்னவையெனக் கூறினோம். இனி நமது நாட்டில் அப்பொருள்கள் கிடைக்குமா என்பதைப்பற்றி கூறுவாம்.

1. தானியங்களில் நெல், கோதுமை, கடலை, துவரை, பயறு முதலிய நவதானியங்களும் நம் நாட்டில் உற்பத்தியாகின்றன. பழவர்க்கங்களில் முதன்மைபெற்ற மா, கதலி, பலா முதலியவையும் இன்னும் உஷ்ணகாலத்திற்குச் சுகமளிக்கும் தெங்கு, தர்ப்பூசனி, கிச்சிலி முதலிய பல்வகைக் கனிகளும் நம் தாய்நாட்டில் உற்பத்தியாகின்றன. இவ்விஷயத்தில் நம் நாடு ஒப்புயர்வற்றதென்பதில் சற்றும் ஐயமில்லை. ஆடு மாடுகளும் நம் நாட்டில் வேண்டியமட்டு முண்டு.

2. உடைக்கு வேண்டிய பருத்தி முதலியவைகளும் நம் நாட்டில் உற்பத்தியாகின்றன. கம்பளி யளிக்கத்தக்க மிருகங்களும் நம் நாட்டிலில்லாமலில்லை. சாயம் போடுவதற்கு வேண்டிய அவுரி முதலியவைகளும் இங்கு உற்பத்தியாகின்றன.

3. ஆபரணத்திற்கு வேண்டிய பொன் முதலிய உலோகங்களும் இரத்தினங்களும் கூட நம் நாட்டில் உற்பத்தியாகின்றன. நமது கடல்களில் விளையும் நல் முத்துகள் உலகப் பிரசித்தி பெற்றவை.

மேல்நாடுகள் செல்வம் மலிந்தவையா யிருக்கின்றன. ஆனால்

ஒவ்வொரு நாடும் வாழ்க்கைக்கு வேண்டிய உணவுப்பொருள் முதலியவற்றைப் பணம்கொடுத்து அன்னிய நாடுகளிலிருந்தே தருவித்துக்கொள்ளவேண்டும். ஆதலின் ஒவ்வொரு நாடும் அந்நிய நாடுகளின் தயவை யெதிர்பார்த்தே தீரவேண்டும். நம் நாட்டிலுள்ள அடவிகளிலும் மலைகளிலும் சந்தனம், தேக்கு, செம்மரம், வேங்கை முதலிய உயர்தர விருட்சங்களும், ஔஷதத்திற்கு வேண்டிய ஏராளமான மூலிகைகளும் வித்து வகைகளும் உற்பத்தியாகின்றன. நம் தாய்நாட்டில் உற்பத்தியாகும் மேற்கண்ட பொருள்களனைத்தும் மேல் நாடுகளில் ஒன்றிலேனும் கிடையா. ஆகையால் நாம் எந்த அன்னிய நாட்டின் உதவியையும் எதிர் பாராமலே க்ஷேமத்தோடு சீவிக்கலாம்.

உண்மை யிவ்வாறிருக்க, நமது தாய்நாடு, நீர்வளம் நிலவளத்தில் இணையற்ற நன்னாடு, க்ஷேம நிலையைப் பொருந்தியிராததன் காரணம் என்ன? எப்போதுமே இந்த நிலைமையிலா யிருந்தது? இல்லை யில்லை. நம் நாட்டில் எப்போதும் உணவுக்கு வேண்டிய தானிய வகைகளும் மற்றவைகளும் ஏராளமாகவே உற்பத்தியாகிக்கொண்டிருந்தன. 1900-வது வருடம்கூட இதே சென்னையில் முதல்தரமான சிறுமணி சம்பா அரிசி 1 ரூபாய்க்கு எட்டு, ஒன்பது படிகள் வீதம் கிடைத்துவந்தது. மற்றப் பண்டங்களும் அவ்வாறே மலிவாயிருந்தன. இப்போது இத்தகைய அநீத நிலைமைக்கு வந்திருக்கக் காரணம் என்னையோ? இப்போதென்ன மழைபெயாமலேபோய் தானியங்கள் பயிரிடப்படாமலே யிருக்கின்றனவா? இல்லையே. அப்படி யிருந்தும் எல்லாப் பண்டங்களும் விலையேறி ஜனங்கள் உணவிற்கே திண்டாடவேண்டி யிருப்பானேன்?

நம் நாட்டு நிலைமையில், இன்னொரு பெரிய அதிசயம் இருக்கிறது. நம் நாடு மிக்க பரிதாபமான நிலைமையிலிருப்பதே பிரத்தியட்ச உண்மை. அப்படி யிருக்க முன் இருந்ததை விட மிக்க க்ஷேமமான நிலைமையிலிருக்கிறதென்று வெளிநாட்டா ரனைவரும் உணரும்வண்ணம் பறையறையப்படுகிறது. இதை நிரூபிக்கும் மாதிரி மிக்க விசித்திரமானது. நம் நாட்டிலிருந்து அனேக இலக்ஷம் ரூபாய் பெறும்படியான சாக்குகள் வெளிச் செல்கின்றன வென்றும், அனேக இலக்ஷம் ரூபாய் பெறும்படியான சரக்குகள் வெளிநாட்டிலிருந்து வருகின்றன, அதாவது ஏற்றுமதி இறக்கு

மதி சரக்குகளின் கிரையத் தொகை இப்போது விருத்தியாகி யிருப்பதால், தேசம் க்ஷேமமடைந்திருக்கிறது என்று கூறப்படு கிறது. உண்மையில் இந்த ஏற்றுமதி இறக்குமதி விஷயமே நம் தேசம் தரித்திர தசை யடைந்திருப்பதற்கு உண்டாகிய காரணங் களில் ஒன்ருகும்.

ஒரு வர்த்தகன் தினம் நூறு ரூபாய் சரக்கு விற்ருன், நூறு ரூபாய் சரக்கு வாங்கினன் என்று வைத்துக்கொள்வோம். விற்றதாலும், வாங்கியதாலும் அவனுக்கு இலாபமாகவிருந் தால்தான் அவன் அந்த வர்த்தகத்தால் க்ஷேமப்படுகிருன் என லாம். மேற்கண்ட விஷயமோ அப்படியில்லை. அந்த ஏற்றுமதி இறக்குமதிகளால் நம் நாட்டிற்குப் பல தீங்குகளும், வீணை பொருள் விரையமும் உண்டாக, அவற்ருல் நல்ல இலாப மடை கிறவர்கள் அன்னிய நாட்டாராகவே யிருக்கிருர்கள்.

ஒரு திருட்டாந்தம் கூறுகிருேம். நம் நாட்டிலிருந்து 10 இலக்ஷம் ரூபா பெருமான பருத்தி இங்கிலாந்திற்கு அனுப்பப்படு கிறது; 60 இலக்ஷம் ரூபா பெறுமதியுள்ள துணிகள் அங்கிருந்து வருகின்றன என்று வைத்துக்கொள்வோம். இதனல் யாருக்கு இலாபம், யாருக்கு நன்மை என்பதைக் கவனிப்போம்.

இந்தப் பருத்தியை மேல்நாட்டு வர்த்தக சங்கத்தார் ஆங் காங்கு தங்கள் காரியஸ்தர்களை வைத்து வாங்கிக்கொண்டு போவ தால் கொஞ்ச நஞ்சம் மிச்சமிருக்கும் பஞ்சிற்கு விலை யதிகமாகி விடுகிறது. இதனல் இங்கு நெய்யப்படும் நாட்டுச் சேலைகள் முத லியவையும் விலையேற்ற மடைகின்றன. நம் நாட்டிலுற்பத்தியான பஞ்சே வெளிநாட்டிலிருந்து துணியாய்த் திரும்பிவந்தபோது அதற்கு அதிக விலைகொடுத்து வாங்குகிருேம். இத்தகைய விஷ யங்களால் இலாபம் பெறுபவர்கள் அன்னிய நாட்டாரேயன்றி நாமல்ல. அப்பஞ்சு நம் நாட்டில் துணியாகச் செய்யப் படாததால் இங்குள்ள அனேகர்க்குப் பிழைப்பில்லாதுபோவதோடு அதனல் வரும் இலாபமும் அன்னிய நாட்டாரே யடையநேர்கிறது.

இனி நம் நாடு மற்றெல்லா நாடுகளிலும் செழுமையான தென்பதும், வேருெருநாட்டின் உதவியைக் கோராமலே நாம் சகல சௌகரியங்களோடும் சீவிக்கக்கூடிய வண்ணம் நம் நாடு சகல பொருள்களையும் அளிக்குமென்பதும் வெளிப்படையாய்

யாவரும் அறிந்தவிஷயமே. அப்படியிருக்க நம் நாடு இப்போ தேன் இத்தகைய நிலைமையிலிருக்கவேண்டும்? இதற்குக் காரணங்களிருக்கின்றன. அவற்றில் முக்கியமானவற்றைக் கூறுகிறோம்.

1. நம் நாட்டில் இப்போது நமக்கு வேண்டிய உணவுப் பொருள்களுக்குப் போதுமான தானிய வகைகள் பயிர்செய்யப் படுவதில்லை. ஏனெனில் விவசாயிகளுக்குக் கல்வியின்மையால் நம் தாய்நாட்டின் க்ஷேமத்திற்காக நாம் இன்னவற்றை யுற்பத்தி செய்யவேண்டுமென் றுணரும் ஆற்றல் அவர்களுக்கில்லை. ஆதலின் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தால் அதிக பணம் கிடைக்கக்கூடியவையாகிய (வெல்லம் உண்டாகும்) கரும்பு, மணிலாக் கொட்டை, பருத்தி, அவுரி, சணல் முதலியவற்றையே யதிகமாய்ப் பயிர்செய்கிறார்கள். நெல், கம்பு, கேழ்வரகு, வரகு, சோளம், மற்ற நவதானியங்கள், ஆமணக்கு இவற்றைப் போதுமானபடி பயிர் செய்வதை விட்டுவிட்டார்கள். இப்படி யவர்கள் ஏற்றுமதி செய்யும் பொருள்கள் மேல்நாடுகளுக்குச் சென்று வேற்றுருவாய் மாறி, சீட்டுத்துணிகளாகவும், சிறுவர் உண்ணும் தின்பண்டங்களாகவும், சர்க்கரையாகவும் இன்னும் பலவிதமாகவும் இங்கு கொண்டுவரப்பட்டு அதிக விலைக்கு நமக்கே விற்கப்படுகின்றன. இதனால் நம் தரித்திரம் அதிகமாகிறது. இன்னும் உண்டாகும் பல தீமைகளையும் ஈண்டு விரிக்கிற் பெருகும்.

2. இக்காரணத்தோடு நாடுகளில் தரிசாய்க்கிடக்கும் நிலங்களைப் பண்படுத்திப் பயிர்செய்யப் போதுமான ஆட்களில்லை. அனேகர் நகரங்களில் மேல்நாட்டார் தாபித்திருக்கும் தொழிற்சாலைகளில் போய் கூலிவேலை செய்தால் தினம் 12 அணு முதல் 2 ரூபா வரையில் கிடைக்கிறதென்று அங்கு செல்கிறார்கள்.

3. நிலங்களிலோ தினேதினே சாரம் குறைந்துகொண்டே போகிறது. ஏனெனில் பயிரிடும் மார்க்கம் 50 வருடங்களுக்குமுன் நடந்த முறைமையிலேயே இப்போதும் நடக்கிறது. தக்க எரு போட்டுப் பூமியைப் பண்படுத்துவதில் சற்றேனும் சீர்திருத்தமே யுண்டாகவில்லை. நாட்டில் விவசாயக் கல்வி போதிக்கப்படுவதில்லை. கல்வி கற்றோரோ, விவசாயிகளின் புத்திரர்களாயினும், அத்தொழில் இழிவெனக் கருதி, அதைச் சற்றும் கவனிக்காமல்

சேவகாவிர்த்திக்கே செல்கின்றனர். இவர்களுக்குக் கல்வி யில்லா திருந்தாலும் இவர்கள் விவசாயமேயாவது செய்துகொண்டிருப் பார்கள். இவர்களுக்கு ஆங்கிலம் கற்பித்ததால் நாட்டிற்கு இக் கேடு பலனாகக் கிடைத்தது.

இக்காரணங்களால் முன்பு நமது பாட்டனார் காலத்தில் அறு பது கலம் விளைந்த காணி இப்போது முப்பதுக்குத் தாளம்போடு கிறது. இங்கிலாந்தில் எலிஜபெத் இராணி அரசாண்ட காலத்தில் உண்டான விளைவிற்கு இப்போது நான்கத்தனையுண்டாகிறது. ஏனெனில் அவர்கள் விவசாயக் கல்வி கற்று, இரசாயன ஆராய்ச் சியால் பெற்ற அறிவைக்கொண்டு, புதுப்புது எருக்களை யுற்பத்தி செய்து விவசாயம் செய்கிறார்கள். இயற்கையில் அவர்கள் நாடு கற்பாங்குள்ள தாதலின் இரும்புக் கலப்பையில் குதிரைகளைக் கட்டி ஏருழவேண்டும்.

சுமார் நாற்பது நாற்பத்தைந்து வருடங்களுக்கு முன் வரை யில் நம் நாட்டு விவசாயிகள் நவதானியங்களையும் ஆமணக்கு, கரு ம்பு, பருத்தி, தென்னை முதலியவைகளையும் சரியாய்ப் பயிரிட்டுக் கொண்டிருந்தார்கள். வேர்கடலையும் பயிராக்கப்பட்டது. ஆனால் நாட்டு வேர்கடலையே; மணிலாகொட்டையல்ல. அப்போது விளை யும் கரும்பால் உண்டான வெல்லமனைத்தும் நாட்டிலேயே உப யோகப்படுத்தப்பட்டன. வெல்லத்திலிருந்து கற்கண்டும், நாட்டு வெள்ளைச்சர்க்கரையும், சிகப்புச் சர்க்கரையும் உற்பத்தி செய்யப் பட்டன.

அக்காலங்களில் வெல்லம் மணங்கு 1-க்கு ரூபா 1-0-0, 1-4-0 க்கு விற்கப்பட்டது. முதல்தர சம்பா அரிசி 15, 16 படி. மிள காய் வீசை 5, 6 அணா. பருப்பு 1 ரூபாய்க்கு 5, 6 படி. நல்லெண் ணெய் வீசை 5, 6 அணா. விளக்கெண்ணெய் வீசை 3, 4 அணா. நெய் வீசை 14 அணா முதல் ரூபா 1-2-0 வரை. மற்ற எல்லாப் பண்டங்களும் இவ்வாறே.

இப்போது நம் நாட்டார் தேச நன்மையைக் கருதாமலே, சுய நலம் கருதி ரொக்கப்பணம் கிடைக்குமென்று மணிலாக் கொட்டை, அவுரி முதலிய மேல்நாட்டிற் கனுப்பப்படும் பொரு ள்களையே உற்பத்தி செய்கிறார்கள். ஒவ்வொருவரும் சுயநலம் கருதியே வேலை செய்தால் முடிவில் எல்லார் நலமும் தீங்காகவே

முடியுமென்ற உண்மையை யிவர்களறிவதில்லை. தேச க்ஷேமத்திற்கென்று—பிறர் நலத்திற்கென்று பாடுபடுவதே தன் நலத்தை விருத்தி செய்வதாகும். தேசக்ஷேமத்திற்கு வேலை செய்பவன் றான் தன் நலத்திற்கு மிக்க அநுகூலம் தேடுபவனாவான்.

பொது நலத்திற்கு உழைப்பதில் சுய நலம் இல்லாமலில்லை. ஆழ்ந்து நோக்கின் சுயநலமில்லாத வேலையே யில்லை. ஆன்மா எப்போதும் தன் சுகத்திலேயே நாட்டமுடையது. உலகபோகமனைத்தும் வெறுத்துவிடும் ஞானிகூட எல்லா இன்பங்களினும் மேலான அழியாத பேரின்பம் என்ற ஒன்று கிடைக்குமென்றே அப்படிச் செய்கிறான். ஆகையால் எவரும் எப்போதும் பிறர் நன்மையை, தாய்நாட்டின் நன்மையைக் கருத்தில் வைத்து வேலை செய்வதே ஒவ்வொருவரும் க்ஷேமமடைவதற்குத் தகுந்த வழியாகும். அந்தோ! நமது நாட்டார் இனியேனும் இதைக் கவனத்தில் வைத்து நடப்பார்களோ!

நம் நாட்டின் தரித்திர நிலைமை யொழியவேண்டுமாயின் பின் கண்ட இரண்டொரு விஷயங்களையேனும் நாம் கவனித்து நடக்க வேண்டும்:—

1. கிராமங்களிற் சென்று விவசாயிகளுக்கு மேற்கண்ட உண்மைகளை யெடுத்துக் கூறி, அவர்கள் அவற்றை யுணர்ந்து நம் நாட்டிற்கு அவசியமான தானியங்களையே பயிரிடும்படிச் செய்ய வேண்டும்.

2. கிராமங்களில் கட்டாயக்கல்வி போதிக்கப்படவேண்டும். பாஷைக்கல்வியோடு விவசாயமும் கைத்தொழிலும் கற்பிக்கப் படவேண்டும்.

இவ்விஷயத்தில் நாமே முன்சென்று முயற்சி எடுத்துக் கொண்டால்தான் பயனுண்டு. அதை விட்டு அன்னியர் உதவியையே எதிர் பார்த்திருந்தால் நாம் ஒருபோதும் நன்மையடைய மாட்டோம். நாம் முயன்றால் கடவுள் தயவால் உதவி யேற்படும். நம்மவராகிய மந்திரிமாரும், துரைத்தனத்தைச் சேர்ந்த அவயவிகளும் இத்தகைய விஷயங்களைக்கவனித்தால் தாய்நாட்டிற்குப் பெரு நன்மைசெய்த புண்ணியமும் மங்காக்கீர்த்தியு மடைவார்களென்பது திண்ணம். ஒவ்வொரு கிராமத்தாரும் இவ்விஷயத்தில் முயற்சியெடுத்துக்கொள்ளவேண்டும். நகரங்களில் பெருங் கூட்டமான

ஜனங்கள் முன் பிரசங்கம் செய்யும் தேசாபிமானிகள் கிராமங்க ளுக்குச் சென்று இக்காரியத்தை கிராமவாசிகளுக்கு உபதேசித் தால் பலனுண்டாகும். நகரங்களில் சங்கங்கள் கூடி தக்க ஆட்க ளைக் கிராமங்களுக்கனுப்பி இதைப்பற்றியும் நமது மதத்தைப்பற் றியும் பிரசாரம் செய்வித்தால் அது பயனளிக்கும் உயர்ந்த தேசத் தொண்டாகும்.

3. இது ஒரு முக்கியமான விஷயம். ஆங்கிலம் கற்கும் மாண வர்கள் பின்னால் துரைத்தனத்தாரிடம் சேவகம் செய்தே நாம் சீவிக்கவேண்டும் என்ற தகாத எண்ணத்தை யடியோடொழித்து விட்டு, அவரவர்களுக்குத் தக்கபடி விவசாயமோ, வர்த்தகமோ செய்து அதில் பிரசித்தி பெறவேண்டும் என்ற ஆவல்கொண்டு அதற்கு அவசியமான கல்விகளைக் கற்கும்படி செய்யவேண்டும். பெற்றோரும் உபாத்திமாரும் இவ்விஷயத்தில் முயற்சி யெடுத் துக்கொண்டு மாணவர்களுக்குப் போதிக்கவேண்டும்.

4. ஆகாரத்திற்கு வேண்டிய பொருள்களுக்கும் உடைகளுக் கும் அன்னியநாட்டை யெதிர்பாராமல், அவைகளை நாமே உற் பத்திசெய்துகொள்ளவேண்டும். இவ்விஷயத்தில் நாம் சொந்த மாய் செய்துகொள்கிறவற்றை-நம் நாட்டில் நம்மவர் கையால் உற் பத்தி செய்யப்பட்டவற்றை யுபயோகிக்காமல் அன்னிய நாடுகளி லிருந்து வருபவற்றை யுபயோகிப்பது நமக்கு அகௌரவமும் பாபமு மாகும் என்று கருதவேண்டும்.

5. நமக்கு அவசியமல்லாத அன்னியநாட்டுப் பொருள்களை, அவற்றின் தளுக்குக்கு மயங்கி படாடோபத்திற்காகவும் வீண் பெருமைக்காகவும் வாங்கி யுபயோகிப்பதை யடியோடு விலக்க வேண்டும்.

எல்லாம்வல்ல கருணாநிதியாகிய பரம்பொருள் இவ்வழியில் நாம் நடக்கும்வண்ணம் நமக்கு நல்லறிவளித்து அருள்புரியுமாறு நாமனைவரும் தினம் அவரைப் பிரார்த்திப்போமாக.

ஓம்தத்ஸத்.

## தனித்தமிழ்ப் பாதுகாப்பு.

மாசித் திங்களிதழில் 309-ம் பக்கம் துரைசாமி ஐயரவர்கள் நாகை நீலாம்பிகை அம்மையார் வரைந்த கட்டுரையில் சில பொருந்தாக் கொள் கைகளுளவென்று காட்டியுள்ளார்கள். அவற்றினுண்மையை ஈண்டாராய் வாம்.

'வடமொழியைத் தெய்வபாஷையென்று சொல்லியது பொருந்தா விட்டால், "தெய்வத்தமிழ்" என்று அம்மையாரே கூறுவதெப்படி?' என்கிறார்கள். இவ்வாறு இவர்கள் கேட்டதிலிருந்து இவர்கள் அம்மை யார் கட்டுரையைச் செவ்வையாய் வாசிக்கவில்லையென்று நன்கு விளங்கு கின்றது. வடமொழி தெய்வபாஷை என்பதை அம்மையார் மறுக்கவில்லை. ஆனால் அது தேவர்கள் பேசும் மொழி என்பதைத்தான் மறுத்தார்கள். தேவர்கள் அறியாமை இருளால் பற்றப்படா உள்ளமுடையவர்களாகையால், அவர்கட்கோர் மொழி வேண்டுவதில்லை. மொழியினுதவியின்றி அவர்கள் வாழலாம் என்றுதான் அம்மையாரவர்கள் சொன்னார்கள். ஆனால் "தெய்வத்தமிழ்" என்றதென்னை எனில், தெய்வத்தன்மை பொருந்திய தமிழ் என்பதை வலியுறுத்துதற்கே. இவ்வாறு தமிழுக்கு தெய்வத்தன்மை இல்லாவிட்டால் தொண்டர் நாதனைத் தூதுவிடவும், முதலையுண்ட பாலனை அழைக்கவும், எலும்பைப் பெண்ணுருவாக்கவும், மறைக்கதவினைத் திறக்கவும் முடியுமோ? தெய்வமாகிய சிவத்தை உணர்த்துவான் வேண்டிப் பிறந்த திருஞானசம்பந்தப் பெருமானும், திருநாவுக்கரசுகளும், சுந்தரமூர்த்திகளும், மாணிக்கவாசகப் பெருமானும் தங்கள் திருப்பதிகங்களை இத்தெய்வத்தமிழின்கண்வைத்து இயற்றியிருக்கிறார்களன்றோ? நிற்க,

"அம்மையார் சமஸ்கிருத பாஷையை 'ஓசை இனிமை இல்லாதது' என்று சொன்னால் அதனால் தமிழுக்கு என்ன இனிமை அதிகமாய் வந்துவிட்டது?" என்கிறார்கள். இவ்வாறு ஏனைய மொழிகட்கெல்லாம் இல்லா இனிமை தமிழுக்குண்டென்பதை சுவாமி வேதாசலம் அவர்கள் "தமிழ் நான்மறையின் தெய்விக உண்மை" என்னுங் கட்டுரையில், நன்கு விளக்கியுள்ளார்கள். ஈண்டு சிலவற்றைக் கூறுவாம். க்,ச்,த்,ப்,ட் என்பனவற்றை எடுத்தல், படுத்தல், நலிதலாகிய சுதாத்த, அனுதாத்த, சுவரிதவகை பற்றி உச்சரிக்கும் வல்லோசையும், மெல்லோசையினையே கெடுத்துத் தோன்றும் ஸ, ஶ, ஷ, ஹ, க்ஷ என்னும் அனுகரண குறிப்போசைகளும் தமிழின்கண் இல்லாமையும், மெய்யெழுத்துக்களை முதலிற்கொண்டு ப்ரபலம், ந்யாசம், க்ரமம் என்றற்றொடக்கத்தான் வருந்தி யுச்சரிக்கவேண்டாது, அவற்றை உபயோகிக்குங்கால் உயிர் எழுத்தைச் சேர்த்து பிரபலம், நியாசம், கிரமம், என்று இலேசாக்கிச் சொல்லும் நெறியுடைத்தாதலால், ஓசை இம்மெல்லோசை இன்பத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் "ழ"கரம், தமிழின்கண்மாத்திர மிருக்க மற்ற மொழிகளிலில்லாமையால், அம் மெல்லோசை இன்பம் தமிழுக்கே உரிமைப் பண்டமென்பதை அறிவுடையோர் எவரேனும் அங்கீகரிக்கக் கூசுவாரோ? இம்மெல்லோசையாலன்றோ, அம்மெல்லோசையோடு சம்பந்தப்பட்ட சிவத்தை யுணர்த்திய நால்வரும் தம்மருமைத் திருவாக்குகளைத் தமிழில் ஓதினார்கள். இன்பம் தமிழுக்கே உண்டென்பதைச் சிறுமகாரு மறியலாம். நிற்க,

திருவாளர் மாணிக்கநாய்க்கரவர்கள், சாதாரணமாய் வழங்கும் 1000 ஆரியச் சொற்களையும், 1000 ஆங்கிலச் சொற்களையும், 1000 தெலுங்குச் சொற்களையும், 1000 தமிழ் சொற்களையும் இன்னும் மற்ற மொழிச் சொற்களையும் எடுத்து, இவற்றை உச்சரிக்குங்கால் எவற்றினால் அதிகக் காற்று இருதயத்திலிருந்து வெளிவருகிறதென்று பார்த்தழி, ஆரியத்திற்கு அதிகக் காற்றும், தமிழுக்கு எல்லாவற்றிற்கும் குறைந்த காற்றும் வெளி வருகிறது என்று ஆராய்ச்சி யுரை கூறுகின்றார்கள். இதனால் ஆரியபாஷையைப் பேசுங்கால் அதிகக் காற்றுச் செலவும், அதனால் அக்காற்றோடு சம்பந்தப்பட்ட பிராண சக்தியும் அதிகமாகச் செலவழிக்கப்படுகிறதென்றும் விளங்கவில்லையா ? இவ்வாறு தன்னைப் பேசுவார்களின் பிராணசக்தியை வரிதாக்கி அவர்களைச் சீக்கிரமாகக் கொல்லுமாற்ற லிருக்கின்றதனாலன்றோ ஆரியமொழி தற்போது இறந்தொழிவதாயிற்று! இவ்வாறு இது இறந்தொழிந்தது இதனிடத்திலிருக்கும் வல்லோசையாலன்றோ! அது நிடக்க,

ஐயரவர்கள் தமிழ்ச் சொற்கள் ஆரியத்தில் கலந்ததற்கு உதாரணம் கேட்கிறார்கள். காட்டுவோம். அள், கள், கல், கு, சா, பண், பக், மின், வன், நல் முதலிய சுத்த செந்தமிழ்ப் பகுதிகளிற் பிறந்த ஆணி, அடவி, கடு, கலா, குடி, குண்டம், கூனி, குளம், கோட்டை, சவம், சாயா, பட்டினம், பாகம், மீனம், வளையம், நாரங்கம், முகம் முதலிய தமிழ்ச் சொற்கள் ஆரியத்தில் கலந்திருத்தல் ஆராயவல்லாரெல்லாம் அறியற்பாலதாம். நிற்க, 'இஞ்சிவேர்' என்னும் தமிழ்ச்சொல் 'ஸ்ரிங்கவேர்' என்று சமஸ்கிருதத்திலும், 'ஜிஞ்சிபெர்' என்று கிரீக்கிலும், 'ஜிஞ்சர்' என்று ஆங்கிலத்திலும் மாறினது என்றும், 'நீரும்' 'மீனமும்' பழைய வடமொழி நிகண்டிலில்லாமல், அதற்கு முன்னும் இவை இரண்டும் தமிழில் வழங்கப்படுதலும், 'அடவி, ஆணி, குடி, குடுகு, வலை' முதலியன தமிழாய் வடமொழி ஏறினவென்பரென்றும், கால்ட்வெல்துரை மகனாரும், நச்சினார்க்கினியரும் 'காலம்', 'உலகு' என்பன தமிழ்ச் சொற்களே என்று கூறுதலையும், திருவாளர் தினதயாளு என்பவர்கள், ஏழாவதாண்டு ஆனந்தனில் "தமிழர் புராதனமும், தமிழின் பெருமையும்" என்னுங் கட்டுரையிற் சொல்லியிருக்க, அதை அய்யரவர்கள் வாசியாதது மிகவும் வருந்தத்தக்கதே. அவ்வாறு அவர்கள் வாசித்திருப்பார்களாயின் "காலம்" என்னுஞ் சொல்லை அம்மையாரும், 'உலகு' என்னுஞ் சொல்லை நாயனாரும் எடுத்து உபயோகித்தது குற்றமென்று சொல்லியிருக்கமாட்டார்கள்.

கடைசியாக, "காலஞ்சென்ற ஸ்ரீமான் சுவாமி விவேகாநந்தரும் அம்மாதிரியே ஆரிய திராவிட விவாதம் குழந்தைகள் சண்டைபோல் அறியாமையால் தான் நடைபெறுமென்றார். ஆகையால் நாம் எல்லாரும் சமமாகவும் சகோதரபாவத்துடனும் இருக்கவேண்டும்" என்கிறார்கள். இவ்வாறு இவர் புத்திகூற, ஆரிய திராவிட விவாதம், அம்மையார் உபநியாசத்

தில் என்ன கண்டார்களோ அறிகின்றிலம். அம்மையார், தமிழ் ஆரியத்தினின்று பிறந்ததென்போர்க்கும், "ஒன்றேயாயினுந் தனித்தமிழுண்டோ" என்று தமிழை இகழ்ந்து பேசுவோர்க்கும், "தமிழ், மக்களுக்குரிய பாஷை. ஆரியம், தேவர்கட்குரிய பாஷை. ஆகையால் ஆரியம் சிறந்தது. தமிழ் தாழ்ந்தது" என்போர்க்கும், "ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் போதுமான சொற்கள் தமிழிலில்லை. ஆரிய சொற்கள் அவசியம் வேண்டும்" என்போர்க்கும், அவரவர்கள் கூறும் கூற்றின் சிறுமையையும், தமிழின் பெருமையையும் எடுத்துக் காட்டுவதற்கே அக்கட்டுரை எழுதியிருக்கிறார்களேயன்றி வேறு எவ்வித காரணத்தினாலுமில்லை என்பதையும், அம்மையார் எழுதிய கட்டுரையில் அத்தகைய புத்தி புகட்ட சந்தர்ப்பமில்லை என்பதையும் ஐயரவர்கள் உணரவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகின்றனம். தமிழரையும், தமிழையும் எவரும் யிகழ்ந்து பேசாதிருக்க எல்லாம்வல்ல இறைவனின் திருத்தாமரைகளை இறைஞ்சுகின்றாம்.

ஓர் தமிழன்.

---

## சுபோதத் துணுக்கைகள்.

### பட்டினத்தடிகள் விக்கிரக வணக்கத்தைக் கண்டித்திருக்கிறாரா ?

நமது சைவசமய ஞானியர் வாக்குகளின் உண்மைப் பொருட்களை யுணராது சில புறச்சமய அஞ்ஞானிகள் "நரிவால்கொண்டு கடலாழம் பார்ப்பதுபோல்" தங்கள் கூழை மதிக்கெட்டியவாறு விபரீதார்த்தம் படைத்து, "உங்கள் சமயத்திலுள்ள ஞானவானாகிய பட்டினத்துப் பிள்ளையார் விக்கிரக வணக்கஞ் செய்யக்கூடாதென்று கண்டித்திருக்க, நீவிர் விக்கிரக வணக்கஞ் செய்வதற்கு நியாயமென்னை" என்று தூராக்ஷேபந் தொடுத்து, அவர் பாடிய செய்யுட்களுட் ஆங்கொன்று ஈங்கொன்று மேற்கோளாக எடுத்துக் காட்டுகின்றார்கள்.

முதலாவது செய்யுள் :—

"சொல்லினுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலு
மல்லிலு மாசற்ற வாகாயந் தன்னிலு மாய்ந்துவிட்டோ
ரில்லிலு மன்ப ரிடத்திலு மீசனி ருக்குமிடங்
கல்லிலுஞ் செம்பிலுமோ விருப்பா னெங்கள் கண்ணுதலே."

இதன் பொழிப்புரை :—நெற்றிநாட்டத்தை யுடையவராகிய எமது சிவபெருமான், சிலையிலும், செம்பினாலியற்றிய விக்கிரகத்திலுமட்டுந்தானா எழுந்தருளியிருப்பார்;(அங்ஙனமன்று அவற்றின்மாத்திரமேயல்லாமல்)மந்திரமொழியிலும், அம் மந்திரமொழியின் சித்தியிலும், வேதங்களிலும், (ஆணவ மலத்தினைக் காரியப்படுத்துதலின்) அவ்வாணவமாகிய இருளிலேயும், சுத்த மாயயினைக் காரியப்படுத்துதலின் மாயா காரியமாகிய ஆகாயவெளியிலும், (சாத்திரங்களை) ஆராய்ந்து (பிரபஞ்சப் பற்றினை) நீக்கினோர் வீட்டிலும், அடியாரிருதயத்திலும் இருப்பன்.

ஓகாரம் வினைப்பொருளைத் தந்தது. "இச்செய்யுள் இறைவன் உருவமே" எனச் சாதிப்பாரையும், "அருவமே எனச் சாதிப்பாரையும்" நிராகரித்து, அருவமாயும், உருவமாயும், இருப்பான் என்னும் உண்மையினை விளக்கிக் காட்டுகின்றது. இத்தகைய உண்மைப்பொருளை யறியாது பட்டினத்தடிகள் விக்கிரக நிக்கிரகஞ் செய்தாரென'உளறி வழியும் அஞ்ஞானிகளின் அறியாமையைக் குறித்து மிகவும் வருந்துகின்றேம். அவர்கள் நெற்றிக்கண்ணுடைய திருவுருவத்தினைத் தெரிவிக்கும், "கண்ணுதல்" என்னும் அரிய பிரயோகத்தினை உணர்வாராயின், அந்தோ இத்தகைய துராக்ஷேபந்தொடுத்து இடர்ப்படுவார்களா? இத் துராத்துமாக்களின் வாயை அடைப்பதற்காகவன்றோ, சிவஞானச் செல்வராகிய பட்டினத்தடிகள் "கண்ணுதல்" என்ற பிரயோகஞ் செய்து வைத்தார். இப்பிரயோகத்தினல் கடவுள் அருவமாயும், உருவமாயுமிருந்து ஆன்மாக்களுக்கு அருள் செய்கிறார் என்னும் நெறியையே அவர் கடைப்பிடித்தொழுகினர் என்பது தேற்றம். அருவமாகிய கடவுளுக்கு நெற்றி நாட்டம் வந்தது யாங்ஙனம்? என்றும், சர்வ வியாபகராகிய கடவுள் விக்கிரகங்களின் மாத்திரம் இல்லையென்று விதண்டாவாதஞ் செய்வது என்னமதி எனவுங் கடாவி மறுக்க.

இரண்டாவது செய்யுள் :—

" உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகிலே னுயர்பொன் னெனவே
யொளியிட்ட தாளிரண் டுள்ளேயிருத்துவ துண்மை யென்று
வெளியிட் டடைத்துவைத்தே னினிமே லொன்றும் வேண்டிலனே."

இதன் பொழிப்புரை :—இரும்பு உளியினற் செதுக்கப்பட்ட கற்சிலையினையும், ஒழுங்குறவமைத்த சுண்ணச்சாந்தினு லியற்றப்பட்ட உருவத்தையும், புளியிட்டுத் துலக்கிய செம்பு விக்கிரகத்தையும், துதித்து வணங்கேன், உயர்ந்த பொன்னுக்குச் சமானமெனவே பிரகாசியாநின்ற (சிவபெருமானுடைய) இரண்டு திருவடிகளை மனத்தினுள்ளே வைப்பது (கூடுமான) நன்னிலையென்று சொல்லித் தியானத்தில் வைத்துக்கொண்டேன்; இனிமேல் என்றைக்கும் ஒரு பொருளும் வேண்டியதில்லை.

பகிர் முகத்தில் கற்சிலையினையும், சாந்துருவத்தினையும், பொற்சிலையினையும் தரிசிக்குங் காலத்தில் அவ்வவ்வுருவங்களாகத் தோன்றுவதேயன்றித் தெய்வ வடிவாகக் கிரகிப்பதற்குப் பக்குவமில்லேனுதலின், அப்பாவனையால் அபசாரப்படாது, அந்தர் முகத்தில் சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித் துய்வேனென்றனர். விக்கிரகங்களைத் தெய்வமாகப் பாவியாது, தெய்வத்தை விக்கிரகமாகப் பாவிக்க வேண்டுமாதலினும், அது அதிதீவிரபக்குவமுடையார்க்கே விளங்குமாதலினும், அங்ஙனம் அத்தகைய பக்குவம் அடையாதவழி மனத்தியானத்திலேயே திருப்தியடைய வேண்டியதாதலினும் "இனிமேலொன்றும் வேண்டிலனே" என்றனர்.

இங்ஙனம் பொருளறியாத அஞ்ஞானிகள் இந்தச் செய்யுளாலும் பட்டினத்தடிகள் விக்கிரகாராதனையை நிராகரித்துக் கூறினர் எனவாதிப்பர். "தாளிரண்டு" எனத் திருவடிகளைக் குறித்த உண்மை இவர்கள் விளங்கப் பெறாதவராவர். தாள் உருவத்திற்கன்றி அருவத்திற்கின்றென்பது அரிவையரு மறிந்தவிஷயம். இந்தப் பிரயோகத்தாலும், அடிகளுக்கு விக்கிரகாராதனையும் உடன்பாடென்பது ஒருதலை.

மூன்றாவது செய்யுள் :—

" நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந்தா யில்லை மாமறைநூ
லேற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திர மென்னகண்டா
யாற்றிற் கிடந்து துறைதெரியாம லலைகின் றையே."

இதன் பொழிப்புரை :—மனமே! விபூதியைத் தரித்தாலென்ன, கங்கை முதலிய புண்ணிய நதிகளில் தீர்த்தமாடுகிறதற்குப் போயென்ன, (எடுத்த உடலை) மாற்றி ஞானவானாகப் பிறக்க நல்லவகை தெரிந்து கொண்டாயில்லை. பெரிய வேதங்களில் எழுதிக்கிடக்கும் அநேக கோடானுகோடி மந்திரங்களின் (உண்மையினை) என்னென்று தெரிந்தாய்? (பிரபஞ்ச) நதியிலே விழுந்து திருவருளின் துறை தெரிந்து கொள்ளாமல் அலைகின்றனை!

பிரபஞ்சத்தின் கண்ணே மண் பெண் பொன் முதலிய மாயாபோக விஷயங்களிற் கட்டுண்டு, அதிலேயே அழுந்திக்கிடப்பவர்கட்கு, விபூதியினாலும், புண்ணிய தீர்த்தங்களினாலும் பிரயோசன மென்னென்றனர். ஆகவே எச்சிவ கைங்கர்யங்களையும், எச்சாதனங்களையும் அன்புடனே செய்யவேண்டும் என்று வற்புறுத்தினர்.

இத்திருவாக்குகளை அன்போடு நுணுகி ஆராய்பவர்க்கே உண்மை புலப்படும்; அங்ஙனமின்றி அகக்கண் மறையப்பெற்றுச் சமயதூஷணஞ் செய்யவேண்டும் என்னுந் துர்ச்சிந்தையோடு புறப்பட்ட அஞ்ஞானிகளுக்கு, "உலக மனைத்திற்கும் ஒளியைக் காணுகின்ற தினகரன் கூகையினுடைய கண்ணுக்கு இருளாமாறுபோல" ஆக்ஷேபத்திற்கு இடமாகவே யிருக்குமன்றி உண்மைகள் ஒருபோதும் புலப்படமாட்டா. காமாலை ரோகிக்குக் கதிரவன் மஞ்சள் வர்ணமாய்த் தோன்றுவது சகசந்தான்! "கூலிக்கு மாரடிப்பார்க்கு விடையிறுக்கக் குருவாலுமாகாது" என்னும் முதுமொழி பொய்யாகுமா? எமது பட்டினத்தடிகளுக்கு விக்கிரக ஆராதனை உடன்பாடென்பதற்கு அவரியற்றிய பிரபந்தங்களில் அநேக திருஷ்டாந்தங்களிருக்கின்றன; அவைகளனைத்தையுமெடுத்துக் காட்டப் பத்திரிகை இடம் பெறாதென அஞ்சி அதில் சிலவற்றைக் காட்டி உபரதி அடைகின்றேன்.

" நல்லாயெனக்கு மனுவொன்று தந்தருண் ஞானமிலாப், பொல்லா வெனைக்கொன்று போடும் பொழுதியல் பூசைசெபஞ், சொல்லார்நற்

கோயில் நியமம் பலவகைத் தோத்திரமு, மெல்லா முடிந்தபின் கொல்லு கண்டாய் கச்சியேகம்பனே" என்றும், "உமைபங்கன்" என்றும், "விடையேறு மீசன்" என்றும், "ஏற்றுக்கொடியுடையாய்" என்றும், "ஊரீருமக் கோருபதேசங் கேண்மி னுடம்படங்கப் போரீர் சமணைக் கழுவேற்று நீற்றை" என்றும் கூறியிருப்பதை நோக்குக. அன்பார்ந்த சகோதர சகோதரிகளே! அஞ்ஞானிகள் பிதற்றும் அசட்டுரைகட்குச் செவி சாயாது மலரகிதராகிய சிவபெருமானைக் குருலிங்க சங்கமங்களில் எந்நாளும் வழிபட்டுப் பிறவாமுத்தியெய்தக் கடவீர்கள்.

ஸ்ரீ க. வைத்தியலிங்கப்பிள்ளை,
வண்ணை நகர். (இந்துசாதனம்)

குறிப்பு :—இத்தகைய குதர்க்க வாதம் புரியும் புறச்சமயிகள், பட்டினத்தடிகள் மற்றபாக்களில் கூறியிருப்பதையும், இப்பாசுரங்களைக் கூறும் போதும் அவர் ஸ்தலயாத்திரை செய்துகொண்டும் சொரூப வணக்கம் செய்துகொண்டுமே கூறினர் என்பதையும் உணர்வார்களாயின் அவ்வாறு தப்புரை கூறார்கள். ஆனால் பாமரரிடம், "உங்கள் சுவாமிகளே இப்படி கூறினர்" என்று சொல்லி அவர்களை யேமாற்றுவதே அன்னார் கருத்தாகும். கல்வியறிவில்லாப் பாமரர் அதைக் கேட்டு மயங்குவது இயல்பே.

பத்திரிகாசிரியர்.

---

## மாதர் நீதிமஞ்சரி.

(338-ம் பக்கத் தொடர்ச்சி.)

### பெண் கல்வி.

(அருமைத்தாயும் அன்புடைப் புத்திரிகளும்.)

செங்கற்பட்டிற்கடுத்த ஓர் கிராமத்தில், மிக்க செல்வந்தரும் கிராமாதிகாரியுமாகிய ஒருவருடைய மனைவியான மனோன்மணியம்மாள், ஓர் நாள் மாலைப்பொழுதில் தன் வீட்டின் பின்புறத்திலிருந்த சோலையில் உல்லாசமாக உலாவிக்கொண்டிருந்தாள். அப்பொழுது வீட்டிற்குள்ளிருந்து இரண்டு பெண்கள் 'அம்மா! அம்மா!!' என்றழைத்த வண்ணமாய் அங்கு வந்தனர். அவ்விருவரும் அவ்வம்மையாருடைய புத்திரிகள். மூத்தவள் பெயர் மரகதம். அவளுக்குச் சுமார் பதினெட்டுப் பிராயமிருக்கும். இளையவள் 15 வயதுடைய மங்களம் என்பவள்.

தன் புத்திரிகளைக் கண்டதும் மனோன்மணியம்மாள் சந்தோஷத்துடன் அவர்களைத் தழுவி முத்தமிட்டு, 'என் கண்மணிகளே! நீங்கள் என்னைத் தேடிவந்தது ஏதாவது விசேஷத்தை முன்னிட்டோ?' என வினவினள்.

மரகதம்.—இல்லையம்மா. ஒன்றும் விசேஷமில்லை. நீங்கள் கொடுத்த புஸ்தகங்களைப் படித்து முடித்துவிட்டோம். முடிந்ததும் வேறு புஸ்த

கம் கேட்கலாமென்று உங்களைப் பார்த்தோம். அங்கே இல்லாமையால் இங்குத்தான் இருப்பீர்களென் றெண்ணிவந்தோம்.

மனோன்மணி.—என் அருமைக் குழந்தைகளே! உங்களைப் புத்திரிகளாக அடைந்ததற்காக நான் மிக்க பெருமை யடைகிறேன். நீங்கள் கல்வி விஷயத்தில் விசேஷ சிரத்தையுடையவர்களா யிருக்கிறீர்கள். அது தான் மக்களாய்ப் பிறந்தோர்க்கு அழகாகும். ஏனைய அழகுகள் அழகல்ல.

"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே அழகு."

என்று கூறியிருக்கின்றனர் பெரியோர்!

மங்களம்.—என்னருமைத்தாயே! எனக்கொரு சந்தேகம் தோன்றுகின்றது. தங்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளாமல் வேறு யாரிடம் கூறுவேன்? குற்றமாயிருந்தால் மன்னிக்கவேண்டும். அதாவது, பெண்கள் என் படிக்கவேண்டும். அதனால் அவர்கள் அடையும் பயனென்ன?

மனோன்மணி.—கண்ணே! நீ அப்படியா கருதுகின்றனை? இதே கருத்துடையவர்கள் நம் நாட்டில் அநேகர் உளர். அவர்கள் அறியாதவர்களென்றே கூறுவேன். எனினும், உன் ஐயத்தை யகற்றுதல் எனது கடமையாகலின், 'பெண்களுக்குக் கல்வி அத்தியாவசியமே' என்பதைச் சுருக்கமாய்ச் சில நியாயங்களைக் காட்டி விளக்குகின்றேன்; கவனமாய்க் கேள். மரகதம்! நீயும் கவனி.

குழந்தைகாள்!

பெண்களுக்குக் கல்வி என் என்று கேட்கும்படியான நிலைமை நேர்ந்ததற்காக, தேசாபிவிருத்தியை விரும்பும் ஒவ்வொருவரும் வருந்தாமலிருக்க முடியாது. இக்கேள்வி எக்காலத்தது? பூர்வகாலத்தது என்போமாயின், இதுவரை ஏன் முடிவு பெறாதிருக்கின்றது? என்னும் ஆசங்கை யுண்டாகும். கால சக்கரம் சுழன்றுவரும் வேகத்தில் பிற்காலத்துண்டான மாறுதல் என்பதே சரியான விடையாகும். பூர்வகாலத்து இவ்வினவிற்கு இடமில்லாமல் ஆண்களும் பெண்களும் கல்வி கற்றனரென்பது சரித்திரங்களால் விளங்குகின்றது.

காலபேதத்தாலுண்டான, 'பெண்களுக்குக் கல்வி ஏன்?' என்னும கேள்வியானது, பெண்களுக்குக் கண்களேன்? என்பதையே ஒத்திருக்கின்றது.

"எண்ணுமெழுத்துங் கண்ணெனத் தகும்."

"கண்ணுடைய ரென்போர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

"கல்வியில்லாதவர் மூடர்."

என்னுமிவைபோன்ற ஆன்ஹோர் வாக்கியங்களால், கல்வியுடையோரே கண்ணும் அறிவும் உடையோராவரென்பது விளங்குகின்றது. கல்வியா லுண்டாம் பயனை நோக்குமிடத்தும், 'அது ஒரு பாலார்க்கு மாத்திரம் உரியதாம்,' எனக் கூறுதற் கிடமின்றி, ஆண் பெண் என்னும் இருபாலார்க் கும் உரியதே என்பது வெளியாகும். திருஷ்டாந்தமாக,

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியி னூஉங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை."

"இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்ம ரறுக்கும் மருந்து."

இப்பாடல்களின் பொருளாவது "(கல்வியானது) தருமத்தையும், செல்வத்தையும், இன்பத்தையும், மோக்ஷத்தையும் தரும்; தலைவாயிலில் நல்ல கீர்த்தியையும் நிலைநிறுத்தும்; வரத் தகுவதாகிய ஒரு கவலை நேரிட்ட காலத்தும் உதவிசெய்யும்; (ஆதலால்) அற்ப வாழ்நாளையுடைய உயிர் களுக்கு நீங்காத துணை, கல்வியினும் மேம்பட்டது வேறொன்றுமில்லை." "(கல்வியானது) இப்பிறப்பில் பயன்கொடுக்கும்; பிறர்க்குக் கொடுத்தா லும் குறைவுபடாது; கற்றவர்களைப் பிரகாசிக்கச் செய்யும். தாமுள்ளவ ராயிருக்கும்போது கெடுவதில்லை; ஆகையால் எவ்வுலகத்திலும் கல்வியைப் போல அஞ்ஞானத்தை நீக்கும் மருந்தை நாம் கண்டறியோம்," என்ப தாம்.

இச்செய்யுள்களின் பொருளை ஆராயுமிடத்து கல்வி புருஷர்களுக்கே யுரியதன்று; பெண்களுக்கு முரியதேயென்று அறியலாகும்.

தவிர, இல்லறம் பெண்களாலேயே நடைபெறுவது. "இல்லாளகத் திருக்க இல்லாததொன்றில்லை," "இல்லாள் இல்லாதவீடு இடுகாடு," வீடு வாசல்களைச் சுத்தமாக வைத்திருத்தலும், வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்துகணக்குகளைச் சரியாக வைத்தலும், கணவன், மாமன், மாமி, உற் றார், அன்னியர் முதலாயினோரிடத்து அவரவர்களுக்கேற்றவாறு நடந்து கொள்ளுதலும், பிள்ளைகளை நல்லவிதமாக வளர்த்தலுமாகிய பலவகைப் பட்ட வீட்டுக்காரியங்களை விமரிசையாக நடத்துவதில் புருடரைவிடப் பெரும்பொறுப்புவாய்ந்த பெண்கள் கல்வியில்லாதவர்களாயின், தங்கள் கடமையை உணர்ந்து சீராகக் குடித்தனம் செய்ய எவ்வாறு முடியும்?

ஒரு வகுப்பார், 'பெண்கள் கல்விகற்றால் புருஷர்களை மதிக்கமாட் டார்கள். கற்புக்கழிவு உண்டாக்கும் தீத்தொழில்களில் பிரவேசிப்பார் கள்' எனக் கூறுவர். 'மணற்கேணியைத் தோண்டுந்தோறும், தோண்டுந்

தோறும் நீர் அதிகமாகச் சுரப்பதுபோல, கல்வியைக் கற்குந்தோறும் கற்குந்தோறும் அறிவு வளரும்' என்று பெரியோர்கள் பேசியிருக்க, கல்வி அகங்காரம் முதலிய தீக்குணங்களை உண்டாக்குமென்பது, அமுதம் மரணத்தை யுண்டாக்கும் என்னும் அபிப்பிராயத்தை யொத்திருக்கின்றது. அப்படியானால், புருஷர்களுக்குமாத்திரம் அக்குணங்கள் தோன்றாவோ? கல்வியானது அகங்காரத்தைக் கொடுத்துக் கற்பைக் கெடுக்குமென்றால், கல்லாதவர்கள் கர்வ மடைவதில்லையா? கற்பிழப்பதில்லையா? அது கல்வியின் குற்றமன்று. அதைக்கையாள்பவரின் குற்றம். தவறுதலாகச் சிலர் அவ்வாறு நடந்துகொள்ளுவதினாலேயே கல்வியை நிராகரித்து விடுதலாகாது. சோறு உண்பதால் சிலர் இறந்துவிடக் காண்கின்றோம். அதனால் சாதத்தை நிராகரித்துவிடுவோமா? இவ்வளவேன்? முற்காலத்திலிருந்த சீதை, தமயந்தி, சாவித்ரி, சந்திரமதி முதலிய கற்பரசிகளுடைய சரித்திரங்களைக் கவனித்துப் பார்ப்போமானால், அவர்கள் நன்றாகக் கற்றுணர்ந்தவர்களே யென அறியலாகும். அவர்கள் தீக்குணமுடையவர்களா யிருந்தாரில்லையே. அவர்களும் கல்லாதவர்களே யென்று வைத்துக்கொண்டாலும், கல்விக்கு அதிதேவதையாகிய கலைமகளும் அப்படித்தானா? இல்லை யில்லை.

கல்வியா லடையவேண்டிய பயன் இன்னதென்று அறியாது கற்போரே முன் கூறியபடி துர்க்குணமுடையாராவர். நாம் எவ்வாறு ஒழுகவேண்டுமென்பதைப் பெரியோர் நூல்களில் எழுதிவைக்கின்றனராகையால், அவற்றைப் படித்து அவ்வாறு நடந்துகொள்ளவேண்டியதே கல்விப்பயன். ''அறிவோர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல்'' இத்தகை அறிவை விருத்திசெய்யும் கல்வியே ஆண்பெண் இருபாலார்க்கும் தேவை. உலக சரித்திரத்தில் பெரும் புகழ்பெற்று விளங்கும் ஸ்திரீபுமான்களிற் பெரும்பாலோர் சிறந்த கல்வியாளரே யென்பது ஒருவராலும் மறுக்கமுடியாத உண்மை. என்னருமை மக்களே! நான் மிகவும் சுருக்கமாகக் கூறிய விஷயங்கள் உங்கள் சந்தேகத்தைப் போக்கப் போதுமானவை யென்றெண்ணுகின்றேன். ஆகையால் இதுகாறும் நான் சொன்ன விஷயங்களால் ஆண்களைப்போலவே பெண்களும் கல்விகற்றே தீரவேண்டு மென்பது வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றதல்லவா? (தொடரும்.)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

## ஆரிய சித்தாந்தம்.

### (தெய்வம்.)

(332-ம் பக்கத் தொடர்ச்சி.)

முன்கூறியவாறு மானபிமானங் கருதாமல் குருவுக்குப் பணிவிடை செய்வதால் பெறும் பேறு யாதெனின், ஜீவான்மாக்கள் மெய்யறிவின்மையினால் பிரபஞ்ச பாசத்திற் கட்டுண்டு, கன்மங்களைச் செய்து,

அதனால் இறந்தும் பிறந்தும் பற்பல வண்டங்கடோறும் பற்பல வுருவங்கொண்டுழன்று களைத்த களைதீரப் பரமபதியின் திருவடி நிழலையடைந்து என்று மழிவில்லாத பேரின்பந் துய்த்திருப்பதுவேயாம். அன்றியும் இம்மையிற் புகழும் சுகமும் மகிமையுமுண்டாம். அதனாற் குரு பணிவிடைசெய்து அவருக்கு மகிழ்ச்சியுண்டாக நடந்து, அவர் அருமையாய்ச் சம்பாதித்து வைத்திருக்கும் பொருளில் ஏதாவது ஒன்றைப் பெறுவது குரு பணிவிடைக்குப் பிரயோசனமாம். அப்பொருள்களாவன:—ஞானயோகம், மந்திரயோகம், பக்தியோகம், மானசயோகம் முதலியவையாம். இவையெல்லாம் மனதை யொரு நிலையில் நிறுத்தும் சக்தியுடையனவாம். மனம் ஒரே நிலையில் நிலைத்து நில்லாவிடில் அதிக சூட்சுமமாய் மனவாசகங்கடந்து நிற்கும் பரம்பொருளை யறிவது கூடாதாம்.

இனித் தெய்வமென்பது யாது? பதார்த்தமா? குணமா? பதார்த்தமெனின் எவ்வித ஆராய்ச்சிக்கும் புலப்படாமையேன்? குணமெனின் ஒரு பொருளைப்பற்றி நிற்கும் தன்மையுடையதேயன்றித் தனித்த ஒருபொருளாகாது. பொருளாகாதது எல்லாம் இன்மையிற் கொள்ளப்படுமாதலால் தெய்வமுண்டென்று நம்புவதெப்படி? எவ்வகையாலுங் காணப்படாததோர் பொருளை யுண்டென்று நம்புவதினாற் பயன் யாது? அது காரணமாகத் தவமுதலிய செய்து கஷ்ட நஷ்டங்களை யடைவது வியர்த்தமல்லவோ? பதார்த்த சோதகர்கள் சோதனை செய்து பார்த்ததில் அவ்விதமான பொருள் ஒன்றுண்டென்று ஒப்பவில்லையெனின், பரிசோதகர்கள் எல்லாரும் ஜடப்பொருள்களையே பரிட்சித்தறிகின்றார்கள். இது ஜடப்பொருளன்று ஆதலால் அவர்களது சோதனைக்ககப்படவில்லை. பொருள்கள் மூவகையென்று நமது வேதாதி நூல்கள் கூறுகின்றன. இதனைப் பதிபசு பாசமென்று சைவாகமங்கள் கூறும். ஜகஜீவபரம் என்பர் அத்வைதிகள். சித் அசித் ஈசுவரனென்பது வைணவாகமம். இவற்றுள் பதியென்பதே பரம், ஈசுவரன் என்பனவற்றால் ஓதப்படும். சித்து ஜீவன் என்பன பசுவையுணர்த்தும். பாசம், ஜகம், அசித் மூன்றும் ஒரு பொருளனவாம். இவற்றுள் பாசம், ஜகம், அசித் என்பன ஜடப்பொருளைக் குறிக்கும். ஆன்மாவே சித்து, பசு, ஜீவனென்பனவற்றால் விளக்கப்படும். ஜடப்பொருள்களை இந்திரியங்களாலறியலாம். கண்ணாற் காணப்படுவது உருவப்பொருளாம். இந்தப் பொருளே கண்களாலும் அவற்றுக்கு உதவியாயிருந்து நுண்ணிய பொருளைத் தெரிவிக்கும் கருவிகளாலும் காணப்படுவனவாம். ஏனைய சித்துப் பொருள் எவ்விதமான கருவிகளாலும் இந்திரியங்களாலுங் காணப்படுவதல்லவாம்.

இப்பொருளைக் காண்பதற்கு நூல்களும், மனசும், யோகமுமே கருவிகளாம். மனம் இந்திரிய ராஜனென்று வியந்து கூறப்படுகின்றது. ஐம்புலன்களாலு மறிவிக்கப்படும் விஷயவறிவை மனமே யறிந்து ஜீவனுக்குத் தெரிவிக்கின்றது. இந்திரியங்களாலும் கருவிகளாலு . மறியப்

படாத சில லௌகிக விஷயங்கள் கலக்கமற்று நிர்மலமாயிருக்கும் மனதினுற் கண்டுகொள்ளப்படுவது பிரத்தியட்சம். நூல்களாற் கூறப்படும் அரிய விஷயங்களையும் மனமாராய்ந்து அறியுமியல்புள்ளது. விஷயவாசையால் அழுக்கடைந்து மலினமான மனதினுற் காண்பதரிது. சுத்தமாயுள்ள மனங் காணவல்லது.

இனிப் பரம்பொருள் என்பது யாதெனின், ஒரு பொருளில் ஒருவித சக்தியையும், சில பொருள்களில் பல சக்திகளையும் காண்கின்றோம். எல்லாச் சக்திகளுக்கும் இருப்பிடமான ஒரு பொருளுமுண்டென்பது நூல்களின் கருத்து. அந்நூல் கூறியவழி யொழுகி அப்பொருளை யுணர்ந்து களித்து இறுமாந்திருக்கும் மஹாத்மாக்களுக்கு மிதுவே யபிப்பிராயம். அது அளவிறந்த சக்திகளையுடையதாதலால் எல்லாப் பொருள்களிலும் அடங்கி நிற்கும். அவற்றுக்கு மேலும் வியாபகமாயிருக்கும். சர்வ சக்தியுடையதாதலால் சர்வ ஞானமுள்ளதுமாம். எக்காலத்தும் எவ்விடத்தும் ஏற்றக்குறைச்சலின்றி ஒரே தன்மையதாய் நிறைந்து நிற்றலால் அதைச் சத்து என்று நூல்கள் கூறும். சத்தும் சித்தும் ஒன்றுபட்டது ஆனந்த மயமாம். ஆதலால் நாம் கூறும் பிரமம் சத்து சித்து ஆனந்த (சச்சிதானந்த) சொரூபமுடையது என்பது நூல்களின் கருத்து. சத்து என்பது என்று மழியாது முக்காலத்துமுள்ள உண்மை; சித்து என்பது ஞானம்; அதாவது அன்னிய பிரகாசத்தை விரும்பாமல் சுயப்பிரகாசத்தால் யாவற்றையும் பிரகாசிப்பிப்பது; ஆனந்தம் என்பது துக்கமற்றது; இன்பம். இம்மூன்றும் ஒன்றுபட்டதாலுல் லௌகிக சோதனையாற் காண்பதெங்ஙனம்! ஆயின் இதனைக் காண வியலாதாயின் முயற்சியாற் பயன் யாதெனின், இந்திரியங்களுக்கு எட்டாமையினுலேயே உள்ள ஒரு பொருள் இல்லாமற் போய் விடாது. உள்ளபொருள் உள்ளபொருளேயாம். எதெதற்கு எந்தெந்த வகையான பிரயத்தனம் செய்யவேண்டுமோ அததனை யுணர்ந்து முயற்சிப்பதே முயற்சியாம். இந்திரியங்களாற் காண வியலாத வுலகப் பொருள்களைப் பற்பல கருவிகளைக்கொண்டு பரிசோதிப்பதுபோல, உலகங்கடந்த பொருளை உலகங்கடந்த ஞானமாகிய கருவியைக்கொண்டே யறியவேண்டும். ஞானத்தின் முன் ஜடம் நில்லாது. ஜடத்தின் முன் ஞானம் நில்லாது. ஆகையால் யோகக்காட்சி யென்னுங் கருவியினுலே ஜடசித்துக்களைப் பிரித்தெடுத்து ஞானமாகிய கருவியினுலே ஞான சொரூபியான பரம்பொருளை யறியவேண்டும்.

யோகமென்பது மனம் ஞானத்தோடு கலப்பதேயாம். ஞானமென்பது பிரமசொரூபமென்பது நிச்சயம். அது அசைவற்ற பொருளாம். மனமென்பது சதா புலன்வழியே சென்று அலைந்து திரியு மியல்புள்ளது. அதனுல் அது அசைவற்ற ஞான சொரூபத்தைக் காணுது. ஆயினும் அதை யுதவியாகக்கொண்டே யறியவேண்டும். அதற்காகவே மந்திராதி யோகங்கள் நூல்களாற் கூறப்பட்டுள்ளன. அவற்றைத் துணையாகக்

கொண்டே நமது முன்னோர் பிரமப்பொருளைக் கண்டு தரிசித்தார்கள். ஞானமென்பது யாதெனின், பாச சம்பந்தமில்லாததே மெய்யறிவாகிய ஞானமாம். நாத சொரூபமாகிய வர்ணங்களும் ஞானமயமாம். நாத மென்பது பாசமற்ற சுத்த மாயா சொரூபமாம். அது சத்தமாகக் காணப் படுதலால் அதனை சத்தப் பிரமம், நாதப் பிரமமென்று நூல்கள் கூறும். ஞானமயமான இந்த நாதம் பிரமத்துக்கு ஒரு சொரூபமாதலால் இதனை யுபாசித்தால் அது பிரமோபாசனையாம். பல வர்ணங்கள் கூடியது ஒரு மந்திரம் என்னப்படும். வர்ணங்கள் என்பது எழுத்து. எழுத்துக்கள் ஒலி வடிவமென்றும், வரி வடிவமென்றும் இருவகைப்படும். இவ்விரு வகை சொரூபங்களையும் உபாசிப்பதே மந்திரயோகமாம். ஒலிவடிவம் தியானத்துக்கும் வரிவடிவம் பகிர்பூஜைக்குமாம். தியானிக்கும்பொழுது வேதங்களாற் கூறப்பட்ட உபாசனாமூர்த்தியையும், தனக்குபதேசித்த குருவையும் மறவாமல் தியானிக்க நாவசையாமல் மந்திரத்தையு முச்சரிக்க வேண்டும். இதனால் ஒரே காலத்தில் குருவையும் உபாசனா மூர்த்தியை யுந் தியானிப்பதிலும், மந்திரத்தையுச்சரிப்பதிலும், மனங் கட்டுப்பட்டு நிற்கும். ஏககாலத்தில் மூன்றிலும் மனதைச் செலுத்த முடியாவிட்டால் ஒன்றிற் செலுத்தவேண்டும்.

குரு சொரூபம், உபாசனாமூர்த்தி சொரூபம், வர்ண சொரூபம் இம் மூன்றிலும் சிந்தை செல்லும்படி பழகவேண்டும். விஷயப் பொருள்களில் மனதைச் செலுத்தக்கூடாது. வர்ண சொரூபம் உபாசனாமூர்த்தியினிடத்தில் மனதைச் செலுத்தும். குரு சொரூபம் அதற்குண்டாகும் இடையூறுகளைக் களையும் உபாயங்களைப் புலப்படுத்தும். பொருள் சொரூபம் மனதைத் தன்னிடத்தில் ஆகர்ஷிக்கும். இதனால் மனதின் அஞ்ஞான விருள் ஒழியும். அஞ்ஞானத்தை ஒழிப்பதே மந்திரமாமென்க. (மா்) மந்த அறிவாகிய அஞ்ஞானத்தைக் குறிக்கும். (திரஃ) என்பது அவ் விருளைத் திரஸ்கரித்தல் (நீக்குதல்) என்று பொருள்படும். இரண்டையுங் கூட்ட அஞ்ஞானத்தை யொழித்தல் என்பது போந்த பொருளாம். மந்திரயோகத்தால் மனதிலுள்ள அஞ்ஞான களங்கமொழியவே, அது நிர்மலமாய் உபாசனாமூர்த்தி சொரூபத்தை யுணரச் சக்திபுடையதாம். அந்த மனமே மனோ வாக்காதிகளாற் காணப்படாதென்ற பொருளைக் காணக் கூடிய சிறந்த கருவியாம். மந்திரயோகம் சித்தியானபின் அவனால் அடையப்படாத தொன்றுமில்லை. இம்மந்திரயோகத்தில் வழுவாமல் ஒழுகத் தானே ஞானயோகம் கைவரும். இந்த மந்திரயோகமாகிய கருவி குரு பணிவிடையா லடையப்படுவதேயன்றி வேறெவ்வகையாலும் சித்திப்ப தரிது. (தொடரும்.)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.



## உபாத்தியாயர்கள் பாடம் கற்பிக்கையில் கவனிக்கவேண்டிய சாமானிய விதிகள்.

"வித்தியாவர்த்தமானி" என்ற மாதாந்தர சஞ்சிகையின் பழைய பிரதிகள் ஒன்றிலிருந்து "ஆனந்தபோதினி"யைப் பார்வையிடும் உபாத்தியாயர்களுக்குப் பயன்படுமாறு எடுத்தெழுதப்பட்டது.

1. நீ நல்லாடை தரித்துக்கொண்டு மிகச் சுத்தியும் சுறுசுறுப்புமுள்ளவனும் உபாத்திமைத் தொழிலுக்கு ஏற்றவனும் விளங்கவேண்டும்.

2. தைரியமுள்ளவனும், பிள்ளைகளிடம் தயையுள்ளவனும் இரு.

3. துரப்பியாசங்களை விலக்கிவிடு.

4. உன்னொழுக்கம் வீண் மேல் பகட்டாகவேனும் கர்வத்திற்கேற்றதாகவேனும் இல்லாமல், பார்ப்போருக்குத் திருப்தியாக இருக்கும்படி உண்மையோடு நடந்துகொள்.

5. நீ முகக் கடுப்போடேனும் கோபமாகவேனு மிராமல் எப்போதும் சாந்த சுபாவ முள்ளவனாக இரு.

6. சதா செய்தொழிலில் சிரத்தையுள்ளவனாக இரு.

7. உன் குரலொலி மிதமாகவும் கேட்பதற்கு இனிமையாகவும் இருக்கத்தக்கதாகப் பேசு.

8. நீ சொல்வது பிள்ளைகள் அனைவர்க்கும் கேட்கத்தக்கதாகச் சொல்வதோடு அவர்களும் தெளிவாய்ப் பேசும்படி செய்.

9. தக்க இடத்தில் வகுப்பை அமைத்துக்கொள்.

10. கருப்புப்பலகை, படம் முதலிய உபகரணங்களைத் தக்க இடத்தில் வைத்துக்கொள்.

11. நீ பிள்ளைகள் அனைவரையும் நன்றாய்ப் பார்க்கக்கூடிய ஸ்தானத்தில் அமர்ந்திரு.

12. உன் வகுப்புப் பிள்ளைகளை இங்கொருவரும் அங்கொருவருமாய் உட்கார்ந்திருக்கவிடாமல், அனைவரும் போதுமான இடைவெளியோடு வரிசைக்கிரமமாக உட்காரும்படி செய்.

13. வகுப்பில் ஒவ்வொரு பிள்ளையும் செய்வதைக் கருத்தாய்க்கவனி.

14. பிள்ளைகளை அஜாக்கிரதையாக இருக்கவிடாதே.

15. கிரம சிக்ஷைக்கு விரோதமாக ஏதேனும் காணப்படுமாயின் அதை அந்த நிமிஷத்திலேயே அகற்றுவதற்கு எத்தனப்படு.

16. உன் கட்டளைகளின்படியே சகல பிள்ளைகளும் நடக்கும்படி செய்துகொள்.

17. வகுப்பில் எவ்வளவேனும் சந்தடியுண்டாகும்படி விடாதே.

18. கேள்வி கேட்கையிலும், விடை பெறுகையிலும், எல்லாப் பிள்ளைகளையும் அதிகக் கருத்தாய்க் கவனித்துப்பார்.

19. பாடம் நடக்கையில் உன் குரல் ஒன்றுமட்டுமாவது விடை சொல்லும் பிள்ளையின் குரல் ஒன்றுமட்டுமாவது கேட்குமாறு செய்.

20. நீ எதையாகினும் சொல்லுகையில் பிள்ளைகள் உன்மீது பார்வையைச் செலுத்திக் கவனிக்கச் செய்.

21. நீ கருப்புப் பலகையில் எழுதுகையில்கூட கவனத்தை வகுப்புப் பிள்ளைகள்மீது இருத்தி, நீ எழுதுவதைப் பிள்ளைகள் கவனிக்கும்படி செய்.

22. ஒரு பிள்ளை விடை சொல்லுகையில் அவன்மீது, மற்றப் பிள்ளைகள் அனைவரும் பார்வையைச் செலுத்திக் கவனிக்கும்படி செய்.

23. நீ கற்பிக்கும் ரீதியானது பிள்ளைகளுக்குப் பிரீதியாயிருக்கும்படி செய்.

24. ஓர் கடினமான கேள்வியைக் கேட்கையில் சிறிதுநேரம் அவகாசம் தந்து பின்பு அக்கேள்விக்கு விடை பகரும்படி பிள்ளைகளில் ஒருவனைக் குறிப்பிட்டுக் கேள்.

25. பிள்ளைகள் சிறிதளவாவது சரியாய்ச் சொல்லிய விடைகளையும் அங்கீகரித்து மிகுதியையும் அவர்கள் சரியாய்ச் சொல்லுமாறு தூண்டு.

26. பாடத்தை ஓர் குறிப்பான சிறந்த போதனுமுறையை அனுசரித்துப் போதி.

27. நீ கற்பிக்கும் பிரதி விஷயமும் பிள்ளைகளுக்கு நன்றாய் விளங்கும்படி போதி.

28. கடினமான விஷயங்களைச் செவ்வையாய் விளக்கிக் காட்டுவதில் உன் திறமையை உபயோகி.

29. கற்பிக்கும் விஷயங்கள் யாவும் ஒன்றோடொன்று பொருந்தியிருக்கத்தக்கதாக போதி.

30. நீ கற்பிப்பதால் பிள்ளைகளனைவரும் பெரும்பயனடைந்து களிக்குமாறு செய்.

S. கிருஷ்ணன்,
காரியதரிசி, உபாத்தியாயர் சங்கம், கருங்காலகுடி.

---

## பகவத்கீதை வசனம்.

(353-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஏ பார்த்த! அளவிறந்த எனது விபூதிகளுக்கு ஓர்முடிவில்லை. அவற்றைப் பூரணமாகக் கூறவொண்ணாது. ஓ தருமசிந்தனையுடைய அர்ச்சுன! அத்தகைய விபூதிகளில் சிறந்தனவாகிய சிலவற்றைக் கூறுகிறோம் கேட்பாயாக,

சகலப் பிராணிகட்கும் இருதயத்தின் கண்ணுள்ள பிரத்தியகான்மா (சாட்சியாயுள்ளது) நானே யாகிறேன். நானுபேதங்களாகவிருக்கும் இப் பிராணிகட்கெல்லாம் உற்பத்தியும், ஸ்திதியும், நாசமும் நானேயாகிறேன்.

துவாதசாதித்தருள்ளே விட்டுணு நானுகிறேன். சப்தமருத்துவரில் மரீசி நானுகிறேன். பிரகாசவஸ்துக்களில் எங்கும் பிரகாசிக்கும் ஆதித்தன் நானுகிறேன். வானத்தில் ஒளிரும் நட்சத்திரங்களுள் சந்திரன் நானுகிறேன். வேதங்களில் சாமவேதம் நானுகிறேன். தேவர்களில் இந்திரன் நானுகிறேன். இந்திரியங்களில் மனம் நானுகிறேன். சர்வப்பிராணிகளின் சம்பந்தமுடைய காரணகாரியங்களாகிய பூதங்களுக்குள் சேதனம் நானுகிறேன். ஏகாதச உருத்திரர்களுக்குள்ளே மந்திரரூபனுன சங்கரன் நானுகிறேன். யட்சரருள் குபேரன் நானுகிறேன். மலைகளில் மகம் மேரு நானுகிறேன். அஷ்டவசுக்களில் அக்னி நானுகிறேன். சேனுபதிகளுக்குள் தேவர் சேனுபதியாகிய அறுமுகன் நானுகிறேன். நீர்நிலைகளுக்குள் கடல் நானுகிறேன். புரோகிதர்களுக்குள் பிரகஸ்பதி நானுகிறேன். யாகங்களுக்குள் ஜபயாகம் நானுகிறேன். ஸ்தாபரமான (சலனமற்ற) சகல பொருள்களிலும் இமாசலம் நானுகிறேன். மகரிஷிகளுக்குள் பிருகுரிஷி நானுகிறேன். வாக்குகளில் பிரணவமாகிய ஓங்காரம் நானுகிறேன். மரங்களில் அரசு நான். தேவரிஷிகளில் நாரதர் நான். கந்தருவருள் சித்திரரதன் நான். சித்தர்களில் கபிலமுனி நான். அசுவங்களில் (பாற்கடலிற் பிறந்த) உச்சைச்சிரவம் என்ற அசுவம் நான். யானைகளுக்குள் ஐராவதம் நான். மனிதருள் அரசர் நானுகிறேன். ஆயுதங்களுள் வச்சிராயுதம் நானுகிறேன். சர்ப்பங்களுக்குள் வாசுகி நான். நாகங்களுக்குள் ஆதிசேடன் நான். பசுக்களில் காமதேனு நான். ஜலத்தில் சஞ்சரிப்பவைகளில் வருணன் நான். தண்டிப்பவர்களில் யமன் நான். காமங்களுக்குள் புத்திரோத்பத்திக் கேதுவான காமம் நானுகிறேன். அசுரர்களுக்குள் பிரகலாதன் நானுகிறேன். கணிக்கப்பட்டவைகளுள் காலம் நான். பட்சிகளுக்குள் கருடன் நான். மிருகங்களுக்குள் சிங்கம் நான். வேகமாய்ச்செல்லும் வஸ்துக்களுள் வாயு நான். யுத்தவீரர்களுக்குள் இராமன் நான். மச்சங்களுக்குள் மகரம் நான். நதிகளில் கங்காநதி நான். வித்தைகளுள் பிரம்மவித்தை நானுகிறேன். அட்சரங்களுக்குள் 'அ' காரம் நானுகிறேன். அழிவற்றகாலம் நானுகிறேன். இருவினைப்பயன்களைக் தொடுப்பவனும் நானுகிறேன். சர்வ உயிர்களையும் சங்காரம் செய்யும் மிருத்யு நானுகிறேன். அவ்வுயிர்களை உற்பவம் செய்பவனும் நானே. பெண்களில் * சப்தமாதர் நானுகின்றேன்.

* (1) கீர்த்தி. (2) ஸ்ரீ (தர்மம், அர்த்தம், காமம்). (3) வாக்கு (சரஸ்வதி) (4) மேதை (கிரந்தங்களின் அர்த்தங்களைக் கிரகிக்கும் சக்தி) (5) க்ஷமை (சுகதுக்கங்களைச் சமமாகக் கருதும் சக்தி) (6) திருதி (சகலபீடைகள் வரினும் சரீரேந்திரியங்களை ஸ்திரமாகச் செய்யும் சக்தி) (7) ஸ்மிருதி (பூர்வம் உணர்ந்திருப்பவற்றை வெகுகாலத்திற்குப் பின்னும் நினைவிற்குக் கொண்டுவரும் சக்தி).

ஆறு இருதுக்களில் வசந்த இருது நான். மாதங்களுக்குள் மார்கழிமாதம் நான். சந்தசுக்களுக்குள்ளே காயத்திரி நான். வஞ்சிப்பவைகளுள் சூது நானுகிறேன். முயற்சியுடையாரிடம் முயற்சி நானுயிருக்கிறேன். ஜெயசீலர்களிடம் வெற்றி நானுகிறேன். பலசாலிகளிடம் வல்லமை நானுகிறேன். சாத்வீகபுருடரிடம் (சத்துவகுண காரியமாகிய) தர்மம், சாந்தம், வைராக்கியம் முதலியவை நானுகிறேன். ஞானிகளிடமுள்ள (பிரம்மான்ம ஐக்கியரூப) ஞானம் நானுகிறேன். யாதவரில் கிருஷ்ணன் நான். சாஸ்திரவான்களுள் சுக்கிரன் நான். பாண்டவருள் தனஞ்சயன் நான். முனிவர்களில் வேதவியாஸர் நான். மறைவான பொருள்களுக்குள் (பூரண) மௌனம் நானுகிறேன். இப்பிரபஞ்ச மனைத்திற்கும் சேதனரூபமான காரணம் நானுக விருக்கிறேன். பரமேசுவரனுகிய என்னையன்றி வேறு யாதொரு பதார்த்தமுமில்லை. (எல்லாம் எனது சொரூபமே.)

ஓ அன்பனே! எவ்வளவு வருந்தினும் எனது பெருமையை முடிவுறக் கூறமுடியாது. அத்தகைய விபூதியை நான் ஒருவாறு ஏகதேசமாக உரைத்தேன். எந்தெந்தப் பிராணிகள் இலக்ஷ்மி கடாக்ஷம் பெற்றவைகளும் ஐசுவரியம் பெற்றவைகளுமாக விருக்கின்றனவோ அவை யாவும் எனது சக்தியின் அம்சத்தாலுண்டானவையென் றுணர்வாயாக.

ஏ அர்ச்சுனு! பலவிதமாக இனி நான் உரைத்தென்னபயன்? எல்லாப் பிராணிகளும், சகல அண்டங்களும் என்னில் ஏகதேசமாத்திரத்தில் (எங்கோ ஓரிடத்தில்) ஒடுங்கி நிற்கின்றன. ஆயினும் நான் அவற்ருேடு எள்ளளவும் சம்பந்தியேன். என்றிவ்வாறு ஆயர்பாடியில் அவதரித்த பரந்தாமனுகிய ஸ்ரீ கண்ணபிரான் அருளிச்செய்தார்.

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 11-வது விஸ்வரூப வத்தியாயம்.

[பத்தாமத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் தமது நானுவான விபூதியின் மகிமைகளை யருளியபின் முடிவில் எல்லாப் பிராணிகளும் எல்லா உலகங்களும் என்னில் ஓரிடத்தில் ஒடுங்கிநிற்கும் என்றருளினர். அது பகவானுடைய விசுவரூபத்தன்மையைக் குறிக்கிறபடியால் அச்சொரூபத்தைத் தரிசிக்க ஆவல்கொண்ட அர்ச்சுனன் பகவான் முன்பருளியதைப் புகழ்ந்து துதிக்கின்ருன்.]

அர்ச்சுனன் :—“ மனவாக்குகளுக்கெட்டாத பரம்பொருளே! துளபமணிந்த முடியுடையவரே! சகடாசுரனைவதைத்த பாதமுடையவரே! எல்லா உயிர்கட்கும் உள்ளுயிராயிருப்பவரே! சோக மோகங்களில் முழுகிக்கிடந்த அடியேனிடத்து கருணை கூர்ந்து தாங்கள் அருளிய அமுதம்போன்ற வாக்கியங்களைக் கேட்டு என் மோகமொழிந்தேன். ஒருவராலும் காண்டற்கரிய பரம்பொருளே! ஒருவர்க்கும் தோன்ருதபடி தாங்கள் எவ்விடத்தும் வியாபித்தவராய் நிற்கின்ற அத்திருக்

கோலத்தை அடியேன் தரிசிக்க அத்தியந்தம் ஆவலுடையவனாக விருக்கிறேன்" என்று மொழிந்தான்.

(தமது அன்பனான பார்த்தனது பிரார்த்தனையைச் செவியேற்ற பகவான் தமது விசுவ சொரூபத்தை யவனுக்குத் தரிசிப்பிக்கத் திருவுளங் கொண்டு அச்சொரூபத்தின் தன்மையை யொருவாறு அருளிச்செய்கின்றார்.)

"ஏ அர்ச்சுனா! அந்த எனது சொரூபம் எண்ணுதற்கரிய பலவித சுபாவங்களையுடையது. எண்ணுதற்கரிய நிறங்களையுடையது. கற்பனை செய்து ஒருவராலும் சிருஷ்டித்தறியவொண்ணாதது. ஆகாயத்தினும் விரிந்த சுபாவமுடையது. கண்பார்வையால் அளவிட்டறிய வொண்ணாதது. நாற்பத்தெட்டு மருத்துவரும், பனிரண்டு சூரியர்களும், எட்டு வசுக்களும், பதினொரு உருத்திரரும் என்னிடத்தே யுள்ளார்கள். யாவரும் காணப் பிரியங்கொள்ளும் அனேகம் உருவங்களும் என்னிடத்தே யுள்ளன. கருத்தோடு அவற்றை நீ காண்பாயாக" என்று அருளிச் செய்த பின், பகவான்,

அர்ச்சுனனது சாதாரணமான இரண்டு கண்களும் தமது சொரூபத்தைக் காணமுடியாவென்று கருதி அவனுக்கு ஞானக்கண்ணளித்து, தாம் அருளிபபடியே விசுவ சொரூபம் காட்டி நின்றார்.

(என்றிவ்வாறு திருதராட்டினருக்குக் கூறும் சஞ்சயர், பகவானது விசுவருபத்தின் விசேடணங்களைக் கூறுகிறார்.)

அர்ச்சுனனுக்கு உபதேசித்தருளிய ஸ்ரீ கண்ணபிரான் அக்குருக்ஷேத்திரத்தில் கொண்டருளிய விசுவரூபத்தை ஒருவரால் இத்தகையதென வரையறுத்துக் கூறக்கூடுமோ? ("கூடாது-ஆயினும் ஒருவாறு சிறிது கூறுகிறேன்" என்றபடி.) தேன் சொரியும் மலர் மாலைகளும், பீதாம்பரம், கந்தம் முதலியவைகளையுமுடைய அச் சொரூபம் எல்லைகடந்து அநந்தமாய், எண்ணிறந்த பலகோடி சூரியர்கள் ஆகாயத்தின்கண் உதித்ததற்கு ஒப்பானதாகும்.

இன்னும் அந்த விசுவரூபத்தின்கண்ணே உள்ள தோள்களும், பாதங்களும் அனேகம். அழகுபெற அணியப்பட்ட ஆபரணங்களும் அனேகம். ஒளிபொருந்திய முகங்கள் அனேகம். வாய்கள் அனேகம். கைப்பற்றிய ஆயுதங்கள் அனேகம். அற்புதங்களும் அனேகம்.

பகவான் கொண்டருளிய அவ்வற்புதமான விஸ்வரூப கோலத்துள் எவ்வகைத் தன்மைகளையு முடையனவாகிய எல்லாப் பொருள்களையும் நேரே தரிசித்த அர்ச்சுனன், இனி நாம் ஈடேறினோம் என்று ஆனந்தத்தில் முழுகினவனாய் தான்செய்வதின்னதென அறியாதவனாகி, அச்சொரூபத்தின் முன் சாஷ்டாங்கமாக வீழ்ந்து நமஸ்கரித்தான். மனங்கரைந்து கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருக புளகாங்கிதமுற்று, இரு கரங்களையும்

குவித்து அப்பரமேசுவரன் சந்நிதியில் நின்று பின்வருமாறு புகலலுற்றான் :—

"ஓ! தேவர்களாலும் பூசிக்கப்பெற்ற பரம்பொருளே! நீர் கொண்ட இந்த அற்புதமான விசுவரூப கோலத்தினுள்ளே ஒருவராலும் அளவு காணமுடியாத ஸ்தாவர ஜங்கம பொருள்களனைத்தும் பொருந்தியிருக்கக் கண்டேன். மும்மூர்த்திகளில் சிருட்டி கர்த்தாவாகிய நான்முகப் பிரம்மாவை முனிகணங்களோடும் கண்டேன். வாசுகி முதலிய நாகங்களைக் கண்டேன். தேவர்களின் கூட்டங்களையும் கண்டேன்.

ஏ பரந்தாமா! குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய மகுடமும், கதையும், சக்ராயுதமும் தரித்தருளி, சூரியனும் அக்கினியும் ஒன்றுகூடிய சோதியை யொப்பான தமது விசுவரூபத்தின்கண்ணே அனேகம் கண்களும், உதரங்களும், புயங்களும், முகங்களும் உடைய அனேகம் வடிவங்களைக் கண்டேன். (தொடரும்.)

சீடன்.

---

## உணவின் உயர்தர முறைமை.

உணவென்பது இங்கு உயிர்களின் அபிவிருத்திக்கு ஆதாரமான போஜனத்தைக் குறித்ததேயாம். அஃதொன்றின்பொருட்டே சகல வுயிர்களும் படாத பாடுகளைப் பட்டுவருகின்றன. இல்லாவிடில், ஒன்றும் எவ்வித வருத்தத்திற்கும் உட்படவேண்டியிராது: உயர்வு தாழ்வு என்கிற மதிப்பும் ஏற்படக் காரணமில்லை.

"சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம்"

என்கிற முறைப்பாடும் வெளிவராது. "என் சிந்தை கெட்டுச், சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே" என்று வாய்விட் டரற்றவும் வழியுண்டாகாது.

சிறந்த வித்வானொருவன் குடிக்கக் கூழும் உடுக்கக் கந்தையுமின்றி ஒற்றைக் கோவணத்துடன் தேகமுற்றும் மயிரால் மூடப்பெற்றவனாய் ஊரூராயலைந்து புதுவையைச் சேர்ந்தானாம். அங்கு ஆனந்தரங்க பூபதியைக் கண்டாவது தன் குறையை நிவர்த்தித்துக் கொள்ளலாமென்றெண்ணி ஒரு நாள் அதிகாலையில் அப்பிரபுவின் வீட்டுக்குப்போய்,அவரை வெளிவரின் காணலாம் என்று தெருத்திண்ணையின் ஒரு மூலையில் முழங்காலை மார்போடணைத்துக்கொண்டு, கைகளால் அம் முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தானாம். வெளியே உலாவச்சென்ற பிரபு வீட்டுக்குத் திரும்பியவர் இம்மனிதனைக் கண்டு "இக்குரங்கன் யார்?" என்று தமது கைக்கோலால் சுட்டிக்காட்டி வினவினராம். உடனே வித்வான்

"இவர்தான் பிரபுவா யிருக்கலாம் " என்று நினைத்து, எழுந்து நின்று "சுவாமி! அடியேன் ஸ்ரீ ராமபிரானுல் அனுப்பப்பெற்ற குரங்கன். இங்கு சீதாபிராட்டி (இலக்ஷ்மி) இருக்கின்ருளோ இல்லையோ வென்று பார்த்துவரச் சொன்ஞர்" என்ருனும்.

பிரபு தாம் கேட்ட கேள்விக்குத் தக்க சமாதானம் சொன்ன இவன் கேவலம் மூடாத்துமாவாயிரான். நல்லதிருக்கட்டும் என்று நினைத்தவராய்த் தமது பரிசாரகர்களில் ஒருவனை யழைத்து "இவருக்கு நாவிதனைக் கொண்டு க்ஷவரஞ் செய்வித்து, குளிப்பாட்டி, நல்லுடையணியச்செய்து, சாப்பிடவையுங்கள். உபசரிப்பதில் தாழ்வு ஏதேனும் நேரிடப்போகிறது. பிறகு என்னிடம் அழைத்துவாருங்கள்" என்று உத்தரவிட்டு, அவ்வாறே அவ்வித்வ சிகாமணியோடு கலந்துபேசி அவரால் கவிபாடப்பெற்று, வேண்டிய சன்மானத்துடன் அவரைக் கூட்டி யனுப்பிஞராம். இப்படிப் பசிப்பிணியானது கவீச்வரர்களையும் வாட்டவல்லதென்ருல் பிறரை யது என்ன செய்யாது. குலங் கோத்திரம், மானம் தானம், அறிவு, ஆண்மை, ஈகை யிரக்கம் முதலிய வெல்லாமிருந்தாலும் இப்பிணியண்டிஞல் அவை யாவும் எங்கேனும் பயந்தோடிப் பதுங்கிக்கொள்ளும்.

இத்தகைய கொடும் பிணியைக் குடிகெடுக்கவல்லது எது? அது, உணவேயாம். நாம் செய்யும் அளவற்ற தொழில்களும், கற்கும் கணக்கற்ற வித்தைகளும் அவ் வுணவின்பொருட்டேயன்ருே? அத்தன்மையான உணவின் வகைகளையும், பக்குவப்படுத்தும் வழிகளையும், இடங்களையும், உண்ணவேண்டிய ஒழுக்குகளையும், உரிய பாத்திரங்களையும், பலன்களையும் முன்ஞேர் விசிதமாகக் கூறியிருக்கின்றனர். இப்போது காலத்துக்கேற்ற கோலப்படி நாம் அவற்றைக் கவனியாது இஷ்டப்படி யொழுகிவருகிருேம். நம்மைப் பின்பற்றுபவராவது அத்தருமங்களில் ஈடுபட்டுய்ய அவற்றை யொருவாறு சுருக்கிப் பேசுவாம். அரிசி வகைகளில் 76 தினுசுகளுண்டு. அவற்றில் சம்பா அரிசியில் மட்டும் நாற்பதுக்கு மேற்பட்ட தினுசுகளுண்டு.

அவற்ருல் சுத்தான்னங்கள், சித்ரான்னங்கள், பலகாரங்கள் முதலியவை செய்யலாம். இவற்றுளொன்றைக் கஷ்டப்பட்டு அடையப் பெற்றவரிற் சிலர் அதைப் பக்குவப்படுத்தும் ஒழுக்கை அனுசரிப்பதில்லை. காலம் அப்படி யிருக்கின்றது. நியாயமாகப் பார்க்கின், பாகசாலையானது 32 அடி நீளமும், 8 அடி அகலமும் கொண்டிருக்கவேண்டும். மேலே புகை முதலியவை தாராளமாகச் செல்லவும், அக்கினிக் குதவியான காற்று நன்ருயியங்கவும் புகைகூண்டு,பலகணி, நீர்த்தாரை முதலியவை அமைந்திருத்தல் வேண்டும். அறையை எப்போதும் சுத்தமாக வைக்கவேண்டும். இந்த அறையில் அக்கினி அல்லது இந்திரதிசையில் பரணி,கிருத்திகை முதலிய சுபதினத்தில் பசுவின் வால்போலும் செங்கல்லால் அல்லது களிமண்ணுல் அடுப்பிடவேண்டும். இதனைத் தினந்தோறும் சாணங்கொண்டு மெழுகிக்

கோலமிட்டு, மலரிட்டுத் தொழுது நெருப்பை அடுப்பில் இடவேண்டும். இவ்வறையில் இருக்கவேண்டிய உபகரணங்கள் :—அக்கினி திசையில் தீபம் ; யமன் திசையில் விறகு ; வருணன் திசையில் நீர் ; வாயு திசையில் விசிறி ; நிருதி திசையில் முறம் துடைப்பம் ; குபேரதிசையில் தானியம், காய்கறி; ஈசானிய திசையில் உரல், உலக்கை, அம்மி; வலது பக்கம் பாக பாத்திரங்கள்.

சமைப்பவன் ரோகமில்லாதவனுய், தேகபுஷ்டியுள்ளவனுய், பதார்த்த லக்ஷணமறிந்தவனுய், நற்குலத்துதித்தவனுய் இருத்தல்வேண்டும். ஸ்நாநஞ்செய்து அரையிலும், மேலும் சிறு துண்டு பூண்டு, சிகையைத்தட்டி அவிழாதபடி முடியிட்டு, நகசுத்திசெய்துகொண்டு சமையல் செய்யப் பிரவேசிக்கவேண்டும். இவ்வகையாயிருந்து சமைக்காத அன்னம் உண்பவரை நோயினராக்கி எண்வகை குற்றத்துட்படச்செய்யும்-அவை :—

1. அஸ்திரீதம்=கஞ்சி சுற்றிக்கொண்ட அன்னம் - ஆமயம் முதலிய ரோகந்தரும்.

2. பிச்சலம்=அளிந்த அன்னம் - குன்மாதிரோகந்தரும்.

3. அசுசி=புழு, மயிர்சேர்ந்த அன்னம் - வாய் நீரொழுக்கை யுண்டாக்கும்.

4. குவதிதம்=நருக்கரிசிபட்ட அன்னம்-அஜீரணமுண்டுபண்ணும்.

5. சுஷுமிதம்=சிறிது வெந்தும் வேகாததுமான அன்னம் - இரத்தபீடனமுண்டாக்கும்.

6. தக்தம்=காந்திப்போன அன்னம் - இந்திரிய நஷ்டத்தை யுண்டாக்கும்.

7. விரூபம்=விறைத்துப்போன அன்னம் - ஆயுள் க்ஷீணத்தை யுண்டாக்கும்.

8. அநர்த்துஜம்=பழைய சாதம் - அதி நித்திரை, சீதாதிதோஷம் உண்டாக்கும்.

இலைக்கறிகள், காய்கள், பிஞ்சுகள், கனிகள், பயறுகள் இவற்றை ஐங்காயமிட்டு சமைக்கவேண்டும்.

போஜனவிதி:—சமபந்தியிலுண்போர் அன்னியரல்லாத சம ஜாதியராய், நியமாசாரமுடையோராய் இருத்தல்வேண்டும்.

இடம்:—வெளிச்சமுள்ளதாய், இதரான் புகாததாய், கோமயத்தால் மெழுகப்பட்டதா யிருக்கவேண்டும்.

உண்ணும் பாத்திரம்:—1. பொன், 2. வெள்ளி, 3. வெண்கலம், 4. வாழை இலை, 5. மா இலை, 6. புன்னை இலை, 7. தாமரை இலை, 8. இருப்பை இலை, 9. பலா இலை, 10. சண்பக இலை, 11. வெட்பாலை இலை, 12. பாதிரி இலை, 13. பலாசு இலை, 14. சுரை இலை, 15. கமுகமடல் இவற்றுள் ஒன்று யிருக்கவேண்டும். இவற்றின் பலன்:—

1. சுக்ல விருத்தி, வாத பித்த சீதளசமத்துவம், உற்சாகம், சோபா ரோக நிவர்த்தி.

2. சிலேத்தும பித்த கோபத்தை நீக்கி, தேஜசு மகிழ்ச்சி என்பவற்றைத் தரும்.

3. சிக்கல், சோர்வு, இரத்தபித்தரோகம், என்பவற்றை நீக்கி, தாது விர்த்தி, வன்மை, இவற்றைத்தரும்.

4. தேஜசு, சுகபோகம் உண்டாம். மந்தாக்கினி, துர்ப்பலம், க்ஷீண வாத சிலேத்தும அரோசகம் இவற்றை நீக்கும்.

7. வெப்பம், வாதரோகம், மந்தாக்கினி இவற்றைத் தரும். சம்பத்தைப்போக்கும்.

9. குன்மரோகம், பித்தம் அதிகமாக்கும்.

மற்ற இலைகள் மத்திம பலனைத் தரும்.

பலவகையான பாலுள்ள மர இலைகள்:—பங்குவாதம், க்ஷயம், தாக ரோகம் இவற்றை நீக்கும்.

வெள்வாழையிலை:—உற்சாகந்தரும்.

"வாழையிலை அறுத்த அடிபாகத்தை வலப்பக்கம் வைத்துண்ண வேண்டும். உண்ணும்போது, இரண்டு கால்களையு முடக்கிக்கொண்டு இட முழந்தாளின்மேல் இட முழங்கையை யூன்றிக்கொண்டு பேசாமல் உண்ணவேண்டும். தரையில் ஆடையுடன் தென்முகமாக இருந்து உண்பவருடைய அன்னத்தை அரக்கர் உட்கொள்ளுவார்கள்.

இரண்டுவேளை போஜனமே உத்தமம். முக்கால் வயிறுதான் உண்ணுதல்வேண்டும். அன்னம், கறி அரை வயிறு. பால், மோர், ஜலம் கால் வயிறு.

"திண்ணம் இரண்டுள்ளே சிக்க அடக்காமல்
பெண்ணின்பால் ஒன்றைப் பெருக்காமல்—உண்ணுங்கால்
நீர்கருக்கி மோர் பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கப் போமே பிணி"

என்று ஆன்றோர் கூறியுளர்.

ம. இராஜகோபால பிள்ளை,
கோமளேசுவரன் பேட்டை.

---

## நம்நாட்டுப் பூர்வீகத் துறைமுக வியாபாரம்.

நம் நாட்டின் பூர்வீக உண்மை நிலைமை இன்னும் நம்மவரில் அனேகர்க்குத் தெரியாது. இந்துதேச சரித்திரங்கள் என்ற பெயருடைய நூல்கள் பாடசாலைகளில் கற்பிக்கப்படினும் அவற்றில் நம் நாடு முன்னிருந்த சிறப்புபொருந்திய நிலைமை கூறப்பட்டிருக்கவில்லை. எந்தெந்த விஷயங்களில் நம் முன்னோர் கௌரவம் பொருந்தி யிருந்தார்களோ, எந்தெந்த விஷயங்களை நாம் உணர்ந்தால் நமது கண்மூடித்தனம் ஒழிந்து நாம் கண் விழிப்படைந்து "சே! இனி நாம் இப்படி உறக்கத்திலிருக்கலாகாது. பூர்வ கௌரவ நிலையையடையவேண்டும்" என்று ஊக்கங்கொள்வோமோ, அத்தகைய விஷயங்களெல்லாம் சரித்திரங்களில் கூறப்பட்டிருக்கவில்லை.

மார்ஸ்டன், வின்கிளேர் முதலிய அன்னிய நாட்டார்கள் வரைந்துள்ள தேச சரிதங்களில் மேற்கண்ட விஷயங்களனைத்தும் மறைக்கப்பட்டு, "நம்முன்னோர் ஒன்றுமறியா மூடர்களாகவும் அநாகரீகர்களாகவுமே யிருந்தாகள், நாம் மகம்மதியர் அரசாட்சியில் மிக்க குரூரமாய் நடத்தப்பட்டு மிக்க பரிதாபமான நிலைமையிலிருந்தோம். இப்போது ஆங்கில இராஜாங்கம் வந்தபிறகே நாகரீகமும், கல்வியறிவும், க்ஷேமமும், சுயாதீனமும் பெற்று விருத்தியடைந்து வருகிறோம்" என்ற அபிப்பிராயம் சிறு வயதிலேயே நம் மக்கள் மனதிற் பதிவதற்கு எவ்வாறு எழுதவேண்டுமோ அவ்வாறே தேச சரித்திரங்கள் வரையப்பட்டிருக்கின்றன. மகம்மதிய இராஜாக்கள் அரசாண்டபோது அவர்கள் நாட்டிற்குச் செய்த நன்மையும், அவர்கள் செய்த அரிய செயல்களும் யாவும் மறைக்கப்பட்டு அவர்களில் கொடுங்கோன் மன்னராயிருந்தவர்கள் செய்த அக்கிரமங்களைப்பற்றி மட்டுமே அதிகமாகக் கூறப்பட்டிருக்கிறது.

பூர்வீகத்தில் நெசவு முதலிய கைத்தொழில்கள் நம் நாட்டில் உன்னத நிலையிலிருந்தன வென்பது யாவரு மறிந்தவுண்மை. அதைப்போல் கப்பல் வர்த்தகம் நடக்கும் பல துறைமுகங்களும், கப்பல் கட்டும் துறைகளும் நம் நாட்டில் அநேகம் இருந்தன. ஒளரங்கஸீப் சக்கிரவர்த்தி அரசாண்ட காலத்தில் அவர் இருநூறுக்கு மேற்பட்ட யுத்தக் கப்பல்களோடும், அநேகம் பீரங்கிகளோடும் அரக்கான்நாட்டின்மேல் படையெடுத்துச் சென்றிருக்கிறார். இத்தகைய சமாசாரங்களெல்லாம் மேற்கண்ட தேச சரித்திரங்களில் குறிக்கப்படவில்லை. பைத்தியம் பிடித்த ஒரு சக்கிரவர்த்தி ஜனங்களை வேட்டையாடிக் கொன்றான் என்றால் அதைப்பற்றி மட்டும் விபரமாகக் கூறப்பட்டிருக்கும்.

இந்தியாவின் பூர்வீகத் துறைமுகங்களையும் கப்பல்களையும்பற்றி "பம்பாய் கிரானிகல்" என்ற பத்திரிகையில் கூறியிருக்கப்பட்ட விஷயங்களைச் சுருக்கமாய் ஈண்டு கூறுகிறோம்.

"இந்தியாவின் கப்பல் வியாபாரப் பெருக்கைக் கொஞ்சங் கொஞ்சமாகக் குன்றிப்போகச்செய்து கடைசியில் அடியோடு துடைத்துவிட்ட காரணங்களையும் ஏற்பாடுகளையும் பற்றிய சரித்திரத்தை ஈண்டு விவரித்துக் கூறுவது அனுவசியம். இந்தியரின் பெருமையைக் காட்டும் அந்த க்ஷேம நிலைமை யழிக்கப்பட்டபோது ஒரு அம்சம் மட்டுமே அழியாமல் காப்பாற்றப்பட்டது. அது எதுவெனில் கப்பலில் மாலுமிகளாய்த் தொழில் செய்வதில் கைதேர்ந்த பலசாலிகளும், தைரியசாலிகளுமான ஜாதியார் மட்டும் நிலைத்து நின்றார்கள். அவர்கள் இங்கிலீஷ்காரர்களின் கப்பலுக்குஅவசியமானவர்களாகவும், குறைவான சம்பளத்திற்கு நன்றாக உழைப்பவர்களாகவும் இருப்பதால்தான் காப்பாற்றப்பட்டார்கள்.

இந்தியாவிற்குப் பெருந் தீங்கை விளைவித்த இக்காரியத்தைச் செய்தவர்கள் தங்கள் தேசாபிவிர்த்தியைக் கருதி யப்படிச் செய்ததால் அதையொரு குற்றமாக அவர்கள் கருதவில்லை. அப்படிச் செய்தும் 1854-55-ம் வருடம் வரையில்கூட "சுதேசக் கப்பல்கள்" இருந்துகொண்டிருந்தன. அந்த வருடம் பம்பாய், கல்கத்தா, சென்னை இத்துறைமுகங்களுக்கு வந்த சுதேசக் கப்பல்களின் தொகை பின்வருமாறு.

| | கப்பல்தொகை. | | கொள்ளும் பாரம். |
|---|---|---|---|
| பம்பாய் | 4899 | ... | 185,700 |
| கல்கத்தா | 4447 | ... | 445,000 |
| சென்னை | 3677 | ... | 171,421 |

இக்கணக்கில் அப்போதும் ஏராளமான வர்த்தகம் நடந்துகொண்டிருந்த சின்னத் துறைமுகங்களின் கணக்கு சேர்க்கப்படவேயில்லே. பம்பாய் இராஜதானியில் மட்டும் பின்வரும் துறைமுகங்கள் இருந்தன:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அலிபாக் | 9. | ஜம்போஸஉர் | 17. | ஸஉவென் தூர்க்கம் |
| 2. | பேஸன் | 10. | கராச்சி | 18. | சூரத் |
| 8. | புரோச் | 11. | மாஹோனு | 19. | தாராபூர் |
| 4. | பல்லார் | 12. | ஊல்பார் | 20. | திராம்பே |
| 5. | காரிங்கா | 13. | ஓமர்கன் | 21. | அன்ஜன்வெல் |
| 6. | டொலாரா | 14. | பான்வெல் | 22. | விங்கோர்லா |
| 7. | கோகோ | 15. | இராஜ்பூரி | 23. | விஜயதூர்க்கம் |
| 8. | சர்பண்ட்ஸ் | 16. | இரத்னகர் | 24. | வாக்ரா |
| | | | | 25. | வாரி |

இவ்வாறே மற்ற இராஜதானிகளிலும் இருந்தன. கடந்த நூற்றூண்டின் முற்பாதிவரையில்கூட இந்தியரால் நடத்தப்பட்டவையும் இந்தியர்க்குச் சொந்தமானவையுமான கப்பல்களே நம் நாட்டு முழு வர்த்தகத்தையும் ஆறுகளின் வழியாய் உள்நாட்டில் நடத்திக்கொண்டிருந்ததோடு, கடல் மார்க்கமாக நடந்த வர்த்தகத்தில் ஏறக்குறைய பாதியையும் இவைகளே நடத்திவந்தன."

நேயர்களே! இப்போது நாம் இந்த விஷயத்தை யுணரவேண்டியதேன்? நம் பூர்வீகப் பெருமை யிப்படி யிருந்ததென்று மனமகிழ்வதற்கா அல்லது வாய்ப்பறை யறைவதற்கா? அதனுலென்னபயன்? "அத்தகைய உன்னத நிலைமை யடியோடு சீர்குலேந்து இப்போது எல்லாவற்றிற்கும் அன்னியநாட்டுதவியை யெதிர்பார்க்கும் நிலைமையிலிருக்கிறோமே. இது எத்தகைய வெட்கக்கேடான நிலைமை" என்று நம் மனதில் உறுத்தி, இனியேனும் நாம் அடிமைத்தொழிலில் ஆசைவைப்பதை அறவே விட்டு, நம் தாய்நாடு பழைய நிலைமையை யடைவதற்கு அனுகூலமான தொழில்களேயே நம் ஜீவியத் தொழில்களாகக் கொள்ளவேண்டும் என்ற வைராக்கியங்கொண்டு அவ்வழியிலொழுகவேண்டும் என்பதற்கே இதை வாசித்துணரவேண்டும்.

ஓம்தத்ஸத்.

---

# சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

## 10-வது ஆண்டு:

நேயர்களே! அடுத்த ஆடிமீ நமது ஆனந்தனுக்கு 10-வது வருடம் பிறக்கப்போகிறது. முன் இரண்டு வருடங்களில் நடத்தியபடியே அடுத்த ஆனிமாத சஞ்சிகையை வி-பி-யிலனுப்பி 10-வது வருட சந்தாவை வசூலிக்கத் தீர்மானித்திருக்கிறோம்.

முன்பண மனுப்புவோர் 1924ஹு ஜூன்மீ 15உக்குள் நமது வந்து சேரும்படி யனுப்பக் கோருகிறோம். வி-பி-யில் சஞ்சிகை பெறறுக்கொள்வதால் 3 அணு அதிகச்செலவும் வீண் ஆலசியமும் நேர்கிறதென்பது கவனிக்கத்தக்க விஷயம்.

அடுத்த வருடம் சஞ்சிகை வேண்டாதோர் 15-6-1924-க்குள் நமக்குத்தெரிவித்துவிட்டால் ஆனிமீ சஞ்சிகையை வி-பி-யிலனுப்பாமல்

சாதாரணமாகவே யனுப்பிவிடுவோம். அப்படிச் செய்யாது பேசாம லிருந்துவிட்டு, வி-பி வந்தபின் வாபீஸ் செய்து நமக்கு நஷ்டமுண்டாக்கி விட்டு"9-ம் வருட சந்தாவை நான் அனுப்பியிருக்க எனக்குக் கடைசிச் சஞ்சிகையை யனுப்பவில்லை" என்று குறை கூறுவதில் பயனில்லை. இதைநன்ருய்க் கவனிக்கக் கோருகிருேம்.

முன்பணமனுப்புவோரும் சஞ்சிகையை நிறுத்திவிட அறிவிப்போரும் மறவாமல் தங்கள் சந்தா நம்பரை யறிவிக்கவேண்டும். இதுகாறும் அதைக் குறித்துவைத்துக்கொள்ளாதவர்கள் வைகாசிமீ வரும் சஞ்சிகையின் மேல்உறையைக் கிழித்தெறியுமுன்பே விலாசத்தில் இருக்கும் சந்தா நம்பரை (1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் அல்ல) மறவாமல் குறித்துக் கொண்டு அறிவிக்க வேண்டுகிருேம்.

## இன்னெரு விசேடம்.

சந்தா நேயர்களில் பலர் சஞ்சிகையை மாதம் இருமுறையாக்கவேண்டுமென்றும், அல்லது பக்கங்களையேனும் அதிகப்படுத்தவேண்டும் என்றும் அதற்காகத் தாங்கள் சந்தாத் தொகையை யதிகப்படுத்தியனுப்பச் சித்தமாயிருப்பதாகவும் வரைகிருர்கள்.

முசிரி சாஸ்வதானந்த சபைக் காரியதரிசியாகிய நண்பர் ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணசாமி சர்மா அவர்கள் தாம் 10-ம் ஆண்டு சந்தாவுக்காக ரு. 1-8 அனுப்புவதாகவே வரைவதோடு எல்லாரையும் அவ்வாறே செய்யுமாறு வேண்டுகோள் ஒன்றும் வரைந்தனுப்பியுள்ளார். இச்சஞ்சிகையில் இடமில்லாததால் அதைப் பிரசுரிக்காததற்கு விசனிக்கிருேம்.

நம் நாட்டார்க்குப் பத்திரிகைகளில் இன்னும் போதுமான அபிமானம் உண்டாகவில்லையாதலின், மேற்கண்ட நண்பரைப்போல் எல்லாரும் நடந்துகொள்வார்களென்று எதிர்பார்க்கக்கூடவில்லை. நாடகம், பயாஸ்கோப் காட்சி முதலியவைகளுக்காக ஒரு வாரத்தில் செலவழிக்கும் பணத்தைச் சஞ்சிகைக்காக வருடமொருமுறை செலவழிக்கப் பின்னிடைகிருர்கள். இருக்கும் சந்தாதாரரில் அனேகர் வருடாரம்பத்தில் வி-பி-யை வாபீஸ் செய்துவிட்டுப் பின்னுல் 1 ரூபாயனுப்பி மறுபடி சேர்கிருர்கள். இவ்வாறு ஆயிரம்பேர் வாபீஸ் செய்தாலும் சஞ்சிகை 1-க்கு 3 அணு வீதம் ரூபா 187-8-0 நமக்கு நஷ்டமாகிறது.

ஆதலின் சஞ்சிகையை யாதரிக்கும் சந்தா நேயர்கள் நமக்கு சந்தா தொகையை உயர்த்தியளிக்காவிடினும் இத்தகைய வீண் நஷ்டத்தை யளிக்காமல், ஒவ்வொருவரும் முன்பணமாய் சஞ்சிகையை யனுப்பிவிடவும், ஒவ்வொருவர் ஒவ்வொரு புது சந்தாதாரரைச் சிபாரிசு செய்யவும் முயற்சி யெடுத்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிருேம். இவ்விஷயத்தில் நமக்குச் சற்றேறக்குறைய திருப்தியுண்டாகுமாறு நேயர்கள் மனம் வைத்துச் செய்வார்களாயின், நாம் இந்த சந்தாவுக்கே சஞ்சிகையின் பக்கங்களை (10-ம் வருடத்திலிருந்தே) அதிகப்படுத்தச் சித்தமாயிருக்கிறேம். சந்தாதாரர்கள் நமக்கு நஷ்டத்தை யுண்டாக்காதிருந்தால் அதுவே நமக்குப் பரிசளித்தமாதிரியாகும்.

---

பத்திராதிபர்.

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(358-ம் பக்கத் தொடர்ச்சி.)

மனே:—அந்த ஆச்சரியத்தைப்பற்றி என்னிடம் கொஞ்சம் புலம் விடலாகாதா?

ஆன:—இப்போது ஒன்றும் கூறலாகாது. அதோடு இச்சமயம் இன்னும் இரண்டு நிமிடம் தாமதிக்கக்கூட எனக்கு அவகாசமில்லை.

மனோகரன் இரண்டொரு நிமிடங்கள் பேசிவிட்டு விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

ஆனந்தஸிங் உடனே பவானியை யழைத்துக்கொண்டு சுடலைக்குப் புறப்பட்டான். இருவரும் சென்று சவக்குழியருகில் போய் பார்த்த போது கதவு பூட்டப்பட்டிருந்தது. இதனால் இடையில் யாரோ சவக் குழிக்குள் பிரவேசித் திருக்கிறார்களென்று விளங்கியது.

ஆனந்தஸிங் ஒரு நிமிடத்தில் தான் கொண்டுவந்திருந்த சாவிகளில் ஒன்றால் கதவைத் திறந்துவிட்டதே யிருவரும் உள்ளே பிரவேசித்தார் கள். சவப்பெட்டியின் மேல்மூடி மறுபடி திறக்கப்பட்டது. ஆனந்த ஸிங்கிடமிருக்கும் இராந்தலின் வெளிச்சத்தில் பவானி பெட்டியிலிருந்த சவத்தை மிக்க ஜாக்கிரதையோடு சோதனை செய்துப் பார்த்தாள்.

சுமார் ஐந்து நிமிடங்கள் வரை பார்த்துவிட்டுக் கடைசியில் ஆனந்த ஸிங்கை நோக்கி,

"இச்சவம் அம்பாலிகையின் சவமல்லவென்று நான் எத்தனைதரம் வேண்டுமாயினும் சத்தியம் செய்வேன். நேற்று எப்படியோ கலவரத் தால் முட்டாள்தனமாய் ஏமாந்துபோய்விட்டேன்" என்றாள்.

ஆனந்தஸிங்குக்கு உடனே காலையில் ப்டகிலிருந்த நிலைக்கண்ணாடி யில் தான் கண்ட அதிசயமான உருவம் நினைவிற்கு வந்தது.

அவன் பவானியை நோக்கி "இப்போது நீ கூறுவது சந்தேகமில் லாத உண்மையா?" வென்றான். பவானி "ஆம் உறுதியான உண்மையே" என்றாள்.

ஆனந்தஸிங் :—உனக்கு என்ன அத்தாட்சி யிருக்கிறது?

பவானி:—அவள் பிறந்தது முதல் நான் கூடவே பிரியாமலிருக்கிறே னென்று முன்னமே கூறியுள்ளேனல்லவா? அவள் தேகத்தில் சில குறிகள் இருந்தன. அவள் இறந்ததினத்திற்கு முன் தினம் கூட அவள் தேகத்தில் அவற்றைப் பார்த்தேன். சவம் இருக்கும் இந்த நிலைமையில்கூட அவற்றில் இரண்டொன்றாவது இருக்கவேண்டும். ஒன்றேனுமில்லை. நான் உறுதியாய்க் கூறுகிறேன், இது அவள் சவமேயல்ல.

அதற்குமேல் அங்கு நடந்த காட்சியை நாம் இங்கே கூறவேண்டுவ தில்லை. அவர்கள் குழியிலிருந்து வெளிவர அரைமணிக்குமுன்,அவள் சவப் பெட்டியினருகில் கையில் பிடித்த இராந்தலோடு நின்று, "ஆகா! கட வுளே! எப்படிப்பட்ட மகா அக்ரமமான கொலைபாதகம் நடந்திருக்கிறது!" என்றாள்.

ஆனந்த :—"இப்போது உனக்கு முழு மோசமும் தெரிந்துவிட்டதல் லவா?" என்றான்.

பவானி :—ஆகா தெரிந்துவிட்டது. இச்சவம் மெய்யாகவே அம்பாலிகை யின் சவமாய் இருந்துவிடலாகாதா வென்று நினைக்கிறேன்!

ஆனந்தஸிங் "இப்போது இது அம்பாலிகையின் சவமல்லவென்று தெரிந்துவிட்டதல்லவா?" என்றான். பவானி "சற்றும் அய்யமின்றி" என்றாள். பிறகு இருவரும் அதைவிட்டுப் புறப்பட்டு நகரத்தை நோக்கித் திரும்பினார்கள்.

வழியில் பவானி ஆனந்தஸிங்கை நோக்கி "அடடா என்ன ஆச்சரியம்! நான் முதலில் சற்று ஏமாந்துவிட்டேன். கடைசியில் அவளும் இவளும் ஒரே மாதிரியாய்த் தோன்றும் அம்சங்களெல்லாம் கூறி, ஒரே நிறமான செழித்து வளர்ந்த கூந்தலில் மட்டுமேயன்றி வேறொரு அம்சத்திலும் ஒற்றுமையில்லை" என்றாள்.

ஆனந்த:—அம்பாலிகையின் தேகத்திலிருந்த குறிகளில் ஒன்றுகூட இச் சவத்தின் மேலில்லையே?

பவானி:—ஒன்றேனுமில்லை. அதைப் பாராமலே நான் இது அம்பாலிகையின் தேகமல்லவென்று நிச்சயமா யறிந்துகொண்டேன். எதற்கும் ஒன்றிற்கிரண்டு அத்தாட்சிகளா யிருக்கட்டுமென்று அதையும் பார்த்தேன். பலதரம் பேசுவானேன். இது கட்டாயமாய் அம்பாலிகை தேகமல்ல; அம்பாலிகை உயிரோடிருக்கிறாள். அந்தோ சண்டாளனிடம் சிக்கிக்கொண்டு அவள் படப்போகும் பாட்டைவிட இறந்தேபோ யிருக்கலாமே என்று எனக்கு வேதனையா யிருக்கிறது.

ஆனந்:—"அவள் ஒருகாலும் அவனிடம் சிக்கிக்கொண்டிருக்கப் போகிறதில்லை" என்று கோபத்தோடு உறுதியாய்க் கூறினான்.

பவானி:—அய்யோ! அத்துஷ்டர்களுடைய சூதும் தந்திரமும் துணிகரமும் உனக்குத் தெரியாது.

ஆனந்:—என்னுடையவைகளும் அவர்களுக்காவது உனக்காவது தெரியாது.

பவானி:—கடவுளே! நீ ஜெயமடைவதை என் கண்களால் காணுமட்டும் நான் உயிரோடிருப்பேனா?

ஆனந்:—அதைக் காண நீ அனேக நாட்கள் காத்துக்கொண்டிருக்க வேண்டுவதில்லை.

பவானி:—ஒருசமயம் நான் சில மணிகள் நேரங்கூட ஜீவித்திருக்க மாட்டேன்.

ஆனந்த:—ஏன்? நீ கூறுவதன் அர்த்தமென்ன?

பவானி:—கறுப்பண்ணனும் அவன் கூட்டாளியும் எந்த நிமிடத்தில் என்னைக் கொன்றுவிடுவார்களோ தெரியாது. லாயருடைய குமஸ்தா கொல்லப்பட்டதை மறந்துவிட்டாயோ?

ஆனந்த:—அப்படியானால் நான் வெளிவரும்படி கூறுகிறவரையில் நீ ஏன் எங்காவது ஒளிந்துக்கொண் டிருக்கலாகாது?

பவானி:—இல்லை யில்லை. நான் அவர்கள் எண்ணங்களை உளவறிந்து வந்து உனக்கு உதவிசெய்யவேண்டும். இப்போது முன்னுடி யெச்சரிக்கை யடைந்திருப்பதால் மிக்க ஜாக்கிரதையாகவே யிருப்பேன்.

ஆனந்த:—நீ மிக்க தைரியசாலி.

பவானி:—தைரியசாலியல்ல. ஆனால் அம்பாலிகையைக் காப்பாற்றுவதாயின், என் உயிரையேனும் கொடுக்க ஆயத்தமா யிருக்கிறேன்.

ஆனந்தஸிங் உன் ஆபத்து நெடுநாள் இருக்காது என்றான்.

மறுநாள் ஆனந்தஸிங் மனேஜரைச் சந்தித்தான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

## சந்தா நேயர்களுக்கு.

1923ளு ஜூன்மீ 14உக்குள் வந்து சேரும்படி முன்னுடிச் சந்தா தொகையையனுப்பியவர்களுக்கு ஏற்கனவே நாங்கள் செய்திருந்த விளம்பரப்படி "இரக்தாக்ஷி வருஷத்திய ஆனந்தபோதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கம்" 9-4-24-க்குள் அனுப்பிவிட்டிருக்கிறோம். பத்திராதிபர்.

## ரப்பர் பாய்கள்.

இலங்கையிலுள்ள கொளும்பு ரப்பர் ஒர்க்ஸ் என்னும் கம்பெனியார் இப்போது ஒருவித ரப்பர் பாய்களைச் செய்திருக்கிறார்கள். அவை மெல்லியவையாயும் சுருங்குதல், உடைந்துபோதல் முதலிய குணங்களில்லாமல் தண்ணீரில் நனையாமலும், மடக்க, மடிக்க, சுருட்ட அல்லது கசக்கினாலும் கெடாததாய் இருப்பதாகவும், அவைகளைக் கீழே விரிப்பதால் வெல்வெட்டைப்போல் மிருதுவாக இருப்பதோடு காலைச் சறுக்கிவிடக் கூடாததாகவும் இருக்கிறது. அதிஜனப் புழக்கமுள்ள ஆபீசுகளிலும் பாடசாலைகளிலும் இவைகளை வாங்கி விரிப்பதால் சாதாரணமாக ஜனங்கள் நடந்து போவதால் உண்டாகும் சப்தம் வேலை செய்பவர்களின் காதில் படாமலிருக்கும் என்று சொல்லப்படுகிறது.

## பக்ஷிகள் பறக்கும் தூரம்.

கழுகு மணி ஒன்றுக்கு 100 மைல்; நாரை 90 மைல்; அடைக்கலான் குருவி 90 மைல்; புறா 70 மைல்; காகம் 25 மைல்.

## நாம் மறக்கக்கூடாத புள்ளிகள்.

இந்தியாவில் சோற்றுக்கு வழியின்றி பிச்சையெடுத்து ஜீவனம் செய்பவர்கள் மொத்தம் 28,82,641 பேர். பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டும் 28,18,506 பேர்.

ஒரு இந்தியன் சராசரி சொத்தின் மதிப்பு ரூ. 180. கனடாவில் ஒருவனது சராசரி ஆஸ்தி 4,400. இங்கிலாந்தில் ரூ. 6000.

இந்தியாவில் ஒவ்வொரு இந்தியனும் வைத்துக்கொண்டு வியாபாரம் செய்துவரும் சராசரி மூலதனம் ரூ. 25. இங்கிலாந்தில் ரூ: 640. கனடாவில் ருபா 510.

இந்தியாவில் மரண விகிதம் 30 பேர். இங்கிலாந்தில் 14 பேர். கனடாவில் 14 பேர்.

## ஓர் அதிசய மீன்.

புதுவைக்குச் சுமார் 8 மைல் தூலவிலிருக்கும் இங்கிலீஷ் இலாக்கா புத்துப்பட்டு எல்லை கடற்கரையில் ஓர் பிரமாண்டமான திமிங்கிலம் வந்து ஒதுங்கியிருக்கிறது. அது ஏறச்குறைய 25 கெஜ நீளமும், 7½ கெஜ அகலமும், கரைப்பக்கத்தில் ஒரு ஆள் உயரமும், கடல் பக்கத்தில் இரண்டாள் உயரமும் இருக்கிறது. இது மீன் வகையில் சேர்க்கப்பட்டதாயினும் குட்டிப் போடக்கூடியது. இதை நம்மவர் யானைவிழுங்கி மீனென்பார்கள். இம்மீன் ஒதுங்கிய நாள் முதற்கொண்டு இந்நாள் வரையில் அதைப் பார்த்த ஜனங்களுக்குக் கணக்கில்லை. இதைப் பார்ப்பவர்களுக்குச் சிருஷ்டிகருடைய மகிமை விளங்காது போகாது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

இரக்தாக்ஷி௵ வைகாசி௴—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847,
பசலி 1333—கோல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1342,
இங்கிலீஷ் 1924௵ மேமீ—ஜூன்௴

| வைகாசி | மே | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புத | தச32-3 | பூர14-0 | அமி60 | மாடு முதலியவை வாங்க |
| 2 | 15 | வியா | ஏ27-23 | உத்11-43 | ம11-43சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 3 | 16 | வெ | து20-48 | அஸ்7-40 | அ7-40சி | விவாகம், நிஷேகம் |
| 4 | 17 | சனி | திர12-43 | சித்1-58<br>சுவா55-8 | மர1-58அ | நரசிம்ம ஜயந்தி, அவமாகம் |
| 5 | 18 | ஞா | சது3-43<br>○54-0 | விசா47-33 | மர60 | பௌர்ணமி, சம்பத் கௌரி விரதம் |
| 6 | 19 | திங் | பிர44-13 | அனு39-43 | சித்60 | தானியம் சேமிக்க |
| 7 | 20 | செவ் | துதி34-35 | கேட்32-10 | ம32-10அ | கரிநாள் [தீப கல்பாதி |
| 8 | 21 | புத | திரி25-50 | மூல25-25 | ம25-25அ | மிதுனயனம், 21-3பார்த் |
| 9 | 22 | வியா | சது18-18 | பூரா19-50 | சித்60 | கணிதாரம்பம் செய்ய |
| 10 | 23 | வெ | பஞ்12-18 | உத்15-55 | சி15-55ம | விவாகம், சீமந்தம் செய்ய |
| 11 | 24 | சனி | சஷ்8-3 | திரு13-43 | சித்60 | கதிரறுக்க, யாத்திரை |
| 12 | 25 | ஞா | சப்5-40 | அவி13-25 | ம13-25சி | [செய்ய |
| 13 | 26 | திங் | அ5-20 | சதை15-0 | சி15-0மர | பிரயாணம் விலக்கல் |
| 14 | 27 | செவ் | நவ6-33 | பூரட்18-15 | ம18-15அ | கத்தரி, அக்னிநக்ஷத்திர முடிவு 35-35 |
| 15 | 28 | புத | தச9-28 | உத்-22-55 | சி22-55ம | தானியம் செலவிட |
| 16 | 29 | வியா | ஏ12-28 | ரேவ-28-43 | சி28-43அ | கரிநாள், சர்வ ஏகாதசி |
| 17 | 30 | வெ | து18-25 | அசு35-18 | அ53-18சி | கரிநாள் |
| 18 | 31 | சனி | திர23-53 | பரணி42-25 | சி42-25அ | மாச சிவராத்திரி |
| 19 | 1 | ஞா | சது29-45 | கிரு ⁘49-48 | சித்60 | கிருத்திகை [க்ஷணம் |
| 20 | 2 | திங் | ●35-43 | ரோ57-13 | அமி60 | அமாவாசை-அரச பிரத |
| 21 | 1924௵ ஜூன்௴ 3 | செ | பிர41-43 | மிரு60 | சித்60 | |
| 22 | 4 | புத | துதி47-28 | மிரு4-35 | சித்60 | |
| 23 | 5 | வியா | திரி52-50 | திரு11-40 | ம11-40அ | |
| 24 | 6 | வெ | சது57-20 | புன18-13 | சி18-13ம | |
| 25 | 7 | சனி | பஞ்60 | பூச23-55 | சி23-55ம | |
| 26 | 8 | ஞா | பஞ்0-50 | ஆயி28-33 | சி28-33ம | |
| 27 | 9 | திங் | சஷ்3-3 | மக31-40 | ம31-40சி | |
| 28 | 10 | செ | சப்3-33 | பூர33-8 | சி33-8அ | |
| 29 | 11 | புத | அ2-18<br>நவ59-3 | உத்32-43 | அ32-43ம | |
| 30 | 12 | வியா | தச58-58 | அஸ்30-28 | சித்60 | விவாகம், நாமகரணம் |
| 31 | 13 | வெ | ஏ47-20 | சித்26-23 | சித்60 | மாடுவாங்க, கோடியுடுக்க மிதுனரவி நா 59-58 |

| | | | |
|---|---|---|---|
| | புத | சூரி | சுக் |
| கே | 24உ கும்-செ<br>25,, ரிஷ-புத | | |
| செ | | | ராகு |
| | குரு | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

ஸ்ரீ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 9 } இரக்தாட்சி௵ வைகாசிமீ கஉ { பகுதி 11
1924௵ மேமீ 14உ

## கடவுள் வணக்கம்.

மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்ட தாக
மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல
மாலாகி நிற்க வறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை
மெணமெனென் றகம்வே றதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்க வறிவார்
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்க வறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு மூளற வறிவார்
ஆறுசம யங்கடொறும் வேறுவே றாகிவிளை
யாடுமுனை யாவ ரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (1)

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணிநின்னைக் கைகுவித்தோ னலனோ
வடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா தென்னுவிப் பற்றே பராபரமே. (2)

வாழாது வாழவுனை வந்தடைந்தோ ரெல்லாரு
மாழாழி யென்னவரு வானோ ரழுக்காற்றோ
டேழா யெனவுலக மேசுமினி காணொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. மாறுபடுதர்க்கம் தொடுக்கவறிவார்=ஒன்றுக்கொன்று நேர்மாறான தர்க்கங்கள் புரிய அறிவார்கள்.

சாண்வயிற்றின்பொருட்டாக=வயிற்றுச்சோற்றுக்காக.

"சாண்வயிற்றின்......மாலாகி நிற்கவறிவார்"—

மனிதனுக்கு வேண்டியது ஆகாரம், உடை முதலியனவே. இவை பூர்வ வினைப்பயன்படி கிடைக்கும் என்று, கிடைத்தமட்டில் திருப்தியடைந்திராமல் மேலும் மேலும் பல போகங்களில் ஆசைவைத்து அவற்றை யனுபவிக்கும் பொருட்டுப் பலவிதச் சூழ்ச்சிகளால் பொருள்தேட விரும்பி மனதிற்குச் சற்றும் ஓய்வில்லாமல் சதா அலைந்துழலும்படி செய்வார்கள் என்பதாம்.

"வேறுபடு வேடங்கள் கொள்ளவறிவார்"—

பிறரை ஏமாற்றிப் பொருள்பறிப்பதற்காக தங்களிடத்தில்லாத யோக்கியதைகளை யுள்ளனபோல் காட்டுவதற்காக பலவகையான வேடங்களை யணிய அறிவார்கள் என்பதாம். உலகில் இக்காலத்தில் இத்தகைய வேடதாரிகளை யதிகமாகக் காணலாம்.

ஒன்றை மெணமெணென்று=வாயால் ஒரு மந்திரத்தை மெணமெணென்று உச்சரித்துக்கொண்டு.

அகம் வேறதாம் வித்தையறிவார்=உள்ளத்தில் வேறுவிதமான எண்ணம் கொண்டிருக்கும் வித்தையை யறிவார்கள்.

வாய் ஈசுவர நாமத்தை மேலுக்குக் கூறிக்கொண்டு, மனதில் இழிவான உலக சிந்தனையோடிருப்பதைத் தாழ்வுபடுத்திக் கூற அதை யொரு வித்தையென்றார்.

சந்தைபோல் மெய்ந்நூல் விரிக்க அறிவார்=சந்தையில் பலபொருள்கள் விற்கப்படுவதுபோல் பல சாத்திரங்களில் கூறியுள்ளவற்றை விவரிக்க அறிவார்கள்.

சிறுபுலிபோற் சிறி=புலியைப்போல் சீற்றங்கொண்டு.

மூச்சைப்பிடித்து விழி செக்கச் சிவக்க அறிவார்=மூச்சை நிறுத்திக் கண்கள் செந்நிறமடையச்செய்ய அறிவார்கள்.

தம் தம் மதத்தையே திரம் என்று=தங்கள் தங்கள் மதமே சரியானதென்று.

தாமதச் செய்கை கொடும் உளற அறிவார்=இழிவான தமோகுணச் செய்கையால் உளறுவார்கள்.

இதனால் "எங்கள் மதம் ஒன்றே உண்மையானது, இதில் மட்டுமே மோக்ஷமுண்டு, இதில் கூறப்பட்டதே மெய்யான தெய்வம், மற்றமதங்களும் அவற்றில் கூறப்பட்ட கடவுளரும் பொய். அம்மதத்தவர்களுக்

கெல்லாம் மோக்ஷமில்லை" என்று கூறுவது சுத்த மூடத்தனமான அஞ்ஞான மதவைராக்கியமென்றும், அது அதமகுணமாகிய தமோகுணச் செயல் என்றும் நன்கு விளங்குவது காண்க,

(மேற்கண்ட தகாத பயனற்றச் செயல்களை யெல்லாம் செய்ய அறிவார்கள். ஆனால்,)

ஆறு சமயங்கள்தொறும் வேறு வேறாகி விளையாடும் உன்னை யாவர் அறிவார்?=(சூரியன் ஒன்றேயாயினும் பலவித நிறங்களையுடைய கண்ணுடிகளில் அந்தந்த நிறமுடையதாய்த் தோன்றுவதுபோல்) எந்தெந்த சமயத்தார் எந்தெந்த விதமாய்க் கருதுகிறார்களோ அவரவர்களுக்கு அந்தந்த விதமான சொரூபமுடைய கடவுளாகவிருந்து (அவரவர் தரத்துக்குத் தக்க பதவியளித்து) திருவிளையாடல் புரியும் உனது உண்மைச் சொரூபத்தை யறியக்கூடியவர் யாருளர்? ஒருவராலும் அறியமுடியாதென்றபடி.

சகல மதங்களாலும் பிரதிபாதிக்கப்படும் கடவுளர் ஒருவரே என்பதும், ஒவ்வொரு மதமும் கடவுளுக்கு வெவ்வேறு விதமான சொரூபத்தைக் கற்பித்துக் கூறினும் உள்ளவர் ஒருவரே யென்பதும், எந்த மதத்தவர் எந்தப் பெயரிட்டு எந்தவிதமாய் அவரைத் துதித்தாலும், (ஆறுகளெல்லாம் வெவ்வேறு இடங்களில் உற்பத்தியாகி வெவ்வேறு திக்குகளிலோடினும், யாவும் கடலையே சேர்வதுபோல்) எல்லா மதத்தினர் துதியும் அந்த ஒரு கடவுளையே சேரும் என்பதும் உண்மையென நாம் அறிய வேண்டும்.

[ஒருவர் "அது ஒப்பத்தக்கதல்ல ஒரு மதம்தான் மெய்யாகவிருக்கும். அதன்படி நடப்பவர்கள்தான் மோக்ஷத்திற்குச் செல்லலாம். எதுபோலெனில் சென்னையிலிருந்து ஒருவன் தூத்துக்குடி சேரவேண்டுமாயின் தெற்குநோக்கிச் சென்றால்தான் செல்வான். வடக்குநோக்கிச் சென்றால் ஒருபோதும் தூத்துக்குடி போய் சேரான்" என்று வரைந்தார். பாபம் அவர் கருதும் கடவுள் ஒரு திக்கில் மட்டும் இருப்பவர்போலும். அவர் திருட்டாந்தம் சற்றும் பொருத்தமானதன்று. ஒரே திக்கிலுள்ள ஊருக்குப் போவதானால் அவர் கூறுவது சரிதான். கடவுள் எல்லா திக்குகளிலும் எங்குமுள்ளவர் என்று அவர் குறுகிய மதிக்குப் புலப்படவில்லை.

வேலூரிலுள்ளவன் கடலைச் சேரவேண்டுமாயின் எந்தத் திக்கு நோக்கிச் சென்றாலும் சேரலாம். காலத்தில் மட்டும் வித்தியாசமேற்படலாம். அவன் கிழக்குநோக்கிச் சென்றால் சீக்கிரம் கடலை யடைவான். மேற்கு நோக்கி நடந்தால் அதைவிடக் காலமாகும். தெற்கு நோக்கி நடந்தால் இன்னும் கொஞ்சம் அதிககாலமாகும். வடக்கு நோக்கிச் சென்றால் நெடுங்காலமாகும். இவ்வளவேயன்றிக் கடலைச் சேராமற் போகான். ஏனெனில் எத்திக்கு செல்லினும் கடலைச் சேர்ந்தே தீரவேண்டும். பூமியே கடல் மத்தியிலுள்ளதாலென்க. இவ்வாறே எம்மதத்திலிரு

தாலும் ஞானமார்க்கத்தைக் கைப்பற்றினல் எவனும் பரம்பொருளையடை யலாம். கடவுளின் உண்மையை யறியும் புண்ணியம் பெற்ற அறிவாளி எவனும் இதைமறுக்கான்.]

கடவுள் எங்கும் நிறைந்துள்ளவரானதால் அவரை யொரு மத வரம் பிற் குட்படுத்திக் கூறுவது அறியாமையேயாகும். அதை வெளியிடவே இப் பாசுரத்தின் முடிவிலும்,

"அண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி ஆனந்தமானபரமே" என்றருளினர்.

2. திடமுறவே......நானலனே=ஈசுவரனே ! அடியேன்மேல் சிற்சத்தி பதியச்செய்து அடியேனை யாட்கொள்வது தமது பாரமேஎன்று உறு தியாய் எண்ணித் தம்மையே நான் சரணுகதி யடைந்தவனல்லவோ.

பாழ்மாயை ஆழியில்=பாழான மாயா சமுத்திரத்தில்.

என் ஆவிப்பற்றே=என் உயிருக்குயிரே.

ஈசுவரனை யடைவதற்கு அவனருளே வேண்டுமாதலின் "என் செய லாலாவது யாதொன்றுமில்லை. எல்லாம் நின்செயலே. அடியேனை மர்க் கட நியாயம்போல் உம்மிடம் சேர்த்துக்கொள்ளவேண்டுவது உமது பாரமே" என்று தற்செயலற்று ஈசுவரன் வயத்தராய் உறுதியான நிலை யில் நிற்கவேண்டும் என்பது கருத்து.

3. வாழாது வாழ=நிலையற்ற உலக வாழ்க்கையை யொழித்து நித்தியா னந்த வாழ்வையடைய.

உனை வந்தடைந்தோர்=உன்னையே சரணுகதியென் றடைந்தோர்.

ஆழாழி என்ன அருளானர்=அகண்ட சொரூபமான நினது அருள் வடி வாகினர்.

ஏழாய்=அறிவிலி:

"ஈசுவரனைச் சரணுகதி யென்றடைந்தவர் அவனது அருள் பெறு வார்கள்" என்பது கருத்து.

---

# ஆனந்தபோதினி

இரக்தாட்சிஸு வைகாசிமீ கூ

## நம் நாட்டிற்கு நமன்கள்.

நேயர்களே! நமன், எமன், காலன், தென்புலத்தான் என்பவை ஒரே பொருளைத் தரும் சொற்களாம். கால நிர்ணயப்படி யாவற்றையும் அழிப்பவனே காலன். அவன் தொழில் வெளிப் பார்வைக்குக் குரூரமானதாகத் தோன்றினும் அந்தரங்கத்தில் கருணையானதே. ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட மலங்களும் ஸ்தூல, சூக்கும, காரண தேகங்களும் அழிக்கப்பட்டபோது ஆன்மா சகல பந்தங்களினின்றும் விடுபட்டு முத்தி வீடடைகிறது. இதனுனே உருத்திரன் குணம் பகிர்தமசு, அந்தர்சத்துவம் என்று கூறப்பட்டது. ஆதலின் மெய்யான நமன் உண்மையில் கெட்டவனல்ல.

ஆனல் நாம் மேல்கூறிய நமன்களோ, நமக்கு, நம் தாய்நாட்டிற்குத் தரித்திரத்தை யுண்டாக்கி, நம்மக்களின் ஆசாரத்தையும் யோக்கியதையையும் கெடுத்துச் சகிக்கொணு இன்னல் விளைவிப்பனவாகும். நாம் அவற்றைக் கூறுவதால் சிலருக்கு நம்மேல் வருத்தமுண்டாகலாம். ஆயினும் அத்தகையோர் சுயநலத்தை மட்டும் கருதுவதை விட்டுத் தாய்நாட்டின் க்ஷேமத்தைச் சற்று கவனித்துச் சிந்திப்பார்களாயின் நாம் கூறுவது உண்மை என்று நன்கு விளங்கும். நாம் பொதுநலங் கருதி வரைவதால் அவர்கள் நம்மேல் வருத்தமடைவது தகுதியன்று. நாமும் உண்மையை யஞ்சாது வெளியிடக் கடமைப்பட்டிருக்கிறோம்.

நாம் கூறும் நமன்களில் இரண்டு வகைகளுண்டு. நாமே, அதாவது நம்மவரே உண்டாக்கிக்கொள்பவை ஒருவகை. அன்னியர் காரணமாகவிருந்து செய்பவை மற்றொருவகை. இவற்றில்

நம்மவரால் ஏற்பட்டவைகளில் (1) ஆட்டக் கொட்டகைகளும் (2) பலகாரக் கடைகளுமே முக்கியமானவை.

1-வது ஆட்டக்கொட்டகைகளில் நாடகங்கள் நடக்கின்றன. முற்காலத்திலிருந்தே நம் நாட்டில் நாடகங்கள் நடந்துகொண்டு தானிருக்கின்றன. ஆனால் அப்போது நடந்தவை உண்மையான நாடகங்களேயாகவும், ஜனங்களுக்குப் பக்தியையும் உயர்ந்த நீதிகளையும் போதிக்கத் தக்கவைகளாகவும் இருந்தன. ஒவ்வொரு விசேஷ காலங்களில் மட்டுமே நாடகம் நடத்தப்படும். அதுவும் பெரும்பாலும் ஒரு இரவேயாகும். புரட்டாசி மாதம் வரும் சனி வாரங்களில் "ஹரிசேவை" செய்வதென்று விஷ்ணுவுக்குப் பூசைசெய்து அனேகர்க்கு அன்னமளித்து அன்றிரவு இரணிய நாடகம் நடத்துவார்கள். திரோபதையம்மன் கோயில் இருக்கும் ஊர்களில் வருடமொருமுறை அந்த அம்மனுக்குத் திருவிழா நடத்தி, 10, 15 நாட்களில் பாரதத்தைப் பிரசங்கம் செய்து முடித்துக் கடைசியில் நெருப்பு மிதிக்கும் விழாவை நடத்துவார்கள். அப்போது பாரதத்தைச் சில இரவுகளில் நாடகமாய் நடிப்பார்கள். இவையன்றி வைகுண்ட ஏகாதசி நாள் இரவு உருக்மாங்கத சரித்திரம் அல்லது வேறு புண்ணிய சரிதையும், சிவராத்திரி முதலிய விரத நாட்களில் நந்தனர் சரிதை, சிறுத்தொண்டர் சரிதை, அரிச்சந்திரன் சரிதை முதலியவைகளும் நாடகமாக நடத்தப் படும்.

இப்போதோ, பெரும்பாலும் ஊருக்கொரு நாடகக்கொட்டாய் காயமாகக் கட்டப்பட்டிருக்கிறது. இச்சென்னையில்மட்டும் அரைடஜனுக்கு அதிகமாகவே யிருக்கின்றன. இவற்றில் நடப்பதோ பெயருக்குத்தான் நாடகம். நடனம் என்ற பாகம் அடியோடு கிடையாது. ஒரு இராமாயணத்தை ஒரே இரவில் (இரவு 9 மணி முதல் 3 மணிக்குள்) நடித்துக் காட்டிவிடுவார்கள். வாலிபர்களுக்கு மனக்கிளர்ச்சியை யளித்து துர்ச்சிந்தனையை யூட்டத் தக்க ஷோக் பாட்டுகளும், டப்பான்களும் ஏராளமாகக் கிடைக்கும். வாலிபர்களும் சிறுவர்களும் கூட வெளியில் அத்தகைய பாட்டுக்களைப் பாடிக்கொண்டிருக்கக் காணலாம். நந்தனார் சரித்திரம் சாவித்திரி சரித்திரம் போன்ற பக்தியையும் கற்பையும் ஊட்டும் நாடகங்கள் இருப்பினும், அவைகளிலும் பொருத்தமில்லாத பாட்டுகளைக் காணலாம்.

மாதர்களும் நாடக பாத்திரங்களாக அமைக்கப்படுவதும், ஜனங்களை நாடகத்திற்கு வரும்படி தூண்ட அவர்கள் தூண்டில் இரைபோல் ஒரு கருவியாகக் கருதப்படுவதும் யாவரும் அறிந்த விஷயம். இவற்றால் நாடகங்கள் பொதுவாய்க் கெட்ட நடக்கைக்கு வழிகாட்டிகளாகவே அமைந்திருக்கின்றன. ஏழைகளும் கடன் வாங்கியேனும் நாடகத்திற்காகப் பணச்செலவு செய்து கஷ்டத்தை யனுபவிக்கிறார்கள். ஆகையால் ஒரு வழியிலல்ல இந் நாடகத்தாலுண்டாகும் தீமைகள்.

2-வது பலகாரக் கடைகள். பசியை யாற்றிக்கொள்ள உதவியாயிருக்கும் காபி கிளப் என்ற நாகரீக மகுடம் புனைந்த பலகாரக் கடைகளால் எங்கேனும் தீங்குண்டாகுமோ என்று சிலர் கருதலாகும். உண்மையனுபவத்தில் இவற்றாலும் சில பெருந்தீமைகளுள.

இவற்றால் முதலாவது ஆசாரம் கெடுகிறது. ஒருவர் பொசித்த பாத்திரத்தில் (அதை நன்றாகச் சுத்திசெய்யாமல்) இன்னொருவர் பொசிக்கலாகாதென்று நம் முன்னோர் ஏற்படுத்தியுள்ள விதி சுகாதாரத்தைப் பொருத்தது. இக்கடைகளில் அது கவனிக்கப் படாததால் பலவித வியாதிகள் பரவுவதற்கு இவைகள் இடமாக விருக்கின்றன.

இரண்டாவது நல்ல இலாபம் சம்பாதிக்கும் நோக்கத்தினாலேயே இக்கடைகள் வைக்கப்படுகின்றன வாதலின், கூடியவரையில் தாழ்ந்த தரமுள்ள பண்டங்களே பலகாரங்கள் செய்வதற்கு உபயோகப்படுத்தப் படுகின்றன. இதனால் வழக்கமாய் அக்கடைகளில் சிற்றுண்டி யருந்துவோர் பலவித வியாதிகளுக் காளாகின்றனர்.

மூன்றாவது மிகக் குறைந்த வருமானமுடைய ஏழைகளாகிய நம் நாட்டாருக்கு இவற்றால் அனாவசியமான வீண்செலவே நேர்கிறது. ஒரு தனி ஆள் காலைச் சிற்றுண்டிக்காக ஐந்தணா ஆறணா கூடச் செலவு செய்கிறான். அதில் பாதியை வீட்டில் செலவழித்தால் குடும்பத்திலுள்ள அனைவரும் பசியாறலாகும்.

நான்காவது நம் நாட்டுச் சீதோஷ்ணத்தின்படி நமது சுகத்திற்குச் சற்றும் ஒவ்வாத காபி, தேயிலை, கோகோ முதலியவைகளே பானத்திற்கு இக்கடைகளில் அளிக்கப்படுகின்றன. இப் பானங்களால் உண்டாகும் கெடுதிகளைப்பற்றி பல மேல்நாட்டு வைத்தியர்களும் கூடப் பன்முறை பத்திரிகைகளில் எழுதியிருக்

கிறார்கள். இன்னும் எழுதிக்கொண்டுமிருக்கிறார்கள். அவற்றைக் கவனித்து தீயவற்றை நீக்குவதற்குப் போதுமான அறிவுதான் நம்மவரிடம் காணவில்லை.

ஆனால் நாடகங்களாலும் இச்சிற்றுண்டிக் கடைகளாலும் இலாபம் பெறுவோர் நம்மவர்தானே, அவற்றில் செலவழிக்கும் பணம் நம்மைவிட்டு அன்னியருக்குச் செல்லவில்லையே யென்று கேட்கலாம். அது உண்மையேயாயினும், பல்லாயிரவர் வீண் விரையம் செய்து அதோடு வியாதி முதலிய துன்பங்களை யடையும் வழியில் ஒரு சிலர் இலாபம் பெறுவது எங்கேனும் தகுதியான செயலாகுமோ? அது தேசாபிமானந்தா னாகுமோ? ஊரார்க் குடியெல்லாம் கெடுத்து ஒருகுடி வாழ்வது நீதியாகுமோ? இந்த விஷயங்களை யெல்லாம் விவரித்தெழுத இங்கு இடம் போதாதென்று அஞ்சி விடுத்தோம்.

இனி, மேல்நாட்டாரால் நமக்கு ஏற்பட்ட நமன்கள் எவை யெனில், 1. குடி, 2. பயாஸ்கோப் என்ற படக்காட்சி, 3. இங்கு உற்பத்தியாகும் பொருள்கள் வெளிநாடுகளுக்குச் செல்லல், 4. மேல்நாடுகளிலிருந்து நமக்கு அனாவசியமான வீண்செலவையுண்டாக்கி நம் வறுமையை யதிகரிக்கச்செய்யும் தளுக்கான பொருள்கள் இங்கு கொண்டுவந்து விற்கப்படுவது முதலியவைகளே.

1-வது குடி—இதில் நாட்டுச்சாராயம், கள் முதலிய லாகிரி வஸ்துக்கள் போதாவென்று குடிப்பதில் இணையற்ற பிரசித்தி பெற்ற மேல்நாடுகளிலிருந்து பல குடிவகைகள் இங்கு கொண்டுவந்து விற்கப்படுகின்றன. நாட்டுச் சாராயத்தைவிட அவை பன்மடங்கு அதிக விலையுள்ளவை. நம் நாட்டார், அதிலும் கொஞ்சம் ஆங்கிலம் படித்தவர்கள், நம் முன்னோர் ஆசாரம், நடையுடை பாவனை, நம் தாய்ப்பாஷை யாவற்றையும் அநாகரீகமானவையாகவும் தாழ்வாகவும் கருதிவிட்டு, மேல்நாட்டு ஆசாரம் முதலியவற்றை உயர்வாகக் கொள்வதுபோல்,குடியிலும் "சட்-நான் இந்த கன்ட்ரி லிக்கர் யூஸ்பண்றதேயில்லே ஸார்-இது ஆபாசம். பிஸ்கட் பிராண்டி, எக்ஷா நம்பர் ஒன், அல்லது உஸ்கி இவையே சாப்பிடுவது வழக்கம்" என்று டம்பமாய்க் கூறும் பெரிய மனிதர் அனேகர் நம் நாட்டாரில் இருக்கிறார்கள்.

துரைத்தனத்தார் இக்குடிவகைகளுக்கு அதிக வரி விதித்திருக்கிறார்கள். மிகச் சொல்ப செலவில் அதிக பணம் வசூலா

வது இந்த வகையிலேயே என்று கூறலாம். இவைகளின் அசல் விலை அதாவது பட்டுப்படிச் செலவு மிகக் கொஞ்சமே. வரியிலும் ஏலத்தில் நம்மவரே போட்டி போட்டு பணத்தொகையை யுயர்த்துவதாலுமே விலையதிகமாகிறது. ஒரேயொரு திருட்டாந்தம் மட்டும் கூறுகிறோம். 48 திரான்கொண்ட ஒரு காலன் சாராயம் (30 புள்ளி காரமுள்ளது) உற்பத்தி செய்ய நேரிடும் செலவு 1 ரூபா முதல் 1-4-0-க்குள் ஆகும் (1890ஞு இதன் பட்டுபடி 10 அணுவாக விருந்தது). வரியாலும் ஏலத்தொகையாலுமே அதே காலன் 12 ரூபாய்க்கு அதிகமாகக் கூட விற்கப்படுகிறது. குடியைக் குறைப்பதற்கே வரி அதிகம் விதிப்பதாகக் கூறப்படுகிறது. அனுபவத்தில் குடிகள் முழுகுவதுமே யதிகமாகக் கெட்டழிறது. இதனுலுண்டாகும் கெடுதி மிக்க கோரமானது. விரிக்கிற் பெருகும்.

2-வது பயாஸ்கோப்.—இதைப் பார்ப்பதால் கண்ணுக்குக் கெடுதி முதற்பலன். இரண்டாவது, மேல்நாட்டு அனேக ஆபாச வழக்கங்களையும், ஆசாரங்களையும், தந்திரமாய்க் களவு கொலை முதலியவற்றைச் செய்வதையும் நம்மவர் பிரத்தியட்சத்தில் கண்டு கற்றுக்கொள்வதுபோல் ஆகிறது. இக்காக்ஷிகள் தினம் இரு முறை காட்டப்படுகின்றன. கண்காட்சி மனதைக் கவர்வதால் ஏழைகளும் கடன் வாங்கியேனும் போய்ப் பார்க்கிறார்கள்.

நாடகம், பயாஸ்கோப் முதலியவற்றைச் சனங்கள் போய்ப் பார்க்காமலிருக்கிறதுதானே என்று கூறலாம். அப்படி கேட்பது மனித சுபாவத்தையும் மனதின் சுபாவத்தையும் அறியாக் குறையாகும். மனம் இந்திரியங்களின் வாயிலாக விஷய சுகங்களை யனுபவிப்பதில் வாஞ்சையுள்ளது. அதன் முக்கியத் தொழிலே யது. இந்திரியங்களிலும் கண், செவி இவற்றால் நல்ல காட்சிகளைக் காண்பதும், இனிய சத்தங்களைக் கேட்பதும் அதற்கு இயற்கையாயமைந்த விருப்பம். அப்படிச் செல்லவொட்டாது மனதை யடக்குவது எல்லாராலுமாகிற காரியமல்ல. ஒரு முறை இரு முறைகள் கண்டும் கேட்டும் ஆனபின்கூடச் சலிப்பின்றிச் சதா அவ்வழிகளில் செல்பவர்கள் அடியோடு செல்லாதிருப்பது யாங்ஙனம்?

3-வது நம் நாட்டிலுற்பத்தியாகும் விளைபொருள்களை அன்னிய நாடுகளுக்கு அனுப்புவது.—நமக்குப் போதுமான உணவிற்

குதவும் பொருள்களையும் உடை முதலியவற்றிற் குதவும் பருத்தி முதலியவைகளையும் வைத்துக்கொண்டு மிச்சத்தை அன்னியருக்கு விற்றால் குற்றமில்லை. நம்மவரோ அப்படிச் செய்யாமல் கையில் ரொக்கமாகப் பணம் வருவதைக் கருதி யாவற்றையும் விற்ப தோடு, அப்படி விலையாகும் பொருள்களையே பயிரிடுகிறார்கள். இதனால் நம் நாட்டிற்கு விளையும் தீங்கை யுணர்கிறார்களில்லை. இதைப்பற்றி விரிவாய்க் கடந்த சஞ்சிகையில் "தேச க்ஷேமம்" என்ற தலையங்கத்தின் கீழ்க் கூறியிருக்கிறோம்.

4-வது இறக்குமதி.—அதாவது மேல்நாடுகளிலிருந்து இங்கு கொண்டுவரப்படும் சாமான்கள்.

இவற்றில் நமக்கு அநாவசியமானவைகளும், வீண் செலவை யுண்டாக்கி நமது ஆசாரத்தைக் கெடுத்து, மேல்நாட்டுத் தகாத நாகரீகப் பகட்டில் நம்மைச் சிக்கச்செய்து, நமது வறுமையை வளர்த்துப் பல வழிகளிலும் துன்பங்களை யுண்டாக்கும் பொருள் கள் அனேகம் இருக்கின்றன. நொறுக்கி எடுத்தால் காலணா பொறாத தகரம், இரும்பு, பித்தளை முதலியவற்றால் கண்ணுக்குப் பகட்டாய்ச் செய்யப்பட்ட பொருள்கள் அரை ரூபா ஒரு ரூபா இரண்டு ரூபாய்க்கு விற்கப்படுகின்றன. அவற்றில் ஓர் பாகம் கெட்டால் அவை உடனே குப்பைமேடுபோய்ச் சேரவேண்டி யதே. திருஷ்டாந்தமாய் விளக்கெரிப்பதை யெடுத்துக்கொள் வோம்.

முன்பு மண் அகலில் முத்துக்கொட்டை எண்ணெய் விட்டுத் தீபமேற்றிக்கொண்டிருந்தோம். அந்த எண்ணெய்க்கு விளக் கெண்ணெய் என்றே பெயர். அது உள்ளுக்கு அருந்தத் தகுதி யுடையது. ஒளஷதங்கள் செய்யப்படுவது, கண்ணுக்குக் குளிர்ச் சியளிப்பது, இலக்ஷ்மீகரமானது. இப்போது உபயோகப்படுத் தும் மண்ணெண்ணெய், வெளிச்சம் அதிகம் கொடுக்கிறது என்ற ஒரு விசேடம் தவிர மற்றபடி அதனிடமுள்ள குணங்கள் தீய வையே. கண்ணைக் கெடுப்பது அதன் முதல் குணம். அதனாலுண் டாகும் புகை சுவாசத்தில் கலந்து பலவிதத் தீங்குகளை விளைவிக் கும். இதைப்பற்றி விரித்தெழுத இடமில்லை. இதற்காக வேண்டிய சிம்னி முதலியவை அதிகவிலை. அவை கொஞ்சம் கெட்டால் மறு படியும் பயன்படா.

இந்த விஷயங்களெல்லாம் மேல்நாட்டாரால் ஏற்பட்டவை

யெனினும், அவர்கள் தங்கள் தாய்நாட்டின் க்ஷேமாபி விர்த்தியைக் கருதி இக்காரியங்களைச் செய்வதால், நம் நாட்டிற்கு இவற்றால் கெடுதியுண்டாவதைத் தங்கள் குற்றமாகக் கருதவில்லை.

இதே அறிவு நம்மவர்க்கு ஏன் உதிக்கலாகாது? சுயநலம் பொது நலம் இரண்டிற்கும் தீங்கை விளைவிக்கும் காரியங்களை நாம் ஏன் செய்யாமலிருக்கலாகாது? அவற்றைச் செய்யும்படி நம்மை எவரும் கட்டாயப்படுத்த முடியாதன்றோ. நம்முன்னோரைப்போல் உடையணிவதை விட்டு, வெள்ளையரைக்கண்டு அவர்களைப்போல் கால்வேடம் அரை வேடம் அணியும்படி எந்த மூடர் நமக்குக் கற்பித்தார்கள்? நாம் கீழிருந்து இடுப்புவரை இந்தியவேடமும், இடுப்பிலிருந்து கழுத்துவரை வெள்ளையர் வேடமும், சிரசில் வேறொரு வேடமும் (நரசிங்க மூர்த்திபோல்*) அணிவதைக் கண்டு அவர்கள் கேலி செய்வது நமக்கேன் உறுத்தவில்லை? நமது முன்னோர் ஆசாரம், தாய்பாஷை முதலியவற்றை நாமே தாழ்வுபடுத்தி, அன்னியர் ஆசாரம், நாகரீகம் முதலியவற்றைப் புகழ்ந்து அவற்றைப் பின்பற்றத் தொடங்குவதால், நமது உரோஷம், வெட்கம், மானம் இவைகள்கூட நம்மை இகழ்ந்து நம்மைவிட்டகன்றுபோமாறு பாரதமாதா சபித்துவிட்டாள்போலும். நம்மைப்போல் உலகில் வேறெந்த நாட்டாரும் நடந்துகொள்ளமாட்டார்கள். நமது கெடுதிக்கு நாமே முக்கிய காரணமாகவிருக்கிறோம். "தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி என் செய்ய?" என்ற பழமொழி நமக்கே பொருந்தும். ஆண்டவன் றான் நமக்கு நல்லறிவளிக்கவேண்டும். "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்"

ஓம்தத்ஸத்.

---

* இரணியன் தேவராலும், மனிதராலும், மிருகங்களாலும் இரவிலும், பகலிலும், எந்த ஆயுதத்தாலும் மரணமில்லாத வரம் பெற்றவனாதலின் பகவான் பாதம்முதல் இடுப்புவரை நர சொரூபமும், இடுப்புமுதல் கழுத்துவரை தேவ சொரூபமும், சிரசு மிருக சொரூபமுமாகிய உருவம் எடுத்து சூரியாஸ்தமனத்திற்கும், தீபம் வைக்கும் காலத்திற்கும் இடையிலுள்ள வேளையில், கைவிரல் நகத்தால் வயிற்றைக் கிழித்து அவனைச் சங்கரித்தார் என்று கூறப்பட்டிருக்கிறது.

## நாலடியார் வசனம்.

### கடவுள் வாழ்த்து.

வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்
கானிலந் தோயாக் கடவுளை—யானிலம்
சென்னியுற வணங்கிச் சேர்தும் எம்முள்ளத்து
முன்னியவை முடிக வென்று.

### 1-ம் அதிகாரம் - செல்வ நிலையாமை.

மனைவியானவள் சமீபத்தில் உட்கார்ந்து அறுசுவையோடு கூடிய உணவை ஊட்ட முதற்கவளம் உண்டு (இது நன்றாயில்லை இது நன்றாயில்லை யென்று) மறுகவளத்தை நீக்கி, வெகு கஷ்டத்தோடு உண்ட செல்வந்தர்களும், மிக்க ஏழைகளாகி மற்றவர்களிடஞ் சென்று ‘ அய்யா! அம்மா ! பசி பிராணன் போகிறது, சிறிது கூழ் கொடுங்கள் ’ என்று பிச்சையெடுப்பார்கள். ஆகையால் செல்வமானது ஒரு பொருளாக வைத்து மதிக்குந் தன்மையுடையதல்ல. (1)

செல்வமானது நடு நிலைமை பொருந்த ஒருவரிடத்தும் நிலைத்திராமல், வண்டிச்சக்கரம்போல(ப் போவதும் வருவதுமாகச்) சுழன்றுகொண்டேயிருக்கும். ஆதலால் (ஓ மனிதனே !) நீ கஷ்டப்பட்டு நல்ல வழியில் சம்பாதித்த பொருள் உன்னிடமிருக்கும்பொழுதே பலர்க்கு மிட்டு நீயும் உண்ணக்கடவாய். (2)

யானையின் முதுகின்மேல் வெகு அலங்காரத்துடன் வீற்றிருந்து வெண்கொற்றக் குடையின் நிழலில் சதுரங்க சேனைக்குத் தலைவராய்ச் சென்றுகொண்டிருந்த ராஜாக்களும், (சுக போகத்துக்குக் காரணமான நல்வினை நீங்க) தீவினையானது தோன்றிக் கெடுத்தலால், நிலைமை வேறுபட்டுத் தங்கள் மனைவியரைப் பகைவரபகரித்துக் கொள்ளக் கேடடைவார்கள். (3)

(ஓ மானுடா !) உன் ஆயுளின் நாட்கள் கழிந்தன. மிக்க கோபத்தோடு (உன்னைப் பிடித்துச்செல்ல) எமன் வந்துவிட்டான் வந்துவிட்டான். ஆதலால் உன்னிடத்திலுள்ளவைகளாகிய உன் பொருள்கள் நிலைபெற்றிருக்கமாட்டா என்றறிந்து, பொருந்திய ஒருவகைத் தருமத்தைச் செய்வதாயிருந்தால் விரைவில் செய். (4)

ஏதாவது ஒரு பொருள் தம்மிடத்திலிருக்கப்பெற்றால் அதைப் பின்னுக்காகுமென்று பிடித்திராமல் உடனே தருமஞ் செய்தவர்கள், தன் தொழிலில் தவறுதலில்லாத கொடிய எமன் பாசத்தாற் பிணித்துக் கூட்டிச்செல்லும் பாலைவனத்தின் வழியினின்றும் நீங்கிப் பிழைத்துப்போவார்கள். (5)

(இவ்வளவென்ற) தமக்களவு செய்துகொள்ள நாள்கள் தம்மளவைக்

கடவா. எமனைத் தப்பி நீங்கி அவன் குறிப்பைக் கடந்து பிழைத்தவர்கள் இவ்வுலகில் ஒருவருமில்லை. நாளையதினமே 'தழீஇந் தழீஇம்' என்னும் ஓசையுடனே பிணப்பறை அடிக்கப்படும். ஆகையால் மிகுந்த பொருளைத் தேடிவைத்திருப்பவர்களே! தருமஞ் செய்யுங்கள். (6)

(ஓ மனிதர்களே!) எமனானவன் சூரியனை அளவு கருவியாகக்கொண்டு உங்கள் ஆயுள்காலத்தை உண்டுகொண்டேயிருக்கிறான். ஆகையால் யாவரும் மிக்க அருமையாகிய மனிதப்பிறவி வீணாகாதபடி பிறந்தும் பிறவாமல் மோக்ஷத்திலிருப்பவர்களைப்போல மிகுந்த தருமங்களைச் செய்து கிருபையுடையவர்களாகுங்கள். (7)

நாம் செல்வமுடையவர்களென் றெண்ணிக்கொண்டு, தாம் செல்லுமிடமாகிய மோக்ஷ நரகங்களைப்பற்றியும், மறுமையைப்பற்றியும் சிறிதும் நினையாத மூடர்களுடைய செல்வமானது, இராக்காலத்தில் கரியமேகம் வெளிப்படுத்தும் மின்னலைப்போல் தோன்றி உடனே இருந்த இடமும் தோன்றாமல் முழுதும் அழிந்துவிடும். (8)

ஒருவன் (மிகுந்த செல்வத்தைப் பெற்றிருந்தும்) தானும் உண்ணமாட்டான்; மதிப்பை நிலைநிறுத்தமாட்டான்; மேம்பட்ட கீர்த்தியைத் தேடமாட்டான்; தான தருமங்களைச் செய்யமாட்டான்; (இவ்வாறு எவ்வகையிலும் உபயோகப்படுத்தாமல்) வீணாக அந்தப்பொருளைப் பத்திரப்படுத்திக் காவல் செய்திருப்பானானால், (எந்த விதத்திலும் பிரயோஜனப்படாத பொருள் இருந்தும் இல்லாததுபோலவேயாகும். (ஆகையால்) அவன் 'ஐயோ பாவம்! அவன் பொருளில்லாதவனே' என்று, எல்லோராலும் எண்ணப்படுவான். (9)

ஆகாயத்தை யளாவியுள்ள மலைகள் பொருந்திய நாட்டையுடைய பாண்டியனே! நல்ல உடை உடுக்காமலும், நல்ல உணவு உண்ணாமலும், தம்முடலை வருத்தியும், கெடுதலில்லாத நல்ல தருமங்களைச் செய்யாதவர்களாயும், (இவ்வாறு யாதுங்) கொடாமல் திரவியத்தைத் தேடி வைத்தவர்கள் அச்செல்வத்தை வீணில் இழப்பார்கள். புஷ்பங்களிலுள்ள தேனை ஆராய்ந்து சம்பாதித்து (தாமும் உண்ணாமல் பிறர்க்கும் கொடுக்காமல்) சேர்த்துவைக்கும் தேனீக்களே இதற்குச் சாட்சியாம். (10)

## 2-ம் அதிகாரம் - இளமைநிலையாமை.

நல்ல விவேகிகள் (இளமைப் பருவம் நீர்க்குமிழிபோன்றதாகலின், விரைவில் நீங்கி யாதொன்றும் செய்யமுடியாத) நரையோடுகூடிய மூப்புப் பருவம் வந்துவிடுமென்றெண்ணி, இளமைப் பருவத்திலேதானே இவ்வாழ்க்கையை விட்டு நீங்கினார்கள். குற்றமுள்ளதும், அநித்தியமானதுமாகிய இளமையை இச்சித்தவர்கள் தடியை ஊன்றிக்கொண்டு துன்பத்துடன் எழுந்திருப்பார்கள். (1)

(மரணகாலத்தில்) உறவின் முறையாகிய பாசங்களும் அற்றுப்போயின. (உபயோக முள்ளபொழுது மிக்க அன்புவைத்திருந்த) மாதர்களும்

அன்பில் குறைந்தார்கள். அன்பாகிய பந்தங்களும் அவிழ்ந்தன. ஓர் கப்பலானது கடலில் மூழ்குங் காலத்துண்டாவது போன்ற அழுகுரல் தோன்றிவிட்டது. ஆதலின் வாழ்க்கையினால் என்னபயன் உண்டாகும்? (இது விஷயத்தைச் சற்று) உனக்குள்ளாகவே ஆலோசித்துப்பார். (2)

சொற்கள் தளர்ந்து, கோலை ஊன்றிக்கொண்டு, நடை தள்ளாடி, பற்கள் உதிர்ந்து, உடலானது பிறரால் பழிக்கப்படுமளவும் இவ்வாழ்க்கையிற் பொருந்தி, ஆசையின் வழியே செல்லும் தன்மை யுடையவர்களுக்கு (மறுமைக்குப் பாதுகாப்பாகும்) கோட்டையாகிய நன்மார்க்கத்திற்குச்-செல்லும் வழி இல்லையாகும். (3)

தன் தாயின் கைக்கோலானது தன் கைக்கோலான காலத்தில், சரீரம் வளைந்து, தளர்ந்து, தலை நடுக்கங்கொண்டு, அத்தடியை ஊன்றிக்கொண்டிருந்து, விழுந்து சாகுந்தன்மையுடைய இப்பெண்ணிடத்திலும் உறுதியில்லாத காம மயக்கங்கொண்டிருக்கும் மாந்தருக்கு எப்போதும் துன்பமே உண்டாகும். (4)

என் தாயானவள் என்னை யிங்குப் பெற்றுவைத்துவிட்டுத் தனக்கு ஒரு தாயைத் தேடிக்கொண்டு போய்விட்டாள். அவளுடைய தாயும் அவ்வாறே சென்றாள். ஆகையால் இவ்வுலகமானது தாயைத் தாயைத் தேடிச் செல்லும் ஏழைமையுடையது. (5)

வெறி யாடல்களைச் செய்யும் பலிக்களத்தில், பூசாரியானவன் கையிற் கொண்டிருக்கின்ற தளிர் நிறைந்த வாசனை பொருந்திய மாலை தன்னெதிரில் அசைந்து தொங்கக்கண்டு, பலியின்பொருட்டு நிறுத்தப்பட்டிருக்கும் ஆடானது அதை உணவாக உண்டு இன்பம் அடைந்ததுபோன்ற, நிலையில்லா (இளமையாலுண்டாகும்) மகிழ்ச்சி அறிவுடையவர்களிடத்தில் இல்லை. (6)

இளமையானது குளிர்ச்சிபொருந்திய சோலையிலிருக்கும் பலனைத் தரும் எல்லா மரங்களிலும் பழங்கள் உதிர்ந்துபோவது போன்றது. ஆதலால் மிகப் பெரிய வேல்போன்ற அழகிய கண்களை யுடையவளென்று இப்பெண்ணை இச்சியாமலிருங்கள். பின்பு இப்பெண்ணும் உடல் வளையப்பெற்று கைக்கோலையே கண்ணாக வுடையவளாவாள். (7)

('ஐயா!) உமக்கு எவ்வளவு வயதாயிற்று; பற்களின் பலம் எப்படியிருக்கிறது. மிருதுவும் கடினமுமாக இருக்கும் இருவகைப் பதார்த்தங்களையும் புசித்தீரோ?' என்று வரிசையாக உங்கள் உள்ளம் பிறரால் ஆராய்ச்சி செய்யப்படுதலால், பெரியோர்கள் உடலின் தன்மையைப் பொருளாக நினையார்கள். (8)

பெருங் காற்றடிக்கும்பொழுது முற்றியிருந்த பழங்கள் மாத்திரமன்றி, நல்ல காய்களு முதிர்ந்துபோதலுமுண்டு. (வயது முதிர்ந்தவர்கள் மாத்திரமல்ல இளைஞரும் கொள்ளைநோய், பெருவாரி முதலியன வந்

தால் மாண்டுபோதலுமுண்டு.) ஆகையால் 'நாம் சிறுவர்கள்; தருமகாரியங்களைப் பின்னால் பார்த்துக்கொள்ளலாம்' என்று நினையாமல், கையில் பொருளிருக்கும்பொழுதே ஒளிக்காமல் தருமஞ் செய்யுங்கள். (9)

ஆள்களைத் தேடிக்கொண்டே திரியும் தயையில்லாத எமன் இருக்கின்றானாதலால், (மறுமைக்குப் பயன்படும் தருமமாகிய) கட்டுச்சோற்றை இளமையிலேயே தேடிக்கொண்டு பிழையுங்கள். கருப்பத்திலுள்ள சிசுவைப் பதுங்கச்செய்து (பத்துமாதம் சுமந்த) தாயானவள் அலரும்படி பிள்ளையைக் கொண்டுபோவதால், அத்தகைய எமனுடைய வஞ்சகத்தைத் திடமா யறிந்துகொள்ளுதல் நல்லது. (தொடரும்) (10)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## இளமையும் முதுமையும்.

ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் பின்வருமாறு ஒரு புலவர் கவற்சியுற்றார். "மண்ணினாற் சமைத்த பாவைக்குக் கொய்யப்பட்ட பூவைச்சூடி, குளத்தில் நீராடுகின்ற சிறுமிகளுடன் கைகோத்து விளையாடி, கள்ள மென்பதின்னதெனவறியாத இளையர் கூட்டத்தோடு கரையின்கண் உயர்ந்து வளர்ந்த மருதமரத்தில் நீர்மேற்கவிந்து நீண்டு படிந்துள்ள கிளையின்மீதேறி, கரைநின்று காண்போர் வியக்கும்படி அலைகள் சிதற நீரில் துடுமெனப் பாய்ந்து, உள் மூழ்கிக் குளித்து மணலெடுத்து வந்த அறியாப்பருவம் எங்கு சென்றது? பூண்கட்டிய பிடியை யுடைய பெரிய கோலை யூன்றித் தலை நடுக்கங்கொண்டு இருமல் இடை இடையே நெருங்கப்பெற்ற சொற்களையுடைய முதுமைப் பருவத்தைக்கொண்ட எம்மிடத்தினின்றும் அவ்விளமைப்பருவம் எங்கு நீங்கியது? அதை நினைத்தால் இப்பொழுது மனமிரங்குகின்றது." யார்தான் இங்ஙனம் வருந்தார்? இளமை திரும்பி வருவதில்லை. சாதல் உறுதி; காலம் விரைந்து நடக்கின்றது; அதைக் கட்டுவாராருமில்லை. ஆதலின் எண்ணமும் ஏக்கமுமில்லாத இளமையின் அருமையை எவரும் நினைந்து இரங்குகின்றனர். மேலும் கையிலிருப்பதன் அருமையை மறந்து, இழந்துவிட்டதன் பெருமையை எண்ணிக் கவலையுறுவது மக்கள் இயற்கை. பிழைத்திருக்கும் பிள்ளைகளைவிட இறந்துபோன மைந்தர் சிறந்தவர்களென்று பேசும் தாய்தந்தையர் பலர். இதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

நிற்க, உயிருள்ள ஒவ்வொன்றும் உண்டு வளர்ந்து பெருகி யழிய வேண்டும். வளர்ச்சியின்றி உயிரில்லை. தவழுங் குழந்தை எழுந்து நடக்க விரும்புகிறது; சிறு பையன் தன்னினும் பெரியவன் செய்யும் வேலைகளை நினைந்து தானும் அவ்விதம் செய்ய அவாவுகிறான். இப்படியே ஏனையோரும். இந்த வளர்ச்சி ஏற ஏற மாறுதல்களுந் தோன்றுகின்றன. மாறுத

வின்றி வளர்ச்சியில்லை. ஒரு தண்டுடன் நாலைந்து இலைகளுள்ள செடி நாளாவட்டத்தில் கிளைகள் விட்டுப் பச்சை மாறிப் பூவெடுக்கத் தலைப்படுகிறது. இந்த மாறுதல் அல்லது வேறுபாடு திடீரென்றுண்டாகாமல் படிப் படியாய் நாம் அறியாவண்ணம் தோன்றுகிறது. செடி எப்பொழுது மாமாயிற்றென்றாவது ஒரு மகன் எப்பொழுது கிழவனானானென்றாவது நாம் சொல்ல முடியாது. பருவத்திற்கேற்ற வேறுபாட்டால் ஒவ்வொன்றுந் தான் பூமியில் அழிந்து போகாமல் மறுபடியும் பிறப்பதற்காக விதை, கொட்டை, கன்று முதலியவற்றைத் தந்து இறுதியில் மாய்கிறது.

அறியாத பச்சைக்குழந்தையிலிருந்து பக்குவமாகித் திரண்ட மனிதன் பிறக்கிறான். தேகத்தில் வளர்ச்சி யிருக்குமாறே மனத்திலும் அவனுக்குத் தேர்ச்சியிருக்கிறது. மனத்தேர்ச்சியின்றி உடல் வளர்ச்சி மாத்திரமுள்ளவனை மனிதனென்று சொல்லமுடியாது. ஐந்து வயதிலுள்ள எண்ணங்களை ஐம்பது வயதிலும் வைத்துக்கொண்டிருக்கும் ஒருவன் பேதையென்பதில் ஐயமில்லை. இத்தகைய மனிதர் அதிகமாயிருப்பதே நம் நாட்டிற்குப் பெரியகேடு. தாய்மார் சிறு பிள்ளைகளை நோக்கி "காலையிலெழுந்து கடவுளைத் தொழவேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் நன்றாயிருப்பீர்கள்; உங்களுக்கு அறிவுண்டாகும்; நலம்பெற்று வாழ்வீர்கள்" என்றால் அது நல்லதுதான்; ஆனால் வளர்ந்து தேறிய ஒருவன் 'தனக்கு ஊதியங்கிடைக்கும், நினைத்தகாரியங் கைகூடும்; தன் மக்கள் மனிதர்கள் சுகமடைவார்கள்' என்ற கருத்துடன் மாத்திரம் இறைவனைப் பணிவானாகில் அவன் குழந்தைப்பருவத்தைக் கடவாத குருடனேயன்றி வேறென்ன? உலகில் இலாபமடைய வேண்டுமென்ற நோக்கத்துடன் ஒருவன் மற்றொரு மனிதனைக் கும்பிட்டுத் திரிந்தால் அதைப்பார்த்து நாம் கைகொட்டிச் சிரிப்போமே. தன் சுய நன்மையின் பொருட்டு எல்லாம் வல்ல கடவுளைத் தொழும் மனிதன் அவனினும் அதிகமாய் இகழப்படவேண்டுமன்றோ? கூலிக்கு ஆண்டவனை வணங்குவதைவிடக் கேவலமானதொன்றுண்டோ? இறைவனை ஒரு பெரிய வியாபாரியாக்கி "நான் உனக்குத் தேங்காயும் பழமும் நிறையத் தருகிறேன்; நீ எனக்குப் பொருளும் சொத்துங்கொடு" என்பதைவிட இழிவு வேறில்லை. என்றாலும் எல்லா மதத்தினர்க்குள்ளும் இவ்வாறு இறைவனை வேண்டிக்கொள்பவர்களே மிகுந்திருக்கின்றனர். இதுதான் அவனியில் உண்மையும் செம்மையும் செழிக்காதிருப்பதற்குக் காரணம். எல்லா மார்க்கங்களிலுங் கூறப்பட்டிருக்கிறபடி ஒவ்வொருவனுந் தன் நலத்தைப் பெரிதென்று கருதாது கூடியவரையில் பிறர்நலத்தை எண்ணி நடந்துகொண்டால் பூமியிலும் நாம் ஈசனுடைய பெரிய நோக்கங் கைகூடுமாறு உதவி புரிகிறவர்களா யிருப்போம். ஆனதால் ஒப்பற்ற இறைவனைக் குறித்து நாம் சரியான எண்ணமுடையவர்களா யிருக்கவேண்டியது அவசியமாயிருக்கிறது. அவனியிலுள்ளவர்கள் அனைவரும் நல்லவர்களாகி முழுமுதற் கடவுளினடி சேரவேண்டு

மென்று பிரார்த்தித்து அதன்படி நடப்பவர் வெகு சிலர். இச்சிலர் பல்ரா ஞல் எல்லாம் நன்ருயிருக்கும்.

நிற்க, சிறு வயதிலுள்ள எண்ணங்கள் முழு வயதில் அனுபவத்தால் முதிர்ச்சியடையவேண்டும். உண்மையில் இப்படியே நடக்கிறது. விவசாயத்திலும் வியாபாரத்திலும் நாம் ஒவ்வொருநாளும் புதியவற்றை யறிந்து நம் மனத்தை விசாலப்படுத்திக்கொள்ளுகிருேம். புகை வண்டியைப் பற்றி ஐந்து பிராயத்தில் நமக்கிருக்கும் நினைவு ஐம்பது வயதிலிருப்பதில்லை. உள்நாட்டில் சிறு கிராமத்திலிருந்த பையனெருவன் தன்னுடைய ஊரில் மாத்திரம் சூரியனும் சந்திரனும் பிரகாசித்தனவென்றெண்ணினன். மற்ற ஊர்களிலிருந்து வருகிறவர்களும் சூரியனையும் சந்திரனையும்பற்றிப் பேசியபொழுது ஒவ்வொரு ஊருக்கும் வெவ்வேறு சூரிய சந்திரர்களிருக்குமென நினைத்தான். ஞாலமுழுதும் ஒரே பரிதியும் ஒரே மதியும் ஒளி தருகின்றனவென்று அவன் அறிந்தபோது அவனடைந்த ஆச்சரியத்திற் களவில்லை. சுயம்புவாகிய பரஞ்சோதியைப்பற்றியும் முதலில் நாம் அது நம்முடைய ஊரிலுள்ளது; நம்மைப்போல் உண்டு உடுப்பது என்று கருதுகிருேம். ஆனல், வாழ்நாள் முழுவதும் இப்படி நினைத்தால் நாம் அறிவீனர்களாவோம். மற்ற விஷயங்களில் அதிக புத்திசாலிகளா யிருக்கிற நாம், தெய்வம் என்ற ஒரு விஷயத்தில் மாத்திரம் அறிவு குன்றிப் போகிருேம். இதென்ன விபரீதம்! ஒருவன் தன்னைச் சுற்றிலுமிருப்பவரை நன்ருயறிந்து தன் தந்தையைப்பற்றி மாத்திரம் தனக்கு ஒன்றுந் தெரியாதென்று புகல்வானுகில் நாம் நகைப்போமே. நமது தந்தையாகிய ஈசனின் அருள் நம் ஒவ்வொருவருக்கும் சொந்தமாயிருக்க நாம் நம்முடைய அன்பை ஐயன்மீதுசெலுத்திச் செல்வமுடையவர்களாக முயலாமல், அறிவில் ஏழைகளாகி ஏன் இடர்ப்படவேண்டும்? தேகத்திற் கடுத்தவற்றில் முதிர்ச்சியடைந்திருக்கும் நாம், ஆன்மாவைப்பற்றியவைகளில் ஏன் குழந்தைகளா யிருக்கவேண்டும். அறுபது எழுபது வயதாகியும் தங்கள் ஆன்மாவைப்பற்றிய அறிவில் பால்குடி மறவாத சிசுக்களாயிருப்போர் அநேகர். இவர்கள் மற்றவற்றிலும் அங்ஙனமே யிருந்தால் நலமாயிருக்கும். பிறரை ஏமாற்றுவதற்காக பல மனிதர்களுடைய இயற்கைக் கூறுபாட்டை நன்ரு யறிந்திருக்கிருர்கள். வழக்குகளிலும் பொய் சாட்சிகளை எங்ஙனம் உபயோகித்தால் ஜயங் கிடைக்குமென்பதை யுணர்வார்கள்; பிறர் தங்கள்மீது நம்பிக்கை வைக்கும்பொருட்டு என்ன செய்யவேண்டுமென்றறிந்து பல வழிகளைக் கையாடுவார்கள்; கணக்கில் புலிகள்; காரியத்தில் நிபுணர்; கடவுள் விஷயத்தில் பாலகர்கள். இந்த ஒரு சங்கதியில் மாத்திரம் அவர்கள் புத்தி செல்வதில்லை.

இனி, பச்சைமாறிப் பவளந் தோன்ருததற்கு முன் செய்யவேண்டியதைச் சிந்திப்போம். அழகும் ஆண்மையும் நிறைந்து திரண்டு வளர்ந்த மகனெருவனைப் பார்க்க நாம் களிப்படைகிருேம். அவனுடைய புதிய மனம் விசனங்களாலும் வியாகுலங்களாலும் இன்னும் சலிப்படையவில்லை.

அவனுடைய நடை காம்பீரமாயிருக்கிறது; முகத்தில் மலர்ச்சி குடிகொண்டிருக்கிறது. எதிர்த்தவரை எளிதில் அடங்கச்செய்யும் தேகவலிமை உடையவனுயிருக்கிறான். தான்கொண்ட நோக்கத்திற்கு இடையூருக வருவதை அவன் ஒரு பொருட்டாய் நினைப்பதில்லை. அபாயங்களைக் கண்டு விலகாமல் அவற்றைத் தேடிப்போய்த் தன் திறமையை விளக்க விரும்புகிறான். ஊக்கம் மிகுந்து உற்சாகம் நிறைந்து உன்மத்தன்போல் துள்ளுகிறான். எல்லாம் வேடிக்கையும் விளையாட்டாகவுமிருக்கின்றன. நண்பர்களோடு சல்லாபமாய்ப் பேசி, உல்லாசமாய்க் காலங் கழிக்கிறான். அவனுடைய யோசனைகளுக் களவில்லை. தன்னுல் முடியாததொன்றில்லையென்றெண்ணிக்கொள்ளுகிறான். கனவின்றித் தூங்கி யெழுந்து, கருத்தின்றி யங்குமிங்குந் திரிந்து காண்பதிலெல்லாங் களிப்படைந்து கண்டவற்றைத் தின்று கல்லையும் ஜீரணஞ் செய்து கண்களில் நீர்பெருகச் சிரிக்கிறான். இளமையின் பெருமை என்னே! பச்சையின் மாட்சி என்னே! ஐயோ, இந்த இளமை மாறுமே; பச்சை பழுக்குமே. செழித்துத் தழைத்து ஓங்கி வாய்த்து வளர்ந்து நிமிர்ந்து நிற்கும் இளமையாகிய இச்செடியிலுள்ள பூக்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன! இவை நிறமும் மணமும் நிறைந்து விளங்குகின்றனவே! மலர்ந்தவை உலர்ந்துபோகுமுன் இவற்றைப் பறித்து நமது ஐயன்முன் பரிமளம் வீசவைக்கவேண்டாமோ? வாடியுலர்ந்தபின் அவற்றை வையகம் படைத்தவனுக் களிப்பீரோ? வற்றி வதங்கியபின் அவை வழிபாட்டுக்குதவுமோ? ஆதலின் இளமையின் வலிமையும் ஆண்மையுமிருக்கும்போதே அவற்றை யொடுக்கி ஆண்டவனுக்குத் தொண்டு புரிவது அழகு.

கிழவர்கள் சாதுக்களாயிருப்பதில் சிறப்பொன்றுமில்லை; வயதுசென்றவர்கள் தியானத்திலிருப்பதில் வியப்பொன்றுமில்லை; விருத்தாப்பியர் நல்லவர்களாயிருப்பதில் விசேஷமொன்றுமில்லை, பலங்குறைந்து பற்றுகளொழிந்து ஐம்புலன்களடங்கி வருங்காலத்தில், இறைவனை இரவும் பகலும் நினைந்து இரங்குவது எளிது. வாட்டமும் வருத்தமுமடைந்து நொந்து மெலிந்தபின், பிறர் குற்றங்களைப் பொறுத்தலில் மேன்மை யென்னவிருக்கிறது. நோக்காடு நிறைந்த சாக்காட்டில் தர்மசிந்தை தானேவரும். இன்பங்களை நுகர இயலாதிருக்கும் பருவத்தில் கெட்ட சிந்தையின்றி யிருப்பது சாதாரணம். ஆகையால் சிறுவர்களும் வாலிபர்களும் நல்ல வயதிலிருப்போரும் தத்தம் காலத்திலேயே நன்னெறியைக் கைப்பிடித்து நலம் பெற்று வாழ்வார்களாக.

இவ்வதிகாரத்தை முடிக்குமுன் நாம் கூறவேண்டிய தின்னென்றுண்டு. வயது முடிந்து வாழ்வின் முடிவை நெருங்கி நிற்கும் கிழவனுக்கும் வாழ்க்கையின் தொடக்கத்தில் வளருகின்ற பிள்ளைக்கும் சிலவற்றில் மிகுந்த ஒற்றுமையுண்டு. பல் விழுதலும், தலை வழுக்கையாதலும், நடக்க முடியாது தள்ளாடுதலும், உரை குழறுதலும், அன்னமிறங்காமையும் நாம் கருதத்தக்கன. புறத்தில் நாம் காணும் இவ்வொற்றுமையைச் சில சமய

களில் அகத்திலுங் காணலாம். கவனமின்மையால் ஒன்றுவிடக்க, மற்றொன்று கூறல், கேட்டதையெல்லாம் நம்பிக்கொள்ளுதல், மற்றவர் சிரித்தலைக்கண்டு சிரித்தல் (தன் மனத்தில் காரணம் விளங்காமல்), ஆகிய இன்னும் பல செய்கைகளில் இறக்க விருக்கும் வயோதிகர், பிறந்து வளருங் குழந்தைகளை யொத்திருக்கின்றனர். இங்ஙனம், முதுமையில் இளமை தோன்றுகிறது. பச்சையும் பவளமுங் கூடுகின்றன. முதுமையின் இளமை தோன்றுமுன், இளமையில் முதுமைமை யடைவது சாலவும் நன்று.

K. P. சந்தோஷம், B.A., L.T.
(Voorhee's College), வேலூர்.

---

## மாதர் நீதி மஞ்சரி.

(381-ம் பக்கத் தொடர்ச்சி.)

இஃதிங்ஙனமாக, பெண்கள் கல்விகற்பது உசிதமல்லவென்று கூறுவோர், தம் கக்ஷிக்குச் சாதகமாகக் காட்டும் காரணங்களிலும் ஓரளவு உண்மையுண்டெனினும், அக்காரணங்கள் ஊற்றுக்கு நிற்கக் கூடியவையல்ல. அன்றியும், கல்வியானது ஒருவருடைய இயற்கைக் குணத்தையே விருத்தி செய்யக்கூடியது. திருஷ்டாந்தமாக நாம் பார்க்கிறபடி நியாயாதிபதிகள் நியாய வாதிகள் முதலிய இராஜாங்க உத்தியோகங்களிலுள்ளவர்களில் எத்தனையோபேர் சிறந்த கல்விகற்றவர்களா யிருந்தும், 'பொதுஜன சௌகரியத்தின்பொருட்டே நாம் இத் தொழிலில் நியமிக்கப்பட்டிருக்கிறோம்' என்னும் உணர்ச்சியின்றித், தங்கள் நிலைமையை யறவே மறந்து பரிதானம் வாங்குதல், அநியாயத் தீர்ப்பு கூறல், பொய்யை மெய்யாகவும், மெய்யைப் பொய்யாகவும் தரித்தல், ஏழைகளை வாயில் வந்தவாறு வைதல் முதலிய தீக்காரியங்களை யியற்றுகின்றனரல்லவா? இதற்குக் காரணமென்ன? 'அதிகாரத்திற்கும் பணஞ் சம்பாதிப்பதற்குமே நாம் கல்வி கற்றோ'மென்பது அன்னார் கருத்து. இது கற்றோர் குற்றமேயன்றிக் கல்வியின் குற்றமன்று. நல்ல குணவானிடம் செல்வமிருந்தால், அச்செல்வத்தை அவன் தருமமுதலிய நன்மார்க்கத்திற் செலவிடுவான். துஷ்டனிடமிருந்தால் கொலை, சூது, குடி முதலாகிய துன்மார்க்கத்திற் குபயோகப் படுத்துவான். இது செல்வத்தின் குற்றமன்று. இராவண கும்பகர்னர் செய்த தவம் தீமைக்கேதுவாகவும், விபீஷணன் செய்த தவம் நன்மைக் கேதுவாகவுமானதேன்? தவம் ஒன்றேயன்றோ? இதுபற்றியே பெரியோர்,

சங்கையறப் படித்தாலும் கேட்டாலும்
 பிறர்க்குறுதி தனைச் சொன்னாலும்
அங்கணுலகிற் சிறியோர் தாமடங்கி
 நடந்துகதி யடைய மாட்டார்.

எனக் கூறியுள்ளார்.

ஆகையால், என்னருமைக் கண்மணிகளே! அநித்தியமாகிய உலக

போகமொன்றையே விரும்பி கற்கப்படுங் கல்வி எவ்வகைத் தீச்செயலுக்கும் சாதகமாயிருக்கும். கல்வி கற்போர் அதனால் அடையவேண்டிய பயனின்னதென வுணர்ந்து கற்றால்மாத்திரம், அவர்கள் ஆண்பாலராயினும் சரி, பெண்பாலராயினும் சரி, அப்பயனை அவசியம் அடைவர். எனினும், துஷ்ட சுபாவிகளும் கல்வி கற்றிருப்பின் எப்படியும் ஒருகாலத்தில் தங்கள் குற்றங்களை யுணர்ந்து நல்வழிப்படுவர். ஆதலின் எச்சுபாவ முடையோர்க்கும் கல்வி அவசியமானதே.

நிற்க, பெண்கள் எத்தகைய கல்விக்கேற்றவர்களென்னும் விஷயத்தில் பலர் பலவாறான அபிப்பிராயமுடையவர்களா யிருக்கின்றனர். சாதாரணமாக எழுதவும் வாசிக்கவும் தெரிந்திருந்தால் போதுமென்பார் ஒரு சாரார். தற்போது கற்றவர் வகுப்பிற் சேர்ந்த பெண்களிற் பெரும்பாலோர் அத்தகைய குழந்தைக் கல்வியுடையோரே யாவார். இது கல்வியின்பாற் படுமோ? தோராமற் கற்றது கல்வியேயன்று. இத்தகைய கல்வியினிடத்தில் என்ன பலனை எதிர்பார்க்கமுடியும்? இக்கல்வியே அகங்காராதி துர்க்குணங்களுக்குப் பெரும்பாலும் கருவியாகும்.

மற்றொரு சாரார் ஆண்களைப்போலவே பெண்களும் ஆங்கிலங்கற்று, பட்டங்களை யடைந்து, உத்தியோகங்களிலமர்ந்து திரவியஞ் சம்பாதிக்க வேண்டுமென்பர். இக்கல்வியும் புருடனை மதியாதிருப்பதற்குக் காரணமாகும். பார்யா புருஷர்களுக்குள் பரஸ்பரம் இருக்கவேண்டிய அன்பிற்கு இது பெருந்தடை யுண்டாக்கும். இக்கொள்கை அன்னிய நாட்டினருடையதாகலின், எவ்வளவுதான் அவர்களைப்போல நடிக்க முயலினும், சில சமயங்களில் வெறுப்பையுண்டாக்கி வேதனைப்படுத்தும். அவ்வன்னிய நாட்டாரும் பெண்களைப் புருடர்களைப்போல எல்லாத் தொழிலுக்கும் அனுமதிக்காமல் சில குறிப்பிட்ட தொழில்களில் மாத்திரம் பிரவேசிக்கவிடுவதால் அது இயற்கைக்கு மாறானதென்பது வெளியாகின்றது. மேலும் அக்கல்வி, ஒழுக்கத்தை நோக்கமாக்கொண்டது மன்றாம்.

இவ்விரு முறைகளையும் விட்டு, பெண்களுக் கெத்தகைய கல்வி வேண்டுமென்பதைக் கூறுகிறேன். க்ருஹிணி, மனைவி, இல்லாள் முதலிய பெயர்கள் பெண்களுக் கிடப்பட்டுள்ளதை யாராய்ந்து நோக்குமிடத்து அவர்கள் வீட்டுக்காரியங்களுக்கே ஏற்றவர்களென்பது ஏற்படுகின்றது. ஆகவே, அவர்களது தொழில்களை யுணர்ந்து அவற்றிற்கேற்ற கல்வியே அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். கணவனைத் தெய்வமாகப் பாவித்து அவன் இதத்தையே கோரி, அவன் பிரியம்போல் நடந்து, கற்புநிலை தவறாது மனவொற்றுமையுடன் வாழ்தல், வரவுக்குத் தக்கபடி சிக்கனமான செலவு செய்தல், குடும்ப நிர்வாகத்தில் எவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்கள் நேரினும் பொறுமையுடன் சகித்தல், மாமன் மாமியரைத் தந்தைதாயரைப்போற் கருதி யுபசரித்தல், பக்குவமாக உண்டி சமைத்தல், வீட்டைச் சுத்தமாக வைத்தல், பிள்ளைகளைச் சன்மார்க்கத்திற் பயிற்றல் முதலிய அவர்கள் தொழிலுக்கேற்றபடி இராமாயணம் மகாபாரதம்

போன்ற கற்பரசிகளின் சரித்திரங்கள், கணிதநூல், குறள் நாலடியார் போன்ற நீதி நூல்கள், பாகசாஸ்திரம், சுகாதார நூல், வைத்திய முறைகள், தையல் முதலியவற்றைக் கற்பிக்கவேண்டும். இலக்கணம், பூகோளம், தேச சரித்திரம் இவற்றைக் கற்பதும் குற்றமாகாது.

நாவல்களென வழங்கும் நவீனங்களும் வாசக யோக்கிய முடையவையென அறிஞர் பலர் அபிப்பிராயப்படினும் அவற்றில்பல குறைகல்வியுடையோராலும், பலவகைப்பட்ட கொள்கையுடையோராலும் எழுதப்பட்டு வருதலின், கண்டகண்ட கதைகளையெல்லாம் வாசிக்காமல் தக்க பெரியோர்களால் எழுதப்பட்டவைகளையே தேர்ந்து வாசித்தல் வேண்டும். பொதுவகையாற் கூறுமிடத்து நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும் மாதர் குணத்திற்கு யாதொரு ஹானியுமுண்டாக்காது அவற்றைப் பெருக்கத்தகுந்த நூல்களே பெண்களுக்கேற்றவை யென்னலாம்,

மாதர்களே! இதுகாறும் நான் விளக்கிக் கூறியவற்றிலிருந்து பெண்களுக்கு கல்வி யவசியமென்றும், குறைகல்வியும் தகுதியற்ற உயர்கல்வியும் உபயோகமற்றவை யென்றும், பெண்களுக்கேற்ற கல்வி முறை இன்னதென்றும் நீங்கள் அறிந்துகொண்டீர்களல்லவா?

மாகதம்:—அருமைத்தாயே! தங்கள் பிரசங்கத்தால் எத்தனையோ முக்கியமான விஷயங்களை யறிந்தோம். நீங்கள் கூறியவை யாவும் எங்களுள்ளத்தில் பசுமரத்தாணிபோற் பதிந்தன. மாதர்குணம் நான்கெனக் கூறினீர்களே அவற்றை விளங்க உரைக்கக் கோருகிறேன்.

மனோன்மணி:—குழந்தாய்! தக்கதே வினவினை. பெண்களாகப் பிறந்தோர் ஒவ்வொருவரும் அவற்றை அறிந்திருக்க வேண்டியது மிகவும் அவசியம். இப்போது பொழுதுபோய்விட்டது. உங்கள் அப்பா வரும் வேளையாயிற்று. வீட்டுக் காரியங்களும் அநேகமிருக்கின்றன. நாளையதினம் அவற்றை உங்களுக்குச் சொல்லுவேன். வீட்டிற்குப் போகலாம் வாருங்கள். (போகிறார்கள்.) (தொடரும்.)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

## ஓர் பாதிரியின் அதிசயச் செயல்.

கிருஸ்தவப் பாதிரிமார் நம் நாட்டில் பாடசாலைகள் வைப்பதும், தருமச் செயல்கள்போல் அவர்கள் செய்யும் வேறு காரியங்களும், நம்மவர்களைக் கிருஸ்து மார்க்கத்தில் சேர்க்கவேண்டியதற்காகச் செய்யும் தந்திரங்களேயாகும். ஆகையால் அவர்கள் பாடசாலைகளுக்கு நமது மக்களை யனுப்பலாகாதென்று அடிக்கடி பல பத்திரிகைகளிலும் எச்சரிக்கை செய்யப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும், பட்டபின்பே புத்திவரும் சுபாவமுடைய நம்மவரில் பெரும்பாலார் இன்னும் அதைக் கவனியாமலேயிருக்கிறார்கள்.

இப்போது ஆம்பூரில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைப்பற்றி ஈண்டு கூறுகிறோம். இதனாலேனும் நம்மவர் உண்மையறிந்து இனியேனும் எச்சரிக்கையாய் நடந்துகொள்வார்களென்று நம்புகிறோம். இந்த விஷயத்தைப் பற்றி 14-3-24-இல் வெளியான "ஹிந்து" பத்திரிகையில் ம-ா-ா-ஸ்ரீ S. மூர்த்தி என்பவரால் வரையப்பட்ட சங்கதியைச் சுருக்கமாக ஈண்டு வெளியிடுகிறோம்.

"கடந்த 10 அல்லது 12 வருடங்களாக இவாஞ்செலிகல் லூதரன் மிஷின் பாதிரிமார்கள் இப்பிரதேசங்களில் அன்னிய மதஸ்தரைக் கிருஸ்ஸ்தவராக்கும் வேலையைச் செய்து வருகிறார்கள். அதனால் இப்போது ஆம்பூரிலும் அதைச் சுற்றிலுமுள்ள இடங்களிலும் சுமார் 300 பேர் கிருஸ்துமார்க்கத்தில் சேர்ந்திருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலர் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று கருதப்படுவோரே யாவர். கடந்த நவம்பரில் ரெவரெண்ட் போரியாக் என்ற பாதிரியார் மேற்கண்ட வேலையின் தலைமை ஸ்தானத்திற்கு வந்தார். அவர் அங்குள்ள மிஷன் உயர்தரப் பாடசாலைக்கு (ஹைஸ்கூல்) மானேஜராகவும் அமைக்கப்பட்டார். அவர் வேலையை யொப்புக்கொண்ட வுடனே முதலில் செய்த காரியம் என்னவெனில், மேற்படி பாடசாலையிலிருந்த ஹிந்து உபாத்தியாயர்களை யெல்லாம் வேலையிலிருந்து நீக்கிவிட்டார். பிறகு தமது பாடசாலையில் வாசிக்கும் பிள்ளைகளைக் கிருஸ்து மார்க்கத்தில் சேரும்படி பலவந்தப் படுத்தி, அப்படிச் சேர மறுத்தவர்களுக்கு அவர்கள் நடக்கையைப்பற்றி நற்சாட்சிபத்திர மளிக்கமாட்டேனென்று பயமுறுத்தினார். இது விஷயமாக ஜில்லா கல்வியிலாகா அதிகாரி செய்த விசாரணையைப்பற்றி யிப்பத்திரிகையில் (ஹிந்து) வெளியிட்டிருக்கிறோம். பாதிரியார் பிள்ளைகளைக் கிருஸ்தவ மதத்தில் சேரும்படி வற்புறுத்திய விஷயத்தைப்பற்றி ஜில்லா கல்வியிலாகா அதிகாரி கேட்டபோது, அப்பாதிரியார் "இந்தியச் சிறுவர்களின் கல்வியைப்பற்றி நமக்கு அக்கரையில்லை. இவர்களைக் கிருஸ்தவர்களாக்குவதற்கே நாம் இங்கு வந்திருக்கிறோம்" என்று கூறினார்.

* * * * * *

நேயர்களே! இப்பாதிரியார் உண்மையைக் கூறியதைப்பற்றி நாம் சந்தோஷமடைகிறோம். பாதிரிமார்கள் சம்பளத்திற்கு இங்கு வந்து வேலைசெய்வது நம் நாட்டார் கல்விகற்கவேண்டுமென்பதற்கல்ல. நம்மவரை யெத்தந்திரத்தாலேனும் கிருஸ்துமதத்திற்கிழுப்பதே அவர்கள் நோக்கம்.

இந்த உண்மையை யொரு பாதிரியாரே கூறக்கேட்ட பின்பேனும், நம்மவர்கள் கல்வி கற்பதற்காகத் தம் மக்களை யவர்கள் பள்ளிகளுக்கனுப்பாமலும், வீட்டிலுள்ள பெண்களுக்குக் கல்வி கற்பிப்பதற்காகப் பைபில் உமன்களை வீட்டில் சேர்க்காமலும் எச்சரிக்கையா யிருக்கவேண்டியது நம் கடமையாகும்.

## " தனித் தமிழ்ப் பாதுகாப்பு."

சித்திரைமாத ஆனந்தனில் 372-ம் பக்கத்தில் மேற்குறிப்பிட்ட விஷயத்தைப்பற்றி யெழுதியதற்கு என்னுடைய மறுப்புரையாவது, நாகை நீலாம்பிகை அம்மையாருக்குப் பதிலாக, தன் பெயரும் குறிப்பிடாமல் "ஓர் தமிழன்" என்னும் கையொப்பமிட்டு வரைந்துள்ளதை நான் படித்து சந்தோஷமும் வருத்தமும் இரண்டையுமடைந்தேன். சந்தோஷத்திற்குக் காரணமாவது இன்னம் சில புதிய சங்கதிகளைச் சொல்ல நேரிட்டதைப்பற்றி. ஆனால் வருத்தமென்னவென்றால் நான் தமிழ்ப்பாஷையை யெவ்விதத்திலும் தாழ்த்திச்சொல்லாமலிருந்தும், அதை ஸமஸ்கிருதத்திற்குச் சமமென்று நான் சொல்வதுடன் நிற்காமல் பத்திரிகாசிரியரும் அம்மாதிரியே குறிப்பு வரைந்திருந்திருந்தும், இம்மாதிரியான அபாண்டம் என்பேரிலேன் சுமத்தவேண்டும்? நிற்க,

(1) "தமிழ்" யென்னும் சொல்லுக்கு இனிமை யென்னும் பொருள் உண்மைதான். அம்மாதிரியே "சமஸ்கிருதம்" யென்னும் பதத்திற்கு-சமகிருத-வென்றால் சமமாய்ச் செய்யப்பட்டது. அதாவது அழகுபொருந்தியது என்றே பொருள். அவ்விதமே தெலுங்குபாஷையும் தேன்போன்ற இனிமையுடையதென்றும், பேசவும், பாடவும் ஓசை இனிமையுடையதென்றும் தாங்கள் பிரஸ்தாபித்த திருவாளர் தீனதயாளு என்பவரே ஏழாவதாண்டு போதினியில் சம்மதித்துக் கூறியிருக்கிறார்.

(2) "ழ"கரம் தமிழின்கண் மாத்திரமிருக்கிறதென்றால் "F" (எப்) என்னும் (பிகுவான) அக்கரம் ஆங்கிலேய பாஷையி லிருக்கிறதேயொழிய நம் பாஷைகளில் இல்லை. ஆனால் இதுபோன்றவைகள்தான் ஒரு பாஷைக்கும் மற்றொரு பாஷைக்குமேற்படும் வித்தியாசங்கள்.

(3) ஸ்ரீமான் மாணிக்க நாய்க்கரவர்களை நான் நேரிலறிவேன். அவர் இந்த ஊருக்குப் பிரசங்கம் செய்ய வந்திருந்தபோது அவருடன் பேசியதுடன் அவருடைய புத்தகங்களையும் அவர் தரப் பெற்றேன். பிற்பாடு கடித மூலமாயும் பல விஷயங்களைப்பற்றி யெழுதிக்கொண்டிருக்கிறோம். ஆனால் சொற்களின் உச்சரிப்புக்கெவ்வளவு காற்று செலவென்னும் விஷயத்தில் அவருடைய அபிப்பிராயம் எனக்குத் தெரியாது. ஆனால் காலம்சென்ற சங்கர நாராயண M. A. என்பவர் சுமார் 25 வருடங்களுக்கு முன் பிரசுரித்த அவரது தெலுங்கு, இங்கிலீஷ் நிகண்டில் நம்முடைய தெலுங்கு தமிழ் பாஷைகளைக் காட்டிலும் இங்கிலீஷ் பாஷையில் பதங்களைச் சுலபமாகவும் (தந்திபோல்) சீக்கிரமாகவும், அலுப்பில்லாமலும் உச்சரிக்கலாமென்ற நீண்ட வியாசம் எழுதியிருக்கிறார்.

(4) திருவள்ளுவர் முதற்குறளில் நான் குறித்த "ஆதி," "பகவன்," "உலகு" யென்னும் மூன்று சொற்களில் முதல் இரண்டு பதங்கள் தமிழ்ச் சொற்கள் அல்லவென்று ஒப்புக்கொள்ளவேண்டுமெல்லவா? அம்மாதிரியே அம்மையார் கையாண்டு என்னால் எடுத்துக் காட்டப்பட்ட "இலக்கணம்,"

"தெய்வம்," "காலம்" என்னும் மூன்று பதங்களில் முதல் இரண்டும் ஆரிய மென்பதில் ஐயமுண்டோ!

வாலாஜா—துரைசாமி அய்யர்.

குறிப்பு:—சஞ்சிகையின் 372-ம் பக்கத்தில் குறிப்பிட்ட விஷயத்தை வரைந்தவர் தம் விலாசத்தை நமக்குத் தெரிவித்துள்ளார். ஆனால் அவர் தாம் நாகை நீலாம்பிகையம்மையாருக்குப் பதிலாக அதை வரைந்ததாய்க் கூறாததால் நாம் அந்த வியாசத்தில் அம்மையாரைச் சம்பந்தப்படுத்துவதற்கு ஒரு காரணமுமில்லை.

இப்பாரத நாடாகிய புண்ணிய பூமியில் அனாதிகாலந்தொட்டு ஆரியம், தமிழ் என்ற இரண்டு மொழிகளும் வழங்கி வருகின்றன. இரண்டிற்கும் பரமசிவமே முதற்குருவென்றும் கூறப்பட்டுள்ளது. மனிதன் அடையவேண்டிய பேறுகளனைத்திலும் மேலானது ஆன்மஞானமே. அத்தகைய ஞானத்தை அடையும் மார்க்கத்தைக் கூறும் நூல்கள் இந்த இரு மொழிகளிலுமே உள்ளன. ஆகையால் நாம் ஒன்றைத் தாழ்வுபடுத்திக் கூறக் காரணமில்லை. அப்படிக் கூறுவது நன்மையுமன்று. அய்யரவர்கள் இவ்வியாசத்தை வரைந்தது முக்கியமாகத் தாம் தமிழைத் தாழ்வுபடுத்திக் கூறக் கருதவில்லையென்பதை வெளியிடற்கேயாகும். ஆகையால் இந்த விஷயம் இதோடு முடிவுபெற்றதாகவே கருதப்படவேண்டும்.

பத்திரிகாசிரியர்.

---

## நமது பஞ்சாங்க எச்சரிக்கை.

கடந்த நான்கு வருடங்களாக நமது "ஆனந்தபோதினி" சுத்த திருக்கணித பஞ்சாங்கம் வெளியாகி வருவதும், அது குற்றமற்றதென்றும் சோதிடர்களுக்கும் ஏனையோர்க்கும் அவசியமான அம்சங்கள் யாவும் அடங்கப்பெற்றுள்ளதென்றும், யாவராலும் நன்கு மதிக்கப்படுவதும் நேயர்கள் அறிந்தவிஷயமே. கடந்த துந்துபிஹு நமது பஞ்சாங்கத்திலிருந்த விஷயங்களை யெடுத்து பூவிருந்தவல்லி சு. து. மாசிலாமணி முதலியார் என்பவர் தமது பஞ்சாங்கத்தில் பிரசுரித்துக்கொண்டதற்காக பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் அவர்களால் அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறார். இதைப்பற்றிய தீர்ப்பை துந்துபிஹு ஆவணிமீ வெளியான நமது சஞ்சிகையின் 73-ம் பக்கத்தில் பிரசுரித்திருக்கிறோம்.

அதே பூவிருந்தவல்லி சு. து. மாசிலாமணி முதலியார் இவ்வருடம் "ஷண்முகானந்தபோதினி பஞ்சாங்கம்" என்று பெயரிட்டு, வெளிப்பார்வைக்குத் திடீலென்று பார்த்தால் நமது பஞ்சாங்கம்போலவே தோன்றுமாறு சுந்தரவிலாச அச்சுக்கூடத்தில் அச்சியற்றி வெளியிட்டிருக்கிறார். நாம் "ஆனந்தபோதினி" என்ற சஞ்சிகையைப் பிரசுரித்து வருவதால் நமது பஞ்சாங்கத்திற்கு "ஆனந்தபோதினி பஞ்சாங்கம்" என்று பெயரிட்டோம்.

அவரோ "ஷண்முகானந்தபோதினி" என்ற ஒரு சஞ்சிகையில்லாம லேயிருக்க அப்பெயர் இட்டிருக்கிறார். என் அப்படிச் செய்யவேண்டு மென்பதற்குக் காரணம் இதை வாசிப்போரே எளிதில் உணரலாகும்.

ஆகையால் நமது பஞ்சாங்கத்தை வாங்க விரும்பும் நேயர்கள் "ஷண் முகானந்தபோதினி" என்ற பெயரால் ஏமாற்றமடையாமல் வெறும் "ஆனந்தபோதினி" என்ற வார்த்தையும், அடியில் "C G. ராஜன், B.A. (Mathematics) அவர்களால் கணிக்கப்பட்டு, "ஆனந்தபோதினி" பவர் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது" என்ற வாக்கியமும் இருக்கின்றன வாவென்று கவனித்துப்பார்த்து வாங்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

நாகவேடு-நா. முனிசாமி முதலியார்.

## ஆரிய சித்தாந்தம்.

(தெய்வம்—பக்தியோகம்.)

(384-ம் பக்கத் தொடர்ச்சி.)

பக்தியோகம் என்பது கடவுளினிடத்தில் மனதைச் செலுத்துவதா கிய அன்பு. பக்தியென்பது அன்பு என்று பொருள்தரும். இதனால் பக்தி என்பது வடமொழியும் அன்பு என்பது தென்மொழியுமாமென்றறியக் கூடும். அன்பு என்பது ஒருவகையான உள்ளத்தின் நெகிழ்ச்சியாம். அது புத்திரன் மனைவி சகோதரர் சிநேகர் இவர்களிடத்திலுண்டாகும் அன்புபோல்வதன்று. அறியப்படாத உலகங்கடந்த பரம்பொருளிடத்து வைக்கும் ஆசையே பக்தியாம். எல்லாவற்றுக்கும் எல்லாருக்கு மேற் பட்ட சச்சிதானந்தப் பரசிவத்துக்கு நாம் அடிமையாயிருக்கிறோம் என்கிற உள்ளக்கிளர்ச்சியா லுண்டாவதாம்.

உலகவின்பமெல்லாவற்றிலும் வெறுப்புண்டாய்ச் சப்த தாதுக்களா லாக்கப்பட்ட தன் சரீரத்தினிடத்தும் வெறுப்புண்டாய்ப் பரம்பொரு ளின்கண் சித்தத்தைச் செலுத்துவதே பக்தியாம். இவ்வன்புர் தலையன்பு, இடையன்பு, கடையன்பு என்று மூவகையாம். இவை முறையே ஒன்றி னொன்று தாழ்ந்தது. தலையன்பே பக்தியோகத்துக்குரியதாம். இவ்வன்பு பல ஜன்மப் பழக்கங்களினாலுண்டாவது. பூர்வ ஜன்மங்களிற் செய்த புண்ணியத்தின் பயனாகவும் உண்டாகும்.

"உலகர்சே ருறுதிப் பயனெவற் றினுக்கு
முறைவிடமாய்த் துயர முழுதும்
விலகுறத் துமிக்குங் கணிச்சியா நின்றாள்
விரைமலர்க் கியற்றுமெய்ப் பக்தி
அலகிலாப் பிறவி தொறும்புரி தவத்தா
லல்லதெவ் வாற்றினு மரிதே
நலமதொன் றடைதற் குறுமிடை யூறு
நாதனே பலவுள வன்றே."

என்ற ஆன்றோர் வாக்கானுணரப்படும். ஏனெனில் மனைவி மக்கள்

தில் நின்றுகொண் டிருந்தான். கொஞ்சநேரம் பொறுத்துத் தர்மவியாதர் கௌசிகனிடம் வந்து, பதிவிரதையினால் அனுப்பப்பட்ட நீர் என்னுடன் என் கிருகத்திற்கு வாருமென்று அழைத்துக்கொண்டு சென்றார். பிராமணன் மிக்க வியப்படைந்து அந்தப் பதிவிரதை அனுப்பியதை யிவர் எப்படித் தெரிந்துகொண்டாரோ தெரியவில்லை, இது மிகவும் ஆச்சரியமென்று சிந்தித்துக்கொண்டே அவர் பின் சென்றான். (தொடரும்)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்.

(390-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஏ பகவான்! தாங்கள் கொண்டருளிய இந்த அற்புதமான உருவமானது என்ன உருவமென்று என்னால் நிச்சயிக்கக்கூடவில்லை. இதனுடைய ஆதி, மத்தியம், அந்தம் இன்னவையென்று என்னாலறியக்கூடவில்லை. அழிவற்றதை, நான்மறைகளும் ஆராய்ந்து உபதேசித்ததை, மாயையாலுண்டாக்கப்பட்ட சகலத்திற்கும் அதிஷ்டானமாயிருப்பதை, மூக்காலத்தும் உள்ள நித்தியத்தை, சகல தருமங்களும் பிறழாதபடி நிலைநிறுத்தும் நெறியுடையதை, பெருகுதலும் குறைதலுமில்லாததை, என் அநாதியான கடவுளை, கன்றைத் தொடரும் பசுவின் தன்மையாய் என் எதிர்நிற்கக் கண்டேன். சூரிய சந்திரர்களையே நேத்திரங்களாக வுடையதை, மிக்க ஒளியையும் உஷ்ணத்தையுமுடைய அக்னியை முகத்தில் உடையதும், உலகனைத்தும் தனது தேஜசால் தகிக்கப்பண்ணுவதுமாகிய தங்களுடைய சொரூபத்தை மிக்க வியப்போடு தரிசித்தேன்.

ஏ பரம்பொருளாகிய பகவானே! பூமி ஆகாயம் யாவும் நிறையும்படி உயர்ந்து, திக்குகளனைத்தும் சென்று நீக்கமின்றி உமது சொரூபத்தை வியாபிக்கச்செய்தால், அத்தகைய திரு உருவத்தைக் கண்டு துன்பமடையாதவர்கள் யாருளர்? சகல உலகங்களும் முழுதும் அச்சமுருவதைத் தேவரீர் காண்பீராக. தேவகணங்கள் வணங்கவும், மகாதபோதனர்களாகிய நாரதாதி மகரிஷிகள் துதிக்கவும், சித்தர்கணங்கள் கூட்டமாகக்கூடி நின்று வியந்து புகழவும் கண்டேன். அசுரகணங்களும் கந்தர்வர்களும் நெருங்கி இத்தன்மையரென்றறியத்தகாதவர்களையும் என்னெதிரிற் கண்டேன்.

எனது பரமபிதாவாகிய பகவானே! ஆகாய முற்றும் வியாபித்து, பலவித வர்ணங்களையுடையதாய், பேயின் தன்மையை யொத்த மூன்றாம் பிறைபோன்ற வக்கிர தந்தங்களையும், பெரிய வாய்களையும் உடையனவாகிய பற்பல முகங்களையுடைய இவ் விஸ்வரூபமானது அடியேன் அடையத்தக்கதன்மையதன்று.

சகல அண்டங்களும் தாமாகவே விளங்கும் எந்தையே! தாம் சகல உலகங்களுக்கும் இருப்பிடமாகவும், எல்லாம்தாமேயாகவும் நின்றதன்மை

யைக் கண்டேன். இதனால் அடியேன் கிருதார்த்தனானேன் எனினும், இந்த விசுவரூபத்தைக் காணக்காண எதற்குமஞ்சாத அடியேன் அந்தக்கரணமும் நடுங்குகிறது. நிற்கத் தைரியமுடையதாயில்லை. திக்குத் திசை யொன்றும் தெரியவில்லை. அடியேனை யஞ்சேல் என்று அருள் செய்யப் பிரார்த்திக்கிறேன்.

(இப்போது அர்ச்சுனன் தான் ஜெயமடைவதையும், துரியோதனாதியர் அபஜெயமடைவதையும் காண்பதாகக் கூறுகின்றான்.)

ஏ பகவான்! துரியோதனாதியர் நூற்றுவரும் அவர்கள் சேனைகளும், அவர்களுக்குத் துணையாகவந்துள்ள அரசர்களும், எனது படைகளும் உமது நமனையொப்பான வக்கிரதந்தங்களிலகப்பட்டு நசுக்கப்பட்ட தேகங்களை யுடையவர்களாய், வாயுவால் மூண்டெரியும் அக்கினிக்கொப்பான உம்முடைய முகங்களிலே விழுவதைக் கண்டேன். சொலற்கரிய நதிகளனைத்தும் சாகரத்தை யடைவதுபோல், உம்மிடத்தினின்றும் உண்டான பிராணிகளனைத்தும் உம்முள்ளேயே பிரவேசிக்கக் கண்டேன். விட்டிற்பூச்சிகளனைத்தும் தீயில்பாய்ந்து மடிவதுபோல் எல்லாவுயிர்களும் தமது முகங்களில் வீழ்ந்து மடிவதைக் கண்டேன்.

ஏ விசுவரூபியாகிய பகவானே! பிரகாசம்பொருந்திய உமது முகங்களால் எல்லாப் பிராணிகளையும் உணவாகக்கொண்டழித்து, அந்த உணவு போதாமல் வெளியில் நாவை நீட்டி நீட்டி வெறுஞ் சுவை கொள்கின்றீர். இத்தகைய உக்கிர ரூபமான உம்மை இத்தன்மையரெனத் தெளிவாய் நான் அறியமுடியவில்லை. உமது செய்கையும் இன்னதென்று அறியக் கூடவில்லை. அடியேன்மேல் கிருபைவைத்து உம்மை உள்ளவாறு அருளிச் செய்யவேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

(இவ்வாறு பிரார்த்திக்கும் அர்ச்சுனனுக்குப் பகவான் தமது உண்மைச் சொரூபத்தையும், செய்கையையும் அருளிச் செய்கின்றார்.)

மேற்கண்டவாறு அர்ச்சுனன் தமது சொரூபத்தையும் செய்கையையும் உள்ளவாறு அருளிச் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, யாவும் தானேயாகி எங்கும் நிறைந்து நின்ற பகவான் பின்வருமாறு அருளிச் செய்கின்றார் :—

ஏ பார்த்த! உன்னைத்தவிர இப்பூவுலகிற்குப் பாரமாயிருக்கும் சகலரையும் சங்கரித்து அவர்களுயிரைப் புசிக்க முயன்றேன். யுகம் முடிவாகும் அக்காலத்தில் யாவற்றையும் சங்கரிக்கும் கால ரூபமான பரமேசுவரன் நானாகவிருக்கிறேன் என்பதை நீ யறிவாயாக. இங்குள்ள துரியோதனாதியர் முதலிய அனைவர்களும் என்னால் மடிந்தார்களென்றே எண்ணிக் கொள்வாயாக. நீ கேவலம் நிமித்தமாத்திரமேயாவாய். நீ யமர் தொடங்கி இவர்களைச் சங்கரிப்பாயேல், அது உனது தருமமேயாவதோடு, ஜெயத்தையும் இராச்சியத்தையும், இப்பூமியின்கண் பிறந்தோரால் அடைதற்கரிய பெருங் கீர்த்தியையும் அடைவாய்.

இவ்வாறு பகவான் அருளிய மொழிகளைக் கேட்ட காண்டீபன் தன் கரங்களைச் சிரமேற் கூப்பி, கண்களில் நீர்பெருக, உரைகுழற அச்சத்தோடும் அன்போடும் கோவர்த்தனகிரியைக் குடையாய்ப்பிடித்து ஆநிரைகளைக் காத்த மேகவர்ணனாகிய ஸ்ரீ கண்ணபிரானை நோக்கிப் பின்வருமாறு துதிக்கலுற்றான் :—

ஞானேந்திரிய முதலிய சகல இந்திரியங்களையும் நடத்தும் நாயகனே! வினையாகிய விலங்கை யறுப்பவரே! உமது கீர்த்தியைக் கேட்கில் தேவர்களும் சித்தர் கணமும் மனங்களித்து சந்தோஷமடைவார்கள். ஆனால் அசுரரும், இராக்கதரும் மரணதுக்கமடைவார்கள். சிவந்த திருக்கரங்களையும், திருப்பாதங்களையும், வாயையும், நேத்திரங்களையுமுடைய கரிய முகிலே! இருபத்தைந்து தத்து*வங்களாலும் அறியப்படாதவரே! நான்முகன்தாயே! முடிவில்லாதவரே! சத்து அசத்தைச் சேராதவரே! சத்து அசத்து யாவுமாய்ப் பரந்துள்ளவரே! பிழைக்கவேண்டுமென்று எண்ணியவர்களுள் உம்மை வணங்காதவர்களுமுண்டோ?

ஜகத் காரணரான ஆதிதேவன் நீரே. எல்லாச் சரீரங்களிலும் உயிராய் நிறைந்துள்ளவர் நீரே. ஒருவராலும் அறியப்படாதவரும் நீரே. முடிவுகாலத்தில் சகலப் பிரபஞ்சங்களுக்கும் புகலிடமாயுள்ளவரும் நீரே. யாவற்றையும் அறியும் சர்வக்ஞர் நீரே. அறிவாலறியப்படும் பொருள்கள் யாவும் நீரே. நீதியுடைய யமனும் யாவற்றையும் அழிப்பவர் நீரே. நீருங் காற்றும் தீயும் மண்ணும் வானும் நீரே. சகல உலகங்களையும் எப்போதும் உற்பத்திசெய்யும் மாதாவும் பிதாவும் நீரே. பாட்டனுக்குப் பாட்டனும் நீரே. ஆராய்ந்தறியவொண்ணாத ஸ்ரீ பகவானே! அழியத்தக்க என் பிறவிகளொழிவதற்காக அடியேன் உம்மைப் பல்லாயிரமுறை நமஸ்கரிக்கிறேன். என் தாயே! எனது மகத்தான சம்சார துக்கங்களனைத்தும் ஒழியும்படி மறுபடி நமஸ்கரிக்கின்றேன். ஓ எனது தந்தையே! உமது முன்பாகத்தும் பின்பாகத்தும் முறைப்படி நமஸ்கரிக்கிறேன். என் அன்பே! என் ஆருயிரே! தொலையாத இப்பிறவிப்பிணியின் வலிமை கெடும்பொருட்டு உம்மை எவ்விடத்தும் மீண்டும் வணங்குகின்றேன்.

[சர்வேசுரனுக்கு முன்பு, பின்பு, நடு, ஆதி, அந்தம் எதுமில்லையெனினும் பக்திப் பெருக்கால் அர்ச்சுனன் அவ்வாறு மொழிந்தனன்.]

(தொடரும்.) சீடன்.

---

## கிறிஸ்தவர்களும் ஜாதிவித்தியாசமும்.

உலகத்திலுள்ள எல்லாராலும் போற்றுதற்குரிய நமது பாரத நாட்டிலுள்ள கிறிஸ்தவர்கள் கடைப்பிடித்தொழுகும் ஜாதிவித்தியாசம் அதிக கேடுள்ளதாக இருக்கிறது. ஜாதிவித்தியாசம் கூடவே கூடாது என்று இயேசுபெருமான் போதித்திருக்க அதை நமது கிறிஸ்தவ சகோதரர்கள் எத்தனையோ விதத்தில் கைக்கொள்ளத் தலைப்பட்டுவிட்டார்கள். இதைப் பற்றி ஆராயுமுன், இந்துக்களுக்குள் உள்ள ஜாதிவித்தியாசம் எப்படிப் பட்டதெனக் கவனிப்பது சாலச் சிறந்ததாகும்.

---

* ஞானேந்திரியம் 5, கருமேந்திரியம் 5, சத்தாதி 5, வசனாதி 5, அந்தக்கரணங்கள் 5. அதாவது தத்துவக் கூட்டங்களால் அறியப்படாதவர் என்பது பொருள்.

2. தற்காலம் இந்தியாவில் பல ஜாதிகளிருப்பினும் அவை யெல்லாம் பிரம்ம, க்ஷத்திரிய, வையசி, சூத்திரர் என்னும் இந்நால்வகைச் சாதியிலேயடங்கும். முற்காலத்தில் ஒவ்வொரு ஜாதியாரும் தங்களுக்குக் குறிப்பிட்ட வேலையையே செய்து வந்தார்கள். இதினிமித்தம் நமது இந்தியாவானது அதிக உன்னத நிலைமையிலேயே இருந்துவந்தது. தற்காலம் நாகரீகத்தில் தேர்ந்தவராகக் கருதப்படும் ஜாதியாரும், தேசத்தாரும் ஆடையுடுத்தவும் தெரியாது, காய், கனி, கிழங்குகளைத் தின்று கொண்டு, காட்டு மனிதர்போல் சஞ்சரித்திருந்த காலத்திலேயே நமது இந்தியர் டெக்கா மஸ்லின் போன்ற மெல்லிய ஆடையணிந்து, தொழிலிலும், வியாபாரத்திலும், சாஸ்திரப் பயிற்சியிலும், நாகரீகத்திலும், ஆசாரத்திலும், பெண்கல்வியிலும் உச்சநிலை யடைந்திருந்தார்கள் என்பதை தேச சரித்திர வாயிலாக அறியலாம். அக்காலத்தில் ஜாதி வித்தியாசத்தை ஒருவருக்கொருவர் பேதமாக எண்ணாமல், ஓர் குடும்பத்திலுள்ள தகப்பன், தாய், மூத்தான், இளையான் என்ற தோரணையில் அவரவர்கள் தொழிலைச்செய்தும், செங்கோலேந்தி மனுநீதி வழுவாமல் மன்னுயிரைத் தன்னுயிர்போல் கருதி நடத்திய இந்திய மன்னருக்கு ஆறிலொருகடனை வரியாகச் செலுத்தியும், ஒருவருக்கொருவர் அடங்கித்தான் நடக்கவேண்டுமென்ற ஒற்றுமையோடுகூடிய மேலான எண்ணத்தையே கொண்டிருந்தார்களானதால் அவ்வுன்னத நிலைமையை அடைந்திருந்தார்கள். இதை உண்மையான சரித்திரவாயிலாக அறியலாம்.

3. வைசியர் சூத்திரருக்கு ஏற்பட்டது வர்த்தகமும் விவசாயத் தொழிலும். இவர்களிலேயே தீண்டக்கூடாதவர் என்று ஒரு சாரார் விலக்கப்பட்டதெப்படியெனில், விவசாயத்துக்குவேண்டிய உபதொழில்களும், கருவிகளும் செய்யச் சக்கிலியர், பறையர், பள்ளர்போன்ற சில தொழிலாளிகள் வேண்டியிருந்ததும், அவர்கள் செத்தமாட்டுத் தோலையுரிப்பது, தோல் பதனிடுவது, தோல் தைப்பது, பிணஞ்சுடுவது, தெருக்கூட்டுவது, சாக்கடை கக்கூஸ் சுத்தஞ்செய்வது முதலிய தொழில்களைச் செய்துவந்ததும், அதனால் அவர்கள் எப்போதும் ஆசாரத்தையும், சுத்தத்தையும் கவனிக்கமுடியாது புறக்கணிக்க நேரிட்டதும், அதினிமித்தம் அவர்களை அந்த நிலைமையில் தீண்ட அருவருப்படைந்து சிலர் விலகி நின்றதும், மேற்படி தொழிலாளரும் தங்கள் தொழிலினிமித்தம் சற்று எட்டியே தங்கள் விடுதிகளை அமைத்துக்கொண்டு விட்டதுவும் சுபாவத்துக்கும் அனுபவத்துக்கும் ஒத்ததேயாகும்.

4. இவர்கள் செத்த மாட்டை உரிப்பது, தோல் பதனிடுவது முதலிய தொழில் செய்யும்போது அதினின்றும் உண்டாகும் துர்நாற்றம் ஊருக்குள் நுழைந்து சுகாதாரத்தைக் கெடுக்காமல், அவ்வித துர்நாற்றம் அதிகநாள் நீடித்தும், உக்கிரமாகவும் வீசும் தென்மேற்குக் காற்றினால் ஊருக்குள் கொண்டுவரப்படும் என்ற நோக்கத்தின் பேரிலேயே மேற்படியார் சேரிகளை ஊருக்கு வடக்கிலாவது, வடகிழக்கிலாவது, கிழக்கிலாவது உண்டாக்கிக்கொண்டார்கள். இதை ஒவ்வொரு கிராமங்களிலும் பார்க்கலாம். ஊருக்கு மேற்கிலாவது, தென்மேற்கிலாவது, தெற்கிலாவது ஷை சேரிகளைப் பார்ப்பதருமையே.

5. இவர்களுக்குமேல் க்ஷத்திரியர் என்பார் யுத்தம் செய்வதைத் தொழிலாகக்கொண்டு அவரவர்களுடைய தொழில் முறைக்கேற்றவாறு கூடியவரையில் சாத்தியப்பட்ட வழிகளிலெல்லாம் ஆசாரத்தையும், சுத்தத்தையும் கடைபிடித்து வந்தனர். இது நிற்க, க்ஷத்திரிய வைசியரில் சில

ரும், சூத்திரரில் சிலரும் உணவு விஷயத்தில் வித்தியாசப்பட்டு மாமிசம் மச்சம்போன்ற பல ஆகாராதிகளை உட்கொள்ளத் தலைப்பட்டுவிட்டார்கள். மாமிசம் புசிப்பவர்களிடம் மாமிசம் புசியாத ஒரு சாரார் அருவருப்படைந்து விலகி நின்றதும், நிற்பதும் இயற்கையே.

6. பிராமணர். இவர்களுக்கு வேதம் ஓதும் தொழில். மற்ற மூன்று ஜாதியாரும் உலகத்துக்கு வேண்டிய தொழில்களைச் செய்துகொண்டேயிருப்பதினாலும்,ஆன்மார்த்தவிஷயங்களை ஆராய்ந்தறிய அவர்களுக்கு அவகாசமில்லாததினாலும், அப்படிப்பட்ட விஷயங்களைத் தெரிந்தும், கடவுளுடைய இலக்ஷணம், மனித ஜென்மம் முத்தியடையும் வழி இவைகளைத் தேர்ந்தும் அப்போதைக்கப்போது மேற்கண்ட முத்தரப்பட்ட ஜாதியாருக்குப் போதிப்பதும், சமையாசாரக் கொள்கைகளையும், சடங்காசாரங்களையும் நிறைவேற்றுவதுமே இவர்களுக்குத் தொழிலானபடியால் எப்போதும் ஆசாரம், சுத்தம் முதலிய சிறிதளவேனும் குறையாது கடைபிடித்தொழுகச் சமயம்வாய்ந்ததுவும், அதனால் இவர்கள் மற்ற ஜாதியாரைவிட உயர்ந்தவர்களெனக் கருதப்பட்டதுவும் கவனிக்கப்படத்தக்க விஷயமாகும்.

7. ஆகவே ஈஸ்வர சிருஷ்டியில் மனிதரெல்லாம் ஒரே ஜாதியாகச் சிருஷ்டிக்கப்பட்டிருந்தும், தொழில், ஆசாரம், சுத்தம், உணவு முதலியவற்றினாலேயே ஜாதிகள் பிரிந்து நின்றதென்பது வெள்ளிடைமலை. நமது குடும்பத்துக்குள்ளேயே ஒரு குழந்தை நரகலில் வீழ்ந்துவிட்டால் அக்குழந்தையைத் தீண்டவும், சுத்தமான இடத்தில் சேர்க்கவும் பிறர் சம்மதியாததையும், ஒருவர் சாப்பிடும் உணவு இன்னொருவருக்குப் பிடிக்காவிட்டால் ஒதுங்கி நிற்பதையும் பார்க்கிறோம். புராணங்களில் கூறியவாறு பிரம்மாவுடைய நெற்றி, புஜம், தொடை, பாதம் இவைகளினின்றும் நால் வகைச்சாதியார் தோன்றினார்களென்பது எப்படியிருப்பினும், உலக அனுபவத்தாலும் ஜாதி வித்தியாசம் ஏற்பட்டிருக்கலாம் என்பதற்கு மேற்கூறிய காரணமும் பொருந்துமல்லவா?

8. மேற்கூறிய ஜாதி வித்தியாசத்தாலேயே இந்தியாவில் ஒற்றுமைக்குறைவு ஏற்பட்டதென்பதும், அதினின்றும் இந்தியா அவ்வப்போது வேற்றரசர் கைக்குளகப்பட்டு கடைசியாக அடிமைப்பட்டிருக்கிறதெனக் கூறுவதும் உண்மையான விஷயத்தை ஆராய்ந்தறியாமற் சொல்லும் கூற்றேயன்றி வேறல்ல. இந்தியாமீது பலவேற்றரசர்கள் படையெடுத்து வந்ததற்கும், இந்தியருடைய ஒற்றுமை கெட்டுப் பிரதேசத்தினருக்கு அடிமைப்பட்டதற்கும் எழுதி முடியாத வேறு எத்தனையோ காரணங்களிருக்க ஜாதிவித்தியாசத்தைமட்டும் ஒரு காரணமாகக் கூறுவது முற்றிலும் பொருந்தாது. ஏனெனில் ஜாதிவித்தியாசம் இல்லையெனச் சொல்லிக்கொள்ளப்படும் ஐரோப்பாக் கண்டத்திலுங்கூட அடிக்கடி யுத்தம் ஏற்பட்டு அதின் பலனாக குறிப்பிட்ட ஒரு பிரதேசம் ஒருகாலத்தில் ஆங்கிலேயரிடமும், சிலகாலம் பிரஞ்சுக்காரரிடமும், வேறு சிலகாலம் ஜெர்மானியரிடமும், ரஷியரிடமும் இருப்பதற்குக் காரணமென்ன? இவ்விஷயங்களிலிருந்தும், இஸ்ரவேல் ஜாதியார் எகிப்து தேசத்தில் 400 வருஷகாலம் அடிமைகளாய்ச் சேவித்தார்களென்று பைபிளில் (Bible) கூறியிருப்பதிலிருந்தும், உலக சரித்திரங்களிலிருந்தும், பல காரணங்களையிட்டு ஒரு தேசம் ஒரு காலத்தில் அடிமைப்பட்டும், இன்னொருகாலத்தில் சுயாதீனமடைந்துமிருக்கும் என்பது விளங்குகின்றதல்லவா?

9. மேனாட்டாரில் இன்னார் இன்ன தொழில்தான் செய்யவேண்டு

மென்ற கட்டுப்பாடு இல்லாததினாலும், எல்லாரும் மாமிசம் புசிப்பவர்களானதாலும் அவர்களுக்குள் தீண்டக்கூடியவர், தீண்டக்கூடாதவர் என்ற வித்தியாசம் ஏற்படக் காரணமில்லை 'யெனினும், இராஜ குடும்பத்தார் என்றும், பிரபுக்களென்றும், கனவான்களென்றும், தனவான்களென்றும், ஏழைகளென்றும் இப்படிப்பட்ட வித்தியாசங்கள் பண்டைக்காலந் தொட்டு நாளதுவரை ஒழிந்தபாடில்லையே! ஆகவே எல்லாத் தேசங்களிலும் ஏதாவது ஒரு குறிப்பிட்டமுறையில் அந்தத் தேசத்துக்குத் தகுந்தவாறு ஜாதிவித்தியாசம் இருந்துகொண்டிருக்க இந்தியர் முறையைமட்டும் கண்டிக்கவருவது, "முதலாவது உன் கண்ணிலிருக்கிற உத்தரத்தை எடுத்துவிடு, பின்பு உன் அயலான் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துவிட வழி தேடுவாய்" என்று இயேசுநாதர் திருவுளம் பற்றியதை வாய்ப் பேச்சோடு முடித்துவிட்டதாகவே கருதவேண்டியிருக்கிறது.

10. தற்காலம் இந்தியாவில் தொழில் முறைகெட்டு, பிராமணன் உத்தியோகம் செய்வதும், ஆதிதிராவிடன் வேதார்தம் பேசுவதும், வியாபாரம் செய்வதும், எல்லா ஜாதியாரும் யுத்த வீரர்களாகப் பயிற்றப்படுவதும், இவ்விதமாக பற்பல ஜாதியாரும் பண்டைக்காலக் கட்டுப்பாட்டை விட்டு, அடிமைத்தனம், தரித்திரம் காரணமாகத் தங்கள் வயிற்றுப் பிழைப்பையே முக்கியமாகக்கொண்டு பற்பல தொழில்களைச் செய்ய முன்வந்துவிட்டதினாலேயே இனி தீண்டக் கூடியவர், தீண்டக்கூடாதவர் என்ற ஜாதிவித்தியாசங்களைப் பாராட்டக்கூடாது என்று மகாத்மா காந்தி போன்ற பல தேசாபிமானிகள் தேசமுன்னேற்றத்தைக் கருதி போதிக்கின்றார்கள். நம்மையாளும் காருண்ய கவர்ன்மெண்டாரும் நமது நலத்தைக்கருதி ஜாதிவித்தியாசத்தை ஒழிக்கக் கங்கணங்கட்டிக்கொண்டிருப்பது நமது முன்னோர்கள் செய்த புண்ணியத்தின் பலனேயாகும்.

11. ஆனால் ஜாதிவித்தியாசம் இல்லை இல்லையென்று பறைசாற்றும் இந்தியக் கிறிஸ்தவர்களுக்குள் இந்தியாவிலுள்ள ஜாதிவித்தியாசமும், 9-வது பாராவில் கண்ட மேனாட்டு ஜாதிவித்தியாசமும் தாண்டவமாடுகின்றன. இதை நோக்குமிடத்து, குற்றம் செய்யாதவன்போல் வெளியில் பாசாங்குசெய்து அந்தரங்கமாகச் செய்பவனை விட, குற்றம்செய்து ஜெயிலில் அடைபட்டு, சர்க்கார் தண்டனையை அனுபவிக்கும் ஒருவன் பாவமற்றவனாகக் கருதப்படுவானல்லவா? அதுபோல் ஜாதிவித்தியாசம் உண்டு என்று சொல்லிக்கொண்டே அதை அனுசரிக்கும் இந்துக்களைவிட ஜாதிவித்தியாசம் இல்லை யென்று சொல்லிக்கொள்ளும் கிறிஸ்தவர்கள் அவ்வித்தியாசத்தை இந்திய முறையிலும், மேனாட்டு முறையிலும் அனுசரிப்பதால் எவ்வளவு கொடூரமும், தேசத்துக்கும், கடவுளுக்கும், மனிதருக்கும் துரோகம் செய்ததாகவும் ஆகிறது என்பதை ஊன்றிப்பாருங்கள்.

12. முற்கூறிய இந்துக்கள் முறைமைப்படியுள்ள ஜாதிவித்தியாசம் சற்று இயற்கையைப் பொறுத்தது. இது பெரும்பாலும் ஆங்கிலமும் மேனாட்டு நாகரீகமும் பரவாத கிராமங்களில் வசிக்கும் கிறிஸ்தவர்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இதற்கு மேல்ஜாதி கிறிஸ்தவர்கள், கீழ் ஜாதிக் கிறிஸ்தவர்கள் ஆக இருவரும் காரணமாவார்கள். எப்படியெனில் ஆதித்திராவிடர் போன்ற கீழ்ஜாதிக் கிறிஸ்தவர்கள் மேல்ஜாதியார் தங்களிடம் அருவருப்பின்றி நெருங்கிப் பழகும்வண்ணம் நடை, உடை, உணவு சுத்தம் முதலியவற்றில் வெகுதூரம் முன்னேற்றமடையவேண்டும். இப்படிக்கின்றி கிறிஸ்தவர்களானவுடனேயே தாங்கள் எப்படி யிருந்தபோதி

தம் மதத்துக் கிறிஸ்தவர்கள் ஜாதிவித்தியாசம் பாராட்டாது நிற்பதும் உண்மையாக இருக்கவேண்டுமென்று எதிர்ப்பார்ப்பது பகற் கனவே யாகும். ஏனெனில் எல்லோரும் ஏகமனதுள்ளவர்களல்லவென்றும், மனிதருடைய இயற்கை சுபாவம், அருவருப்பு முதலிய அவைகளை விட்டகலாது என்றும் அவர்கள் நினைக்கவேண்டும். மேல்ஜாதிக் கிறிஸ்தவர்கள் அவர்களைத் தங்களோடு சேர்த்துக்கொள்ளும்வண்ணம் அவர்களுக்குப் போதித்த சகல விதத்திலும் அவர்களை முன்னுக்குக் கொண்டுவந்து, அப்படித் திருந்தினவர்களை உடனே யாதொரு வித்தியாசமும் பாராட்டாது தங்களோடு சேர்த்துக்கொள்ளத் தயாராயிருக்கவேண்டும். இவ்விதமாக உபயகட்சியாரும் சேர்ந்தே ஜாதிவித்தியாசம் என்னும் பேயை ஒழிக்கவேண்டியது அவசியமாகும்.

13. இரண்டாவது கூறிய மேனாட்டு முறைப்படியான ஜாதிவித்தியாசம் பட்டணங்களில் வாசஞ்செய்யும் ஆங்கிலங்கற்ற ஐரோப்பிய நாகரீகத்தில் மிதந்துவரும் ஒரு சாராரிற் பலரால் அனுஷ்டிக்கப்படுகிறது. எப்படியெனில், ஆங்கிலங்கற்று உணவிலும், உடையிலும் ஐரோப்பியர் போல் வேடம்போட்டு நிற்கும் ஒருவன், தன் சொந்தக் கிராமத்தில் விவசாயத்தொழில் செய்தும், அதற்குரிய இந்திய நாகரீகப்படி சாதாரணமும், அவசியமுமான உடையுடுத்தியும், தன் பிரயாசத்துக்குத் தக்கபடி கிடைக்கும் உணவையருந்தியும் காலங்கழிக்கும் தன் சகோதரர்களையும், பெற்றோரையும், உறவினரையும் அநாகரீகமுடையவர்களென்றும், புத்தியீனர்களென்றும், தன்னைச் சேர்ந்த ஜாதியாரல்லவென்றும் புறக்கணிக்கத் துணிந்துவிடுகிறான். தலையில் குடுமிவைத்திருப்பதும், பழைய சாதம் சாப்பிடுவதும் கூட இவனுக்குப் பெரிய அநாகரீகமாகத் தோன்றுகிறது! இவனுடைய மதியீனமும், செருக்கும் என்னென்றுரைப்பது! இப்படிப்பட்ட ஒருவன் தன் தகப்பனைத் தனக்கு வேலைக்காரனென்று தன்னைப் போன்ற ஒருவனிடத்தில் சொன்னான் என்பதைக் கூற மனம் கூசுகின்றது!

14. ஆகவே இன்னும் எத்தனையோ விதமாகக் கிறிஸ்தவர்கள் ஜாதிவித்தியாசத்தை யனுஷ்டிக்கிறார்கள். விரிக்கிற் பல ஏடுகள் நிறையும், பேனாமுனையும் மழுங்கும். மேற்கூறிய விஷயங்களை நோக்குமிடத்து இந்திய முறைப்படி அனுசரிக்கும் ஜாதிவித்தியாசம் தொழில், உணவு, ஆசாரம் முதலியவற்றைப் பொருந்தியதாயிருக்கிறதென்றும்; ஐரோப்பிய முறைப்படி அனுசரிக்கும் ஜாதிவித்தியாசம், போலிநாகரீகம், டாம்பீகம், ஆணவம், கர்வம் முதலியவற்றைப் பொருந்தியதாயிருக்கிறதென்றும் தெரிந்துகொண்டதோடு முந்தினதைவிடப் பிந்தினது அதிககேடுள்ளதென்றும் தெரிந்துகொண்டோம். இதை நீக்கவேண்டுமானால் என்ன கற்றபோதிலும், எவ்வளவு பொருளிருந்தபோதிலும் போலி நாகரீகத்தையும், ஆடம்பரமான வாழ்க்கையையும் விட்டு, அவசியமும், சாதாரணமுமான வாழ்க்கையைக் கடைபிடித்து, கர்வம் என்ற பிசாசை ஒழித்து சுயதேச நாகரீகத்தை அனுசரித்து கடவுளிடம் உண்மையான பக்தியை வைத்து இவ்விதமாக நமது நடக்கைகளையும், கொள்கைகளையும் சகல விதத்திலும் சீர்படுத்தவேண்டும். இதற்கான அறிவையும், பலத்தையும், தைரியத்தையும் நமது பாரதமாதா பெற்றெடுத்த சிங்கங்களாகிய நமக்குக் கொடுத்து ரக்ஷிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்பதோடு இவ்வியாசத்தை முடிக்கிறேன்.

A. மேத்துசலா உபாத்தியாயர்,
போர்டு பெண்பாடசாலை,
ஜெயங்கொண்ட சோழபுரம், திருச்சி.

குறிப்பு :—நமது சகோதரர் மேலே பகர்ந்தவாறு ஜாதிவித்தியாசம் வேறு உருவத்தோடேனும் எல்லா நாடுகளிலுமே இருக்கிறதென்பது உண்மையே. நம் நாட்டிலுள்ள ஜாதிபேதம், வைதிகம், ஆசாரம், தொழில் இவற்றைப் பொருத்தது. ஆதியில் தொழிலாலும் யோக்கியதையாலும் இப்பிரிவினைகளுண்டாயின. அக்காலத்தில் யோக்கியத்திலும் ஆசாரத்திலும் உயர்வான மாறுதலடைந்தவன் உயர்ந்த ஜாதியில் சேர்க்கப்பட்டு வந்தான். கீழ்வகுப்பு, தீண்டாமை யிவையுண்டானது ஆசாரத்தாலேயே. இப்பிரிவினைகளுண்டாகி நெடுங்காலமாயின. ஆதலின் ஏககாலத்தில் இவையடியோடொழியா. மேல்நாட்டாரைப்போல் அழியும் உலகபோகங்களாகிய செல்வம் அந்தஸ்து இவற்றின் வித்தியாசப்படி உயர்வு தாழ்வு ஏற்படுத்திக்கொள்வது மிக்க கேவலமான கொள்கையேயாகும்.

இத்தகைய வித்தியாசம் இருப்பினும் யாவரும் கடவுளின் மக்களே, ஒரே மனிதவர்க்கமே ஆதலின் எல்லோரும் சகோதரர்களே என்ற கொள்கையை விட்டுவிட்டு,மனிதருக்கு இயற்கையாகவுள்ள சுதந்தரங்களைக்கூட சிலருக் களிக்க மறுத்து, அவர்களை மிருகங்களிலும் இழிவாய் நடத்துவது (அதிலும் வைகம் விஷயம் பெருங்கோரமானது) கடவுளுக்கொவ்வாததே. சற்றும் ஜீவகாருண்யமில்லாததே. இன்று தீண்டப்படாதவனாக நடத்தப்படும் ஒருவன் நாளை கிருஸ்தவனாகிவிட்டால் அவனைச் சமமாக நடத்துகிறார்கள். ஏன் ? அவன் மதம் மாரியதாலா ? அல்ல. கிருஸ்தவனானபின் அவன் சுத்தமான உடையணிந்து ஆசாரமுடையவனாகக் காணப்படுவதால்தான் அருவருப்பின்றி அவனோடு சம்பாஷணை முதலியன செய்கிறார்கள்.

ஆதலின் நமக்கும் நமது மதத்திற்கும் இழிவையுண்டாக்கி, தற்காலம் நம் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கு இடையூறாகவிருப்பதும், நம் நாட்டுச் சகோதரர்களில், நமது மதத்தைச் சேர்ந்தவர்களில் அனேகர் புறச்சமயம் புகுவதற்குக் காரணமாக விருப்பதுமாகிய இந்த அநீத வித்தியாசம் ஒழியவேண்டுமாயின் நமது நண்பர் மேலே 12-வது பத்தியிற் கூறியதே அதற்கு மார்க்கம். தாழ்ந்த வகுப்பாருக்குக் கல்வியும் ஆசாரமும் உண்டாகும்படி நாம் செய்ய முயலவேண்டும். ஜீவகாருண்ய முடையோரும் தாய்நாட்டின் க்ஷேமத்தைக் கோருவோருமாகிய புண்ணியவான்கள் இதற்கு வேண்டிய சகல முயற்சிகளையும் முறையாய்ச் செய்யவேண்டும். தாழ்ந்த வகுப்பினரை மேலுக்கிழுப்பது தாய்நாட்டின் முன்னேற்றமாகிய சுயநலத்தொண்டேயாகும். கீழ்வகுப்பாரில் அந்த வழிக்கு வந்தவர்களுக்கெல்லாம் சாதாரணமான சுதந்தரங்களை யளிக்கவேண்டும். அவர்களும் ஏககாலத்தில் எடுத்ததே "உன் வீட்டுப் பெண்ணை யெனக்குக் கொடுக்க வேண்டும்" என்று மலையுச்சியிலுள்ளவன் ஒரே பாய்ச்சலாகக் கீழே குதித்து அடியோடு மாள்வதுபோல் நடந்துகொள்ளாமல், நாம் ஆசாரத்தோடு நடந்துகொண்டு சம உரிமைபெற வேண்டுமென்று அடக்கத்தோடேயே ஒற்றுமையாய் வேலைசெய்யவேண்டும்.

வஞ்சத்தோடும் விரோதத்தோடும் செய்யும் எம் முயற்சியும் ஜெயமடையாது அகங்காரமின்றி, குரோதமின்றி அடக்கத்தோடும் சினேகபாவமாகவும் எடுக்கப்பட்ட முயற்சி. கைகூடும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

பத்திரிகாசிரியர்.

---

# சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

## 10-வது ஆண்டு.

நேயர்களே! அடுத்த ஆடிமீ் நமது ஆனந்தனுக்கு 10-வது வருடம் பிறக்கப்போகிறது. முன் இரண்டு வருடங்களில் நடத்தியபடியே அடுத்த ஆனிமாத சஞ்சிகையை வி-பி-யிலனுப்பி 10-வது வருட சந்தாவை வசூலிக்கத் தீர்மானித்திருக்கிறோம்.

முன்பண மனுப்புவோர் 1924ளு ஜூன்மீ் 15உக்குள் நமக்கு வந்து சேரும்படி யனுப்பக் கோருகிறோம். வி-பி-யில் சஞ்சிகை பெறுக்கொள்வதால் 3 அணு அதிகச்செலவும் வீண் ஆலசியமும் நேர்கிறதென்பது கவனிக்கத்தகக்க விஷயம்.

அடுத்த வருடம் சஞ்சிகை வேண்டாதோர் 15-6-1924-க்குள் நமக்குத்தெரிவித்துவிட்டால் ஆனிமீ் சஞ்சிகையை வி-பி-யிலனுப்பாமல் சாதாரணமாகவே யனுப்பிவிடுவோம். அப்படிச் செய்யாது பேசாமலிருந்துவிட்டு, வி-பி வந்தபின் வாபீஸ் செய்து நமக்கு நஷ்டமுண்டாக்கிவிட்டு "9-ம் வருட சந்தாவை நான் அனுப்பியிருக்க எனக்குக் கடைசிச் சஞ்சிகையை யனுப்பவில்லை" என்று குறை கூறுவதில் பயனில்லை. இதைநன்குய்க் கவனிக்கக்கோருகிறோம்.

முன்பணமனுப்புவோரும் சஞ்சிகையை நிறுத்திவிட அறிவிப்போரும் மறவாமல் தங்கள் சந்தா நம்பரை யறிவிக்கவேண்டும். இதுகாறும் அதைக் குறித்துவைத்துக்கொள்ளாதவர்கள் வைகாசிமீ் வரும் சஞ்சிகையின் மேல்உறையைக் கிழித்தெறியுமுன்பே விலாசத்தில் இருக்கும் சந்தா நம்பரை (1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் அல்ல) மறவாமல் குறித்துக்கொண்டு அறிவிக்க வேண்டுகிறோம்.

## இன்னொரு விசேடம்.

சந்தா நேயர்களில் பலர் சஞ்சிகையை மாதம் இருமுறையாக்கவேண்டுமென்றும், அல்லது பக்கங்களையேனும் அதிகப்படுத்தவேண்டும் என்றும் அதற்காகத் தாங்கள் சந்தாத் தொகையை யதிகப்படுத்தியனுப்பச் சித்தமாயிருப்பதாகவும் வரைகிறார்கள்.

முசிரி சாஸ்வதானந்த சபைக் காரியதரிசியாகிய நண்பர் ம-௱-௱-ஸ்ரீ கிருஷ்ணசாமி சர்மா அவர்கள் தாம் 10-ம் ஆண்டு சந்தாவுக்காக ரூ. 1-8 அனுப்புவதாகவே வரைவதோடு எல்லாரையும் அவ்வாறே செய்யுமாறு வேண்டுகோள் ஒன்றும் வரைந்தனுப்பியுள்ளார். இச்சஞ்சிகையில் இடமில்லாததால் அதைப் பிரசுரிக்காததற்கு விசனிக்கிறோம்.

நம் நாட்டார்க்குப் பத்திரிகைகளில் இன்னும் போதுமான அபிமானம் உண்டாகவில்லையாதலின், மேற்கண்ட நண்பரைப்போல் எல்லாரும் நடந்துகொள்வார்களென்று எதிர்பார்க்கக்கூடவில்லை. நாடகம், பயாஸ்கோப் காட்சி முதலியவைகளுக்காக ஒரு வாரத்தில் செலவழிக்கும் பணத்தைச் சஞ்சிகைக்காக ,வருடமொருமுறை செலவழிக்கப் பின்னிடைகிறார்கள். இருக்கும் சந்தாதாரரில் அநேகர் வருடாரம்பத்தில் வி-பி-யை வாபீஸ் செய்துவிட்டுப் பின்னால் 1 ரூபாயனுப்பி மறுபடி சேர்கிறார்கள். இவ்வாறு ஆயிரம்பேர் வாபீஸ் செய்தாலும் சஞ்சிகை 1-க்கு 3 அணு வீதம் ரூபா 187-8-0 நமக்கு நஷ்டமாகிறது.

ஆதலின் சஞ்சிகையை யாதரிக்கும் சந்தா நேயர்கள் நமக்கு சந்தா

தொகையை உயர்த்தியளிக்காவிடினும் இத்தகைய வீண் நஷ்டத்தை யளிக்காமல், ஒவ்வோருவரும் முன்பணமாய் சஞ்சிகையை யனுப்பிவிடவும், ஒவ்வோருவர் ஒவ்வோரு புது சந்தாதாரரைச் சிபாரிசு செய்யவும் முயற்சி யெடுத்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிறோம். இவ்விஷயத்தில் நமக்குச் சற்றேறக்குறைய திருப்தியுண்டாகுமாறு நேயர்கள் மனம் வைத்துச் செய்வார்களாயின், நாம் இந்த சந்தாவுக்கே சஞ்சிகையின் பக்கங்களை (10-ம் வருடத்திலிருந்தே) அதிகப்படுத்தச் சித்தமாயிருக்கிறோம். சந்தாதாரர்கள் நமக்கு நஷ்டத்தை யுண்டாக்காதிருந்தால் அதுவே நமக்குப் பரிசளித்தமாதிரியாகும்.

☞ இப்போது சந்தாவை உயர்த்தி அனுப்பும்படி நாம் கேட்கவில்லை.

பத்திராதிபர்.

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(398-ம் பக்கத் தொடர்ச்சி.)

மனோகரன் "இன்னுமென்ன? இனி நீ என் பட்சத்தில் வேலை செய்வதுதானே?" என்றான்.

ஆனந்த:—"நான் முன்னமே யுன்பட்சத்தில்தான் வேலை செய்கிறேன்" என்றான்.

மனோ:—அப்படியானால் நான் உடனே வேலை செய்யவேண்டும்.

ஆனந்:—நீ இப்போது என்ன செய்யவேண்டுமென்கிறாய்?

மனோ:—நாம் உடனே நியாயாதிபதியிடம் பிராது செய்து சவத்தை யெடுத்துச் சோதனை செய்யவேண்டும்.

ஆனந்:—எதற்காக?

மனோ:—அவள் விஷம்வைத்துக் கொல்லப்பட்டாளென்று ருசுப்படுத்தலாம்.

ஆனந்:—அதை மிக்க சாந்தமாகவே ருசுப்படுத்தலாம்.

மனோ:—ஆயினும் அதை யிப்போது சுலபமாய் ருசுப்படுத்தலாம்.

ஆனந்:—அப்படியல்ல, அது அவசியமானால் இன்னும் ஒருவருடம் வரையில் இச்சவத்தின் தேகத்தில் பாஷாணம் இருக்கிறதென்று ருசுப்படுத்தலாம்.

மனோ:—என் அப்படி வீணாயாலசியம் செய்யவேண்டும்? உடனே செய்வதுதான் நலம்.

ஆனந்தவிங் சற்றுநேரம் அவனை யுற்றுநோக்கி "மனோகரா! நான் சொல்கிறபடி கேள். அதாவது இந்த விஷயத்தைப் பேசாமல் அடியோடு என் பொறுப்பில் விட்டுவிடு. அம்பாலிகை உயிரோடிருந்தபோது கடைசியாய் நீ அவளை எவ்வளவு வனப்போடும் சந்தோஷத்தோடும் கண்டாயோ அதே நிலைமையில் நான் அவளை யுன்னிடம் ஒப்புவிக்கிறேன்" என்றான்.

இம்மொழிகளைக் கேட்ட மனோகரன் தன் ஆசனத்திலிருந்து துள்ளியெழுந்து மிக்க வியப்போடும் ஆத்திரத்தோடும் கலவரத்தோடும் "என்ன? என்ன? நீ கூறுவதன் கருத்தென்ன?" என்றான்.

ஆனந்:—அதிசயமொன்றுமேயில்லை, அம்பாலிகையை உயிரோடும் தேகசுகத்தோடும் உன்னிடம் ஒப்பிவிக்கிறேனென்றுதான் அர்த்தம்.

மனோ:-இறந்துபோனவளைப் பிழைப்பிக்க உனக்குச் சக்தியிருக்கிறதோ?

ஆனந்:—நான் இப்போது இறந்துபோனவர்களைப் பிழைப்பிக்கிற சங்கதியைப்பற்றி பிரஸ்தாபிக்கவேயில்லை.

மனோ:—மற்றபடி நீ கூறுவதை விவரமாய்க் கூறு. இன்றேல் நான் சண்டை பிடிப்பேன்.

ஆனந்:—நீ சண்டைபிடித்தால் பிடித்துக்கொள். நான் சொன்னது சொன்னதுதான். பிறழமாட்டேன்.

மனோ:—அப்படியானால் உடனே விவகாரத்தை நடத்தாமல் ஆலசியம் செய்யலாகாது.

ஆனந்:—"நாம் இரகசியமாய் வேலை செய்யவேண்டும். இன்றேல் அவனுக்கு நாம் அனுகூலம் செய்ததாயாகும். தம்பி! நான் சொல்வதைக் கேள். நன்றாய் கவனத்தில்வை. அம்பாலிகை இறந்துபோகவில்லை" யென்றான்.

இதைக் கேட்டதே மனோகரன் மனம் படபடத்தது. தேகமே உதறலெடுத்துவிட்டது. அவன் சற்றுநேரம் வாய்திறக்கமுடியாமல் மரம்போல் நின்றான். கடைசியில் வாய் குழறிக்கொண்டு "சொல் சொல் விபரம்" என்றான்.

ஆனந்:—இன்னும் விபரம் என்ன கூறவேண்டும்? அவள் உயிரோடேயேயிருக்கிறாள்.

மனோ:—அவள் சவமாய்ப் பெட்டியிலிருந்ததை நான் கண்ணாற் கண்டேனே.

ஆனந்:—அந்த மலையாளத்தான் உனக்குத் தெரியுமல்லவா?

மனோ:—கருப்பண்ணனோடு கூட ஒரு மலையாளத்தானிருக்கிறானென்றும் அவனும் பரம துஷ்டனென்றும் கொலைக்கஞ்சாதவனென்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஆனந்:—அவன் மூலிகைகளைக்கொண்டு வேலை செய்வதில் மிகு சமர்த்தன். அவன் மூலிகைகளைக்கொண்டே உயிர் குறித்த காலமட்டும் உள் அடங்கி யிருக்கும்படிக்கும் தேகம் சவம்போல் தோன்றும்படிக்கும் செய்துவிட்டிருந்தான்.

மனோ:—அப்படி யிருந்தாலும் புதைத்துவிட்டார்களே. பிராணன் வெளிவந்தவுடன் மூச்சடைத்து இறந்துபோவாளே.

ஆனந்:—அது உண்மைதான். ஆனால் புதைத்த ஒருமணி நேரத்திற்குள் அவளை வெளியில் எடுத்துவிட்டார்கள்.

மனோ:—அப்படியானால் இப்போதவள் எங்கிருக்கிறாள்?

ஆனந்:—அதைக் கண்டுபிடிப்பது என் வேலை.

மனோ:—இந்த சங்கதிகள் யாவும் உனக்கெப்படித் தெரிந்தது?

ஆனந்:—நான் துப்பறிபவன்.

மனோ:—அவளைச் சவப்பெட்டியினின்று எடுத்துவிட்டார்களென்று எப்படித் தெரியும்?

ஆனந்:—அம்பாலிகையின் தேகத்திற்குப் பதில் இப்போது வேறொரு தேகம் அங்கே வைக்கப்பட்டிருக்கிறது. அதிலும் விஷம் நிறைந்திருக்கிறது. நாம் கைது செய்தாலும் அதற்கும் அவர்கள் ஆயத்தமாயிருக்கிறார்கள். சவத்தை யெடுத்துச் சோதிப்பதற்கு இப்போது அவர்கள் பயப்படவில்லை.

மனோகரன் மிக்க வியப்படைந்து "இவற்றையெல்லாம் நீ யெப்படி கண்டறிந்தாய்?" என்றான்.

ஆனந்:—இரண்டுமுறை அர்த்த இரவில் மயானத்திற்குச் சென்று சவக்குழியைச் சோதித்துப் பார்த்தேன்.

மனோ:—அவர்கள் நோக்கந்தான் என்ன?

ஆனந்:-உன்னைக்கொண்டே அம்பாலிகை மிறந்துவிட்டாள் என்று ருசுப் படுத்திவிட்டு ஆஸ்தியை யபகரித்துக்கொள்ள வேண்டுமென்பதே.

மனோ:—ஏன் அதற்காகத்தான் கள்ள மரணசாதனம் ஏற்படுத்திவைத்துக் கொண்டிருக்கிறார்களே.

ஆனந்:—ஆம். இரண்டு பக்கங்களிலும் ஆயத்தமாய் வேலைசெய்து வைத்திருக்கிறார்கள்.

மனோ:—ஆம். அம்பாலிகை இறந்தாள் என்று ருசுப்படுத்தினால், அவளைக் கொன்றவன் யார் என்று ருசுப்படுத்த வேண்டுமல்லவோ?

ஆனந்:—அம்பாலிகையின் சிற்றப்பன் மகனாகிய மனோகரனே விஷம் வைத்துக் கொன்றானென்று ருசுப்படுத்த சகல அத்தாட்சியும் ஆயத்தமாய் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரங்கள்

### மதம் மாறினார்கள்.

பம்பாய் மாகாணம் இந்து சபையின் ஆதரவில் மரல்பூர், காலக், ராஜ டாங்காரி முதலிய கிராமங்களில் 120 கிறிஸ்தவ குடும்பத்தைச் சேர்ந்த 363 (மனிதர்கள் ஸ்திரீகள் சிறுவர்கள் உட்பட) கிறிஸ்துவர்கள் 1924-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 4, 6, 8-ந் தேதிகளில் அங்கலேஸ்வர மத்திய சபையில் இந்து மதத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

பம்பாய் இந்து மிஷனரி சங்கத்தின் ஆதரவில் மிஸ் கோராவில்ஸன் என்னும் பெண்மணி ஏப்ரல் மாதம் 11-ந்தேதி வெள்ளிக்கிழமை இந்து மதத்தில் சேர்ந்துகொண்டாள். இம்மாதுக்கு சுசீலா என்னும் புதுப் பெயரிடப்பட்டிருக்கின்றது. ஸ்ரீமான் எஸ். வைத்தியா ஆச்சாரியாராகவும், ஸ்ரீமான் எஸ். ஜி. ஜோஷி புரோகிதராகவும் வேலை பார்த்தார்கள்.

குறிப்பு:—இவ்வாறு தென்னாட்டிலும் இந்துமத சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டு, நமது மதத்திலிருந்து புறமதம் புகுந்தவரைச் சொல்பச் செலவில் பிராயச்சித்தம் செய்து திரும்பவும் மதத்தில் சேர்த்துக்கொள்ளத் தொடங்கின் ஏராளமானபேர் திரும்பிவிடுவார்கள். இக்காலத்தில் இது அவசியமாகச் செய்யவேண்டிய வேலையாகும். செல்வவந்தர்கள் பல வழிகளில் பெருமையைக் கருதிப் பெருந்தொகைகளைத் தருமத்தில் செலவழிக்கிறார்கள். அத்தகையோர் இந்தப் பெரும் புண்ணியத் தொழிலைச் செய்ய மனம் திரும்ப வேண்டாவோ.

புறச்சமயத்தவர் நம்மவரை மயக்கித் தம்மதத்தில் தினேதினே கும்பு கும்பாய் இழுத்துக்கொண்டிருக்கும்படி விட்டுவிட்டால், கடைசியில் நமது எண்ணிறந்த கோயில்களுக்கு யார் போவது, உத்ஸவாதிகளை யார் செய்வது என்ற உண்மையை இனியேனும் சிந்திக்கவேண்டாவோ.

அளவுகடந்த பொருளைச் சிவதருமத்தில் செலவழிக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களே முக்கியமாய் இத்தகைய புண்ணியச் செயலில் ஈடுபடவேண்டும். அவர்களில் ஒரு புண்ணியவான் இதற்காக முன் வந்து நின்றால் முன்னவனே முன் நின்று முடிப்பானென்பது நிச்சயம்.

ஓம்தத்ஸத்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

இரக்தாக்ஷிஸ்ரு ஆனிமீ—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847,
பசலி 1333—கோல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1342,
இங்கிலீஷ் 1924ஸ்ரு ஜூன்மீ—ஜூலைமீ

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | து39-23 | சுவா20-48 | அ20-48சி | கரிநாள் |
| 2 | 15 | ஞா | திர30-23 | விசா14-8 | மர60 | பிரதோஷம் |
| 3 | 16 | திங் | ச○22-50 | அனு6-45 கேட்59-8 | சித்60 | பௌர்ணமி,குளம், கிண றுவெட்ட, சூளைபோட |
| 4 | 17 | செவ் | பௌ11-3 | மூல51-43 | அ51-43சி | |
| 5 | 18 | புத | பிர1-45 துதி53-15 | பூரா45-3 | அமி60 | கணிதாரம்பம், மாடுவா ங்க, வியாதியஸ்தர் கு |
| 6 | 19 | வியா | திரி45-58 | உத்39-33 | சித்60 | கரிநாள் [ளிக்க |
| 7 | 20 | வெ | சது40-33 | திரு35-35 | ம35-35சி | |
| 8 | 21 | சனி | பஞ்36-8 | அவி33-25 | சி33-25அ | தானியம் வாங்க [தம் |
| 9 | 22 | ஞா | சஷ்34-13 | சதை33-20 | சித்60 | நிஷேகம், சர்வ முகூர்த் |
| 10 | 23 | திங் | சப்34-13 | பூரட்35-10 | ம35-10சி | பிரயாணம் விலக்கல் |
| 11 | 24 | செவ் | அ36-13 | உத்-38-48 | அ38-48சி | பிரயாணம் விலக்க |
| 12 | 25 | புத | நவ39-45 | ரேவ-44-48 | மர60 | மரணயோகம் |
| 13 | 26 | வியா | தச44-30 | அசு50-18 | அ50-18சி | வித்யாரம்பம்,பும்சவனம் |
| 14 | 27 | வெ | ஏகா50 | பரணி57-25 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 15 | 28 | சனி | து55-55 | ※ கிரு60 | அமி60 | கிருத்திகை |
| 16 | 29 | ஞா | திர60 | கிரு4-48 | சித்60 | பிரதோஷம் |
| 17 | 30 | திங் | திர1-55 | ரோ12-15 | அமி60 | மாச சிவராத்திரி |
| 18 | 1 | செ | சது7-38 | மிரு19-23 | சி19-23ம | சர்வத்திர அமாவாசை |
| 19 | 2 | புத | அ●13-8 | திரு26-10 | சித்60 | சூளைக்கு நெருப்புவைக்க |
| 20 | 3 | வியா | பிர17-50 | புன32-23 | அமி60 | சந்திரதரிசனம் |
| 21 | 4 | வெ | துதி21-58 | பூச37-45 | மர60 | |
| 22 | 5 | சனி | திரி25-5 | ஆயி42-8 | மர42-8அ | |
| 23 | 6 | ஞா | சது27-3 | மக45-33 | ம45-33சி | |
| 24 | 7 | திங் | பஞ்27-53 | பூர47-40 | சித்60 | |
| 25 | 8 | செ | சஷ்27-15 | உத்18-18 | அ48-18சி | |
| 26 | 9 | புத | சப்25-8 | அஸ்47-28 | ம47-28சி | |
| 27 | 10 | வியா | அ21-20 | சித்42-38 | சி42-38அ | |
| 28 | 11 | வெ | நவ16-13 | சுவா41-25 | சித்60 | |
| 29 | 12 | சனி | தச9-48 | விசா36-28 | சித்60 | |
| 30 | 13 | ஞா | ஏகா2-18 துவா54-8 | அனு30-33 | மர60 | |
| 31 | 14 | திங் | திர45-35 | கேட்24-10 | சித்60 | பிரதோஷம் |
| 32 | 15 | செவ் | சது36-55 | மூல17-33 | அ17-33சி | தக்ஷிணாயன புண்யகா லம் நா-19-42-க்குள் |

(ஜூன்மீ column, rows 18–32: 1924ஸ்ரு ஜூலைமீ)

| | | | |
|---|---|---|---|
| | | புத | சூரி சுக் |
| கே செ | 12உமிது-பு<br>27 ,, கட-புத | | |
| | | | ராகு |
| | குரு | சனி | |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry St., Madras.

உபயம்
தி. நா. மு.
ஜோனைநிவாசம்
...
11-7-24

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

ஸ்ரீ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 9 } இரக்தாட்சிஸ்ரீ ஆனிமீ கஉ { பகுதி
1924ஸ்ரீ ஜூன்மீ 14உ 12

## கடவுள் வணக்கம்.

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
வாலமமு தாக விலையோ
வக்கடலின் மீதுவட வனல்நிற்க வில்லையோ
வந்தரத் தகில கோடி
தாழாது நிலைநிற்க வில்லையோ மேருவுந்
தறுவாக வளைய விலையோ
சத்தமே கங்களும் வஜ்ரதா ரணையிற்
சஞ்சரித் திடவில் லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாக விலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்க விலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கரு மையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே. (1)

செய்யுந் தவஞ்சற்று மில்லாத நானுன் றிருவடிக்கே
கொய்யும் புதுமல ரிட்டுமெய் யன்பர்குழாத் துடனே
கையுஞ் சிரமிசைக் கூப்பிநின் றுருகிக் கசிந்துருகி
உய்யும்படிக் கருள்செய்வ தென்றோ புலியூ ரத்தனே. (2)

அத்தனைச் சிற்றம் பலவனை யென்னுயி ராகின்ற
சுத்தனைச் சுத்த வெளியா னவனைச் சுகவடிவாம்
நித்தனை நித்த நிராதார மாகிய நின்மலனை
எத்தனை நாள்செல்லு மோமன மேகண்டி றைஞ்சுதற்கே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. ஆழ் ஆழி=ஆழமாகிய கடல்.

ஒரு சிறிய குளம் அல்லது ஏரிக்கும் தக்க கரை யிருக்கவேண்டியது அவசியமாயிருக்க 5, 6, சில விடங்களில் 7, 8 மைல்கள் ஆழமுடைய அகன்ற கடல் கரையில்லாமலே நிலைத்திருக்கிறது. இது ஈசுவரனுடைய அபூர்வ சக்தியைக் காட்டுகிறது.

ஆலம் அமுதாகவிலலையோ=உண்டாரைக் கொல்லும் குணமுடைய விடம் உணவாகிவிடவில்லையோ.

இது திருப்பாற்கடல் கடையப்பட்டபோது அதில் உண்டான விஷத்தைப் பரமசிவம் அருந்தி தேவர்களுக்குத் துன்பம் நேராவண்ணம் காப்பாற்றி யருளினதைக் குறிக்கிறது.

"அக்கடலின்மீது வடவனல் நிற்கவில்லையோ" என்றது, கடல் எல்லை கடந்து செல்லாவண்ணம் பரமசிவம் பெட்டைக் குதிரையின் வடிவமாக வடவாமுக அக்னியைக் கடல் மத்தியில் நிறுத்தி யிருக்கிறார் என்று கூறப்பட்டிருக்கிறதைக் குறிக்கிறது.

"அந்தரத்து அகிலகோடி தாழாது நிலைநிற்கவில்லையோ"—இப்பூமி உருண்டை வடிவமாக விருக்கிறது. இதைச் சூழ்ந்து எல்லாப் பக்கங்களிலும் ஆகாயமே யிருக்கின்றது. இப்பூமியைப்போல் சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் முதலியவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு அண்டமே. இந்த அண்டங்களெல்லாம் எவ்வித ஆதாரவுமின்றி வெட்டவெளியாகிய ஆகாயத்தில் நின்றுகொண் டிருக்கின்றன. இதுவும் கடவுளின் அதியற்புதச் சாமார்த்தியங்களுக்கு ஒரு அத்தாட்சியே.

மேரு=மகம்மேருமலை. தநு=வில்.

திரிபுரதகனம் செய்தகாலத்தில் பரமசிவம் மேருமலையையே வில்லாக அமைத்துக்கொண்டார் என்பதனால் "மேருவும் தநுவாக வளைய வில்லையோ" என்றனர்.

சத்தமேகங்கள்=1. சம்வர்த்தம், 2. ஆவர்த்தம், 3. புட்கலாவர்த்தம், 4. சங்காரித்தம், 5. துரோணம், 6. காளமுகி, 7. நீலவருணம் என்ற ஏழு மேகங்கள். இவை முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ என்பவற்றைப் பொழிவன.

வஜ்ரதரன்=வஜ்ராயுதத்தையுடைய இந்திரன்.

மேகங்களையெல்லாம் வரைகடந்து செல்லாது காப்பவன் இந்திரன் ஆதலின் "சத்தமேகங்களும் வஜ்ரதரன் ஆணையில் சஞ்சரித்திடவில்லையோ" என்றார்.

"இராமனடியாற் சிலையும் மடமங்கையாகவிலையோ" என்றது, ஸ்ரீ ராம பிரான் பாதம் பட்டமாத்திரத்தில் கல்லாகச் சபிக்கப்பட்டிருந்த அகலிகை சாபவிமோசனம் பெற்று பழையபடி பெண்ணுருவ மடைந்ததைக் குறிக்கிறது:

மணிமந்திரமாதி=மணி, மந்திரம், ஔடதம்.

இவற்றால் உலகில் வியாதிகளை நீக்குதல் முதலிய பல அரிய காரியங் களைச் செய்கிறார்கள்.

இத்தகைய அரிய காரியங்களெல்லாம் சுலபமாக நடைபெறும்போது அடியேன் மனம் குவியும்வண்ணம் ஒரு உபாயம் செய்வது உமக்கு அருமையாகுமோ? ஆகாது என்றபடி.

இதனால் மனதை யடக்குவது மிகக் கஷ்டசாத்தியமான காரியம் என்றும், ஈசுவரன் அருள் பெற்றாலே அது அநுகூலமாகுமென்றும், அதாவது பக்தி யவசியம் வேண்டுமென்றும் நாம் உணரல்வேண்டும்.

2. செய்யும் தவம் சற்றுமில்லாத நான்=செய்யவேண்டிய தவத்தைக் கொஞ்சமும் செய்யாத நான்.

புலியூர் அத்தன்=சிதம்பரத்தில் பஞ்சகிருத்தியத் தாண்டவம் புரியும் ஸ்ரீ நடராஜப்பெருமான்.

"பரம்பொருளே! உன்னருளைப் பெறுதற்கு நெறியோடு ஒரு தவத்தையும் செய்யாத நான் நின்னடியார் கூட்டத்தோடு சேர்ந்து சரியை கிரியைகளால் நின்னைப் பூஜித்து, அதனால் எனக்கு நின்னிடம் பூரண பக்தியுண்டாகும் வண்ணம் அருள்புரியவேண்டும்" என்பது இதன் கருத்தாம்.

இதில் பக்தி இன்றியமையாததென்பதும், அப்பக்தி அடியார்க்குத் தொண்டுபுரிவதாலும் அவர்கள் சகவாசத்தாலும் கிடைக்குமென்பதும், அப்பக்திபுண்டாவதற்கும் அவனருள் வேண்டுமென்பதும் உணரக் கிடக்கின்றன.

"அவனருளாலே அவன்தாள்வணங்கி"

என்றனர் மாணிக்கவாசகரும்.

அடியார்கள் பணியைப்பற்றி தாயுமான சுவாமிகளே "அன்பர்பணி செய்யவென்னை, யாளாக்கி விட்டுவிட்டால் — இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்றருளினர்.

3. சிற்றம்பலவன்=சித்+அம்பலவன்.

சித்=சித்தம்: அம்பலம்=ஆகாயம்.

'சித்தத்திலுள்ள ஆகாயத்தில் நடித்துக்கொண்டிருப்பவன்' என்பது இதற்குப் பொருள். மனதின்கண்ணுள்ள இராகத்துவேஷாதி குணங்களனைத்தும் அழிக்கப்பட்டபோது அதன் இரஜோதமோ குணங்கள் நசி

உயர்ந்தவிதையென்கிறோம். இரணவைத்தியன் நம்தேகத்திலுள்ள பிளவையை யறுத்துச் சிகிச்சை செய்யும்போது நமக்கு மிக்க பாதை யுண்டாயினும், பிறகு நமக்குச் சுகமுண்டாவதால் அவ்வைத்தியர் நமக்குச் சுகத்தை யுண்டாக்கவேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடு செய்தார் என்று உணர்கிறோம்.

இப்போது நம்மக்கள் பயிற்சி செய்யப்படும் மாதிரியால் எத்தகைய பயன் விளைகிற தென்ற உண்மையைக் கவனிப்போம். முற்காலத்தில் கல்விகற்பதென்றால் பாஷைக்கல்வியும்,ஒழுக்கமும், பக்திஞானமும் உண்டாக்கும் கல்வியைக் கற்பதென்றே பொருள். இக்காலத்தில் பெற்றோர்கள் தம் மக்களைப் பாடசாலைக்கனுப்புவதோடு தங்கள் கடமை ஒழிந்தது என்று கருதுகிறார்களேயன்றி, மக்களின் ஒழுக்கம் ஆசாரம் நடக்கைகள் முதலியவைகளைச் சற்றும் கவனிப்பதேயில்லை. முற்காலத்தில் தந்தைமார்கள் தம் புத்திரர்களுக்குக் கல்விகற்பிக்கும் உபாத்தியாயர்களிடம் மிக்க அறிமுகமும் பழக்கமு முண்டாக்கிக்கொண் டிருப்பார்கள். இதனால் பிள்ளைகள் பாடசாலைக்கு வெளியிலும், தம் வீடுகளிலும் செய்யும் குற்றங்கள் உபாத்தியாயருக்கு எட்டிவிடும். அவர் மறுநாள் காலை பையன் பாடசாலைக்கு வந்ததும் "அடே! நீ இரவு வீட்டில் ஏன் பாடம் படிக்கவில்லை? உன் தாயாரிடம் ஏன் எதிர்த்துப் பேசினாய்?" என்று கண்டித்தும் தண்டித்தும் புத்தி புகட்டுவார்.

இக்காலத்திலோ பையன் பாடசாலைக்குச் செல்வதாய்ப் போய்வருவதுதான் தந்தைக்குத் தெரியும். பிறகு அவன் பரீட்சையில் சரியாய்ப் புள்ளி வாங்கிவிடவேண்டியது. அப்புள்ளிகள் சீட்டாட்டத்திற்கும், ஸிகாரெட் பிடிப்பதற்கும் வாங்கினாலும் சரி. பரீட்சையில் தேரிவிட்டால் பிள்ளை ஒரு துரைத்தன வேலையில் 15 ரூபாய் சம்பளத்தில் அமர்ந்துவிட்டாலும் போதும், இந்திரப்பதவி வந்ததுபோல்தான்.

இனி இவர்கள் கற்கும் இக்கல்வி நம்மக்கள் சீர்பெறுவதற்கும், தாய்நாடு முன்னேற்ற மடைவதற்கும் எவ்வளவுதூரம் அநுகூலமாக விருக்கிறது என்பதையும், இக்கல்வி என்ன நல்ல பலன்களையும் தீய பலன்களையு மளிக்கிற தென்பதையும் ஆராய்வோம்.

1. இப்போது நம் மக்கள் கற்கும் ஆங்கிலக்கல்வி பிற்காலத்தில் அவர்கள் துரைத்தனத்தாரிடம் சேவகம் செய்வதற்கு மட்டுமே, அதாவது அடிமைத் தொழில்செய்யவே உபயோகப்

படுகிறது. ஏனெனில் துரைத்தனம் நடைபெற அவசியமான வேலைகளைச் செய்வதற்கு வேண்டிய கல்விமட்டுமே பாடசாலைகளில் கற்பிக்கப்படுகிறது. கடவுளைப்பற்றிய கல்வியாவது, ஆன்மார்த்தக் கல்வியாவது, மக்களுக்கு தேசபக்தி, தன்மதிப்பு, வீரம், ஊக்கம் முதலியவற்றை யுண்டாக்கும் கல்வியாவது கொஞ்சமும் கிடையாது. பிள்ளைகளின் ஆசாரம், ஒழுக்கம், நடவடிக்கைகளைப்பற்றிக் கவனிப்பதே கிடையாது.

ஆகையால் கல்வி முடிந்தபின் மாணவர்கள் துரைத்தனத்தாரிடமோ, வர்த்தக சங்கத்தாரிடமோ அடிமைத்தொழிலில்போய் அமர்கிறார்கள். அபரிமிதமாய் அவ்வழியிலேயே அனேகர்போக முயல்வதால், பெரும்பாலர் வேலையகப்படாமல் திண்டாடுகிறார்கள். உயர்தரக் கல்வி கற்றவர்களில் பெரும்பாலார் பட்டதாரிகளானபின் (பி.ஏ., பி.யல்.) வக்கீல்களாய்விடுகிறார்கள். இவர்கள் நீதியை யெடுத்து நியாயாதிபதிக்குக் காட்டுகிறவர்கள் என்று நம்பப்படுகிறது. ஆனால் உண்மை யனுபவத்தில் இவர்கள் தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமாகத் தொழில் செய்யவேண்டியவர்களாக விருக்கிறார்கள். இன்றேல் இவர்கள் ஜீவனம் நடைபெறுவது கஷ்டமாக முடியும். இவர்கள் தம் தம் கட்சியே (உண்மையாயினும் பொய்யாயினும்) நியாயமானதென்று வாதிப்பதால் நியாயாதிபதிக்கு நீதியை யெடுத்துக் காட்டி உதவி செய்வதற்கு மாறாய், அவருக்குக் குழப்பத்தை யுண்டாக்கிவிடுகிறார்களெனலாம்.

சிலர் பட்டதாரிகளானபின் ஆயுர்வேதப் பரீட்சையில் தேறி துரைத்தனத்தாரிடமோ, சுயாதீனத்தோடே தாமாகவோ வைத்தியத்தொழில் செய்கிறார்கள். இவர்கள் நம்முன்னோர் நெறிநின்று இத்தொழிலைச் செய்யின் இதனால் புண்ணியம் சம்பாதித்துக் கொள்ளலாம். இவ்வளவேதவிர நம்மவரில் படித்தவர்கள் விவசாயம், வர்த்தகம், கைத்தொழில் முதலியவற்றைக் கனவிலும் நினைப்பதில்லை. இன்னும் அவற்றைக் கௌரவத் தாழ்வான தொழில்களாகவே கருதுகிறார்கள். நம் நாடு இத்தகைய தாழ்ந்த நிலைமையிலிருப்பதற்கு இஃதோர் முக்கிய காரணமாகும்.

இவர்கள் கற்கும் கல்வியாலடையும் பயன் இவ்வளவேயாக, கல்விகற்கும் முறைமையால் நம்மக்கள் அடையும் வேறுவிதப் பயன்கள் பலவுள. அவற்றையுற்றுணரும் ஒவ்வொருவர் மன

மும் வேதனையடையும் என்பதில் சற்றும் ஐயமின்றாம். அந்தப் பயன்கள் எவை யென்று கூறுதும்.

1-வது. தம் முன்னோரின் நடையுடைபாவனைகளை யவமதித்துவிட்டு அன்னிய நாட்டாரின் ஆசாரங்களில் பழகத்தொடங்குகிறார்கள். குடுமியை வெட்டி யெறிந்து அரைமொட்டையாகி (கிராப்) ஷர்ட், கழுத்துப்பட்டை, மார் மூடாத மேல்சட்டை (ஒபன் கோட்) முதலியவை யணிந்து மேல்நாட்டார்போல் அரை வேடம் கால்வேடம் போட்டுக்கொள்கிறார்கள்.

2-வது. மூத்தோர் என்ற அச்சம் அடியோடு கிடையாது.

3-வது. பாடசாலைக்குப் போகும் வழியில், இரயில் அல்லது டிராம் வண்டியில் கூடப் புத்தக மூட்டையைக் கக்கத்திலோ பக்கத்திலோ வைத்துக்கொண்டு பகிரங்கமாய் பீடி, ஸிகரெட் பிடிக்கிறார்கள்.

4-வது. சற்று தூரத்திலிருந்து இரயில்வண்டியில் பாடசாலையிருக்குமிடத்திற்கு வரும் பிள்ளைகள் நான்குபேர் ஐந்துபேர் ஒரு கூட்டமாய்ச் சேர்ந்து, சீட்டாடிக்கொண்டே செல்கிறார்கள். பெரும்பாலான பிள்ளைகள் தினம் தங்கள் காலத்தின் ஓர் பாகத்தை யிந்த விளையாட்டில் செலவழிப்பது பிரத்தியட்ச அனுபவம். கல்வி கற்றாலும் கற்காவிடினும் சீட்டாடமட்டும் ஆரம்பத்திலேயே கற்றுக்கொள்ளுகிறார்கள்.

இம்மாதிரி தூரத்திலிருந்து இரயிலில் வரும் பிள்ளைகள் நிலைமை மிக்க துயரமானது. எப்படியெனில், இவர்கள் காலை 7-30 மணிக்கோ, 8 மணிக்கோ புறப்படவேண்டி யிருக்கிறது. மாலை பாடசாலை 4 மணிக்கு மூடப்பட்டாலும் இவர்கள் 5 மணிக்கு மேல் இரயிலேறிச் செல்லவேண்டும். மத்தியிலுள்ள காலத்தைக் கடைவீதிகளில் சுற்றுவது, பீடி பிடிப்பது, முதலிய வேலைகளில் கழிக்கிறார்கள். வீடு சேர்ந்தபின் கிரிகட் அல்லது சீட்டாட்டத்தில் பெரும்பாலர் காலங் கழிக்கின்றனர். பாடம் படிப்பது கடவுளுக்கே பிரீதி. பெற்றோர் சம்பளம் கொடுத்துப் புத்தகங்கள் வாங்கிக்கொடுத்து தினம் கட்டமுதும் கட்டிக் கொடுப்பதோடு தங்கள் கடனைக் கழித்து விடுகிறார்கள்.

முக்கியமாக இச்சென்னையிலுள்ள மாணவர்களில் பெரும்பாலாரின் நடக்கை இம்மாதிரித்தான் இருக்கிறது. நகரத்திலேயே வசிக்கும் மாணவர்கள் காபி கிளப்புகளுக்குச் செல்வதை

யும், பயாஸ்கோப், டிராமா, கடற்கரை முதலிய விடங்களில் காலங் கழிப்பதையும் பற்றி விரிக்கிற் பெருகும்.

5-வது. இவர்களுடைய பாட முறையில் தாய்ப்பாஷைக்குத் தகுந்த மதிப்பில்லை. ஆங்கிலமே நமக்கு அவசியமான பாஷை யென்றும் தாய்ப்பாஷை அவசியமல்லவென்றும் இவர்கள் கருது வதால் தாய்ப்பாஷையை மிக்க அலட்சியமாய்க் கருதுகிறார்கள். இவர்கள் படிக்கும் ஆங்கில நூல்கள் பெரும்பாலும் மேல்நாட்டா ரின் ஒழுக்கங்களைப்பற்றியும் அந்நாட்டின் சமாசாரங்களைப்பற்றி யுமே கூறுகின்றன. இவர்கள் கண்ணால் கண்டிராதவையும் இனி யும் காணமுடியாதவையுமான இடங்களையும் பொருள்களையும் பற்றியே யிவர்கள் வாசிக்கிறார்கள். தாய்ப்பாஷையில் ஏதோ ஒரு பாட புத்தகத்தை யலட்சியமாய்ப் படிக்கிறார்களாதலின் தாய்நாட்டின் பூர்வ நிலைமை, ஆசார ஒழுக்கங்கள், தம் முன்னோர் களின் பெருமை முதலியவை எவையும் இவர்கள் கற்றுணரச் சந் தர்ப்பம் வாய்ப்பதில்லை. பெற்றோரோ தம்மக்கள் இவற்றைக் கற்கவேண்டுமே என்பதைப்பற்றி சிந்திப்பதேயில்லை. இதனால் மேல்நாட்டு ஆசார ஒழுக்க வாசனையே பிள்ளைகளுக்கு அதிகமாய் ஏறுகிறது. தாய்நாட்டு ஆசாரம் முதலியவற்றில் அகௌரவ நோக்கம் உண்டாகிறது.

6-வது. பிள்ளைகளுக்கு உபாத்தியாயரிடத்தில் சற்றும் அச்சமென்பதே கிடையாது. குரு சீடன் என்ற முறைமையே யில்லை யெனலாம். பிள்ளைகள் 17-18-வது வயது வரும் வரையில் பெரும்பாலும் கல்வியினாலடையும் பயன் இன்னதென்று அவர்க ளுக்குத் தெரியாது. நாம் கல்விகற்றால்தான் பொருள் சம்பாதிக் கலாம், உலகபோகங்களை யனுபவிக்கலாம் என்ற உணர்ச்சியும் கிடையாது. அக்காலத்தில் அவர்கள் பெற்றோர்க்கும் உபாத்தி யாயருக்கும் பயந்துதான் பாடசாலைக்குச் செல்வதும் பாடம் படிப்பதுமே இயற்கை.

பிள்ளைகளுக்கு நடவடிக்கைப் படியவேண்டுவதும் இவ்விள வயதிலேயே. சிறுவர்கள் மனம் வெள்ளைக் கடிதம் போன்றது. வெள்ளைக்கடிதத்தில் எவ்விதச் சித்திரம் வரைகிறோமோ அது அவ்விதமே பதிந்துவிடும். இக்காலத்தில் பெற்றோர்களும் அதைப் பற்றி கவனிக்காமல் உபாத்தியாயரும் கவனிக்காமலிருந்துவிட் டால் அவர்கள் எக்கெதியாவார்கள். இத்தகையோரால் தாய்

நாடு என்ன சிறப்படையும்? பாடசாலைகளில் உபாத்தியாயர்கள் கையில் பிரம்புவைத்துக்கொண்டேயிருக்கலாகாது என்பது விதியாம். இப்படியிருந்தால் பிள்ளைகள் உபாத்தியாயரை அலட்சியம் செய்யக் கேட்கவும் வேண்டுமோ. இக்காலத்தில் உபாத்தியாயர்களில் அனேகர் மிக்க இள வயதுள்ளவர்களாக விருக்கிறார்கள். அவர்களுக்குச் சிறுவரை நடத்தும் முறை தெரியாது. அவர்களே இன்னும் அனேக விஷயங்களைக் கற்றுக்கொள்ள வேண்டியவர்களாகவும், இன்னும் அடக்கம் ஒழுக்கம் அறியாதவர்களாகவு மிருக்கிறார்கள். 22-23 வயதிற்குள் ஒரு பரீட்சையில் தேறி உபாத்தியாயர் வேலைக்கும் பயிற்சியடைந்துவிட்டால் உபாத்தியாயராக வந்துவிடுகிறார்கள். பிள்ளைகளுக்கு இவர்களிடம் எப்படி அச்சம் பயம் உதிக்கும்? இக்கால உபாத்தியாயரோ பாடபுத்தகத்திலுள்ளதைக் குறித்த நேரத்திற்குள் பிள்ளைகளுக்குப் போதிப்பதோடு தம் உபாத்திமைத் தொழிலின் கடமை தீர்ந்துவிட்டதெனக் கருதுகிறார்கள்.

தமிழ் உபாத்தியாயர்களில்தான் பெரும்பாலோர் வயது முதிர்ந்தவர்களாகவும், பல நூல்களைக் கற்ற பண்டிதர்களாகவும், உலக அனுபவமும், (சிலர்) ஆன்மார்த்தக்கல்வியு முடையவர்களாகவும் இருக்கிறார்கள். இத்தகையோரே உபாத்தியாயர், ஆசிரியர், குரு என்ற பதவிக்குரியவர்கள். இவர்களிடமோ பிள்ளைகளுக்கு அச்சமே கிடையாது. ஏனெனில் தாய்ப்பாஷைக் கல்வி தாழ்ந்த நிலைமையிலிருப்பதால் நமது மக்களுக்கு ஆங்கிலத்திலிருக்கும் அக்கரையும் மதிப்பும் தாய்ப்பாஷையிலில்லை. ஆகவே அதன் உபாத்தியாயரிடமும் அவ்வாறே யிருக்கிறது.

இவ்வாறு பயிற்சியடைவதால் இவர்கள் கல்வி முடிந்து தொழில் செய்யும்போதும், ஒரு விடத்தில் தொழில் செய்வோர் ஒரு சங்கமாய்ச் சேர்ந்து பந்தடிப்பதும், அல்லது நாடகம் கற்றுக்கொண்டு ஆடுவதுமாகிய காரியங்களைச் செய்கிறார்கள். மேல்நாட்டாரிடமிருந்து நமக்குச் சீர்கேட்டை யுண்டாக்கும் விஷயங்களை யெல்லாம் கற்றுக்கொள்வதில் மிகச் சுறுசுறுப்பாக விருக்கிறார்கள். இப்போது சிலர் மீசையில் அரையே அரைக்கால் பாகத்தை யெடுத்துவிட்டு காலேயரைக்கால் மீசை வைத்துக்கொள்கிறார்கள். ஒரு வெள்ளையன் ஒரு பக்கம் காதை யறுத்துவிட்டு வரக்கண்டால் இவர்கள் அதுவும் நாகரீகச் சீர்திருத்தமென்றெண்

ணித் தாங்களும் அவ்வாறே யறுத்துக்கொள்வார்கள் என்பதில் ஐயமில்லை. ஐயோ! இவர்கள் மதி யென்ன மதியோ? துன்மதி, அவமதி என்றே கொள்ளலாகும்.

நம் மக்களின் தற்கால நிலைமை பரிதாபம், மிகப் பரிதாபமே. இவர்களை இத்தீய நெறியிலேயே செல்ல விட்டுவிட்டு நாம் வேறு என்ன விஷயங்களைச் செய்தாலும் பயனில்லை. சீக்கிரத்தில் நாம் ஒரு ஜாதியார் என்ற நிலைமையே அடியோடு போய் விடும். தெய்வசிந்தனை யடியோடுபோய் மிருகத்தன்மை மிகுந்து விடும். நம் தாய்நாடு அந்த நிலைமை யடைவதைவிட நம்மையும் நம் நாட்டையும் அகன்ற அலைகடல் கொண்டுபோவது நலம். நம் நாட்டிற்குப் பெருந் தீங்கை விளைவிக்கக்கூடிய இக்குறை யெப்படி நீங்குவது? பெற்றோரும், கல்வியிலாகாவில் சம்பந்தப்பட்டுள்ள நம்மவர்களும் கவலைகொண்டு தக்க முயற்சி யெடுத்துக் கொண்டால்தான் நம் மக்கள் சீர்பட்டுத் தாய்நாடு அழியாது நிற்கும். எல்லாம் வல்ல பரம்பொருளே யவர்கள் மனதைத் திருப்பவேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத்ஸத்.

---

## நமது வருட முடிவு.

இச்சஞ்சிகையோடு ஆனந்தனது 9-ம் ஆண்டு நிறைவுறுகிறது. 15-6-1924-க்குள் 10-ம் வருட சந்தாவை யனுப்புமாறு கடந்த இரண்டு சஞ்சிகைகளிலும் அறிவித்திருந்தோம். அவற்றிற் கூறியபடியே அத்தேதிக்குள் சந்தாத்தொகையை யனுப்பாமலும், அடுத்த வருடம் சஞ்சிகையை நிறுத்தும்படிக்குத் தெரிவிக்காமலும் உள்ளவர்களுக்கெல்லாம் வி.பி. மூலமாகச் சஞ்சிகையை யனுப்புகிறோம்.

"போதுமானபேர் முன்பணமனுப்பி, சந்தாதாரர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு சந்தாதாரரையேனும் சேர்த்தால் இச்சந்தாதொகைக்கே சஞ்சிகையில் இன்னும் பக்கங்கள் சேர்த்து வெளியிடுவோம்" என்றும் வரைந்திருக்கிறோம். சந்தாதாரர்கள் இவ்விஷயங்களில் திருப்தியாக ஊக்கங்காட்டினால் நாம் வாக்களித்தபடி செய்யத் தடையிராது. இவ்வளவேயன்றி இதற்காக அதிக சந்தா அனுப்பும்படி நாம் கேட்கவில்லை. அப்படியிருக்க இரண்டொருவர் எட்டணா அதிகமாக அனுப்பியிருக்கிறார்கள். அத்தொகை அவர்கள் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருக்கிறது.

சந்தாதாரர்களின் ஆதரவையன்றி ஆனந்தனுக்குப் போஷகர் கொடையாளர் முதலிய வேறு எவ்வித உதவியும் இல்லையென்பது யாவருமறிந்தவிஷயம். நம்மவர்க்குத் தாய்ப்பாஷையில் அன்பும், அபிமானமும்

உண்டாகிறவரையில் நம் தாய்நாடு முன்னேற்றமடையாதென்பதுண்மை. இவ்விஷயங்களைச் சந்தாநேயர்கள் மனதில்வைத்து ஆனந்தனிடம் அன்பு செலுத்தக் கோருகிறோம். சச்சிதானந்தப் பரம்பொருள் நம் நேயர்களுக்குப் பூரண அருள் புரியவேண்டுமாய் மனதாரப் பிரார்த்திக்கிறோம்.

பத்திராதிபர்.

---

## நாலடியார் வசனம்.

(415-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 3-ம்அதிகாரம் - யாக்கை நிலையாமை.

மலையின்மேல் உதயமாகும் பூரணச் சந்திரன்போல, யானையின் தலையின்மேல் கவிந்திருக்கும்படியான (சந்திரவட்டக்) குடையையுடைய மஹாராஜாக்களும் (முடிவில்) இப் பூமியில் மாண்டுபோனார்கள் என்று கூறப்பட்டார்களேயல்லாமல், உயிரோடிருந்தவர்கள் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை. (1)

(நமது) வாழ்நாளை யளப்பதற்கு அளவு கருவியாக இருக்கின்ற கிரணங்களையுடைய சூரியன், ஒருநாளும் தவறாமல் உதயமாய்க்கொண்டேயிருப்பதால், அவ்வாயுட்காலம் முடிவடையுமுன் தருமத்தைச் செய்யுங்கள். தம் வாழ்நாளைக் கடந்து இப்பூமியில் யாரும் ஜீவித்திருக்கமாட்டார்கள். (2)

"சபை முழுதும் சப்திக்கும்படி விவாகத்திற்காக ஏற்படுத்திய வாத்தியங்கள் அன்றையதினமே அவ்விடத்திலேயே அதே மாப்பிள்ளைக்கு சாவுக்குக் கொட்டும் பறையாய் முழங்கவுங்கூடும்" என்று நினைத்து பெரியோர்களுடைய மனமானது துறவற மார்க்கத்திலேயே உறுதியாக நிற்கும். (3)

ஒருவன் இறந்தவுடனே பறை கொட்டுவோர் அங்குப் போய் (முதன் முதலாக) ஒரு முறை பறையைக் கொட்டுவார்கள். (பிறகு) சிறிதுநேரம் சும்மா இருந்து (இரண்டாம் முறையாக) மறுபடியும் அடிப்பார்கள். மூன்றாம்முறை அடிக்கும்பொழுது அச்செத்தவனை இனிமேல் சாகப்போகிறவர்கள் (பாடையில் வைத்துத்) துணிகொண்டு மூடி கொள்ளிச்சட்டியைக் கையிற்கொண்டு (தோள்களில் வைத்துச்) சுமந்து (சுடுகாட்டிற்குக் கொண்டுபோகப்) புறப்பட்டு விடுவார்கள். (இத்தன்மையான இவ்வுலக இயற்கையை ஓ மனிதனே!) நன்றாகக் கவனித்துப்பார். (4)

பந்துக்களெல்லோரும் 'கலீல்' என்று மிக்க சத்தமிட்டுப் புலம்ப, யாவரும் கூட்டமாகக் கூடிக்கொண்டு சவத்தைத் தூக்கிக்கொண்டு போய்ச் சுடுகாட்டில் வைப்பதைக் கண்டிருந்தும் விவாகத்தைச் செய்து கொண்டு இவ்வுலகத்தில் 'இன்பமுண்டு' 'இன்பம் உண்டு' 'இன்பம் உண்டு' எனக் கருதும் அறிவீனனுக்கு 'தொண் தொண் தொண்' என்று

அடிக்கப்படும் (பிணப்) பறையே (இன்பத்தை யனுபவிப்பதற்கிடமான சரீரம் நிலையற்றதென்பதைத்) தெரிவிக்கும். (5)

தோல்பைபோன்ற உடம்பிலிருந்துகொண்டு வினைகளை மிகுதியாகச் செய்து அவற்றின் பலனை அனுபவிக்கப்பண்ணும் உயிராகிய கூத்தாடி, உடம்பினின்றும் வெளிப்பட்டுவிட்டால் (அவ்வுடலைக்) கயிற்றாற்கட்டி இழுத்துக்கொண்டு போனாலென்ன? நன்றாகச் சுத்தஞ்செய்து அடக்கஞ் செய்தாலென்ன? கண்ட கண்ட இடத்தில் போட்டுவிட்டாலென்ன? பலரும் பார்த்துப் பழித்தால் என்ன? எப்படிச் செய்தாலும் பயனில்லை.()

பெய்கின்ற மழைநீரில் தோன்றும்படியான குமிழிபோலப் பலமுறையும் தோன்றி யழியுந் தன்மையுடையது இச்சரீரமென்று நினைத்து, 'பிறவித் துன்பத்தை நீக்கவேண்டும்' என்றறியும் உறுதியான விவேகிகளை ஒப்பானவர் இவ்வுலகில் யாவர்? (ஒருவருமில்லை.) (7)

உயிரானது, மலையின்மேல் அசைந்துகொண்டிருக்கிற மேகம்போலக் காணப்பட்டு, உடனே நிலைபெறாமல் நீங்கிப்போகும். ஆதலால் சரீரத்தைப் பலமுடையதாகப் பெற்றுள்ளவர்கள், தாங்கள் பெற்ற அவ்வுடலால் ஆகவேண்டிய பிரயோஜனத்தை விரைவில் அடைந்துகொள்ள வேண்டும். (8)

(ஐயோ பாவம்! அவன்) 'இப்பொழுதுதான் இங்கு நின்றிருந்தான். இப்பொழுதுதான் இங்கு உட்கார்ந்திருந்தான். இப்பொழுது படுத்திருந்தான், (இதற்குள்) தன் சுற்றத்தார்கள் கதறிப் புலம்பும்படி இறந்துபோனான்' என்று ஊரார் சொல்வதை அடிக்கடி கேட்கிறோமாகையால், சரீரமானது புல்லின் நுனியில் தங்கியுள்ள பனித்துளிபோல நிலையற்றதென்று நினைத்து இப்பொழுதே தருமத்தைச் செய்யுங்கள். (9)

மனிதர்கள் கேளாமலே வந்து உறவினர்களாக வீட்டில் பிறந்து, 'மரத்தில் (தன் காரியமானவுடனே) கூட்டைச் சும்மா விட்டுவிட்டுத் தூரத்தில் பறந்துபோய்விடுகின்ற பறவையைப்போல்' சரீரத்தைப் பந்துக்களிடத்தில் வைத்துவிட்டுச் சொல்லாமல் இறந்துபோவார்கள். (10)

---

## 4-ம் அதிகாரம் - அறன் வலியுறுத்தல்.

### (தருமத்தின் சிறப்பைக் கூறுதல்.)

முற்பிறப்பில் (தருமமாகிய) தவத்தைச் செய்யாதவர்கள், இப்பிறப்பில் வறியர்களாய் பிச்சையின்பொருட்டு வீடுகள்தோறும் சென்று, 'இவ் வீட்டில் வசிப்பவர்களை நல்ல வாழ்க்கையுடையவர்கள்' என்று (தலை நிமிர்ந்து ஏக்கங்கொண்டு பார்த்து) உள்ளே நுழைய முடியாமல் வாயிற்படியைப் பிடித்துக்கொண்டு மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டு நிற்பார்கள்.()

(நாம் மேலும் மேலும்) செல்வமுடையவர்களாக வேண்டுமென்று செல்வத்தை விரும்பி, தருமத்தை மறந்துவிட்டு, நாம் இறந்துபோவோமென்பதைச் சிறிதும் ஒப்பாத ஓ அற்ப மனமே! நீ இடைவிடாமல் பணம்

சம்பாதிக்கப் பலவாறு முயற்சிசெய்து வாழ்ந்தாலும், உன் வாழ்நாள் கழிந்துபோய்விட்டன. இனி நீ செய்வதென்ன சொல்? (2)

முற்பிறப்பில் செய்த தீவினைப்பயன் அனுபவிக்க வந்து நேர்ந்தால், அறிவில்லாதவன் அதற்காகக் கடுமையாகப் பெருமூச்செறிந்து மனத்தினுல் நினைத்து வருந்துவான். அத்தீவினையின் பலனை ஆராய்ந்து அது முற்பிறப்பின் தீவினையால் வந்ததென்று அறிகின்றவர்களே சம்சார துக்கத்தின் எல்லையைவிட்டு நீங்குவார்கள். (3)

பெறுதற்கரிய உடலையடைந்த பயனுல் பெரிய தருமப் பயனையும் மிகுதியாகவே அடைந்துகொள்ளுங்கள். அத்தருமமானது கரும்பானது தன்னைப் பக்குவமாக ஆலையிலிட்டு ஆட்டினவர்களுக்குத் தன்னிடத்திலுள்ள சாற்றைத் தருவதுபோல, மறுமையில் மிகுந்த பயனைத் தரும். உடம்பு அக்கரும்பின் சக்கைபோல் அழிந்துபோகும். (4)

கரும்பை, அது பதன் கெடுதற்கு முன்பே ஆலையிலிட்டாட்டி, அதன் பயனுகிய வெல்லத்தை யடைந்தவர்கள், அக்கரும்பின் சக்கை அவ்விடத்தில் நெருப்பில் எரியும்பொழுது துக்கப்படமாட்டார்கள். அதுபோல உடம்பினுலடையவேண்டிய பயனுகிய தருமத்தைப் பிரயாசைப்பட்டு அடைந்தவர்கள் எமன் வருங்காலத்தில் வருந்தமாட்டார்கள். (5)

எமன் நம்மைப் பிடிக்கவருங் காலம் இன்றைக்கோ? நாளைக்கோ? வேறு என்றைக்கோ? என்று சந்தேகிக்காமல் எமன் பின்னுலேயே நிற்கிருனென்றெண்ணிப் பாப காரியங்களைச் செய்யாமல் ஒழியுங்கள். பெருமைபொருந்திய முனிவர் முதலான பெரியோர்கள் சொல்லிய தருமகாரியங்களைக் கூடியவரையில் செய்யுங்கள். (6)

மனிதர்களால் அடையப்படவேண்டிய பெரும் பயனும் ஆராயுமிடத்து மிகப் பலவாகையினுல், நீங்கள் முற்பிறப்பிலியற்றிய நல்வினையின் பயனுகக் கிடைத்த உடலுக்கு உபயோகப்படும் காரியங்களைச் செய்துகொண்டிராமல், மறுமையில் சுவர்க்கலோகத்திலிருந்துகொண்டு பேரின்பத்தை யனுபவிக்கச் சிறந்த தருமங்களையே செய்யவேண்டும். (7)

நகத்தால் கிள்ளி யெடுக்குமளவுள்ள மிகச் சிறிய ஆலம்விதையானது வளர்ந்து மிகுதியாக நிழலைக் கொடுப்பதுபோல, தருமத்தின் பயனும் தான் மிகச் சிறிதாயிருந்தாலும், தகுந்த பெரியோர்கள் கையிற் பட்டால் மிகப் பெரிய ஆகாயமும் சிறியதென்னும்படி மேலான பயனைப் பரப்பிவிடும். (8)

தினந்தோறும் பொழுது கழிந்துகொண்டிருப்பதைத் தமது ஆயுள் நாள்களில் கழிந்து போகிறதாகச் செல்லுவைத்து, நாள் கழிதலின் உண்மைநிலையை யறியாதவர்கள், தினந்தோறும் நாள் கழிந்துகொண்டிருப்பதைக் கண்டும் அதை யறியாமல் தினந்தோறும் நான் இப்படியே யிருக்குமென்றெண்ணி யின்பமடைவார்கள். (9)

மிக்க இழிவான தொழில்களைச் செய்து உணவு முதலியவற்றைக் கொடுத்து வளர்த்தால், அப்பொழுதேனும் இவ்வுடல் வெகுகாலம் நிலை பெற்றிருக்குமானால் நான் மானமென்னும் அருமையான ஆபரணத்தை நீக்கி, யாசகம் முதலாகிய மிக்க இழிவைத் தரும்படியான தொழில்களால் ஜீவிப்பேன். (அப்படி யில்லாமையால் இங்கிலையில்லா உடம்பிற்காக மானத்தை விட்டு இழிதொழில் செய்து ஜீவிப்பதால் யாது பயன்?) (10)

(தொடரும்.)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

## "யாத்திரைவாசிகளுக்கு ஓர் சற்புத்தி."

### (ஓர் கடிதம்.)

ஐயா, நான் சென்ற மாதத்தில் என் குடும்பத்தினரோடு இராமேஸ்வரம் முதலிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செய்துவரப் போய்விட்டு எனது சொந்த ஊருக்குத் திரும்புங்கால் வழியிலுள்ள உசிலம்பட்டி என்ற ஊரில் என் பந்துக்கள் வீட்டில் தங்கிவரும்படி நேரிட்டது. அவ் வீட்டின் ஆடவர் கொஞ்ச காலத்துக்கு முன்பு காலஞ்சென்றுவிட்ட படியால் அவ்யாரின் மனைவியும் சிறு குழந்தைகளுமே யிருந்தனர்கள். அவ் குழந்தைகளில் 12 வயதுள்ள பெண்ணே மூத்ததாயிருந்தது. அந்தப் பெண்ணுக்குக் கல்வி கற்பிப்பதற்காக அந்தப் பெண்ணினுடைய தாயார் ஒரு கிருஸ்தவப் பெண்பிள்ளையைக் (பைபில் உமன்) கொண்டு கற்பிக்கும்படி ஏற்பாடு செய்திருந்தாள். அந்தக் கிருஸ்தவப்பெண் தினம் 2 மணி நேரம் வீட்டிற்கு வந்து பாடம் சொல்லிக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவ்வீட்டில் தங்கும்படி நேரிட்ட நான் அங்கு மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்த இரண்டு புஸ்தகங்களைப் பார்த்துவிட்டேன். அவ் புஸ்தகங்களிலொன்று யோவானின் சுவிசேஷம், மற்றொன்று யாத்திரைவாசிகளுக்கு ஓர் சற்புத்தி என்ற புத்தகம். அதைப் பார்த்தவுடன் நாமும் ஒரு யாத்திரைவாசிதானே. இதைப்பார்த்து பயனடையலாம் என்று முழுதும் வாசிக்கத் தொடங்கினேன். அது பயனற்றதா யிருந்ததோடு ஹிந்துமத தேவாலய தூஷணைகள் நிரம்பியிருக்கக் கண்டு வருத்தமுமடைந்தேன். என் பந்துவான அந்தம்மாளை யழைத்துக் கேட்டதில் தனது பெண்குழந்தை படிப்பிற்காக போதிக்கும் கிருஸ்தவ உபாத்தியாயினியால் இனமாக இவ்விரு புத்தகங்களும் கொடுக்கப்பட்டன எனத் தெரிந்தது. இந்தப் பைபில் உமென்களின் கொடுமைகளைப் பன்முறையும் நமது ஆனந்தனில் கேட்டு அறிந்தவனாதலால் அந்தம்மாளுக்கு அதனால் உண்டாகும் கெடுதியை எடுத்துச் சொன்னதின்மேல் அப்புஸ்தகங்களிரண்டும் நிராகரித்து தள்ளப்பட்டு இதுமுதல் கிருஸ்தவ உபாத்தியாயனிகளிடம் பாடம் கற்க விடுவதில்லை யென்று தீர்மானம் செய்துகொண்டாள். நான் அவ்விரு புஸ்தகங்களையும் எடுத்துக்கொண்டு என் பிரயாணத்தை

ஆரம்பித்தேன். அப்புஸ்தகங்களில் "யாத்திரை வாசிகளுக்கு ஓர் சற்புத்தி" என்ற புஸ்தகத்தைத் தங்கள் பார்வைக்கு அனுப்பியுள்ளேன். அப்புஸ்தகத்தின் கூற்றுகளுக்குத் தகுந்த பதிலை நமது ஆனந்தன் வெளிப்படுத்துவான் என எண்ணுகிறேன்.

V. M. மாரிச்சாமி பிள்ளை, வீரபாண்டி.

குறிப்பு:—நமது நண்பர் வரைந்துள்ள கடிதத்தில் குறிக்கப்பட்ட சிறு புத்தகத்தைப் பார்வையிட்டோம். அதை முழுமையும் இங்கு வெளியிடுவது அனாவசியம். அதிலுள்ள விஷயம் எத்தகையதென்பதைத் தெரிவிக்கச் சில வாக்கியங்களை மட்டும் ஈண்டு குறிப்பிடுகிறோம். நம்மவர் எத்தனைமுறை யெச்சரிக்கை பெறினும் இன்னும் ஜாக்கிரதை யடையாமலேயிருக்கிறார்கள். அதனாற்றான் மறுபடி மறுபடி இத்தகைய விஷயத்தைப் பற்றி வரையவேண்டி நேர்கிறது.

இக்காலத்தில் விளம்பரம் செய்வோர் எடுத்ததே உண்மை விஷயத்தை வெளியிட்டால் பெரும்பாலார் வாசிக்கமாட்டார்களென்று கருதி, காண்போரை மயக்கத்தக்க "தலைப்பெயர்" கொடுத்து பிறகு மெதுவாக விஷயத்தை வெளியிடுவது வழக்கமாயிருக்கிறது. "ஓர் பெரிய அதிசயம்" என்று தலையங்கமிட்ட விஷயத்தை எவரும் வாசிக்கத் தொடங்குவார்களன்றோ. பிறகு வாசித்தால் "ஒருவன் ஒரு வருடமாய்ச் சூலைநோயால் வருந்தி எல்லா வைத்தியர்களாலும் கைவிடப்பட்டான். கடைசியில் நமது "சூலைச் சங்காரி" என்ற ஔடதத்தைச் சாப்பிட்டு சுகமடைந்தான். இதற்கிணையான மருந்து உலகிலில்லை. விலை டப்பி 1-க்கு ரூபா 5-0-0" என்ற கருத்தடங்கிய விஷயமே யிருக்கும்.

மேலே குறித்த புத்தகத்தின் பெயரும் அவ்வாறே இருக்கிறது. பார்வைக்கு ஸ்தலயாத்திரையைக் குறித்த விதிகளடங்கிய நூலாக்கும் என்றே எவருங் கருதுவர். உள்ளே யிருப்பது நமது மதத்தைப்பற்றிய தூஷணையே. இப்புத்தகத்தில் ஸ்தலங்கள், தீர்த்தங்கள், மூர்த்திகளின் தூஷணையே யடங்கியிருக்கிறது. இதிலடங்கிய சில-ஆபாச வாக்கியங்கள் பின்வருமாறு:—

"செக்குலக்கையை விழுங்கி சுக்குக் கஷாயம் சாப்பிடுவோர் போலப் பாவபாரம் தொலைய மதுரை முதலிய ஸ்தலங்களுக்குச் செல்லுகிறீர், வைகை முதலிய நதிகளில் ஸ்நானம் செய்கிறீர்கள். சொக்கர் உங்கள் பாவத்துக்காகவா மண் சுமந்தார், பிரம்படிபட்டார்? இவர் பேர்கொண்ட சிலையைத் தரிசிப்பதால் பாவத்தைப்பற்றி என்ன உணர்வுண்டாகும்.

* * * * * *

பெரியதோர் தேர்மீது இந்நாளளவும் தியாகராஜர் ஏறிவரும் நோக்கமென்ன? உங்கள் பாவம் பெரிதென்றுணர்த்தற் பொருட்டோ? அல்லது "உலகத்தில் என்னைப்போல எத்தனையோ தேவர்களை எத்தனையோ தலங்களில் வைத்து வணங்குகிறீர்களே; எனக்கு இருப்பதுபோல் இத்தனை

பெரிய தேரும் அழகிற் சிறந்த தாசிகளும் யாருக்குண்டென்று தமது பெருமையைக் காண்பிக்கும்பொருட்டோ இத்தேரில் சவாரி வருகிறார்."

சிதம்பரத்தையும் மிகவும் மதிக்கிறீர்கள். இங்கே சிதம்பர இரகசியம் இருக்கிறதென்கிறீர்கள். இந்த இரகசியம் என்ன? அதை அறிந்தவன் யார்? அறிவிப்பவன் யார்? இந்தக் கோவிலில் அருச்சனைக்காகத் தேங்காய், பழம், கற்பூரம் முதலியவைகளைக் கொண்டுபோனாலும் தக்ஷணை கொடுக்கக் காசு இல்லை என்றால் எல்லாவற்றையும் கையிற் கொடுத்தனுப்பி விடுவார்கள்.

இந்த ஸ்தலத்தில் நடராஜர் காலைத்தூக்கி யாடியது உங்கள் பாவ நிவாரணத்துக்கோ? காளியை வென்ற தமது திறமையைக் காட்டவோ? சற்று யோசியுங்கள். மனுக் கோடிகளின் பாவந்தீரத் தில்லை நடராஜர் செய்ததாவது செய்கிறதாவது ஒன்றுண்டானால் தயை கூர்ந்து எனக்குச் சொல்லுங்கள்.

இராமர் நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போனதும், அனுமானைத் தோழனாகக்கொண்டதும், இராவணசங்காரம் செய்ததும், எதற்காக? பாவிகளை இரக்ஷிக்கவா? சிந்தியுங்கள்!

கிருஷ்ணன் லீலா விநோதம் செய்ததும், பாண்டவருக்குச் சகாயரானதும், அர்ச்சுனனுக்குச் சாரதியானதும் மனுஷஜாதியை யீடேற்றும் பொருட்டுச் செய்த செயல்களா? ஆதலால் இவர்களாலெல்லாம் உங்கள் பாவம் நீங்கிப் பரிசுத்தமாகித் தேவதரிசனம் உங்களுக்கு மெய்யாய்க் கிட்டுமென்று நம்பி இலவுகாத்த கிளியாகாதிருங்கள்.

மனிதன் தேவதரிசனம் பெறத் தடையாய் நின்ற பாவமாகிய பெருங்குற்றத்தைப் பாவமற்ற அவர் (ஏசு) தாம் பட்ட பாடுகளால் குலைத்து,தேவதரிசனைக்கு அவசியமாகிய பரிசுத்தத்தைத் தமது மாசற்ற தூய ஜீவியத்தால் சம்பாதித்தார். பாவமற்ற இவர் நமது பாவங்களுக்காகப் பதிலாளியானதால் பாவிபோல் மரித்து, தமது பரிசுத்த தேவபெலத்தால் மரணத்தை மேற்கொண்டு உயிரோடெழுந்து சதாகித்தியமாய்ப் பிழைத்திருக்கிறார்.

* * * * * *

இத்தகைய ஆபாசங்களே அப்புத்தகத்தி லடங்கியிருக்கின்றன. நண்பர்களே! ஹிந்துக்கள் இத்தகைய புத்தகங்களை வாசிப்பதால் மனவெரிச்சல் உண்டாவது இயற்கை.ஆகையால் இவர்களால் வெளியிடப்பட்ட நூல் என்றறிந்ததே யதை எட்ட எறிந்துவிடுவதுதான் உத்தமர்கள் செய்கையாகும். ஏனெனில், இவர்கள் துண்டுப் பிரசுரங்களிலெல்லாம் நம் மத தூஷணை யிருக்குமன்றி அவர்கள் மதத்தைப்பற்றிய அரிய விஷயம் ஒன்றுமிராது. அப்படிக் கூறவும் அதில் ஒன்றுமில்லை. நடராஜர் நடனம் செய்வதும் உற்சவாதிகள் நடத்துவதும், சரியையாதிகளும் ஆகிய இவற்றிலுள்ள நுண்ணிய இரகசியப் பொருள்களும் தத்துவார்த்தங்களும் இவர்களுக்கென்னதெரியும்? மாலைக்கண்ணனுக்கு எல்லாம் மஞ்சளாகத்தான் தோன்றும்.

இவர்கள் "மனிதன் பாவி. பாவமூட்டையோடு தோன்றியவன்" என்ற கொள்கையுடையவர்கள். இவர்கள் மதப்படி முன்பின் ஜன்மமில்லாத போது மனிதன் பாவியானது எப்படியோ தெரியவில்லை. இப்படி முன் பின் முரணான விஷயங்கள் இவர்கள் நூலில் ஏராளமாகவுண்டு. மனிதன் பாவியென்றும் இவன் பாவத்திற்காக கடவுளின் ஏகபுத்திரனான ஏசு இரத்தம் சிந்தி யாவர் பாவத்தையும் ஏற்றுக்கொண்டாராதலால் அவரை வணங்கி அம்மதத்தில் சேர்ந்தால்தான் மோக்ஷமுண்டு, வேறு எந்த மார்க்கத்திலும் மோக்ஷமில்லை என்பதுதான் இவர்கள் சித்தாந்தத்தின் முடிவு.

நண்பர்களே! நமது வேதத்தில் கூறியுள்ளபடியும், அநாதிகாலந் தொட்டு நம் முன்னோர்களாகிய மகான்கள் அனுபவமாகக் கண்டறிந்தபடியும், மனிதன் பாபியல்ல. ஆன்மா, கடவுளைப்போல் ஆனந்த சொரூபமுடையது. சச்சிதானந்த மயமானது. நாம் முன் சன்மத்தில் செய்த கன்மங்களையன்றி அபாரமான பாப மூட்டை வேறு எதுவுமில்லை. நமது பாபத்திற்காக வேறு எவரும் கழுவில் அறையப்பட்டு மரிக்கவேண்டிய அவசியமில்லை. கடவுள் சர்வ வல்லவர். அவர் நமது பாபத்திற்காகத் தமது புத்திரனைப் பலிகொடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட ஒரு காரணமுமில்லை. நாம் அவரிடம் அன்புபூண்டொழுகினால் அவர் நமக்குள் ளாலிருந்தே நமது கர்மங்கள் யாவும் நசிக்கச்செய்வார். அக்கர்மங்களைப் போக்கிக்கொள்ளும் மார்க்கம் நம்மிடமேயிருக்கிறது. நாம் அவரிடம் பூரண பக்திவைத்து நிஷ்காம கர்மத்தைச் செய்தால் நமது கர்மங்கள் தாமேயழியும். அதற்காக ஒருவரையும் இரத்தம் சிந்தி மரிக்கச் செய்யும் பெரும் பாதகத் தொழில் நமக்கு அவசியமில்லை.

பைபில் உமன் என்ற மாதர்கள் சம்பளமில்லாமலே வீட்டிற்கு வந்து நமது பெண்களுக்குக் கல்வி கற்பிப்பதாகக் கூறினால், அதினாலேயே நம்மவர் மயங்கிவிடுகிறார்கள். அவர்கள் ஏன் அப்படிக் காசில்லாமல் வேலை செய்யவேண்டும்? பாதிரிகள் அவர்களுக்கு ஏன் சம்பள மளிக்கவேண்டும். நமது பெண்கள் கல்வி கற்கவேண்டுமென்ற அவாவாலோ? ஒரு காலுமில்லை. அவர்கள் நோக்கம் முழுமையும் நம் பெண்களுக்கு இரகசியமாகப் போதித்து மயக்கித் தங்கள் மதத்திற்கு அவர்களை யிழுத்துக் கொள்ளவேண்டுமென்பதே. அதுவே தங்கள் நோக்கமென்று பாதிரிகளே வெளிப்படையாகவும் கூறுகிறார்கள். நமது மதாசாரங்களைப் போதிக்கும் நூல்களைக் கொடுத்து அவற்றையே நமது பெண்களுக்குப் போதிக்கும்படி கூறிப் பெற்றோர் கிட்டவிருந்து பார்த்துக்கொண்டிருக்கட்டும். பிறகு அம்மாதர்கள் பாடம் கற்பிக்க வருகிறார்களா வென்று பாருங்கள். தங்கள் சபம் பலிக்காதென்று தெரிந்தால் அங்கு எட்டியே பார்க்கமாட்டார்கள். இனியேனும் எச்சரிக்கையடைந்து அவர்களை நம் பெண்மணிகளுக்குக் கல்வி கற்பிக்கும்படி விடாதீர்கள். ஏமாந்துபோய் பெண்களை உயிரோடிழந்து பின்னால் பரிதவிப்பதில் பயனில்லை.

---

பத்திராசிரியர்.

# ஆரிய சித்தாந்தம்.

## (தெய்வம்—பக்தியோகம்.)

(428-ம் பக்கத் தொடர்ச்சி.)

வீட்டுக்குப் போனவுடன் பிராமணனுக்கு ஒரு பீடமிட்டு உட்கார வைத்துவிட்டுச் சற்றுச் சிரமபரிகாரம் செய்துகொள்ளுங்கள், நான் சீக்கிரமாய் வருகிறேனென்று சொல்லி மனைக்குட் புகுந்தார். அங்கே ஒரு அறையில் அவருடைய மாதாபிதாக்களிருந்தார்கள். வயது முதிர்ச்சியினால் நடக்கவும் சக்தியற்றவர்களா யிருந்தார்கள். அவர்களிடம் சென்று முறைப்படி அவர்களுக்கு வணங்கிப் பிறகு ஸ்நானம் செய்வித்து, நல்ல சுத்தியான வஸ்திரந் தரிப்பித்து, உபசாரத்துடன் அடிசிலூட்டி மறுபடியும் அவர்களைக் கட்டிலில் படுக்க வைத்துவிட்டுப் பக்கத்தில் நின்றுகொண்டு, கௌசிகன் வந்த செய்தி கூறி, "அவர் ஏதோ சில சந்தேகங்களைப் பற்றிக் கேட்க வந்திருக்கிறார். அவரிடம் சிறிதுநேரம் பேசவேண்டும். அதன் பிறகுதான் நான் போஜனம் செய்யவேண்டும்" என்று கூறி உத்தரவு பெற்றுக்கொண்டு கௌசிகனிடம் வந்து மரியாதையாய் உட்கார்ந்துகொண்டு என்ன கேட்கவேண்டுமோ அவற்றைக் கேளும் என்று கூறினார். கௌசிகர், நீர் மஹா ஞானியாயிருந்தும் மாமிசத்தை வெட்டி விற்பது நியாயமாமோ என்றார். தருமவியாதர், "நான் ஜீவஜெந்துக்களைக் கொல்வதில்லை கொல்பவரிடத்தில் விலைகொடுத்து வாங்கி லாபத்திற்கு விற்கிறேன். அந்த லாபத்தைக்கொண்டு மாதாபிதாக்களையும், மனைவி மக்களையும் போஷிக்கிறேன். தானதருமங்களும் செய்கிறேன். ஏனென்றால் மாமிசம் விற்று ஜீவிப்பதே எங்கள் குலதர்மம். குலதர்மத்தை விடக்கூடாது. அன்றியும் இந்த மிதிலையில் ஒருவரும் தமது ஜாதியாசாரம் கடந்து நடக்கக்கூடாது. நடந்தால் ஜனகமஹாராஜா அவர்களைக் கொடுமையாய்த் தண்டிப்பார். இராஜாக்கினைக்கு அடங்கி நடக்கவேண்டுவது அவசியமானது. அதனால் பாபம் அணுகாது" என்றார். கௌசிகர் அந்தப் பதிவிரதை யென்னை உம்மிடம் அனுப்பினதை நீர் எப்படி அறிந்துகொண்டீர்? அந்தம்மாள் உம்மை யெவ்வாறு அறிந்துகொண்டார்? இது வெகு ஆச்சரியமாயிருக்கிறது; அதை விளங்கக் கூறவேண்டு மென்றார்.

தருமவியாதர், "குலாசார முறை தவறாமல் நடந்து தெய்வத்தை யாராதிப்பதினாலேதான் நாங்களிருவரும் ஒருவரை ஒருவர் அறிந்துகொண்டோம். குலதர்மமும் சாதியாசாரமும் கர்மபந்தங்களை யொழிப்பதற்காகவே தெய்வத்தினால் நிருமிக்கப்பட்டன. அதனை இருஷிகளுணர்ந்து வெளியிட்டார்கள். அரசர்கள் அந்தத் தருமங்களைச் சிதையாமல் பரிபாலிக்கிறார்கள். அப்படிப் பரிபாலிப்பது க்ஷத்திரியகுலாசாரம். அந்தம்மாள் ஸ்திரீகளின் தருமத்தை நன்றுபுணர்ந்து பதிவிரதாதருமத்தின் நெறிதவறாமல் நடந்து தெய்வபக்தி செய்வதினாலே பூர்ணஞானத்தை யடைந்திருக்கிறார். அதனாலேதான் நீர் கொக்கை யெரித்ததையு மறிந்துகொண்டார். உம்மையும்

வென்றார். உம்மிடத்தில் இரக்கங்கொண்டு என்னிடம் அனுப்பினார். நானும் குலாசார நெறி கடவாமல் நடந்து, தெய்வத்தை யாராதிப்பதினாலேயே நீர் வந்த காரணத்தை யறிந்துகொண்டேன். நீர் தவத்தையே பெரிதாகக் கருதி மாதா பிதாக்கள் படுகிற கஷ்டத்தைச் சிறிதும் கவனியாமல் வனவாசம் செய்துகொண்டிருக்கிறீர். அது பயன் தராது. அதனாலேதான் அந்தம்மாளிடம் தோல்வியடைந்தீர். இனியாவது முறை யறிந்தொழுகி மெய்த்தவம்புரிவீரானால் பரமஞானம் சித்திக்கும், முத்தியும் எளிதில் கைகூடும்'' என்றார்.

கௌசிகர், ''அந்தம்மாள் எந்தத் தெய்வத்தை யாராதிக்கின்றார்? நீர் எந்தத் தெய்வத்தை யாராதிக்கின்றீர்?'' என்று கேட்டார். தருமவியாதர், பதிவிரதைகளுக்குத் தமது நாயகன்மாரே தெய்வம். பிரமசாரிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் குருவே தெய்வம். புத்திரர்களுக்கு மாதா பிதாக்களே தெய்வம். மற்றவர்களுக்குப் பரம்பரையாக ஆராதிக்கப்பட்டுவரும் தெய்வமே தெய்வம். இது வேதவிதியாகும். இது பக்தியோகமெனப்படும். யோகங்கள் என்பவை யெல்லாம் மனம் ஒரு வழிப்பட்டுப் பிரமதியானத்தில் நிலைத்திருப்பதற்காகச் செய்யப்படும் ஒரு அப்யாசமே யாகையால், இந்த யோகங்களெல்லாம் ஞானசித்திக்கு மூலங்களாகின்றன. இந்தப் பக்தியோகம் எளிதிற் செய்யக்கூடியது. இதற்கு உபதேசக் கிரமம் வேண்டுவதில்லை. எந்த விஷயத்திலும் குருவை மறவாமல் தியானிக்கவேண்டும். குருதியானமில்லாத பக்தி சிறப்படைவதில்லை. குருபக்தியிருந்தாலும் மாதா பிதாக்களை வழிபடாவிடில் அது பயன்தராது. நீர் மாதாபிதாக்களை அலட்சியஞ் செய்து தவமுயற்சியிலிருந்தமையால் பெரும் பயனாகிய ஞானசித்தியை யடையவில்லை'' என்றார்.

கௌசிகர், நீர் வழிபடுந் தெய்வம் யாது? அதை யெனக்குத் தெரிவித்தால் நானும் அந்தத் தெய்வத்தை ஆராதிப்பேன் என்றார். தருமவியாதர், நான் வழிபடும் மெய்யான தெய்வத்தை உமக்குப் பிரத்தியட்சத்தில் காட்டுகிறேன் வாரும் என்று அழைத்துக்கொண்டு வீட்டுக்குள் சென்றார். அங்கே ஒரு அறையிருந்தது. அந்த அறையில் பரிமள சுகந்தம் வீசியது. மந்தமாருதம் உலாவிக்கொண்டிருந்தது; போதுமான பிரகாசம் நிறைந்திருந்தது. அங்கே ஒரு கட்டிலில் வெண்மையான வஸ்திரத்தினாற் போர்த்த ஒரு மெத்தையிட்டிருந்தது. அதன்மேல் மிக்க வயது முதிர்ந்த ஒரு கிழவனும் கிழவியுமாகிய தம்பதிகள் சாய்ந்துகொண்டு சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவ்வறைக்குள் தருமவியாதர் நுழைந்து அவ்விருவருக்கும் மரியாதையாக வணங்கிக் கௌசிகர் வரவைத் தெரிவித்து அஞ்சலியஸ்தராய் நின்றுகொண்டிருந்தார். அவர்கள் ஆசீர்வசனங்கூறிக் கௌசிகரை நோக்கிச் சுவாமிகாள்! நாங்கள் எழுந்திருக்கச் சக்தியற்றவர்களா யிருக்கிறோம். எழுந்து வந்தனம் செய்ய முடியாது என்று தலையைத் தாழ்த்தி வணக்கம் செய்து மரியாதை

யாக ஒரு ஆசனத்தில் உட்காரச் செய்து, யோக க்ஷேமங்களை விசாரித்து உபசார வசனங் கூறினர்கள். பிறகு தருமவியாதரை நோக்கி உட்காரு என்று கூறியபின் அவர் உட்கார்ந்துகொண்டு கௌசிகரை நோக்கிச் சொல்லுகிறார்.

சுவாமீ! இவ்விருவரும் எனது தாயுந் தந்தையுமாம். இவர்களே நான் வழிபடும் தெய்வம். இவர்களைத் தவிர வேறு தெய்வத்தை நான் அறியவில்லை. காலைமாலை பகலாகிய திரிகாலங்களிலும் இவர்களை வழிபடுகிறேன். இவர்கள் பாதங்களில் மலர்சொரிந்து அர்ச்சித்துப் பூசிக்கிறேன். மத்தியானத்தில் இவர்களுக்கு ஸ்நானம் செய்வித்து சுத்த வஸ்திரமுடுத்தி சந்தனுதிகளால் அலங்கரித்து, இனிமையான உணவு புசிப்பித்துப் படுக்கையி லுட்காரவைத்துச் சற்றுக் களையாறச் செய்து அதன்பிறகுதான் நான் புசிப்பேன். இரவில் அவர்களைப் புசிப்பித்துப் படுக்கவைத்து அவர்கள் தூங்கினபிறகு நான் புசிப்பேன். காலையில் எழுந்திருந்ததும் அவர்களுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்துவிட்டுச் சிறிது ஆகாரம் கொடுத்துப் படுக்கையில் வைத்துவிட்டு அதன்பிறகு நான் என் தொழிலைச் செய்கிறேன். எனக்கு மாதாபிதாக்களைத் தவிர வேறு தெய்வமில்லை. அவர்களை யுபசரித்து மகிழச்செய்வதே தெய்வாராதனை. இந்த ஆராதனையினுலேயே நான் முடிவற்ற மெய்ஞ்ஞானத்தையும் பெற்றேன். நீர் மாதாபிதாக்களை யலட்சியம் செய்துவிட்டு வனத்துக்குப்போய்த் தவம் செய்கிறீர். அந்தத் தவம் சரியான பலனளியாது. இனி நீர் உமது ஊர் போய்ச் சேர்ந்து நல்ல குணமும் அழகுமுள்ள கன்னிகையை விவாகம் செய்துகொண்டு மாதா பிதாக்களை ஆராதனை செய்யும், என்று கூறி அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரியான சமாதானங் கூறித் திருப்தி செய்வித்து அனுப்பிவிட்டார். கௌசிகர் ஊருக்குப் போகும்போது அந்தப் பதிவிரதையைக் கண்டு வந்தனம் செய்து தருமவியாதரிடம் சென்றதும் அவரால் சந்தேகங்களெல்லாம் நிவர்த்தியானதும், அவர் உபதேசம் செய்ததையும் கூறி விடை பெற்றுக்கொண்டு வீடுபோய்ச் சேர்ந்து மாதாபிதாக்களை வழிபட்டு மெய்ஞ்ஞான சித்திபெற்றுச் சிறந்து விளங்கினன்.

மாதா பிதாக்களைத் தெய்வமாகக் கருதி வழிபடாவிட்டாலும், அவர்களைக் கஷ்டதசையில் வையாமல் கூடியவரையில் அன்ன வஸ்திராதிகளாலுபசரிக்கவேண்டும். அப்போது தெய்வம் அனுக்கிரகம் செய்யும். ஆராதனை செய்யும்போது மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒத்திருக்கவேண்டும். அதை வேறு இலௌகிக வியாபாரத்திற் செலுத்தக்கூடாது. அதற்காக ஆவாகனுதிக்கிரியைகள் ஏற்பட்டன. மனம் சொரூபத்தைச் சிந்திக்கவேண்டும். வாக்கு மந்திரங்களைச் சொல்லவேண்டும். கைகள் அபிஷேகாதிக் கிரியைகளைச் செய்யவேண்டும். மந்திரங்கள் சரியாய்க் கிடையாத பட்சத்தில் ஆராதிக்கிற தெய்வத்தின் மூலமந்திரங்களைச் சொல்லிச் செய்ய

வேண்டும். சைவர்கள் பஞ்சாட்சர மந்திரமும் வைணவர் அஷ்டாட்சர மந்திரமும் பிரதானமாய்க்கொள்ளவேண்டும். அல்லது தங்களுக்கு உப தேசமாயிருக்கிற வேறு மந்திரங்களைக்கொண்டும் செய்யலாம். பூசை முறை பலவகையாகும் ஆயினும் எல்லாருக்கும் பொதுவில் சோடசோப சார பூஜை யென்று சிறந்த பூஜை முறை ஒன்றுண்டு. அது சிறப்புடை யது.

அவையாவன :—சொருபத்தில் ஆவாகனஞ்செய்தல், ஆசனமிடல், பாத் தியம் (கால்கழுவ நீர் தரல்), அர்க்கியம் (கைகழுவ நீர் தரல்), ஆசமனம் (மூன்றுதரம் நீரை புட்கொள்ளுதல்), ஸ்நானம் செய்வித்தல், வஸ்திரம் சாத்துதல், பூணூலிடல், சந்தனமிடல், புஷ்பமாலை சாத்தல், அட்சதை சாத்தல், தூபம் (வாசனைப்புகை) காட்டல், தீபம் காட்டல், நைவேத்தி யம் செய்தல், தாம்பூலமளித்தல், அர்ச்சனை செய்தல், கர்ப்பூர ஆர்த்தி காட்டல் என்பனவாம். இவைகளை யெல்லாம் அவ்வத் தெய்வத்திற்குரிய மூலமந்திரங்களைச் சொல்லிச் செய்து பின்பு மந்திரம் ஜபித்துத் தியானம் செய்யவேண்டும். தான் ஆராதிக்குந் தெய்வத்தின் சொரூபம் எப்போதும் தன் மனதிலிருக்கும்படி பழகவேண்டும். எப்போதும் மந்திரத்தையும் நாவசையாம லுச்சரிக்கவேண்டும். தெய்வத்தின் புகழ்ச்சியாகிய சரித் திரங்களையும், ஸ்தோத்திரப் பாடல்களையும் படிக்கவேண்டும். கெட்ட சகவாசங்களையும் பொய் பொறாமையாகிய குற்றங்களையும் விலக்கவேண் டும். சர்வ ஜீவன்களிடத்தும் அன்பு பாராட்டவேண்டும். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## தமிழ் நாட்டுக்கு ஆனந்தனின் உதவி.

ஒன்பது ஆண்டுகளாக நமது ஆனந்தன் நம் நாட்டுக்குச் செய்துள்ள பேருதவியைக் கணித்தெழுதுந் தரமன்று ; நமது கொள்கையிலுஞ் சரி, பிறமதக் கொள்கையிலும் அதன்மாட்டு நடு நிலைமை ஏற்று எழுதுந் திறத் திலுஞ்சரி நமது ஆனந்தன் ஓர் அரசன் போன்று விளங்குகின்றான்.

நவீன நாகரீகமென வெற்றுரை நவின்று பின்வரும் சீர்கேட்டை நினைக்காமல், அற்ப சுகத்தைக் காட்டி அறவழியை அகற்றும் சீர்திருத் தத்தைக் கொடிதென்றெண்ணாமல், தற்காலம் பெரிதும் அவாக்கொண்டு நிற்கும் மனிதவாழ்க்கை நடைமுறை மாற்றத்தில், அலைந்த வாழ்வு மறைந் துள்ளனவென்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல காட்டி முன்னெச் சரிக்கையாக எடுத்தெழுதி ஓதிவருவதில் மந்திரியைப்போலும், நித்திய வாழ்விலும் கடமையிலும் உள்ள குறையையும் அதில் பண்டையக்கால மிருந்த நிலைமையையும் காலரீதி அறிந்து தள்ளற்பாலனவற்றை தள்ளியும் கொள்ளற்பாலனவற்றை கொண்டும் வாழ்வின் இலக்கணங் கூறுவதில் லோக குருவைப் போன்றும் விளங்குகின்றானென்பது மிகையாகாது.

மேல் கண்டவற்றால் உலக தர்மம் எவ்வளவோ வளருகின்றது என்பதைக் கண்ட சகோதரர்கள் எல்லோரும் ஆனந்தனுக்கு பெரிதுங் கடமைப்பட்டுள்ளோமென்பதைக் கூறவேண்டுவதில்லை. ஆனந்தனிலுள்ள விஷயங்களைக் கையாண்டுகூட வேறு பத்திரிகைகளில் வியாசங்களும் வருகின்றன. பிரசங்க மேடைகளிலும் பலர் கையாண்டு வருகின்றனர். இவ்வளவு பெரிய நன்மையை உன்னிப் பார்த்தால் நமது கடமை விளங்கும். இந்த நன்மையைப் பெறாத மனிதர்கள் நம்மிடை மிகுதியாகவே காணப்படுகின்றனர். அவர்களுக்கு இந்த நன்மையை உபயோகப்படுத்தி வைப்பது சந்தாநேயர்களாகவுள்ள எல்லாருக்கும் கடமை என்பதை மீண்டுங் கூற வேண்டுவதில்லை.

ஆனந்தனை (வாசிப்போர்) தருவிப்போர்களிலும் சிலர் தமக்கும் மாதம் ஒரு பத்திரிகை வருகிறது என்றதோடு திருப்தி அடைகின்றனர். இது அவர்களுக்கு ஒரு பெருமைபோலும். அவர்கள் அதனைப் படிக்கிறதில்லையாயினும் அதுவும் பிறருக்குப் பயன்படுவதுபற்றி சந்தோஷப்படுகிறேன். இதற்கெல்லாம் முதற் காரணம் ஆனந்தனின் விஷய வுயர்வும் குறைந்த சந்தாவுமேதான். சில மாதங்களுக்கு முன் இதில் வெளியிடப்பட்டிருந்தபடி ஓர் சந்தா நேயர் தன் விலாசம் அச்செழுத்திலில்லாத காரணங்கொண்டு பத்திரிகையை நிறுத்திவிடக் கோரினர் என்பதை நோக்கின், ஒன்பது வருடங்கள் போல அநுபவங்கொண்டும் அவ்வாறு ஓர் சந்தாநேயர் இருப்பதை உன்னுங்கால் தமிழ் மக்களிடை பத்திரிகையின் அவா எவ்வளவிலிருக்கிறதென்பது விளங்கும்.

ஆதலால் சென்ற வைகாசிமீ பத்திரிகையில் " சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு " என்ற தலைப்பின்கீழ் சந்தாவை ரூ. 1-8-0 ஆக உயர்த்தி பக்கங்களை கூட்டவேண்டுமென்று ஓர் நண்பர் குறிப்பிட்டதையும், அதிபர் குறிப்பையும் அறிந்தோர்கள் செய்யவேண்டிய தென்னவென்பதை நாமும் ஓர் பத்திரிகையை நடத்தி விட்டுவிட்ட அநுபவத்தைக்கொண்டு கூறுவதால் நேயர்கள் கவனிக்க வேண்டுகிறேன்.

ஆசிரியர் சொல்லியபடி சந்தாவைக் கூட்டுவது சிறந்ததல்ல. நேயர்கள் ஒவ்வொருவரும் சற்று சிரமமெடுத்துக்கொண்டால் குறைந்தபக்ஷம் 3 பேர்களையேனும் சந்தா நேயர்களாகச் சிபார்சு செய்வது கடினமல்ல. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பெயரையாவது சேர்த்துவிட்டால் உலக நன்மைக்குப் பாடுபட்டவர்களாகவே முடியும்.இதுவரை நான் சுமார் 40 சந்தா நேயர்களைச் சேர்த்தனுப்பியுள்ளேன். இத்துடன் 3 நேயர்களுக்கு புதிதாய்ச் சிபார்சு செய்தனுப்பியிருக்கிறேன். சந்தாத் தொகையை மணியார்டர் செய்வதுதான் செளக்கியம். அவ்வாறு செய்வதாயின் 10-வது ஆண்டு முதல் ஆனந்தனின் பக்கங்கள் அதிகமாகவோ பத்திரிகையின் அளவை சற்று பெரிதாகவோ இந்த ஒரு ரூபாய் சந்தாவிலேயே செய்துவிட ஆசிரியர் அவர்களுக்கு தூண்டுகோலாகும்.

தமிழ்நாட்டில் இந்த ஒன்பது வருடத்துக்கிடையில் ஆனந்தனைக் கண்டு பொறாமைப்பட்டோ சுதாவாகவோ பல பத்திரிகைகள் புறப்பட்டு முடிந்துபோயிருக்கின்றன. அப்புதிய பத்திரிகைகளிற் சிலவற்றிற்கு நானும் சந்தாப்பணம் அனுப்பியும் நண்பர்களைச் சிபார்சு செய்தும் நஷ்டமடைந்திருக்கிறேன். தமிழ் நாட்டுக்கு ஆனந்தனைப்போன்று எத்தனை பத்திரிகைகள் வெளிவந்தாலும் தகும். ஆனால், அவைகளை நடத்துவோர் நாட்டிடையுள்ள நிலைமையைக் கவனித்து நடத்தாத குறைகளும் இருக்கின்றன. அவைகளைப்பற்றியும், பத்திரிகையின் உற்பவ முதலியவற்றைப் பற்றியும் பின்னர் ஓர் வியாசம் எழுத உத்தேசித்து இதனை இத்துடன் முடித்துவிடுகின்றேன்.

ஆசிரியர் அவர்களும் 10-வது ஆண்டுமுதல் பத்திரிகையை சற்று பெரிதாக்கி அல்லது பக்கங்களைக் கூட்டி சில புதிய முறைகளுள்ள வியாசங்களைக்கொண்டு நிலவும்படி செய்ய எல்லாம்வல்ல இறைவன் கிருபை செய்வாராக.

இதுகாறும் ஆனந்தனைப்பற்றி சில நேயர்கள் எழுதிய வியாசங்களை அவை தற்புகழ்ச்சியாகக் கருதப்படுமென்றெண்ணிப் பத்திரிகாசிரியர் வெளியிடாது விட்டனரென்று அறிகிறோம். ஆசிரியரவர்கள் இதையும் அவ்வாறு புறக்கணிக்காமல் பொதுநலத்தையும், சஞ்சிகையின் அபிவிருத்தியையும் கோரிப் பிரசுரிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். ஆனந்தனைப் பற்றி சந்தாநேயர்கள் வலியக்கூறும் உண்மையைத் தற்புகழ்ச்சியெனக் கருதலாகுமோ.

இ. ச. சிவராமலிங்கம் பிள்ளை,
ஆனந்தநிலையம், விஜயபுரம்.

குறிப்பு :—ஆனந்தனுக்குச் சந்தாநேயர்களின் ஆதரணை யன்றி வேறெவ்வித உதவியுமில்லையாதலின் நம் தமிழ்மொழியின் முன்னேற்றத்தையும், தாய்நாட்டின் க்ஷேமத்தையும் கோரும் அறிவாளிகளாகிய நண்பர்கள் ஆனந்தனது அபிவிருத்தியில் சிரத்தை யெடுத்துக்கொள்வார்களென்று பூரணமாய் நம்புகிறோம். பத்திரிகாசிரியர்.

---

## " நற்போதனைகள் "

1. மார்க்கத்தில் போகும்போது மண்மேடு, பசுமாடு, தெய்வம், பிராமணன், நெய்க்குடம், தேன்குடம், நாற்சந்தி, அரசு முதலிய புண்ணிய விருக்ஷம் நேரிட்டால் அவைகளைப் பிரதக்ஷிணமாகத் தாண்டிப் போகவேண்டியது.

2. கன்றுக்குட்டிக் கட்டுத்தரியைத் தாண்டக்கூடாது. மேகம் மழை பெய்யும்போது ஓடப்படாது. ஜலத்தில் தன் உருவத்தைப் பார்க்கவும்கூடாது.

3. தன் மனைவியுடன் ஒரு பாத்திரத்தில் புசிக்கப்படாது. அவள் சாப்பிடும்போதும், மையிட்டுக்கொள்ளும்போதும், எண்ணெ யிட்டுக் கொள்ளும்போதும் ஒருகாலும் பார்க்கலாகாது.

4. கிருகஸ்தன் ஒரு வஸ்திரத்துடன் அன்னம் புசிக்கப்படாது. வஸ்திரமில்லாமல் ஸ்நாநம் செய்யலாகாது. சாம்பல், மாட்டுத் தொழு வம், உழுதநிலம், ஜலம், யாகசாலை, மலை, பாழ்ங்கோயில், புற்று, நில வெடிப்பு முதலிய விடங்களில் மலஜலங்களை விடக்கூடாது.

5. நெருப்பை வாயினுலூதப்படாது. சுத்தமான வஸ்துக்களை நெருப்பில் போடக்கூடாது. காலை அக்கினியில் காய்ச்சலாகாது. உயரமாகப் படுத்துக்கொண்டு அக்கினியைக் கீழே வைக்கலாகாது. அதைக் காலாற் றுண்டவுங்கூடாது.

6. ஜலத்தில் சிறு நீர், மலம், கோழை, எச்சில்பட்ட வஸ்துக்கள், இரத்தம், விஷம் முதலியவைகளைப் போடக்கூடாது. குடியில்லாத வீட்டில் தனியாய்ப் படுக்கவும் ஆகாது.

7. தண்ணீரை இரண்டு கையினுலெடுத்துச் சாப்பிடப்படாது. பக்ஷணங்களை மடியில் வைத்துக்கொண்டு புசிக்கலாகாது.

8. வெங்கலப் பாத்திரத்தினு லொருபோதும் கால் சுத்தி பண்ணலாகாது. பின்னமான மண் பாத்திரத்திலும், மனதுக்கு ஒவ்வாத பாத்திரத்திலும் புசிக்கலாகாது. குடுமிக்கு வெளியில் பூவைச் சுத்தலாகாது. வீடு, ஊர் முதலான விடங்களில் வாசற்கதவு சாத்தியிருக்கும்போது வேறு வழியில் உள்ளே பிரவேசிக்கலாகாது.

9. படுக்கையில் உட்கார்ந்துகொண்டும், இடது கையில் அன்னத்தை வைத்துக்கொண்டும், நடந்துகொண்டும், ஆசனத்தின்மீது இலை போட்டுக்கொண்டும், சாப்பிடக்கூடாது. முகத்தை மூடிக்கொண்டும், வாயைத் திறந்துகொண்டும், தலையைக் காலில் மாட்டிக்கொண்டும் தூங்கவேகூடாது.

10. இரண்டு கைகளையுஞ் சேர்த்துக்கொண்டு தலையைச் சொறியப்படாது. ஒரு தினத்தில் ஸ்நாநம் செய்தபிறகு அப்பியங்கனம் செய்யலாகாது. சாப்பிட்டுக் கைகால் சுத்திசெய்யாமல் தலையை இடது கையாலும் தொடக்கூடாது.

11. பதிதர், சண்டாளர், புழுக்கையர், மூர்க்கர், பொருள் முதலியவற்றால் கர்வமடைந்தவர்கள், தாழ்ந்த சாதியார் இவர்களுடன் ஒரு மரத்தினிழலிற்கூட ஒருமித்து வசிக்கக்கூடாது.

12. பிண்ணாக்கு முதலியன சாரமில்லாத பதார்த்தங்களைப் புசிக்கலாகாது. அளவுமீறி ஆகாரத்தை யதிகமாகப் புசிக்கப்படாது. வயிற்றைப் பாதி பங்கு அன்னத்தாலும், காற்பங்கு ஜலத்தாலும் நிறப்பிக்கொண்டு மீதி காற்பங்கு வாயு சஞ்சரித்துக்கொண்டிருக்க விடவேண்டியது.

[இது மநுதர்ம சாஸ்திரம் நான்காவது அத்தியாயம் ஆகிதாக்கினி என்ற விஷயத்திலுள்ளது.]

S. V. பழனியப்ப பிள்ளை,
சாலியாபாளையம், கரூர்.

---

## "எல்லாம் இறைவன் செயல்"

"என்செயலா லாவதியாதொன்றுமில்லை யினித்தெய்வமே
புன் செயலேயென் றுணரப் பெற்றேன்........."

1. இஃது அவனருளாலே அவன்றாள்வணங்கி இருளினீங்கி இறைவனோ டிரண்டறக்கலந்த பட்டினத்தடிகளது திருப்பாசுரத்தின்கண் உள்ள இரண்டடிகள். இதன்பொருள் :—உயிராகிய என்னுடைய செயல் யாதொன்றும் இல்லை ; எல்லாச் செயல்களும் கடவுளாகிய உன்னுடையவையே என்பது.

2. இவ்வுண்மை உணர்ச்சியிலேயே உயர்ந்தோர் ஓவாமல் உறைத்து நிற்கின்றனர். எம்மனோரோ சிற்சில காலங்களில் இவ்வுணர்ச்சி எய்தப் பெற்று சீக்கிரத்தில் மறந்துவிடுகிறார்கள். அக்காலங்கள்தான் யாவையோவெனில், எதிர்பாராத தீமைகள் வந்தகாலம், எதிர்பார்த்திருந்த நன்மை எய்தப் பெறாதகாலம். இவைபோன்ற காலங்களே என்பது. இக்காலங்களிலுண்டாகும் உண்மையுணர்ச்சியை உடனே மறந்துவிடாமல் ஞாபகத்தில்வைத்து அதில் உறைத்து நிற்கவேண்டும் என்னுங் கருத்தை யடக்கியே

"ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்"

என்ற செய்யுளை ஞானமாதாவாகிய ஔவைப்பிராட்டியார் அருளிச்செய்தார்.

3. இனி இவ்வுணர்ச்சி எய்தினோர் எய்தும்பயனை ஆராய்வாம்:— துன்பம் வந்தகாலத்தில் எம்மனோர் இவ்வுணர்ச்சியை எய்தினால் அத்துன்பம் கொஞ்சங் குறைகிறது. இன்பம் வந்தகாலத்தில் இவ்வுணர்ச்சியைப் பெற்றால் இறைவனிடத்துக் கொஞ்சம் அன்பு நிகழ்கிறது. அறிவுடையோர் இவ்வுண்மை புணர்ச்சியில் எக்காலமும் உறைத்து நிற்பதால் எய்தும் பயன் யாதோவெனில், அவர்கள் மாயை கன்மங்களினின்றும் விடுதலை அடைகிறார்கள். "அவனருளாலல்லது ஒன்றைபுஞ் செய்யானாகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியா" (மெய்கண்ட தேவர்). இவ்வுணர்ச்சியில் எக்காலத்து உறைத்து நிற்கப் பெறுவரென்னில் சிவஞானந்தோன்றிய காலத்து நிற்கப் பெறுவர். "ஊன்செய்யாஞானந்தானுதிப்பின் அல்லால் ஒருவருக்கும் யானெனது இங்கொழியாதன்றே"(அருணந்திசிவாசாரியர்).

4. இனி இவ்வளவு பெரும்பயனை அளிக்கவல்ல இவ்வுணர்ச்சியில் உறுதியாய் நிற்கவிடாத கிளம்புந் தடைகளை ஆராய்வாம். 1. "ஒளிப்பினும் ஊழ்வினை ஊட்டாது கழியாது" என்னும் ஆன்றோர் திருவாக்கின் பொருள் என்ன? என்பது. 2. "தாந்தா முன் செய்தவினை தாமே அனுபவிப்பர்" என்பதன் பொருள் யாது? 3. "உயிரின் செயல் யாதொன்று

மில்லையென்பது பொருந்துமாற்றோடு பொருந்தவில்லை. என்னை? எல்லாம் இறைவன் செயல், உயிரின் செயல் ஒன்றும் இல்லை எனின் உயிர்கள் துன்புறுவானேன்? அருட்பெருங் கடலாகிய அண்ணல் துன்புறுத்துமா? துன்புறுத்தான். ஆகவே உயிர்கள் துன்புறுதல் அவை தாம் அறிவின்றிச் செய்யும் செயல்களாலேயாம்; என்பதே பொருத்தமாயிருக்கின்றதாகலினென்க. 4. உயிர்களுக்கும் அறிவு, இச்சை, தொழில் உண்டென்பது என்னை? இனி முதற்றடையை ஆராய்வாம் :—

(1) அதன்பொருள்:—வினையானது தன்னைச் செய்தவனுக்கு தன் பயனைத் தராமல் தொலையாது என்பது. தொழில் அறிவற்றது. ஆகலின் அது தன்னைச் செய்தவனை நாடிப் பயனளித்தற் கூடாது. ஆகவே பயனளித்தல் வினையின் செயலென்றது உபசாரமேயொழிய அதன் செயலன்று. இறைவனருட்செயலே. உயிர் அறிவுப் பொருள்தானே, அது தன் வினைப்பயனை நாடியடையுமென்று சொல்லலாமோவெனின் சொல்லலாகாது. என்னை? உயிர்சிற்றறிவுள்ளது. அறிவிக்க அறியுந் தன்மைத்தன்றித் தானே அறியுந்தன்மைத்தன்று. மறந்து மறந்து அறியுந்தன்மைத்து. கருவியோடுகூடியயன்றி அறியுந்தன்மைத்தன்று. இத்தன்மைத்தாகிய உயிர் தன் வினைப் பயனைத் தானே அறிந்தனுபவித்தற் கூடாதாகலின் என்க. "செயலணையா சென்று" என்பதும் "அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின் றுகராரேல்-ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு" (மெய்கண்ட தேவநாயனுர்).

(2) இனி இரண்டாவது தடையை ஆராய்வாம். அதன்பொருள் :— உயிர்கள் தாம் தாம் செய்த வினையின் பயனைத் தாமேயனுபவிப்பர் என்பது. இப்பொருள் நாமெடுத்துக்கொண்ட பொருளோடு மாறுபடுகின்றது. எங்ஙனமெனில்:—தாந்தாஞ் செய்த வினையெனவே உயிர்கட்குச் செயல் உண்டென்பதாகிறது. "என் செயலாவதியா தொன்றுமில்லை" எனவே உயிர்களுக்கு யாதொரு செயலுமில்லை என்பது பெறப்படுகின்றது. இங்ஙனம் மாறுபடுகின்றதெனில் அது பொருளன்று. ஆயின் பொருள் யாதோவெனின் கூறுகின்றும். உயிர்களின் அறியாமையைப் போக்கி அறிவை விளக்கி அன்பைப் பெருக்கி இன்பை விளக்கவேண்டுமென்றும் பெருங் கருணைகொண்டு ஈசன் அவற்றோடு இரண்டறக்கலந்து அவையே தானேயாய் ஐந்தொழில் நடத்திவருகின்றான். அது எதுபோலவெனின்:-கண்ணனது உருவத்தைக் காணுங்கால் உயிரை இன்றியமையாது.

இங்ஙனம் உயிரை இன்றியமையாத கண் உருவத்தைக் காணுங்கால் உயிரினதுணர்வு கண்ணொளியெனத் தானென வேற்றுமையின்றி உடனாய் விரவிநின்று கண்ணுக்குக்காட்டிய அதனைக் கண்கண்டதென்றும் கண்ணையதிட்டித்து நின்ற உயிர் கண்டதென்றும் பகுத்தறியவாராது இரண்டன்காட்சியும் ஒன்றனையொன்றுவிடாது அத்துவிதமாகி ஒருங்கே நிகழும். இதுபோலவென்க. இங்ஙனம் நிகழ்கின்ற காலத்தில் கண்ணனது

சடப்பொருளாயிராமல் சிற்றறிவுடைய பொருளா யிருக்குமானால் தானே கண்டதாகவும் காட்டியவர் ஒருவரில்லையென்றும் எண்ணிவிடும். அது போல் உயிர்களும் சிற்றறிவினவாகலான் தாமே செய்ததாக எண்ணிவிடு கின்றன. இவ்வனம் எண்ணப்பட்ட வினையென்பதே அதற்குப் பொருளென்க. இக்கருமத்தையே "நான் செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்" என்னும் ஆன்றோர் அருள்வாக்கு அறிவுறுத்துகின்றது.

(3) இனி மூன்றாவது தடையை ஆராய்வாம்:—இறைவன் தன்னுடைய பேரன்பினால் உயிரின் அன்பை விளக்க அது அறியாமை காரணமாக விருப்பாக மாறுகின்றது. அறியாமையின் குணமாகிய வெறுப்பும் உண்டாகிறது. இவ்விரண்டையும் போக்குவதற்கு இறைவன் இரண்டறக் கலந்து நின்று நல்வினை தீவினைகளை நிகழ்த்திப் பயனை (உணர்த்துகின்றான்) ஊட்டுகின்றான். பயன் இன்பதுன்பங்கள்.

"அருளினாலுரைத்த நூலின் வழி வாராததன்மஞ் செய்யின் இருளுலா நிரயத்துன்பத்திட்டிரும் பாவர் தீர்ப்பன்—பொருளுலாஞ் சுவர்க்கமாதி போகத்தாற் புண்ணியர் தீர்ப்பன்—மருளுலாமலங்கடீர்க்கும் மருந்திவை வைத்தியனாதன்" என்னுஞ் செய்யுள் இக்கருத்தை வலியுறுத்துகிறது. இவ்வனம் இன்பதுன்பங்களை யடையவே அறியாமை தேய்ந்து அறிவுபெருகும். அறிவு பெருகப் பெருக அறிவில் பொருள்களிடத்து இருந்த விருப்பம் சிறிது சிறிதாக நீங்கி உயிர்ப்பொருள்களிடத்து விருப்பம் நிகழும். பின்னவ்விருப்பமும் சிறிது சிறிதாகக் குறைந்து இறைவன்பால் நிகழும். இந்நிலையில் எல்லாம் இறைவன் செயல் என அறிந்தமையால் வெறுப்பே நிகழாது. இதனையே,

"உடுப்பானும் பாலனமுண்பானும் உய்வித் தொருவர்தம்மைக்-கெடுப்பானுமேதென்று கேள்வி செய்வானும் கெதியடங்கக் - கொடுப்பானும் தேகியென்று ஏற்பானும், ஏற்கக் கொடாமல் நின்று-தடுப்பானும் நீயல்லையோதில்லைத் தாண்டவனே" என்னும் ஆன்றோர் செய்யுள் வலியுறுத்துகின்றது.

(4) இனி நான்காவது தடையை ஆராய்வாம்:—அது என்னவெனில் ஆன்மாவுக்கும் அறிவு, இச்சை, தொழில் உண்டென்று ஆன்றோர் கூறுகின்றார்களே. அதன்பொருள் என்னை? என்பது அறிவு என்பது அறிவிக்க அறியும் அறிவு. இச்சையென்பது மேலே கூறிப் போந்த விருப்பே. தொழிலென்பது அனுபவித்தல்.

அஃதாவது அவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் முதலிய விடயங்களை யுணரும் உணர்ச்சிக்கண்ணே; தன்னியல்பு இதுவென வேறு காணப்படுமாறின்றி அவ்வவ்விடயங்களே போல அதுவதுவாய்ச் செறிந்து நின்றறிதல். அஃதாவது அழுந்தியறிதல். அதுவும் இறைவன் உடனின்றுணர்ந்தாற்றான் நிகழும். 'தொண்டனேன் நினையுமாநினையே', 'விரும்புமா விரு

ம்பே', 'தொடருமா தொடரே', 'நுகருமா நுகரோ', என்றிவ்வாறு முத்தி நிலைபற்றி ஓதிய திருவாக்குகளும் எழுந்தன. இனிச் சிலர் உடல் முதலிய கருவிகளிற் காணப்படும் செயல்களெல்லாம் உயிரின் ஆற்றலால் நிகழ்கின்றன வென்கின்றனர். அவை உயிர்களது ஆற்றலால் நிகழவில்லை. உயிர்களுடன் இரண்டறக் கலந்து நின்று ஐந்தொழில் நடத்தும் இறைவனாற்றலால் நிகழ்கின்றன. பழுக்கக் காய்ந்த இரும்பின்கண் காணப்படும் சுடும் ஆற்றல் இரும்பினதா தீயினதா? தீயினதே. இரும்பினதன்று. அது போலவே இறைவனது ஆற்றலாலேதான் கருவிகள் தொழிற்படுகின்றன. இக்கருத்தை விளக்கவே "நாமல்ல இந்திரியம் நம் வழியினல்லவழி நாமல்ல" என்னுந் திருவாக்கெழுந்தது. இதுபற்றியன்றே மனத்தத்துவ நூல்வல்லாரும் "விரும்புபலமாகவிரும்பு விரும்பியவாறே கருவிகள் தொழிற்படும்" என்கின்றார்கள். இக்கருத்தை நோக்கியே ஔவைப்பிராட்டியார் ஆத்திச்சூடி முதற்செய்யுளில் "அறம் செய்" என்னாமல் "அறஞ் செய விரும்பு" என்று அருளிச் செய்தார்கள்.

என்றிதுகாறுங் கூறியவாற்றால் நம்மாலாவதி யாதொன்றுமில்லை, எல்லாம் இறைவன் செயலென உறுதியாகத் தெளிவுறுத்தப்பட்டது. இஃது பேரன்பும் பேரருளும் வாய்ந்த எமதாசிரியரால் நன்குணர்த்தப் பட்டது. ஓம்.

தி. அருணாசலம், ப. ஞா. பா. போதகர்.
தெற்குத்தெரு, குலசேகரன் பட்டினம்.

---

## பகவத்கீதை வசனம்.

(480-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஓ! தேவர்களுக்குத் தேவனே! உமக்கு அன்னியமான வேறு தெய்வமேது, செய்யத்தக்க பாவமேது, புண்ணியங்களேது, பந்தமேது, வீடேது, சாவதேது, வாழ்வதேது? யாவு நீராகவே யிருக்கிறீர். ஆதலின் இன்னது செய்வதென யான் ஒன்றுமே யறிகிலேன்.

ஏ பரந்தாம! நான் உமது உண்மையை யுணராதவனாகி, அடாயாதவா, என்மைத்துனா, பசுநிரைகளை மேய்க்கும் யாதவா என்று இவ்வாறு சொல்லத் தகாதனவாகிய வார்த்தைகளையெல்லாம் அறியாது கூறிவிட்டிருக்கிறேன். நான் உமது பெருமையைச் சற்றும் உணராதவனாய் என்னுடைய தோழனென்றும் மைத்துனனென்றும் கருதி, உமது வார்த்தைகளை மறுத்துக் கூறிய பெரிய குற்றங்களை க்ஷமித்தருளவேண்டுகிறேன்.

ஏ கண்ணபிரானே! கருணாகரனே! உண்ணும்போதும், விளையாடும் போதும், உறங்கும்போதும், வீற்றிருந்தபோதும் உமது புராதனமான மகிமையை உணராது செய்த பிழைகளனைத்தையும் பொறுத்தருளப் பிரார்த்திக்கிறேன்.

இந்த உலகங்கள் அனைத்தும் சிருஷ்டித்தவர் நீரே. உமது நிஜ சொரூபத்தை புணர்ந்து யாவராலும் புகழ்ந்து துதிக்கப்படுபவரும் நீரே. குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து உண்மை உபதேசம் செய்து குற்றங்களைக் களைபவரும் நீரே. அப்படிக் கூறப்படினும், வேதங்களெல்லாம் உன்னினும் மேலானவர்களில்லை யென்று தக்க காரணங்களோடு ஒருமுகமாய் நின்று நிருபித்தாலும் உன்னருள் பெருதவர் உன்னை புள்ளபடி யறியமாட்டார்கள். அந்தகர் அன்னிய உருவங்களைக் காண்பதுண்டோ?

புத்திவிளக்கமில்லாத பால்யபருவத்தில் புத்திரன் செய்த குற்றத்தைத் தந்தை பொறுத்தல்போலவும், விட்டுப் பிரியாத சினேகன் செய்யும் குற்றத்தை சினேகத்தில் மிக்கார்கள் க்ஷமித்தல்போலவும், பேதையேன் தெரியாமற் செய்துவரும் குற்றங்களை யெல்லாம் குணமாகக் கொண்டருளவேண்டும் கருணாநிதியே" என்று பரந்தாமனுடைய பாத கமலங்களில் வீழ்ந்து இன்னும் பின்வருமாறு காண்டீபன் கூறலுற்றான்:-

"ஏ பகவான்! நான் முன்பு ஒருபோதும் கண்டறியாத விஸ்வரூப தரிசனத்தைக் கண்டு சந்தோஷமடைந்தேன். அக்கோரரூப தரிசனத்தால் உண்டான பயத்தால் என் உள்ளம் வியாகூலத்தை யடைந்தது. ஆதலின் ஏ பரந்தாமா! கிரீடத்தையும் சங்குசக்கர கதா கோதண்டமுடைய சதுர்ப்புஜ மூர்த்தமாகிய உருவத்தையே கொண்டருளப் பிரார்த்திக்கிறேன்" என்றான்.

(இவ்வாறு அர்ச்சுனன் பிரார்த்திப்பதைக் கண்ட பகவான் பயத்தால் வருந்தாநிற்கும் அவனுக்குத் தேறுதலுண்டாகுமாறு சில வசனங்களை மொழிந்தருள்கின்ருர்.)

அவ்வாறு தோத்திரம் செய்யும் அர்ச்சுனனை நோக்கி எல்லா வுருவங்களும் தானேயாகிய ஒருருவமாய் நின்ற பகவான் கூறுகிருர் :—

ஏ பார்த்த! பூரணமான பிரகாசமுடையதாய், ஆதியில் யாவற்றையும் படைக்கும் காரணவஸ்துவாய் யாவுமாகிய எனது விசவரூபத்தை முன்னே யாவரும் அறிந்திலர். இவ்வுலகில் (நீதவிர மற்ற) எவரும் வேதாத்தியயனத்தாலும், யஞ்ஞங்களின் அத்தியயனத்தாலும், மேலான தவங்களினுலும், தானங்களைச் செய்வதாலும், கருமங்களாலும் தரிசிக்க முடியாது. அத்தகைய விசவரூபத்தைத் தோஷரகிதமான எனது யோகமாயையின் சாமார்த்தியத்தால் நீ தரிசிப்பிக்கப் பெற்ருய்.

ஏ அர்ச்சுன! எனது விசுவரூபத்தைத் தரிசித்ததால் நீ பீதியடைந்து கலக்கப்படவேண்டாம். பயமின்றி சந்தோஷமனத்தனுய் என் முந்திய சொரூபத்தையே தரிசிப்பாயாக.

(இந்த சஞ்சயர் திருதாாட்டிரநுக்குப் பின்வருமாறு கூறுகிறர்.)

"அய்யா திருதராட்டிர பூபதியே! தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாத பரந்தாமனுகிய பகவன் அர்ச்சுனனுக்கு அவ்வாறு கூறியபின் சங்கு

சக்கிரம், கதை, பத்மம் இவற்றைத் தரிசித்தருளிய சதுர்ப்புஜ மூர்த்தியாகிய தமது திவ்விய சொரூபத்தைக் காட்டியருளி அவனுக்குண்டாகியிருந்த பீதியையகற்றிக் கிருபைபாலித்தார்" என்று சஞ்சயர் திரிதராட்டிரருக்கு மொழிந்தார்.

(பகவான் அர்ச்சுனனுக்குத் தாம் காட்டியருளிய விசுவரூப தரிசனத்தின் அரியதன்மையை அருளிச்செய்கின்றார்.)

"ஏ பார்த்த! இப்போது நீ தரிசித்த அந்த விசுவரூபத்தை இதுகாறும் ஒருவரும் தரிசித்ததில்லை. இனியும் தரிசிப்போரில்லை. இந்திரன் முதலிய தேவர்களும் அந்த விசுவரூபத்தைத் தரிசிக்க மிக்க ஆவலுள்ளவர்களாக விருக்கிறார்கள். இத்தகைய என்னை எத்தகையோர் அடையலாகுமெனின், என்னிடத்து அநந்நியபக்தி பூண்டவராய், என்னையன்றி வேறு எதனுடைய சம்பர்தமும் கொள்ளாதவரா யிருப்போரே யென்னையபேதமாயடையத்தக்கோராவர்" என்றருளிச்செய்தார்.

"ஏ பார்த்த! எவ்வதிகாரி எனது பிரசன்னத்தின் பொருட்டே சகல கர்மங்களையும் செய்கிறானோ, எவ்வதிகாரி நானே அடையத்தக்க வஸ்து என்னும் நிச்சயமும், ஏனைய சுவர்க்காதி பலன்கள் அடையத்தக்கவையன்று என்னும் நிச்சயமும் உடையவனோ, எவன் தனம் தாரம் புத்திரன் முதலிய எல்லா பதார்த்தங்களினும் பற்றில்லாதவனாய் என்னிடத்துமட்டுமே பற்றுவைத்து யாவற்றையும் எனது சொரூபமாகப் பாவித்துப் பஜிக்கிறானோ, எவன் தனக்குத் தீங்கிழைத்தவர்களிடத்தும் துவேஷம் கொள்ளாதவனோ, இத்தன்மைய அதிகாரியே என்னை யபேதமா யடைதற்குரியவன்" என்று பகவான் அருளினார்.

11-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## 12-வது பக்தியோகவத்தியாயம்.

[ஸ்ரீ பகவான் இதுகாறும் சகுணம் நிர்க்குணம் ஆகிய இரண்டையும் உபதேசித்தருளினார். இவ்விருவகை உபதேசங்கள் அதிகாரி பேதத்திற்குத் தக்கபடி கொள்ளற்பாலனவாம். ஆகையால் அர்ச்சுனன் தனது அதிகார நிச்சயத்தின்பொருட்டு சகுணவித்தை நிர்க்குணவித்தை யிரண்டின் தன்மையையும் அறிய இச்சித்துப் பகவானை நோக்கி வினவுகிறான்.]

அர்ச்சுனன் :—"ஏ பரந்தாமா! பெரியோர்கள் தங்கள் மனதிற்குப் பொருந்திய உருவமாகவே பரமேசுவரனான உம்மைச் சிந்தியா நிற்பரோ? அல்லது பரிசுத்தமான நான்மறைகளுக்கு மெட்டாதான நிர்க்குணப் பிரம்மமாகிய உம்மையே நிரந்தரம் சிந்திப்பார்களோ?" என்று வினவியதற்கு, ஆயர்பாடியிலவதரித்து ஆவினங்களை மேய்த்த கண்ணபிரான் அருளிச் செய்கின்றார் :—

"ஏ அர்ச்சுனா! நீ தரிசிக்கும்படி நாம் முன்புகாட்டிய விசுவரூபத்தை ஏகாக்கிர சித்தத்தோடும், சாத்விக சிரத்தையோடும் மனதினுற் சிந்தித்து

வாக்கினுற் றுதிப்பவர்கள் எல்லோரும் என்னையே யடைவார்கள். அவர்கள் யாவரினும் சிரேஷ்டராவர். இனி யிவர்களை யன்றி நிர்க்குண உபாசகர்களின் நெறியையும் கூறுதும் கேட்பாயாக.

(இப்போது பகவான் நிர்க்குணோபாசனையைப்பற்றி கூறுகிறார்.)

ஏ காண்டீபனே! வாக்கினுல் இன்னவிதமானதென்று வசனிக்கக் கூடாததாய், மனத்தினுல் இத்தன்மையதென ஒரு விஷயமாக அறியப் படாததாய், எங்கும் நீக்கமின்றி நிறைந்து போக்குவரவற்றதாய், சர்வ சாட்சியாய்ப் பிரகாசிக்கும் நிர்க்குணப்பிரம்ம சொரூபத்தை, கடத்தற்கரிய இந்திரியங்களை நிக்கிரகம் செய்து, சாக்ஷாத்காரமாய் அறியாநிற்பவன் என்னின் அன்னியமாகமாட்டான்.

(பகவான் முன்பு சகுணோபாசகரை யாவரினும் நல்லவர் என்று கூறிவிட்டு இப்போது நிர்க்குண உபாசகர் நானேயாகும், என்னின் அன்னியமல்ல என்று கூறியதால் அர்ச்சுனனுக்குண்டாகும் சந்தேகத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு பகவான் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! ஒரு காரணமுமில்லாததாய், அந்தர் இந்திரிய பகிர் இந்திரியங்களுள் ஓர் இந்திரியத்திற்கும் விடயமாகாததாயுள்ள நிர்க்குணப் பிரம்மத்தை யடையாநிற்பவர்களுடைய வருத்தம் செப்பத்தரமானதன்று. அது வேறொரு கஷ்டத்தோடு ஒப்பிட்டுக் கூறத்தக்கதன்று. அறிதற்கரிய இப்பிரம்ம நிஷ்டை தேகேந்திராதி அபிமானமுடைய மனிதரால் சுலபமாய் அடையத்தக்கதன்று. ஆதலின் அதை யடைந்தவர்களின் மகிமையை அளவறுத்துக் கூறவல்லார் யார்? (ஒருவரு மில்லை என்றபடி.)

(தொடரும்.) சீடன்.

---

## அநுபவத்தில் கண்டறிந்த சில வைத்தியக் குறிப்புகள்

1. எலிகடிக்கு. கொடிக்கள்ளிப் பட்டை 2 விராகனிடை. வெள்ளைப் பூண்டு ½ விராகனிடை இவைகளைச் சேர்த்து நீராகாரத்தில் 3 நாள் கொடுக்க குணம்.

2. நாய்கடிக்கு. கறி உப்பும் கற்றாழை மடலும் ஓரளவாய்ச் சேர்த்து அரைத்து 3 தடவை கடிவாயில் கட்ட குணமாம்.

3. காதுப்புழுவிழ. முருங்கையிலைச் சாறு 3 அவுன்ஸ், நல்லெண்ணெய் 4 அவுன்ஸ் சேர்த்து வடித்து காதிலைவிட குணமாகுமென்று Dr. Thomas சொல்லுகிறார்.

4. தலைப்பேன்போக: கறு ஊமத்தைச் சாற்றில் ரஸத்தை அரைத்து பழந்துணியில் தடவி, நிழலில் உலர்த்திச் சிரசில் சுற்றிவைக்க மூன்று ஜாமத்திற்குள் பேனெல்லாம் உதிரும் என்று Mr. Ferguson துரை எழுதுகிறார்.

5. கல்பூரத்தைத் தின்றவர்களுக்கு எலிம்பிச்சம்பழம்சாற்றில் காசுக்கட்டியை அரைத்து கலக்கிக்கொடுக்கச் சுகம்.

மா. அருணாசலம்.

# தேகசுகாதாரம்.

## புகைக்குடித்தல்.

*சகோதர சகோதரிகளே!*

புகையிலையினாலும் அதன் பிரிவுகளாலும் இன்னும் சில சாமான்களாலும் செய்யப்பட்ட வஸ்துக்களைக்கொண்டு அக்கினியை நுனியில் பற்ற வைத்து வாயில் வைத்து உறிஞ்சி புகையாக வெளியே சிலர் வாயால் விடுதலும் சிலர் வாயாலும் மூக்கினாலும் விடுதலும் புகையை உள்ளே நிறுத்துதலும் ஆகியவைகளையே புகைக்குடித்தல் என்று சொல்வது. கொஞ்சகாலத்திற்கு முன் அதிக வயதான கிழவர்களிலும் யாரோ ஒருவர் அபூர்வமாகக் குடிப்பதைப் பார்த்திருக்கிறோம். இப்போது 5 வயது முதற்கொண்டு பெரியவர்கள் வரை இக்கெட்ட வழக்கத்தை அனுசரிப்பதுடன் தங்கள் மனைவி, மக்கள் முதலானவர்களுக்கும் பழக்கமாக்குகிறார்கள். இப்புகைக்குடித்தல் என்னும் விஷயமாய் கோயமுத்தூர் ஜில்லா ஊழியச் சங்கத்தார் பிரசுரித்த பத்திரிகையின் மொழிபெயர்ப்பை இதனடியில் வரைகிறோம். இதை வாசித்து உணர்ந்து புகைக் குடித்தல் என்னும் கெட்ட பழக்கத்தை அனுசரித்து வருபவர்கள் விட்டுவிடவும், அனுசரிப்பவர்களும் அனுசரியாதவர்களும் புதிதாக இனிமேல் கை கெட்ட வழக்கத்தை பழகிக்கொள்ளாமல் இருக்கும்படிக்கும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அமெரிக்காவில் பள்ளிக்கூடச் சிறுவர்களைப் பரிசோதித்துப் பார்த்ததில், புகையிலை உபயோகியாதவர்களே தேகவளர்ச்சி, புஷ்டி, மார்பின் விலாசம், உயரம், உள்ளிந்திரியங்களின் உறுதிப்பாடு, ஆகிய இவைகளில் புகையிலை உபயோகிப்பவர்களைவிட மேலான நிலைமையி லிருந்ததாகத் தெரிந்தது. புகையிலை தேகவளர்ச்சியைத் தடுப்பதன்றி மனோ சக்தியையும் தடுக்கிறது. உயர்ந்த பரீக்ஷைகளில் புகையிலை உபயோகியாதவர்களே மற்றவர்களை விட எளிதில் தேறுகிறார்களென்றும் கண்டுபிடிக்கப்பட் டிருக்கிறது. சுருட்டு குடிப்பது முதலில் உத்சாகத்தைக் கொடுத்தபோதிலும் முடிவில் பெருந்துன்பத்தை விளைவிக்கிறது. கள் முதலான லாகிரி வஸ்துக்களைப்போல் மேலும் மேலும் ஒருவனை குடிக்கச்செய்து முடிவில் குடிப்பவனை அடிமைப்படுத்திவிடுகிறது. அதிகமாக குடிப்பவர்கள் சதா சுருட்டு கையிலில்லாமலிருந்தால் சோர்வும் சோம்பலும் உண்டாய் மந்தபுத்தி யுடையவர்களாகிறார்கள்.

புகையிலை குடிப்பவர்களின் கண்பார்வை சீக்கிரம் கெட்டுப்போகிறதென்று தேர்ந்த வைத்தியர்களெல்லாரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அவர்கள் வர்ணபேதங்களை அறியச் சக்தியற்றவர்களாகிறார்கள். சிவப்புக்கும் பச்சைக்கும் உள்ள வர்ணவித்தியாசத்தை அறிய சக்தியற்றவர்களாகிற பல[illegible] அப்படிப்பட்டவர்கள் ரயில் கம்பெனிகளில் வேலை செய்துவரும் [illegible] காட்டி மரத்தின் சைகையைச் சரியாக அறிய முடியாமல் ரயில் [illegible]க்கும் உயிருக்கும் சேதமுண்டாகிறது. கூர்மையான பார்வை

வேண்டியிருக்கிற துபாக்கி சுடுதல் பில்லியார்டு விளையாடுதல் முதலிய காரியங்களைச் செய்பவர்கள் புகையிலையினால் தங்கள் கண்ணின் கூர்மை கெட்டுப்போவதை அனுபவத்தில் கண்டிருக்கிறார்கள்.

புகையிலையானது ஹிருதயத்தையும் பலவீனப்படுத்தி விடுகிறது. சிறிது வேலை செய்தாலும் புகையிலை குடிப்பவர்களின் ஹிருதயம் நிமிஷத்திற்கு 100 முதல் 120 வரை படபடவென்று அடித்துக்கொண்டிருக்கும். இதற்கு 'புகையிலை ஹிருதயம்' என்று வைத்தியர்கள் சொல்வதுண்டு. இதனால் அகால மரணங்கள் நேரிடுகின்றன. இந்நோயைத் தடுக்கவேண்டுமானால் புகையிலை குடிக்கும் வழக்கத்தை நிறுத்தவேண்டும். புகை குடிப்பவர்கள் ஹிருதயம் பலவீனப்படுவதால் க்ஷயரோகம், காசம், முதலிய நோய்களுக்குச் சுலபமாக உள்ளாவார்கள். புகையிலை உபயோகிப்பதால் உதட்டிலுள்ள நிறம் மாறி முகத்திலுள்ள களையும் நீங்கிவிடுகின்றது. புகையிலை குடிப்பவர்களைப் பார்த்தால் எப்பொழுதும் தூக்கம் பிடித்தவர்களைப்போலவே காணப்படுகிறார்கள். புகைக்குடிப்பதனால் பற்களின் ஈறல் தளர்ந்து பற்கள் கருத்து வாயும் துர்நாற்றம் எடுத்துப் போய்விடும். புகையினாலும் விஷத்தினாலும் உதடுகள் கருத்துவிடும். புகை குடிப்பதனால் தேகத்திற்குக் கெடுதல் ஒன்றும் இல்லை என்று சிலர் நம்புகிறார்கள்; ஏனென்றால் புகை குடிப்பவரில் சிலர் திடகாத்திரராய் நீடித்த நாள் இருந்திருக்கிறார்கள். ஆனால் இது தப்பான அபிப்பிராயம். புகை குடிப்பதனால் கெடுதி ஒன்றுமில்லை என்றால், சிறுவர்களுக்கும் தீங்கு செய்யாமலல்லவா இருக்கவேண்டும்? அப்படி இல்லையே. மேலும் திடகாத்திரமானவர்களுக்கு ஒரு தீங்கும் விளைவிக்கிற தில்லை என்று வைத்துக்கொண்டாலும் அவர்களுடைய சந்ததியை எப்படிக் கெடுக்கிறதென்று சிறிது கவனித்தால் தெரியவரும். புகை குடிப்பவர்களுடைய பிள்ளைகள் பலவீனமாகவே இருப்பார்கள். சிலர் மலச்சிக்கலை நீக்குவதற்காக புகைகுடிக்கும் வழக்கத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். இதுவும் தகுந்த காரண மாகாது. மலச்சிக்கலே உண்டாகாமலிருக்க நாம் வழிதேட வேண்டுமேயன்றி மலச்சிக்கல் ஒவ்வொருநாளும் உண்டாவதற்கு வழி செய்துகொண்டு பிறகு அதை நீக்க புகை குடிக்கப்படாது. நம்தேகத்திலுள்ள அவயவங்கள் ஒவ்வொன்றும் இயற்கை வழிகளிலேயே தம்தம் அலுவல்களைச் செய்யும்படி விடவேண்டுமென்றி புகை குடிப்பது பொடி போடுவது முதலிய செயற்கை வழிகளிலே அவைகளை நடத்தப்படாது.

"சுருட்டுப் புகையைக் காட்டிலும் சிகரெட் புகை மிகவும் கொடியது. சிகரெட்டுப் புகையை சுத்தமானதோர் கைக்குட்டையில் விட்டுப் பார்க்கக் கைக்குட்டையில் படுகிற கறையைக் கொண்டு சிகரெட்டின் கொடுமையை நன்கறியலாம். சிகரெட்புகை படுகிற நமது உள்ளிந்திரியங்களெல்லாம் இதேவிதமாக கறைபடுகின்றதென்பதை மறந்துவிடக்கூடாது. சிகரெட்டு இத்தனை கெடுதி செய்யக்கூடியதா யிருப்பதால், சிறுவர்களில் அநேகர் இதைக் கையாடிவருவது மிகவும் கவலைக்கிடமாயிருக்

கிறது. மேலும் இந்த சிகரெட் பழக்கம் நம் சிறுவர்களிடத்தில் வரவர விருத்தியாகிக்கொண்டு வருமோவெனப் பயப்படவேண்டி யிருக்கிறது.''

"சிகரெட் பழக்கம் விருத்தியாக விருத்தியாக நமது பின் சந்ததிகளால் நாம் அடைந்து கொள்ளக்கூடியதான அனுகூலங்கள் தடைப்படவே கூடும். சிகரெட்பழக்கமுள்ள பிள்ளைகள் உத்ஸாகமாய் வேலை செய்ய மாட்டார்களென்பது மட்டுமல்ல, வேலை செய்வதையே விரும்பமாட்டார்கள்." சிகரெட் குடிக்கும் வாலிபர்கள் துஷ்டச் சகவாசர்களையும் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். சிறு பிள்ளைகள் இத்துர்ப்பழக்கம் தம் பெற்றோர்களுக்குத் தெரியாமலிருக்கவேண்டி பொய் பேசுவது முதலிய கெட்ட நடத்தையை கற்றுக்கொள்ளுகிறார்கள். சுருட்டுக்காக பணத்தைத் தம் பெற்றோரிடமும் பிறரிடமும் தகாத வழிகளில் அடைகிறார்கள்.

இக்கெட்ட வழக்கம் சிறுவர்களுக்குள் பரவுவதை அடியோடு நிறுத்த நாம் ஒவ்வொருவரும் கடமைப்பட்டிருக்கிறோம். பெரியவர்களும் இவ் வழக்கத்தை விட்டுவிடவேண்டும். அது கூடாது போனாலும் இளம்பிராயமுள்ள பிள்ளைகளின் முன் பெற்றோர்கள் சுருட்டு அல்லது புகையிலை உபயோகிப்பதை நிறுத்தவேண்டும். தமக்காக சுருட்டு வாங்கிவரத் தங்கள் குழந்தைகளைக் கடைக்கு அனுப்புகிற வழக்கத்தையும் விடவேண்டும். மக்களின் ஒழுக்கத்தையும் நாகரீகத்தையும் விரும்புகிற தாய் தகப்பன்மார் இது விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையா யிருத்தல் அவசியமாகும்.

புகையிலையானது மிகுந்த அளவில் உபயோகிப்பதால் உயிர்ச்சேதம் உண்டாக்கக்கூடியதும் எந்த அளவிலும் உடம்புக்குக் கெடுதியும் அசௌகரியமும் உண்டாக்கக்கூடியதுமான ஓர் விஷ வஸ்து என்ற உண்மை யாதொரு சந்தேகமுமில்லாமல் நிச்சயிக்கப்பெற்றிருக்கிறது. புகைக்குடியினால் சுவாசம் அசுத்தமாகிறது; ஜீரணம் நாசமாகிறது. வயிற்றில் புளிப்பும் பித்தமும் அதிகரிக்கிறது. வாய் துர்நாற்றமடைகிறது. உதடும் பற்களும் கறுப்படைகின்றன. கட்டுகளில் துர்நீர் சேருகிறது. தொண்டைக்கட்டும் இருமலும் குடிகொள்ளும். காதிலும் நோய்கள் உண்டாய் கேட்கும் சக்தி குறைகிறது. ருசியும் மோப்ப சக்தியும் தொலைகிறது. ரத்தம் கெடுகிறது. மூளை சங்கடப்படுகிறது. இரத்தாசய வேகம் குறைகிறது. பார்வை மங்கிப்போகிறது. நரம்புகள் உறுத்தலடைகின்றன. தசைநார்கள் போக்கை அடைகின்றன. லிவர் என்ற கருவி அடைப்படுகிறது. தோல் கறையிடுகிறது. தேகத்தில் எந்த உறுப்புகளும் விஷ சம்பந்தமும் கெடுதியும் அடைகின்றன. சக்தியைக் குறைத்து இந்திரிய சக்திகளை வலியறுத்து வாழ்நாளைக் குறைத்து முடிவில் அவைகளைக் கொல்வதுதான் புகையிலையினுடைய வேலை.

மலை சுரத்தினால் சாதாரணமான காயலா தேசங்களில் வசிக்கும் ஜனங்கள் வெளுத்த முகமும் குறைந்த வளர்ச்சியும் குறைந்த தேகபலமும் உடையவர்களாயிருப்பதை நீங்கள் பார்த்திருக்கலாம். உபிரோடு ஜீவித்து

தான் வருகிறார்கள். ஆனால் மனிதவாழ்க்கை என்ன என்ன அடங்குமோ அவற்றில் பகுதிகூட அவர்கள் வாழ்க்கையில் இல்லை. அதுபோலவே தான் புகைக்குடிப்போர்களின் கதியும். புகைக்குடிப்பதைப் பற்றி மேலே சொன்ன விஷயங்களெல்லாம் அப்படியே புகையிலை சாப்பிடுவதும் பொடிப் போடுவதும் ஆகிய துர் வழக்கங்களுக்கும் பொருந்தும்.

U. S. பெரியசாமி முதலியார்.

குறிப்பு:—நேயர்களே! புகையிலையால் உண்டாகும் கெடுதியைப் பற்றி முன்பும் நமது சஞ்சிகையில் வெளியிட்டிருக்கிறோம். பல பத்திரிகை களில் அதன் தீங்கைப்பற்றி எச்சரிக்கை செய்யப்பட்டிருக்கிறது. மேல் நாட்டாரே அதன் தீங்கைப் பரீட்சித்தறிந்து வெளியிட்டிருக்கிறார்கள். அப்படியிருந்தும் நம் நாட்டில் மாணவர்களும் 5, 6 வயது பிள்ளைகளும் கூட பகிரங்கமாகப் பீடி, சிகரெட் பிடிக்கிறார்கள்.

நம்மவரோ பத்திரிகைகளிலுள்ள விஷயங்களை வேடிக்கைக் கதை கள்போல் படித்து மறந்துவிடும் புத்திசாலிகளாக விருக்கிறார்களேயன்றி அவற்றில் கூறியபடி நடந்தால்தான் பயனடைவோம் என்று கருதுகிறார்க ளில்லை. இதனால் பத்திரிகைகளாலடையவேண்டிய பயனை யடியோ டிழந்துவிடுகின்றனர்.

ஜபான் தேசத்தில் 20 வயதிற்குக் குறைந்தவர்கள் சுருட்டு பிடித் தால் பெற்றோர்க்கு அபராத தண்டனை விதிக்கப்படும். விற்போர்க்கும் அவ்வாறே. இலங்கையில் வித்தியா இலாகா தலைமையதிகாரியே, மாண வர்கள் சுருட்டு சிகரெட் முதலிய பிடிக்கும் வழக்கத்தைக் கண்டித்து உபாத்தியாயர்களே சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டுமென்று சுற்று உத்தரவு அனுப்பியிருக்கிறார். நம் நாட்டாரை யவ்வாறு தீய வழியினின் றும் திருப்ப ஒரு திக்குமில்லை. தீய வழியில் செல்லவேண்டாம் என்று புத்தி கூறுவோர்க்குத் தண்டனை விதிக்க நம் துரைத்தனத்தார் தயாரா யிருக்கிறார்கள். பெற்றோரோ தம் மக்களை மேல்நாட்டு நாகரீகத்தில் பழ கவைக்கமட்டும் மிக்க ஆவலுள்ளவர்களா யிருக்கிறார்களேயன்றி கெட்ட வழியில் செல்லவொட்டாது அவர்களைத் தடுக்க முயல்கிறார்களில்லை. இதுவும் நம் கெட்டகாலக் கொடுமையே.

இப்போது நம்மவர்கள் மந்திரிமார்கள் பதவியிலும் சட்டசபையிலும் அமர்ந்திருக்கிறார்கள். நம் நாட்டிற்குத் தீங்கை விளைவிப்பதும், நமக்குப் பலம்பொருந்திய சுகதேகிகளாகிய சந்ததியுண்டாகாது செய்வதுமாகிய இக்கொடிய வழியில் செல்லாதவாறு நம் மக்களைத் தடுக்க இவர்கள் முயற்சி யெடுத்துக்கொள்ளவேண்டாமோ? ஆண்டவனே இவர்கள் மனதை யிதில் திருப்பவேண்டுமாய் நாம் பிரார்த்திப்போமாக. ஓம்தத்ஸத்.

பத்திராதிபர்.

# அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(439-ம் பக்கத் தொடர்ச்சி.)

மனோகரன்:—அய்யோ கடவுளே!

ஆன:—உண்மையாகவே உன்மேல் இக்குற்றத்தைச் சாட்டி உன்னைக் கைது செய்யவேண்டுமென்றே என்னை யமர்த்தியது. ஆனால் அவன் ஒரு பெரிய தவறு செய்துவிட்டான்.

மனோ:—என்ன தவறு?

ஆன:—என் சுபாவமறியாமல் தவறான ஆசாமியைத் தன் இரகசியத்தில் சேர்த்துக்கொண்டான். என் பெயர்கொண்ட துப்பறிபவன் இன்னொருவனிருக்கிறான். அவனாயிருந்தால் இவன் நோக்கத்தை யறிந்து அப்படியே நடந்துகொண்டிருப்பான். நான் ஆரம்பத்திலேயே இவர்கள் உன்னை யொழிக்கச் சகல அத்தாட்சியும் மிக்க தந்திரத்தோடு ஜோடித்து வைத்திருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டேன்.

மனோ:—இப்போது அவர்கள் நோக்கமென்ன?

ஆன:—இப்போது என்னை யிதில் சம்பந்தப்படுத்தியது தவறென்று அறிந்துகொண்டார்கள். ஆகையால் உன்னைக் கொல்லத் தீர்மானித்துவிட்டிருக்கிறார்கள்.

மனோ:—ஆஸ்திதானே அவர்கள் நாட்டம்? அப்படியிருக்க ஏன் அவர்கள் அம்பாலிகையைக் கொன்றுவிடலாகாது?

ஆன:—அவன் ஒரே கல்லால் இரண்டு குருவிகளையும் சுடப்பார்த்தான். அதாவது அம்பாலிகைமேல் கருப்பண்ணன் காதல்கொண்டிருக்கிறான். அதனால் உலகிற்கு அவளை யிறந்தவளாக நிரூபித்துவிட்டு ஆஸ்தியைப் பற்றிக்கொண்டு, பிறகு அவளை அன்னியதேசத்திற்குக் கொண்டுபோய் அங்கு மணம் செய்துகொள்ளலாம் என்று அவன் கருத்து.

மனோ:—நான் உடனே சென்று உண்மையைக் கூறும்படி யவனைக் கட்டாயம் செய்கிறேன்.

ஆன:—அப்படியானால் நான் இந்த விவகாரத்தை யடியோடு கைவிட்டுவிடவேண்டியதே.

மனோ:—அப்படியானால் இவ்வளவு அத்தாட்சிகளை வைத்துக்கொண்டு அவனை யேன் உடனே கைது செய்யாமலிருக்கிறாய்?

ஆன:—எல்லாம் தெரிந்திருந்தாலும் ஒன்றையேனும் ருசுப்படுத்த இப்போது முடியாது. இதோடு சுலபமாய் நமது காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளக்கூடிய வழி யொன்றிருக்கிறது.

மனோ:—அம்பாலிகையைக் கொண்டுவரும்படி யவனைக் கட்டுப்படுத்தலாமே.

ஆன:—உனக்குச் சட்டசமாசாரம் தெரியாது. முதலாவது அவள் இறக்க வில்லையென்று ருசுப்படுத்த உன்னால் முடியாது.

மனோ:—அந்தோ! அம்பாலிகை அத்துஷ்டன் கரத்தில் சிக்கிக்கொண்டு தானே யிருக்கிறாள்.

ஆன:—அதற்காக நீ சற்றும் பயப்படவேண்டாம். நான் அவளை நெடுநாள் அவனிடமிருக்கவைக்கமாட்டேன்.

மனோ:—அந்தோ. அவன் பலவந்தப்படுத்தி தன்னை மணம் செய்யும்படி செய்துவிடுவானே. இதுவரையில்கூட செய்துவிட்டிருப்பானே.

ஆன:—ஒருகாலும் முடியாது. இன்னும் 12 மணி நேரத்திற்குள் அவன் காலுக்கு ஒருவித விலங்கு பூட்டிவிடப்போகிறேன். பிறகு அவன் மிக்க ஆலசியமாய் கலவரத்தோடும் சந்தேகத்தோடும், திகிலோடுந் தான் மெதுவாய்த் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே நகர்ந்து போகவேண்டும்.

மனோ:—அப்படியாயின் நான் 48 மணி நேரம் உன் கட்டளைப்படி யடங்கி யிருக்கிறன்.

ஆன:—அதோடு நீ மிக்க ஜாக்கிரதையோடு இருக்கவேண்டும்.

மனோ:—நான் எந்நேரமும் கையில் ஆயுதத்தோடுதானிருக்கிறேன்.

ஆன:—உன் தேகபலத்தையும் தைரியத்தையும் நம்பிக்கொள்ளாதே. வெளிப்படையாய் வரும் சுத்தவீரனை வென்றுவிடலாம், சூதாக இரகசியத்தில் நம்மைக் கொல்லவரும் எதிரியைச் செயிப்போமென்று நம்பலாகாது. இப்போதிருக்கும் எதிரிகளோ சூதுவாதாய் இரகசியக் கொலைகள் செய்கிறவர்களே.

மனோ:—எனக்கு எப்போது சமாசாரம் கூறுவாய்?

ஆன:—நாளை காலை நீ உன் விலாசத்தை யெனக்குக் கொடுத்துச் செல்ல வேண்டும். ஏனெனில், எந்த சமயத்தில் நான் உன்னை வரவேண்டு மென்றாலும் நீ ஆயத்தமாயிருக்கவேண்டும்.

மனோ:—உன் பிரியப்படி நடப்பேனென்று நீ பூரணமாய் நம்பலாம்.

ஆன:—"போதும், இது போதும்; நீமட்டு மிதன்படி நடந்தால் நான் அம்பாலிகையைப் பூரண சுகத்தோடு கற்பழியாமல் உன்னிடம் ஒப்புவிக்கிறேன். இதற்காக என் கௌரவத்தையும் இதுவரையில் நானடைந்த பிரக்யாதியையும், சே! என் உயிரையுமே பந்தயம் வைக்கிறேன்" என்றான்.

(தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.



ஸ்ரீ பழனியாண்டவர் சந்நிதிக்கு வந்த சர்ப்பக்காவடியின் மகத்துவம்.

இவ்வருஷமும் ஆண்டவர் சந்நிதிக்கு கணக்கில்லா காவடி வந்ததில் சர்ப்பக்காவடியும் ஒன்று. இதின் உண்மையை தெரிந்துகொள்ளும் பொருட்டு மகம்மதியர், கிறிஸ்தவர் உள்பட பெருங் கூட்டமாக வந்து காத்திருந்தார்கள். ஷை சர்ப்பக்காவடி மண்பாண்டத்தோடு கூடியது. இடும்பர் சந்நிதியின் முன், ஒருவர் பக்தி மேலிட்டவராய் ஷை காவடி என்னும் பாண்டத்தின் வாய்ப்பக்கத்தை உடைத்தார். உடனே ஒரு பெரிய நல்ல சர்ப்பம் படம் விரித்தாடியதையும் அதற்கு மசால் சாமான் முதலில் சேர்த்தவை யெல்லாம் அந்நாகத்தின் முகம் உடலெல்லாம் ஒட்டியிருப்பதையும் பார்த்தவருள்ளம் பதறவும், பக்தியின் மேன்மையை யுணரவுமாயிற்று. ஆண்டவனருளை ஆதிசேஷனாலும் புகழவியலுமோ! பிறகு அங்கிருந்த சாமியார் ஒருவர் படம் விரித்தாடிய வண்ணமாயிருந்த அந்த சர்ப்பத்தை எடுத்து தன் கழுத்தில் மாலைபோலணிந்ததோடு, ஆண்டவர் அருகில் விட்டுவிட எண்ணி ஒவ்வொரு படியாக ஏறினார். அப்படி ஏறும்போதெல்லாம் அந்த சாமியாரை இரத்தம்வரக் கடித்தது. அதனால் ஒருவித உபாதையுமில்லை. அவர் படி ஏறாமல் சும்மா யிருக்கும் சமயம் ஒன்றும் செய்யாதிருப்பதைக்கண்டு கீழ் உள்ள பாறையின் கற்கள் பக்கம் விட இப்படி செய்கிறதோவென்று யூகித்து, அந்த விடத்திலே விடவும் தாமதமின்றி சரசரவென்று கற்பாறைக்குள் சென்று மறைந்துவிட்டது.

இக்காலத்தில் இவ்வித அபூர்வ சம்பவம் நிகழ்வதால் மனிதஜென்மமெடுத்த ஒவ்வொருவருக்கும் உண்மையான பக்தியும், விசுவாசமுமிருக்க வேண்டியது மிகவும் அவசியம் என்று கும்பகோணம் ஸ்ரீமான் ஆர்.முத்துக்குமாரசாமி நாடார் எழுதுகிறார்.

ஐம்பது அடி நீளமுள்ள இலை.

அமெரிக்காவில் உள்ள ஆமேசான் என்னும் பெரிய நதிக்கரையோரங்களில் வளரும் ஓர்வித மரத்தின் இலைகளொவ்வொன்றும் 50 அடி நீளமும் 12 அடி அகலமுள்ளதா யிருக்கின்றது. இதிலும் பெரிய இலைகள் உலகத்தில் வேறெங்கும் கிடையாது.

---

உலகத்திலுள்ள எல்லா ஜெந்துக்களிலும் பெரியது க்ரீங்லெண்டு திமிங்கலம். அதினுடைய நிறை சராசரி நூறு டன் அதாவது 2,20,000 பவுண்டு. ஏறக்குறைய 88 யானைகள் நிறைக்குச் சமானமாம். அதிதிமிங்கலத்தின் எலும்பின் நிறைமாத்திரம் 8400 பவுண்டாம். அதிலிருந்து இறக்கப்படும் எண்ணெய் 75 டன் நிறையுள்ளதாம்.

---

ஓர் அதிசயம்—யாழ்ப்பாணத்தில் கொப்பருப் போடுதற்கு நூற்றுக் கணக்காய்த் தேங்காய் உடைக்கும்போது அத்தேங்காய் ஒன்றில் பஞ்சு காணப்பட்டதாம். பஞ்சைப் பிரித்தெடுக்கும்போது அதற்குள்ளே புளியங்கொட்டைப் பருப்பத்தில் ஒரு விலைபெற்ற முத்துக் காணப்பட்டதாம். மிகப் பிரபை பொருந்தியுள்ளதென அறிகிறோம்.

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

இரக்தாக்ஷி௵ ஆடி மீ—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847,
பசலி 1334—கோல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1342-1343,
இங்கிலீஷ் 1924௵ ஜூலை மீ—ஆகஸ்டு மீ

| ஆடி மீ | ஜூலை மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | புத | ○23-33 | பூரா11-8 | அமி60 | பௌர்ணமி, போதாயன சூத்திர சர்வஉபாகர்மம் |
| 2 | 17 | வியா | பிர21-8 | உத்5-23 | சித்60 | |
| 3 | 18 | வெ | துதி14-50 | திரு0-38 அவி57-20 | மா0-38சி | |
| 4 | 19 | சனி | திரி9-58 | சதை55-43 | அ55-43ம | |
| 5 | 20 | ஞா | சது6-53 | பூரட்55-58 | சி55-58அ | |
| 6 | 21 | திங் | பஞ்5-33 | உத்-58-5 | சித்60 | |
| 7 | 22 | செவ் | சஷ்6-20 | ரேவதி60 | சித்60 | |
| 8 | 23 | புத | சப்8-40 | ரேவ-2-0 | மா60 | |
| 9 | 24 | வியா | அ12-38 | அசு7-33 | அ7-33சித் | |
| 10 | 25 | வெ | நவ17-50 | பர※14-5 | சித்60 | |
| 11 | 26 | சனி | தச23-38 | கிரு21-20 | அமி60 | மாவோங்க, கடன் நீக்க |
| 12 | 27 | ஞா | ஏ29-35 | ரோ28-43 | சித்60 | சீமந்தம் |
| 13 | 28 | திங் | து35-20 | மிரு35-55 | அ35-55சி | தானியம் செலவிட |
| 14 | 29 | செவ் | திர40-25 | திரு42-33 | ம42-33சி | பிரதோஷம் [செலவிட |
| 15 | 30 | புத | சது44-43 | புன48-20 | சித்60 | கோடியுடுக்க, தான்யம் |
| 16 | 31 | வியா | ●அ48-5 | பூச53-5 | அ53-5சித் | சர்வத்திர அமாவாசை |
| 17 | 1 | வெ | பிர50-13 | ஆயி56-50 | மா60 | சிராவணசுத்தம் |
| 18 | 2 | சனி | துதி51-20 | மக59-30 | அ59-30சி | சந்திரன்4ம் பிறைபோல் |
| 19 | 3 | ஞா | திரி51-18 | பூரட்60 | சித்60 | ஆடிப்பூரம் [தெரியும் |
| 20 | 4 | திங் | சது50-40 | பூர1-8 | சித்60 | நாகசதுர்த்தி |
| 21 | 5 | செ | பஞ்47-58 | உத்1-45 | அ1-15சித் | பிரதம ருக் உபாகர்மம் |
| 22 | 6 | புத | சஷ்44-38 | அஸ்0-55 சித்59-18 | மா0-55சி | சஷ்டி, சூரியசஷ்டி, ஹல சஷ்டி, அவமாகம் |
| 23 | 7 | வியா | சப்40-23 | சுவா56-43 | அ56-43சி | உபநயனம் |
| 24 | 8 | வெ | அ35-20 | விசா53-15 | சித்60 | வாலட்சுமி விரதம் |
| 25 | 9 | சனி | நவ29-23 | அனு49-0 | சித்60 | பிரயாணம் விலக்க |
| 26 | 10 | ஞா | தச22-48 | கேட்44-18 | ம44-18அ | ததிவிரதாரம்பம் |
| 27 | 11 | திங் | ஏ15-50 | மூல39-18 | சி39-18ம | மத்வ சர்வ ஏகாதசி |
| 28 | 12 | செ | துவா8-45 | பூரா34-10 | சி34-10அ | பிரதோஷம் |
| 29 | 13 | புத | திர1-50 சது55-23 | உத்31-55 | அ31-55சி | அவமாகம், மாவோங்க |
| 30 | 14 | வியா | ○19-33 | திரு25-18 | சித்60 | ருக் யஜுர் உபாகர்மம் |
| 31 | 15 | வெ | பிர45-3 | அவி22-0 | சித்60 | மக கார்த்திகை 47-53 காயத்ரீ ஜெபம் |

1924௵ ஆகஸ்டு மீ

Planetary chart (ராசி சக்கரம்):

| | | | சுக் |
|---|---|---|---|
| கே செ | 11உ-சிம்-புத | | சூரி புத |
| | | | ராகு |
| | குரு | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.